# श्री मन्त्रमालिका,

## सटिप्पणी.

# Tirumantram,

## With Foot-Notes.



உ

சிவமயம்.

தத்துவஞானநிஷ்டாபராராகிய

திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருளிய

பத்தாந்திருமுறையென்னும்

# திருமந்திரம்.

இது

சீகாளத்திக்ஷேத்திரத் திருப்பணிக்குடும்பவித்துவசீலோத்தமர்களும்,

தேவிகோட்டை நகரநிவாசர்களுமாகிய

ஸ்ரீமாந்-மெ. அரு. நா. இராமநாதஞ் செட்டியார்,

ஸ்ரீமாந்-மெ. அரு. அரு. அருணசலஞ் செட்டியார்

இவர்கள் விருப்பத்தின்படி,

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துப்

பிரபல மஹாவித்துவசிரோமணி, யாழ்ப்பாணத்து

வடகோவை, ஸ்ரீலஸ்ரீ-சபாபதிநாவலரவர்கள் மாணாக்கர்,

மாவை, வே. விசுவநாதபிள்ளையால்,

திரிசிரபுரம், பிரஹ்மஸ்ரீ-திரு. அ. சிவாநந்தசாகரயோகீசுவரர்

முதலிய தத்துவ விசாரவித்துவசிரேஷ்டர்கள் முன்னிலையில்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்துத்திருத்தப்பட்ட

மூலத்துடனும்,

புதிதாயெழுதப்பட்ட குறிப்புரையுடனும்,

வேதாரணியம், பிரஹ்மஸ்ரீ

**Dr. V. V. இரமணசாஸ்திரிகள், PH. D.,**

அவர்களாலெழுதப்பட்ட நூன்முகத்துடனும்,

ஷை-பிள்ளையால்

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.

இதன்விலை ரூபா ௩-அ-0.



PRINTED AT THE MADRAS TIMES.

श्री शिवयोगीन्द्रवर्याख्यात मूलदेव - तदीयान्तेवासिसप्तक - अश्वत्थपादप - गोमुक्तिक्षेत्र - तटाकादयः

திருமூலநாயனர், அவர்மாணுக்கரெழுவர், அரசவிருக்ஷம், திருவாவடுதுறை க்ஷேத்திரம், தடாக முதலியன.





Tirumoola Nayanar, His Seven Disciples, the Bo-Tree, the Shrine of Tiruvavaduturai, the Sacred Tank, etc.

உ

# பொருளடக்கம்.



Dewan Bahadur Sir S. SUBRAHMANIA IYER, K.C.I.E., LL.D., F.T.S.,
(*Retired Judge of the Madras High Court*).

# இத் திருமுறை,

வேத வேதாந்த தத்துவ விசார வைதிக சைவாசார சீல சிரேஷ்ட சமரஸ நிலையினிலட்சியப் பேற்றினராயும், ஆரியதரும ஆங்கிலாதி சட்ட கலாவல்லராயும், **கே. ஸி. ஐ. இ., எல். எல். டி.,** முதலிய பட்டதாரராயும், சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜா யிருந்து இளைப்பாறுபவராயும், உலகத்துள்ள சர்வமத கிரந்தங்களையும் ஆராய்ச்சி செய்து அவற்றி னுண்மை கண்டறிய அவாவுள்ளோர்க்குப் புலனுமாறு வெளியிடு நன்னோக்கத்தை யுடைய **"பிரம ஞான சங்கம்"** என்னும் பெருஞ் சங்கத்தின் **உப அக்கிராசனாதிபத்தியத்தை** வகித்தவராயும், தமது வாழ் நாளைத் தமது ஜனனதேச நன்மைக்காக அர்ப்பணஞ் செய்துள்ள தேசாபிமான சிரேஷ்டராயும், பூர்விகத்தில் நம் **பிரபுக்கள், ஜமீந்தார்கள், அரசர்கள், அரசர்க்கரசர்கள்** முதலிய பேருதாரத்துவப் பெரு **வள்ளல்களால்** நமது **தேவாலய மடாலய வித்தியாலய சத்திராதி** பொதுத் தருமங்கள் முட்டின்றி யொழுங்குற நடக்கு நிமித்த முபகரிக்கப்பட்ட எத்தனையோ கோடிக்கணக்கான சொத்துக்களும் அவற்றின் வருவாய்களும் நல்வழிச்சென்று குறித்த தருமங்கட் குபயோகப்படுமாறு, நமது கவர்ன்மெண்டாரின் அதிகார விசாரணைக்குள் அமைவுறவேண்டுமென, முன்னர் நமது தேசாபிமான சிரேஷ்டருட் பல **கனவான்**கள் ஆண்டுகள் பலவாகத் தாமெடுத்துக்கொண்ட அப் பெரு முயற்சிகளும் பயனிலவாக, பின்னர்த் தாம் தம துதாரத்துவப் பெரும் பிரயாசச் சூழ்ச்சிக்கிளர்வினால், **"தருமரக்ஷண சபா"** என வோர் சபை ஸ்தாபித்து, அதன் வாயிலாக நமது தேச விருத்திநிமித்தம் அநவரதமும் எத்தனையோ செயற்கரும் பேரூழியங்களைச் செய்துஞ் செய்வித்தும், அவற்றின் பயன்கண்டுவக்கும் பெருநிலை விரதப் பொருளாளராயும் விளங்கும் **ப்ரஹ்மஸ்ரீ திவான்பஹதூர் சர் எஸ். சுப்பிரமணிய** ஐயரவர்கள் மஹா சமுகத்துக்கு அன்பார்ந்த அதிவிநய வந்தன பூர்வகமாகச் சமர்ப்பிக்கப்பட்டது.

உ

# சிறப்புப்பாயிரம்.

சென்னை இராஜதானிக் கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்
போதகாசிரியர் மஹாமஹோபாத்தியாயர்
ப்ரஹ்மஸ்ரீ உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரவர்கள்

இயற்றிய

நிலைமண்டில ஆசிரியப்பா.

திருமலி கைலைச் சிலம்பதி னின்றும்
உருமலி பொதியி லுறுதர் வழிக்கொளீஇச்
சென்னிநன் னாட்டிற் பொன்னியங் கரையிற்
பசுக்களைப் புரந்திடப் பசுபதி யருணினைஇத்
தென்னவ கோடி சித்த புரத்திடை
அநகன்வீற் றிருக்குஞ் சினகரக் குடபால்
விரசுறுந் தெய்வ வரசின் கீழிரீஇக்
கருமல நீக்குந் திருமூல தேவர்
ஆண்டினுக் கோரியாப் பருளப் பெற்றே
பாதநான் கின்விரி மேதக வமைவுற்
றுக்கம சார மாகுபு பத்தாந்
திருமுறை யென்னத் திகழ்ந்தே யொன்பது
தந்திர முடைத்திரு மந்திர மாலையை,
அறைபல விடஞ்செலீஇ முறைபல துருவி
எழுதுவோ ரானே ரிடர்தரும் பற்பல
பாடபே தந்தமை நீடுறத் தெரித்தே,
உக்வை யளிக்கு முகவையம் பதியிடை
மதிநிறை சேது பதிமா பதனில்
ஆதுலர்க் கெய்ப்பில்வைப் பாகத் தோன்றி

வண்மையி னுலகுறி யொண்மையிற் கதித்த
வேற்கா முடையசேர்ப் பாற்கர வேந்தர்கோன்
சொற்ற வண்ணங் கற்றவர் பலரால்
விரிவுரை யியற்றுவித் தரியவிவ் வுரையைப்
பதிப்பிக்கு முன்னர்க் கதிப்புற விந்த
வாறுவெளிப் படுத்தல் பேறென நினைஇ,
வரத்துயர் திரிசிர புரத்துத் தோன்றிப்
பவாம்புதி யறமுயல் சிவானந்த சாகர
யோகியா தியர்முன் னுஞற்றிய குறிப்பொடும்;
சாலநூ லாய்திறற் றகைசா லணையன்
ஆராய்ந் தியற்றி யளித்தநூன் முகத்தொடும்;
சீகா ளத்தித் திருப்பணிக் குடும்பத்
தோன்ற லாகி யான்றபல் செயல்களைத்
தன்பாற் கொண்டே யன்பாற் றினந்தொறும்
பன்னிரு திருமுறை யுன்னியே யோதுறும்
போதமா ரிராம நாதனுங் குரிசிலும்
அக்குடும் பத்துதித் தவனைப் போன்றே
நலநிறை யருணா சலமெனுந் தோன்றலும்
விரும்பிய வண்ண மிளிர்தர வெழுதா
வெழுத்திற் பதிப்பித் திப்பதிப் பதனைத்
தென்மது ரைப்பதி திகழ்தரத் தோன்றிய
தன்ம துரையெனுஞ் சற்குண மேரு
வேதியர் குலமணி விபுதர்சிந் தாமணி
நீதியர் சிகாமணி நிறைபொறை நிறைமணி
வடமொழி தென்மொழி வாணரா தியர்சேர்
நாவினும் பாவினு நடிக்கும் புகழ்மணி
ஆதுலர்க் கிருநிதி யறத்தின் வேலி
ஈச னடியே யிரும்பவப் புணையென
எண்ணியே யொழுகும் புண்ணிய னுலகிற்
கணியெனுஞ் சுப்பிர மணியமா வள்ளலுக்
குரிமை யாக்கின னுவன்யா ரென்னின்;
தேவா ரம்பெறு சிவதல மிரண்டுறீஇ
வாட்டமி லீழ நாட்டினுக் கணியாய்

மாணமர் புகழ்யாழ்ப் பாணமென் றியம்பும்
பெருநக ரைச்சார் தருவட கோவைப்
பதியனு கியசபா பதிநா வலன்பால்
இருந்தே பலநா ளருந்தமிழ் பயின்றோன்
காவைமே வித்திகழ் மாவையம் பதியான்
உற்றபல் வளனுந் துற்றமல் லாகத்
துதித்தே யறிவிற் கதித்தே சங்கப்
பனுவலாய்ந் திடுதிறற் கனக சபைமுகின்
மருக னாகி முருகனேர் விறல்சேர்
துங்கமார் வயித்திய லிங்கவே ளன்பன்,
மேதா வியர்புகழ் வேதாக மாந்த
சமரச நிலையின னமர்வுறு நைட்டிகப்
பிரம சரிய வரமுடை யொழுக்கினன்
சேதமில் விச்சுவ நாதநற் குணனே,

---

உ

திருச்செந்தூர்ச்

**சுப்பிரமணியவித்தியாசாலைக்கும்**

காவிரிப்பூம் பட்டினத்து மேலையூர்

**அறுபத்துமூவர் வித்தியாசாலைக்கும்**

சென்னபட்டணத்துச்

**சைவவித்தியாநுபாலன யந்திரசாலைக்கும்**

அதிபர் மகாவித்துவசிரோமணி

ஸ்ரீலஸ்ரீ

## சுவாமிநாத பண்டிதரவர்கள்

## இயற்றிய

நிலைமண்டில ஆசிரியப்பா.

---

திருப்பொலி தன்ன துருப்பொலி யொளியால்
விருப்புறு வெண்மை மேவிநின் றிலங்கும்
பணிப்பகை யதனைப் பார்ப்பவர் தமது
துனிப்புறு புந்தி யினிப்புறச் செலீஇச்

சாரலிற் ருேன்றிய வீரக் குஸைகளை
யாரலின் விருப்பா லகன்ற மானின்
களங்க முற்று விளங்கு தண்கதிர்
வழங்கு பூரண மாமதி யாமெனச்
சிந்தித் துவக்குந் திறமது புரிந்து
சந்ததந் தேவர் வந்துடன் குழுமும்
பொன்மலை யுச்சியின் மன்னிய சிகர
மென்னநின் றிலகும் மின்னவிர் கைலை
மாமலை மீது நாமெலா முய்யத்
தாமரு ளாலே தன்னிக ரில்லாச்
சுத்த மாயா சொரூபமாய்த் தோன்றிய
வித்தக வால விருக்கப் பாங்கர்த்
தைவிக சிங்கா சனத்தின் மேலே
செவ்விய பொற்புக் கவ்விய திவ்விய
வீரா சனமும் விழுமிய கங்கை
நீரார் சந்திர னூரார் சடையு
முக்கணு மணிபுனை மிக்ககுண் டலத்தா
னக்கொளிர் காது நலந்தரு நீல
கண்டமும் பூணு நூல் கொண்டபொன் மார்பு
மண்டுறு சூலம் வரத மெரிவியாக்
கியான முத்திரை கிளர்திருக் கரங்களு
மயானத் தவிந்த வானவர் புரத்து
நீறுசண் ணித்த நின்மல மேனியும்
வீறுள புலித்தோல் விசித்தமா மருங்கும்
பொங்குறக் கோடி செங்கதி ரொளியொடு
தங்குற; வெந்தா யெங்குறை தீர்க்கென
வரிபிர மேந்திரர் பரிவொடு வணங்கப்
புரிந்கை யுடனே போற்று மவர்க்கங்
கெண்டகு வரங்க ளீந்தரு ளுஞ்சிறீ
கண்டவெம் பிரானை மண்டுமன் புடனே
வணங்கி வாழ்த்தி வானவர் புகழுங்
குணங்கொள் போதத் திணங்கிய பொருளையக்
குருமுகத் துணர்ந்து திரிபினை யத்திற்

றெருமா லின்றிச் சிந்தை தெளிந்தே
யந்தியும் பகலும் மவனடி வழிபடூஉ
நந்திபா லருள்பெறு சுந்தர யோகிக
டந்திருக் குழாத்துண் முந்தொரு யோகியார்
செந்தமிழ் முனிபாற் செறிந்தபே ரன்பா
லம்முனி தன்னொ டமர்ந்தள வளாஅ
யெம்மிறை யிங்ஙன மெய்துவன் மீண்டென
விண்மலை யேந்திய நின்மல னருளூறீஇத்
தென்மலை யடையத் திருவுளங் கொண்டு
வெள்ளியங் கிரியொரீஇத் தெள்ளுகே தாரமுன்
னுள்ளிய தலங்கள்கண் டுற்றசோ ணாட்டிற்
பசுவிற் கிரங்கியோர் பசுவுட லுட்புகாப்
பசுவுக் கருள்வான் பசுபதி யருளாற்
றிருமூ லரெனுந் திருநா மத்தொடு
கருமூ லங்களை யொருபே ரிடமா
மாவடு தண்டுறை யடைந்தரற் பணிந்தவன்
மேவிய கோயிலின் மேற்றிசை யரசின்
கீழுறீஇச் செய்வினை போழ்சிவ யோகத்
தாழுற வைகி யொருமூ வாயிர
மாண்டுக ளாக வுகமுகத் தடைந்த
மாண்டகு மறுபவக் காண்டகு பொருளைத்
தென்றமிழ் மாலையாத் திருமந் திரமவை
துன்றுமூ வாயிரந் தொடுத்தனர் தந்த
வப்பெரு நூலை யிப்புவி கொள்ளத்
திப்பிய பத்தாந் திருமுறை யாகப்
பொல்லாப் பிள்ளையார் நல்லா ரருளா
லெல்லா ஞானமு மியல்புளிப் பெறாஉ
நம்பி யாண்டார் நம்பி வண்புகழ்ச்
செம்பியன் வேண்டத் தில்லையின் வகுத்தார்
மற்றம் மந்திர மாலிகை தனையுல
குற்று நோக்கி யுறுபயன் கொளீஇய
விழுப்பம தாக விழுக்கிலாப் பிரதியால்
வழுக்களைந் தச்சில் வழங்கிட வுன்னி,
அரனது தோழ னமரள கேசனி

ஞானுறு தசமுக னுறுவலி யிற்கவர்ந்
தரசு செய்தாங் கமர்தரு நாளிற்
பரசு பாணி பாலக னாகி
யவன்றனித் தேவிக் கருள்செயும் போழ்து
சிவன்றிரு மேனி தழுவச் சிவமாய்
நகுல கிரிமுத னவினூற் றெட்டாப்
புகலுந் தலங்கள் பொருந்துபு பொலிந்து
மாவா ரந்தரு மகிமை சேர்ந்த
தேவா ரம்பெறு திருத்தல மிரண்டுட
னதிர்வினை பாற்றி யருடிருப் புகழ்பெறூஉங்
கதிர்கா மம்முனுங் கந்தவே ணகரமும்
மாமணிக் கங்கை மறுத்தவிர் வலவை
யாமணிக் கங்கை யாதிய தீர்த்தமும்
விடருற் றெழுந்து வெளிப்படு மருவித்
தடவுக் குடுமிப் படர்பொற் கிரிகள்
வழங்கிடு வளங்களு மறிகடல் வளங்களுஞ்
செழும்பணை வளனொடு சேர்ந்து துவன்றி
மேருவின் சிகரம் வீழ்ந்து திடராங்
காரண மதனாற் கவின்பெறு மீழ
மென்னுநன் னாம மெய்திய நாட்டின்
முன்னவ னருளா னன்னர்ப் பல்வள
மதுரையி னின்று வந்தயாழ்ப் பாண
னதிமது ரந்தொட் டமைவர யாழிசை
வாசித் துறுத்த மாகளிப் பாலே
நேசித் தவற்கு நிலம்புகழ் கண்டி
மன்னவ னளிக்க மற்றவன் பெறுதலாற்
பன்னியாழ்ப் பாணமாம் பளகறு நாட்டின்
மின்னிகர் நுசுப்பிற் கன்னிகா ரத்தினம்
பொன்னிநன் னாடன் புதல்விபொலந் தோட்டு
மாரு தப்பிர வல்லிமா முகம்விடு
சீரிய செயலே காரண மாக
வாமா விட்ட புரமாம் வளமிகு
சரவண பவனமர் தலத்தவ தரித்தோன்

கடமுனி நேரெனக் காண்டகு நீர்வயில்
வடமொழி தென்மொழி வாழ்வுறத் தோன்றிப்
படரொளி பரப்பிப் பாவலர் வியப்பத்
திடமுறு நூல்பல செய்சிவ சங்கர
பண்டிதன் பாலும் பரிந்தி யுன்னி
விண்டிடாப் பத்தியின் மிக்கவர் வாழும்
வடகோ வைப்பதி திடமுற வந்து
வடசேர் வைப்போல் வயங்கிய சபாபதி
நாவலன் பாலு நலத்தகு பன்னூல்
மேவரக் கற்று விளங்கிய விற்பனன்
அற்பமு முளத்திற் றற்பம தில்லான்
நற்குண மலையென நவிலத் தக்கான்
வேதா கமங்கள் விளம்பிய முடிபு
மேதா வியர்கொள் வியன்சம் ரசமெனக்
கடைப்பிடித் ததன்வழிக் கலக்கமின் றொழுகுவோன்
றிடப்படு மறிவான் விடப்படு மயலான்
அரிவையர் பொய்ம்மண மண்மகலா னூட்டிக்
பிரம சரியப் பெருநிலை நின்றோன்
என்னிடத் தன்பு துன்னினன் யான்செய்
மன்னறங் கட்கொரு மாமதி லானோன்
வசுமதி வரைப்பிற் பசுபதி யடிதொழூஉம்
விசுவ நாதனு மசைவிலா விபுதன்,
இத்தரை மதிக்கப் பத்திமிக் குறீஇ
யுத்தம வாலயச் சித்திரப் பணிசெயா
வித்துவக் குழுவினர் வேட்டவை யுதவிய
முத்தமிழ்க் குரிசில் மெய்த்தவப் பெரிய
வண்மையோர் ஞாலம் வயங்கவோ ருருக்கொடு
நண்ணின ரென்ன நயத்தகு கொடையான்
திருமுறை யச்சிற் றிருத்தித் தருகென
வுரைநவின் றென்னையு மூக்கிய வுரவோன்
மாற்குள காப்பை வாங்கி வளைமலி
பாற்கட லமளியிற் பள்ளிகொள் வித்துப்
போர்ப்பெருஞ் சீயப் பொலன்றவி சுற்ற

பாற்கர சேது பதியிடஞ் சென்று
விளம்பிட, வவனும் விழுமிய புலவோ
ருளங்களி சிறப்ப வுரையொடு தருகெனச்
சவுரிசங் கானுட னிவர்தரு கண்டிகைப்
பவுரிகொண் டெந்து பகர்ந்தன னாக;
நாயகன் றனக்கு நாயகி செய்யு
நேயம் முதலா நிலவுறு மாண்புகள்
கல்வியா லன்றி மல்குறு வுண்மையைப்
பல்வித நூல்களிற் பழுதறு கேள்வியிற்
காட்சியி னுலகிய லாட்சியிற் றேர்ந்து
மாட்சியின் மன்பதை மன்னுற வுவப்பக்
கன்னியர் கழகமுங் கவின்பெறு பிரம
முன்னிய ஞான நன்னிலை மன்றமு
மதுரையி னிறுவிச் சதுரனா யிலகி
யிதுநல மென்னப் பொதுநல மோம்பி
யெல்லா நலனும் மெல்லா ரும்பெற
நல்லா றெல்லாஞ் சொல்லா சிரியன்
வேண்டிற் றுதவலின் மாண்டகு கற்பகம்
வேண்டா துதவலிற் சேண்டவழ் மாமுகி
லெண்ணிய தருதலிற் கண்ணுசிந் தாமணி
விண்ணினர் விரும்பி யுண்ணுமா ரமிர்த
நியாய துரந்தர னிலாவுறு குணமலை
தயாநிதி யெவர்க்குந் தண்ணிழற் றரு
நாரா யணனென் னாநவின் றிப்பெரும்
பாரா ரேத்துஞ் சீரார் புலவனும்,
நல்லோர் வாழுஞ் செல்லார் மாட
மல்லா கப்பதி வாழ்வுறத் தோன்றிச்
செந்தமிழ் மொழியுந் திகழுமாங் கிலமுஞ்
சுந்தர முறவகஞ் சூழ்ந்து கற்றுப்
புந்தியிற் சிறந்து போற்று மாசினர்
சந்தத மதிக்குந் தகுதி பலவுறீஇ
வணக்கமும் பொறையும் வழங்கு மின்சொலும்
இணக்கமு மிரக்கமு மீதலுங் காதலும்
பற்றலர் தமக்கு முற்றிடத் துதவுஞ்

செற்றமில் குணனுந் திரியா மாண்பு
மற்றைய நலனு முற்றொளிர் சீலன்
பெற்றவர் போலப் பிறவுயிர் நேயன்
இந்திய ரெவரு மிதுவரை யெய்தாச்
செந்திரு மிக்க சீரா ருத்தி
யோகம் பெற்றே மாகத் திறையெனப்
பாகம் பற்று தேகம் பற்றி
வியத்தக நடாத்தி மயற்றலை புகுதா
வயித்திய லிங்க மகிபனும் வள்ளறன்
மாதுலன் மன்ற மேதகு சங்கத்
தீதகல் பனுவல்க ளோதி யுணர்ந்து
நற்புல வோர்க ணயந்து களிகொள
வற்புத நூல்பல சொற்றிடு மறிஞன்
பலாபல மறிய நிலாவுறு சர்வ
கலாசா லைக்கோர் கவிஞர் பரீட்சகன்
தராசா மென்றே சாற்றுஞ் செங்கோ
விராசாங் கத்தி லேற்றமா ருத்தி
யோகத் தமர்ந்து மாகத் தவர்புகழ்
போகத் துறைந்த புண்ணியன் வானுறு
கனக மானத் தனமழை பொழியெழிற்
கனக சபைப்பெயர்க் கடனறி புலவனும்,
இத்தலத் திராம சேதுவி னிலங்குஞ்
சத்திர தாபகர் தம்வழித் தோன்றல்
பாவலர் நாவலர் பற்றுட னண்மி
மாவல ஞெமன மகிழ்ந்துவாழ்த் தெடுப்பக்
கல்வியுஞ் செல்வமுங் கனிவுறு மனத்தோ
டல்லும் பகலு மளித்தொளிர் வள்ள
னல்விருந் தாக நாடொறுந் தன்னைப்
பல்விற் பனரும் பருகுமா செய்தோன்
கத்துங் கடல்சூழ் காசினி வரைப்பிற்

செத்துஞ் சாகாச் சீரிய ஞரியன்
றேவைமா நகர்வயிற் சீர்த்திமிக் கோங்கிய
காவைநேர் கவிகையான் சிந்நயக் கவிஞனும்,
மன்னவ னுரைத்த வாசகப் படியே
யின்னுரை யொன்றுநீ யியற்றுகென் றாக்கப்,
பிரதிகள் பலப்பல துருவிப் பெற்றே
யுராமுட னேக்கி யுறுகா லிகித
வழுக்களைந் திட்டு மாண்புறத் திருத்திப்
பழுத்தநல் லறிஞராற் பற்பல சிறப்புற
நலத்தகு மோருரை நவிற்றுவித் திருப்புழி,
உலப்பிலா வறிவா லூகித் தோர்ந்து
குறிப்புரை யதனொடு கோதறு மூலஞ்
சிறப்புற வச்சிற் சேர்த்துமுன் றருகெனத்
திருக்கா ழத்தித் திருக்கா சறவே
திருக்கா ளத்தித் திருப்பணி புரிந்து
பத்தரிற் றலையாம் வித்தகக் குரிசி
னத்தம் போலெனு மெய்த்தகு குறளின்
பொருடனைச் சார வருளொடு நின்று
பொருடனை யீந்து புகழினை நிறுவினே
னிருவகைச் செல்வமு மருவின னிவனென
விருவகை வணக்கமு மொருவுத லில்லோன்
மாவையம் புகழக் காவையங் கோக்கித்
தேவையங் காக்குந் தேவையம் பதியான்
இராம நாதனென் றியம்புபேர் வள்ளலுந்
தாரதலம் பரவு தகுதிமிக் கோங்கு
நன்னயச் செயல்குண மன்னிய குரிசில்
பன்னிய மாட்சி துன்னிய காட்சி
யருணா சலனென வறைபேர் வள்ளலும்
பொருணாட் டுறுவார் புகன்றன ராக;
அன்னவர் சொற்கோ ளகமுற வாய்ந்துகொண்

டின்ன வாறு மியற்றுவ லென்றே
நரிபரி யாக்கிய நம்பன் ருயாந்
திரிசிர புரத்து வரமுறத் தோன்றிச்
சிவாநந்தம் பிறப்பறு தெளிந்தன நினையென
வவாநந்த வறம்புரி சிவாந்த சாகர
யோகியார் முதலியோ ருரைத்த குறிப்புரை
வாகுற வாங்காங் கியோகுறச் சேர்த்தே
யன்று முனஞ்செயு மிருந்தவப் பேற்றான்
மூன்று பாடையி னுன்றபே ரறிஞன்
வேதவே தாந்தம் விளம்பிய குறிப்பைப்
போத வாகமம் புகலும் விரித்தென
வோதி யுணர்ந்து மேதக வதன்சிறப்
போதி யாவரு முள்மகிழ் பூப்பப்
பிரசங்க மாமழை பெய்து நிறைக்கும்
வரதுங்க மாமுகின் மறைவன் முதித்தோன்
சரித்திர மாய்திறற் சிறப்புறு ரமணியன்
விரித்த நூன்முகந் தெரித்து நூன்முகத்
தச்சிற் பதிப்பித் தப்பதிப் பதனை,
மெச்சுறு மதுரை யியனகர்த் தோன்றி
வடமொழி தென்மொழி வளமுறக் கற்றுத்
திடமுற விமைப்பயன் சேர்தரச் செயுமெனப்
பன்னு மாங்கில பாடையிற் பயின்று
மன்னவை மதித்திட நன்னர் நீதி
பதிப்பெரும் பதவி கதிப்புறப் பெற்று
விதிப்பயன் போல்வழா நுதிப்பெரு மதிகொடு
முறைபுரிந் துயர்ந்து மூதறி வாள
ரறைகழன் மன்ன ரறவோர் துறவோ
ரற்புத மிவன்செய லார்க்கு மரிதெனச்
சொற்பயில் பெரும்புகழ் சோர்வில பெற்றோன்
றிறம்பிய பொதுவறந் திறம்பா தென்று

முறும்பல முறவிவ னொருசபை நிறுவித்
தன்னயந் தன்னமுந் தான்கரு திலனாய்
நன்னய மாக நடாத்திடு முரவோன்
அந்தணர் குலத்து நந்தா விளக்கு
மந்தண மருங்கு மதிதரு மமைச்சுப்
பொறையிற் பூமி புகழிற் போசன்
நிறையி னுவமை நிகழ்த்துத லில்லான்
குறையு முறையுங் கூறுநர்க் கெளிதா
வறையும் பேரத் தாணியி லமர்வோன்
கீழோ ரெனினுங் கிழமையி னளியொடு
தாழ வுரைக்குந் தயாநிதிப் பயோததி
அறியிலை யனமென வறைந்தேக் கறுக்கும்
வறியவர்ச் சுற்று மாநிரப் பாய
பிணியை யறுக்கும் பெரும்புகழ் மருத்துவன்
மணியை யன்னென மாநிலம் வழுத்துஞ்
சுப்பிர மணிய விப்பிர மணிக்கே
யொப்பிது வென்ன வர்ப்பணஞ் செய்துநம்
அகமலர் ஞான வருணனா யென்றும்
விகசித மாக விளங்கின னன்றே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

உ

சிவமயம்.

# பதிப்புரை.

சிஷ்டாசார சீல நியம சற்குரு தரிசன நிலையினர்க்கே யன்றி மற்றைய வெத்திற நிலையினர்க்கும், அவர்தம் மனவாக்குக்கட்கெட்டுதற்கரிதாய அதீத நிலையினை விளக்குவதூஉம், **உபமந்யு அகத்திய** * பக்தவிலாசங்களால் விதந்து கூறப்பட்டதூஉம், நம்பியாண்டார் நம்பிகள், சேக்கிழார் பெருமான், உமாபதி சிவாசாரிய சுவாமிகளாதிய இப் புங்கவ சிரேஷ்டர்களால் திரு அந்தாதி, திருத்தொண்டர் புராணம், புராணசாரம் என்னும் இத்திருமுறைகளால் முறையே விதந்து கூறப்பட்டதூஉம், நம்பியாண்டார் நம்பிகள் வகுத்தருளிய திருமுறை பன்னிரண்டனுள் பத்தாவதாயுள்ளதூஉம்; வேதசிவாகமங்களின் முடிபொருளாய பதிபசுபாச விலக்கணங்களையும், சாதிக்கும் பொருளாகிய பசு பாச விடுதியுற்றுச் சாதிக்கப்படும் பொருளாகிய பதியை யடைதற்குச் சாதனமாயுள்ள சரியை கிரியை யோக ஞானங்களையும் இனிது விளக்குவதூஉம், சூ-தந்திரங்களையும், பாயிரமுட்பட உ௩௫ - அதிகாரங்களையும், ௩000 - திருவிருத்தங்களையுங்கொண்டுள்ளதூஉம், வேதாகமாந்தங்களின் ஒற்றுமைநயங்களைத் தெளிவுறவிளக்குவதூஉம், பக்திமான்கட்கும் தத்துவ விசாரஞ் செய்பவர்கட்கும் இன்றியமையாச் சாதனமாயுள்ளதூஉம், அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராயும், கோமுத்தி க்ஷேத்திர மென்னும் திருவாவடுதுறையில் ௩000 - வருஷம் சிவராஜ யோக ஞான சமாதியில் பரமாநந்தபோத சொரூபராய் விளங்கியவராயுமுள்ள

---

* அகத்திய பக்தவிலாசத்தில் **திருமூலநாயனார்** சரிதமாத்திரங் கூறப்பட்டிருப்பதேயன்றி, திருமந்திரம் என்னும் இவ்வரும் பெருநூலை அவர் இயற்றியருளியிருப்பதாகக்கூறப்பட்டிராமைக்குக் காரணம் தெரியவாராமையால் அஃது இன்னும் அறிஞர்கள் ஆராய்ச்சிக் கண்ணதாயிருக்கின்றது. இதன் விபரம் இப்பொழுது அச்சிலிருந்து வரும் இத் **திருமந்திரப்** பேருரைப் பதிப்பு முகப்பில் வெளியிடப்படும்.

திருமூலநாயனர் * தமது சிவானுபவத்திற் கண்டவாறு திருவாய்மலர்ந்தருளிய அரும்பெருஞ் சிறப்பினையுடையதூஉம், நம் தக்ஷிண உலகிற்கிரு கண்மணிபோன்று அரும் பெருந் தத்துவப் பொருணிறைவினை யெல்லாந் - தன்னுளொருங்கே கொண்டு உயர்வொப்புளதெனக் கூறற்கரிதாய் விளங்குவதூஉ மாகிய இத் திருமந்திரத் † திருமுறையினிடத்து நீட்டித்த காலமாய் (முடவன் கொம்புத்தேனுக் கிச்சித்தாங்கு) தமியேன் வைத்திருந்த சிற்றறிவின் பெரும்பற்றே காரணமாக அதனை யச்சிடுவான் வேண்டி, அதன் அச்சுப் பிரதி ஏட்டுப் பிரதிக ளெவற்றுள்ளும் ஒன்றே யெனினும் சுத்தப் பிரதி கிடைப்ப தரிதாயினமையானும், அஃது அறிஞர் பலர்க்கும் இன்றியமையாப் பெருஞ் சிறப்பினதாயினமையானும், தமியேன் ஆசிரியர் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துப் பிரபல மஹாவித்துவ சிரோமணி யாழ்ப்பாணத்து வடகோவை ஸ்ரீலஸ்ரீ - சபாபதி நாவலரவர்கள் முன்னிலையில் பழைய பல ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துக் கூடியவரையில் சுத்தப் பிரதியாக்கிக் குறிப்புரையுடன் கூடியதாய் இதனைப் பிரகடனிப்பிக்க வேண்டுமென இடைவிடாச் சிந்தனைப் பெருமுயற்சி வசத்தனாயிருந்த தமியேன், அம்முயற்சி முடிவெய்துமாறு பாண்டிநாடு முதலிய முந்நாடுகளினுமுள்ள முக்கிய ஸ்தானவாசர்களாகிய இராமநாதபுரசமஸ்தான ஹிரண்ய கர்ப்பயாஜி ரவிகுலதிலக ஸ்ரீமாந் - முத்துவிஜய ரகுநாத பாஸ்

---

* திருமூலநாயனர் என்பதனுள் திரு என்பது அழகென்பதனையும், மூலம் என்பது காரணமென்பதனையும், நாயனர் என்பது நடத்துவோன் என்பதனையும் உணர்த்துவனவாம். (நாயன்=நடத்துவோன்) நாயனென்பது உணர்த்தற்பொருட்டாய ஆர் விகுதியோடு புணர்ந்து நாயனர் என நின்றது. ஆசிரிய னமிர்தனென்பது அமிர்தனாசிரியனெனவருவது போன்று, நாயனர் திருமூலனென்பது திருமூலநாயனரென வந்தது. இதன் திரண்ட பொருள் அறமுதலிய புருஷார்த்தங்களை மக்களடைந்துய்யத் திருமந்திரங் கூறுவதன் வாயிலாக நன்னெறியின்கண் நடத்துவதற்குக் காரணமாயிருப்பவர் என்பதாம்.

† திருமந்திரமென்பது அழகிய மந்திரமெனப்பொருளாம். மந்திரம் என்பதன்பொருள் (தன்னை) நினைப்பவனைக் காப்பதென்பது. மந்=மநநம், திரம்=காப்பது.

கர சேதுபதிபூபாலர் முதலிய வித்துவ சிரேஷ்ட பக்திஞான கனவான்களிடத்து அத்திருமுறையின் ஏட்டுப்பிரதி பெறு நிமித்தஞ்சென்றதில், அவர்களுள் மேற்போந்த ஸ்ரீமாந்-பாஸ்கர பூபால சேதுபதியவர்கள் அரிய தத்துவ சாஸ்திரமாகிய திருமுறைகளுளொன்றாகிய இத்திருமந்திரம்வேதாகமங்களின் முடிவுரைச் சூத்திரம்போன் றிருத்தலான் மற்றைய தத்துவ சாஸ்திரங்கள்போல் குறிப்புரை முதலியவற்றால் அவ்வளவு சிறுபயனையேனும் கொடுத்தலரிதா யிருத்தலினாலும், விரிவுரையோ எவ்வளவோ பெரும் பயனையே கொடுத்தலினாலும் இப் பிரயாசையை அவ் விரிவுரை நிமித்த மெடுத்துக்கொள்ளின் எத்திறத்தினர்க்கு மிக்க பெரும்பயனையே கொடுக்குமெனக் கூறிய தேதுவாகத் தமியேன் அவ் வரும்பணியிற் பிரவேசித்த லுத்தம தருமமென, மதுரைத் தியசாபிகல் சங்கம் பிரசிடெண்டு, எப். டி. எஸ்., ஹைகோர்ட் வக்கீல், பி. ஏ., பி. எல்., பிரஹ்மஸ்ரீ ப. நாராயணையர் அவர்கள், சென்னைப் பிரசிடென்ஸி டிவிஷன் போஸ்ட் ஆபீஸ் சூபரிண்டெண்டும், சென்னைச் சர்வகலாசங்கத் தமிழ்ப் பரீக்ஷகருமாயிருந்த காலஞ்சென்ற யாழ்ப்பாணத்து (தற்போது சென்னைப் போஸ்ட்மாஸ்டர் ஜெனராலவர்களின் பிரதம பர்சனல் அஸிஸ்டெண்டாகிய ஸ்ரீமாந்-ராவ்பஹதூர் கே. வைத்திலிங்கம் பிள்ளையவர்கள், திரிசிராப்பள்ளி டிஸ்டிரிக்ட் போஸ்டல் சூபரிண்டெண்டு ஸ்ரீமாந்-கே. அமிர்தலிங்கம் பிள்ளை அவர்கள், பி. ஏ., ஆகிய இவ்விரு கனவான்களின் மாமனருமாகிய) வித்துவ சிரோமணி ஸ்ரீமாந் கனகசபைப்பிள்ளை, பி. ஏ., பி. எல்., அவர்கள், ஸ்ரீ இராமேசுவரத் தநுக்கோடிச் சத்திர ஸ்தாபகர் வழித்தோன்றலாகிய தேவிகோட்டைமேலைவீடு, மஹாவித்துவசிரோமணி, வீர.லெ. லெ. சிந்நயச் செட்டியார் முதலிய பரோபகார சீலோத்தமர்களாகிய இக் கனவான்களும் தூண்ட, ஷை ஸ்ரீமாந் - சேதுபதியவர்களாலும், திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை, திருவண்ணாமலை, திருவாலவாய் முதலிய க்ஷேத்திர வைதிக சைவாதீன மடாலயாதிபதிகளாகிய மகாசந்நிதானங்களாலும், மற்றைய சில கனவான்களாலும் அளிக்கப்பெற்ற அத் திருமுறையின் ஏட்டுப் பிரதிகள் பதினொன்றுக்குமேல் போந்தவற்றுடனும், தமியேன் சிறுதொகைக் கைப்பொருள்கொண்

டும், தேவிகோட்டை, கானடுகாத்தான் முதலிய நகரத்தாருட் சில கனவான்களுதவிய சிறுதொகைப் பொருளுதவிகொண்டும், சில சமஸ்கிருத திராவிட பண்டித சிரேஷ்டர்கள் முன்னிலையில் அதன் மூலத்தை அப்பழைய பல பிரதிகளுடனும் ஒத்துப்பார்த்துச் சுத்தப் பிரதியாக்கிக் கூடியவரையிற் சீர்ப்படுத்தி எழுதிய பின்னர், அதனுரையையும் எழுதுவிக்க வாரம்பித்துச் சிரமம் பல காலம் பல கடக்க நேரிட்டதாயினும், தமியே னெடுத்துக்கொண்ட அப்பணியில் ஒரு சிறிதும் தளர்வுறப்பெறாது எழுதி யொருவாறு முடிவுறப்பெற்ற அவ்வுரையை, ஷ்டி வித்துவ சிரோமணி ஸ்ரீமாந் - சிந்நயச் செட்டியார் லிகிதத்துடன், முன்னரே ஸ்ரீமாந் - பாஸ்கர சேதுபதியவர்கள் ஆஞ்ஞை தந்திருந்தபடியே அச்சமுகஞ் சென்று சேர்க்க, அவர்கள் மிக்க வுளக்கிளர்வெய்தியவர்களாய் அவ்வுரையைக் கால நீட்டிக்கப் பார்வையிட்டு ஆராய்ச்சி செய்ததில், பின்னரும் அதனைக் கூடியவரையில் சீர்ப்படுத்தி எழுதுவிக்க வேண்டுமென அதன் விவரங்களை யெடுத்துக்காட்டி அப்பணி நிமித்தம் ஒரு பெருந்தொகைப் பொருளுபகரித்ததோடு, சில வித்துவ சிரேஷ்டர்களுக்கு மீண்டும் திருமுக மளித்து, அவ்வா றெழுதுவிக்கப்பட்டுப் பூர்த்தி யெய்தியதும், அதனை அரங்கேற்றல் பிரகடனிப்பித்தல் முதலியவற்றின் செலவு தொகை முழுமையும் தாமே தம் பொறுப்பில் உபகரிப்பதை வகித்திருப்பதாய் ஆஞ்ஞை தந்து, தமியேன் விடாமுயற்சிப் பிரயாசை நிமித்தம் தமியேற்குத் தக்க உயர்தரச் சன்மானங்களளித்தாதரித் துபசரித்து விடைதந்தனுப்பியதும் பிறவும், நமது சுதேசமித்திரன் முதலிய தமிழ்ப் பத்திரிகைகளிலும், இந்து, ஸ்டாண்டர்ட் முதலிய இங்கிலீஷ் பத்திரிகைகளிலும் வெளிவந்தவற்றுள், சுதேசமித்திரனில் வந்தவற்றை மாத்திரம் இங்கு எவர்க்கும் விசதமாமாறு பிரசுரித்திருக்கின்றேன்:—

### "திருமந்திர உரை."

"சுதேசமித்திரன் 1902ஞ ஜூன்மீ 30உ.

வேதாகமங்களின் சாராம்சங்களைக்கொண்ட பன்னிரு திருமுறைகளுள் பத்தாவதாகிய **திருமூலர் திருமந்திர** மென்

னும் அரிய சாஸ்திரத்துக்கு வடகோவை மஹாவித்துவான் ஸ்ரீமத் - சபாபதிநாவலரவர்களின் மாணாக்கர் ஸ்ரீ வே. விசுவநாதபிள்ளையவர்கள் அதன் பெரும்பயனை யாவரும் எளிதில் எய்துமாறு நீண்டகாலம் இடைவிடாப் பெருமுயற்சிகொண்டு உரை எழுதுவித்து முடித்து, அதனை நமது ஸ்ரீமத் - பாஸ்கர சேதுபதிவேந்தரவர்களிடங்கொண்டுவந்து, இன்னும் சீர்ப் படுத்துவித்து அரங்கேற்றுவிக்கவேண்டுமென விஞ்ஞாபனம் செய்துகொள்ள, பிள்ளையவர்களின் விடாமுயற்சிநிமித்தம் அவ்வுரை ஒருபடி பூர்த்தி யெய்தியதற்குப் பூபதியவர்கள் திருவுள முகந்து நிகழும் ஜூன்-மீ 10-உ மங்களவாரம் மாலை அரண்மனை ஆனந்த விலாசத்தில் ஷை பிள்ளையவர்களுக்குக் கௌரீ சங்கரவுருத்திராக்ஷக் கண்டிகை முதலியசன்மானங்கள்செய்து தக்க வித்துவ சிரேஷ்டர்களுக்குக் கூடிய சீக்கிரத்தில் அவ்வுரையைச் சீர்ப்படுத்துமாறு நிருபங்களும் அளித்து, அவ்வாறு சீர்ப்படுத்திய பின்னர் அதனைத் தமது சமஸ்தானத்திலாவது சிதம்பரம் ஸ்ரீ நடேசப்பெருமான் சந்நிதியிலாவது வைத்து அரங்கேற்றும் பொறுப்பையும் தாமே வகித்திருப்பதாய்த் தெரிவித்து விடைகொடுத்தருளினார்கள்.

"பின்னர், பூபதியவர்களின் பெரிய தந்தையார் குமாரரும், பாலவநத்தம் ஜமீன்தாரரும், நான்காவது தமிழ்ச்சங்க ஸ்தாபித சிரேஷ்டருமாகிய ஸ்ரீமாந்-பொ. பாண்டித்துரைச்சாமித் தேவர்களும் அத் திருமந்திரவுரை விஷயமாக ஷை பிள்ளையவர்களுக்குத் தக்க பொருளுதவிசெய்து ஆதரித்துபசரித் தனுப்பினார்கள்."

---

பின்னர், ஸ்ரீமாந்-சேதுபதியவர்களின் ஆஞ்ஞைப்படியே தமியேன் அவ்வுரையைச் சீர்ப்படுத்தி யெழுதுவித்துக் கொண்டுவரும் ஆரம்பகாலத்திலேயே ஸ்ரீமாந்-சேதுபதியவர்கள் தேகவியோக மெய்தியமையால் தமியேன் மிக்க மனத் தளர் வெய்தப்பெற்றவனாயிருந்தபோதினும், நாளாவர்த்தியிற் கால நீட்டித்து நாள் பல கழியவுங்கொண்ட அவ்விரதநிலைமையிற் றளர்வுறப்பெறாது சுமார் ரூபா-க000-க்கு மேற் செலவிட நேர்ந்தும் அஃது ஒருவாறு எழுதுவித்து முடிவுறப்பெற்று

வருஷமூன்றுக்குமேலாகின்றன. இப்பேருரைப்பிரகடனப் பணியை மேற்பார்க்கும் பொறுப்பையும் வேதாரணிய க்ஷேத்திர நிவாஸர்களாய பிரஹ்மஸ்ரீ-DR. V. V. இரமண சாஸ்திரிகள், PH. D., அவர்களைக்கொண்டு வகிப்பித்துக்கொண்டே அஃது ஆரம்பிக்கப்பட்டுச் சில பாரம் வரையில் நடந்தேறி வரும்பொழுது, அதன் செலவு நிமித்தம் முன்னரே சேகாஞ்செய்து சேமமென வைக்கப்பட்டிருந்த அத்தொகை கெடுக்கள் பல எதிர்பார்த்திருந்தும் சமயத்துக்கு வந்து உதவப்பெறுது தாழ்த்து வந்தமையாலும் வருகின்றமையாலும் அப்பிரகடனப் பணியும் தளர்வுறப் பெற்றுத் தமியேனும் மிக்க மனத் தளர்வினுக்கு இலட்சியனு யிருந்துகொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில், தேவிகோட்டை ஸ்ரீமாந்-மெ. அரு. நா. இராமநாதஞ் செட்டியார், மெ. அரு. அரு. அருணுசலஞ் செட்டியாராகிய இக்கனவான்களைத் தற்செயலாய்ச் சென்னையில் சந்திக்க நேரிட்ட நற்சமயம், அவர்கள் அப்பேருரைப் பிரகடன விஷயங்கள் தற்பொழுது எந்நிலைமையி லுளவெனவுசாவி அவற்றினிலைமை விவாங்களைத் தெரிந்துகொண்ட பின்னர், அப்பிரகடனப் பணியை அத்தொகை வந்து சேர்ந்ததும் ஆரம்பிக்கும் அவாக்கடப்பாட்டுடன் எதிர்பார்த்திருத்தல் சரியே யெனக்கூறி, முன்னரே அவ்வுரை நிமித்தம் தமியேனல் சுத்தப் பிரதியாக்கிச் சீர்ப்படுத்தி எழுதுவித்திருக்கும் அம்மூலத்துடன் அதன் அரும்பதக் குறிப்புகளுஞ் சேர்த்து ஒரு பதிப்பு வெளிப்படுத்தக் கூடுமேல், அது பாராயணுதி நியமத்தினர்க்கும் மற்றையர்க்கும் நலமாகக்கூடுமேயெனக் கருதிக் கூறிய தேதுவாக, தமியேன் பண்டே கருதிய வண்ணமும் முடிவுறப் பெறுங்காலம் வந்து கூடவும் ஒருவாறு மனக் கிளர்வுடையவனுய், ஷெ ஸ்ரீமாந்-மெ. அரு. நா. இராமநாதஞ்செட்டியார், மெ. அரு. அரு. அருணுசலஞ்செட்டியார் ஆகிய இக்கனவான்கள் இதன் செலவுநிமித்தம் உதவிய ஒரு தொகைப்பொருள்கொண்டும், பின்னர், சென்னை ஹைகோர்ட் மாஜி ஜட்ஜ் பிரஹ்மஸ்ரீ சர். எஸ். சுப்பிரம்ணிய ஐயர் அவர்கள் உதவிய ஒரு தொகைப் பொருள்கொண்டும் குறிப்புரையோடுங் கூடிய இம்மூலத்தைப் பிரசுரிக்கலாயினேன்.

இதனுரைப் பிரதிகளுஞ் சிற்சில விடங்களி னிருப்பதாயும், அதினுங் கோயமுத்தூர் இன்ஸ்பெக்டிங் ஸ்கூல் மாஸ்டர் வித்துவான்வீராட்சிமங்கலம் ஸ்ரீமத்-சிவன்பிள்ளையவர்களிடத்து தமியேன் எடுத்துக்கொண்டிருக்கும் அத்திருமுறைத் திருமந்திரப்பேருரைப் பிரகடனப்பணிக்கு இன்றியமையாச் சாதனமாக வேண்டப்படும் அத் திருமந்திரச் சிறந்த வுரைப் பிரதி மூலப்பிரதிகளு மிருப்பன மாத்திரமா! சிறப்புற்றோங்கிய நமது முச்சங்கத்து நூல்களாகிய பஞ்சகாவியங்களுள் இறப்புற்றனவென அறிஞர்கள் பலாற் கருதப்பட்டு வரும் வளையாபதி, குண்டலகேசி முதலிய கிடைத்தற் கரிய பிரதிகளுடனும், இன்னும் மற்றைய அச்சங்க மருவிய நூல்களாகிய பன்னிருபடலம், இசைமரபு, இசைநுணுக்க மாதிய பற்பல அரு நூற் பிரதிகளுமிருப்பன உலகப்பிரசித்தமெனவும் சில கனவான்கள் குறித்துக் கூறிய வாக்கிரசத்தான் மிக்க மனக்கிளர்வுளனாய் உண்மையில் இப்பிரதிகளுடன், அத்திருமுறைத் திருமந்திரவுரைப் பிரதியு மிருக்கக் கூடுமேல் அதனை எவ்விதத்தானாயினும் பெற்றுக்கொள்ளவேண்டுமெனத் தூண்டிய அவா மிகுதியால், மேற்படி ஸ்ரீமாந் - சிந்நயச் செட்டியார், மதுரைத் தமிழ்ச்சங்க ஸ்தாபித வித்துவ சிரேஷ்டர் ஸ்ரீமாந்-பொ. பாண்டித்துரைச்சாமித்தேவர் ஆகிய இக்கனவான்களின் சிபாரிசு லிகிதங்களுடனும், தடவைகள் பற்பல சென்று சந்தித்து வேண்டிக் காத்ததில், அக்கனவான் தமியேற்கவசியம் வேண்டப்படும் அத்திருமுறை யுரைப்பிரதியை யுதவுதற்கிசையா முகாந்தரம் பற்பல கூறிக் கடத்திய வுதாரத்துவத்தால், *அத்திருமுறை யுரைப்பிரதியின் றரிசனப்

---

* இக் கனவான் சில வருடங்கட்கு முன்பு பதிப்பித்து வெளியிட்ட பிங்கல நிகண்டுரை முகப்பு விளம்பரமொன்றில் "இனிப் பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்" என்னும் தலைப்பெயரின்கீழ் **வளையாபதி, பன்னிருபடலம், இசைமரபு, இசைநுணுக்க** மாதிய நூல்களுங் காணப்பட்டிருந்தன. அவைகள் அவ்வாறே அக் கனவானின் காலத்துப் பிரகடனமாய் வெளிவந்தனவாகவுங் காணப்படவில்லை. பின்னர் அக் கனவானின் சந்ததியாராவது அக் கனவானின் கருத்தைப் பூர்த்தியுறுவித்து வெளியிட்டதாகவுங் காணப்படவில்லை. இக் கனவானிடத்து இவ் வரும் பெரும் பிரதிகளோடும், தத்துவ நுண்சுவைப் பொருட்பெருக்கார்ந்த இத் **திருமந்திரப்** பாசுரமுழுமைக்கும்

பேறேனுங்கிடைக்கப்பெறாத தமியேன், அத்திருமுறை யுரையின் அசல் நகற்பிரதிகளின் ஒன்றையேனு மெவ்வாறடையக் கூடுமெனக்கருதி, பின்னும் அவ்விடத்தை யெதிர் நோக்கற்கிடனின்றாய் மிக்க மனக்கவலுள்ளனாய் வாளாதிரும்புதற் கேதுவாயினதுமன்றி, மேற்குறித்துக் கூறிய அக்கனவான்களின் வாக்கிரசத்தின் வழியே, பின்னும் மற்றைய சிற்சில விடங்கட்கும் பிரயாணப் பெருஞ்சிரமப் பணவிரயாதிகளையுங்கூடக் கருதாது சென்றலைந்தெதிர்நோக்கியும், மேற்போந்தவாறே அப்பிரயத்தனமும் பயனிலதாயிற்று.

இவர்கள், உண்மையில் அப்பிரதிகள் தங்கண்மாட்டுளவேல் அவற்றை யெவர்க்கும் பயன்படுமாறுதவுதற்கு மனவிசைவின்றிக் காக்கலுற்றனர்களோ? அன்றி, உண்மையில் அப்பிரதிகள் தங்கண்மாட்டிலவாயிருக்கவும், அவையுளபோற்பாவு

பேருரைப் பிரதியும் ஒன்றிருப்பதாகப் பல ஜனவதந்தியாய்ப் பாவுறப் பெறுதற்கிடனாயிருந்த இப் பிரதிகள் யாவும் இப்பொழுது எந்நிலைமையினுளவோ, அதன் உண்மை யொன்று முணரப்பெறுகிலேன்.

தற்பொழுதாயினும் அக்கனவானின் சிஷ்யர் அல்லது சந்ததியார் முதலிய எவர்களிடத்திருப்பினும் அதனை அவர்கள் லோகோபகாரமாதற்பொருட்டுத் தயைகூர்ந்துதவின், இப்பொழுது அச்சிலிருந்து வரும் இத் **திருமந்திரப்** பேருரைப் பணிக்கு அது மிக்க சாதனமாயிருத்தலோடும் அதனையுதவிய கனவான்கட்கும் பெரும் புகழ் புண்ணியங்களை எய்துவிக்கும். அன்றியும், இவ்வுரைப் பிரதியை எவர்களுதவினும் அக் கனவான்கட்கு அவ்வுரை அமைதிக்குத் தக்கவாறு ரூபா உ௫0 - ல் இருந்து ௩௫0, ௫00-வரையிலு முடனே தரப்படுவதோடும், அக் கனவான்களின் திருநாமமுட்பட முழுவிலாசமும் அத்திருமுறையின் முகப்பில் வெளியிடப்படுவதுடன், அத் திருமுறையின் அச்சுப் பிரதியும் ௧0-க்குமேல் மிக்க வந்தனபூர்வகமாய்த் தரப்படும். மேற்கண்டவா றுதவக்கூடும் கனவான்கள் தமியேனிடத்தேனும் அல்லது, மதுரை, எப். டி. எஸ். தியசாபிகல் சங்கம், பிரஸிடெண்ட், ஹைகோர்ட் வக்கீல், பி. ஏ, பி. எல்., பிரஹ்மஸ்ரீ - ப. நாராயணையரவர்களிடத்தேனும், சென்னை ஜார்ஜ் டவுன், தம்புச்செட்டி வீதி, ரிப்பன் அச்சியந்திரசாலைச் சொந்தக்காரர், ஹைகோர்ட் வக்கீல், பி. ஏ., பி. எல்., ஸ்ரீமாந் - சை. சிவசங்கர செட்டியாரவர்களிடத்தேனுங் கொடுத்துக் கலந்துகொண்டு ஏற்படக்கூடும் ஷை தொகையி னொன்றைப் பெற்றுக்கொள்ளலாம்.

தற்கேதுவாய் வந்த அப்பிரசித்தியை யிழக்கக்கூடுமேயென வுண்மை கூறவியலாதவர்களாயோ? சாக்குப் போக்குப் பற்பல கூறி அனுப்புதற்கிசைந்தனர்போலும்! நம் இக்குழுவினருள் தாம் அனுபவித்தற் குரிய நிலைமையி னிலா யிருந்தும், அவற்றை அனுபவித்தற்குரிய நிலைமையினுளராம் பிறர்க்கு முதவப்பெறு மனப்பாங்கிலாய் வைத்திழக்கு நன்றறிவாளரு முளரே!!

இதன்மத்தியில் பரம்பரைப் பிரபல மிராசு குடும்பப் பிரபுவாகிய உத்தமபாளையம் ஸ்ரீமாந்-ம. தி. **பொன்னம்பலமுதலியார், பி. ஏ.,** அவர்கள் (அஃதாவது மதுரை க்ஷேத்திர நகர நிவாசப் பிரபல மிராசு குடும்பப் பிரபுக்களாகிய ஸ்ரீமாந்-ம. தி. **சுப்பிரமணிய முதலியார்,** ஸ்ரீமாந்-ம. தி. **சோமசுந்தரமுதலியார்** ஆகிய இக்கனவான்களின் சகோதர சிரேஷ்டர்) உதவிய மிகப் பழைய அப்பிரதியில் இத்திருமந்திரத்திருமுறை முழுமையினு மிருந்தெடுத்துச் சேர்க்கப்பட்ட நூறு திருப்பாசுரங்கட்கு மாத்திரம், கன்னடியத் திருமேனிக் கம்பளிச்சட்டைக் **கைலாயச் சித்தர்** எழுதிய வுரையென அதன் முகப்பில் வரையப்பட்டிருந்தது. இப்பிரதி கிடைக்கப்பெற்றுச் சில வருடங்கட்குப் பின்னர், மதுரைத் தமிழ்ச் சங்கத்திருந்தும் இச் சித்த சிரேஷ்டரின் அந் நூறு பாசுரத்தின் மற்றோருரைப் பிரதியும், வேறு இத் திருமுறை மூலப் பிரதிக ளிரண்டும் கிடைக்கப்பெற்றேன். நிற்க.

இக்குறிப்புரை யெழுதுவதில் கூடிய பிரயாசை யெடுத்துக்கொண்டுழைத் துதவிபுரிந்து வந்த தத்துவ விசார வித்துவ சிரேஷ்டர் பிரஹ்மஸ்ரீ - திரு. அ. சிவாநந்தசாகர யோகீசுவரர் அவர்கட்கும், இலக்கண இலக்கிய தர்க்க வேதாந்த சித்தாந்த கலாவல்ல சமரச தத்துவ போதகாசிரியர் சென்னை ஸ்ரீமத் கோ. வடிவேற்செட்டியார் அவர்கட்கும், சேலம் டிஸ்டிரிக்ட் போலீஸ் அஸிஸ்டெண்ட் சூபரிண்டெண்டு சிவாநுபூதிச் செல்வர் ஸ்ரீமாந்-சுந்தரமுதலியார் அவர்கட்கும், சென்னைக் கிறிஸ்தியன் காலேஜ் திராவிட ஆங்கில கலாதத்துவ போதகாசிரியர் திருநெல்வேலி ஸ்ரீமாந் - அநவரதவிநாயகம்பிள்ளை, எம். ஏ., எல். டி., அவர்கட்கும், இதன் நூன்முகம் எழுதியுபகரித்த

சமஸ்கிருத திராவிட, ஆங்கிலாதி பாஷா கலாவல்ல பிரஹ்மஸ்ரீ-DR. V. V. இராமண சாஸ்திரிகள், PH. D., அவர்கட்கும், தம் சிரமத்தை ஒரு சிறிதும் கருதாது தம் அருமைக் கவனத்தை யொருங்கு செலுத்தி இச் சிறப்புப்பாயிரத்தை யெழுதித்தந் துதவிய பிரஸிடென்ஸிக் காலேஜ் தமிழ்த் தலைமைத் தத்துவ போதகாசிரியரும், பழைய நூலாராய்ச்சியில் அதிபாண்டித்திய முடையருமாகிய மஹாமஹோபாத்தியாயர் பிரஹ்மஸ்ரீ - உ. வே. சாமிநாத ஐயரவர்கட்கும், தத்துவவிசார வைதிகசைவப் போதகாசிரியரும், பழைய சைவநூலாராய்ச்சி வல்லுநரும், கைம்மாறற்ற பரோபகார வித்தியாதான ப்ரவர்த்தனருமாகிய வித்துவ சிரோமணி ஸ்ரீலஸ்ரீ - சாமிநாத பண்டிதரவர்கட்கும், இதற்குத் திருமூலநாயனர் திருவுருவப்பட முதலியவற்றைக் கைம்மாறு கருதாது தமது பேருளங்கொண் டமைப்பித்துதவிய சென்னைப் பிரஸிடென்ஸி ஸ்கூல் ஆப் ஆர்ட்ஸ் (சித்திரக் கலாசாலை) சூபரிண்டெண்டு ஸ்ரீமாந்-வேலாயுதாசாரியார் அவர்கட்கும், இக்குறிப்புரையோடுங் கூடிய இத்திருமந்திரப்பதிப்பு வெளிவருவதற்கு முக்கிய காரணர்களாகிய மேற்போந்த ஸ்ரீமாந்-மெ. அரு. அரு.நா. இராமநாதஞ்செட்டியார், ஸ்ரீமாந்-மெ. அரு. அரு. அருணசலஞ் செட்டியாராகிய இக்கனவான்கட்கும், சென்னை ஹைகோர்ட் மாஜி ஜட்ஜ் பிரஹ்மஸ்ரீ சர். எஸ். சுப்பிரமணிய ஐயர், கே. ஸி. ஐ. இ., எல். எல் டி., எப். டி. எஸ்., அவர்கட்கும் தமியேன் மனப்பூர்வகமாய அன்பார்ந்த அதிவிநய வந்தனத்தைப் பன்முறையுஞ் செலுத்தாநின்றேன்.

இக்கனவான்கள், இப்பொழுதுஅச்சிலிருந்துவரும் சுமார் உருO-பாரம் வரை ஆகக்கூடுவதாயும், அதன் கட்டட அமைவில் உ-அல்லது ங-வாலியம் வரையிலாகக்கூடுவதாயுமுள்ள இத்திருமந்திர அப்பேருரைப்பணியும் விரைவில் பூர்த்தியுற்று நம் தமிழ்நாட்டினர் எவர்க்கும் பேருபகாரமாகும்பொருட்டு இன்னுங் கூடியவரைப் பொருளுதவி முதலியன புரிந்துதவி, அதனல் எய்தற்குரியனவாய புகழ் புண்ணியங்களையு மெய்துவார்களென எதிர்நோக்கியிராநின்றேன்.

மேற்போந்த திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை, திருவண்ணுமலை, திருவாலவாய் முதலிய க்ஷேத்திர

ஆதீன வைதிகசைவ மடாலயாதிபதிகள், கோயிலூர் சிதம்பரமுதலிய க்ஷேத்திர வேதாந்த மடாலயாதிபதிகள், ஷ்ை ஸ்ரீமாந் - பாஸ்கர சேதுபதி வேந்தரவர்கள், ஷ்ை தேவிகோட்டை ஸ்ரீமாந் - சிந்நயச்செட்டியாரவர்க ளுள்ளிட்ட மற்றைய கானுடுகாத்தான் முதலிய நகரநிவாச சிரேஷ்டர்கள் ஆகிய இக்கனவான்கள், முன்னரே அப் பேருரை நிமித்தம் அத்திருமுறையின் ஏட்டுப்பிரதி திரவிய சகாய முதலிய புரிந்துதவினமையின் அவ்வக் கனவான்க ளொவ்வொருவருக்கும் தமியேன் மனப்பூர்வகமாய அன்பார்ந்த அதிவிநய வந்தனத்தைப் பன்முறையுஞ் செலுத்தா நிற்பதோடும், அவ்வேட்டுப்பிரதிகள் திரவிய சகாயமாகிய அத்தொகை விவரக்குறிப்பு முதலியவும், அவ்வக் கனவான்களின் திருநாம முட்பட அவர்கள் முழுவிலாசமும், அப்பேருரைப் பிரகடனப் பதிப்பு முகப்பில் லோகோபகாரமாய இவ்வழி நன்கு விசதப்பட்டுப் பிறரும் பின்பற்றும்பொருட்டு வெளியிடப்படுவது மன்றி, இத்திருமுறையின் ஏட்டுப்பிரதிகள்மாத்திரம் உதவிய ஒவ்வொரு கனவான்கட்கும் அவ்வவ் வேட்டுப் பிரதிகளுடன் ஒவ்வொரு அவ் வச்சுப்பிரதியும், திரவிய சகாய மாத்திரம் புரிந்துதவிய கனவான்கள் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு அவ் வச்சுப்பிரதியும், அவ்விரு சகாயமு மொருங்கே புரிந்துதவிய அக் கனவான்கள் ஒவ்வொருவர்க்கும் அவ்வவ் வேட்டுப்பிரதியுடனும், இவ்விரு அவ்வச்சுப்பிரதியும் மிக்க வந்தனத்துடன் அனுப்பப்படும்.

மேற்கண்ட இவ்வரும் **பேருரைப்** பிரகடனப் பெரும் பணி மேலும் விரைவில் பூர்த்தியுறுமாறு கூடிய வுதவிபுரியு மற்றைய கனவான்கள் ஒவ்வொருவரின் திருநாமமுமுட்பட அவர்கள் முழுவிலாசமும் தொகையும், பண்டே யுபகரித்துதவிய அக்கனவான்களை யொவ்வ, அப்பேருரைப் பிரகடனப் பதிப்பு முகப்பில் வெளியிடப்படுவதுடன், ஒவ்வொரு அத்திருமுறையின் அச்சுப்பிரதியு மனுப்பப்படும்.

இராமநாதபுர சமஸ்தானத்திற்குத் தமியேன் சென்ற சில மாசங்கட்கு முன்னர்ச் சென்று சேர்ந்ததும், தத்துவ விசார வித்துவப்பிரவர்த்தன மகா வித்துவ சிரேஷ்டர்களாய

வரையாதீதலின் முதல்வள்ளல்களையே ஒவ்வும் பெரும்புகழ் படைத்தோங்கிய ஷடி ஹிரணிய கர்ப்பயாஜி ரவி குல திலக ஸ்ரீமாந்-முத்துவிஜய ரகுநாத பாஸ்கரசேதுபதி வேந்தரவர்கள், தற்பொழுது அச்சிலிருந்துவரும் அத் திருமந்திரப் பேருரைப் பிரகடன நிமித்தம் வேண்டப்படும் செலவுத்தொகை முழுமை யையு முபகரிப்பதைத் தாம் வகித்திருப்பதாய்ப் பண்டே தமி யேற்குளக்கனிவோடும் திருவாக்களித்திருந்த அக்கட்டுரைப் பெரும்பற்றின் றொடர்பே யேதுவா யெனைத்தூண்ட, ஸ்ரீமாந்-அப் பாஸ்கர சேதுபதிவள்ளல்வர்களின் அருந்தவப் பெருங் கொழுந்தாய் அவதரித்துச் சர்வைசுவரிய சற்குணோத்தம சீல கல்வியறிவாதி சம்பன்ன சிரேஷ்ட பட்டாதிபர்களாய் விளங் கும் ஸ்ரீமாந்-இராஜராஜேஸ்வர சேதுபதி பூபால வள்ளலவர் களின் பேட்டியை, அச் சமஸ்தானத்துப் பிரபல மகாவித்துவ சிரேஷ்டர்களாய உபயவேதாந்த ப்ரவர்த்தன ப்ரஹ்மஸ்ரீ ரா. இராகவையங்கார், ப்ரஹ்மஸ்ரீ மு. இராகவையங்கார், ப்ரஹ்மஸ்ரீ ஸீ. சுவாமிநாதையர், ப்ரைவேட் சக்ரிடெரி ஸ்ரீமத் - அ. இராஜநாயுடு முதலிய இக் கனவான்களின் முன்னிலையாக வெய்தியதும், ஸ்ரீமாந் - அவ் இராஜராஜேஸ்வர சேதுபதி பூபாலவள்ளலவர்களாற் பேரருணைக்குட னாதரித்துபசரிக் கப்பெற்ற தமியேன் சிலபொழுதினுள், சென்ற விஷயவிவர மியாவையும் தாம்கூடியவாராய்ச்சிக்கண்ணதாய்த் தம்பேருளத் தமைவுறக்கொண்டு மிக்க கனிவினர்களாய், அத் திருமந்திரப் பேருரைப் பிரகடன நிமித்தம் இச் சமஸ்தானத்தினின்றும் தக்க வுதவிபுரிந்து வருவதாக ஆஞ்ஞைதந்தருளியதோடு,ரூபா 200-ம் உடனுதவியாதரித்துபசரித்து விடைதந்தனுப்பப்பெற் றுப் பெருமகிழ்வுடன் றிரும்புதலாயினேன்.

பேரறிவாண்மை வாய்மை வண்மை பொறை யிரக்க முத லிய வியற்கை நிறைவின் பெருவாம்பிகவாப் பெருநிலை மாட்சி மைப் பெரியரிற் பெரியர்களாயும், குறை வேண்டினர்க்கு முறை வேண்டினர்க்குங் காட்சிக்கெளியர்களாயும், இச் சமஸ் தானத்துத் தம் பிரதிநிதிகளாய்ச் சர்வாதிகார நிர்ணயங்களை யும் வகித்துத் தத்தம் கடப்பாட்டினை நடாத்திவரும் அமைச் சினர் முதலிய பேரதிகாரிகள் வாய்ப்புறப் பெற்றிருப்பினும்,

அவ் வொவ்வொருவர் புரியுங்காரியமெவ்வெவற்றினும் தாமும் (தூன்னூசி செல்வழிச் சரடு சென்றுங்கு) உடன் சென்று கருதி, அவ்வவற்றி னொருசிறிதாயினுந் தாழ்வுறப் பெறுதாய்ப் புரிதற்குரிய புரிவிக்கும் பேராராய்ச்சியூக்கத்தின் மாண்பினர்களாயும், தம் அரும்பெருங்காலப்போக்கில் சோம்பின் பெரும் வைரிசிரேஷ்டர்களா யொரு சிறுபொழுதையேனும் வீண்படப்போக்கா மகாவித்துவசங்க அருங்கலை விநோத விற்பனைச் செல்வப் பெருமாட்சியினர்களாயும் விளங்கும் இவ் இராஜ ராஜேஸ்வர பூபால வள்ளலவர்களின் இச்செயற்கருங்காட்சி நிறைவின்பெருக்கைப் பெரிது மூன்றிக் கருதுமெவர்க்கும், இம்மகா சமஸ்தானம் அதன் அதிபூர்விக வுன்னத நிலைமையைத் திரும்பியும் எய்தக் கூடுங்காலம் விரைந்து சமீபித்து விட்டதென்பதைச் சூசிப்பிக்காதிராது!

இச் சமஸ்தான இராஜதானிக் கோட்டையு ணிறைவுற விளங்கும் வரப்பிரசாத வர்த்தனப் பிராட்டியாராய் வீற்றிருந்தருளும் ஸ்ரீ இராஜராஜேஸ்வரியாரின் சீரிய அதி யுன்னதத் தோற்றத்ததிபண்டைய மகாலயம், மாடமாளிகை கூட கோபுரங்களைக்கொண்ட வுன்னதத் தோற்றத்ததிபூர்விக பல அரண்மனைஸ்தானங்கள், கொலுவிருந்தருளு மகா இராமலிங்க விலாச முதலிய அதிவிசித்திர விசேடக் காட்சி ஸ்தானங்கள், அரசிறை அமைச்சு வித்துவசங்க ஸ்தானங்கள் ஆகிய விவற்றினுள், அதி கிலமெனத் தம் காட்சிக்கெய்தும் ஒவ்வொரு பாகத்தையும் சீருறக்கருதி அரும்பணி புரிவிக்கும் இன்றியமையாச் செயல்களில் தம் அருங்காலப் போக்கைப் போக்கியொழுகும் ஸ்ரீமாந் - இப்பூபால வள்ளலவர்களின் அதி பேரறிவாற்றல் பெருந்தட்ப முதலிய பெருங்குண நிறைவின் பெருக்கையுற்றுக் கருது மெவர்தாம் இச் சமஸ்தானத்தின் அதி பூர்விக வுன்னதத் தோற்றத்தை நோக்கிப் பெருமகிழ்வுறப் பெறுதார்!

ஸ்ரீமாந் - இவ் இராஜராஜேஸ்வர சேதுபதிபூபால வள்ளலவர்கள் பூரணாயுசையும், பெருவாழ்வையும், இஷ்டசித்தியையுமொருங்கெய்தப் பெற்றுச் சதுரர்களாய் நிரதிசயானந்த வின்ப விலட்சியப் பேற்றினர்களாய் நிலவுறுமாறு ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசப் பெருங்கருணாநிதியை அநவரதம் பிரார்த்திக்கின்றேன்.

திருமூலநாயனர் திருவாய்மலர்ந்தருளிய இத் திருமந்திரப்பாசுரத் தொகுதி மூவாயிரமேயென ஆன்றோர் ஆட்சியில் வரையறுக்கப்பட்டிருந்தபோதினும், பழைய அவ்வேட்டுப் பிரதிகளுள் அவ்வரையறையை மீறி சஎ-பாசுரங்கள் வரையிற் காணப்பட்டு வருவதோடு, அப்பாசுரங்களுட் சிற்சில முன்சில அதிகாரங்களுட் காணப்படுவன பின்சில அதிகாரங்களுள்ளுங் காணப்பட்டுவருகின்றன.

மேலும், அவிரோதவுந்தியார், வைராக்கியதீப முதலிய தத்துவ சாஸ்திரங்கட்குத் திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் இயற்றியருளிய உரையுள்ளும், ஸ்ரீ சொரூபானந்தசுவாமிகளும் ஸ்ரீ தத்துவராய சுவாமிகளும் முறையே தாம் திரட்டியருளிய பெருந்திரட்டுக் குறுந்திரட்டு என்னும் தத்துவசாஸ்திரங்களுள்ளும் திருமந்திரப் பாசுரங்களென மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளன சிற்சில தமியேற்குக் கிடைத்த பிரதிகளுட் காணப்படவில்லை. அன்றியும், கர்ணபாம்பரையாய்த் திருமந்திரப் பாசுரங்களென அறிஞர் பலராற் சொல்லப்பட்டு வருவனவுஞ் சிற்சில வுளவாகும். ஆதலின், தமியேற்குக் கிடைத்தவரையில் அப் பாசுரங்கள் யாவையும் இங்குப் பிரசுரித்திருக்கின்றேன்.

## திருமந்திரப் பாசுரங்கள்.

---

### அவிரோதவுந்தியார் உரை.

"முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியிற் பெற்று லறியலாந்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே.

ஒத்த சமயங்க ளோரா று வைத்திடு
மத்த னொருவனு மென்ப தறிந்தில
ரத்த னொருவனு மென்ப தறிந்திடின்
முத்தி விளக்கு முதல்வனு மாமே.

மூதலொன்று மானை முதுகுடன் வாலுந்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகான்
மதியுட னந்தகர் வகைவகை பார்த்தே
யதுகூற லொக்கு மாறு சமயமே.

தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந்
தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே யுடனுயிர் தத்துவமாய் நிற்குந்
தானே யுலகிற் றலைவனு மாமே.

எவ்விடத் துந்தம் பணியின்மை கண்டுளோ
ரெவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே
யவ்விடத் தைங்கரு மத்தா லறிதலா
லவ்விடத் தோருக்கோ ருபாய மில்லையே.

இணங்க வேண்டா வினியுல கோருட
னுணங்கு கல்வியு நூல்களு மென்செயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே."

---

### வைராக்கியதீப உரை.

"உடலாங் குகையி லுணர்வாகும் பீடத்
தடலார் சமாதி யிதயத்த தாக
நடமா டியகுகை நாடிய யோகி
மிடையாகா வண்ணமே சாதிக்கு மெல்லவே.

நிற்ற லிருத்தல் கிடத்த னடையோடல்
பெற்ற வக்காலுந் திருவருள் போமமற்
சற்றியன் ஞானந் தானந்தந் தங்கவே
யுற்ற பிறப்பற் றொளிர்ஞான நிட்டையே."

---

### பெருந்திரட்டுக் குறுந்திரட்டு.

"அண்ணன் முதலா வறுபதி னாயிர
மெண்ணிலி கோடி தொகுத்தவிவ் வாகம
மண்ண லறைந்த லறிவறி யாவிடி
னெண்ணிலி கோடியு நீர்மே லெழுத்தே.

ஆறு சமய முதலாஞ் சமயங்க
ளூற தெனவு முணர்க வுணர்பவர்
வேற தறவுணர் வார்மெய்க் குருநந்தி
யாறி யமைபவர்க் கண்ணிக்குந் தானே."

---

**கர்ணபரம்பரை.**

"நாயோட்டு மந்திர நான்மறை வேத
நாயோட்டு மந்திர நாத னிருப்பிட
நாயோட்டு மந்திர நாதாந்த சோதி
நாயோட்டு மந்திர நாமறி யோமே."

ஆதலின், இவற்றின் அந்தரங்க விஷயங்கள் யாவையும் நமது வேதாரணிய க்ஷேத்திர நகரநிவாசர் பிரஹ்மஸ்ரீ **Dr. V. V.** இரமண சாஸ்திரிகள், PH. D., கூடியவரையில் ஆராய்ச்சிசெய்து எழுதிய இதன் நூன்முகத்தான் ஒருவாறுணரக் கூடுமாயினும், இன்னும் அது ஆன்றோர் ஆராய்ச்சிக்கண்ணதாயிருந்துகொண்டு வருகின்றமையால், இதன் விவரமுடிபுகள் யாவையும் தற்பொழுது அச்சிலிருந்துவரும் அப்பேருரைப் பிரகடனப் பதிப்பு முகப்பில் யாவர்க்கும் விசதமாமாறு வெளியிடப்படும்.

தத்துவ விசார வித்துவ சிரேஷ்ட சீலரும், சிவாநுபூதிச் செல்வரும் இல்லறஞானிகள் திலகமுமாகிய மேற்போந்த பிரஹ்மஸ்ரீ ப. நாராயணையரவர்களின் கைம்மாறற்ற பேருதாரத்துவத்தைக்கருதி யுளமாரத் தமியேனைத் தூண்டும் அன்பின் பெருக்காலாய அவாவே பின்னுமெடுத்து அம்மகானை வரைதற்கின்றியமையாச் சாதனமாயிற்று. காலநீட்டிக்கத் தமியேனெடுத்துக்கொண்டுழைத்துவந்த அத்திருமந்திரப் பேருரைப் பெரும்பணிமுயற்சி ஆரம்பவெல்லைமுதற்கொண்டே, அதற்கின்றியமையாச்சாதனமாகிய அத் திருமுறை ஏட்டுப்பிரதிகள் சேகரிக்குங் கவனப்பிரயாச நிமித்தமோ, அதனுண்மைப்

பொருட்டிறனைக் கூடியவரையுணர்ந் துரையெழுதவல்ல வித்துவ சிரேஷ்டர்களை ஆராய்ந்துணர்ந்து கருதி இசைவிப்பிக்கும் பிரயாச நிமித்தமோ, இதன் சில சந்தர்ப்பங்களின் உடன் வேண்டி நேரிடக்கூடும் பொருளுபகரித்தல் உபகரிப்பித்த லாதிய பிரயாச நிமித்தமோ, அப் பேருரைப்பணி முயற்சி எவ்வாறாயினும் ஒருவாறு கூடிய விரைவில் பூர்த்தியுற்றுப் பிரகடனப்பணியும் விரைந்து முடிவுறுமாறு எடுத்துக்கொண்ட விருப்பின் பிரயாசநிமித்தமோ, இக்கனவானும், இக்கனவானை யொவ்வ, மதுரை கவர்ன்மெண்டு ப்ளீடர் பிரஹ்மஸ்ரீ **ஏ. இரங்கசாமி ஐயர், பி.ஏ., பி.எல்.,** ஹைகோர்ட்டு வக்கீல், **எப். டி. எஸ்.,** அவர்களும், ஸ்ரீமாக் - **சை. சிவசங்கரச் செட்டியார், பி. ஏ., பி. எல்.,** ஹைகோர்ட்டு வக்கீல் (தத்துவ விசாராத்துவித நிர்ணயப்பெருஞ் சிவாநுபூதிச் செல்வ இல்லற ஞானியாய் விளங்கிய காலஞ் சென்ற ஸ்ரீமாக் - **சை. இரத்தினச்செட்டியா** ரவர்கள் குமாரர்) அவர்கள் ஆகிய இக்கனவான்கள் உளக்கிளர்வின் முகமலர்ச்சியோடுங் கூடியுழைத் துதவிவந்தவும், வருகின்றவும், வருபவுமாகிய கைம்மாறற்ற அப்பெருநிலை வண்மைக்கு, அன்பார்ந்த அதிவிநய வந்தனத்தைப் பன்முறை செலுத்தி யுவப்பித்தற்கேனும் அருகனுநிலைமையதொரு சிறிதாயினும் பொருந்தப்பெறு வொழுக்கினேன், வேறெவ்விதக் குற்றேவற்பணியைப் புரிந்துவப்பித்தற் கருகனுவேன் !

தற்பொழுது அச்சிலிருந்து வரும் அத் **திருமந்திரப் பேருரை** எவ்வாறமைவுறப் பெற்றிருக்கின்றதோவெனத் தெரியவிரும்புங் கனவான்கள் எவர்க்கும் விசதமாமாறு **குறிப்புரை**யோடுங் கூடிய இத் **திருமந்திரப்** பதிப்பு முகப்பில் **விநாயகப்பெருமா**னின் காப்பு முதற்**பாசுரத்து**க்கு மாத்திரம் அப் **பேருரை** மாதிரியை யொருவா றமைவுறப் பிரசுரித்திருக்கின்றேன்.

வேதாகமாந்த தத்துவப் பெருநுண்பொருட்டொகுப்பியாவையும் தன்னுட்கொண்டு நிரம்பித்ததும்பும் பேரொளிப்பிழம்பாகிய இத் **திருமந்திரப்** பெருந்திருமுறை **மூலத்தை** அதன் **குறிப்புரை**யோடும் தமியேன் சிற்றறிவின் சிறுசக்தி யூக்கத்தை ஆதாரமாகக்கொண்டு, பேரறிவின் பெரியார் பலர் முன்னிலையாய்ச் சீர்ப்படுத்தி யெழுதிப் பிரசுரித்து முடித்தேன்.

இவற்றில் எவ்விதத் தவறுளவெனினும் அவற்றைப் பேரறிவுப் பெருநிலையொழுக்கின் பெரியார் பொறுத்து, (அம்சம்போல) குணங்களைக்கொள்ளுமாறு தமியேன் அதி விநய வந்தன பூர்வகமாய்க் கேட்டுக்கொள்கின்றேன்.

இங்ஙனம் :
மேற்படி மஹாவித்துவ சிரோமணி,
யாழ்ப்பாணத்து வடகோவை,
ஸ்ரீலஸ்ரீ. சபாபதிநாவலரவர்கள்
மாணாக்கர்
**மாவை, வே. விசுவநாதபிள்ளை.**

திருமந்திரப் பதிப்புரை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## ஆனரபில்
## பி. இராமநாதன் அவர்களின்
### தேசாபிமான வுதாரத்துவம்.

---

சம்ஸ்கிருத த்ராவிட ஆங்கிலாதி பாஷாகலாவல்ல சிரேஷ்ட தத்துவ விசார வைதிக சைவ சமாசநிலையின் மாண்பினரும், பாரிஸ்டர் - அட் - லாவும், இலங்கைச் சட்ட நிரூபண சபை மெம்பரும் ஆகிய ஆனரபில், பி. இராமநாதன், கே. ஸி., ஸி. எம். ஜீ., என்னும் கனவானவர்களைத் தமியேன் சில மாதங்கட்கு முன்னர் மதுரையில், மேற்போந்த நமது ப்ரஹ்மஸ்ரீ ப. நாராயணையர், பீ. ஏ., பீ. எல்., ஹைகோர்ட்டு வக்கீல், ப்ரஹ்மஸ்ரீ ஏ. இரங்கசாமி ஐயர், பீ. ஏ., பீ. எல்., கவர்ண்மெண்ட் பிளீடர் முதலிய கனவான்கள் முன்னிலையாகச் சந்திக்கப்பெற்ற நற்சமயம், தமியேன் எடுத்துக் கொண்ட திருமந்திரப் பேருரைப்பணி விரைவிற் பூர்த்தியுறுமாறு தாம் தக்க வுதவி புரிவதாக வாக்களித்தாதரித்து அப்பணியின்பொருட்டு, உடன் ரூபா - 100 கையொப்பமிட்டு முதவினர்கள்.

இக் கனவானவர்கள் தமது பெறற்கருங் காலத்தையுங் கருத்தையும் நமது தேசத்தின் வைதிக லௌகிக விருத்தியூழிய நிமித்தஞ் செலுத்திக் கால தேச வர்த்தமானங்கட்கொவ்வச் செயற்கருஞ் செயல்களைச் செய்தலின் மகாவிரத சீல சிரேஷ்டாபிமானியென எவர்தாம் பெருமகிழ்வுறப் பெறுதார்?

இக் கனவானவர்கள் இப்பொழுது மகா புராண இதிகாச தேவார திருவாசக திருப்புகழாதி இத் திவ்ய திருமுறைகளால் விசதப்படுவனவாகிய மகா புண்ணிய சிவக்ஷேத்திர தீர்த்தாதிகளைத் தனக்கணியுறக் கொண்டதும், வருணாச்சிரம சீலர் கல்வி

யறிவாளர் பெருக்கினைக்கொண்டதும், இலங்கை இராஜதானியின் முக்கிய மாகாணமாய் விளங்குவதுமாகிய யாழ்ப்பாணத்தின் மத்தியஸ்தானத்தில், இதுவரையில் நம் எவ்வபிமானிகள் கருத்தினும் எய்தப்பெறாத அரிய பெரிய **வித்தியாசாலை (Boarding School)** ஒன்றை நமது சிறுமியர்கட்கு அன்னவஸ்திர முதலிய வுதவிக் கல்வி கற்பிக்குமாறு ஸ்தாபிக்கு நிமித்தம், அதற்கு வேண்டப்படுஞ் சகல சௌகரிய நிறைவுகளும் அமைவுறப்பெற்ற பெரிய கட்டடமொன்று பெருந்தொகைச் செலவிற் கட்டிப் பூர்த்தியாகி அதன் பிரவேசச் சடங்குஞ் சமீபித்துவிட்டது!

இது வொன்றோ? இக் **கனவானவர்கள்** தமது பரம்பரைக் குடும்பாபிமானச் சொந்த க்ஷேத்திரமாகிய மகாவுன்னதக்காட்சிப் பெருமாடமாளிகை கூடகோபுரங்களைக்கொண்ட இலங்கை இராஜதானிக் கொழும்புத் தலைநகரின் றிலகமாய் விளங்கும் பூர்விகச் **சிவாலய** அதிபழமைக் கிலத்தைக் கருதித் தமதுளமுறக்கொண்டு அதனை அடியோடு களைந்து, முழுக்கருங்கற் பெருந் திருப்பணியாய் எத்தனையோ இலட்சம் பெருந்தொகைச் செலவில் சில வருடங்களாகப் புதுக்குவித்து நடாத்திவரும் இக் **கனவானவர்களின்** உதாரத்துவப் பெருக்கைக் கருதும் எவர்தான் புகழாதார்?

இக் **கனவானவர்கள்** இன்னும் **பேரைசுவரிய** சம்பன்னராய்ப் பூரணாயுசையும் பெரும்புகழ் புண்ணியங்களையும் இஷ்டசித்திகளையு மொருங்கெய்துமாறு பரம கருணாநிதியாகிய **ஸ்ரீ நடராஜப்பெருமானை** அநவரதமும் பிரார்த்திக்கின்றேன்.

---

உ

## திருமந்திர நூன்முகச் சிறப்பு.

திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீ ஶிலாலி புரியில் வைகும் கலைமகள்தொண்டரும், இலக்கிய, நியாய, வேதாந்த மஹா மஹோபாத்தியாயருமாகிய ப்ரஹ்மஸ்ரீ மு. ஸர்வேஶ்வரஶர்மா அவர்களால் கீதாவிருத்தத்தில் இத் திருமந்திர நூன்முகத்தின் பெருமை பின்வருமாறு எடுத்துக் கூறப்படுகின்றது.

श्री मन्त्रमालिकाया विवृती रचिता बुधेन रमणेन ।
सरसा मान्या हृद्या मोदं जनयेन्न कस्य वा लोके ॥

---

# திருமந்திர நூன்முகத்தின்

## விஷய அட்டவணை.

# நூன் முகம்.

உளங்கொளி யாவது என்னுள் நின்ற சிவன்
வளங்கொளியா நின்ற மாமணிச் சோதி
விளங்கொளியாய் மின்னி விண்ணில் ஒடுங்கி
வளங்கொளி யாயத்துள் ஆகி நின்றானே. (1)

காரொளி யண்டம் பொதிந்து உலகெங்கும்
பாரொளி நீரொளி சாரொளி சாலொளி
வானொளி யொக்க வளர்ந்து கிடந்துபின்
நேரொளி யொன்றாய் நிறைந்து அங்கு நின்றதே. (2)

வடமொழியில் "ஸ்ரீ மந்த்ர மாலிகா" எனவும், தென்மொழியில் திருமந்திரம் எனவும் பெயர் பெற்றோங்கும் மெய்யறிவுத்தேனாகிய இவ்வினிய நூல், "சைவத் திருமுறை" என நம்பியாண்டார் நம்பிகள் கோவை செய்துள்ள திருத்தொண்டர் பாடற்றொகுதியின் ஒரு பகுதி. இத் திருமந்திரம் பன்னிரு பகுதியினமைந்த சைவத்திருமுறையின் பத்தாவது பகுதியாய் இருத்தல்பற்றியும், "அடங்கன் முறை" என்னும் பெயரால் வழங்கும் "மூவர் தமிழ்"க்குப் பின் வைக்கப்பட்ட மணிவாசகர் பாசுரங்கட்குப் பின்னதாய்த் தொகுப்புண்டு கிடக்கும் திருமாளிகைத் தேவர் முதலியோர் பகர்ந்த ஒன்பதாவது திருமுறைக்கும் பின்னரே அமைக்கப்பெற்று நிற்றல்பற்றியும், இந்நூலாசிரியரான திருமூலரைத் திருத்தொண்டர் குழாத்துட் காலத்தாற் பிற்பட்டவர்கள் தோன்றியநாளில் தோன்றியவராகச் சொல்லப் புகுவாரும் சிலர் உளர். ஆனால், இத் திருமூலரின் சரிதம் சைவத்திருமுறையினுள் இறுதிப் பகுதியாயுள்ள பெரியபுராணத்து உரைசெய்யப்பட் டிருப்பதாலும், அப் பெரிய புராணத்

(1) திருமந்திரம், 2690. (2) திருமந்திரம், 1274.

தின்கண் விளம்புறும் முதற் சரிதங்களுட் போற்றப் படு பவராகிய சுந்தரரின் தேவாரப்பதிகங்களுள் ஒன்றாகிய "திருத்தொண்டத்தொகை" என்னும் திருப்பதிகத்தில் இத் திருமூலரின் பெயர் வந்திருத்தலானும், பதினொராவது திரு முறையின்கண் தொகுத்துள்ள திருத்தொண்டர் திருவந்தாதி யில் நம்பியாண்டார் நம்பிகள் இத் திருமூலரைப் போற்றுவதா னும், அப் பதினொராந் திருமுறையிலேயே யமைந்துள்ள திரு விடைமருதூர் மும்மணிக்கோவை முதலியவற்றை அருளிச் செய்த திருவெண்காடர் துறவுபூண்டு தம் இல்லத்தைவிட்டு எழுந்தபோது, தம் கையில் ஒட்டைச்சட்டி யொன்றையும் திருமந்திரச்சுவடி யொன்றையுமே கைப்பற்றிச் சென்றா ரெனத் தொன்றுதொட்டு ஒரு கதை வழங்குதலானும் (3) இத் திருமூலர், பெரியபுராணத்தை அருளிச்செய்த சேக் கிழார்க்கும், தென்மொழித் திருமுறையை வகுத்து விடுத்த நம்பியாண்டார் நம்பிகட்கும், பேரறிவிற் பழுத்த தேமாங் கனியாகிய திருவெண்காடர்க்கும், இறைவனே தடுத்தாட் கொண்ட மெய்யந்தணத் திருமேனியராகிய சுந்தரமூர்த்திகட் கும் முற்பட்டவர் என்று சொல்வதன்கண் ஏதும் ஐயப்பா டில்லை.

இப்பொழுது நாம் கூறிய திருத்தொண்டர்களுள் சுந்தரர் மற்றையர்க்கெல்லாம் முற்பட்டவராதலால், அச் சுந்தரரின் காலம் வரையறுத்துக் கூறப்பட்டாலன்றித் திருமூலர் காலம் இதற்குப் பின்னர் இருத்தல் சாலாது எனக் குறிப்பாய்ப் பகர் தல் கூடாததே. பண்டைநாட் சரிதங்களை ஆராயும் நூதன முறைப்படி, சேக்கிழாரின் காலம் கி. பி. 11-ம் நூற்றாண் டின் இடைப்பகுதியெனவும், நம்பியாண்டார் நம்பிகளின் காலமும் அதே நூற்றாண்டின் தொடக்கம் எனவும், துறவு பூண்டொழுகிய திருவெண்காடரின் காலம் கி. பி. 10-ம் நூற்

(3) ஆனல் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் திரு வெண்காடர் சமயகுரவர் நால்வரின் பெயர்களையும் சிவவாக்கியர் முதலான மற்றையவர்களின் பெயர்களையும் சொல்லுமிடத்துந் திரு மூலரின் பெயரைச் சொல்லவில்லை.

றாண்டெனவும், தென்னிந்தியாவில் ஆகமாந்தம் என்னும் சைவ சமயத்தை நிலைபெறச் செய்வான் எழுந்த திருமேனிகளுள் ஒரு மாமணியாய் மின்னும் சுந்தரரின் காலம் கி. பி. 9-ம் நூற்றாண்டின் தொடக்கம் எனவும் பெறப்படுதலால், திருமூலரின் காலம் கி. பி. 9-ம் நூற்றாண்டிற்குப் பிந்தியதன்றென நாம் கொள்ளல்வேண்டும். ஆனால், அஃது அந் நூற்றாண்டிற்கு எவ்வளவு காலம் முந்தியதெனத் தீர்மானித்தல் எளிதன்று. பின்வந்த மெய்யறிவுற்ற புனிதர்களுட் சிறப்பு வாய்ந்து விளங்கும் உமாபதிசிவாசாரியரும் தாயுமானவரும் இத் திருமூலரைக்குறித்துள்ளார் என்பது அவர்களது பாடல்களினின்றும் வெளிப்படை.

“ரஸேஸ்வரதர்ஸந” மென்னும் பெயரால் வடமொழி நூல்களிற் பகர்வுற்றுக் கிடக்கும் கொள்கையைத் தழுவி, இவ்விந்தியாவில் சிறப்புற்றோங்கிய சித்தர்களென அழைக்கப்படும் புலிப்பாணி, போகர், மச்சேந்திரர், கோரக்கர் முதலியவர் குழாத்துள் திருமூலரைச் சேர்த்தல் பொருந்தாது. இவர், பாதரசம் பூநீர் முப்பு முதலியவற்றைக் கைக்கொண்டு உடலை அழியாவண்ணம் செய்து நீடித்த காலம் பிழைத்திருக்க உழைக்கும் “ரஸேஸ்வரதர்ஸந”க் கூட்டத்தைச் சேர்ந்தவரல்லர். மற்று, இவர், அக் கூட்டத்தின் இயல்பைத் துறைபோகவுணர்ந்து, அதன் இறுதித்துணிபுக்கு அப்பாலுக்கும் அப்பாற் போந்து, மயானம் என்று சொல்லத்தகும் இல்லறப்பற்றும் உலகத்தினிடத்து விருப்புவெறுப்பும் ஒழிந்து, ஆணிப்பொன்னின் கதிர்போன்றதெனவும் மாமணி மின்னற் கொடிபோன்றதெனவும் வடமொழி நான்மறை முறையிடும் அக மன்றினுள் இடையறா மகிழ்ச்சியுடன் அறிதுயிலில் அமர்ந்தவர்.

சேக்கிழார் அருளிய பெரிய புராணத்திற்கு முதல் நூல், வடமொழியில் சிறப்பு வாய்ந்து விளங்கும் ஸ்காந்த மஹா புராணத்தின் உபபுராணமென்று உலாவி வரும் பக்தவிலாஸ மென்னப்பட்ட ஓர் தொண்டர் சரிதக்கோவை. இச் சரிதக் கோவை இரண்டு மாதிரியாக வழங்கிவருகிறது. அஃதெப்படி.

யெனில், உபமந்யு பக்தவிலாஸமென ஒன்று பெயர்பெற்றுக் கண்ணனுக்குச் சிவதீக்ஷை செய்வித்த உபமன்யு முனிவர் அருளியதாக வழங்கும் (4). மற்றொன்று, அகஸ்த்ய பக்த விலாஸ (5) மெனப் பெயர்பெற்று, தொல்காப்பியருக்குத் தென்மொழி இலக்கணத்தை யறிவுறுத்தி முனிக்கரசெனப் புகழ்வாய்ந்து விளங்கும் அகத்தியமுனிவர் அருளியதாக வழங்கும். சேக்கிழார் பெரியபுராணம் பெரும்பான்மையும் முதற்சொல்லிய நூலைத் தழுவும். இரண்டாவது சொல்லிய நூல், வீரசைவர்களால் மிகக்கொண்டாடப்படும் ஓர் தொண்டர் சரிதக்கோவையாகிய ஸ்ரீஸுரங்கக்கவியின் த்ரிஷஷ்டி புராதனர் விலாஸம் (6) என்னும் கன்னடப் புத்தகத்திற்கு முதல்நூல் போலும். இவ்விரண்டு பக்தவிலாஸங்கட்கும் வடமொழிக்கட் புக்கிடமாகும் மூலபுராணம் எது வென்பதைப் பற்றி மற்றோர் கொள்கையும் உண்டு. அஃது என்னெனில், அவை லிங்கபுராணத்தைத்தழுவி நிற்கும் என்பதே. ஆனால், வடமொழியில் விளங்கும் பண்டைய மூலபுராணங்களுள் எதனை அவற்றிற்குத் தங்கிடமாகச் சொல்லிமுடிப்பினும், அது சரித்திரஆராய்ச்சிக்கு மிகவும் முரணாய்த் தீருமென்பது திண்ணம் (7). இவ் விடயத்தை விளக்கப்புகின் விரியும். இன்னும்,

---

(4) இவ் வடமொழிப்புத்தகம் இன்னும் அச்சில் வர இல்லை. பெரியபுராணத்தில் விளம்புறும் சிவனடியார்களின் தமிழ்ப் பெயர்களுள் சிலவற்றின் உண்மைப்பொருள் இவ் வடமொழிப் புத்தகத்தால் நன்கு புலப்படும். சரித்திர ஆராய்ச்சி முறையினால் அத்தமிழ்ப்பெயர்கள் வடமொழியினின்றும் மொழிபெயர்க்கப்பட்டனவென்றே சொல்லவேண்டியதாகும்.

(5) இஃது அச்சில் உள்ளது. இது முதலில் காசியில் அந்நகர் வேந்தன் முயற்சியினால் தேவநாகரீ எழுத்தில் பதிப்பிக்கப்பெற்றது. பின்னர், தென்னிந்தியாவிலும் கிரந்த எழுத்தில் அச்சிடப்பட்டது.

(6) இது கன்னடத்தில் அச்சேறிவிட்டது.

(7) என்றால் சிவரகசியம், ஞானவாசிட்டம் முதலியவைபோல் இப் பக்தவிலாசங்களைத் தனி நூல்களாகக் கொள்ளவேண்டியதாகும்.

திருமூலர் சரிதம் இவ்விரண்டு பக்தவிலாசங்களினும் உரை செய்யப்பட்டிருப்பினும், சரித முற்றிலும் ஒருமைப்பாடு இல்லை. பொதுவாய் அவர் தம் ஆன்மாவை ஓர் இடையன் பிணத்தினிடத்துப் புகுத்தியதும், ஆக்களிடத்து இரங்கிய தும், சரிதமிரண்டினும் காணப்படும். இதன் பின்னர், அவர் தவம் செய்ததும் இரண்டற்கும் ஒக்கும். மற்று, அவர் திரு மந்திரம் என்னும் நூலைப் பகர்ந்ததும், இறுதியாய்க் கைலைக்கு ஏகினதும்,உபமன்யு முனிவர் பகர்ந்தருளிய பக்தவிலாசத்தில் மட்டுமே காணப்படுவதன்றி, அகத்தியமுனிவர் ஓதிய நூலிற் காணப்படுவதில்லை.

திருமூலர் சரிதப்போக்கை உற்று நோக்கின், அவர் கைலையிலிருந்து இத் தென்னிந்தியாவிற்கு வந்தவராகத் தோன்றுகின்றனர். கைலையாவது ஆகமாந்தப் பிறப்பிடமா கிய காஸ்மீர மென்னப்படும் மலைநாட்டின் வடகீழ்த்திசை யில் உள்ள ஒரு பெரிய மலை. அந் நாடு, "முதிர்பேரறிவு" எனப் பொருள் பயக்கும் ஆகமாந்த முல்லை மலராகிய "பிரத்திய பிஞ்ஞா தரிசனம்" என்னும் சமயம் முதல்முதல் பூத்த விடம். சைவ சித்தாந்தம் என்னப்பட்ட ஆகமாந்தம், வட மொழியிலுள்ள 28 திவ்யாகமங்களின் இறுதிக் கோட்பாடு. இவ்வாகமாந்தம், வடமொழியில் சிறப்புற்றோங்கிச் செழிக் கும் நான் மறைகளின் மெய்யுரை என்று சொல்லத்தக்கன வாகிய மேற்சொல்லிய திவ்யாகமங்களில் விரிவாயும் தெளி வாயும் கூறப்படினும், அது வடமொழி மறையின் கடைப் பகுதியாகிய உபநிடதங்களினும், இடைப்பகுதியாகிய பிரா மணங்களினும், முதற்பகுதியாகிய மந்திரங்களினும், கூறுமறற் கூறப்பட்டிருக்கும். அஃது எப்படியெனில், மறையின் உட் பொருளே ஆகமாந்தமாம். ஆயின், மறையின் வெளிப்பொருளை நன்குணர்ந்து ஆராய்வோனுக்கு, அவன் அறிவு முதிர்ச்சிக் குத் தக்கவாறு மெய்ப்பொருள் புலனும். இம் மெய்ப்பொ ருள் சற்று வெளிப்படையாய் ஆங்காங்கும், கூடியமட்டில் வெளிப்படையாய்ச் சில சிறந்த உபநிடதங்களிடத்துமாக மறையகத்துக் கூறப்பட்டுக் கிடப்பினும், அதனை முற்றிலும் வெளிப்படையாய் விளக்கி, ஆன்மாக்களை உய்விக்குமாறே

28 திவ்யாகமங்களும் கைலைத் தாழ்வரையில் வடமொழியிற் பெறப்பட்டன. ஆகவே, இந்தத் திவ்யாகமங்களால் போற்றப்படும் பேரின்பவீட்டு நிலையின்பேறே ஆகமப்பயனாகிய ஆகமாந்தம்.

சமணமதம் தலையெடுத்தற்குப் பன்னூற்றாண்டுகண்முன்னரே, இவ் வாகமாந்தம் வட இந்தியாவில் "பிரத்தியபிஞ்ஞா தரிசன" மாக உற்பத்தியாய்த் தழைத்துப் பின்னர்த் தெற்கு நோக்கியது; நோக்கி, மேற்கு இந்தியாவில் "வீரமாஹேஸ்வரதரிசன" மாகவும், தென்னிந்தியாவில் "சுத்த சைவ தரிசன" மாகவும் திரிபுற்றது. ஆயினும், அத் திரிபு, ஆகமாந்தத்தின் இன்றியமையாக் கோட்பாடுகளு ளொன்றையும் பற்றவில்லை. இவ்வாறு ஆகமாந்தம் இத் தென்னிந்தியாவில் தோன்றியது, சமயகுரவர் நால்வரும் தோன்றுவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே யாகல் வேண்டும். திருக்கோயில் வழிபாடு என்பது முற்றிலும் ஆகமத்தைத் தழுவிநிற்கும் ஒரு புறச்சடங்கு. ஆதலால், திருக்கோயில் வழிபாடு என்றைக்கு இத் தென்னிந்தியாவில் வேரூன்றினதாகக் கொள்ளுதல் தகுமோ, அன்றைக்கே ஆகமாந்தமும் அவ்விடத்தே உலாவிப் பெருமை வாய்ந்தது என்பது திண்ணமாம். ஆகவே, நம் நூலாசிரியரான திருமூலர், ஆகமாந்தத்தின் நுண்ணிய உண்மைகளையும் கருத்துக்களையும் முறை பிறழாது எடுத்து ஓதுவதாலும், அவரைப்பற்றிப் புகழ்ந்து கூறும் எவ்வெவ்வகைப் பண்டைய வரலாற்றினும் அவர் இத்தென்னிந்தியாவிற்குக் கைலையினின்றும் வந்தார் என்று பெறப்படுதலாலும், அவர் திருமந்திர வாயிலாக அளிக்கும் ஆகமப்பிழம்பின் இன்சுவை வடமொழிப் பிரத்தியபிஞ்ஞையைப்போன்றே இருத்தலாலும், ஆகமாந்த வித்தாய்க் கைலைத்தடவரையில் மிகப் பழைய காலத்தில் முளைக்கத் தொடங்கி அவ்விடத்தே வேரூன்றிச் செழித்த சமயம் அப் பிரத்தியபிஞ்ஞையே யாதலாலும், அவர் இத் தென்னிந்தியாவில் இருந்ததாக நாம் அறுதியிடும் காலமே பிரத்தியபிஞ்ஞை கைலைச்சாரலில் இளமுதிர் பருவமுற்றுப் புன்னகைகொண்டு பேரழகு பொழியும் மெய்யறிவு மங்கையாய் விளையாடின

தருணமாதலாலும், அவர், கைலையினின்று புறப்பட்டு இத் தென்னிந்தியாவினிடத்து அன்பு மேலீட்டால் ஈண்டு வந் தருளிய பிரத்தியபிஞ்ஞைத் திருத்தொண்ட மாணிக்கமே என்பது நன்கு நாட்டப்படும்.

அவர் நாள், வடமொழி ரௌரவாகமத்தின் ஓர் பகுதி யாகிய சிவஞானபோதம் (8) என்னும் நூலைத் தமிழில் மொழி பெயர்த்து, அது வாயிலாக ஆகமக்களஞ்சியத்தின் ஞான பாதப் பெரும்பயனைத் தமிழ்நாட்டினர்க்கு அளித்து, ஆக மாந்தத்தை ஒருவாறு நிலைநிறுத்திய பேரறிவின் வள்ள லான மெய்கண்டார் நாட்குப் பன்னூற்றாண்டுகள் முந்தி யது. ஆயினும், ஆகமாந்தத்தின் கோட்பாடுகள் அனைத்தி னிடத்தும் அன்புரிமை பாராட்டி, அவைகளை ஐயமற அணி வகுத்து, ஒளி வீசும் மாமணிக் குவியல்போன்ற பாசுரங்கள் வழியாகச் சுவை பெருக அளிக்கும் வாய்மை, இத் தென் னிந்தியாவில் வேறு தமிழ் நூலாசிரியரெவரிடத்தும் இவ் வண்ணம் இல்லை என ஒருவாறு நாம் சொல்லுதல் கூடும். ஆனால், இவ் வாய்மை, பிரத்தியபிஞ்ஞைத் திருத்தொண்டர் குழாத்திற்கே பொதுவாகிய ஓர் இயல்பு என்று சொல்லற் பாற்று. அக் குழாத்தினருள் ஒருவராகிய சோமாநந்தநாதர் என்பார் அருளிய "அண்ணற் காட்சி" எனத் தென்மொழி யிற் பொருள்படும் சிவதிருஷ்டி (9) என்னும் யாழிசை குழ லிசைபோல் இனிய வடமொழி நூலை, நம் திருமந்திரத் திற்கு உவமை சாற்றலாம். இவ்விரண்டு நூல்களின் மெய் யியைபு எவ்வாறாயினும், பிரத்தியபிஞ்ஞைப் பேரறிவாளர்

(8) இஞ் ஞானக்களஞ்சியத்தின் மெய்ப்பொருளை உணர்த்த வடமொழியில் இருபேருரைகள் உள. அவற்றைச் சமைத்தோர்கள் வித்தியாரணிய சுவாமிகளும் சிவாக்கிரயோகிகளுமே. அவ்வுரை களில் ஒன்றும் இன்னும் அச்சேறவில்லை.

(9) இஃது இன்னும் அச்சிற்கு வந்ததாகத் தெரியவில்லை. ஆனால் பிரத்தியபிஞ்ஞை மதத்தைச் சார்ந்த நூல்களுட் பெரும்பான்மை காசுமீரமன்னனின் ஊக்கத்தினாலும் அன்பினாலும் சீக்கிரத்தில் வெளியாகலாம்.

களுள் பரமார்த்தஸாரம் (10) என்னும் ஞானநூலை அருளிச்செய்த அபிநவகுப்தரென்னும் சிவனடியாருக்கும், நந்திகேசுவரரே திருவுருக்கொண்டு வீரமாஹேஸ்வர சமயத்தை ஒருவாறு நிலைபெறுத்தவேண்டி வந்தனர் என மின்னி முழங்கி வரும் வீரசைவத் திருத்தொண்டர் பெம்மானாகிய பசவேச (11) ருக்கும், திருமூலர் முற்பட்டவர் என்பது சரித்திர ஆராய்ச்சி முறையால் தெளிவாகக் காணக் கிடக்கின்றது.

மூவாயிரம் பாசுரங்களடங்கிய இத் திருமந்திரம் என்னும் பேரறிவு சுட்டப்போந்த ஞானநூல், தற்போதமிழந்து அகவுணர்ச்சி மேலீட்டினாற் கடவுளைக் கண்டு களிகூரும் நிலையாகிய பேரின்ப வீட்டை வற்புறுத்தும் தன்மையுடைத்து. இந் நிலையே பொய்யுணர்வு கழிந்து மெய்யுணர்வு பொழியுமிடம். திருமூலர் தம்முடைய தவப்பயனாய் விளங்கும் இந் நூலைத் திருமந்திரமாலிகை எனப் பெயரிட்டு விடுத்தார்போலும். "மாலிகா" என்ற வடமொழிக்கிளவி சிறுமாலை எனப் பொருள்படும். ஆனால், இத் திருமந்திரம் ஒன்பது தந்திரங்களால் தொகுக்கப்பட்டிருத்தலாலும், தந்திரமென்னும் வடமொழிக்கிளவி கயிறு எனவும் பொருள்படுதலாலும், திருமூலர் அருளிய இத் திருமந்திரம், பூக்களாகிய பாசுர மந்திரங்களாற் புனைந்த ஒன்பது சரங்கள் அடங்கிய அழகியதொரு சிறுமாலை போன்றதெனக் கொள்ளற்பாற்று. மந்திரமென்னும் சொல், வடமொழியில், திரண்டு வடிவமெடுத்த கருத்து எனப் பொருள்படும். படவே, இடையறு நினைப்பினால் புந்தியில் நிகழும் ஆழ்ந்த உண்மைத் தோற்றங்களே மந்திரங்களாகற்பாலனவாம். இத் தோற்றங்களெல்லாம் 'ஆரியன்

---

(10) இதை பார்னெட்டு நாவலர் என்னும் ஆங்கிலேயர் ஆங்கிலேய தலை நகராகிய லண்டனில் பதிப்பித்து மொழி பெயர்த்துள்ளார். இவர் ஆகமாந்த ஆராய்ச்சியில் மிகவும் வல்லவர்.

(11) இத் திருத்தொண்டரின் வரலாற்றை அச்சாகியுள்ள வடமொழிப் பசவபுராணத்தில் காண்க. அதன் கன்னட மொழிபெயர்ப்பும் அச்சாகியுள்ளது.

தோற்றமுன்' அறுவனவாயினும், அவற்றைக் கண்டு நேர் நோக்கிட்டே மெல்ல மெல்லக் கழிக்கவேண்டியதாகும்.

திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய பாசுரங்கள் மூவாயிரமே (11) என அந்தணப் பேரறிவாளராகிய உமாபதிமுனிவர் செய்துள்ள திருத்தொண்டர் புராணசாரத்தினும், சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணத்தினும், வடமொழி உபமந்யு பக்தவிலாசத்தினும் கூறிக்கிடத்தலாலும், அம் மூவாயிரத்தின் முதற்பா "ஒன்றவன்றானே" யெனத் தொடங்குமென்று உபமன்யு முனிவரும் சேக்கிழார் பெருமானும் ஒருங்கே விளம்புதலாலும், திருமூலர் அருளிய மந்திரங்களின் தொகை மூவாயிரம் என்னுங் கணக்கை மீறி இருத்தல் ஒருகாலும் பொருந்தாது என்பதும், அத் தொகையின் தொடக்கம் "ஒன்றவன்றானே" என அமைந்து நிற்றல் வேண்டுமென்பதும் நன்கு புலப்படும். ஆனல், இந்நூன்முகத்தோடு கூடிய திருமந்திரப் பதிப்பில், மந்திரங்களின் தொகை 3047-ஆகவும், அவைகளில் முதல் 112-ம் பாயிரப் பாசுரங்களாகவும், மற்றவை 9 தந்திரங்களுக்கு முரியனவாகவும் காணப்படுகின்றன; படவே, 9 தந்திரங்களைச் சாரும் மந்திரங்கள் 2937-ஏ என அமையும். பாயிரமாகும் 112 பாசுரங்களோ 9 பகுதிகளாக வகுக்கப்பட்டுள்ளன. ஆதலால், இப்பதிப்பில் அடங்கும் மந்திரங்கள் ஆன்றோர் கணக்கை 47 மந்திரங்களால் மீறுகின்றனவாம். மற்று, திருமூலர் தாம் மொழிந்த 3000 மந்திரங்களையும் 9 தந்திரங்களாகவே வகுத்து விடுத்தார் என்பதற்குப் புறவத்தாட்சி எதுவும் உளதாகத் தோற்றவில்லை (12). ஆயின், 3000 மந்திரங்களும், பாயிரமும் ஒன்பது தந்திரங்களுமாக அமைந்திருத்தலும் கூடும். அல்லது, பாயிரமின்றி 9 தந்திரங்களாகவே யமைந்திருத்தலும் கூடும்.

திருமந்திரத்தின் பாசுரத்தொகை உபமன்யு முனிவரும் சேக்கிழார் பெருமானும் கூறிய கணக்கை எவ்வாறு மீறி

11. திருமந்திரம், 105, 107, 108, 3046.

12. ஆயினும், ஒருவாறு 105 - வது பாசுரத்தைப் பார்க்க.

யது, அப்படி மீறியதனால் நிகழ்ந்த தவறு எவ்வாறு நீக்கற்பாலது, என்னும் விடயங்களை ஆராயப்புகுமுன் பாயிரத்தின் பொருளை ஆராய்வது மிகவும் நேரிது.

திருமந்திரப் பாயிரத்தின் முதல் அத்தியாயம் "பரசிவப் பிரபாவம்" எனப் பெயர்தாங்கி, இறைவனது பெருமையைப் பலவாறாக இயம்புகின்றது. இவ் வத்தியாய விடயத்தை ஊன்றி நோக்கின், அது முதற்றந்திரத்துள் வருதற்குரியதெனத் தோன்றும்.

இரண்டாவது அத்தியாயம் திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமையையும், அம் முறைமை குறிக்கும் உட்பொருளையும் விளம்புதலால், அது இரண்டாந் தந்திரத்துள் அமைதற்பாலதென்று சொல்லுதற்கு இடமுண்டு.

பாயிரத்தின் மூன்றாவது அத்தியாயம் வேதச் சிறப்பு என்று பெயருறும்.

நான்காவது அத்தியாயம் ஆகமச்சிறப்பு என்று குறிக்கப்பட்டு ஐயப்படுதற் கேதுவாகிய பொருள்களால் நிறைந்திருக்கின்றது. இதில், வடமொழித் திவ்யாகமங்களின் சுலோகத் தொகை ஓர் இடத்து "இருபத்தெண்கோடி நூறாயிரம்" எனவும், மற்றோர் இடத்து "எழுபதுகோடி நூறாயிரம்" எனவும், இன்னும் ஓர் இடத்து "எண்ணிலிகோடி" எனவும் சொல்லப்பட் டிருக்கின்றது (13). ஒரு மந்திரத்தின் இறுதியில் "நவ ஆகமம் எங்கள் நந்திபெற் றானே" என்றும், அதற்கு அடுத்துவரும் மந்திரத்தில் இந் நவ ஆகமங்களின் பெயர்கள் இவையென்றும் கூறப்பட்டது (14). அப் பெயர்களைக் கூட்டிப்பார்ப்பின், ஏற்படும் தொகை எட்டே ஆவதுமன்றி அத் தொகையுள் வரும் "இயாமளமாகுங் காலோத்தரம்" என்னும் ஆகமம், திவ்யாகமமாகாது வடமொழியில் யௌலயாமலாகமங்கள் எனப்பெயருற்று 28 திவ்யாகமங்களி

13. திருமந்திரம், 68, 70, 74.
14. திருமந்திரம், 72, 73.

னின்றும் விலக்கற்பாலனவாகிய ஆகமங்களுள் ஒன்றாகும் (15). ஆதலால், இவ் வெட்டாகமங்களின் பெயரைப் பகரும் மந்திரத்தைப் பின் வந்தவ ரொருவர் சிதைத்துத் திரித்து விடுத்திருக்கவேண்டு மென்பது உறுதி. இவ்வாறு திரித்தற்குக் காரணம் பின்னர் விளக்கப்படும். மற்று, இவ்வத்தியாயத்

15. 67-வது மந்திரத்தில் "அஞ்சோ டிருபத்து மூன்றுள வாகமம்" எனத் திவ்யாகமங்களின் தொகையைக்கூறி, 73-வது மந்திரத்தில் அத்திவ்யாகமங்களுள் மேற்போந்த ஒன்பதின் பெயர்களை நூலாசிரியர் குறிப்பிட முயன்றார்போலும். "மற்றவ்வியாமளமாகுங் காலோத்தரம்" என்னும் சொற்றொடரை "மற்றவ்வியாமளம்" எனவும் "ஆகுங்காலோத்தரம்" எனவும் இரு பகுதிகளாகப் பிரித்து நோக்கி, அச்சொற்றொடர் இரண்டு ஆகமங்களின் பெயர்களைக் குறியாதோவென ஐயப்படுவதற்கு இடமில்லை. ஏனென்றால் "இயாமள"மெனப் பெயர் தாங்கி முழங்கும் திவ்யாகமமே கிடையாது. "காலோத்தரம்" என்னும் பெயர் பூண்ட ஆகமமோவெனில், "காலஞானம்" என்றும் "பிருகத்காலோத்தரம்" என்றும் மறுபெயர்கள் தாங்கி, திவ்யாகமங்களுள் ஒன்றாகிய வாதுளாகமத்தின் உபாகமமாக விளங்குமேயன்றி, மூலாகமங்களுள், என்றால் திவ்யாகமங்களுள், ஒன்றாய் அடங்காது. மேலும், "காலோத்தரம்" என்னும் உபாகமம், சிவபிரானுக்கும் கார்த்திகேயக் கடவுளுக்கும் பெரும்பாலும் சரியை வரலாற்றைப்பற்றியும் கிரியை வரலாற்றைப்பற்றியும் நிகழ்ந்த ஓர்வித சம்வாதம். புரோத்கீதாகமத்தி லடங்கும் உபாகமங்களுள் ஒன்றாகி, "ஸ்ரீகாலஞானம்" என்று மறுபெயர் தாங்கும் "த்ரிகாலஞானம்" என்னும் ஆகமத்தை, அதற்குரித்தான "தேவீகாலோத்தரம்" என்னும் பெயரைவிட்டு, அறிவின்மையால் சிலர் "காலோத்தரம்" எனக் கூறுவர். அது பெருந் தவறு. ஆதலால், 73-வது மந்திரத்தில் பகர்வுற்றுக் கிடக்கும் "இயாமளமாகும் காலோத்தரம்" என்பது இயாமளாகமங்கள் எட்டில் ஒன்றாகும் "காலோத்தரயாமள"மே. இக் காலோத்தரயாமளத்தை வடமொழியில் பெரும்பான்மை "உமாயாமளம்" எனவும், சிற்சிலவிடத்துக் குழப்பத்திற் கேதுவாய் "தேவீகாலோத்தரம்" எனவும் கூறுவது வழக்கம். நாம் மேற்சொல்லிய ஆகமங்கள் யாவும் நேபாள வேந்தனது "எட்டு நூற்களஞ்சிய"த்தில் உளவேயன்றி, அச்சேறவில்லை; ஆனால் சில பகுதிகள்மட்டும் இத்தென்னிந்தியாவில் ஆங்காங்கு அரிதாய்க் காணலாகும்.

தலைப்பில் உள்ள மந்திரம் (16) திருமூலரதே என உறுதியாய்ச் சொல்லலாம். ஏனெனில், அதிற் சொல்லிய விடயத்தில் எள்ளளவேனும் ஐயப்பாடுமில்லை, தவறுமில்லை. "பண்டிதராவர்" எனத் தொடங்கும் மந்திரமும், அத்தியாய இறுதியில் அமையும் இரண்டு மந்திரங்களும், புகுத்திவிட்ட பாக்கள்போல் தோன்றுகின்றனவே யன்றி, அவை விடயத்தைப் பற்றித் திருமூலர் ஓதியனவேயெனத் துணிய இடமில்லை.

பாயிரத்தின் ஐந்தாவது அத்தியாயம் "குருபாரம்பரியம்" என வழங்கிவருகின்றது. இது திருமூலர் தம் குரவரின் வரலாற்றினை எடுத்து உரைப்பதுபோல அமைந்துளது. இதில் விளங்கும் விடயங்கள் யாவும் திருமூலரின் கூற்றுக்களே என்றுதல், திரிபற்ற உண்மையென்றுதல், சொல்வதனுல் ஆராய்ச்சி முறைக்கு முரண் ஏற்படுதல் கூடும். நந்தியருளாலே தமக்கு நாதன் என்றபெயர் கிடைத்ததென்றும், அப் பெயர் தாம் உள்பட எண்மருக்கு வாய்த்ததென்றும், அவ் வெண்மர் குழாத்தி லடங்குபவர்கள் தம்மை நீக்கி "நந்திக"ளெனப் பெயருற்ற "நால்வரும்", "சிவயோகமாமுனியும்" "மன்று தொழுத பதஞ்சலியும் வியாக்கிரமருமே" என்றும் திருமூலர் பகர்வதாகக் காணப்படுகின்றது (17). இக் கூற்றிலிருந்து "நாதர்" எனப் பட்டம் வாய்ந்தவர் மேற்சொல்லிய எண்மர் என்பது பெறப்படுமேயன்றி, இவ் வெண்மரில் எவராயினும் திருமூலரின் குருவாவரென்றுவது, அவர் காலத்தில் இருந்தவராவரென்றுவது தேறுதற்கு இடமில்லை. ஆயினும், இவ்வெண்மரும் வடமொழியாளரே என்

16. திருமந்திரம், 67. "அறுபத்தறுவர்" என்று கூறினதன் காரணமும், "அஞ்சாமுகம்" என்று கூறினதன் காரணமும் திரிலோசனசிவாசாரியர் அருளிச்செய்த வடமொழிச் சித்தாந்தசாராவளியில் தெரியவரும்.

17. திருமந்திரம், 77, 78, 80, 81, 82, 77-வது பாசுரத்தினின்று திருமூலர் சாரும் ஞானவழி,வடமொழியில் யோகசூத்திரங்களை யியற்றிய பதஞ்சலி முனிவரதே என்பது திண்ணமாம். "நந்திகள் நால்வர்" எனப்படுவோர் சனகர், சனந்தனர், சனுதனர், சனத்குமாரர் என்பவர்களே.

றுரைத்தற்கண் ஐயுறவிராது. பின்னர், "மந்திரம் பெற்ற வழிமுறை" எனத் தொடங்கி, ஒரு மந்திரத்தில் தம்முடைய சீடர்கள் மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், காலாக்கினி, கஞ்சமலையன் என வெழுவரெனத் திருமூலர் கூறுவதாகக் காட்டப்படுகிறது (18). இப்பெயர்களுள் முதல் ஆறும் வடமொழிப் பதங்களாம். இச் சீடர்கள் உண்மையில் இருந்தவர்களென்று சொல்லுவதற்காவது, அப்படி இருந்தனரேல் அவர்களுள் பிந்திய ஐவரும் சீடரா, அல்லது சீடரின் சீடரா என்று தீர்மானித்தற்காவது போதியஆதாரங்கள் இல்லை (19). இவ் வத்தியாயத்தில் எஞ்சிநின்ற மந்திரங்களைத் திருமூலர் வாக்காகவே கொள்ளலாம்.

"திருமூலர் தம் வரலாறு கூறல்" என்னும் தலைப்பு வாய்ந்துவிளங்கும் ஆறுவது அத்தியாயத்தை உற்று நோக்கி ஆராயின், அதில் அடங்கிய மந்திரங்களுட் பெரும்பான்மை திருமூலரின் கூற்றல்லவெனச் சொல்லுதற்கும், அவை பின்வந்தவர்களால்செய்து புகுத்தப்பட்டனவென்று சொல்லுதற்கும், பல ஏதுக்கள் தோன்றும். ஐந்தாவது அத்தியாயத்தில் ஒரு மந்திரத்தில் முற்கூறியபடி மாலாங்கன் முதலாக எழுவர் தம் சீடரெனப் பகர்ந்த திருமூலர், இவ்வத்தியாயத்தில் அவர்களில் இருவராகிய இந்திரனையும் மாலாங்கனையும் முன்னிலைப் படுத்திப் பேசுகின்றார் (20). இவ்வாறு செய்வது முரணே. இவ்விருவரின் பெயர்கள் வரும் மந்திரங்கள் இரண்டும் திருமூலர் வாக்கென் றேற்படுமாயின், இந்திரனும் மாலாங்கனும் திருமூலரால் இத் திருமந்திரத்தை ஓதப்பெற்றார் என்பது மலையிலக்காம். இவ்விரு பெயர்களும் விளிக்கப்படுதலாலே இம் மந்திரங்களிரண்டும் தவவலிமையால் மெய்யுணர்ந்து கூறப்

18. திருமந்திரம், 79. இப்பாசுரத்தில் கூறலுலும் பெயர்களுட் பெரும்பான்மை வடமொழியிலுள்ள இயாமள பைரவாகமங்களுடைய பெயர்களைத் தழுவும்.

19. சோமன் ஆக்கினதாக வடமொழியில் ஞானநூல் ஒன்று உளது. அதற்குச் சோமசித்தாந்தம் என்று பெயர். அஃது அச்சில் இல்லை.

20. திருமந்திரம், 79, 85, 87.

பட்ட திருமந்திரத் தொகை 3000-த்திற்குப் புறம்பு என்பதும், அவ்வாறு புறம்பா யிருப்பினும் ஒருவாறு திருமந்திரம் ஓதப்பெற்ற வரலாற்றைக் குறிக்க வேண்டித் தனிமையாய் நிற்றலே தகுதியென்பதும் தெளிவாம். ஆனால் அவ்வாறு நிற்றற்கு அமைந்த இடம் இப் பாயிரத்தின் தொடக்கமே யன்றி, இவ்வாறும் அத்தியாயம் அன்றென்க. "அடிமுடி காண்பார்" (21) என்று தொடங்கும் மந்திரம், பாயிரத்தின் இரண்டாவது அத்தியாயம் எவ்விடத்து அமையப் பெறுமெனச் சொல்லப்பட்டதோ அவ்விடத்தைச் சாரற்பாலதேயன்றி, ஆறுவது அத்தியாயத்தைச் சார்ந்து நிற்றல் ஒருகாலும் பொருந்தாது. "சதாசிவ தத்துவ முத்தமிழ் வேதம்" (22) எனப் பகரும் மந்திரமோ, திருவாரூரில் அவதரித்துத் திருத்தொண்டத்தொகை பகர்ந்த மெய்யறிவிற் கோமானாகிய சுந்தரர் பாடிய பாசுரத்தோடு முரணுறும். ஆயினும் சிலர், "முத்தமிழ் வேதம்" என்னும் சொற்றொடர்க்கு, மூன்று இலக்கணங்களுடன் அமையும் தமிழிற் பகரும் இத் திருமந்திரமாகிய வேதம் எனவும் பொருள் அமைக்கின்றனர். இன்னும் சிலர், "சதாசிவ தத்துவ மித்தமிழ் வேதம்" என எழுந்த மந்திரம் மேற் சொல்லியவாறு திரித்துப் புகுத்தப்பட்டது எனவும் சொல்கின்றனர். இவ்விதக் கோட்பாடுகள் எவ்வாறு இருப்பினும் இப்பொழுதிருக்கும் வண்ணம் மந்திரம் நிற்கப்பெறுது என நாம் துணிவதில் தவறொன்றுமில்லை.

இரண்டு மந்திரங்கள், திருமூலர் "ஒப்பிலிகோடியுகம்" "எண்ணிலி கோடியுகம்" அறிதுயிலில் காயத்தோடு இருந்ததாகக் கழறுகின்றன (23). இவ்வாறு சித்தர்கள் இருக்கநேராது எனச் சொல்வதில் கோதுண்டேயாயினும், திருமூலர் கைலையினின்றும் புறப்பட்டு இத்தென்னிந்தியாவிற்கு வந்தார் எனப் பகரும் வரலாறுகளைத் தழுவியும், 89-வது 92-வது பாசுரங்களில் காணக்கிடக்கும் பொருளை நோக்கியும், 84-வது 90-வது மந்திரங்கள் விளம்பும் விடயம்பற்றியும், 3000 ஆண்டு

21. திருமந்திரம், 98.
22. திருமந்திரம், 86.
23. திருமந்திரம், 84, 90.

கள் தவம்புரிந்த செய்தி இவ்விரண்டு மந்திரங்களிடத்தும் பகரவமையுமே யன்றி, மற்றேதும் பொருந்தாதெனவே சொல்லலாம். இத் தென்னிந்தியாவிற்கு வருதற்குமுன் தாம் கைலேயில் தவம்புரிந்ததைத் திருமூலர் செப்பலுற்றார் என்று சொல்லப்புகின், அதைக்காட்டிலும் பதின்மடங்கு சந்தர்ப்பத்தை யொட்டியதாய்த் தாம் ஓதவெடுத்துக்கொண்ட திருமந்திரத்திற்கு ஏதுவாகிய 3000 ஆண்டுத் தவத்தை ஏன் சொல்லாமல் ஒழித்தார் என்னும் கேள்வி நிகழும். இக் கேள்விக்கு அமைவு கூறப்புகின், அஃது ஏதோ ஓர்விதச் சாக்குப்போக்கு எனத்தோன்றுமேயன்றி, திருமூலர் பகர்ந்த பாக்களே இவ்விரண்டும் என்பதை உறுதிப்படுத்தாது. இதனை அறிஞர் நோக்கி, அவை பிற்காலத்தார் திரித்துக் கொண்டனவென்று கொள்ளுதலே பொருந்தும். 100-வது மந்திரத்தில், திருமூலர் சிவஞானத்தைத் தாம் இத் தென்னிந்தியாவில் அமர்ந்த விடத்து ஓதியதாகவும், 101-வது மந்திரத்தில்,ஓதிய பின்பு இறைவன் ஆணையை மீறாது கைலேயை நோக்கி ஏகினதாகவும், தன்மையில் பகர்வதால், இத் திருமந்திரத்தைத் தாம் கைலேயை அடைந்த பின்னர் அமைத்தார் என்றாவது, கைலேயை நோக்கி வந்துழி அமைத்தார் என்றாவது கொள்ளுதற்கு இடமுண்டு (24). ஆயின், இவ்விரண்டு மந்திரங்களும் உண்டான வழி, திருமூலருக்குப் பின்னர் வந்தவர்களிடத்தே ஒருவாறு காணக்கிடக்கும் என்றும் எண்ணலாம். சிவயோகமா முனியைப் போற்றும் வாயிலாகத் திருமூலரது ஞானமுறையை ஓதும் 93-வது மந்திரம், ஐந்தாவது அத்தியாயத்தைச் சார்ந்ததுபோலும்.

95-வது மந்திரத்தில் திருமூலர் "மந்திரம்" என்னும் மொழிக்குப் பொருளை நன்கு விளக்கி, 96-வது மந்திரத்தில் தாம் ஆக்கிய நூலின் பெயர் "மந்திரமாலை" எனவே ஒருவா

---

24. இதனால் "உபமன்யு பக்தவிலாச"த்தின்கண் விளம்புறும் ஸ்ரீ மந்த்ரமாலிகா என்னும் ஞானநூல் முதலில் வடமொழியில் ஆக்கப்பட்டதெனக் கொள்வதற்கு இடமுண்டு. அப் பக்தவிலாசத்தில் பகரும் வாய்மையை நோக்கின் இத்திருமந்திரத்தின் முதல் நூல் வடமொழியில் உளது என்பது போதரும்.

ருகச் சொல்லி முடிக்கின்றார். பின்கூறிய விடயம், உபமன்யு முனிவரும் சேக்கிழார் பெருமானும் மொழியும் மொழிக்கு உறுதிதருவதால் கவனிக்கத்தக்கது.97-வதுமந்திரம்,திருமூலர் இத் தென்னிந்தியாவை அணுகியகாலத்துத் தென்மொழியில் ஞான நூல்கள் "பொங்கிமிகா"மல் இருந்தன எனக் கூறலுறு கின்றது. இக்கூற்றும், "தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே இறைவன் படைத்தனன்" எனக் கழறும் 91-வது மந்திரமும், திருமூலர் காலத்தை ஒருவாறு வரையறுக்குமாதலால் சரித் திரவாராய்ச்சிக்கு இன்றியமையாதவை. 103-வது மந்திரம் மூன்றாவது அத்தியாயத்தை ஒட்டி வருதல் பொருந்தும். 104-வது மந்திரம் முதலாவது அத்தியாயத்தைச் சாரற்பா லது.

ஏழாவது அத்தியாயத்தின் தலைக்குறி "குருமடவரலாறு"என்பது. இவ்வத்தியாயத்தில் 2 மந்திரங்களே தொகுக் கப்பட்டிருக்கின்றன. ஆயினும், இவ்வத்தியாய விடயம், அதிக குழறுபாட்டிற்கேதுவாகி நடுவில் வந்தவர்கள் புனைந்து விடுத்ததென்று சொல்வதற்காகும் நிலையில் இருக்கின்றது. 1-வது மந்திரம் (25) "மூலன் சொன்மொழிந்தானே" எனப் பட ர்க்கையில் பகர்கின்றது. 2-வது மந்திரமும் (26) மூலர் உள் பட "நிராமயத்தோர்" எழுவர் எனப் படர்க்கையில் செப்ப லுறுகின்றது. இன்னும், 1-வது பாசுரத்தில், ஆகமாந்தத்தின் இறுதித்துணிபாகிய, "சன்மார்க்கத்தை" ஊட்ட "வந்த மட மேழு" எனவும், (27), அவ்வேழைச் சார்ந்தோர்களில் "மூந்தி யுதிக்கின்ற" வன் "மூலன்" எனவும், "தந்திரமொன்பது சார்வு மூவாயிரம்" எனவும், "மூலன் சுந்தரவாகமச் சொன்

25. திருமந்திரம், 105.

26. திருமந்திரம், 106.

27. 105-வது மந்திரத்தில் சொல்லிய மடத்தொகை எழென்பதை, 79-வது மந்திரத்தில் சொல்லிய திருமூலர் மாணக்கர் எழுவர் என்பதுடனும், 106-வது மந்திரத்தில் சொல்லிய குருமடத்தலைவர் எழுவர் என்பதுடனும், 81-வது மந்திரத்தில் சொல்லிய முத்தர் எழுவர் என்பதுடனும், ஒத்திட்டுப் பார்க்க. எழென்னும் தொகை, திருமந்திரப் பாயிரத்தை முற்றிலும் அமைத்தோனுக்கு ஓர் ஆழ்ந்த பொருளை உணர்த்தியதாகல் வேண்டும்.

மொழிந்தான்" எனவும் கூறப்பட்டுளது. இதனால், திருமந்திரம் திவ்யாகமப் பிழம்பே எனவும், அது ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட் டிருக்கின்றதெனவும், அவ்வொன்பது தந்திரங் களைச் சார 3000 மந்திரங்களும் நிற்குமெனவும் சொல்லிய தாக வமைதலோடு, மேற்சொல்லிய ஏழு மடத்தார்களுள் திரு மூலரே மிகவும் ஒளிபெற்று முந்தி நின்றார் எனவும் பெறப் படுகின்றது. இவ்வெழுவர், காலாங்கர், கோரர் என்னும் கோரக்கர், மச்சேந்திரரென்னும் திருமாளிகைத்தேவர், நாதாந் தர், பரமானந்தர், போகதேவர் (28), மூலர் என்பவரேயென 2-வது மந்திரம் கூறுகின்றது. இப்பெயர்த் தொகையையும், ஐந்தாவது அத்தியாயம் 1-வது மந்திரத்தில் சொல்லும் பெயர்த்தொகையையும் ஒத்திட்டுப் பார்ப்பதோடு, இப் பெய ர்த் தொகைக்கட்படும் போகர், கோரர், திருமாளிகைத்தேவர் முதலாயினர், திவ்யாகமங்களினல் விலக்கலுறும் நவநாத சித்தர்களின் (29) கௌலயாமல சமயத்தைச் சார்வர் என்பதை யும் கவனிக்கவேண்டும். இக்கௌலயாமல நெறியைத் திவ்யாக மங்கள் வழுவெனக் களைதலாலும், 1-வது மந்திரத்தில் திரு மந்திரம் "சுந்தரவாகமச் சொல்" என்று சொல்லியிருத்தலா லும், இவ்வத்தியாயத்தில் வரும் கூற்றுக்கள், திருமூலர் வாக் கென்றுவது, உண்மையென்றுவது சொல்லுதற்கு நியாயமே புலப்படவில்லை. இவ்வத்தியாயத்தைப் புனைந்து விடுத்தவர் களே, இவ்வாறு தாம் புனைந்து விடுத்த காரணம்பற்றி, நான் காவது அத்தியாயத்தில் காணப்படும் 73-வது மந்திரத்தில், முற்குறித்தபடி, திவ்யாகமமல்லாத யாமளாகமத்தின் பெய ரைச் சேர்த்து, 72-வது மந்திரத்தின் கூற்றைப் பொய்யாக் கினவர்கள் என்பதில் ஐயமில்லை.

---

28. போகர் ஆக்கினதாக வழங்கி வரும் **போக காரிகா வ்யாக்யா** என்னும் நூல் வடமொழியில் உளது. அஃது அச்சேற வில்லை.

29. நவநாத சித்தர்கள் கௌலயாமலமதத்தைச் சார்ந்த ரஸேஸ்வரதரிசனத்தையும் சார்வர். "நிஜகுணசிவயோகியார்" ஆக்கிய வட மொழி விவேகசிந்தாமணியைப் பார்க்க. அவ்வடமொழி நூலில் சில பகுதிகள் மட்டுமே அச்சேறி யிருக்கின்றன.

எட்டாவது அத்தியாயம் "திருமந்திரத் தொகைச்சிறப்பு" என்னும் பெயரால் 2 மந்திரங்களை யுடைத்து (30). இவை இரண்டும் திருமூலர் கூற்றல்லவென உறுதியாய் ஓதுக்கத் தகும். இவற்றில் 2-வது மந்திரம் (31), "பூர்வத்து மூவாயிரம் பொது" எனவும் "வைத்த சிறப்புத் தருமிவை தானே" எனவும் பகர்கின்றது. இக் கூற்றினால் பண்டை மூவாயிரம் மந்திரங்களே இயல்பாய் இருந்தவை எனவும், "இவை" என்னும் மொழியாற் சுட்டிக்குறித்த பாயிரப் பாசுரங்கள் இடையில் உண்டானவை எனவும் விளங்குவதால், இச் செய்யுளை ஆக்கியோனது சீலத்திற்கும் நன்மாதிரிக்கும், நாம் எப்பொழுதும் நன்றி பாராட்டல்வேண்டும். இக் கூற்றில் வரும் "இவை" என்னும் மொழி, ஆராய்ச்சிக்கு மிகவும் அருமையானது. "இவை" என்னும் இப் பன்மைச்சொல், இச் சொல்லை இறுதியாக உடைய ஓர் பாசுரத் தொகையைச் சுட்டுகின்றதென்பது திண்ணம். ஒருவாறாக அப் பாசுரத்தொகையின்கண் அடங்கும் அத்தியாயங்கள் 4, 5, 6, 7, 8 எனச் சொல்லுதல் அமையும்போலும். இது பின்னர் விரிப்பாம். ஒன்பதாவது அத்தியாயமாகிய இறுதி அத்தியாயம் 4 மந்திரங்களால் தொகுக்கப்பட்டிருக்கின்றது. (32) இவை, தவவலியாற் பெற்ற 3000 மந்திரங்களோடு வைத்தெண்ணத் தகாவேயாயினும், திருமூலர் கூற்றென்பது நன்கு புலப்படுகின்றது. இவ்வத்தியாயத்து இறுதி மந்திரத்தில், திருமூலர் "தத்துவ ஞானமுரைத்தது தாழ்வரை" எனப் பிரத்தியபிஞ்ஞையின் பிறப்பிடமாகிய கைலைத்தடவரையைக் குறித்துள்ளார் (33).

ஆகவே, மேற்சொல்லிய 9 அத்தியாயங்கள் அடங்கிய பாயிரம், குழறலுற்றுப் பொருந்தாப் பாக்கள் பல அமைந்து இருப்பதாகக் கொள்ளற்பாற்று.

30. திருமந்திரம், 107, 108.
31. திருமந்திரம், 108.
32. திருமந்திரம், 109, 110 111, 112.
33. திருமந்திரம், 112.

நூலிலக்கணநெறியைப்பற்றி விளம்பும் நூலாசிரியர்களின் கொள்கையை யொட்டி நோக்கின், நூன்முகமாய் அமையும் இருவகைப் பாயிரமும் நூலாசிரியர்கூற்றாக எஞ்ஞான்றும் பெறப்படுதலில்லை (34). இக் கொள்கையை விட்டு, திருமூலர் நூலமைப் பிலக்கணத்தின் நெறியை வரையறுக்கவந்த நூலாசிரியர்களின் காலத்திற்கு மிகவும் முந்தியவர் என்னும் முகாந்தரத்தை யொட்டியும், 107 - வது 3046-வது பாக்களில் கூறலுறும் திருமந்திரத்தொகை பாயிரப் பாசுரங்களை யுட்படுத்தாதென்பது அறிஞர்கட்கெல்லாம் சம்மதம் என்பதை ஒட்டியும், பாயிரத்திலடங்கும் 112 மந்திரங்களையும் திருமூலர் கூற்றல்லவென ஒருங்கே ஒதுக்கிவிடலாமெனின், அவ்வாறு செய்தற்கும் இடையூறுகள் சில உண்டு. பாயிரத்தை முற்றிலும் ஒழிப்பின், திருமந்திரப் பாடற்றொகை 2935 ஆகக் குன்றி முன் சொல்லிய 3000 என்ற மூதறிஞர் கணக்குப் பிணக்காவதோடு, அப் பாயிரத்திற் காணும் "ஒன்றவன்றானே" யெனத் தொடங்கும் மந்திரமும் விலகலுற்று,

34. இப்பொழுது பழக்கத்திலுள்ளநூல்களில் பாயிரத்தின் இலக்கணத்தை விரிவாய் விளக்கிக் கூறுவது பவணந்திமுனிவராதாகக் கொள்ளப்படும் நன்னூலே (அந்நூலின் பாயிரம் 2,3,47, 48-வது சூத்திரங்களைப் பார்க்க). **தொல்காப்பிய** உரை ஆசிரியர்களில் மிகவும் பழைமைபெற்றவராகிய இளம்பூரணர், **தொல்காப்பியச்** சிறப்புப்பாயிரவுரையில், பாயிர அமைப்பிலக்கணத்தை ஒருவாறு பவணந்திமுனிவர் கொள்கையை அணுகுமாறே சொல்கின்றார். **இறையனாரகப்பொருள்** உரையாசிரியரும் பாயிரவிலக்கணத்தை விரித்துரைத்தனர். ஆனால் மேற்சொல்லிய பாயிரவிலக்கணத்தைத் திருமூலர் அருளிச்செய்த திருமந்திரத்தின் பாயிரம் தழுவத் தகுமா தகாதா என்னும் கேள்விக்கு அமைவு கூறுதல் எளிதன்று. ஏனென்றால் பாயிர அமைப்பிலக்கணத்தைக் கூறலுறும் நூலாசிரியர்களின் தொன்மை திருமூலரினதற்கு முற்பட்டதென்று சொல்வதற்கு ஆதாரங்களே கிடையா. சற்றேறக்குறையத் **தொல்காப்பிய** ஆசிரியர் திருணதூமாக்கினியார் திருமூலர்காலத்தவர் என்றுகொள்ளலாம் என எண்ணினும், **தொல்காப்பியம்** பாயிர இலக்கணத்தை வரையறுக்கவே இல்லை. ஆதலால் பாயிரத்தில் சிலவற்றை நூலாசிரியர் சமைத்தல் கூடும் என்னும் நிபந்தனை திருமூலர்காலத்திற்குப் பொருந்துமா வென்பதை ஆராய்ச்சி முறையால் மட்டுமே தீர்மானிக்கவேண்டியதாகும்.

உபமன்ய முனிவரும் சேக்கிழார்பெருமானும் கூறிய மாற்றம் பொய்படும். இன்னும், மேலே காட்டியபடி, பாயிரத்தைக் களைந்து ஆரோய்வோமாயின், அதில் வரும் பல மந்திரங்கள் திருமூலர் தன்மையில் மற்றவர் செவியுற ஓதுவதுபோலும், அவற்றுள் இரண்டு இந்திரனென்றும் மாலாங்கனென்றும் பெயருற்ற சீடர்களைச் சுட்டிக் கூவி ஓதுவதுபோலும் அமைந்துள்ளன [35]. ஆனால் இவ்வாறு சுட்டி யழைக்கும் இவ்விரண்டு பாக்களுக்குஞ் சற்று முன்னிற்கும் ஒருமந்திரம் [36], மாலாங்கன் இந்திரன் முதலிய எழுவர் சீடர்களின் பெயர்களைத் திருமூலர் படர்க்கையில் மற்றவர் செவியுறச் சொல்வதுபோல் அமைந்துளதென்றும் காட்டினோம் [37]. இதனால் திருமூலர் செய்யுட்கள் பெரும்பாலும் பாயிரத்தில் கலந்திருக்கின்றன வென்பதில் ஐயமே இல்லை. இன்னும் 9 தந்திரங்களிலும் பகரப்படாது வடமொழி அகத்திய பக்தவிலாஸத்தில் மட்டுமே கூறப்பட்டுக் கிடக்கும் விடயம் ஒன்று பாயிரத்திற் காணப்படுகின்றது. இதனாலும் பாயிரம், ஆராய்தற்கு இன்றியமையாப் பொருள்கள் நிரம்பி யுள்ளதென நாம் அறிதல்வேண்டும். வடமொழி அகத்திய பக்தவிலாஸத்தில் திருமூலர் மூலநாதரெனப் போற்றப்படுகின்றார். "நாதர்" என்னும் பட்டப்பெயர் மேம்பட்ட தவவலியைக் குறிக்கும். மேலும், இப் பெயர் பிரத்தியபிஞ்ஞைத் திருத்தொண்டர்களை யறிவிக்கும் ஓர் புறக்குறி. இது திருமூலருக்கு வாய்த்த வரலாறு திருமந்திரத்தில் பாயிரத்தில் மட்டுமே தோன்றுகின்றது. இதைப்பற்றி நாம் முன்னரே ஒருவாறு விளக்கினோம். நாதர் என்னும் பட்டப்பெயர் கௌலயாமலாகமங்களைத் தழுவும் நவநாத சித்தர்களுக்கும் அமையும். இக் காரணம் பற்றியே நவநாதசித்தர் கூட்டத்தைத் திருமூலர் சார்ந்தவராயிருக்கலாம் என்னும் ஐயுறவு நிக

---

35. நான்முகம் 12, 13-வது பக்கங்களைப் பார்க்க. அடிக்குறிப்பு 20-ஐயும் பார்க்க.

36. திருமந்திரம், 79.

37. 34-வது அடிக்குறிப்பிற் சொல்லிய பாயிர இலக்கணத்தோடு இப் பாக்கள் முரணுகின்றன.

ழ்ந்து, முன்னர்க் குறித்த 73-வது 106-வது மந்திரங்கள் திரிதற்கும் புனையப்படுதற்கும் இடம் உண்டாயிற்று.

இவ்வாறு திருமூலர்மொழி எனச் சொல்லத்தகும் கூற்றுக்களும், அக் கூற்றுக்களின் நிகரற்ற மாட்சியும், பாயிரத்துள் நிரம்பிப் புலப்படுதல்பற்றி, அதனைத் தொன்று தொட்டுவரும் வழக்கினை மீறித் திருமூலரே முற்றும் ஆக்கினார் என்று சொல்வதும் பொருந்தாது. ஏனெனில், அவ்வாறு சொல்வதனால், பாயிரமும் 9 தந்திரங்களும் சேர்ந்து 3047 பாசுரங்கள் ஆகி, 3000 என்ற தொகை 47 பாசுரங்களால் மேற்போகின்றது. இன்னும், அதனால்,நாம் முன்னர்ச் சொல்லியபடி, சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருத்தொண்டத் தொகையின்கண் திருமூலரைப்போற்றும் பாசுரத்தையும், திவ்யாகமங்களினது கோட்பாட்டையும் எதிர்க்கும் கூற்றுக்களையும், ஏனைய தெளிவாயுள்ளமுரண்களையும், திருமூலருடைய மொழி எனவே ஒப்பவேண்டிவரும். அவ்வாறு ஒப்புதல் ஒருகாலும் பொருந்தாது. ஆதலால் பாயிரம் முழுவதும் திருமூலர் கூற்றென ஒப்புதலும் பொருந்தாது. மற்று அஃதனைத்தும் பிற்காலத்தார் புனைந்துவிட்டதென்று சொல்லலும் அமையாது. பாயிரத்தில், திருமூலர் அருளிய மந்திரங்களும், மற்றவர் செய்து இட்ட பாக்களும், நீரும் எண்ணெயும்போல உறவற்றுக் கலந்து நிற்கின்றன.

இலக்கணநூல்களின் முறைப்படி இருவகைப் பாயிரமும் நூலாசிரியர் இயற்றுதல் இல்லையென்பது நாம் உறுதியாய்க் கண்டறிந்தது. அவ் வழக்கம் இப்பொழுதுள்ளபடி திருமந்திரத்தினும் ஏதோ ஒருவாறாய்ப் பாதுகாக்கப்பட்டதென்று 108-வது பாவினால் நாம் கூறலாமேயன்றித் திருமூலர் வகுத்துவிடுத்தபடி திருமந்திரத்திற்குப் பாயிரம் உளதோவென்பதும், அப்படி உண்டானால் அதில் திருமூலர் வாக்கு ஒருவாறு யாவது கலந்திருக்கக்கூடுமோவென்பதும் சற்றும் புலப்படாது. அப் பாவினால், யாம் முன்னரே கூறியபடி (38), பாயிரம் ஒன்று திருமந்திரத்திற்கு உண்டென்பதும், அப் பாயிரம்

38. நூன்முகம், 18-வது பக்கம் பார்க்க.

பிறராற் புனையப்பட்டதென்பதும், இன்னும் அப் பாயிரம் திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய 3000 மந்திரங்களினின்று வேறாக உளது என்பதும் மலையிலக்காகும். ஆகலின், திருமந்திரம் என்னும் இவ்வரிய ஞானநூல், 105-வது பாவிற் சொல்லியவாறு, தொன்றுதொட்டு 3000 மந்திரங்களால் தொகுக்கப்பட்ட 9 தந்திரங்களாகவே வகுக்கப்பட்டுளதென்பதும், 108 - வது பாவிற் சொல்லியவாறு, பண்டைய 3000 மந்திரங்களைத்தவிர இடையில் பிறராற் சமைக்கப்பட்ட பாசுரத் தொகையாகும் ஓர் பாயிரமும் திருமந்திரத்திற் பொருத்தப் பட்டதென்பதும் தேற்றம். 3000 மந்திரங்களடங்கிய திருமந்திரத்தின் தொடக்கத்தை உபமன்யுமுனிவரும் சேக்கிழாரும் குறித்துள்ளாராதலால், அத் தொடக்கம் இப்பதிப்பில் காணும் 2-வது மந்திரமே. அம் மந்திரமே முதல் தந்திரத்தின் தொடக்கம் என்பதும் 105-வது பாவினுல் விளங்குகின்றது. இம் மூவாயிர மந்திரங்களின் இறுதி 3045-வது மந்திரம் என்பதன் கண்ணும் யாதோர் ஐயப்பாடும் இல்லை. இம் மந்திரத்திற்குப்பின் வரும் 2 பாக்களும் [39] தொகைக் கணக்கையும் கடவுள் வாழ்த்தையும் பகர்வதால், அவை தவவலியால் ஆண்டுக்கு ஓர் மந்திரமாகச் சொல்லப்பட்டவற்ரோடு

39. திருமந்திரம், 3046, 3047. 3046-வது மந்திரத்தின் பொருளை அறியாதார் சிலர் உளர். திருமூல நாயனுர் அருளிச்செய்த நூல்கள் மூன்று. அவற்றுள் "திருமந்திரம் மூவாயிரம்" என்பது நாம் இப்பொழுது வெளியிடும் புத்தகமே. ஏனைய நூல்களில் "திருமூலர் உபதேசம் முப்பது" என்பது அச்சாகிவிட்டது. "திருமூலர் மந்திரம் முந்நூறு" என்னும் நூல் ஓர் புத்தகமாக வெளிவரா விட்டாலும், அதன் பாசுரங்களிற் பெரும்பான்மை ஞானக் கோவைகளில் திரட்டிச்சேர்க்கப்பட் டிருக்கின்றன. (திருமூலர் ரஸேஸ்வர தரிசனத்தார் கொள்கையை ஒருவாறு தழுவி வைத்திய நூலொன்றும் சமைத்திருக்கிருர். அதில் இரத்த நரம்பின் துடியினுல் பிணியைக் கண்டு கொள்ளும் முறையை மிகவும் தெளிவாய் விளக்கி யிருக்கின்ருரென்பது பிணி தீர்ப்போர்களின் கொள்கை. அப் புத்தகமும் அச்சில் கிடைக்கும்.) ஆக 3046-வது பாசுரத்தின் கருத்து என்னவென்ருல், மேற்சொல்லிய மூன்று நூல்களிலும் திருமூலர் ஒரே துணிபை வற்புறுத்துகின்ருர் என்பதே.

வைத்தெண்ணத்தக்கனவல்ல. இக் காரணம்பற்றி அவை திருமூலர் வாக்கல்லவென ஒதுக்கற்பாலன. ஆதலால் இப் பதிப்பின்படி திருமூலர் உரை என்று சொல்லத்தகும் மந்திரங்கள் பின் வருமாறு:—

| | பாசுரங்கள். |
|---|---|
| 2-முதல் 50-வரை (பரசிவப் பிரபாவம்) ... | 49 |
| 51-முதல் 60-வரை (திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை) ... ... ... | 10 |
| 61-முதல் 66-வரை (வேதச்சிறப்பு) ... ... | 6 |
| 67-ம் 68-ம் (ஆகமச் சிறப்பு) ... ... | 2 |
| 113-முதல் 3045-வரை (9 தந்திரங்கள்) ... | 2933 |

ஆக மொத்தம் 3000 மந்திரங்களே திருமூலர் வாக்கு எனவும், மற்றவை பிறர்செய்து கலந்தவை எனவும் பொதுவாய் ஒப்புக்கொள்ளுதல் பொருந்தும். அநேக இடங்களில் திருமூலரின் மொழியைப் பின் வந்தவர்கள் சிதைத்தும் திரித்தும் இருக்கின்றனர் என்று சொல்லுதற்கும் காரணம் உண்டு. இச் சிதைப்பினாலேயே ஆங்காங்கு ஒரே பாட்டு இரட்டித்ததற்கும், மற்றைய நூலாசிரியர்கள் இத் திருமந்திரத்தி னுள வென எடுத்து வழங்கும் சில பாக்களும், தொன்றுதொட்டுக் கேள்விமுறையில் இத் திருமந்திரத்தி னுளவெனச் சொல்லிக் கொள்ளும் மற்றைய பாக்களும், இப் பதிப்பினும் பிற பதிப்புக்களினும் தோன்றாதிருத்தற்கும் இடமாயிற்றுப்போலும். மேலே யாம் வகுத்த முறைப்படி, திருமூலர் கூற்றாகும் 3000 மந்திரங்கள் அடங்கும் 9 தந்திரங்களின் உட்பிரிவுகள் அமைவு பின் வருமாறு:—

1-ம் தந்திரம் 1-வது அத்தியாயம் வேதச்சிறப்பு,
 " 2-வது அத்தியாயம் ஆகமச்சிறப்பு,
 " 3-வது அத்தியாயம் பரசிவப்பிரபாவம்,
 " 4-வது அத்தியாயம் உபதேசம்,
மற்றவை.

2-ம் தந்திரம் 1-வது அத்தியாயம் திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்டமுறைமை,
„ 2-வது „ அகத்தியம்,
மற்றவை.

இந்த 3000 பாசுரங்களுக்கு நான்முகம் திருமூலர் இயற்றிய "காப்பு"ப் பாக்கள் இரண்டும் "அவையடக்க"முமே(40). இவை தவிர மற்றெல்லாப் பாசுரங்களும் சிறப்புப் பாயிரத்தைச் சார்ந்தன வெனவும், அவை திருமூலர் சீடர் முதலாயினோரால் அமைக்கப்பட்டும் புனைந்து விடப்பட்டும் இருத்தல் கூடும் எனவும் சொல்லுதல் அமையும் (41). அச் சிறப்புப் பாயிரத்தின் ஒழுங்கு ஒருவகையாய்ப் பின்வருமா றிருக்கலா மெனத் தோன்றுகின்றது: (1) குருபாரம்பரியம், (2) திருமூலர் தம் வரலாறு கூறல், (3) குருமடச்சிறப்பு, (4) திருமந்திரத் தொகைச்சிறப்பு. இப் பாசுரங்களில் பெரும்பான்மை திருமூலர் சீடர் முதலாயினோரால் கூறப்பட்டிருக்கும் எனத் தோன்றுகின்றபடியால், அப் பாசுரங்களிற் பகரும் விடயம் சற்றேறக்குறைய மெய்யாக அவர்கள் காதுக் கெட்டியதென நாம் நம்புவதில் யாதும் கோதில்லை.

"மந்திரம்" என்னும் சொல் வடமொழியில் ஆகமத் தொகையைக் குறிக்கும் காரணம் பற்றியும், "தந்திரம்" என்னும் சொல் வடமொழியில் ஆகமப்பகுதிகளைக் குறிக்கும் காரணம் பற்றியும், திருமந்திரம் 9 தந்திரங்களாக வகுக்கப்பட்டிருக்கும் காரணம் பற்றியும், பாயிரம் 72-வது செய்யுள் இறுதி அடியில் "நவ ஆகமம் எங்கள் நந்தி பெற்றனே" என்று இருத்தல் பற்றியும், இத் திருமந்திரம் அந் நவ ஆகமங்களாகிய கனிகள் பிழிந்த சாறு என்றும், இத் திருமந்திரத்தில் அமரும் 9 தந்திரங்களில் ஒவ்வோர் தந்திரமும் அந் நவவாகமங்களில் அமரும் ஒவ்வொரு ஆகமத்தை விளக்கும்

---

40. திருமந்திரம், "விநாயகர் காப்பு" 1, 109, 110, 111, 112.

41. திருமந்திரம், 69-108, 3046, 3047.

என்றும் எண்ணுதற்குப் போதுமான நியாயம் இருக்கின் றது.

தொடக்கத்தில், திருமந்திரத்திற்குப் புறனாகவுள்ள ஆதாரங்களை யாராய்ந்து திருமூலர் காலம் கி-பி. 9-வது நூற் றுண்டிற்குப் பிற்பட்டதாகாதெனக் கூறிமுடித்தாம். இனி, திருமந்திரத்தினகத்தே காணலாகும் ஆதாரங்களை வைத்தும் அவர் காலத்தை ஒருவாறு நிச்சயிப்பாம். 5-வது தந்திரம் 18-வது அத்தியாயத்தால் திருமூலர் வடமொழியாளர்களாகிய அறு சமயச்செல்வர் கோதமர், கணாதர், வாதராயணர், கபிலர், சைமினியார், பதஞ்சலியார் என்பவர்களுக்கு மிகவும் பிந்தியவரே யென்பது போதரும். இப் பதஞ்சலி, பாணினி முனிவர்க்குப் பின்னர்த்தோன்றி அவர் இயற்றிய அஷ்டாத்தியாயீ என்னும் இலக்கணத்திற்கு "மாபாடியம்" வரைந்த பதஞ்சலியாரே யென ஓர் அபிப்பிராயமும் உண்டு. வீரமாஹேஸ்வரர்களுக்கு முக்கிய ஆகமங்களாகிய வீரம் வாதுளம் என்னும் இரண்டையும் 73-வது மந்திரத்தில் போற்றியிருத்தலாலும், 2-வது தந்திரம் 3-வது அத்தியாயத்தில் வீரமாஹேஸ்வரரால் மிகவும் புகழப்படும் லிங்கபுராணத்தின் உட்பொருளை விளக்கியிருத்தலாலும், 7-வது தந்திரத்தின் முற்பாகத்தில் வீரமாஹேஸ்வரர்களுக்கு உரித்தாகிய "ஷட்ஸ்தலவிவேசன"த்தின் நுண்ணிய பொருள்களை எடுத்து விளக்குவதாலும், 1536-வது மந்திரத்தில் வீரமாஹேஸ்வரர்களுள் பரிபாடையாய் வழங்கும் "பவகதி" என்னும் சொற்றொடர் அவர்களது முறையாகவே வழங்கப்பட் டிருப்பதாலும், திருமூலர் லிங்கபுராணத்திற்கும் வீரமாஹேஸ்வரசமயம் ஒருவாறு மேம்பாட்டை அடைந்ததற்கும் பிந்திய காலத்தவர் எனத் தெரியவருகின்றது. "போதி" என்கிற சொல் 89-வது 92-வது மந்திரங்களில்வழங்குகிறபடியாலும், அம் மொழியினல் அரச

மரத்தைச் சுட்டல் புத்தசமயம் ஓங்கிச் செழித்தபிறகே ஏற்பட்டது என்று சரித்திர ஆராய்ச்சி வல்லார் கொள்ளுதலாலும், திருமூலர் புத்தருக்குப் பிற்பட்டவர் என்பது மலேயிலக்கு. 91-வது 97-வது மந்திரங்களிலிருந்து திருமூலர் கைலேயினின்றும் புறப்பட்டுத் தென்னிந்தியாவிற்கு வந்து அமர்ந்த காலத்து "தமிழ்ச் சாத்திரம் பொங்கி மிகா" திருந்தது எனவும், அதுபற்றியே திருமூலரை "நன்றாகத் தமிழ்செய்யுமாறே படைத்தனன்" எனவும் பெறுதும். அன்றியும், பன்மலர் தூவியதுபோல் அழகிய வடமொழிக்கிளவிகளை ஒவ்வோர் இடத்தும் புதிது புதிதாய் நம் ஆசிரியர் வாரி இறைக்கும் வாய்மையை நோக்கின், திருமூலர் வடமொழியாளர் எனவும், அவர் 101-வது 112-வது மந்திரத்தில் சூசிப்பித்தபடி கைலேத் தாழ்வரையினின்றும் போந்து தென்னிந்தியாவை வந்தடைந்தவர் எனவும் நிச்சயிக்கலாம். 337-வது மந்திரத்தின் மெய்ப்பொருளை விளக்கும் 338-வது மந்திரத்தினல், இத் தென்னிந்தியாவிற்கு அறிவொளி கைலேத் தாழ்வரையினின்றுமே மின்னியது என நாம் கொள்ளல் தவறாது.

ஆதலால், திருமூலர் பிரத்தியபிஞ்ஞைத் திருத்தொண்டராய்க் கைலேத் தடவரையினின்றும் எழுந்து இத் தென்னிந்தியாவிற்கு வந்த காலம் லிங்கபுராணம் ஏற்படுவதற்கு முற்பட்டதன்றென்றும், புத்தர் அவதாரம் செய்த காலத்திற்கு முற்பட்டதன்றென்றும், கோதமர் முதலியோர் அறுவர் காலத்திற்கு முற்பட்டதன்றென்றும், 28 திவ்யாகமங்கள் ஏற்பட்ட காலத்திற்கு முற்பட்டதன்றென்றும், வீரமாஹேஸ்வர சமயத்தோற்றத்திற்கு முற்பட்டதன்றென்றும், பொதுவாகச் சொல்லலாமே யன்றிக் காலத்தை வரையறுத்து இன்ன நூற்றாண்டு எனச் சொல்லுதல் கூடாது. இன்னும், திருமூலர் தென்னிந்தியாவிற்கு வந்த காலத்துத் தமிழில் ஞானநூல்கள்

மிருதியாயில்லையெனவும் தெரிதலால்[38], உத்தேசமாய்த் திருமூலர் காலம் கி. பி. 6-வது நூற்றாண்டிற்குப் பிற்பட்டதன்று என்று சொல்லி வைக்கலாம்.

இனி நூலமைவு வருமாறு: முதல் தந்திரத்தில் மெய்யுணர்ச்சிக்குச் சாதனமாக அமையும் நன்னடக்கைகளை வற்புறுத்தும் பாக்கள் அடங்கும். இரண்டாம் தந்திரம் சைவ புராணங்களிலும் திவ்யாகமங்களிலும் பண்டைய இதிகாசங்களிலும் வழங்கும் இன்றியமையாத சிற்சில திவ்ய சரிதங்களின் மெய்ப்பொருளை உணர்த்தி, அவற்றினின்று விரியும் கடவுளின் ஐந்தொழிலையும், ஆன்மாக்களின் கூறுகளையும், கடவுளை வழிபட்டு உய்யும் வழியினிடத்து உண்டாகும் வழுஉக்களையும் ஒருவாறு விளக்கும். மூன்றும் தந்திரம் யோகத்தின் வழியையும், பேறுகளையும், சாதனங்களையும், சித்திகளையும் கூறும். நான்காம் தந்திரம் பேரறிவிற்குத் தலைமைச் சாதனமாகிய மந்திர யோகத்தின் பிரிவுகளையும், அப் பிரிவுகளைப் பற்றும் உபாசனை வேற்றுமைகளையும், அவ் வேற்றுமைகளை யடுத்த அகவுணர்ச்சித் திரிபுகளையும் விளம்பும். ஐந்தாம் தந்திரம் சைவசமயத்தின் பகுதிகளையும், பாதங்களாகிய படிகளையும், மார்க்கங்களாகிய வழிகளையும், அவ் வழிகளின் இறுதி நிலைகளையும், கடவுளின் அருட்டிருமேனி ஆன்மாக்கடோறும் பதியும் பன்முறைகளையும், ஒதுக்கற்பாலனவாகிய சமயப்பாகுபாடுகளையும் பகரும். ஏழாம் தந்திரம் அகவுணர்ச்சி வழியாக அமையும் யோகப்பயிற்சியில் ஆன்மாவை நிலைநிறுத்தும் இடைநிலைகளாகிய ஆறு ஆதாரங்களையும், அவ்வாதாரங்களில் ஒளிரும் கடவுளின் கூத்துக்களையும், அவ்யோகப் பயிற்சியைக் கைப்பற்றுமிடத்து இன்றியமையாச் சீரொழுக்கங்களையும், தவாநுட்டானங்களையும், தற்போதத் தேய்

38. திருமந்திரம், 97.

வின் வரிசைகளையும், முற்றிலும் விளக்கிக் கூறுவது. அவ்வேழாம் தந்திரம் திவ்யாகமங்களினது யோக வகுப்பின் ஞானத்திரட்டெனப் பகர்வுறும் வீரமாஹேஸ்வரர்களின் "ஷட்ஸ்தல"க் கோட்பாட்டைத் தழுவும் வண்ணமும், அவ்வாகமங்களினது ஞானவகுப்பின் யோகத்திரட்டெனச் சொல்லத்தகும் பிரத்தியபிஞ்ஞ மாஹேஸ்வரர்களின் "பரமார்த்த" மென்னும் கடைப்பிடியைத் தழுவும் வண்ணமும் மிகத் தெளிவா யிருக்கின்றது. எட்டாம் தந்திரம் ஆகமாந்தத்தின் நுண்ணிய அகவுணர்ச்சி வழிக்கருவிகளாகிய பதினெட்டு அவத்தைகள் ஆறு அத்துவாக்கள் முதலியவற்றின் இலக்கணங்களையும், அவ்வுணர்ச்சி பெருகப் பெருகத் தழைக்கும் மெய்ப்பேறுகளின் பாகுபாடுகளையும், அப்பேறுகளைப் பெறும் தருணங்களில் நேரும் இடையூறுகளினின்று நீங்கியடையும் துறைகளையும் வெள்ளிடைமலைபோல் விளக்குகின்றது. ஒன்பதாம் தந்திரமாகிய இறுதித் தந்திரம் பஞ்சாக்கரத்தின் உட்பிரிவுகளையும், அவைகளின் மெய்ப்பொருள்களையும், அம் மெய்ப்பொருள்களை ஊன்றி இடைவிடாது நினையும் ஆன்மாவினது அகவுணர்ச்சி மேலீட்டினால் அவ்வான்மாவின் புந்தியிற் பொழியும் இறைவனது இன்னருட் பெருவெள்ளத்தின் தன்மைகளையும், அத் தன்மைகளைச் சார்ந்து அப் பேரின்ப வீட்டை அணுகும் அவ்வான்மாவுக்குப் புலப்படும் பற்பல காட்சிகளையும், அவ்வீட்டின் இறுதி இயக்கத்தையும் உரைத்து முடிப்பதாகும். ஆகவே, மேற்சொல்லிய ஒன்பது தந்திரங்களிலும் திருமூலர் ஆகமாந்தத்தின் உள்ளுணர்வு வழியை யூட்டும் "தசகாரிய"த்தினுள் (39) அடங்குவனவாகிய நுகர்ச்சிகள் அனைத்தினையும் கூறி முடிப்பதால்,

---

39. **தசகார்ய**மென்னும் பெயர்பெறும் அரிய பெரிய ஞானநூல் வடமொழியில் ஒன்று உளது. அஃது இன்னும் அச்சேறவில்லை. அது மிகத் தொன்மைபெற்றதென நாம் கொள்ளும் நிலையிலிருக்கின்றது.

வடமொழி நான்மறைகளி லோதியுள்ள இன்பப் பயனளிக்கும் பெருமாட்சியை அவர் ஓர் ஐயப்பாடுமின்றி விளங்க வைத்தாரெனக் கொள்ளற்பாலது (40).

இத்திருமந்திரத்தில் தொகுக்கப்படும் தந்திரம் ஒவ்வொன்றற்கும் அத்தியாயங்கள் அநேகம் உள. இவ்வத்தியாயங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விடயத்தை விளக்க அமைந்ததாயினும், அவ்விடய வரம்பு மீறாது அவ்வத்தியாயம் முடிவு பெறுதல் மிகவும் அரிது. காரணம் என்னையோவெனில், திருமூலர், துறையற்ற திருவருட் பெருஞ்சோதியை அகக்கண் கொண்டு கண்டு பேரின்பவீட்டு வெள்ளத்தில் மூழ்கியவராதலாலும், சாதன முறைகளிலும் சோதன நெறிகளிலும் இடையறுப் பயிற்சியினால் எள்ளளவேனும் குழப்புமின்றி உழந்து முப் பதார்த்தங்களின் இயற்கைகளை நனவு கனவு துயில் என்னும் மூன்று நிலைகளிலும் ஒருங்கே உற்று நோக்கி உணர்ந்தவராதலாலும், மெய்யுணர்வு மேலீட்டினால் பொய்யுணர்வின் வெறுமையினின்றும் அகன்றவராதலாலும், அவர் தாம் பகரப்புகும் ஒவ்வோர் அத்தியாய விடயத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உரைக்கவேண்டி வெள்ளெனச் சுருக்கமாய்க் கூறி முடிப்பதுமன்றி, அவ் விடயத்தின் இறுதிப்பயனையும், அவ் விடயத்தைச் சார்ந்து ஒழுகும் ஏனைய விடயங்களின் தொகுதியையும் பயனையும் சொல்லாமல் விடுவதில்லை. இக் காரணம் பற்றியே, திருமந்திரத்தைப்

40. நம் நூலாசிரியரான திருமூலர் வானசாத்திரத்தின் நுண்ணிய விடயங்களை, பதஞ்சலியார் தம்முடைய **யோகசூத்திரத்தில்** விளம்பியபடி, உள்ளுணர்வு மேலீட்டினால் கண்டுகொண்டவராதலால் அவ்விடயங்களின் மெய்ப்பொருளையும், அவ்விடயங்களைச் சார்ந்து நிற்கும் சமயக்கொள்கைகள் சமயமரபுகள் என்றிவற்றின் மெய்ப்பொருளையும், சிற்சிலவிடத்து, திருமந்திரப் பாசுரங்கள் வாயிலாக வெளியிடாது வெளியிடுகின்றனர். இதை அறிஞர் நோக்குக.

படிக்க முயல்வோர்க்கு எவ்வெவ்விடத்தும் எவ்வெவ் விடயங்களும் அமைந்து விளங்குவனபோலும் தோன்றும், விளக்கமின்றிக் குழம்புவனபோலும் தோன்றும். இத்தன்மைய ஏக்கத்தை மாற்றற்பொருட்டே அத்தியாயங்கள் யாவும் தலைக்குறிப்பு வாய்ந்து விளங்குகின்றன. அத் தலைக்குறிப்பினால் திருமூலர் சொல்வான் புகும் அத்தியாயங்களின் நோக்கம் நன்கு விளங்குமாதலால், ஊக்கத்தோடும் அன்போடும் திருமந்திரத்தைக் கற்றுணருமாறு முயல்வோனுக்கு விடயத்தின் வரம்பு கடக்கும் இறுதிப்பயன் முதலியவற்றின் விளக்கத்தினாலாவது, அவ்விடயத்தைச் சார்ந்த ஏனைய சில்லறை விடயங்களின் வெளிப்பாட்டினாலாவது, ஒருகாலும் அயர்வு நேரிடாது.

ஆகமாந்தம் என்னப்பட்ட சிவாத்துவித சித்தாந்தச் செம்பொன்னின் வரலாற்றையும், உரிமையையும், கோட்பாட்டையும், திருமந்திரத்தேனின் ஏனைய நுண்ணிய சுவைகளின் உட்பெருமைகளையும் உண்மைகளையும் அணிவகுத்துரைத்தல் எமக்கு உவப்பேயாயினும், சிறிது தாழ்த்து மற்றோர் தருணத்து மிக விரிவாய் எழுத விருக்கின்றேமாதலால், யாம் இம்மட்டுடன் ஈண்டு நிறுத்திக்கொள்ளலானேம்.

வேதாரண்யம்: 29-9-1911. ☞ வை. வே. இரமணசாஸ்திரி.

## குறிப்பு.

—o—

இத்தகைய அரும் பெருஞ் சிறப்புவாய்ந்த இந்நூலை நம் தமிழ்நாட்டினர்க்கு எளிதி லுபயோகமாகும்பொருட்டுக் குறிப்புரையுடன் வெளியிட்டுதவிய திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை யாதீன மகாவித்துவான், யாழ்ப்பாணத்து வடகோவை ஸ்ரீமத். சபாபதிநாவலரவர்கள் மாணக்கர் மாவை ஸ்ரீ வே. விசுவநாதபிள்ளையவர்களுக்கு நம் தமிழ் நாட்டினர் நன்றிபாராட்டுதல் அவசியமன்றோ? சர்வதத்துவப் பொருள்களையும் தன்னுட்கொண்டு நிரம்பித் ததும்பும் இவ்வரியநூலை வாங்கி வாசித்துணர்தலே நம் தமிழ்நாட்டினர் இதனை வெளியிட்டவர்க்குக் காட்டுஞ் சிறந்த நன்றியறிதலாகும்.

☞ வை. வே. இரமணசாஸ்திரி.

———

# பாயிரமும், தந்திர அட்டவணையும்.

உ

# திருமந்திரத்தின்

# அதிகார அட்டவணை.



## திருமந்திரத்தின் அதிகார அட்டவணை முற்றிற்று.

---

☞ இவ் வட்டவணையில் உள்ளடங்கி வரும் வரிகள் அதிகார உட்பிரிவுகளாம்.

சௌகரியத்தை நோக்கி ஒரேவிதமாக முடியும் அதிகாரப்பெயர்களும் உட்பிரிவுப் பெயர்களும், ஒன்ருகத் தொகுக்கப்பட்டுள்ளன. தடிப்பெழுத்தில் இருப்பவை, அவை பின் வருமெனச் சுட்டும். உதாரணம் '**வேடம்**' என்பது முதலானவற்ருல் காண்க.

---

சிவமயம்.

# திருமூல நாயனார்

அருளிச்செய்த

# திருமந்திரமூவாயிரம்.

## * பாயிரம்.

### விநாயகர் காப்பு.

அவதாரணிகை.

ஆன்றோர் வழக்கமாறாது இடையூறு நீக்கும் இறைவனை நாயனார் காப்பமைக்கின்றார்:—

ஐந்து கரத்தனை † யானை ‡ முகத்தனை
யிந்து விளம்பிறை || போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

(பதவுரை.) ஐந்துகரத்தனை = ஐந்து திருக்கரங்களையுடையவரை, ஆனை முகத்தனை = யானைமுகத்தை யுடையவரை, இந்து இளம் பிறைபோலும் எயிற்றனை = (அம்முகத்தின்கண்) சந்திரனது இளம் பிறையை (மூன்றாம்பிறையை) ஒத்துத் துலங்குகின்ற ஒற்றைக் கொம்பினையுடையவரை, நந்திமகன்றனை = பரசிவமூர்த்தியின் மூத்த குமாரரை, ஞானக்கொழுந்தினை = ஞானத்தினது கொழுந்துபோல் விளங்குந் திருமேனியை யுடையவரை (விநாயகக்கடவுளினது), அடி புந்தியில் வைத்து = திருவடிகளை (எனது) சித்தத்திற் குடியாகவைத்து, போற்றுகின்றேன் = துதிக்கின்றேன். ஏ-அசை.

(பொழிப்புரை.) ஐந்து திருக்கரங்களையும், யானைமுகத்தையும், அம்முகத்தின்கண் சந்திரனது மூன்றாம்பிறையை யொத்துத் துலங்குகின்ற ஒற்றைக் கொம்பினையுமுடையவரும்; பரசிவமூர்த்தியின் மூத்த குமாரரும்; ஞானத்தினது கொழுந்துபோல விளங்கும் திருமேனியை யுடையவருமாகிய விநாயகக்கடவுளினது திருவடிகளை, எனது சித்தத்தில் குடியாகவைத்துத் துதிக்கின்றேன்.

(விசேஷவுரை.) நாயனார் ஈசனருளால் யோகத்தி னிலை பெற்றுச் சிவதாதான்மிய முற்றவராதலின், அவர்க்குப் பிராபஞ்சிக இடையூறு சிறிதுமுண்டாகா தென்ப துண்மையாயினும், ஏனையர்க்

* பொதுச்சிறப்பெனப் பகுத்துரையாது பாயிரம் என்றது— இதனுள் அவ்விருபாயிரப் பொருளும் அடங்கியிருத்தலின்.

† அந்திநிறத்தனை (செவ்வானவொளியுடையவனை) என்றும் பாடம். ‡ மோனை நோக்கி ஆனை எனப் பிரியும். || இந்தினிளம் பிறை என்றும் பாடம்.

குபதேசிக்கும் பரமாசிரியர் நன்னூலியற்றும் வழி நான்முகத்து மங்கல மமைக்கவென விதிமுகத்தாற் கூறியதைத் தம் அநுட்டானத்தானே அடியவர் தெரிந்து நல்வழிப்பட் டெய்யுமாறு இக்காப்புச் செய்யு ளமைத்தாரென்க.

ஆயின், இம்மங்கலம் இம்மஹா புருடனிடம் பயன்பட்டிலதே; பயனில் கருமத்தைச் செய்யற்கவென விலக்கிய வேதவாக்கியத் திற்குச் சாமானிய ரிலக்காக வேண்டியிருக்க, நாயனார் சிவா னந்தானுபவ முதிர்ச்சியெய்திய தமது காலத்தை இச்செய்யுட் குப யோகித்தது அவலமேயாம்; அன்றியும், வருடமொருகால் பகிர்முகப் பட்ட அஞ்ஞான்றே தமது ஒருவருடத்து யோகானுபவத்தின் பயனை யொருசெய்யுள் கூறினாரெனத் தொன்றுதொட்டுப் புராணப் பிர மாண முழங்கிவர, உலகத்தா ருய்யும்வண்ணம் பகிர்முகப்பட்ட அக்காலத்தையும் தம்பாற் பயன்பயவா தொழித்தாரென்பது நாய னார் பெருமைக்குக் குறைவேயாம்; முதற்செய்யுளே ஆன்மோபகார மற்றதாயின், பின்னரெழுந்த பெருநூலும் அறிஞரேற்க விடமின்றே யாமெனின், இவை யறியாமையினிகழ்ந்த ஆசங்கையென்க. யாங்ஙன மெனின், உலகத்தார் நன்னூலியற்று நல்வழியி விடையூறு சிறிதும் போாது எடுத்த கரும மினிது முடிதற்பொருட்டு அவர்கள் செய்யத் தக்கதிஃதென்னும் உபதேச சொரூபமாக நிற்றலின், இது பயனில் கூற்றாமெனவாதித்தலே பயனில் கூற்றாமென்க. "உலக உபகாரமே ஞானிகள் விவகாரம்" என்ற மூதறிஞர் கொள்கையை நிலைபெறுவித்துப் பயன்பெற்று நிற்பதிஃதென் றுணர்க.

இக் கருத்தானன்றே மறையவர் குலத்து மாதவப்பயனாய் அவதரித்த கௌணியர் திலகமாய காழிப்பிரானார் காயத் திரிப் பிரணவப் பிரதமாட்சரத்தைத் தமது திவ்ய † சூக்தி யின் ருெடக்கத்தின் மங்கலமாக அமைத்தருளினார். பிள்ளையார் காயத்திரியுபதேச காலத்தில் பிரமசரியம் பெற்றவுடன் "गणानां त्वा" (கணநாம் த்வா) என்ற மந்திரத்தால் ஸமஸ்காரம் பெறு மாபினராதலால், அவ் விநாயகரின் காப்பாகக் காயத்திரிப் பிரதமாட் சரத்தையும், "सदाशिवों" (ஸதாசிவோம்) என்பதாதி மந்திரங்களிற் குறித்தவாறு பிரணவப்பொருளாகிய பரசிவத்தின் காப்பாகப்பிரண வப் பிரதமாட்சரத்தையுமிட்டு ஸ்மரித்துக் காப்புச் செய்தருளினர். அவ்வாறே நாயனாரும், நான்முகத்தில் விநாயகரையும், பின்பு பர சிவத்தையும் காப்பாக வமைத்துத் துதித்தாரென்க. அன்றியும், தமது யோகநிலையில் ஆறாதாரங்களிலு மெழுந்தருளியிருந்த ஈசன் திருமேனிகளை முறைபிறழாது கண்டு உபாசித்தவராதலால், ஆறு தாரங்களுள் முதலாதாரமாகிய மூலாதாரத்தி லெழுந்தருளிய கஜா நநனையும், ஆதாரமாறுங் கடந்த பிரமரந்திரத்தின்மேல் துவாதசாந் தத் தலத்திலெழுந்தருளிய பரமானந்தத்தாண்டவ மூர்த்தியையுந் துதித்தாரென்க.

'ஐந்துகரத்தனை' என்றது ஐந்தாவது கரமெனப்படுந் துதிக் கை பிரணவாகாரமாதலால் அதனைச் சிறப்பித்தற்கே; அன்றியும்,

† தேவாரம் க-ம் திருமுறை, க-வது பதிகம், க-வது பாசுரம்.

தேவீ பஞ்சப் பிரணவங்களில் முதன்மைபெற்ற மஹாஸாரஸ்வத
பீஜமாகிய ஐங்காரத்தை முன்னரமைத்துப் பின்னர் ஆகாச வாசக
மாகிய தகரத்தையும், பரசிவ வாசகமாகிய உகரத்தையும் அமைத்த
முறைபற்றிச் சகல சப்தமயப் பிரபஞ்சத்திற்கும் ஆதாரமாகிய சிதாம்
பரத்தின்கண் "आकाशशरीरं ब्रह्म" (ஆகாசசரீரம் ப்ரஹ்ம) என்று
வேதாந்தங் (உபநிஷத்துக்கள்) கூறியவாறு அதன் மயமாய், அதிற்
கருணையுந்தத் திருமேனிகொண்டருளிய பரசிவத்தினது திவ்ய
சொரூப விலக்கண மமைந்தது. சுபகரன், ஹிமகரன் என்பன
வற்றுள் அமைந்த கரனென்னுஞ் சொல்லுக்கு இயற்றுவோன்
என்பதே பொருளாதலால், அம்சாம்சிகளின் தாதான்மியம்பற்றி,
அம்புலி சூடிய வள்ளலாரது திருக்குமாரரிடத்து ஐந்து கரனெனப்
பஞ்சகிருத்தியப் பாராயணத் தன்மையாகிய தடத்த லட்சணமமைக்
கப்பட்ட தெனினுமாம். பஞ்சகிருத்தியபரனாகிய ஐந்துகரனைத்
தந்தையாகப்பெற்றவன் ஐந்து கரத்தானென அன்மொழித்தொகை
யாகக்கொண்டு கூறினுமாம்.

'ஆனைமுகத்தனை' என்றது, அன்பர் வழிபட்டுய்யுமாறு மூலா
தாரத் திரிகோண மகா சக்கரத்தி லெழுந்தருளிய அருட்டிரு
மேனியை.

'இந்து விளம்பிறை போலு மெயிற்றனை' என்றது, இரு
கோடுள்ளனவாய ஏனைய யானைகளினின்றும் வேறுபிரித்தற்கே;
அன்றியும், இந்து மஹாசக்தி சொரூபமாதலால் முதலிற்
குறிக்கப்பட்ட ஈசனருட்சக்தி யீண்டு விளக்கப்பட்டதென்க; இளம்
பிறை என்றது, "ज्ञानचन्द्रकलाचूडम्" (ஞான சந்த்ர கலாசூடம்)
என்று புராணங் கூறியவாறு சுத்தசிவ தத்துவத்தைக் குறித்து,
அடியில் அர்த்தசந்திர தத்துவப் பிரதிநிதியாம் எயிறுவரை விநாய
கரி னொருமை குறிக்கப்பட்டது. உபநிஷத்து, புராணங்களில்
"चन्द्रार्धकृतशेखरम्" (சந்த்ரார்த்த க்ருதசேகரம்) என்று பிரயோகிக்
கப்பட்டிருப்பதால், முதற்பிறைமுதல் எட்டாம் பிறைவரை அர்த்த
சந்திரனென்னும் பெயர் பெறப்படுதல் கருதி, ஈண்டு இளம்பிறை
என்றதை மூன்றும்பிறையெனக்கூறினுமமென்க. வெண்மையும் வளை
வுங் கருதி இளம்பிறை யுபமானங் கூறப்பட்டது; இந்து காம ராஜ
பீஜத்தின் குறியாதலின், தேவீ பஞ்சப் பிரணவத்து ளிரண்டாம்
பிரணவமாகிய ஜகத்காரண காமராஜ மஹாபீஜப் பிரதிநிதியாய் நின்
றது. தேவீ சந்திர சொரூபமென்பது "चन्द्रां प्रभास्वां" (சந்த்ராம் ப்ர
பாஸ்யாம்) என்ற ஸ்ரீ சூக்தமந்திரத்தாற் காண்க. அன்றியும், இந்து
இளம்பிறையென்று உவமை கூறியது, கரிய திருமேனியின்கண்
வெண்மை யொன்றாய் நிற்றல் பற்றி யென்க. யானையினத்துக் கிரு
கோடுடைமை யியல்பாயினும் இவ்வியானைக்கு ஒரு கோடுடைமை
யே சிறப்பாமென்க.

'ஞானக்கொழுந்தினை' என்றது, அவர் திருமேனி சுத்தசைதன்ய
மயமென்று குறித்தற்கு. அது மூலாதாரத்தின்கண் யோகிகளின்
பாவனாரூபமா யமைதலாலென்க.

'புந்தியில் வைத்தடி போற்றுகின்றேன்' என்றது, மங்கல
வாழ்த்தாம்.

---

## க-வது பரசிவப்ரபாவம்.

1. போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் குந்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குட்டென் றிசைக்கொரு வேந்தனுங்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே. (க)

2. ஒன்றவன் றானே யிரண்டவ னின்னரு
ணின்றனன் மூன்றினு ணான்குணர்ந் தானைந்து
வென்றன னாறுவி ரிந்தன னேழும்பர்ச்
சென்றவன் றானிருந் தானுணர்ந் தெட்டே. (உ)

3. ஒக்கநின் றானை யுலப்பிலி தேவர்க
ணக்கனென் றேத்திடு நாதனை நாடொறும்
பக்கநின் றாரறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. (ங)

4. அகலிடத் தார்மெய்யை யண்டத்து வித்தைப்
புகலிடத் தென்றனைப் போதவிட் டானைப்
பகலிடத் தும்பிர வும்பணிந் தேத்தி
யிகலிடத் தேயிரு ணீங்கிநின் றேனே. (ச)

---

1. நாற்றிசை = சகல விலகங்களும்; மேற்றிசை = உயர்ந்த அஷ்டதிக்குக்களும்.

2. ஒன்றவன்றானே=அவனே ஏகனாயிருப்பவன்; அவனின்னருள் இரண்டு=அவனது இனிய திருவருள் இரண்டு (அறக்கருணை மறக்கருணை); மூன்று=சாத்துவீக இராஜச தாமச குணங்கள் மூன்று; நான்கு=நான்கு வேதம்; ஐந்து=பஞ்சாவஸ்தை; ஆறு=ஆறத்துவா, விரித்தனன் என்றும் பாடம்; ஏழும்பர்ச் சென்றவன்=ஏழுலகத்துக்கு மப்பாற்பட்டவன்; எட்டு= எண்குணம்.

3. ஒக்க=கூட; உலப்பிலி=கெடுதலில்லாதவன்.

4. புகலிடம் = மோட்சம்; இகலிடத்து = மாறுபாடுடைய இவ்வுலகத்தின்கண்; இருள் = அவிச்சை; புகலிடத் தெம்மெய்யை என்றும் பாடம்.

5. சிவனொடொக் குந்தெய்வந் தேடினு மில்லை
யவனொடொப் பாரிங் கியாவரு மில்லை
புவனங்க டந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே. (௫)

6. அவனை யொழிய வமரரு மில்லை
யவனன்றிச் செய்யு மருந்தவ மில்லை
யவனன்றி மூவரா லாவதொன் றில்லை
யவனன்றி யூர்புகு மாறறி யேனே. (௬)

7. முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
றன்னையொப் பாயொன்று மில்லாத் தலைமகன்
றன்னையப் பாவெனி லப்பனு மாயுளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. (௭)

8. தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணிய
னாயினும் மீச னருளறி வாரில்லை
சேயினு நல்ல னணியனல் லன்பர்க்குத்
தாயினு நல்லனற் றாழ்சடை யோனே. (௮)

9. பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க விருந்தவன் பேர்நந்தி
யென்னாற் றொழப்படு மெம்மிறை மற்றவன்
றன்னாற் றொழப்படு வாரில்லை தானே. (௯)

10. தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே தடவரை தண்கட லாமே. (௧௦)

11. அயலும் புடையுமெம் மாதியை நோக்கி
னியலும் பெருந்தெய்வ மியாதுமொன் றில்லை
முயலு முயலில் முடிவுமற் றாங்கே
பெயலு மழைமுகிற் பேர்நந்தி தானே. (௧௧)

---

5. தவனம் = அக்கினி (செந்நிறம்); தவளம் என்றும் பாடம், தவளம்=இளம்பிறை (பண்பாகுபெயர்)

7. முன்னை=பழமை (ஆக); போதகம்=இதயதாமரை.

8. சேயினுநல்லன்=(மனமாதிகளுக்கு) எட்டாதவனாயினு நன்மையைச் செய்கின்றவன்; அணியன்=சமீபித்திருப்பவன்.

10. பஞ்சபூதாதி யெண்வகைப் பொருள்களாகிய பிரபஞ்சந்தானேயாய் நிற்கின்றவனென்பது கருத்து; தையல் = மேகம், அல்லது உமாதேவியா ரெனினுமாம்.

11. முயல்=முயற்சி; முயலின் முயலும் என்றும் பாடம்.

12. கண்ணுத லானொரு காதலி னிற்கவு
மெண்ணிலி தேவ ரிறந்தா ரெனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களு
மண்ண லிவனென் றறியகில் லாரே. (கஉ)

13. மண்ணளந் தான்மல ரோன் முதற் றேவர்க
ளெண்ணளந் தின்ன நினைக்கிலா ரீசனை
விண்ணளந் தான்றன்னை மேலளந் தாரில்லை.
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே. (கங)

14. கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணனெம் மாயன்
கடந்துநின் றானவர்க் கப்புற மீசன்
கடந்துநின் றானெங்குங் கண்டுநின் றானே. (கச)

15. ஆதியு மாயர னாயுட லுண்ணின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தானருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையு
நீதியு மாய்நித்த மாகிநின் றானே. (கரு)

16. கோதுகு லாவிய கொன்றைக் குழற்சடை
மாதுகு லாவிய வாணுதற் பாகனை
யாதுகு லாவி யமரருந் தேவருங்
கோதுகு லாவிக் குணம்பயில் வாரே. (கசு)

17. காய மிரண்டுங் கலந்து கொதிக்கினு
மாயங்கத் தூரி யதுமிகு மவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினு
மீச னுறவுக் கெதிரில்லை தானே. (கஎ)

---

12. காதலின்=அன்புடன்; காதலன் என்றும் பாடம், காதலன்=தலைவன்; அண்ணல்=கடவுள்.

13. எண் அளந்து=மனத்தாலளவிட்டு; விண்=இதயாகாசம்.

15. ஆதியுமாய்=(சர்வ) காரணமுமாய்; வேதி=இதயகமலபீடம்; ஆர்ந்திருந்தான்=வியாபித்திருந்தனன்.

16. கோது = நரம்பு; குழல்=சுருட்டிக் கட்டுதல்; குழை என்றும் பாடம்; குழை=வில்வம் இண்டை முதலியவற்றின் தளிர்; மாதுகுலாவிய=அழகமைந்த.

17. காயம் இரண்டு = மாயாமயசரீரம் ஞானானந்தசரீரம், காரிய காரணசரீரமெனினுமாம். தூலம், சூக்குமம்.

14 - கமலமலராதி. பிரமபதம்வரை கடந்துநின்றான். கடல்வண்ணன் வைகுந்தம்வரை கடந்துநின்றான். [illegible] யாவற்றையெல்லாம் கடந்து நின்றான். எல்லாத் தத்துவங்களையுங்கடந்து நின்றும் எங்கும் சாட்சியாய் நின்றவன்.

18. அதிபதி செய்து வளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
யதுபதி யாதரித் தாக்கம தாக்கி
னிதுபதி கொள்ளென்ற வெம்பெரு மானே. (கஅ)

19. இதுபதி யேலங் கமழ்பொழி லேழு
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவ நோக்கி
யதுபதி யாக வமருகின் றானே. (கக)

20. முடிவும் பிறப்பையு முன்னே படைத்த
வடிக ளுறையு மறநெறி நாடி
லிடியு முழக்கமு மீச ருருவங்
கடிமலர்க் குன்ற மலையது தானே. (உ0)

21 வானப் பெருங்கொண்டன் மாலயன் வானவ
ரூனப் பிறவி யொழிக்கு மொருவனைக்
கானக் களிறு கதறப்பி ளந்தவெங்
கோனைப் புகழுமின் கூடலு மாமே. (உக)

22. மனத்தி லெழுகின்ற மாயநன் னாட
னினைத்த தறிவ னெனிற்று நினைக்கில
ரெனக்கிறை யன்பில னென்ப ரிறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே. (உஉ)

23. வல்லவன் வன்னிக் கிறையிடை வாரண
நில்லென நிற்பித்த நீதியு ளீசனை
யில்லென வேண்டா மிறையவர் தம்முத
லல்லும் பகலு மருளுகின் றானே. (உங)

18. அளகை நகரை என்றும் பாடம்; நிறைதவம்=முற்றுப்பெற்ற தவம்; யதுபதி=யாதவகுலநாயகனான சந்திரன்.

19. ஏலம்=வாசனை; முதுபதி=இகோடு; விதுபதி=சந்திரன்.

20. முன்னே= தலைநாளில்; அறநெறி = வேதாகம மார்க்கம்; கடி=வாசனை; மலர்க்குன்றம்=மலர்களையுடைய குன்றம்; மலையது=பெருமையுடையது.

21. கூடலுமாம்=சிவசாயுஜ்யம் பெறுதலுண்டாம்.

22. மாயநன்னாடன் = நல்ல மாயாமயப் பிரபஞ்சமுடையவன்; பிழைக்க=முத்திபெற்றுய்ய; பேணி நின்றான்=விருப்பங் கொண் டிருக்கின்றனன்.

23. வன்னிக்கிறை=அக்கினிதேவனை; வாரண இடை = சமுத்திரத்தினுள்ளே ; நில்லென நிற்பித்து = நிற்கக்கடவை எனவிறுவித்த; வல்லவனை=விசித்திர சக்தியுடையவனை.

24. போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமி னென்றுஞ் சிவனடிக்கே செல்வ
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே. (உச)

25. பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளான
னிறப்பிலி யாவர்க்கு மின்ப மருளுந்
துறப்பிலி தன்னைத் தொழுமின் றொழுதான்
மறப்பிலி மாயா விருத்தமு மாமே. (உரு)

26. தொடர்ந்துநின் றானைத் தொழுமின் றொழுதாற்
படர்ந்துநின் றான்பரி பாரக முற்றுங்
கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
யுடந்திருந் தானடிப் புண்ணிய மாமே. (உசா)

27. சந்தி யெனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமி லீச னருணமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படுமவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே. (உஎ)

28. இணங்கிநின் றானெங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானு
முணங்கி நின்றானம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை யாமே. (உஅ)

29. காணநில் லாயடி யேற்குற வாருளர்
நாணநில் லேனுன்னை நான்றமு விக்கொளக்
கோண னில்லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி யமர்ந்துநின் றானே. (உகூ)

---

24. ஆற்றியது=தேடப்பட்டது; ~~புனிதன் றனை என்றும் பாடம்.~~

25. பிஞ்ஞகன் = தலையணி அலங்காரமுடையவன்; மாயா விருத்தம்=மாயைக்கு மறுதலையாகிய ஞானம்; மாயமறுக்கலுமாமே யென்றும் பாடம்.

26. படர்ந்து நின்றான்=வியாபித்திருப்பவன்.

27. சந்தி = அந்திவானம்; வணங்கப்படுமவர்=வணங்கப் பெறுபவர்.

28. பிணங்கிநின்றான்=பிரபஞ்சத்துக்குமாறுயுள்ளவன்; உணங்கி நின்றான் = பிரபஞ்சத்துள் வியாபித்திருப்பவன்; அமராபதி=சுவர்க்கம்.

29. ஆணியனாகி=(பதிக்கப்பட்ட) ஆணிபோலுறுதியுள்ளவனாகி.

30. வானின் றழைக்கு மழைபோ லிறைவனுந்
தானின் றழைக்குங்கொல் லென்று தயங்குவா
ரானின் றழைக்கு மதுபோலென் னந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே. (௩௦)

31. மண்ணகத் தானொக்கும் வானகத் தானொக்கும்
விண்ணகத் தானொக்கும் வேதகத் தானொக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே. (௩௧)

32. தேவர் பிரானம் பிரான்றிசை பத்தையு
மேவு பிரான்விரி நீருல கேழையுந்
தாவு பிரான்றன்மை தானறி வாரில்லை
பாவு பிரானருள் பாடலு மாமே. (௩௨)

33. பதிபல வாவது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்று மெய்ம்மை யுணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரு
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே. (௩௩)

34. சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்
வேந்த னமரர்க் கருளிய மெய்ந்நெறி
யார்ந்த சுடரன்ன வாயிர நாமமும்
போந்து மிருந்தும் புகழுகின் றேனே. (௩௪)

35. ஆற்றுகி லாவழி யாகு மிறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடின்
மேற்றிசை யுங்கிழக் குந்திசை யெட்டொடு
மாற்றுவ னப்படி யாட்டவு மாமே. (௩௫)

---

30. வானின்றழைக்கும் = வானத்திருந்தொலிக்கும்; ஞானங் கருதியே = ஞானமடைதலை நோக்கியே; ஞாலங்கரியே என்றும் பாடம். ஞாலங்கரி - நேர்ந்தோர் சாட்சி. ஞாலம் - 

31. கண்ணகத்தே நின்று = அறிவினிடத்தகலாமலிருந்து; காதலித்தேன் = விரும்பினேன்.

32. தாவு = கடந்த; பாவு = வியாபித்த. பாடல் - சொல்லுதல்.

33. பதிபலவாமது என்றும் பாடம்; விதி = விதிக்கப்பட்ட கன்மங்கள் (ஆகுபெயர்); ஒன்றும் = சிறிதும்.

34. சாந்துகமழுங் கவரி என்றும் பாடம்; கவரி = உமாதேவி; வேந்தன் = சிவபிரான்.

35. ஆற்றகிலாவழி = (பிறர்) படைக்காத சன்மார்க்கத்து; அப்படி யாட்டவுமாம் = (தான் கருதிய) அவ்வாறு நடத்தலுமாம்; அப்படிமாடமுமாமே என்றும் பாடம்; மாடம் - மாளிகை. ஆற்றுவன் - செய்வான்.

36. அப்பனை நந்தியை யாரா வமுதினை
யொப்பிலி வள்ளலை யூழி முதல்வனை
யெப்பரி சாயினு மேத்துமி னேத்தினு
லப்பரி சீச னருள்பெற லாமே. (௩௬)

37. நானுநின் றேத்துவ னுடொறு நந்தியைத்
தானுநின் றழலொக்குஞ்செம் மேனியன்
வானினின் றார்மதி போலுட லுள்ளுவந்
தானினின் றங்கே யுயிர்க்கின்ற வாறே. (௩௭)

38. பிதற்றொழி யேன்பெரி யானரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாவுரு வானைப்
பிதற்றொழி யேனெங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவ னானே. (௩௮)

39. வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை யங்கே திளைக்கின்ற தேவனை
யேத்தியு மெம்பெரு மானென் றிறைஞ்சியு
மாத்தஞ்செய் தீச னருள்பெற லாமே. (௩௯)

40. குறைந்தடைந் தீசன் குரைகழ னாடி
நிறைந்தடை செம்பொனி னேரொளி யொக்கு
மறைஞ்சடஞ் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடஞ் செய்வான் புகுந்துநின் றானே. (௪0)

41. சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல் லார்க்குற்
பனஞ்செய்த வாணுதற் பாகனு மங்கே
யினஞ்செய்த மான்போ லிணங்கிநின் றானே. (௪௧)

---

36. ஊழிமுதல்வன்=சங்காரகர்த்தன்; பரிசு=வகை.

37. ஆர்மதி = கலைக ணிறைந்த சந்திரன்; உயிர்க்கின்றவாறு= (ஞானத்தை) அருளுமார்க்கம்.

39. தீர்த்தனை=நிர்மலனை, தீத்தனென்றும் பாடம்; தீத்தன்—தீயுருவன்; ஆத்தம்=நட்பு,

40. மறைஞ்சு அடம் = மறைந்து அக்கிரமம்; புறஞ்சடம் (சடம் புறம்) = சரீரத்தை யன்னியம் (ஆக); செய்வான் = செய்ய.

41. புனஞ்செய்த=திருத்தப்பட்ட; உற்பனம்=பிரபஞ்சோற்பத்தி; இனஞ்செய்த = தன்னினமாக வியற்றிய; மான்போல்= (பார்வை மிருகமென்னும்) மான்போன்று; இணங்கி=கூடி.

42. போயரன் றன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னன்முடி செய்தது வேநல்கு
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந்தொன் றுந் தானே. (சஉ)

43. அரனடி சொல்லி யரற்றி யழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளு
முரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே. (சங)

44. போற்றியென் பாரம ரர்புனி தன்னடி
போற்றியென் பாரசு ரர்புனி தன்னடி
போற்றியென் பார்மனி தர்புனி தன்னடி
போற்றியென் னன்புட் பொலியவைத் தேனே. (சச)

45. விதிவழி யல்லதில் வேலை யுலகம்
விதிவழி யின்பம் விருத்தமு மில்லை
துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னாமே. (சரு)

46. அந்திவண் ணாவர னேசிவ னேயென்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேயென்று
வந்திவண் ணன்னெனன் னகம்புகுந் தானே. (சசு)

47. மனையு ளிருந்தவர் மாதவ ரொப்பர்
நினைவு ளிருந்தவர் நேசத்து ணிற்பர்
பனையு ளிருந்த பருந்தது போல
நினையா தவர்க்கில்லை நின்னின்பந் தானே. (சஎ)

48. அடியார் பரவு மமரர் பிரானை
முடியார் வணங்கு முதல்வனை முன்னிப்
படியா ரருளும் பரம்பர னெந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றேனே. (சஅ)

42. மாயகம்=மாயாமயப் பிரபஞ்சம்.
43. நிரனடி=சிறப்புற்ற திருவடி.
45. பதிவழி=மோட்சமார்க்கம்.
46. முந்திவண்ணா=முதலிற்கொண்ட வுருவனே.
47. மனை=தேகம்; நினைவு=இதயாகாசம்.
48. படியார்=ஞானபூமியி லிருப்பவர்க்கு.

49. பரைபசு பாசத்து நாதனை யுள்ளி
யுரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கட னீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே. (சகூ)

50. சூடுவ னெஞ்சிடை வைப்பன்பி ரானென்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்
றாடுவ னாடி யமரர்பி ரானென்று
நாடுவ னானின் றறிவது தானே. (ருo)

---

உ-வது திரிமூர்த்திகளின் ஜேஷ்ட கனிஷ்ட முறைமை.

51. அளவி லிளமையு மந்தமு மீறு
மளவியல் காலமு நாலு முணரிற்
றளர்விலன் சங்கரன் றன்னடி யார்சொ
லளவில் பெருமைய ரியயற் காமே. (க)

52. ஆதிப் பிரானு மணிமணி வண்ணனு
மாதிக் கமலத் தலர்மிசை யாயனுஞ் அயன்-நீட்டல்.
சோதிக்கின் மூன்றுந் தொடர்ச்சியி லொன்றெனர்
பேதித் துலகம் பிணங்குகின் றாரே. (உ)

53. ஈச னிருக்கு மிருவினைக் கப்புறம்
பீச முலகிற் பெருந்தெய்வ மானது
வீச னதுவிது வென்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறிந் தார்களே. (௩)

54. சிவமுதன் மூவரோ டைவர் சிறந்த
வவைமுத லாறிரண் டொன்றொடொன் றாகு
மவைமுதல் விந்துவு நாதமு மோங்கச்
சவைமுதற் சங்கரன் றன்பெயர் தானே. (ச)

---

49. பரை=சிற்சத்தி, நரை என்றும் பாடம்; நரை - அறியாமை.

51. அந்தமும்=அழகும்; யரியயர்க்காமே என்றும் பாடம்.

52. அலர்மிசை ஆயன்=மலர்மே லாகியவன் (பிரமன்); தொடர்ச்சி=தோன்றிய சம்பந்தம்.

53. தூசு=தூய்மை; தூறு=மூலம்.

54. சிவமுதன் மூவரோடைவர் = சதாசிவன், மஹேசன், உருத்திரனென்னு மூவருடன், விஷ்ணு, பிரமனென்னு மிருவரையுங் கூட்ட ஐவர்; சவை=சபை.

55. பயனறிந் தவ்வழி யெண்ணு மளவி
லயனொடு மானமக் கன்னிய மில்லை
நயனங்கண் மூன்றுடை நந்தி தமராம்
வயன்பெறு வீரவ் வானவ ராலே. (ரு)

56. ஓலக்கஞ் சூழ்ந்த வுலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்றொழ
மாலுக்கு மாதிப் பிரமற்கு மொப்புநீ
ஞாலத்து நம்மடி நல்கிடென் றானே. (சு)

57. வானவ ரென்று மனித ரிவரென்றுந்
தேனமர் கொன்றைச் சிவனரு ளல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வ மற்றில்லை
யூனமர்ந் தோரை யுணர்வது தானே. (எ)

58. சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
வாதிக்கு ளாவ தறிகில ராதர்க
ணீதிக்க ணீச னெடுமா லயனென்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே. (அ)

59. பரத்திலே யொன்றாயுள் ளாய்ப்புற மாகி
வரத்தினுண் மாயவ னாயய னாகித்
தரத்தினுட் டான்பல தன்மைய னாகிக்
கரத்தினு ணின்று கழிவுசெய் தானே. (கூ)

60. தானொரு கூறு சதாசிவ னெம்மிறை
வானொரு கூறு மருவியு மங்குளான்
கோனொரு கூறுட லுண்ணின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே. (கo)

---

55. வயன் (வயணம் என்பதன் விகாரம்)=வகை.

56. ஓலக்கம்=கூட்டம் (ஆக); உலப்பிலி=சிவபெருமான் (அது).

58. பேரொளி மூன்று=பெரிய ஒளிவடிவான பிரமன், விண்டு, உருத்திரன் என்னுமூவர்; ஐந்து=(இம்மூவரோடு)மகேசன், சதாசிவன் சேர்க்க ஐவர்; ஆதர்=மூடர்கள்; நீதி=முறைமை.

59. வரத்து = தோற்றம்; தரம்=முறை; காத்து = மறைவு.

60. வான்=சிதாகாயமாகிய பராசத்தி; கோன்=பதி; சலமயன்=தண்ணிய சொரூபன்.

### ௩-வது வேதச்சிறப்பு.

61. வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தி
னோதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே. (க)

62. வேத முரைத்தானும் வேதிய னாகிலன்
வேத முரைத்தானும் வேதா விளங்கிட
வேத முரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேத முரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே. (உ)

63. இருக்குரு வாமெழில் வேதத்தி னுள்ளே
யுருக்குணர் வாயுணர் வேதத்து ளோங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய்நின்ற கண்ணனு மாமே. (௩)

64. திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடு
மொருநெறி யொன்றாக வேதாந்த மோதுமே. (ச)

65. ஆறங்க மாய்வரு மாமறை யோதியைக்
கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை
வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே. (ரு)

66. பாட்டு மொலியும் பரக்குங் கணிகைய
ராட்டு மறாத வவனியின் மாட்டாதார்
வேட்டு விருப்பார் விரதமில் லாதவ
ரீட்டு மிடஞ்சென் றிகலலுற் றாரே. (சு)

### ௪-வது ஆகமச் சிறப்பு.

67. அஞ்சன மேனி யரிவையோர் பாகத்த
னஞ்சொ டிருபத்து மூன்றுள வாகம
மஞ்சலி கூப்பி யறுபத் தறுவரு
மஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே. (க)

---

63. இருக்கு=மந்திரம்; வெருக்கு=வெதுப்புதல்; கரு=மூலம்.

64. குருநெறி = குருவா லுணரப்படுஞ் சன்மார்க்கம்; ஒன்றாக = அத்துவித மார்க்கமாக.

66. மாட்டாதார்=சக்தியற்றவர்; வேட்டு=வேள்விகளைச்செய்து.

68. அண்ண லருளா லருளுஞ் சிவாகம
மெண்ணி லிருபத்தெண் கோடி நூ றாயிரம்
விண்ணவ ரீசன் விழுப்ப முரைத்தன
ரெண்ணிநின் றப்பொரு ளேத்துவ னானே. (உ)

69. பண்டித ராவர் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறி வாரென்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையு
மண்ட முதலா னரன்சொன்ன வாறே. (ந)

70. அண்ண லருளா லருளுந்திவ் யாகமம்
விண்ணி லமரர் தமக்கும் விளங்கரி
தெண்ணி லெழுபது கோடிநூ றாயிர
மெண்ணிலு நீர்மே லெழுத்தது வாமே. (ச)

71. பரனாய்ப் பராபரங் காட்டி யுலகிற்
றரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்
தரனு யமரர்க ளர்ச்சிக்கு நந்தி
யுரனாகி யாகம மோங்கிநின் றானே. (டு)

72. சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவ
முவமா மகேச ருருத்திரர் தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றாம் பெற்ற
நவவா கமமெங்க ணந்திபெற் றானே. (சு)

73. பெற்றநல் லாகமங் காரணங் காமிக
முற்றநல் வீர முயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே. (எ)

74. அண்ண லருளா லருளுஞ் சிவாகம
மெண்ணிலி கோடி தொகுத்திடு மாயினு
மண்ண லறைந்த வறிவறி யாவிடி
னெண்ணிலி கோடியு நீர்மே லெழுத்தே. (அ)

---

68. இருபத்தெண்கோடி நூறாயிரம் என்பது கிரந்த சங்கியை.

70. திவ்யாகமம்=தெய்வீக ஆகமம்.

71. தரன் = இரட்சகன் ; உரனாகி=பெருமையுளனாகி; உரன் - மொழியீற்றுப் போலி.

72. உவம் = இரண்டு; நவ ஆகமம் = ஒன்பது ஆகமம், அவற்றின் விரி மேல்வருஞ் செய்யுளாற்பெறப்படுமாகமங்களாம்.

75. மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
வாரிய முந்தமி ழும்முட னேசொலிக்
காரிகை யார்க்குக் கருணைசெய் தானே. (கூ)

76. அவிழ்க்கின்ற வாறு மதுகட்டு மாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந்
தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டு
முணர்த்து மவனை யுணரலு மாமே. (க0)

டு-வது குருபாரம்பரியம்.

77. நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடி
னந்திக ணால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரம
ரென்றிவ ரென்னோ டெண்மரு மாமே. (க)

78. நந்தி யருளாலே நாதனும் பேர்பெற்றோ
நந்தி யருளாலே மூலனை நாடினோ
நந்தி யருளாவ தென்செயு நாட்டினி
னந்தி வழிகாட்ட நானிருந் தேனே. (உ)

79. மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்க
னிந்திரன் சோமன் பிரம னுருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்சமலையனோ
டிந்த வெழுவரு மென்வழி யாமே. (ங)

---

75. மாரி=கார் கூதிர் ஆகிய மழைக்காலம்; கோடை=இளவேனில் முதுவேனில் ஆகிய கோடைக்காலம்; வார்=நீண்ட; பனி= முன்பனி பின்பனி ஆகிய பனிக்காலம்; தூங்கநின்று = (மேற்சொல்லிய ஆறு பருவங்களும்) லயப்பட்டு நின்று; இளைக்கின்ற காலம்=வறட்சி யடைந்திருக்கும் காலம்; ஆரியமும் தமிழும்=வடமொழி தமிழ்மொழிகளிலுள்ள பதிஞானங்களை (இவற்றிற்கு வித்தாயுள்ள பிரணவத்தை); உடனே சொல்லி=ஏக காலத்திலே உபதேசித்து; காரிகையார்=பராசத்தியார். சங்காரத்திற்குப்பின், மறு சிருஷ்டி தொடங்குமுன் சிவபிரான் சத்திரூபமாயுள்ள தமது அருமைத் தேவியார்க்குப் பிரணவத்தை உபதேசித்தருளினாரென்பது கருத்து.

76. சிமிட்டலைப்பட்டு=கண்ணிமைத்த லொழிந்து.

77. பரமேசுவரர் மாணாக்கர் :— சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர், சிவயோகமாமுனிவர், பதஞ்சலியார், வியாக்கிரபாதர், திருமூலர் என்னும் எண்மராவர்.

79. கந்து உரு = அடித்த முளைபோல் அசைவற்றிருந்த உருவம்; காலாங்கி = காலாக்கினி. நாயனார் மாணாக்கர்:—மாலாங்க முனிவர், இந்திர முனிவர், சோமமுனிவர், பிரமமுனிவர், உருத்திர முனிவர், காலாக்கினி முனிவர், கஞ்சமலய முனிவர் என்னும் எழுவராவர்.

76. சிமிட்டலைப்பட்டு - பந்தப்பட்டு; பந்தம் - ஆணவம். "சிமிட்டலைப்பட்டுயிர் சேர்கின்ற வாறும்" என்னும்பாடஞ் சிறந்தது.

80. நால்வரு நாலு திசைக்கொன்று நாதர்க
ளல்வரு நாலு விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரு நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரா னூர்களே. (௪)

81. மொழிந்தது மூவர்க்கு நால்வர்க்கு மீச
னொழிந்த பெருமை யிறப்பும் பிறப்புஞ்
செழுஞ்சுடர் முன்னொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக் காட்டகி லானே. (௫)

82. எழுந்துநீர் பெய்யினு மெட்டுத் திசையுஞ்
செழுந்தண் ணியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
யழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. (௬)

---

**௬-வது நாயனூர் தம் வரலாறு கூறல்.**

83. நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு
புந்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை யரனடி நாடொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. (க)

84. செப்புஞ் சிவாகம மென்னுமப் பேர்பெற்று
மப்படி நல்கு மருணந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றிற் றனிக்கூத்துக் கண்டபி
னொப்பிலி கோடி யுகமிருந் தேனே. (உ)

85. இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியா
மருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே. (௩)

---

81. முன்னொளி=முதன்மையான ஒளி; மூன்றொளி யென்றும் பாடம்; மூன்றொளி=சோமசூரியாக்கினி; கழிந்த=மிகுந்த.

82. இயமங்கள்=இயமமாதி அட்டாங்க யோகம்.

84. ஒப்பிலெழுகோடி யுகம் என்றும் பாடம்.

85. புவனாபதி=புவனேசுவரி.

3

86. சதாசிவந் தத்துவ முத்தமிழ் வேத
மிதாசனி யாதிருந் தேனின்ற கால
மிதாசனி யாதிருந் தேன்மன நீங்கி
யுதாசனி யாதுட னேயுணர்ந் தோமால். (சா)

87. மாலாங்க னேயிங் கியான்வந்த காரண
நீலாங்க மேனிய ணேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. (ரு)

88. நேரிழை யாவா ளிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே. (சா)

89. சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியி னீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவ னாமங்க ளோதியே. (எ)

90. இருந்தேனிக் காயத்தி லெண்ணிலி கோடி
யிருந்தே னிராப்பக லற்ற விடத்தே
யிருந்தே னிமையவ ரேத்தும் பதத்தே
யிருந்தே னென்னந்தி யிணையடிக் கீழே. (அ)

91. பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயறவஞ் செய்கிலி
ரென்னைநன் றாக விறைவன் படைத்தனன்
றன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே. (கூ)

92. ஞானத் தலைவிதன் னந்தி நகர்புக்கு
வூனமி லொன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டியென் னாதனை யர்ச்சித்து
நானு மிருந்தேனற் போதியின் கீழே. (கo)

---

86. மிதம்=மரணம்; அசனி=இடி; இதாசனி=சுகாசனத்தை யுடையவன்.

87. நீலாங்கம் = கரிய அழகிய; மூலாங்கம் = மூலகாரணம்; சீலம்=இயல்பு; அங்கம்=வேதாங்கம்.

89. போதி=அரசமரம்.

91. பின்னை=இனிமேல்; முன்னை=பூர்வ ஜன்மங்களில்.

93. செல்கின்ற வாற்றிற் சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவ ரசுரர் நரர்தம்பா
லொல்கின்ற வான்வழி யூடுவந் தேனே. (கக)

94. சித்தத்தி னுள்ளே சிறக்கின்ற நூல்களி
னுத்தம மாகவே யோதிய வேதத்தி
ஞெத்த வுடலையு முண்ணின்ற வுற்பத்தி
யத்த னெனக்கிங் கருளா லளித்ததே. (கஉ)

95. நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடி
னூன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. (கங)

96. பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுண் மந்திர மாலை
யுறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே. (கச)

97. அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தா
னெங்குமி காமைவைத் தானுல கேழையுந்
தங்கிமி காமைவைத் தான்றமிழ்ச் சாத்திரம்
பொங்கிமி காமைவைத் தான்பொரு டானுமே (கரு)

98. அடிமுடி காண்பா ரயன்மா லிருவர்
படிகண்டி லர்மீண்டும் பார்மிசைக் கூடி
யடிகண்டி லேனென் றச்சுதன் சொல்ல
முடிகண்ட னென்றயன் பொய்மொழிந் தானே. (கசு)

---

93. ஆற்றின்—சன்மார்க்கத்தினாலே; ஆறறி என்றும் பாடம்; சிவம் உனி—சிவத்தைச் சிந்தித்து; சிவமுனி என்று கொண்டு கூறுதலுமுண்டு; ஒல்கின்ற—தளர்தற்குரிய.

94. உடல்—சொல்; உற்பத்தி — சொல்லினின்று வெளியாம் பொருள்; தேகம் சீவன் இவற்றினுற்பத்தி யெனினுமாம்.

95. பொருள் சொல்குவன் என்றும் பாடம்; ஊன்—இதயம்; (ஆகு பெயர்).

96. உறைப்பு—உறுதி.

97. அங்கிமிகாமை வைத்தான்—அக்கினி மஹாபூதத்தை வியாபியாம லிருக்கும்படி அடக்கி வைத்தான்.

98. படிகண்டிலர்—கருதிய வண்ணம் பார்த்திலர்; பிரம விஷ்ணுக்களும் தேடிக் காண்டற்கரிய அடிமுடிகள் நாயனாருக்குக் கிடைத்தன வென்னும் கருத்து, இச்செய்யுளிலும் இதன் பிற்செய்யுளிலும் போதருகின்றது. படி - வடிவம், ஆகு பெயராய் அடி முடிகளை யுணர்த்தும் - படிவம் படி யெனக் குறைந்து நின்றது.

99. சங்கற்பமாத்திரை யான் முதலோ ஸ்ரீசிவம் சரா சரமென்க.



99. பெற்றமு மானு மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத்
தற்றமு நல்கி யடியேன் சிரத்தினி
னற்பத மும்மளித் தானெங்க ணந்தியே. (கஎ)

100. ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
யாயத்தை யச்சிவன் றன்னை யகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே. (கஅ)

101. விளக்கிப் பரமாகு மெய்ஞ்ஞானச் சோதி
யளப்பில் பெருமைய னானந்த நந்தி
துளக்கறு மானந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பிற் கயிலை வழியில்வந் தேனே (கக)

102. நந்தி யருளாலே மூலனை நாடிப்பின்
னந்தி யருளாற் சதாசிவ னாயினே
னந்தி யருளான்மெய்ஞ் ஞானத்து ணண்ணினே
னந்தி யருளாலே நானிருந் தேனே. (உ0)

103. இருக்கி லிருக்கு மெண்ணிலி கோடி
யருக்கின்ற மூலத்து ளங்கே யிருக்கு
மருக்கனுஞ் சோமனு மாரழல் வீச
வுருக்கி யுரோம மொளிவிடுந் தானே. (உக)

---

99. அற்றம்=ஒழிவு; அவசரமெனினுமாம்.

100. ஞேயம்=அறியப்படுபொருள்; ஞானம்=அறிவு; ஞாதுரு= அறிபவன்; மாயம்=சுத்தாசுத்தம் அசுத்தமென்கிற மாயைகள்; மாமாயை=சுத்தமாயை; பரை ஆயம்=பராசத்தியின் அம்சங்களாகிற சத்திபேதங்கள்; (வீயம் பீஜமென்னும் வடமொழித் திரிபு)=சர்வகாரண பரசிவம்.

101. சொற்போந்து=உபதேசத்தின்படி ஒழுகி.

102. மூலன்=மூலன் என்ற பெயருள்ள ஆயனது சரீரம்; முதல்வனெனினுமாம்.

103. இருக்கு=வேதமந்திரம்; அருக்கின்ற (அருகுகின்ற என்பதன் திரிபு)=பொருந்தியுள்ள; மூலம்=மூலாதாரம்; மந்திரமூலமாகிய பிரணவ மெனினுமாம்; உரோமம் ஒளிவிடும்=மயிர்க்கால்தோறு மொளிவீசும்; உரோமமென்பதற்கு உரோமத்தின் இலட்சம் பங்கில் ஒரு பங்களவுள்ள சீவசொரூபம் என்பதும் ஒன்று.

104. பிதற்றுகின் றேனென்றும் பேர்நந்தி தன்னை
யியற்றுவ னெஞ்சத் திரவும் பகலு
முயற்றுவ னேங்கொளி வண்ணனெம் மானை
யியற்றிகழ் சோதி யிறைவனு மாமே. (உஉ)

---

### எ-வது குருமட வரலாறு.

105. வந்த மடமேழு மன்னுஞ்சன் மார்க்கத்தின்
முந்தி யுதிக்கின்ற மூலன் மடவரை
தந்திர மொன்பது சார்வு மூவாயிரஞ்
சுந்தர வாகமச் சொன்மொழிந் தானே. (க)

106. கலந்தருள் காலாங்கர் தம்பால கோரர்
நலந்தரு மாளிகைத் தேவர் நாதாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே. (உ)

---

### அ-வது திருமந்திரத் தொகைச் சிறப்பு.

107. மூலனுரை செய்த மூவாயிரந் தமிழ்
ஞால மறியவே நந்தி யருளது
காலை யெழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே. (க)

108. வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவாயி ரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவாயி ரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே. (உ)

---

104. இயல் திகழ்=சுயமாகப் பிரகாசிக்கிற.

106. குருமடத் தலைவர் எழுவராவார் :—காலாங்கர், அகோரர், மாளிகைத்தேவர், நாதாந்தர், பரமானந்தர், போகதேவர், மூலர் என்பவர்களாம்; நிராமயத்தோர்=பந்தத் துன்ப மற்றவர்.

108. முத்திமுடிவு=முத்தியை யளிக்கும் வேதாந்த சித்தாந்தம்.

கூ-வது அவையடக்கம்.

109. ஆரறி வாரெங்க ளண்ணல் பெருமையை
யாரறி வாரிந்த வகலமு நிகளமும்
பேரறி யாத பெருஞ்சுட ரொன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே. (க)

110. பாடவல் லார்நெறி பாட வறிகிலே
னாடவல் லார்நெறி யாட வறிகிலே
னாடவல் லார்நெறி நாட வறிகிலேன்
றேடவல் லார்நெறி தேடகில் லேனே. (உ)

111. மன்னிய வாய்மொழி யாலு மதித்தவ
ரின்னிசை யுள்ளே யெழுகின்ற வீசனைப்
பின்னை யுலகம் படைத்த பிரமனு
முன்னு மவனை யுணரலு மாமே. (ங)

112. தத்துவ ஞான முரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரு
மொத்துடன் வேறு யிருந்து துதிசெய்யும்
பத்திமை யாணிப் பயனறி யாரே. (ச)

பாயிர முற்றும்.

---

109. பேர் என்றது ரூபத்துக்கும் உபலக்கணமாதலால் நாமரூப மென்பது கொள்க.

110. நாடவறிகிலேன், ஞானமறிகிலேனென்றும் பாடம்.

111. மதித்தவர்=தியானித்தவர்; இன்னிசை=இனியநாதம்; பிரமனும் முன்னும்=நான்முகனும் அவனுக்கு முதல்வனாகிய விண்டுவும்; அல்லது பிரமனும் உன்னும் எனக்கொண்டு, பிரமனும் கருதுகின்ற எனினுமாம்; உணரலுமாம் ஏ, ஈற் றேகார மெதிர்மறை வினைப்பொருளதாதலால் உணரலாகா தென்பது பொருள்.

112. தாழ்வரை=கயிலையங்கிரியி னடிவாரம்.

## முதற்றந்திரம்.

### க-வது உபதேசம்.

113. விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
வுண்ணின் றுருக்கியொ ரொப்பிலா வானந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே. (க)

114. களிம்பறுத் தானெங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தானருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே. (உ)

115. பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம னாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே. (ங)

116. வேயி னெழுங்கனல் போலேயிம் மேனியுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோனந்தி
தாயினு மும்மல மாற்றித் தயாவென்னுந்
தோயம தாயெழுஞ் சூரிய னாமே. (ச)

117. சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ்சூழ் பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோ
லாரியன் றோற்றமு னற்றம லங்களே. (ரு)

118. மலங்களைந் தாமென மாற்றி யருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினு ணந்தியே
நலங்களைந் தானுண் ணயந்தா னறிந்தே. (சு)

---

113. தலைக்காவல் = அநாதியிலேயே யமைந்த காவல்; ஆனந்தக் கண்=ஞானக்கண்; களிம்பு=மலம்.

114. அருட்கண் விழிப்பித்து=ஞானக்கண்ணைத் திறக்கச்செய்து.

116. வேயினெழுங்கனல்=மூங்கிலுள்மறைந்திருந்துவெளிப்படுந்தீ.

117. ஆரியன்=சிவன்.

118. தலம்=தத்துவம்.

**119.** அறிவைம் புலனுட னேநான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
வறிவறி வுள்ளே யழிந்தது போல
குறியறி விப்பான் குருபர னாமே. (எ)

**120.** ஆமேவு பானீர் பிரிக்கின்ற வன்னம்போற்
றாமே தனிமன்றிற் றன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களு ளுற்றன
தாமே பிறப்பெரி சேர்ந்த வித்தாமே. (அ)

1671, 1678, 256) **121.** வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச் 127
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற்று
வொத்துப் புலனுயி ரொன்றா யுடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யர்களே. (கூ)

**122.** சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துட்புக்குத் தன்னொளி தாய
தவயோகஞ் சாராத வன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே. (கம)

**123.** அளித்தா னுலகெங்குந் தானான வுண்மை
யளித்தா னமர ரறியா வுலக
மளித்தான் றிருமன்று ளாடுந் திருத்தா
ளளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே. (கக)

**124.** வெளியின் வெளிபோய் விரவிய வாறு
மொளியி னொளிபோ யொடுங்கிய வாறு
மளியி னளிபோ யடங்கிய வாறுந்
தெளியு மவரே சிவசித்தர் தாமே. (கஉ)

---

119. நான்றதாகி=கூடினதாய்; குறி=வழி.

120. பாலைப் பிரிக்கின்ற என்றும் பாடம்; தீமேவு=தீமை பொருந்திய; தாமேழ் பிறப்பெரி என்றும் பாடம்; எரிசேர்ந்தவித்து=வறுத்த விதை.

121. உடம்பொடு செத்திட்டிருப்பர்= சரீரத்தோடு கூடியிருக்கும் போதே பிரபஞ்சங் கடந்து நிற்பர்.

122. தன்னொளி தாயது = சிவவொளியொடு கலந்தது ; அவயோகம்=ஜனன மரண துன்ப முறுதல்.

121 உடம்பொடு செத்திட்டிருப்பர் – உடம்போடு கூடி யிருக்கும் [illegible]
[illegible]

125. சித்தர் சிவலோக மிங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முட்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர் தமுத்தி முதன்முப்பத் தாறே. (கங)

126. முப்பது மாறும் படிமுத்தி யேணியா
யொப்பிலா வானந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப வரிய சிவங்கண்டு தான்றெளிந்
தப்பரி சாக வமர்ந்திருந் தாரே. (கச)

127. இருந்தார் சிவமாகி யெங்குந் தாமாகி 121, 1671, 1678
யிருந்தார் சிவன்செய லியாவையு நோக்கி 256
யிருந்தார்முக் காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தா ரிழவுவந் தெய்திய சோம்பே. (கரு)

128. சோம்ப ரிருப்பது சுத்தவெ ளியிலே
சோம்பர் கிடப்பது சுத்தவெ ளியிலே
சோம்ப ருணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர்கண் டாரச் சுருதிக்கட் டேக்கமே. (கசு)

129. தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே. (கஎ)

130. எவ்வாறு காண்பா னறிவு தனக்கெல்லை
யவ்வா றருட்செய்வ னாதியரன் றானு
மொவ்வாத மன்று ளுமைகாண வாடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம். (கஅ)

131. மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமா
யாணிப்பொன் மன்றினு ளாடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே. (ககூ)

---

125. சத்தமும் சத்தமுடிவும்=நாதமும் நாதாந்தமும்; முப்பத்தாறு=உண்ணிலைக் கருவிகளாகிய தத்துவ முப்பத்தாறு.

126. படிமுத்தி=பதமுத்தி.

127. இழவு=ஒழிவு; சோம்பு=செயலற்றிருத்தல்.

129. தூங்கி=பிரபஞ்ச வுணர்ச்சியற்றிருந்து. தூங்கல்–ஞானம் செலுத்தல். "ஞானச் செழுந்துயி லொழிந்து." என்பதுமது. "தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவதெக் காலமோ" என்பதுமது.

133 "ஈருமை யுளாமைபோ லுள்நடக்கி யாற்றின் ஈருமையு மெமாய் புணர்த்து"



**132.** பெற்று ருலகிற் பிரியாப் பெருநெறி
பெற்று ருலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றாரம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்று ருலகுடன் பேசாப் பெருமையே. (உ0)

**133.** பெருமை சிறுமை யறிந்தெம் பிரான்போ
லருமை யெளிமை யறிந்தறி வாரா
ரொருமை யுளாமைபோ லுள்ளைந் தடக்கி
யிருமையுங் கேட்டிருந் தார்புரை யற்றே. (உக)

**134.** புரையற்ற பாலினு ணெய்கலந் தாற்போற்
றிரையற்ற சிந்தையு ளாரிய னென்செப்பு
முரையற் றுணர்வோ ருடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே. (உஉ)

**135.** சத்த முதலைந்துந் தன்வழித் தான்சாரிற்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரு
மத்த மிதுகுறித் தாண்டுகொ ளப்பிலே. (உங)

**136.** அப்பினிற் கூர்மை யாதித்தன் வெம்மையா
லுப்பெனப் பேர்பெற் றுருச்செய்த தவ்வுரு
வப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிச் சீவன் சிவத்து ளடங்குமே. (உச)

**137.** அடங்கு பேரண்டத் தணுவண்டஞ் சென்றங்
கிடங்கொண்ட தில்லை யிதுவன்றி வேறுண்டோ
கடந்தொறு நின்ற வுயிர்கரை காணிற்
றிடம்பெற நின்றான் றிருவடி தானே. (உரு)

**138.** திருவடி யேசிவ மாவது தேரிற்
றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற்
றிருவடி யேசெல் கதியது செப்பிற்
றிருவடியே தஞ்ச முட்டெளி வார்க்கே. (உசா)

---

132. பிரியாப்பெருநெறி=இறவாத பெருமையுள்ள மார்க்கம்; உலகுடன் பேசாப் பெருமை = உலகத்தாருக்கு எடுத்துச் சொல்லமுடியாத மகிமை.

133. இருமையுங் கெட்டிருந்தாரே என்றும் பாடம்.

135. சத்தமுதலைந்து=சத்தம், பரிசம், ரசம், ரூபம், கந்தம்; அத்தம்=பொருள்.

136. கூர்மை=உப்புத்தன்மை.

137. கடம்=சரீரம்.

139. தெளிவு குருவின் றிருமேனி காண்டல்
றெளிவு குருவின் றிருநாமஞ் செப்பல்
றெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல்
றெளிவு குருவுருச் சிந்தித்த றானே. (உஎ)

140. தானே புலனைந்துந் தன்வச மாயிடுந்
தானே புலனைந்துந் தன்வசம் போயிடுந்
தானே புலனைந்துந் தன்னின் மடைமாறுந்
தானே தனித்தெம்பி ரான்றனைச் சந்தித்தே. (உஅ)

141. சந்திப்பது நந்தி தன்றிருத் தாளிணை
சிந்திப்பது நந்தி செய்ய திருமேனி
வந்திப்பது நந்தி நாமமென் வாய்மையாற்
புந்திக்கு ணிற்பது நந்திபொற் போதமே. (உகூ)

142. போதந் தருமெங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினார்
நாத னடத்தா னயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந் தார்விண்ணே. ()

---

## உ-வது யாக்கை நிலையாமை.

143. மண்ணொன்று கண்டீ ரிருவினைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணவபோ
லெண்ணின்ற மாந்த ரிறக்கின்ற வாறே. (க)

144. பண்டம் பெய்க்கூரை பழகி விழுதலா பழகி—சேர்ந்து
லுண்டவப் பெண்டிரு மக்களும் பின்செலார்
கொண்ட விரதமு ஞானமு மல்லது
மண்டி யவருடன் வழிநட வாதே. (உ)

145. ஊரெலாங் கூடி யொலிக்க வழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினின் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. (ங)

---

141. பொற்பாதமே என்றும் பாடம்.
142. போதம்=ஞானம்; விண்=மோட்சம். சிவலோகம்.
143. தீயினைச்சேர்ந்தது=நெருப்பினாற் சுடப்பட்டது.
144. உண்ட=சுகபோகங்களை யனுபவித்த; மண்டி=சேர்ந்து.
145. சூரை=ஓர்வகை முட்செடி.

146. காலு மிரண்டு முகட்டல கொன்றுள
பாலுட் பருங்கழி முப்பத்தி ரண்டுள
மேலுள கூரை பிரியும் பிரிந்தபின்
போலுயிர் மீளப் புகவறி யாதே. (௪)

147. சீக்கை விளைந்தது செய்வினை மூட்டற்ற
வாக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைப் பலியிட்டுக் கைகொட்டு மாறே. (௫)

148. அடப்பண்ணி வைத்தா ரடிசிலை யுண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டா
ரிடப்பக்க மேயிறை நொந்ததே யென்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே. (௬)

149. மன்றத்தே நம்பிக்கு மாட மெடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகைபெற் றேறினான்
மன்றத்தே நம்பிமுக் கோடி வழங்கினான்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் றானே. (௭)

150. வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி
நேசந் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
யாசந்தி மேல்வைத் தமைய வழுதிட்டுப்
பாசந்தி சுட்டுப் பலியட்டி னார்களே. (௮)

151. கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுண்ணு மைவரும் போயினார்
மையிட்ட கண்ணாளு மாடு மிருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே. (௯)

---

146. பாலுள்—பக்கங்களில்.

147. சீக்கை (கைவிகுதிபெற்ற தொழிற்பெயர்)—விலக்குதல்.

148. மந்தணம்—இரகசிய ஸ்தானம்; இறை—சிறிது; பக்கமே இறை (நோய்) நேர்ந்தது என்றும் பாடம்.

149. அத்தாவென்ன—அப்பாவென்று கூப்பிட.

150. வாசந்தி, திவாசம் என மாற்றுக; தீ என்பது குறுகிநின்றது; மந்திரமென்பது பொருள்; வாசம்—வசனம்; ஆசந்தி — பாடை; பாசம்—சுற்றம்; தி சுட்டு (தீ என்பது தி எனக் குறுகிநின்றது)—நெருப்பிட்டுக்கொளுத்தி.

151. ஐவர்—பஞ்ச ப்ராணன் அல்லது பஞ்சபூதம்.

152. பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
வொன்பது வாசலு மொக்க வடைத்தன
துன்புறு காலத் துரிசுவ ரமேன்மே
லன்புடை யார்க ளழுதகன் றார்களே. (கo)

153. நாட்டுக்கு நாயக னம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகையொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே. (கக)

154. முப்பது முப்பது முப்பத் தறுவருஞ்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபி
னெப்ப வணைவரு மோட்டெடுத் தாரே. (கஉ)

155. மதுவூர் குழலியு மாடு மனையு
மிதுவூ ரொழிய விமானம தேறிப்
பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி
யதுவூர் வாங்கியே வைத்தகன் றாரே. (கங)

156. வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்க
ளச்சக லாதென நாடு மரும்பொருள்
பிச்சது வாய்ப்பின் றொடர்வுறு மற்றவ
ரெச்சக லாநின் றிளைக்கின்ற வாறே. (கச)

157. ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரு மக்களு
மூர்த்துறை காலே யொழிவ ரொழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. (கரு)

---

152. பந்தல்=உடலின் மேற்போர்வை; பண்டாரம்=பிராணநிலை; காலத்துரிசு=காலமுடிவு.

153. நாடு=சரீரம் அல்லது தேகம்; காட்டுச்சிவிகை=பாடை.

154. முப்பது முப்பது முப்பத்தறுவரும்=தொண்ணூற்றாறு தத்துவங்களும் ; ஓட்டெடுத்தார்=ஓடிப்போயினார்கள்.

155. அது ஊர்=அந்தச்சுடுகாடாகிய ஊர்; வாங்கிவைத்து=இறக்கி வைத்து.

156. அச்சகலாதென=நிலைகெடா திருக்குமென்று ; பிச்சு (பிய்த்தென்பதன்போலி)=அபகரித்து ;எச்சு=மேன்மை.

157. ஊர்த்துறைகால் (ஊர்க்கால்துறை) = ஊரின் வாய்க்காற் றுறை.

158. வளத்திடை முற்றத்தோர் மானில முற்றுங்
குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தாலவை யோடென்று வைப்ப
ருடலுடைந் தாலிறைப் போதும் வையாரே. (கசு)

159. ஐந்து தலைப்பறி யாறு சடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலு மொன்பது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே. (கஎ)

160. அத்திப்பழமு மறைக்கீரை நல்வித்துங்
கொத்தி யுலைப்பெய்து கூழிட்டு வைத்தன
ரத்திப் பழத்தை யறைக்கீரை வித்துண்ணக்
கத்தி யெடுத்தவர் காடுபுக் காரே. (கஅ)

161. மேலும் முகடில்லை கீழும் வடிம்பில்லை
காலு மிரண்டு முகட்டல கொன்றுண்டு
வோலையான் மேய்ந்தவா யூடு வரிதமை
வேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளிகையே. ()

162. கூடங் கிடந்தது கோலங்க ளிங்கில்லை
யாடமி லயமு மற்ற தறுதலும்
பாடகின் றூர்சிலர் பண்ணி லழுதிட்டுத்
தேடியே தீயினிற் றீயவைத் தார்களே. (உ0)

---

158. முற்றம்=சந்நிதி அல்லது மகளிரது வயிறு; குளம்=தடாகம், கருப்பாசயம்; மண்=களிமண், சோணிதம்; குயவன்=குலாலன், பிரமன்.

159. பறி = மீன்படுக்குங் கருவி; சடை = மூலம் (காரணம்); சந்து=இடைவெளி; சார்வு=பொருத்து.

160. உலைப்பெய்து=உலையிலிட்டுச் சமைத்து; கூழ் இட்டு=சோறுடன் பரிகலத்திற்போட்டு; கத்தி=பல் (கத்தியென்பது பல்லுக்கு உவமவாகுபெயர்); கத்தி=ஆரவாரித்து எனினுமாம்; காடு=இடுகாடு; கொத்திக் குதறிக் கூட்டிலடைத்து, அத்திப்பழத்தி னமுத மறிந்தபின், கத்திக்கொண் டைவருங் காடுறைந்தாரே என்றும் பாடம்; அத்திப்பழம்=ஈண்டு அதன்பிஞ்சு; அத்திப்பழத்தை யறைக்கீரை வித்துண்ண=(புஷ்டிக்குரிய) அத்திப்பழத்தையும் அறைக்கீரையையும் வித்துக்களையுமுண்ண.

161. வடிம்பு=விளிம்பு (குறடு முதலியன); வரி=வரிச்சற்கழி; வேலையான்=தொழில்புரிவோன் (பிரமன்); தளி=கோயில் (தேகம்).

162. கூடம்=வீடு அல்லது (தேகம்); கோலம்=அலங்கரித்தல்; ஆடமிலயம்=நடனவிகற்பம்; பண்ணிலழுதிட்டு=ஒப்பாரி கூறியழுது.

163. முட்டை பிறந்தது முந்நூறு நாளினி
விட்டது தானிலே யேதேனு மேழைகாள்
பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்
கெட்ட தெழுபதிற் கேட்டறி யீரே. (உக)

164. இடிஞ்சி லிருக்க விளக்கெரி கொண்டான்
முடிஞ்ச தறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சிரு ளாவ தறியா வுலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே. (உஉ)

165. மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த
வுடலு முயிரு முருவந் தொழாம
லிடர்படர்ந் தேழா நரகிற் கிடப்பர்
குடர்படர் வெந்தமர் கூப்பிடு மாறே. (உங)

166. குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்
டிடையுமக் கால மிருந்து நடுவே
புடையு மனிதனுற் போகு மப்போதே
யடையு மிடம்வல மாருயி ராமே. (உச)

167. காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பாற்றுளி பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனவிக் கூட்டையே. (உரு)

---

163. முட்டை=மீன்முட்டைபோலும் கர்ப்பத்திற் பதியும் சரீரம்; இட்டது = தேடிவைத்த பொருள் ; பார்மணம் = உலக வாசனை; எழுபதிற் கேட்டறியீரே என்றும் பாடம்.

164. இடிஞ்சில்=அகல்; முடிஞ்சது, முடிந்ததென்பதன் போலி; முழங்குவர்=ஆரவாரிப்பர் ; விடிஞ்சிருளாவது = உதித்து மறைதலாகிய ஜனனமரணம்.

165. மாயன் = மாயையை உடைய சிவன்; குடர் = உதிரசம்பந்த முள்ள; படர்=பரந்த; வெந்தமர்=விருப்பமுள்ள உறவினர்; ஏழா நரகு=ஏழாகிய நரகம்; நரகேழாவன:—அள்ளல், ரௌரவம், கும்பீபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி யென்பனவாம்.

166. இடையும்=சுற்றித்திரியும்; உயிர்=பிராணவாயு; இடம் வலம் அடையும்=இடமும் வலமும் மாறிச்செல்லும்.

167. பாற்றுளி பெய்யில்=பால்துளியைத் தெளித்ததனுல்; ஊட்டுங் கூத்தன் = போஷிக்கின்ற நடனக்காரன்; ஆட்டுங் கூத்த னென்றும் பாடம். "நாத் தொதை தீக்கிலென்" எனப்படும்

## ௯-வது செல்வநிலையாமை.

168. அருளு மரசரு மாணையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந்
தெருளு முயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பிணையவன் மாதவ மன்றே. (க)

169. இயக்குறு திங்க ளிருட்பிழம் பொக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடிமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே. ()

170. தன்னது சாயை தனக்குத வாதுகண்
டென்னது மாடென் றிருப்பர்க ளேழைக
ளுன்னுயிர் போமுட லொக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொ ளீரே. (௩)

171. ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமுங்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடு
மோட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தவை கைவிட்ட வாறே. (௪)

172. தேற்றத் தெளிமின் றெளிந்தீர் கலங்கன்மி
னூற்றுப் பெருக்கிங் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறித்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குறிக்கலு மாமே. (௫)

173. மகிழ்கின்ற செல்வமு மாடுமுடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம்போ
லவிழ்கின்ற வாக்கைக்கோர் வீடுபேறாகச்
சிமிழொன் றில் வைத்தமை தேர்ந்தறி யாரே. (௬)

---

168. பிணையவன் மாதவங்கண்டே யென்றும் பாடம்.

169. துயக்கு=தளர்ச்சி.

170. சாயை=நிழல்; மாடு=செல்வம்; உன் உயிர் = கருதப்பட்ட சீவன்; கண்ணது=உம்மிடத்துள்ளது; ஒளி=சிவம்.

171. தேன்=தேனீ; இரதம்=தேன்.

173. மாடு=மாட்சிமை அல்லது மாடு முதலிய விலங்கினம்; செல் லுங்கமலம்போல் என்றும் பாடம்; கலம் = ஓடம்; சிமிழ்= கட்டு (முதனிலைத் தொழிற்பெயர்) அல்லது சிறு செப்பு.

174. வாழ்வு மனைவியு மக்க ளுடன்பிறந்
தாரு மளவே தமக்கென்ப ரொண்பொருண்
மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்
கூவுந் துணையொன்று கூறலு மாமே. (௭)

175. வேட்கை மிகுத்தது மெய்கொள்வா ரிங்கில்லை
பூட்டுந் தறியொன்று போம்வழி யொன்பது
நாட்டிய தாய்தமர் வந்து வணங்கிப்பின்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. (௮)

176. உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது
வடும்பரி சொன்றில்லை யண்ணலை யெண்ணும்
விடும்பரி சாய்நின்ற மெய்ந்நமன் றாதர்
சுடும்பரி சத்தையுஞ் சூழகி லாரே. (௯)

௪-வது இளமை நிலையாமை.

177. கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே. (௧)

178. ஆண்டு பலவுங் கழிந்தன வப்பனைப்
பூண்டு கொண்டாரும் புகுந்தறி வாரில்லை
நீண்டன காலங்க ளீண்டு கொடுக்கினுந்
தூண்டு விளக்கின் சுடரறி யாரே. (௨)

179. தேய்ந்தற் றொழிந்த விளமை கடைமுறை
யாய்ந்தற்ற பின்னை யரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
யோர்ந்துற்றுக் கொள்ளு முலாவுள்ள போதே. (௩)

174. அளவு=ஆயுளிறுதியளவு; விரிவுசெய்வார்=தருமத்தினால்பரவச் செய்வார்; ஒன்று=ஏகனாகியசிவன்; கூறல்=உபதேசித்தல்.

175. தறி=சுழுமுனை; போம்வழி=பிராணன் வெளிப்படு மார்க்கம்; நாட்டிய=சரீரத்தை யழியாமற் காப்பாற்றின.

176. அடும்பரிசு=வெல்லும் வகை.

177. விழி=ஞானக்கண்.

178. காலங்களீண்டு என்றும் பாடம்; நீண்டனகாலங்கள் என்பது பண்புத்தொகை.

179. அரிய என்பது பலவின் படர்க்கைக் குறிப்புவினைமுற்று; உலா=உலாவித்திரிதற்குரிய இளமை; கொள்ளுமுலாவுள்ள போதே என்றும் பாடம்.

180. விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போ
லரும்பொத்த மென்முலை யாயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயுமொத் தேனே. (௪)

181. பால னிளையன் விருத்த னெனநின்ற
காலங் கழிவன கண்டு மறிகிலார்
ஞாலங் கடந்தண்ட மூடறுத் தானடி
மேலுங் கிடந்து விரும்புவ னானே. (௫)

182. காலை யெழுந்தவர் நித்தலு நித்தலு
மாலை படுவதும் வாணாட் கழிவதுஞ்
சாலு மவ்வீசன் சலவிய னாகிலு
மேல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே. (௬)

183. பருவூசி யைந்துமோர் பையினுள் வாழும்
பருவூசி யைந்து பறக்கும் விருகம்
பருவூசி யைந்தும் பனித்தலைப் பட்டாற்
பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே. (௭)

184. கண்ணனுங் காய்கதி ரோனு முலகினை
யுண்ணின் றளக்கின்ற தொன்று மறிகிலார்
விண்ணுறு வாரையும் வினையுறு வாரையு
மெண்ணுறு முப்பதி லீர்ந்தொழிந் தாரே. (௮)

185. ஒன்றிய வீரெண் கலையு முடன்றன
நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள்
கன்றிய காலன் கருக்குழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. (௯)

---

180. முன்=இளமைப்பருவத்தில்; காஞ்சிரங்காய்=எட்டிக்காய்.

182. சாலும்=போதும்; சலம்=கோபம்; ஏல=தக்கபடி.

183. ஊசி=பொறி (தொழிலுவமவாகுபெயர்); விருகம்=காக்கை; பனித்தல்=சலனப்படல்; பை=பைபோலுஞ் சரீரம்.

184. கண்ணன்=திருமால்; வினையுறுவார்=யாகாதி கன்ம மியற்றுவோர்; முப்பதில்=இளமைக்குரிய முப்பது வயதில்.

185. ஈரெண்கலை=சந்திரகலை பதினாறு; உடன்றன=மாறுபட்டன; கன்றிய=வைரநெஞ்சுள்ள.

**186.** எய்திய நாளி லிளமை கழியாமை
யெய்திய நாளி லிசையினா லேத்துமி
னெய்திய நாளி லெறிவ தறியாம
லெய்திய நாளி லிருந்துகண் டேனே. (௧௦)

---

### ௫-வது உயிர் நிலையாமை.

**187.** தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பி
லிழைக்கின்ற தெல்லா மிறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி யெம்பெரு மானடி யேத்தா
ரழைக்கின்ற போதறி யாரவர் தாமே. (௧)

**188.** ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்த
தைவரு மச்செய்யைக் காத்து வருவர்க
ளைவர்க்கு நாயக னோலை வருதலா
லைவரு மச்செய்யைக் காவல்விட் டாரே. (௨)

**189.** மத்தளி யொன்றுள தாள மிரண்டுள
வத்துள்ளே வாழு மரசனு மங்குள
னத்துள்ளே வாழு மரசன் புறப்பட்டான்
மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. (௩)

**190.** வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கட மென்றே விரகறி யாதவர்
தாங்கவல் லாருயிர் தாமறி யாரே. (௪)

---

186. எய்திய நாளில்=வரையறுக்கப்பட்டுள்ள ஆயுளுள்; இசை= புகழ் அல்லது பண்; எறிவது=அழிப்பது.

187. இழைக்கின்ற=உண்டாக்கப்பட்ட; பிழைப்பு = தவறுதல்; அழைக்கின்றபோது=இயமன் கூப்பிடுகிற காலம்; அழைக்கின்றபோதறிவாரவர் என்றும் பாடம்.

188. ஐவர்=பஞ்ச ப்ராணன், ஐம்புலன் எனினுமாம்; செய்=வயல்; காத்து வருந்துவர் என்றும் பாடம்; நாயகன்=சங்கார கர்த்தாவான இயமன்.

189. மத்தளி=(மா+தளி, முதல் குறுகிநின்றது)=பெருமையுள்ள கோவில் (சரீரம்); ஒன்றுள, உளது என்பதின் ஈறு தொக்கது; தாளம் இரண்டு=உச்சுவாச நிச்சுவாசத்தொனிகள்; அரசன்=ஜீவன்; வாழு மமைச்சரு மைந்துளர் என்றும் பாடம்.

190. வேங்கடநாதனை=வேகு மியல்புள்ள சரீரத்துக் கிறைவனை; வேங்கடம்=எரிந்துகொண்டிருக்கும் சுடுகாடு.

191. சென்றுணர் வான்றிசை பத்துந் திவாகர
னன்றுணர் வாலளக் கின்ற தறிகிலர்
நின்றுண ராரிந் நிலத்தின் மனிதர்கள்
பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே. (௫)

192. மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை
பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரில்லை
கூறுங் கருமயிர் வெண்மயி ராவது
மீறும் பிறப்புமொ ராண்டெனு நீரே. (௬)

193. துடுப்பிடு பானைக்கு மொன்றே யரிசி
யடுப்பிடு மூன்றிற்கு மஞ்செரி கொள்ளி
யடுத்தெரி யாமற் கொடுமின் னரிசி
விடுத்தன நாட்களு மேற்சென் றனவே. (௭)

194. இன்புறு வண்டங் கினமலர் மேற்போ
யுண்பது வாச மதுபோ லுயிர்நிலை
யின்புற நாடி நினைக்கிலு மூன்றொளி
கண்புற நின்ற கருத்துணில் லானே. (௮)

195. ஆம்விதி நாடி யறஞ்செய்மி னந்நிலம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமி
னாம்விதி வேண்டு மதென்சொலின் மானிட
ராம்விதி பெற்ற வருமைவல் லார்க்கே. (௯)

---

191. அன்று=நாள்; பொன்று (முதனிலைத்தொழிற்பெயர்)=மரணம்; இல்=சம்சாரம்.

192. பட்டிகை=ஓடம் அல்லது பட்டாடை; நீர்=தன்மை.

193. துடுப்பு=சோறுகிளறுங்கருவி; அரிசி=மதியமிர்தம்; அடுப்பிடு மூன்று=சந்திர சூரியாக்கினி மண்டலங்கள்; அஞ்சு எரி கொள்ளி = பஞ்ச ப்ராணன்; விடுத்தன நாட்கள் = வரையறுத்தளிக்கப்பட்ட ஆயுணாள்; மேற்சென்றன = அவ்வரையறை கடந்து அதிகமாயின.

194. ஊன்றொளி=நிலைபெற்ற ஒளியான சீவன்; கண்புறம் (புறக்கண்)=பகிர்முகக்கண்.

195. ஆம்விதி=இல்லறத்திற் குரித்தாம் விதி; நன்னிலம்=முத்தியுலகம்.

196. அவ்வியம் பேசி யறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய ராகிச் சிறந்துண் ணும் போதொரு
தவ்விக்கொ டுண்மின் றலைப்பட்ட போதே. (௧௦)

௬-வது கொல்லாமை.

197. பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோ ரணுக்களைக் கொல்லாமை யொண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமு
முற்றாரு மாவி யமர்ந்திட முச்சியே. (௧)

198. கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லிடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடு மென்று நிறுத்துவர் தாமே. (௨)

௭-வது புலான் மறுத்தல்.

199. பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
யெல்லாருங் காண வியமன்றன் றாதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தின்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. (௧)

200. கொலையே களவுகட் காமம் பொய்கூறன்
மலைவான பாதக மாமவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையா மிவைஞான னந்தத் திருத்தலே. (௨)

௮-வது பிறன்மனை நயவாமை.

201. ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்சு பலாவின் கனியுண்ண மாட்டாம
லீச்சம் பழத்துக் கிடருற்ற வாறே (௧)

---

196. தவ்வி=கரண்டி.
197. அணு=உயிர்; உச்சி=நாய்.
198. இடு=எறி.
199. செல்=இடி அல்லது கறையான்.
200. பஞ்ச மகாபாதகங்களையு நீத்தோர்க்கு நரகத்துன்பமிலது, மோக்ஷ நித்தியாநந்தப்பேறே யுளது என்பது கருத்து.
201. ஆத்த=(மங்கலியம்) தரித்த; காத்த=(பிறனால்) காக்கப் பட்ட.

**202.** திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
யருத்தமென் றெண்ணி யறையிற் புதைத்துப்
பொருத்தமி லாத புளிமாங் கொம்பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே. (௨)

**203.** பொருள்கொண்ட கண்டனும் போதத்தை யாளு
மிருள்கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரு
மருள்கொண்ட மாதர் மயலுறு வார்கண்
மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே. (௩)

## ௯-வது மகளிரிழிவு.

**204.** இலைநல வாயினு மெட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே. (௧)

**205.** மனைபுகு வார்கண் மனைவியை நாடிற்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழு மன்பை
நனவது போலவு நாடவொண் ணாதே. (௨)

**206.** இயலுறும் வாழ்க்கை யிளம்பிடி மாதர்
புயலுறும் புல்லிற் புணர்ந்தவ ரேயினு
மயலுறும் வானவர் சார விருமென்பா
ரயலுறப் பேசி யகன்றொழிந் தாரே. (௩)

**207.** வையகத் தேமட வாரொடுங் கூடியென்
மெய்யகத் தோருளம் வைத்த விதியது
கையகத் தேகரும் பாலையின் சாறுகொண்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே. (௪)

---

202. காலற்றவாறு=பாதத்தையிழந்த விதம்போலாம்.

203. கண்டன்=அரசன்.

204. இலைநல ஆயினும்=இலை முதலியவற்றால் அழகினை யுடையன வானாலும்; நல, பலவின் குறிப்புவினைப்பெயர்; வெய்து= ~~கொடிது.~~ விரைவு. முற்று. ஆயினும்-ஆனாலும்.

206. இயல்=சாயல் அல்லது அழகு; புயல்=மேகம் பொழியும் மழை; ஏயினும்=வந்தாலும்.

207. மெய்யகத்தோர்=உண்மையுணர்ந்த மனமுள்ளோர்.

208. கோழை யொழுக்கங் குளமூடு பாசியி
லாழ நடுவா ரளப்புறு வார்களைத்
தாழத் தொடக்கித் தடுக்ககில் லாவிடிற்
பூழை நுழைந்தவர் போகின்ற வாறே. (ரு)

---

க0-வது நல்குரவு.

209. புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
யடையப்பட் டார்களு மன்பில ரானார்
கொடையில்லை கேளில்லை கொண்ட நட்பில்லை
நடையில்லை நாட்டி லியங்குகின் றார்கட்கே. (க)

210. பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்
றக்குழி தூர்க்கு மரும்பண்டந் தேடுவீ
ரெக்குழி தூர்த்து மிறைவனை யேத்துமி
னக்குழி தூரு மழுக்கற்ற போதே. (உ)

211. கற்குழி தூரக் கனகமுந் தேடுவ
ரக்குழி தூர்க்கை யாவர்க்கு மரிய
தக்குழி தூர்க்கு மறிவை யறிந்தபி
னக்குழி தூரு மழுக்கற்ற வாறே. (ங)

212. தொடர்ந்தெழுஞ் சுற்றம் வினையினுந் தீய
கடந்ததோ ராவி கழிவதன் முன்னே
யுடந்தொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே. (ச)

---

208. கோழை=விந்து; குளம்=கர்ப்பாசயம்; பாசி=அழுக்கு; அளப்புறுவார்=ஆராய்பவர்; தாழ=தடைபட; பூழை=புகும்வழி.

209. அடையப்பட்டார்கள்=சிநேகர், பந்துக்கள்; கோள்=கொடுக்கல் வாங்கல்;

210. பொய்க்குழி=வயிறு; தூர்ப்பான்=நிரப்பும்படி.

211. கற்குழிதூர என்றதில், கல் தூர்க்கமுடியாமை யுணர்த்தி நின்றது.

212. கடந்தது என்பது வினையெச்சப் பொருள் தந்து நின்றது; உடந்து என்பது உடன்று என்பதன் றிரிபு.

**213.** அறுத்தன வாறினு மானின மேவி
யறுத்தன ரைவரு மெண்ணிலி துன்ப
மொறுத்தன வல்வினை யொன்றல்ல வாழ்வை
வெறுத்தன னீசனை வேண்டிநின் றானே. (ரு)

---

### சக-வது அக்கினி காரியம்.

**214.** வசையில் விழுப்பொருள் வானு நிலனுந்
திசையுந் திசைபெறு தேவர்கு ழாமும்
விசையம் பெருகிய வேத முதலா
மசைவிலா வந்தண ராகுதி வேட்கிலே. (க)

**215.** ஆகுதி வேட்கு மருமறை யந்தணர்
போகதி நாடிப் புறங்குடித் துன்னுவர்
தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி
தாமறி வாலே தலைப்பட்ட வாறே. (உ)

**216.** அணைதுணை யந்தண ரங்கி யுளங்கி
யணைதுணை வைத்ததி னுட்பொரு ளான
விணைதுணை யாமத் தியங்கும் பொழுது
துணையணை யாயதோர் தூய்நெறி யாமே. (ங)

**217.** போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு
மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்குந்
தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்
வேதிரண் டாகி வெறிக்கின்ற வாறே. (ச)

---

213. ஆறினும்=அறுவகைச் சுவையிலும்; ஆறினம் என்றும் பாடம்; ஆனின்மேவி=பசுவினத்தை யொத்து; ஐவரும்=புலனைந்தும்; அறுத்தனர்=வருத்தினர்.

214. விழுப்பொருள்=தெய்வம்; அசைவு=சலனம்.

215. போகதி=செல்லுதற்குரிய பதவி; புறங்குடித் துன்னுவரென்றும் பாடம்; தலைப்பட்ட=அடைந்த.

216. அணை=பொருந்திய; அங்கியை=வைதிகாக்கினியை; உள் அங்கி=பிராணாக்கினி; அணைதுணை=அணைகிறவரை; யமம் என்னும் வடமொழி யாமமென்று நீண்டுநின்று அட்டாங்க யோகத்துக்கும் உபலக்கணமாயிற்று.

217. மாது=இலக்குமி; தாது இரண்டு=சுக்கில சோணிதமாகிய இருவகை வீரியம்; பறவைகள் = சீவவர்க்கங்கள்; வேதிரண்டு=ஆண்பெண் என்று பகுத்தறியப்படும் இருசரீரமாகிய மேடை.

**218.** நெய்கின் றெரியு நெடுஞ்சுட ரேசென்று
மைகின் றெரியும் வகையறி வார்கட்கு
மைகின் றவிழ்தரு மந்திர மாமென்றுஞ்
செய்கின்ற செல்வ மதியது வாமே. (௫)

**219.** பாழி யகலு மெரியுந் திரிபோலிட்
டூழி யகலு முறுவினை நோய்பல
வாழிசெய் தங்கி யுதிக்க வவைவிழும்
விழிசெய் தங்கி வினைசுடு மாமே. (௬)

**220.** பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த
வருஞ்செல்வந் தந்த தலைவனை நாடும்
வருஞ்செல்வத் தின்பம் வரவிருந் தெண்ணிப்
பருஞ்செல்வத் தாகுதி வேட்கின் றாரே. (௭)

**221.** ஒண்சுட ரானை யுலப்பிலி நாதனை
யொண் சுட ராகியென் னுள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோனுல கேழுங் கடந்தவத்
தண்சுட ரோமத் தலைவனு மாமே. (௮)

**222.** ஓமத்து ளங்கியி னுள்ளுள னெம்மிறை
யீமத்து ளங்கி யிரதங்கொள் வானுளன்
வேமத்து ளங்கி விளைவு வினைக்கடற்
கோமத்து ளங்கி குரைகட றானே. (௯)

---

218. மை=இருளுருவான மூலமலம்; அவிழ்தரு மந்திரமா மென்றும் பாடம்; எரியும்=எரியச் செய்யும்; செய்கின்ற=செய்தற்குரிய நிலைபெற்ற.

219. பாழி=பெரிய; ஊழி=நெடுங்காலம் அல்லது விதி; உறுவினை=பொருந்திய அக்கினி காரியம்; அங்கி=சிவாக்கினி; விழிசெய்து=கடைக்கணித்து (விழி என்பது வீழியென நீண்டது, விழுதலைச் செய்தலெனும் பொருளில்வந்த தொழிற்பெயரெனினுமாம்).

220. அரும் செல்வம் = வேதம்; நாடும் அரும் செல்வம் = கருதுகின்ற ஞானம்; பருஞ்செல்வம்=அக்கினி.

221. ஒண்சுடர்ஆன் ஐ=ஒள்ளிய ஒளிவடிவமைந்தஇடபவாகனத்தையுடைய கடவுள்; கண்சுடரோன்=கண்ணொளி போல்பவன்.

222. ஈமத்து உள் அங்கி இரதம்=இடுகாட்டில் எரிக்கப்படும் வைதிகாக்கினியாகிய இரதம்; வினைக்கடல்=கடல்போலு மளவிடப்படாத கன்மம்; குரைகடல் = ஒலிக்கின்ற கடல்; ஓமாக்கினியினுள் ளிருக்கின்ற எமதிறைவனே ஓமாக்கினியை இரதமாகக்கொண்டு அவ்வந்தண்ணரை மேலானபதவிக்குச் செலுத்துகின்றாராதலால், அவ்வோமாக்கினியானது கன்மமாகிய நெருப்பை யவிக்கும் கடல்போலு மென்பது.

223. அங்கி நிறுத்து மருந்தவ ராரணத்
தங்கி யிருக்கும் வகையருள் செய்தவ
ரெங்கு நிறுத்தி யிளைப்பப் பெரும்பதி
பொங்கி நிறுத்தும் புகழது வாமே. (கo)

---

## கஉ-வது அந்தணரொழுக்கம்.

224. அந்தண ராவோ ரறுதொழிற் பூண்டுளோர்
செந்தழ லோம்பிமுப் போது நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றுங்கிட்டுச்
சந்தியு மோதிச் சடங்கறுப் போர்களே. (க)

225. வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்
போதாந்த மான பிரணவத் துட்புக்கு
நாதாந்த வேதாந்த போதாந்த நாதனை
யீதாமெ னாதுகண் டின்புறு வோர்களே. (உ)

226. காயத்தி ரியே கருதுசா வித்திரி
யாய்தற் குவப்பர் மந்திர மாங்குன்னி
நேயத்தே ரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துட் டோயா மறையோர்க டாமே. (ங)

---

223. ஆரணத்தங்கி=வைதிகாக்கினி ; பெரும்பதி = பதமுத்தியாகிய வுலகங்கள் ; பெரிய பூமி யெனினுமாம்.

224. அறுதொழில்=ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்; நியமம்=அட்டாங்கயோகத்தொன்று, இது தவறாது செய்வேமென மேற்கொண்ட கன்மமெனினுமாம் ; சடங்கு அறுப்போர்கள்=கன்மக்கிரியைகளை நிறைவேற்றுவோர்கள்.

225. முப்பதம்=தத்துவமசி வாக்கியம், அல்லது அகார, உகார, மகார மெனினுமாம் ; போதாந்தம்=முடிந்தஞானம்; ஈதாமெனாது=இதுவென்று சுட்டியறிதலின்றி.

226. சாவித்திரி=உமை; நேயத்தேர்=அன்பாகிய தேர்; நேயத்து ஆய்=பக்தியினிலைத்தவராய்; அல்லது ஞேயத்தாய் என்பது நேயத்தாயெனப் போலியாயிற்றெனக்கொண்டு ஞேயப் பொருளாகிய பிரமத்தினின் றகலாதவரா யெனினுமாம்.

227. பெருநெறி யான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடினல் வேதத்
திருநெறி யான திருகை யிருத்திச்
சொரூபம தானோர் துகளில்பார்ப் பாரே. (௪)

228. சத்திய முந்தவந் தானவ னுதலு
மெய்த்தகு மிந்திய மீட்டியே வாட்டலு
மொத்த வுயிருட லுண்டா யுணர்வுற்றுப்
பெத்த மறுத்தலு மாகும் பிரமமே. (௫)

229. வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை யொழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை யொழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே (௬)

230. நூலுஞ் சிகையு நவலிற் பிரமமோ
நூலது காற்பாச நுண்சிகை கேசமா
நூலது வேதாந்த நுண்சிகை ஞானமா
நூலுடை யந்தணர் காண நவலிலே. (௭)

227. பெருநெறி ஆன=பெருமையுள்ள முத்திமார்க்கத்துக்குரிய; குருநெறியால்=குருபரம்பரை முறைப்படி அல்லது குருவை வழிபடுஞ் சன்மார்க்கத்தினல்; உரை கூடி=உபதேசம்பெற்று; திருகு=முறுக்காணி;சொரூபமதானோர்=இயற்கைச் சொரூபமாயினோர் அல்லது பாசமொழிந்து சிவசொரூபமானோர்.

228. தானவனுதல்=சீவகுணங்களாகிய பொய் கொலையாதிய வொழிந்து, சிவகுணங்களாகிய சத்தியம் அன்பு முதலியவற்றினிலைத்து, தன்வசமழிந்து நிற்றலாம்; எய்த்து=வருந்தி; இந்தியம் ஈட்டி=புலன்களையடக்கி; ஒத்த உடல் உயிர்=வேற்றுமை யுணரப்படாதொன்றெனக் கருதுமா றிருக்கும் உடலுயிர்கள்; உண்மை = மெய்ம்மையானநிலைமை; பெத்தம்=(பத்தமென்னும் வடமொழித் திரிபு) பந்தம்.

229. வேதாந்தம் = வேதமுடிவிற் கூறப்படு மெய்ப்பொருள் ; வேட்கை=வேள்வியியற்றுதல்; "வேதாந்தங்கேட்டுந் தம் வேட்கை யொழிந்திலர்" என்றது யாகத்திற் கொலைபுரிதல் கொலையல்லவென்பது விளக்கலால்; கேட்டும் என்றதன் உம்மை உயர்வு சிறப்பினது.

230. அந்தணரென்று காணற்குப் புறத்துக் காணப்படுவனவாய அவர் தரித்த பூணூலும் சிகையுமே பிரதான சின்னமாயினும், அவை நூலும் உரோமமு மாதலால் பிரம சம்பந்தமாகா; வேதாந்த நூலும் வேதசிகையாகிய ஞானமுமே பிரதான அகச்சின்னங்களா மென்பது பொருளாமென்க.

231. சத்திய மின்றித் தனிஞானந் தானின்றி
யொத்த விடயம்விட் டோரு முணர்வின்றிப்
பத்தியு மின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் பிராமணர் தாமன்றே. (அ)

232. திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்
குருநெறி யாலே குருபதஞ் சேர்ந்து
கரும நியமாதி கைவிட்டுக் காணுந்
துரிய சமாதியாந் தூய்மறை யோர்க்கே. (௯)

233. மறையோ ரவரே மறையவ ரானூன்
மறையோர்தம் வேதாந்த வாய்மையிற் றூய்மை
குறையோர்தன் மற்றுள்ள கோலா கலமென்
றறிவோர் மறைதெரிந் தந்தண ராமே. (க0)

234. அந்தண்மை பூண்ட வருமறை யந்தத்துச்
சிந்தைசெ யந்தணர் சேருஞ் செழும்புவி
நந்துத லில்லை நரபதி நன்றுகு
மந்தியுஞ் சந்தியு மாகுதி பண்ணுமே. (கக)

---

231. ஒத்தவிடயம்=மனதுக்கிசைந்த விஷய விருப்பம்; ஊண் பித்தேறு மூடர்=உண்பதிற் பேராசைகொண்ட அறிவீனர்.

232. திருநெறி=சிறந்த சன்மார்க்கம்; சித்து அசித்து இன்றி=ஞானம் அஞ்ஞானமென்று கூறப்படுதலில்லாது (என்பது மெய்ஞ்ஞானம்); குருநெறி = குரு வுபதேச வழி; துரிய சமாதி=சமாதியி னுன்காமவத்தை (அதாவது பிரபஞ்சந் தோன்றாதிருக்கு நிலைமை).

233. மறையோதுவாரே என்றும் பாடம்; வாய்மையிற்றூய்மை = உண்மையாலே தூய்மை யுடைமை; குறை = வேதாந்த மொழிந்த ஏனைய நூல்கள்; கோலாகலம்=பேரிரைச்சல் அல்லது இடம்பம்; தெரிந்தந்தணர் என்பதில் தெரிந்த என்ற பெயரெச்சத் தீற்று அகரந் தொக்கது.

234. அந்தண்மை = அழகிய தட்பம்; அருமறையந்தத்து=அரிய வேதாந்தத்துள்ள (பரம்பொருள்); நந்துதல் = குறைவுபடுதல்.

235. வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர்
நாதாந்த போத நணுகிய போக்கது
போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்கதா
னாதாந்த முத்தியுஞ் சித்தியு நண்ணுமே. (௧௨)

236. ஒன்று மிரண்டு மொடுங்கிய காலத்து
நன்று மிருந்து நலம்பல பேசினும்
வென்று விளங்கும் விகிர்தனை நாடுவர்
சென்று வணங்குந் திருவுடை யோரே. (௧௩)

237. தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட
நானே விடப்படு மேதொன்றை நாடாது
பூமேவு நான்முகன் புண்ணிய போகனு
யோமேவு மோமாகு தியவி யுண்ணவே. (௧௪)

---

### ௧௫-வது இராஜ தோஷம்.

238. கல்லா வரசனுங் காலனு நேரொப்பர்
கல்லா வரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா வரச னறமோரான் கொல்லென்பா
னல்லாரைக் கால னணுகிநில் லானே. (௧)

---

235. வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர் = வேதாந்த ஞான மடைய ஆழின்றி வேதமோதி அக்கினிகாரிய மாத்திர மியற்றுவோர்; நாதாந்தபோதம் = நாத தத்துவ முடிவை யுணரும் ஞானம்; நாதாந்தமுத்தி=நாத தத்துவ முடிவின் கண்ணுள்ள பதமுத்தி; சித்தி=அட்டமாசித்தி.

236. ஒன்றும் இரண்டும்=பிராணனும் உச்சுவாசநிச்சுவாசங்களும், வாத பித்த சிலேட்டும மெனினுமாம்; வென்று = இயல்பாகவே பாசங்கடந்து; சென்று = மேலைச்செய்யுளிற் கூறிய பத முத்திசேர்ந்து.

237. பற்று இரண்டு=அகப்பற்றுப் புறப்பற்று,உயிர்ச்சார்பு பொருட் சார்பு எனினுமாம், இவற்றை அகங்கார மமகாரமென்பர் வடநூலார்; ஓம் மேவும் ஆகுதி=பிரணவ சகிதமா யளிக்கப் படு மாகுதி.

238. கல்லாவரசன்=மனுநீதிமுதலியவற்றைக் கல்லாதவரசன்.

239. நாடோறு மன்னவ னாட்டிற் றவநெறி
நாடோறு நாடி யவனெறி நாடானே
னாடோறு நாடுகே டெம்முட னண்ணுமா
னாடோறுஞ் செல்வ நரபதி குன்றுமே. (உ)

240. வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடமெய் வேடமே
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே. (ங)

241. மூடங் கெடாதோர் சிகைநூன் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனு
மீடொன் றிலனாகு மாதலாற் பேர்த்துணர்ந்
தாடம் பரநூற் சிகையறுத் தானன்றே. (ச)

242. ஞானமி லாதார் சடைசிகை நூனண்ணி
ஞானிகள் போல நடிக்கின்ற வர்தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞான முண்டாக்குத னலமாகு நாட்டிற்கே. (ரு)

243. ஆவையும் பாரையு மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையுங்
காவலன் காப்பவன் காவா தொழிவனேன்
மேவு மறுமைக்கு மீளா நரகமே. (சா)

244. திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின்
மறந்து மறநெறி யேயாற்றல் வேண்டுஞ்
சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையு
மறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே. (எ)

---

239. அவன்நெறி=அரசனுக்குரிய துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலன மாகிய நீதி முறைமை; செல்வ நரபதி குன்றும்=திரவிய நிறைந்துள்ள அரசனுந்தாழ்வடைவன், அல்லது அந்நாட்டில் செல்வமும் அரசனும் குறைவடைதல் கூடுமெனினுமாம்.

240. வேடநெறிசெய்தால் = தண்டனையாதிகளால் தாங்கொண்ட வேடத்துக்குரிய நெறியிலொழுகச் செய்தால்.

241. மூடம்=அறிவின்மை ; ஈடு=பெருமை.

242. சடை-வானப்பிரஸ்தர்க்குரிய சின்னம்; சிகை - பிரமசாரி கிருகஸ்தர்களுக்குரிய சின்னம் ; நூல் - மூவர்க்கு முரியது.

243. காப்பவன்=காத்தற்குரியவன் ; மீளாநரகம்=நித்திய நரகம்.

244. திறந்தருமுத்தி=பதமுத்தி ஐக்கியமுத்தியெனு மிருதிற முத்திகளாம்.

245. வேந்த னுலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்க ளவ்வழி யாநிற்பர்
பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொள்ளப்
பாய்ந்த புலியன்ன பாவகத் தானே. (அ)

246. கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப்
பால்கொண்டு சோமன் முகம்பற்றி யுண்ணுதோர்
மால்கொண்டு தேறலை யுண்ணு மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே (கூ)

247. தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
யத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
யெத்தண்ட முஞ்செயு மம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. (கo)

---

கசு-வது வானச் சிறப்பு.

248. அமுதூறு மாமழை நீரத னாலே
யமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றுங்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
யமுதூறுங் காஞ்சிரை யாங்கது வாமே. (க)

249. வரையிடை நின்றிழி வானீ ரருவி
யுரையில்லை யுள்ளத் தகத்துநின் றாறு
நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை யெந்தைக் கழுமணி யாறே. (உ)

---

245. பேர்ந்து=மாறுகொண்டு; பிறர்=பகைவர்; பாவகம்=கொலைத் தொழில், கருத்தெனினுமாம்.

246. கால்கொண்டுகட்டி = பிராணவாயுவை வசப்படுத்தியடக்கி; கனல்=மூலாக்கினி; மேல்=மேலாதாரம்; பால்=மதியமிர்தம்; தேறல்=மது; செய்=செய்தல் (முதனிலைத்தொழிற் பெயர்).

247. தகுதி=உரியநெறி; அத்தன் சிவன்=தலைவனாகிய சிவன் (இருபெயரொட்டுப் பண்புத்தொகை).

248. மாமழை=பெருமையுள்ள மேகம்.

249. உரையில்லை = குற்றங்கூறப்படுவதில்லை; எந்தைக்கழுமணியாறு=சிவபிரானுக் காட்டுதற்குரிய மேலான ஆற்றுநீராம்.

கடு-வது தானச் சிறப்பு.

250. ஆர்க்கு மிடுமி னவரிவ ரென்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை யுண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் காலம றிமினே. (க)

கசு-வது அறஞ்செய்வான்றிறம்.

251. தாமறி வாரண்ண ருள்பணி வாரவர்
தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்
தாமறி வார்சில தத்துவ ராவர்க
டாமறி வார்க்குத் தமர்பர னாமே. (க)

252. யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாமுண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே. (உ)

253. அற்றுநின் றாருண்ணு மூணே யறனென்னுங்
கற்றன போதங் கமழ்பவர் மானிட
ருற்றுநின் றாங்கொரு கூவற் குளத்தினிற்
பற்றிவந் துண்ணும் பயனறி யாரே. (ங)

---

250. அவரிவரென்னன்மின் = உயர்ந்தோர் தாழ்ந்தோர் உறவினர் பகைவரென்று சொல்லற்க; வேட்கை=இம்மை மறுமையில் விருப்பம், அல்லது உண்ணுதற்கு விருப்பம் (பசி); கரைந்து=கூவியழைத்து.

251. அறம் தாங்கிநின்றார் = இரந்தார்க்கீதலாகிய அறத்தொழிலை மேற்கொண்டுள்ளவர்; சிவ தத்துவர் = சிவத்தினுண்மை யுணர்ந்தவர், அல்லது சிவ தத்துவமாகிய முத்திநிலைமையை யடைந்தவர்.

252. பச்சிலை=வில்வமுதலிய பத்திரங்கள்; வாயுறை = கைத்தீன்; வாயறுகு என்றும் பாடம்.

253. அற்றுநின்றார் = பிரபஞ்சப் பற்றொழிந்துள்ள சிவயோகிகள், ஆதரவற்ற ஏழைகளெனினுமாம்; போதங்கமழ்பவர்=ஞான பரிமளம் வீசப்பெற்றவர் (சிவஞானிகள்); கூவல்=கிணறு; பற்றி = தாகந் தணித்துக்கொள்ளும் விருப்பங்கொண்டு, தாகத்தால் வெதும்பி யெனினுமாம்.

254. அழுக்கினை யோட்டி யறிவை நிறையீர்
தழுக்கிய நாளிற் றருமமுஞ் செய்யீர்
விழித்திருந் தென்செய்வீர் வெம்மை பரந்து
விழிக்கவன் றென்செய்வீ ரேழைநெஞ் சீரே. (௪)

255. தன்னை யறியாது தானல்லா ரென்னுதிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னத்
தன்மையு நல்ல தவஞ்செய்யு நீரே. (௫)

121/127, 1671, 1678, 256. துறந்தான் வழிமுதற் சுற்றமு மில்லை
யிறந்தான் வழிமுத லின்பமு மில்லை
மறந்தான் வழிமுதல் வந்தில னீச
னறந்தா னறியு மளவறி வாரே. (௬)

257. தான்றவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி
மான்றெய்வ மாக மதிக்கு மனிதர்க
ளூன்றெய்வ மாக வுயிர்க்கின்ற பல்லுயிர்
நான்றெய்வ மென்று நமன்வரு வானே. (௭)

258. கிளைக்கும் வினைக்கடற் றீர்வுறு தோணி
யிளைப்பின்றி நீக்கு மிருவழி யுண்டு
கிளைக்குந் தனக்குமக் கேடில் புகழோன்
விளக்குந் தவமற மேற்றுணை யாமே. (௮)

---

254. தழுக்கிய (தழுவியவென்றதன் றிரிபு)=(செல்வமிளமையாதிகள்) கூடியிருக்கும்; விழித்து இருந்து = ஏமாந்திருந்து; வெம்மை=மரணதுன்பம்; ஏழைநெஞ்சீர்=அறிவில்லாதவர்களே.

255. தன்னை அறியாது=ஒருவருக்குந்தெரியாமல்; வன்மை=கொடுமை; அத்தன்மை=அந்தத்தர்மகுணம்; வருமுன் அத்தன்மமும் என்றும் பாடம்.

256. வழிமுதல்=தலைமுறை; இறந்தான்=பிரபஞ்சங்கடந்தஞானி; மறந்தான் = ஈதலை மறந்தவன்; அறியுமளவு = தெரிந்துகொள்ள வேண்டியவரை.

257. தான்றவஞ்செய்வதறம் என்றும் பாடம்; மான் = மஹான்; ஊன்=மாமிசம் அல்லது சரீரம்.

258. இருவழி=தவம், அறம் என்னும் இரண்டு முத்தி மார்க்கம்; கிளை=வம்சம்; மேல்=மறுமை.

259. பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
யற்ற முறையா னறநெறிக் கல்லது
யுற்றுங் களாலொன்று மீந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே. (௬)

---

## ௧௭-வது அறஞ்செயான் றிறம்.

260. எட்டி பழுத்த விருங்கனி வீழ்ந்தன
வொட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயனறி யாரே. (௧)

261. ஒழிந்தன காலங்க ளூழியும் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிட ராக்கை
யழிந்தன கண்டு மறமறி யாரே. (௨)

262. அறமறி யாரண்ணல் பாத நினையுந்
திறமறி யார்சிவ லோக நகர்க்குப்
புறமறி யார்பலர் பொய்ம்மொழி கேட்டு
மறமறி வார்பகை மன்னிநின் றாரே. (௩)

---

259. பற்றினை=பொருளினை; அற்றம்=குறைவு; அண்ணல்வைத்த வழி=சிவபெருமான் வகுத்தருளிய முத்திநெறி.

260. இருங்கனி=பெரியபழம்; ஒட்டிய=(அகலாது) பொருந்திய; பட்டி=வஞ்சனை; பாதகர் என்பது முதல் குறுகிப் பதகர் என நின்றது.

261. கற்பனை=வீண் எண்ணங்கள்; நாள்=வாழ்நாள்; பிழிந்தன போல=இரசம்பிழிந்து கொள்ளப்பட்ட கனிமுதலியவற்றின் சக்கை போல.

262. சிவலோக நகர்=ஸோமலோகத்தின் தலைமையான சிவநகரம்; புறம்=சிவலோகம் நீங்கிய பதமுத்திகள்; பலர்=வைதிக விரோதிகளான பல புறமதஸ்தர்; மறம்=துன்மார்க்கம்; பகை=கன்மமாகிய பகை அல்லது ஜனனமரணங்களாகிற பகை.

263. இருமலுஞ் சோகையு மீளையும் வெப்புந்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகு
முருமிடி நாகமு ரோணி கழலேத்
தருமஞ்செய் வார்பக்கற் றழுகி லாவே. (௪)

264. பரவப் படுவான் பரமனை யேத்தா
ரிரவலர்க் கீதலை யாயினு மீயார்
கரகத்தே நீராட்டிக் காவை வளர்க்கார்
நரகத்தி னிற்றிரோ நன்னெஞ்சி னீரே. (௫)

265. வழிநடப் பாரின்றி வானோ ருலகங்
கழிநடப் பார்நடந் தார்கரும் பாரு
மழிநடக் கும்வினை மாசற வோட்டிட்
டொழிநடப் பார்வினை யோங்கி நின்றாரே. (௬)

266. கனிந்தவ ரீசன் கழலடி காண்பர்
துணிந்தவ ரீசன் றுறக்கம தாள்வர்
மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி
மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே. (எ)

267. இன்ப மிடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
வின்ப மதுகண்டு மீகிலாப் பேதைக
ளன்பிலார் சிந்தை யறமறி யாரே. (அ)

263. ஈளை=கோழை; வெப்பு=சரீரத்தை யுலரச்செய்கின்ற உட்டிண நோய்; உரோணி=உரோகணிநாள், இது உபலக்கணமாதலால் நட்சத்திர பீடிதமென்றுகொள்க; தாழகிலா=சேரா.

264. கரகம்=மண்ணாலாகிய குடம்; கா=மரம்.

265. கழிநடப்பார்=வரம்புகடந்து நடப்பவர்; கரும்பார்=இருளுலகம்; ஒழிநடப்பார்=தீமையொழிந்த சன்மார்க்கத்தி னடப்பவர்; வினையோங்கி நின்றார்=அறச்செயலான் மேம்பட்டுள்ளவர்.

266. கனிந்தவர்=இரந்தார்க்கிரங்கினோர்; துணிந்தவர்=துறந்தோரை யீசனெனத் தெளிந்தவர்; மலிந்தவர் = பொருளாசை நிறைந்தோர்; மெலிந்த=வருந்தச்செய்யா நின்ற.

267. உறவைத்தது=அடையும்படி வைத்திருத்தலானது; இன்ப மது கண்டும்=அறத்தினால் சுகம்பெறுதலை யறிந்திருந்தும்.

268. கெடுவது மாவதுங் கேடில் புகழோ
னடுவல்ல செய்தின்ப நாட்டவு மொட்டா
னிடுவது மீவது மெண்ணுமி னின்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே. (௯)

269. செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராம
லில்லங் கருதி யிறைவனை யேத்துமின்
வில்லி யிலக்கெய்த விற்குறி யாமே. (௧௦)

---

சஅ-வது அன்புடைமை.

270. அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தாரு மறிகிலா
ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி
னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. (௧)

271. பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரு மிளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே. (௨)

272. என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினு
மன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
யென்போன் மணியினை யெய்தவொண் ணாதே. (௩)

---

268. கெடுவது=அழிதல்; ஆவது=உற்பத்தியாதல்; நடு=நீதி; இடுவது=இரந்தார்க் கன்னமிடுதல்; ஈவது—பொருள் முதலிய கொடுத்தல்; இன்பம்படுவது=இன்பங்கெடுதற் கேதுவான பாவம்; பசுவதுவாம்=மிருகச்செயலாம்.

269. புலராத=வாடாமல்; இல்லம்=இல்லறம்; வில்லி=வில்லில் வல்லவன்.

271. மிளிரும்=பிரகாசிக்கின்ற; சுடுபொடி=திருநீறு; பின்னிக் கிடந்தது=கலந்திருந்தது.

272. என்போல் மணியினை யெய்த ஒண்ணாது=நான் அடைந்தாற் போல மணியினை யொத்த சிவத்தை யடைய முடியாது; என் பொன்மணியினை யென்றும் பாடம்.

273. ஆர்வ முடையவர் காண்ப ரரன் றன்னை
யீர முடையவர் காண்பா ரிணையடி
பார முடையவர் காண்பார் பவந்தன்னைக்
கோர நெருக்கொடு கோங்குப்புக் காரே. (௪)

274. என்னன் புருக்கி யிறைவனை யேத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. (௫)

275. தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்குந்
தேனொரு பாற்றிகழ் கொன்றை யணிசிவன்
றானொரு வண்ணமெ னன்பினின் றானே. (௬)

276. முன்படைத் தின்பம் படைத்த முதலிடை
யன்படைத் தெம்பெரு மானை யறிகிலார்
வன்படைத் திந்த வகலிட வாழ்வினி
லன்படைத் தான்ற னகலிடந் தானே. (௭)

277. கருத்துறு செம்பொன்செய் காய்கதிர்ச் சோதி
யிருத்தியும் வைத்து மிறைவவென் றேத்தியு
மருத்தியு ளீசனை யாரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே. (௮)

---

273. ஈரம்=உள்ளன்பு; பாரம்=சம்சாரமாகிய சுமை; நெருக்கு=துன்பம்; கோங்கு (திசைச்சொல்)=மாறுபாடு.

274. என் (வினாவிடைச்சொல்)=(பல கூறிப் பயன்) யாது; முன்னன்பு=முதன்மையானபக்தி; தலைநின்ற ஆறு=தோன்றிய விதமாம்.

275. ஒருபால் தேன்திகழ் கொன்றைஅணிசிவன்=தான் திருமேனியின் வலப்புறமாகிய ஒரு பகுதியில் தேன்பெருந்திய கொன்றை மலர் சூடிய சிவன்; அர்த்தநாரீச முகூர்த்தத்தில் வலப்புறம் சிவசொரூபமும், இடப்புறம் தேவி சொரூபமு மாதலையூகித்துணர்ந்துகொள்க. பால் தேன் திகழ் என்பதற்கு ஒரு புறத்தில் தேன்போல்பவளாகிய உமாதேவி விளங்குகின்ற என்று கூறினுமமையும்.

276. வன்பு அடைத்து=உறுதிசெலுத்தி; ஆன்ற (அகன்ற என்பதன் விகாரம்)=விசாலமான.

277. அருத்தி = அன்பு; விருத்தி = இன்பம்; முத்திச் செல்வம் எனினுமாம்.

278. நித்தலுந் துஞ்சும் பிறப்பையுஞ் செய்தவன்
வைத்த பரிசறிந் தேயு மனிதர்க
ளிச்சையு ளேவைப்ப ரெந்தை பிரானென்று
நச்சியே யண்ணலை நாடகி லாரே. (கூ)

279. அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவ
னன்பினுள் ளாகி யமரு மரும்பொரு
ளன்பினுள் ளார்க்கே யணைதுணை யாமே. (கo)

கசு-வது அன்பு செய்வாரை யறிவன் சிவன்.

280. இகழ்ந்ததும் பெற்றது மீச னறியு
முகந்தருள் செய்திடு முத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே. (க)

281. இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்
றுன்பப் பிறவித் தொழில்பல வென்னினும்
வன்பிற் கலவிசெய் தாதிப்பி ரான்வைத்த
முன்பிப் பிறவி முடிவது தானே. (உ)

282. அன்புறு சிந்தையின் மேலெழு மவ்வொளி
யின்புறு கண்ணியொ டேற விசைந்தன
துன்புறு கண்ணியைந் தாடுந் துடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமி னீரே. (ந)

278. துஞ்சு(முதனிலைத் தொழிற்பெயர்)=மரணம்; இச்சை=உலக ஆசை.

279. புறத்தான்—அன்பின் மேலுள்ளவன்; உடலாய் உளான்= அன்பினைத் தனக்குச் சரீரமாக வுடையவன்; முன் பின் உளான்=உலக உற்பத்திக்கு முன்னும் அதன் அழிவுக்குப் பின்னு முள்ளவன்.

280. இகழ்ந்தது=அன்பினையலட்சியஞ்செய்திருத்தல்;பெற்றது= மெய்யன்புற்றிருத்தல்; கொழுந்துஅன்பு=தளிர்த்துவளரும் அன்பு.

281. இன்பப் பிறவி=பேரின்பத் தோற்றம்; இயல்வது=தக்கது; வன்பிற் கலவிசெய்து=வலிந்து சிவனிடம்கலக்கச்செய்யின்.

282. இன்புறுகண்ணி=சிற்றின்பம் பேரின்பங்களை யருளுகின்ற கண்களையுடைய உமாதேவி; துன்புறு கண்ணி ஐந்து=துன் பினைச்செய்கின்ற வலையைப்போலும் ஐம்புலன்; துடக்கு= சிக்குப்படுதல்.

283. புணர்ச்சியு ளாயிழை மேலன்பு போல
வுணர்ச்சியு ளாங்கே யொடுங்கவல் லாருக்
குணர்ச்சி யில்லாது குலாவி யுலாவி
யணைத்த தணைத்தின்ப மதுவிது வாமே. (௪)

284. உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச்
சித்தர்க ளென்றுந் தெரிந்தறி வாரில்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்திகொ டுத்தவர் முன்பு நின்றானே. (௫)

285. கண்டேன் கமழ்தரு கொன்றை யினானடி
கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை
கண்டேன் கமல மலருறை வானடி
கண்டேன் கழலதெ னன்பினுள் யானே. (௬)

286. நம்பனை நானு விதப்பொரு ளாகுமென்
றும்பரில் வானவ ரோதுந் தலைவனை
யின்பனை யின்பத் திடைநின் றிரதிக்கு
மன்பனை யாரு மறியகி லாரே. (௭)

287. முன்பு பிறப்பு மிறப்பு மறியாதா
ரன்பி லிறைவனை யாமறி யோமென்ப
ரின்பப் பிறப்பு மிறப்பு மிலாநந்தி
யன்பி லவனை யறியகி லாரே. (௮)

288. ஈச னறியு மிராப்பக லுந்தன்னைப்
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத்
தேசுற் றறிந்து செயலற் றிருந்திடி
லீசன்வந் தெம்மிடை யீட்டி நின்றானே. (௯)

283. உணர்ச்சியுள்=ஈசனை யறியு மன்பினுள்; உணர்ச்சியில்லாது=பிரபஞ்ச வுணர்ச்சி யில்லாதபடி; அணைத்து = தன்னோடு கூட்டி.

285. கமல மலருறைவான்=இதயதாமரை மலரில் வசிப்பவன்.

286. இன்பனை=ஆனந்தமயனை; இரதிக்கும் (இரசிக்கும் என்னும் வடமொழித்திரிபு)=இனிக்கச் செய்கின்ற.

287. முன்பு = தமக்கெதிரில், இப்பிறவிக்கு முந்தி யெனினுமாம்; அன்பில் = அன்பினிடத்தில்; அன்பு இல் அவனை=அன்பில்லா திருக்குமவனை.

288. பாசம்=அன்பு; பரிவுசெய்வார்களை=பத்தி செய்வோர்களை; தேசு=சிவஞானம்; ஈட்டிநின்றான்=கலந்துநின்றான்.

292 [illegible]



**289.** விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்
தொட்டுத் தொடர்வன் றலையாப் பெருமையை
யெட்டுமென் ஞருயி ராய்நின்ற வீசனை
மட்டுக் கலப்பது மஞ்சன மாமே. (௧௦)

---

உ௦-வது கல்வி.

**290.** குறிப்பறிந் தேனுட லுயிரது கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்
கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே. (௧)

**291.** கற்றறி வாளர் கருதிய காலத்து
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி யுரைசெய்யுங்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே. (௨)

**292.** நிற்கின்ற போத நிலையுடை யான்கழற்
கற்கின்ற செய்மின் கழிந்துறும் பாவங்கள்
சொற்குன்ற லின்றித் தொழுமின் றொழுதபின்
மற்றொன்றி லாத மணிவிளக் காமே. (௩)

**293.** கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
பல்லி யுடையார் பாம்பரிந் துண்கின்றா
ரெல்லியுங் காலையு மேத்து மிறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே. (௪)

---

289. விட்டுப்பிடிப்பது=இடைவிட்டுப்பற்றுவது; மேதகு=பெருமையுள்ள; மட்டு (உம்)=(அன்பாற்கூடிய) அளவும்; மஞ்சனம் (ஷோடசோபசாரங்கட்கு முபலக்கணம்) = அபிஷேகம்.

290. செறிப்பு=கலப்பு; மறிப்பு=மீட்சி; கறிப்பு=அபகரித்தல்.

291. கற்றறிவு=கற்றதனாலுண்டாமறிவு; அறிவுஎன்பது ஈறுகெட்டு அறியெனநின்றது; காட்டு அக்கு=தெரிவிக்கின்றகண்.

292. சொற்குன்றல் இன்றி = சொற்களில் வழுவில்லாமல்; மற்று ஒன்று=வேறு ஒப்பு.

293. பல்லி என்பது சரீரத்துக்காகுபெயர்; பாம்பு=குண்டலி; அரிந்து=வருத்தி; வல்லி என்பது ஓர் உபநிடதம்; காயம்=சிவசொரூபம்.

294. துணையது வாய்வருந் தூயநற் சோதி
துணையது வாய்வருந் தூயநற் சொல்லாந்
துணையது வாய்வருந் தூய்மலர்க் கந்தந்
துணையது வாய்வருந் தூயநற் கல்வியே. (ரு)

295. நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினாற் பண்பின் பயன்கெடுங்
கோலொன்று பற்றினாற் கூடாப் பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின் றார்களே. (சா)

296. ஆய்ந்துகொள் வார்க்கர னங்கே வெளிப்படுந்
தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடு
மேய்ந்த விளமதி யெட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே. (எ)

297. வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்
கழித்துணை யாங்கற்றி லாதவர் சிந்தை
யொழித்துணை யாமும்ப ராமுல கேழும்
வழித்துணை யாம்பெருந் தன்மை வல்லானே. (அ)

298. பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்
முற்றது வெல்லா முதல்வ னருள்பெறில்
கிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்ப முற்று நின்றாரே. (கூ)

---

294. சோதி=ஞானம்; சொல், ஆகுபெயராய் நூல்களை யுணர்த்திற்று; மலர்க்கந்தம்=மலரும் கந்தமும் போல.

295. நூல்=வீட்டுநூல் அல்லது பிரமரந்திரம்; நுனி=கபாலஸ்தானம் அல்லதுமுத்தி; பால்=ஒருமதச்சார்பு; பண்பு=சத்துவகுணம்; கோல்=கழி அல்லது பிரமதண்டம்; பறவை=பட்சி அல்லது விஷயங்கள்; மால்=மயக்கந்தருஞ் சமயநூல் அல்லது புத்தி மயக்கம்.

296. மணி=சூரியகாந்தமணி; இளமதி=யௌவனசந்திரன்.

297. கழித்துணை=விலக்கிவிடத் தக்கவளவினர்; சிந்தை யொழித்துணை=மனமடங்குதற் குரியதுணை.

298. முற்றது; முற்றியதென்பதன்சிதைவு; கிற்றவிரகு=அடிமைத் தன்மைக் குரியவுபாயம்.

299. கடலிடை யான்மலை யானைந்து பூதத்
துடலிடை யான்பல வூழிதொ றாழி
யடல்விடை யேறு மமரர்க ணாத
னிடமுடை யார்நெஞ்சத் தில்லிருந் தானே. (கo)

---

உக-வது கேள்விகேட்டமைதல்.

300. அறங்கேட்டு மந்தணர் வாய்மொழி கேட்டு
மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும்
புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம் மீசன்
றிறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. (க)

301. தேவர்பி ரான்றனைத் திவ்விய மூர்த்தியை
யாவ ரொருவ ரறிவா ரறிந்தபின்
னோதுமின் கேண்மி னுணர்மி னுணர்ந்தபி
னோதி யுணர்ந்தவ ரோங்கிநின் றாரே. (உ)

302. மயன்பணி கேட்பது மாநந்தி கேட்பி
னயன்பணி கேட்ப தரன்பணி யாலே
சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர்
பயன்பணி கேட்பது பற்றது வாமே. (ங)

303. பெருமா னிவனென்று பேசி யிருக்குந்
திருமானி டர்பின்னைத் தேவரு மாவ
ரருமாத வர்க்கு மகிழ்ந்தருள் செய்யு
மருமாத வத்தெங்க ளாதிப் பிரானே. (ச)

---

299. இட முடையார்=பேரறிவுடையார்.

300. மறம்=பாபத்தினியல்; புறம்=வேறான நூற்பொருள்; திறம்=தன்மை.

301. அறிந்தபின்=(சிவனுளனென்று) உணர்ந்தபிறகு; உணர்மின்=சிந்தியுங்கள்.

302. மயன் என்பது மாயனென்பதன் குறுக்கம்; சிவன் பணி=சிவாராதனைமுறை.

303 திருமானிடர்=திருவினையுடைய மனிதர்; அருமாதவத்து=அரிய பெருமையுள்ள தவத்திலே.

304. ஈச னருளு மிறப்பும் பிறப்பையும்
பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தி
நேசமு மாகு நிகழொளி யாய்நின்று
வாச மலர்க்கந்த மன்னி நின்றானே. (ரு)

305. விழுப்பங் கெழுமிய மெய்நின்ற ஞானத்
தொழுக்கமுஞ் சிந்தை யுணர்கின்ற போது
வழுக்கி விடாவிடில் வானவர் கோனு
மிழுக்கின்றி யெண்ணிலி காலம தாமே. (சா)

306. சிறியார் மணற்சோற்றிற் றேக்கிடு மாபோற்
செறிவா லனுபோகஞ் சித்திக்கு மென்னிற்
குறியாத தொன்றைக் குறியாதார் தம்மை
யறியா திருந்தா ரவரவ ரன்றே. (எ)

307. உறுதுணை யாவ துயிரு முடம்பு
முறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே. (அ)

308. புகழநின் றார்க்கும் புராணனெம் மீச
னிகழநின் றார்க்கு மிடும்பைக் கிடமா
மகிழநின் றுதியை யோதி யுணராக்
கழியநின் றார்க்கொரு கற்பசு வாமே. (கூ)

---

304. அருளும் இறப்பும், அருளையும் இறப்பையும் என இரண்டன் உருபு விரித்துரைத்துக்கொள்க; ஆகு=முன்னிலை யொருமை எவல் வினைமுற்று; நிகழொளி = கூடவே யிருக்கும் இயற்கையறிவு; மலர்க்கந்தம்=பூவினிடத்திலிருந்து தோன்றும் மணம்.

305. விழுப்பம் கெழுமியும்=அன்பு நிறைந்தும்; மெய்நின்ற ஞானத்து=உண்மையான ஞானநெறியில்; வழுக்கிவிடா விடில்= தவறுதலில்லா திருப்பின்.

306. தேக்கிடுமாபோல்=திருப்தி யடைதல்போல; செறிவால்= ஐம்புல சம்பந்தத்தால்; குறியாதது ஒன்று=சுட்டி யறியப் படாத சிவம்.

307. உலகுஉறு கேள்வி=பெரியோர் வாய்க் கேட்டறியப் படுங்கேள்வி.

308. ஆர்க்கும்=நிறைந்திருக்கும்; புராணன்=அநாதியா யுள்ளவன்; கழிய நின்றார்=விலகியிருந்தவர் (பக்தியினிலையாம விகழ்ந் திருப்பவர்); கற்பசு ஆம்=கல்லாலே செய்யப்பட்ட பசுவைப் போலப் பயனில்லாதவனும்.

309. வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி
யொத்துணர்ந் தானுரு வொன்றொடொன் றொவ்வா
தச்சுழன் றாணி கலங்கினு மாதியை
நச்சுணர்ந் தார்க்கே நணுகலு மாமே. (கO)

## உஉ-வது கல்லாமை.

310. கல்லா தவருங் கருத்தறி காட்சியை
வல்லா ரெனிலருட் கண்ணான் மதித்துளோர்
கல்லாதா ருண்மைபற் றுநிற்பர் கற்றோருங்
கல்லாதார் பேரின்பங் காணுகி லாரே. (க)

311. வல்லார்க ளென்றும் வழியொன்றி வாழ்கின்றா
ரல்லாத வர்க ளறிவுப லவென்பா
ரெல்லா விடத்து முளனெங்க டம்மிறை
கல்லாத வர்கள் கலப்பறி யாரே. (உ)

312. நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்கா
ளெல்லா வுயிர்க்கு மிறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே. (ஙு)

313. கில்லேன் வினைத்துய ராக்கு மயலானேன்
கல்லே னரனெறி யறியாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுட்
கல்லேன் கழியநின் றடவல் லேனே. (ச)

309. அச்சு=சரீரம்; ஆணி=அடித்த ஆணிபோலு மனத்திண்மை; நச்சு=விருப்பம்.

310. கருத்து=அறிவு; காட்சி=காணப்படுபொருளான சிவம்; அருட்கண்=ஞானக்கண்.

311. வழியொன்றி=ஞானநெறியிற் பொருந்தி; அறிவுபல=ஞான நூல் பல, அவை சமைய நூல்.

312. குரம்பை=தேகம்.

313. கில்லேன்=ஆற்றலில்லேன்; அரனெறி = சன்மார்க்கம்; வழங்கும்பொருள்=ஐம்புலவறிவா லறியப்பட்டுவழங்கும் உலக விஷயங்கள்.

314. நில்லாது சீவ னிலையன் றெனவெண்ணி
வல்லா ரறத்துந் தவத்துளு மாயினோர்
கல்லா மனிதர் கயவ ருலகினிற்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே. (ரு)

315. விண்ணினி னுள்ளே விளைந்த விளங்கனி
கண்ணினி னுள்ளே கலந்தங் கிருந்தது
மண்ணினி னுள்ளே மதித்து மதித்துநின்
றெண்ணி யெழுதி யிளைத்துவிட் டாரே. (சு)

316. கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடாக் காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்குங்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே. (எ)

317. கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராங்
கல்லாத மூடர் கருத்தறி யாரே. (அ)

318. கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்றமும் விடார் துரிசறார் மூடர்கண்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பி னிற்போர் கணக்கறிந் தார்களே. (கூ)

---

314. வல்லார்=அறிஞர்; அறத்துளும் தவத்துளும்=அறம்புரிதலிலும் தவஞ்செய்வதிலும்; வினைத்துயர்=கன்மத்தாலாந் துன்பம்.

315. விண்=பரமாகாயம்; விளங்கனி என்பது குண உவமவாகு பெயராய்ச் சிவனுக்காயிற்று. எழுதி யிளைத்துவிட்டார்=பல புத்தகங்களை யெழுதிக் களைத்துப் போயினர்.

316. கணக்கு=முடிவு; காட்சி=சிவதரிசனம் அல்லது சிவஞானம்; அண்ட=சேர.

318. கலதிகள்=வீணர்கள்; வீடார்=விட்டுநீங்கார்; துரிசு=களங்கம்.

319 "[illegible]"

319. ஆதிப்பி ரானம ரர்க்கும் பரஞ்சுடர்
சோதி யடியார்த் தொடரும் பெருந்தெய்வ
மோதி யுணரவல் லோமென்ப ருண்ணின்ற
சோதி நடத்துந் தொடர்வறி யாரே. (௧௦)

## ௨௩-வது நடுவுநிலைமை.

320. நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை
நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானுநின் றேனே. (௧)

321. நடுவுநின் றானல்ல கார்முகில் வண்ண
னடுவுநின் றானல்ல நான்மறை யோதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் றார்நல்ல நம்பனு மாமே. (௨)

322. நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானுநின் றேனே. (௩)

323. தோன்றிய வெல்லாந் துடைப்ப னவனன்றி
என்றுநின் றாரென்று மீச னிணையடி
மூன்றுநின் றார்முதல் வன்றிரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே. (௪)

## ௨௪-வது கள்ளுண்ணாமை.

324. கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறுந் தேராக்
கழுநீர்வி டாய்த்துத்தங் காயஞ் சுருக்கு
முழுநீர்கள் ளுண்போர் முறைமை யகன்றோர்
செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே. (௧)

319. சோதி யடியார்த் தொடரும் = ஞானமுள்ள வன்பரிடத்தகலா திருக்கும்; தொடர்வு=முறைமை.

323. நன்றி என்று=நல்ல கருணையை யடைந்து; மூன்று என்பது முயன்று என்பதன் திரிபு, நான்று=பற்றி.

324. தேரா=தேடியருந்தா; விடாய்த்து=தாகத்தாற்களைத்து; நீர்க்கள்=நீர்மயமான மது; செழுநீர்=விருத்தியாந்தன்மை.

325. சித்த முருக்கிச் சிவமாஞ் சமாதியி
லொத்துச் சிவானந்த மோவாத தேறலைச்
சுத்த மதுவுண்ணச் சிவானந்தம் விட்டிடா
நித்த லிருத்தல் கிடத்தல் கீழ்க்காலே. (உ)

326. காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகு
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனித னிணையடி
போமய வானந்தத் தேற லுணர்வுண்டே. (ஙு)

327. வாமத்தோர் தாமு மதுவுண்டு மாள்பவர்
காமத்தோர் காமக்கள் ளுண்டே கலங்குவ
ரோமத்தோ ருள்ளொளிக் குள்ளே யுணர்வர்கண்
ணாமத்தோ ரன்றே நணுகுவர் தாமே. (ச)

328. உள்ளுண்மை யோரா ருணரார் பசுபாசம்
வள்ளன்மை நாத னருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறார்
கள்ளுண்ணு மாந்தர் கருத்தறி யாரே. (ரு)

329. மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்
மயக்குறு மாயையின் மாமாயை வீடு
மயக்கிற் றெளியின் மயக்குறு மன்றே. (சு)

---

325. சுத்தமது=சுத்தாவஸ்தையில் (மேலாலவத்தை); கீழ்க்கால்=சகலாவத்தை.

326. மாமலம்=மூலமலம்; போம் மதியாகும்=கெட்டுப்போவதான புத்தியுண்டாம்; மயவானந்தம்=சொரூபானந்தம்.

327. வாமத்தோர்=வாமாகம நெறிபற்றி யொழுகும் சாக்தேயர்; காமத்தோர்=இன்ப நூலுடையார்; ஓமத்தோர்=அக்கினி காரியம் புரியும் அந்தணர்; நாமத்தோர்=சிவநாமபாராயணம் புரிவோர்.

328. உள் உண்மை=இதயத்துள்ளிருக்கு மெய்ப்பொருள்; தெள்ளுண்மை ஞானம்=ஒளியினையுடைய மெய்ஞ்ஞானம்.

329. சமய மல மன்னுமூடர் = மலசம்பந்தமான சமயப் பற்றுள்ள வறிவீனர்; மாயையின் மாமாயை வீடும் = அசுத்தமாயை யொழிவது போலவே மஹா மாயையு மொழியும்.

**330.** மயங்குந் தியங்குங்கள் வாய்மை யழிக்கு
மியங்கு மடவார்தம் மின்பமே யெய்தி
முயங்கு நயங்கொண்ட ஞானத்து முந்தா
ரியங்கு மிடையறு வானந்த மெய்துமே. (எ)

**331.** இராப்பக லற்ற விடத்தே யிருந்து
பராக்கற வானந்தத் தேறல் பருகா
ரிராப்பக லற்ற விறையடி யின்பத்
திராப்பகன் மாயை யிரண்டிடத் தேனே. (அ)

**332.** சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி யழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானந் தன்னிற் றலைப்பட்டுச்
சத்திய ஞானவா னந்தத்திற் சார்தலே. (௯)

**333.** சத்தன ருடரிற் சத்தி யருளுண்டாஞ்
சத்திய ருடரிற் சத்த னருளுண்டாஞ்
சத்தி சிவமா மிரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியு மெண்சித்தித் தன்மையு மாமே. (௧௦)

**334.** தத்துவ நீக்கி மருணீக்கித் தானாகி
பொய்த்தவ நீக்கி மெய்ப் போகத்துட் போக்கியே
மெய்த்த சகமுண்டு விட்டுப் பரானந்தச்
சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே. (௧௧)

---

330. இயங்கும் என்னுந் தன்வினை பிறவினைப் பொருள்தந்து நின்றது, ஜனன மரணங்களில் அலையச் செய்யு மென்பது பொருள்; முந்தார்=முதன்மை யடையாதார்.

331. பராக்கு=வேறொரு பொருளைக் கருதியிருத்தல்; இராப்பகலற்றவிறை=காலவெல்லை கடந்தசிவம்; இராப்பகன் மாயை இரண்டிடம்=காலதத்துவமான மாயாகாரியமாயுள்ள இராபகலென்னு மிரண்டினிடத்திலும்; கேவல சகல மென்னினுமாம்.

332. சமயத்தோர்=சக்திமதத்தோர்; சத்தி சிவஞானம்=சத்தியாகிய சிவஞானம்; சத்திய ஞான ஆனந்தம்=சத்துச்சித்தானந்தமாம் சிவசொரூபம்.

333. சத்தன்=சக்தியைத் தன்வசமாகவுடையசிவன்; சத்தியுமெண்சித்தித்தன்மையும்=சர்வ வல்லமையும் அஷ்டமாசித்தித்தன்மையும்.

334. தத்துவம்=புறநிலை உண்ணிலைக்கருவிகள்தொண்ணூற்றாறும்; தானாகி=ஜீவான்மா தனித்து நின்று; மெய்த்தசகம்=உண்மையாகத் தோன்றிய உலகம்; உண்டுவிட்டு=தோன்றா மலடங்கச்செய்து; பரானந்த சித்தி=சிவானந்தப்பேறு.

335. யோகிகள் கால்கட்டி யொண்மதி யானந்தப்
போத வமுதைப் பொசித்தவ ரெண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்
றாறு மதத்தா லறிவழிந் தாரே. (௧௨)

336. உண்ணீ ரமுத முறுமூற லைத்திறந்
தெண்ணீர் குரவ னிணையடித் தாமரை
நண்ணீர் சமாதியி னாடி னிரானலங்
கண்ணாரொ டேசென்று கால்வழி காணுமே. (௧௩)

முதற்றந்திரம் முற்றிற்று.

---

335. கால் கட்டி=பிராணவாயுவை வசப்படுத்தி; போதவமுது=ஞானாமிர்தம்; மூடராய்ப் போகமுற்று என்றும் பாடம்; ஆறு மதம்=ஆறு என்றெண்ணப்படும் உட்சமயமும் புறச் சமயமுமாம்.

336. உண்ணீர்=உண்டிடுவீர்; ஊறல்=ஊற்று; தெண்ணீர் குரவன்=தெளிந்த தன்மையுள்ள குருதேசிகன்; கண்ணார்=சுழுமுனைத் துவாரத்தை யடைத்து நிற்குங் குண்டலி சத்தி; கால்=பிராணவாயு.

## இரண்டாந்தந்திரம்.

---

### க-வது அகத்தியம்.

337. நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன வீச
னடுவுள வங்கி யகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே. (க)

338. அங்கி யுதயம் வளர்க்கு மகத்திய
னங்கி யுதயஞ்செய் மேல்பா லவனொடு
மங்கி யுதயஞ்செய் வடபாற் றவமுனி
யெங்கும் வளங்கொள் ளிலங்கொளி தானே. (உ)

---

### உ-வது பதிவலியில் வீரட்டமெட்டு.

339. கருத்துறை யந்தகன் றன்போ லசுரன்
வரத்தி னுலகத் துயிர்களை யெல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றானே. (க)

340. கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையைப் பரிந்திட்டுச் சந்திசெய் தானே. (உ)

---

337. ஈச னடுவுள வங்கி. அங்கி நடு உள ஈசன் என மாற்றி, அக்கினி பூதத்தின் மத்தியில் உள்ள அல்லது அந்தணரியற்றும் வேள்வித்தீயின் நடுவிலுள்ள ஈசன் என்க.

338. மேல் பாலவன்=மேற்றிசைக் கிறைவனை வருணன்; அங்கியுதயஞ்செய் வடபாற் றவமுனி=சத்திரயாகமென்னும் வேள்வி செய்துகொண்டிருந்த பித்திரமுனி.

339. கருத்துறையந்தகன்=ஜீவர்களுடைய இதயத்திலுள்ள யமன்; குருத்து=நுனி.

340. கொலை=தக்கனது யாகசங்காரம்; சந்திசெய்தான்=பொருத்தினன்.

341. எங்கும் பரந்து மிருநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் றாளுணர் தேவர்கள்
பொங்கு சினத்துள் அயன்றலை முன்னற
வங்கச் சுதனை யுதிரங் கொண் டானே. (௩)

342. எங்குங் கலந்துமென் னுள்ளத் தெழுகின்ற
வங்க முதல்வ னருமறை யோகிபாற்
பொங்குஞ் சலந்தரன் போர்செல்ல நீர்மையி
னங்கு விரற்குறித் தாழிசெய் தானே. (௪)

343. அப்பணி செஞ்சடை யாதிபு ராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கண் மூடர்கண்
முப்புர மாவது மும்மல காரிய
மப்புர மெய்தமை யாரறி வாரே. (௫)

344. முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியு
ளத்தி யுரியர னாவ தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரு
மத்தியி னுள்ளெழுந் தன்று கொலையே. (௬)

345. மூலத்து வாரத்து மூளு மொருவனை
மேலைத் துவாரத்தின் மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங் கியோகமாய்
ஞாலக் கடவூர் நலமா யிருந்ததே. (௭)

346. இருந்த மனத்தை யிசைய விருத்திப்
பொருந்திய லிங்க வெளியது போக்கித்
திருந்திய காமன் செயலழி யத்தங்
கருந்தவ யோகங் கொறுக்கை யமர்ந்ததே. (அ)

---

342. அங்கமுதல்வன் = வேத அங்கங்களுக்குத் தலைவன்; அருமறை யோகி=அரியவேதம் புகழும் யோகி.

343. மும்மல காரியம் = மும்மலத்தினா லாகிய ஸ்தூல சூட்சும காரணமென்கிற முச்சரீரங்கள்.

345. மூலத்துவாரம்=மூலாதாரத்திலுள்ள சுழுமுனைவாயில்; மேலைத்துவாரம்=பிரமரந்திர மார்க்கம். மேல்-துவாதசாந்தம்.

346. லிங்கவெளி=சதாசிவம் வசிக்கின்ற பரமாகாயம்.

× தசபுராணம். தேவாரம் பொது அப்பர். இலிங்கபுராணம் திருக்குறுந்தொகை.



## ரு-வது இலிங்கபுராணம். ×

347. அடிசேர்வ னென்னவெம் மாதியை நோக்கி
முடிசேர் மலைமக னார்மக ளாகித்
திடமாத வஞ்செய்து தேவ ரறியப்
படியார வர்ச்சித்துப் பத்திசெய் தாளே. (க)

348. திரிகின்ற முப்புரஞ் சென்ற பிரானை
யரியனென் றெண்ணி யயர்வுற வேண்டாம்
புரிவுடை யாளர்க்குப் பொய்யல னீசன்
பரிவொடு நின்று பரிசறி வானே. (உ)

349. அழிவ லங்கொண் டயன்மா லிருவரு
மழிவ லஞ்செய்ய வொண்சுட ராதியு
மாழிகொ டுத்தன னச்சுதற் கவ்வழி
வாழிப் பிரமற்கும் வாள்கொடுத் தானே. (ந)

350. தாங்கிய விருபது தோளுந் தடவரை
யோங்க வெடுத்தவ னொப்பில் பெருவலி
யாங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்
னீங்கா வருள்செய்தா னின்மலன் றானே. (ச)

351. உறுவ தறிதண்டி யொண்மணற் கூட்டி
யறுவகை யானைந்து மாட்டத்தன் றாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே. (ரு)

---

347. மலைமகனார் = மலையரசன் ; முடிசேரிமவான் மலைமகளாகி என்றும் பாடம்; படியார வர்ச்சித்து = நான்முறைப்படி நிரம்ப வர்ச்சித்து.

348. முப்புரஞ்சென்ற=ஸ்தூல சூட்சும காரண சரீரங்களில் அந்தரியாமியாயுள்ள; முப்புரஞ் செற்ற என்றும் பாடம்; புரிவு= அன்பு.

349. அயன்மால், மால்அயன் என்று மாற்றுக; அவ்வழி=அப்படியே.

350. ஓங்க=மேலெழும்ப; அமரா=ஈறிலாத ஈசனே.

351. உறுவது=சிவபூசையால் வரும் பலன்; மனிதப் பிறப்பா லடையப்படுவேது எனினுமாம். அறுவகை = பிறப்பறும்படி; மறுமழு என்றது, தண்டியடிகள் கையிலிருந்த பசுபாலனக் கோலே மழுவாக மாறியது என்பது விளக்கின்றது. ?

352. ஓடிவந் தெல்லா மொருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி யிறைவர் நமவென்று கும்பிட
வேடில் புகழோ னெழுக வென்றானே. (௬)

---

### ௬-வது தக்கன் வேள்வி.

353. தந்தைபி ரான்வெகுண் டான்றக்கன் வேள்வியை
வெந்தழ லூடே புறப்பட்ட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தின ரண்ணல் சினஞ்செய்த போதே. (௧)

354. சந்திசெய் கண்டெழு கின்றரி தானு
மெந்தை யிவனல்ல யாமே யுலகினிற் இவன்அன்று யாமே அல்லாம்.
பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய
வந்தமி லானு மருள்புரிந் தானே. (௨)

355. அப்பரி சேயய னார்பதி வேள்வியு
ளப்பரி சங்கி யதிசய மாகிலு
மப்பரி சேயது நீர்மையை யுள்கலந்
தப்பரி சேசிவ னலிக்கின் றானே. (௩)

356. அப்பரி சேயயன் மான்முதற் றேவர்க
ளப்பரி சேயவ ராகிய காரண
மப்பரி சங்கியு நாளுமுள் ளிட்ட
வப்பரி சாகி யலர்ந்திருந் தானே. (௪)

---

352. எடில்புகழோன்=எட்டிலெழுதாமறையாலாகிய புகழோன்.
ஏட்டிலெழுதியடங்காப் புகழுமாம்.
353. வெந்தழலூடே புறப்பட்ட விண்ணவர்=வேள்வித்தீயிலிருந்து அவியுண்ணப் போந்த தேவர்கள்; முறைகெட்டு = நிலைதடுமாறி.

354. சந்திசெய்கண்டு = சமாதானஞ் செய்தலைக்கண்டு; பாசத்து வீழ்ந்து=பாசத்தில் அழுந்தி (யுளேமென்று). அயன்=இறைவி.

355. அப்பரிசே யயனுபதி யென்றும் பாடம்; பதிவேள்வி=தலைவனிய [illegible]

356. நாளும்=நட்சத்திர தேவதைகள்;அலர்ந்திருந்தான்=முகமலர்ந்திருந்தான்; சாத்தனு யிருந்தானெனினுமாம்.

357. அலந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
வுவந்த பெருவழி யோடிவந் தானே. (௫)

358. அரிபிர மன்றக்க னருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் லிந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தா
னரனரு ளின்றி யழிந்தநல் லோரே. (௬)

359. செவிமந்தி ரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்
விதிமந்தி ரத்தி னடுக்களைக் கோலிச்
செவிமந்தி ரஞ்செய்து தாமுற நோக்குங்
குவிமந்தி ரங்கொல் கொடியது வாமே. (எ)

360. நல்லார் நவகுண்ட மொன்பது மின்புறப்
பல்லா ரமரர் பரிந்தருள் செய்கென
வில்லாய் வரையை விளங்கொளி கொற்றவன்
பொல்லா வசுரர்கள் பொன்றும் படிக்கே. (அ)

361. தெளிந்தார் கலங்கினு நீகலங் காதே
யளிந்தாங் கடைவதெம் மாதிப் பிரானை
விளிந்தானத் தக்கனவ் வேள்வியை வீயச்
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யாளே. (௯)

---

357. குலந்தருகீழங்கி=குலத்திற் கீழான அக்கினி; (ஆக்கிநைவைஷ்ணவம் என்ற கன்மத்தில் விஷ்ணுவை முடியாகவும், அக்கினியை அடியாகவும் இட்டு வேள்வி புரிதல் நியதம். அவ்வவதரத்தில் அக்கினி கீழ்க்குலமென்று கொள்ளப்படுமென்க); கோள்உற=வலிமைபெற; சிவந்த=கோபித்த; பெருவழி=பெருமையுள்ள அன்பின் வழியிலே.

358. வாலை=இளம்பெண், தக்கன்மனைவி; (இது உபலக்கணமாய் வேள்விகாணவந்திருந்த எல்லாப்பெண்களையுங் குறித்தது); வாலைவன்னி யெனக்கொண்டு, தூய்மையுள்ள ஐவகையான அக்கினி யெனினுமாம்(ஐவகை அக்கினியாவன:—காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி, சம்ஸப்யம், ஆவசத்தியம் என்பன).

359. செவி=செபித்தற்குரிய; அடுக்களை=அவிசாக்கும் குண்டம்; குவிமந்திரம்=மனமொடுங்குதற்குரிய மந்திரம்.

360. நவகுண்டம்=ஒன்பது குண்டம்; (இது ஓர் வகையாகம்).

361. அளிந்து=மனமுருகி; சுளிந்தாங்கு=கோபித்தபடியே; தூய்மொழியாள்=தவறுதலில்லாத சொல்லையுடைய உமாதேவி.

### ரு-வது பிரளயம்.

**362.** கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல விறைவ
னொருவனு நீருற வோங்கொளி யாகி
அருவரை யாங்கின் றருள்புரிந் தானே. (க)

**363.** அலைகட லூடறுத் தண்டத்து வானோர்
தலைவ னெனும்பெயர் தான்றலை மேற்கொண்
டுலகா ரழற்கண் டுள்விழா தோடி
யலைவாயில் வீழாம லஞ்சலென் றானே. (உ)

**364.** தண்கடல் விட்ட தமரருந் தேவரு
மெண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர்
விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்
கண்கடல் செய்யுங் கருத்தறி யாரே. (ங)

**365.** சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி
யமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி யோசை
மிகைக்கொள வங்கி மிகாமை வைத்தானே. (ச)

**366.** பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாத கமலத் திருக்கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாது விருத்திக் கொண்டானே. (ரு)

---

362. கருவரை=பெரியமலை; கலந்தெழும் வெள்ளி என்றும் பாடம்; இருவரும்=பிரமவிஷ்ணுக்கள்; இகல=ஓய்ப, ஒருவனும்= சிவனொருவனே.

363. ஊடறுத்து=நடுவிற் கிழித்துக்கொண்டு(தோன்றி);ஆரழல்= எரிகின்ற அக்கினிப்பிரளயம்; அலைவாய்=அலைமயமான பிரளய காலச்சமுத்திரம்.

364. எண்கடல்=அளவுபடாத அன்பரது கருத்து என்பது குறித்தது; விண்கடல செயதவா=ஆகாயமளவுங் கடலைபபொங்கி யெழச்செய்த சிவபெருமான்; கண்கடல்=அன்பர்கள் அநேகரது கண்கள்; (கடல்போலும் பெரிதாகிய ஞானக்கண் எனினுமாம்).

365. அமைக்கவல்லார் = மனதி லிருத்தித் துதிக்க வல்லவர்; ஒலி ஒசை, வினைத்தொகை; மிகைக்கொள=மேற்பட; அங்கி= வடவானலம்.

366. பண்பு அழிசெய் வழிபாடு=தகுதியற்ற வணக்கம்; நண்பழியாளன்=நேசத்தன்மையில்லாத பிரமன்; விருத்தி=ஐயமேற்குந் தொழில்.

## கூ-வது சக்கரப்பேறு.

**367.** மால்போ தகனென் னும் வண்மைக்கிங் காங்காரங்
கால்போதங் கையிளே டந்தரச் சக்கர
மேல்போக வெள்ளி மலையம ராபதிப்
பார்போக மேழும் படைத்துடை யானே. (௧)

**368.** சக்கரம் பெற்றுநற் றூமோத ரன்றானுஞ்
சக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணுமையால்
மிக்கான் றன்னை விருப்புட னர்ச்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே. (௨)

**369.** கூறது வாகக் குறித்துநற் சக்கரங்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து தரித்தனன் கோலமே. (௩)

**370.** தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பாற்
றக்கன்றன் வேள்வியிற் றூமோ தரன்றானுஞ்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
வக்கி யுமிழ்ந்தது வாயுக் காத்திலே. (௪)

---

367. போதகன்—குரு; (திருமால், சைவசமய குரவர் எழுவருள் ஒருவரென்பது, "திருமாலிங் கிரன்பிரம னுபமனியன் றபன னந்தி செவ்வேளாதித், தருமமுது குரவருக்குந் தனதருளா லாகியத தலைமை நல்கி" என்பதனுலுணர்க; ஆங்காரங் கால்போது—அகந்தைமேலிட்ட காலத்து; மேல்போக— ஆகாயத்திற் சென்று மறைய; அமர்ஆபதி — தங்குகின்ற இடபவாகனனுன இறைவன்; அல்லது பசுபதி.

368. தக்க நற்சத்தி—தனக்குரிய வல்லமையை; கூறுசெய்தது— பகிர்ந்து கொடுத்தது.

369. கூறது செய்து கொடுத்தனன் சத்திக்கு—தனது சங்கார சத்தியைப் பங்கிட்டுத் துர்க்கைக்குந் தந்தருளினுன், அல்லது தனது திருமேனியைக் கூறுசெய்து உமாதேவியாருக்கொரு பாகங் கொடுத்தருளினுன்; கோலம்—ஆயுதம்; தனது சக்தியையே ஆயுதமாகக் கொண்டானென்க.

370. சசிமுடி—சந்திரனைச்சூடிய வீரபத்திரர்; வக்கி (வட்கி)—நாணி அல்லது வல்லமை கெட்டு; வாயுக்காத்திலே (வாய் உங் காரத்திலே) — வாயிலிருந்துண்டாம் அதட்டொலியால்.

### எ-வது எலும்புங் கபாலமும்.

371. எலும்புங் கபாலமு மேந்தி யெழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
யெலும்புங் கபாலமு மேந்தில னாகி
லெலும்புங் கபாலமு மிற்றுமண் ணாமே.

### அ-வது அடிமுடி தேடல்.

372. பிரமனு மாலும் பிரானேநா னென்னப்
பிரமன்மா றங்கடம் பேதமை யாலே
பரம னனலாய்ப் பரந்துமுன் னிற்க
வரனடி தேடி யரற்றுகின் றாரே.

373. ஆமே ழுலகுற நின்றவெம் மண்ணலுந்
தாமே ழுலகிற் றழற்பிழம் பாய்நிற்கும்
வானே ழுலகுறு மாமணிக் கண்டனை
நானே யறிந்தே னவனாண்மை யாலே. (உ)

374. ஊனா யுயிரா யுணர்வங்கி யாய்முன்னஞ்
சேணுவா னெங்குந் திருவுரு வேயண்டத்
தாணுவு ஞாயிறுந் தண்மதி யுங்கடந்
தாண்முழு தண்டமு மாகிநின் றானே.

---

371. அலம்பல்மணிமுடி=தளும்பி வழிவதுபோலு மொளிபொருந்திய மணிமுடி; வானவாதி = தேவர்க்குத் தலைவனான சிவன்.

373. ஆண்மை=வலிமை.

374. இச்செய்யுள் முதல் "ஊழி வலஞ்செய்த" என்ற செய்யுள்வரை "சர்வோபாதானம்" என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது. முன்னம்=பிரமனும் விண்டுவும் தான்றானே பிரமமென அமராடிய காலம்; சேணுவானெங்கும்=எட்டாததூரம் வரையிலும் நிமிர்ந்த; சேணும்வான் என்றும் பாடம்; அண்டத்துத்தாணு=அண்டங்கட் காதாரமான ஸ்தம்பம்; ஆண்முழுதண்டம் (ஆள்முழுதண்டம்)=ஆளுகின்ற அண்டங்கள் முழுமையும்.

375. நின்றா னிலமுழு தண்டத்து ணீளிய
னன்றே யவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றா ரிருவர் திருமுடி மேற்செல
நன்றாங் கழலடி நாடவொண் ணாதே. (௪)

376. சேவடி யேத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றானு முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனுந்
தாவடி யிட்டுந் தலைப்பெய்து மாறே. (௫)

377. தானக் கமலத் திருந்து சதுமுகன்
றானக் கருங்கட லூழித் தலைவனு
மானத்தி னுள்ளே யுயிர்போ லுணர்கின்ற
தானப் பெரும்பொருட் டன்மைய தாமே. (௬)

378. ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்
டாலிங் கனஞ்செய் துலகம் வலம்வருங்
கோலிங்க மைஞ்சருள் கூடலு மாமே. (௭)

379. வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்க
ளாள்கொடுத் தெம்போ லரனை யறிகில
ராள்கொடுத் தின்பங் கொடுத்துக் கோளாகத்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே. (௮)

375. அண்டத்து நேரே என்றும் பாடம்; நன்றே அயன் என்றும் பாடம்; அது—அவ்வடிவத்தை; இருவர்—பிரமன் விண்டு; மேற்செல — ஆராய்ந்து செல்லுந்தோறு மேலே வளர்ந்து செல்ல; நன்றாங் கழலடி—அழகிய கழல்புனைந்த பாதம்.

376. செறிவுடைவானவர்—கூட்டமான தேவர்கள்; பாவடி—கீத வடிவான வேதம்; பதஞ்செய்—இன்பஞ்செய்கின்ற, அல்லது பாடுகின்ற; தாவடியிட்டும் — தேடி யலைந்தும்; தலைப்பு—(அவ்வடிவத்தின் கீழுமேலுமாகிய) முடிவிடம்.

377. திருந்து சதுமுகன், வினைத்தொகை; கருங்கடலூழித்தலைவனும் என்பதை கருங்கடற் றலைவனும், ஊழித்தலைவனும் எனப் பதம் பிரித்துக்கூட்டித் திருமாலும் உருத்திரனுமென்றுகொள்க.

378. ஆலிங்கனஞ்செய்து—எல்லாவற்றிலுங் கலந்து; மெய்ந்நெறி—வேறற்றிருக்கும் அத்துவிதநெறி; கோலிங்கம் ஐஞ்சு—தலைமைத்தன்மையுள்ள பஞ்சப்பிரமம்.

379. வாள்—அறிவாகிய ஒளி; ஆள்கொடுத்து—அடிமையாகக் கொடுத்து; கோள் ஆக—வலிமையுண்டாமாறு.

380. ஊழி வலஞ்செய்தங் கோரு மொருவற்கு
வாழிச் சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்திது தாவென
வூழிக் கதிரோ னொளியை வென்றானே. (௯)

---

௯-வது சர்வசிருஷ்டி.

381. ஆதியொ டந்தமி லாதப ராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாந்
தீதில் பரையதன் பாற்றிகழ் நாதமே. (௧)

382. நாதத்தில் விந்துவு நாதவிந் துக்களில்
தீதற்றகம் வந்த சிவன்சத்தி யென்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே. (௨)

383. இல்லது சத்தி யிடந்தனி லுண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும்
வல்லது வாக வழிசெய்த வப்பொருள்
சொல்லது சொல்லிடிற் றூராதி தூரமே. (௩)

384. தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியா
யார்வத்து நாத மணைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முத லைந்துக்கு
மார்வத்துச் சத்தியோ ராவத்து மானுமே. (௪)

---

380. சதுமுகன்—சிருஷ்டித்தொழிலுடைமை பற்றிச் சிவனைக்குறித்தது; வீழி—ஒருசெடி; அல்லது விழுதுபோலுஞ் சடையெனினுமாம்.

381. பரம்—துரியாதீத சிவம்; பரை—சத்தி.

382. தீதற்றகம்வந்த—குற்றமற்ற வன்பரது இதயத்தி லெழுந்தருளிய; விச்சை (வித்தை)—சுத்தவித்தை.

383. இல்லது—மாயை; வல்லது வழி ஆக—வல்லமையுள்ள அந்த மாயை மூலமாக; செய்த—சிருஷ்டித்த.

384. பாரம்—பெருமை; ஓரா வத்துமானும் — ஆராய்ந்தறியப்படாத பரம்பொருளை யொக்கும்; சார்வத்துச் சத்தியோர் சாரத்துமானுமே என்றும் பாடம்.

**385.** மானின்கண் வாஞகி வாயு வளர்ந்தனற்
கானின்க ணீருங் கலந்து கடினமாய்த்
தேனின்க ணைந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்க ணின்று பொருந்தும் புவனமே. (௫)

**386.** புவனம் படைப்பா ைெருவ ைெருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திர ரைவர்
புவனம் படைப்பானும் பூமிசை யாஞய்ப்
புவனம் படைப்பானப் புண்ணியன் ருனே. (௬)

**387.** புண்ணிய னந்தி பொருந்து முலகெங்கு
மண்ணியல் பாகி வளர்ந்திடுஞ் சத்தியுந்
தண்ணியல் பாகித் தரணி முழுதுமாய்க்
கண்ணியல் பாகிக் கலந்தெழும் பூவிலே. (எ)

**388.** நீரகத் தின்பம் பிறக்கு நெருப்பிடை
காயத்திற் சோதி பிறக்குமக் காற்றிடை
யோர்வுடை நல்லுயிர்ப் பாத மொலிசத்தி
நீரிடை மண்ணி னிலேபிறப் பாமே. (அ)

**389.** உண்டுல கேழு முமிழ்ந்தா னுடஞகி
யண்டத் தமரர் தலேவனு மாதியுங்
கண்டச் சதுமுகக் காரணன் றன்ைெடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே. (௯)

---

385. மான் = அசுத்தமாயை; வாரிவளந்தனிற்கானின் என்றும் பாடம்; கடினம்=கடினத்தன்மையுள்ள பிருதிவி; தேன்= மாயாசத்தி; ஐந்து=சூட்சுமபூதங்களாகிய தன்மாத்திரைகள் ஐந்து; பூ=பூ என்னும் வியாகிருதி.

386. ஒருவன் ஒருத்தி=சிவன் சத்தி; புத்திரரைவர் = சதாசிவன், மஹேசன், உருத்திரன், விண்டு, பிரமன்.

387 மண்ணியல்பு=நிலத்தின் றன்மை; சத்தி நிலம்போலவும், சிவம் தண்ணீர் போலவுங் கலந்து பிரபஞ்சமாய் விரிந்திருக்கின் ருர்களென்பது இம்மந்திரத்தின் கருத்து.

388. அகம்=பூமி; காயம்=ஆகாய பூதம்; சோதி=தீ; நெருப்பிடை இன்பம்நீர் அகம் பிறக்கும், காயத்தில் அ காற்றிடை சோதி யெனமாற்றி, நெருப்பிலே இன்பநீரும், (அதிலே) பூமியும் பிறக்கும், வானத்தில் தீயும், தீயில் நீரும் பிறக்குமெனப் பூதோற்பத்தி முறைகொள்க.

389. அமரர்தலேவன்=உருத்திரன்; பொருள்=துரியசிவம்.

**390.** ஓங்கு பெருங்கட லுள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் றானும்
வீங்குங் கமல மலர்மிசை மேலய
னோங்குயிர் வைக்கு மதுவுணர்ந் தானே. (க0)

**391.** காரண னன்பிற் கலந்தெங்கு நின்றவன்
நாரண னின்ற நடுவுட லாய்நிற்கும்
பாரண னன்பிற் பதஞ்செய்யு நான்முக
னாரண மாயுல காயமர்ந் தானே. (கக)

**392.** பயனெளி தாம்பரு மாமணி செய்ய
நயனெளி தாகிய நம்பனென் றுண்டு
வயனொளி யாயிருந் தங்கே படைக்கும்
பயனெளி தாம்வய ணந்தெளிந் தேனே. (கஉ)

**393.** போக்கும் வரவும் புனித னருள்புரிந்
தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து
மேக்கு மிகநின்ற வெட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் றானே. (கஙு)

**394.** நின்றுயி ராக்கு நிமலனென் னுருயி
ரொன்றுயி ராக்கு மளவை யுடலுற
முன்றுய ராக்கு முடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே. (கச)

---

390. வீங்கும்=பெரிதான.

391. உடல் நடு ஆய்நிற்கும் = இதயஸ்தானத்தில் நிலைபெற்றிருப்பன்; பாரணன்=துதிக்கப்படுகிறவன்; பதஞ்செய்யும்=பதவியையளிப்பன்; ஆரணம்=சொன்மய பிரபஞ்சம்; உலகு=பொருட் பிரபஞ்சம்.

392. நயன்=இன்பம்; அயனொளியாய்=பிரமனுக்கு ஞானவொளியாகி; வயணம்=காரணம்.

393. போக்கு=சங்காரம்; வரவு=படைப்பு; ஆக்கம்=சிருட்டி; தாக்கும்=பொருந்தும்.

394. ஒன்று உயிராக்கும் அளவை=(சரீரத்தோடு) பொருந்துகின்ற ஜீவனும்படி சிருட்டிக்கின்ற காலத்து; முன்துயர் ஆக்கும்=பூர்வ ஜன்மத்துத் துயருக்கிடமான கன்மத்தின்படியே சிருட்டிப்பன்; உயிர்ப்பான்=பிராணவாயுவாயு மியங்குவன்.

395. ஆகின்ற தன்மையி லக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துட லாயுள
னாகின்ற தன்மைசெய் யாண்டகை யானே. (கரு)

396. ஒருவ னொருத்தி விளையாட லுற்று
றிருவர் விளையாட்டு மெல்லாம் விளக்கும்
பருவங்க டோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே. (கசு)

397. புகுந்தறி வான்புவ னாபதி யண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முழக் காகிநின் றாரே. (கள)

398. ஆணவ சத்தியு மாமதி லைவருங்
காரிய காரண வீசர் கடைமுறை
பேணிய வைந்தொழி லால்விந்து விற்பிறந்
தாணவ நீங்கா தவரென லாகுமே. (கஅ)

395. ஆகின்ற தன்மையில் = பிரபஞ்ச முண்டாதற் பொருட்டு; அக்கு=எலும்புமாலை; வேகின்ற செம்பொன் = உருகுகிற சிவந்ததங்கம்; மேல்அணி=மேலான வழகிய; போகின்ற சீவன்=சரீரத்தை விட்டுப்போமுயிர்; புகுந்த உடலாய் உளன்=(பிரபஞ்ச ஒடுக்க காலத்தில்) போய்நிற்றற்குரிய உடலாகவும் (அடையுமிடமாகவும்) இருக்கின்றான்.

396. திருஒன்றின்=(ஈசன்) மாயாசத்தியொடு கூடின்.

397. புவனாபதியண்ணல் = புவனேசுவரிக்குத் தலைவனான சிவன், உருத்திரனெனினுமாம்; உழக்கு = ஓரளவுகருவி; ஈண்டு ஜடமென்று விளக்கி நின்றது, உருத்திரன், மால், பிரமன் இவர்கள் வஸ்துக்களை யள்விட்டறிதற்குரிய கருவிபோன் றிருத்தலால் ஈசன் அவர்களுள் கலந்திருந்து யாவுமுணர் வானென்பது.

398. ஆணவசத்தியு மாமதிலைவரும்=ஆணவமல சத்தியிலுதித்தவரான அணுபட்ச சதாசிவாதி யைவர்; காரியகாரண வீசர் (காரியவீசர் காரணவீசர்)=அணுபட்சத்தார் காரியவீசரும் சம்பு பட்சத்தார் காரணவீசருமாம்; விந்து=சுத்தமாயை; ஆணவநீங்காதவர்=அதிகாரமலத்தர்.

396- எல்லாம் - சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம்.

399. உற்றமுப் பாலொன் றுமையா ளுதயமா
மற்றைய மூன்றுமா யோதயம் விந்து
பெற்றவ ணாதம் பரையிற் பிறத்தலாற்
றுற்ற பரசிவன் ரொல்வினை யாட்டிதே. (க௯)

400. ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய விச னரன்மால் பிரமனு
மாகாயம் பூமியுங் காண வளித்ததலே. (உ0)

401. அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னி
லளியார் திரிபுரை யாமவ டானே
யளியார் சதாசிவ மாகிய மைவா
ளளியார் கருமங்க ளைந்துசெய் வாளே. (உக)

402. வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி
காரண காரிய மாகக் கலந்தவள்
வாரணி யாரணி யானவம் மோகினி
பூரணி போதாதி போதமு மாமே. (உஉ)

403. நின்றது தானுய் நிறைந்த மகேசுரன்
சென்றங்கி யங்கி யரன்றிரு மாலவன்
மன்றது செய்யு மலர்மிசை மேலய
னென்றிவ ராக விசைந்திருந் தானே. (உ௩)

---

399. முப்பால்=காரணவீசர்க்குரிய முக்குணம்; உமையாளுதயம்=சிற்சத்தியினிடத்துத்தோன்றும்; மற்றைய மூன்று=காரிய ஈசர்க்குரிய முக்குணங்கள்; விந்துபெற்றவள் நாதம்=விந்துவுக்குற்பத்தி ஸ்தானம் நாதசத்தி; பரையிற் பிறத்தலால்=நாதசத்தி பராசத்தியிடத்தி லுற்பவிப்பதால்; உற்ற பரசிவன்=பராசத்தியை யுரிமையாகக்கொண்ட பரசிவன்.

400. ஆகாயமாதி = ஆகாயமுதலிய ஐந்து பூதங்கள்; சதாசிவ ராதி=சதாசிவன் முதலிய பஞ்சமூர்த்திகள்; மாகாயம்=மஹா ஆகாயம்; காணவளித்தல்=புலனுக்குத்தோன்றுமாறு ஸ்தூலமா யுண்டாக்கல்.

401. அளியார் முக்கோணம் = கருணை நிறைந்த முக்கோணம்; வயிந்தவந்தன்னில்=பிந்துபீஜத்தில் விளங்குகின்ற.

402. போதம்=சிற்றறிவு; அதிபோதம்=பேரறிவு.

403. மன்றது செய்யும்=வாசனை வீசுகின்ற.

404. ஒருவனு மேயுல கேழும் படைத்தா
னொருவனு மேயுல கேழு மளந்தா
னொருவனு மேயுல கேழுங் கடந்தா
னொருவனு மேயுட லோடுயிர் தானே. (உச)

405. செந்தா மரைவண்ணன் றீவண்ண னெம்மிறை
மஞ்சார் முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்துக்
கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்து
மைந்தார் பிறவி யமைத்துநின் றானே. (உரு)

406. தேடுந் திசையெட்டுஞ் சீவ னுடலுயிர்
கூடும் பிறவிக் குணஞ்செய்த மாநந்தி
யூடு மவர்தம துள்ளத்தி னுண்ணின்று
நாடும் வழக்கமு நானறிந் தேனே. (உசா)

407. ஓராய மேயுல கேழும் படைத்தது
வோராய மேயுல கேழு நடப்பது
வோராய மேயுல கேழு மிறப்பது
வோராய மேயுட லோடுயிர் தானே. (உஎ)

408. நாத னொருவனு நல்ல விருவருங்
கோது குலத்தொடு கூட்டிக் குழைத்தன
ரேது பணியென் றிசையு மிருவருக்
காதி யிவனே யருளுகின் றானே. (உஅ)

404. பிரமன், திருமால், உருத்திரன், சீவவர்க்கம் எல்லாம் சிவனே யென்பது கருத்து.

405. செந்தாமரை வண்ணன் தீவண்ணன்=செந்தாமரை நிறத்தையும் தீ நிறத்தையுமொத்த சிவன்; மாயஞ்செய்பாசம்=மாயையாலுண்டாம் காதல்; குழலியர் கூடிய கூட்டத்து = குழலியரொடு (ஆடவர்) சேர்ந்த புணர்ச்சியினல்; மைந்தார் பிறவி=வலிய பிரபஞ்சோற்பத்தி; அல்லது மைந்தர் என்பது எதுகை நோக்கி மைந்தார் என விகாரப்பட்டது எனக்கொண்டு பிரஜோற்பத்தி யெனினுமாம்.

406. சீவன் உடல்உயிர் கூடும்பிறவி(உடலுயிர் கூடும்சீவன்பிறவி)=உடலோடுயிர் கூடுதலாகிய சீவோற்பத்தி; ஊடுமவர்=மாறுபடும் சீவர்.

407. ஓராயம்=சத்தியுஞ் சிவமுங்கூடிய கூட்டம்; ஓராயமே யுடலோடுயிர்=(சத்தியின்கூறு உடலும் சிவத்தின் கூறு சீவனு மாதலால்) அவ்விருவர் கூட்டமே யுடலுமுயிருமாம்.

408. கோதுகுலம்=அசுத்தமாயையின் காரியங்கள்.

இக்கருத்துப்பற்றியே "போகமின்றபுண்ணியன்" என்றும் பிறரும்.

409. அப்பரி செண்பத்து நான்குநூ றுயிர
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கு
மப்பரிசே தென்று புகலு மனிதர்க
ளப்பரிசே யிருண் மூடநின் றாரே. (உகூ)

410. ஆதித்தன் சந்திர னங்கி யெனப்பலர்
போதித்த வானொலி பொங்கெரி நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிக
ளோதுற்ற மாயையின் விந்துவி னுற்றவே. (ஙo)

கo-வது திதி.

411. புகுந்துநின் றான்வெளி யாயிரு ளாகிப்
புகுந்துநின் றான்புகழ் வாயிகழ் வாகிப்
புகுந்துநின் றானுட லாயுயி ராகிப்
புகுந்துநின் றான்புந்தி மன்னிநின் றானே. (க)

412. தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடன்மலை யாதியு மாய்நிற்குந்
தானே யுலகிற் றலைவனு மாமே. (உ)

413. உடலா யுயிரா யுலகம தாகிக்
கடலாகிக் கார்முகி னீர்பொழி வானாகி
யிடையா யுலப்பிலி யெங்குந் தானாகி
யடையார் பெருவிழி யண்ணனின் றானே. (ங)

---

409. அப்பரிசேதென்று புகலு மனிதர்கள் = சத்தி சிவத்தாற் பிரபஞ்சம் விரிந்ததில்லையென்று கூறு நாத்திகர்; இருண்மூடநின்றார்=மூலமலத்தான் மறைக்கப்பட்டுள்ளார்.

410. பலர்போதித்த=பலரால் தெய்வமெனக் கூறப்பட்ட; வாதித்த=தர்க்கித்த; சத்தாதி = சப்தமுதலிய தன்மாத்திரைகள்; வாக்கு=வாக்காதி கன்மேந்திரியங்கள்; மனாதி=மனமுதலிய அந்தக்கரணங்கள்; மாயையின் விந்துவினுற்றது=அசுத்தமாயையிலும் சுத்தமாயையிலிருந்து முண்டாயின.

413. இடையாய் = (அவற்றின்) உள்ளுறைபவனாய்; பெருவிழி=எங்கும் பார்வையுள்ள கண்.

**414.** தேடுந் திசையெட்டுஞ் சீவ னுடலுயிர்
கூடு மரபிற் குணஞ்செய்து மாநந்தி
யூடு மவர்தம துள்ளத்து ளேநின்று
நாடும் வழக்கமு நானறிந் தேனே. (ச)

**415.** தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்குந்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்குந்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்குந்
தானொரு காலந்தண் மாயனு மாமே. (ரு)

**416.** அன்பு மறிவு மடக்கமு மாய்நிற்கு
மின்பமு மின்பக் கலவியு மாய்நிற்கு
முன்புறு காலமு மூழியு மாய்நிற்கு
மன்புற வைந்தி னமர்ந்துநின் றானே. (சு)

**417.** உற்று வனைவா னவனே யுலகினைப்
பெற்று வனைவா னவனே பிறவியைச்
சுற்றிய சாலுங் குடமுஞ் சிறுதூதை
மற்று மவனே வனையவல் லானே. (எ)

**418.** உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றார்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியா னிலங்கொளி
யுள்ளுயிர்க் கும்முணர் வேயுட லுட்பரந்
தள்ளுயி ராவண்ணந் தாங்கிநின் றானே. (அ)

---

414. கூடுமரபில் குணஞ்செய்து = வினைவசத்தாற் சேர்தற்குரிய குணங்களை யுண்டாக்கி; நாடும் வழக்கம் = (சாட்சியாயிருந்து அவரவர் எண்ணங்களை) உணருமியல்பு.

415. தண்மாயனுமாய் நிற்கும் = (திதிக்கும் பொருட்டுச்) சாந்த குணமுள்ள திருமாலாகவு மிருப்பர்.

416. இன்பமும் இன்பக்கலவியும் = காமவின்பமும் அவ்வின்ப நுகர்தற்குரிய புணர்ச்சியுமா மிரண்டனுக்குங் காரணராயிருப்பர்; முன்புறுகாலம் = தோற்றக்காலம்; ஊழி = லயகாலம்; ஐந்தி னமர்ந்து நின்றான் = பஞ்சபூதங்களிலும் நிறைந்திருக்கும் சிவபெருமான்.

417. சாலும் குடமும் = பெரிதுஞ் சிறிதுமா முடல்கள்; சிறுதூதை = சிறிய தொட்டி; முதல் துணை நிமித்தமென்னும் முக்காரணங்களுந் தானேயா யுள்ளவ னீசனே யென்பது இம்மந்திரக் கருத்து.

418. வெள்ளுயிர் = தத்துவங்களொடு புணராது தனித்து நிற்கும் சீவன்; தள்ளுயிர் = (வினைவசத்தால் பலவண்டங்களிலும்) செலுத்தப்படுமுயிர்,

419. தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை
யோங்கி யெழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கிநின் றானுமத் தாரணி தானே. (கூ)

420. அணுகினுஞ் சேயவ னங்கியிற் கூடி
நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணியினும் பார்மிசைப் பல்லுயி ராகித்
தணியினு மன்னுட லண்ணல் செய்வானே. (கo)

---

கக-வது சங்காரம்.

421. அங்கிசெய் தீச னகலிடஞ் சுட்டது
வங்கிசெய் தீச னலைகடற் சுட்டது
வங்கிசெய் தீச னசுரரைச் சுட்டது
வங்கியவ் வீசற்குக் கையம்பு தானே. (க)

422. இலயங்கண் மூன்றினு மொன்றுகற் பாந்த
நிலையன் றிழிந்தமை நின்றுணர்ந் தேனு
னுலைதந்த மெல்லரி போலு முலக
மலைதந்த மானிலந் தான்வெந் ததுவே. (உ)

423. பதஞ்செய்யும் பாரும் பணிவரை யெட்டு
முதஞ்செய்யு மேழ்கட லோத முதலாங்
குதஞ்செய்யு மங்கி கொளுவி யாகாச
விதஞ்செய்யு நெஞ்சின் வியப்பில்லை தானே. (ங)

---

419. தாங்கு அரும் தன்மை=இரட்சிக்கின்ற வரிய வியல்பு; வாங்கிய காலத்தும் = பிரபஞ்சத்தை யொடுக்கிய காலத்திலும்; யோகாந்தம் அவ்வழி=யோக முடிவினு லுணரப்படும் அந்த முத்திநிலம்.

420. அணுகினும்=சீவனோடு கூடியிருந்தாலும்; சேயவன்=எட்டாத தூரத்திலுள்ளவன்; அங்கியிற் கூடி நணுகின்=மூலாக்கினியொடு கலந்து மேனிலஞ்சேரின்; ஞானக்கொழுந்து=முடிந்த ஞானம்; தணியினும்=தங்கியிருந்தாலும்.

421. அசுரரைச்சுட்டது=திரிபுர வரக்கரை யெரித்தது; அம்பு= திரிபுர சங்கார காலத்தில் ஈசன் கைக்கொண்ட பாணம்.

422. இலயமூன்று=தினப்பிரளயம், கற்பாந்தப்பிரளயம், சர்வசங்காரப் பிரளயம் என்பன; உலை=கொல்லனுலை; மெல்லரி= மெல்லிய நெல்.

423. பதஞ் செய்யும் பாரும்=(ஆன்மாக்களுக்கு) இடமாகச்செய்யப்பட்ட உலகும்; முதம்=மகிழ்ச்சி; குதம்=மிகுதி; ஆகாச விதம்=ஆகாயத்தின் மாதிரியாக (தோற்றுதபடி).

424. கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
யண்டத்து ளூறி யிருந்தெண் டிசையாதி
யொன்றின் பதஞ்செய்த வோமென்ற வப்புறக்
குண்டத்தின் மேலங்கி கோலிக் கொண்டானே. (ச)

425. நித்தசங் கார முறக்கத்து நீண்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாஞ்
சுத்தசங் காரந் தொழிலற்ற கேவல
முய்த்தசங் காரம் பரனரு ளுண்மையே. (ரு)

426. நித்தசங் கார மிரண்டுட னீவுதல்
வைத்தசங் காரமு மாயாள்சங் காரமாஞ்
சுத்தசங் கார மனுதீதந் தோய்வித்த
லுய்த்தசங் காரஞ் சிவனரு ளுண்மையே. (சா)

---

424. அண்டத்துளூறியிருந்து=அண்டங்களுக்குள்ளே நிறைந்திருந்து; ஒன்றின் = மாயையென்னு மொருபொருளி னின்று; ஓமென்ற குண்டம் = பிரணவகுண்டம்; கோலிக்கொண்டான்=திரட்டியெடுத்துக்கொண்டான்.

425. நித்த சங்காரம்=தினப்பிரளயம், (சீவனிடத்திலொரு தினத்தினிகழ்வது); உறக்கத்து நீண்மூடம் = உறக்கத்தினால் நீண்டகாலம் மறைப்புண்டிருப்பது; (அதுவே தினசங்காரமாமென்க); சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என நித்திரையின்க ணிகழும் நாலவத்தைகளும் நால்வகையான தினப்பிரளயமாமென்று கொள்க; வைத்த சங்காரம்= ஆன்மாக்களின் களையாற்று நிமித்தம் அநாதியிலேயே நியமித்துள்ள சங்காரம்; கேவலம்=ஆன்மா, அவித்தைஅல்லது மூலமலத்தில் ஒடுங்கியிருக்கும் அவதரம்; உய்த்த சங்காரம் பரனருள் உண்மை=காரணசரீரத்தோடு சிவசத்தியி லொடுங்கி யிருப்பது; சாக்கிராதீதம்=சாக்கிரம் கடந்தது; அது சொப்பனம்.

426. இரண்டுடல்=ஸ்தூலசூக்கும சரீரங்கள்; மாயாள் சங்காரம்= மாயை கடந்து நிற்றல்; மனுதீதம்=மனச்சேட்டை யகன்றிருத்தல்; இவ்விரு மந்திரமும் கீழாலவத்தை கூறின; கீழாலவத்தையே தினசங்காரமென்பது கொள்க.

427. நித்தசங் காரங் கருவிடர் நீக்கினு
லொத்தசங் கார முடலுயிர் நீவுதல்
வைத்தசங் காரங் கேவல மான்மாவுக்
குய்த்தசங் காரஞ் சிவமாகு முண்மையே. (எ)

428. நித்தசங் காரமு நீடிளைப் பாற்றுதல்
வைத்தசங் காரமு மன்னு மனுதியிற்
சுத்தசங் காரமுந் தோயாப் பரனருள்
வைத்தசங் காரமு நாலா மதிக்கிலே. (அ)

429. பாழே முதலா வெழும்பயி ரவ்விடம்
பாழே யடங்கினும் பண்டைப்பா ழாகாவாம்
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிரா யடங்குமப் பாழிலே. (கூ)

430. தீயவைத் தார்மின்கள் சேரும் வினைதனை
மாயம்வைத் தான்வைத்த வன்பதி யொன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்கு நினைப்பதோ
ராயம்வைத் தாயுணர் வாரவைத் தானே. (கo)

---

427. கருவிடர்=பிறவித் துன்பம் (சம்சார துக்கம்); உடலுயிர் நீவுதல் (உயிர் உடல் நீவுதல்)=உயிர் உடலொடு தாக்கற்று நிற்றல் (கருவி கரணங்களொழிந்து தனித்து நிற்றல்).

428. நித்தசங்காரம்=பிரமனது தினமுடிவி லுண்டாகு மொடுக்கம்; நீடு இளைப்பு=நெடுங்கால மனுபவிக்குங் களைப்பு; வைத்த சங்காரம்= (ஆன்மாக்கள் களையாறுதற்காக) வைத்துள்ள அவாந்தர சங்காரம்; சுத்தசங்காரம்=சருவசங்காரம்; வைத்த சங்காரம்=மூலமலசங்காரம்; (முத்தியளித்தல்).

429. பாழ்=குணங்குறியற்ற நிஷ்களசிவம்; பயிர்=பிரபஞ்சமாகிய பயிர்; பண்டைய பாழ் = பாச நீக்கத்தின் முன் பிரளயங்க டோறு மடங்கியிருந்தவிடம்; வாழாச்சங்காரம்=வாழ்வினைக் கொடாத சங்காரம்; மாலயன் செய்தியாம்=பிரமவிஷ்ணுக் களினிடத்துண்டாம் செய்கையாம்.

430. சேரும்வினை=ஆகாமிய கன்மம்; ஆர்மின்கள்=(பிராரப்த கன்மத்தைப்) புசியுங்கள்; வைத்தவன்பதி = சிவபெருமான் வசிக்கின்ற ஆலயம்; காயம் வைத்தான்=சரீரத்தில் வைத்தருளினர்; ஆயம்=தானும் சத்தியும் கூடியிருத்தல்; ஆயுணர்வு=ஆராய்ந்து தியானித்தற்குரிய அறிவு.

## கஉ-வது திரோபவம்.

431\. உள்ளத் தொருவனை யுள்ளுறு சோதியை
யுள்ளம்விட் டோரடி நீங்கா வொருவனை
யுள்ளமுந் தானு முடனே யிருக்கினு
முள்ள மவனை யுருவறி யாதே. (க)

432\. இன்பப் பிறவி படைத்த விறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயரு ளடைந்தன
னென்பிற் கொளுவி யிசைந்துறு தோற்றசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாக்குமே. (உ)

433\. இறையவன் மாதவ னின்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன் கூடி
யிறையவன் செய்த விரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த பரிசறி யாரே. (ங)

434\. காண்கின்ற கண்ணொளி காதல்செய் யீசனை
யாண்பெண் ணலியுரு வாய்நின்ற வாதியைப்
பூண்படு நாவுடை நெஞ்ச முணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே. (ச)

435\. தெருளு முலகிற்குந் தேவர்க்கு மின்ப
மருளும் வகைசெய்யு மாதிப் பிரானுஞ்
சுருளுஞ் சுடருறு தூவெஞ் சுடரு
மிருளு மறநின் றிருட்டறை யாமே. (ரு)

---

431\. ஓரடி = ஒரு அடி தூரம் கூட; தானும் = சிவபெருமானும்; அவனை உரு அறியாது=அவனது உருவத்தைக் காணமாட்டாது.

432\. இன்பப் பிறவி = முத்தியின்ப முறுதற்காதாரமான சரீரம், அல்லது ஆனந்தமயசொரூபம்; பாசத் துயர்=பந்தத் துன்பம்.

433\. இறையவன் = ருத்திரமூர்த்தி; இரும்பொறியாக்கை=பெருமையுள்ள சரீரமான யந்திரம்; மறை=இரகசியம்.

434\. பூண்படு=அலங்கரித்தலையுடைய (துதித்தற்குரிய); சேண்= பரமாகாயம்; பொய்கை=அமிர்த தடாகம்.

435\. சுருளுஞ்சுடர்=மாறி மாறி வருஞ் சந்திர சூரியர்கள்; தூவெம் சுடரும்=தூய நெருப்பும்.

436. அரைக்கின் றருட்ரு மங்கங்க ளோசை
யுரைக்கின்ற வாசையு மொன்றொடொன் றெவ்வாப்
பரக்கு முருவமும் பாரகந் தானாய்க்
கரக்கின்ற மைசெய்த காண்டகை யானே. (௬)

437. ஒளித்துவைத் தென்னுள் ளுறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடு மீண்டே
களிப்பொடுங் காதன்மை யென்னும் பெருமை
வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே. (௭)

438. நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கு மயன்றிரு மாலவ
னன்றது செய்யு மலர்மிசை மேலய
னென்றிவ ராகி யிசைந்திருந் தானே. (௮)

439. ஒருங்கிய பாசத்து ளுத்தம சித்த
னிருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை யோரா வகையினிற் கங்கை
யருங்கரை பேணு தழுக்கது வாமே. (௯)

440. மண்ணொன்று தான்பல நற்கல மாயிடு
முண்ணின்ற யோனிக ளெல்லா மொருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணு
வண்ணலு மவ்வண்ண மாகிநின் றானே. (௧௦)

---

436. அரைக்கின்ற அருள்=வருத்துகின்ற திரோபவசத்தி; அங்கங்கள்=தத்துவங்கள்; ஓசை=சத்தாதிகள்.

437. வெளிப்பட் டிறைஞ்சினும் = புறத்தில் சொரூபம் வைத்து வணங்கினாலும்; வேட்சி=(வேட்சை)=விருப்பம்.

438. மயன் திருமால், இருபெயரொட்டுப் பண்புத்தொகை; மாயன் என்பது மயனென்று முதல் குறுகிற்று.

439. ஒருங்கிய பாசத்துள் = அடர்ந்த பாசநிறைந்த குளத்தினுள்; ஓராவகையினின் = ஆராயாத்தன்மையால்; அழுக்கு=பொருமை.

440. யோனிகள்=சரீர பேதங்கள்; அண்ணல்=சீவ சொரூபனான சிவன்.

### கரு-வது அநுக்கிரகம்.

441. எட்டுத் திரையு மடிக்கின்ற காற்றவன்
வட்டத் திரையனல் மாநில மாகாச
மொட்டி யுயிர்நிலை யென்னுமிக் காயப்பை
கட்டி யவிழ்க்கின்ற கண்ணுதல் காணுமே. (க)

442. உச்சியி லோங்கி யொளிதிகழ் நாதத்தை
நச்சியே யின்பங்கொள் வார்க்கு நமனில்லை
விச்சும் விரிசுடர் மூன்று முலகுக்குந்
தைச்சு மவனே சமைக்கவல் லானே. (உ)

443. குசவன் றிரிகையி லேற்றிய மண்ணைச்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போலெங்கள் கோனந்தி வேண்டி
லசைவி லுலக மதுவிது வாமே. (ங)

444. விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேயுல காக்குங்
கொடையுடை யான்குண மேகுண மாகுஞ்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே. (ச)

445. உகந்துநின் றேபடைத் தானுல கேழு
முகந்துநின் றேபடைத் தான்பல வூழி
யுகந்துநின் றேபடைத் தானைந்து பூதமு
முகந்துநின் றேயுயி ரூன்படைத் தானே. (ரு)

446. படைத்துடை யான்பண் டுலகங்க ளேழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் றானே. (சு)

---

441. வட்டத்திரை = வட்டமா யுலகைச் சூழ்ந்த கடல் (அப்பு பூத மென்பது கருத்து); ஒட்டி=பஞ்சபூதங்களையுஞ் சேர்த்து; காயப் பை=சரீரமாகிய பை.

442. ஒளிதிகழ் நாதத்தை=ஒளிமையாய் விளங்கும் நாதானு சந்தானத்தை; விச்சும்=(விஞ்சும்)=மேலான; தைச்சு=தச்சுத்தொழில் (ஈண்டு சிருட்டித்தல்).

443. அது இது ஆம்=பலவகையாகவாம்.

444- குணமே குணமாகும்- [illegible] குணங்களாகும்.

447. ஆதி படைத்தன ஐம்பெரும் பூதங்க
ளாதி படைத்தன ஞயபல் லூழிக
ளாதி படைத்தன னெண்ணிலி தேவரை
யாதி படைத்தவை தாங்கிநின் றனே. (எ)

448. அகன்று னகலிட மேழுமொன் றாகி
யிவன்று னெனநின் றெளியனு மல்லன்
சிவன்றன் பலபல சீவனு மாகி
நவின்று னுலகுறு நம்பனு மாமே. (அ)

449. உண்ணின்ற சோதி யுறநின்ற வோருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருண்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி மாபோ தகமே. (கூ)

450. ஆரு மறியாதவ் வண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்
சோராமற் காணுஞ் சுகமறிந் தேனே. (க0)

---

கச-வது கர்ப்பக்கிரியை.

451. ஆக்குகின் றன்முன் பிரிந்த விருபத்தஞ்
சாக்குகின் றனவ னுதியெம் மாருயி
ராக்குகின் றன்கர்ப்பக் கோளகை யுள்ளிருந்
தாக்குகின் றனவ னுவ தறிந்தே. (க)

---

448. நவின்றன்=உபதேசித்த குரு; நம்பன்=இறைவன்.

449. மண்ணின்ற வானோர் = பூசுரர் (அந்தணர்); மா போதகம் = பெருமையுள்ள உபதேசிக்கப்படும் பொருள்.

450. பார் முதலாகப் பயிலும் கடம்=பூமி முதலிய அண்டங்களுட் பொருந்திய சரீரங்கள்.

451. முன்=பூர்வஜன்மத்தில்; இருபத்தஞ்சு=பூதம்-ரு, புலன்-ரு, ஞானேந்திரியம்-ரு, கன்மேந்திரியம்-ரு, கரணம்-ச, புருஷன்-க ஆக-உரு.

452. அறிகின்ற மூலத்தின் மேலங்கி யப்புச்
செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற வின்னுயிர்ப் போந்துறை நாடப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே. (உ)

453. இன்புறு காலத் திருவர்முன் பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையு
மன்புறு காலத் தமைத்தொழிந் தானே. (ங)

454. கருவை யொழிந்தவர் கண்டநான் மூவேழ்
புருட னுடலிற் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்த
துருவ மிரண்டாக வோடிவி ழுந்ததே. (ச)

455. விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி
யொழிந்த முதலைந்து மீரைந்தொ டேறிப்
பொழிந்து புனல்பூதம் போற்றுங் கரண
மொழிந்த நுதலுச்சி யுள்ளே யொளித்தே. (ரு)

---

452. அங்கி அப்பு=ஜாடராக்கினியும் நீரும் (இருக்குமந்தக் கருப்பாசயத்தில்); செந்தாள்கொளுவி=சிவந்த பாதங்களைக் கட்டி வைத்துக்கொண்டு; உயிர்ப்பு=பிராணவாயு; ஓம் துறை=பிரணவமாகிய கரை; பறிகின்ற = அதைவிட்டு நீங்குகிற; பத்து எனும் பாரம்=பத்து என்னுங் கணக்குள்ள (மாதம் வரை தாய்க்குச்) சுமையாயிருத்தல்.

453. முன்பு ஊறிய=முற்சனனத்தி லான்மாவைப் பற்றியுள்ள; பாசத்துயர்மனை=பாச சம்பந்தமடைந்து துயருக்கிடமான சூட்சும சரீரம்; வான்=ஆகாயம்; காலம்=ஆயுட்காலவளவு; அன்புறு காலத்து = தாய் தந்தைய ரன்பொடு கூடும் பொழுது.

454. கருவை யொழிந்தவர்=பிறவி யொழிந்த ஞானியர்; நால் மூவேழ்=இருபத்தைந்து (ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் ஆன்மாவொன்றும்); உருவமிரண்டு=ஆண் பெண் வடிவங்கள்.

455. யோனி=கருப்பாசயவழி; லிங்கம்=சூட்சுமசரீரம்; ஐந்துமீரைந் தொடு=பதினைந்து தத்துவங்களோடு; பூதம்போற்றுங் காரணமொழிந்த நுதலுச்சி=பூதங்களும் புகழப்படுங் காரணங்களு நீங்கிய லலாடமும் உச்சியுமே அறிவுத்தானம்.

456. பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந்
தாவி யுலகிற் றரிப்பித்த வாறுபோன்
மேவிய சீவனின் மெல்லநீள் வாயுவுங்
கூவி யவிழுங் குறிக்கொண்ட போதே. (சு)

457. போகின்ற வெட்டும் புகுகின்ற பத்தெட்டு
மூழ்கின்ற முத்தனு மொன்பது வாய்தலு
நாகமு மெட்டுட னாலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. (எ)

458. ஏற வெதிர்க்கி லிறைவன் றனாகு
மாற வெதிர்க்கி லரியவன் றனாகு
நேரொக்க வைக்கி னிகர்போதந் தானாகும்
பேரொத்த மைந்தனும் பேரர சாளுமே. (அ)

459. ஏயங் கலந்த விருவர்தஞ் சாயத்துப்
பாயுங் கருவு முருவா மெனப்பல
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனோலய மானதே. (கூ)

---

456. தாவி=பரவி; தரிப்பித்தவாறு=தங்கச்செய்ததுபோல; நீள் வாயு=(சரீரமாய்) நீளுகின்ற தனஞ்செயனென்னும் வாயு; கூவியவிழும்=இரைந்துகொண்டு செல்லும்.

457. எட்டும்=சூட்சும சரீர தத்துவங்களெட்டும் ; பத்தெட்டும்= தூலபூதமைந்தும், புலனைந்தும், சூட்சுமசரீர தத்துவ மெட்டும்; ஊழ்கின்ற=விடுகின்ற; நாகம்=குண்டலிசத்தி; நாலுட னெட்டுப் புரவி = பன்னிரண்டென்னும் விரற்கடையளவு கூறப்படும் பிராணவாயு; பாகன்=தலைவனான சிவன்.

458. ஏறவெதிர்க்கில் = (விந்துவானது நாதசத்திக்கு) மேற்பட்டு எதிர்த்துச்சென்றால்; ஆற எதிர்க்கில்=(உக்கிரமின்றி) நேராகச் செல்லின்; நேரொக்கவைக்கின் = நாதவிந்து விரண்டும் இருக்கவேண்டிய முறைப்படி சரியாயிருப்பின்.

459. ஏய் அங்கு அலந்த = பலவண்டங்களிலு மலைந்து வருந்தின; சாயம்=நிறம் (இங்கு குணமென்னும் பொருளிலுபயோகிக் கப்பட்டது); மாயம் கலந்த மனோ லயம்=மோகவசப்பட்ட மன ஒற்றுமை; காயம்=மசாலை.

460. கர்ப்பத்துக் கேவல மாயாள் கிளேகூட்ட
நிற்குந் துரியம்பே தித்து நினைவெழ
வற்புறு காமிய மெட்டாதல் மாயையஞ்
சொற்புறு தூய்மறை வாக்கினுஞ் சொல்லே. (க0)

461. என்பான் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்
செம்பா லிறைச்சி திருந்த மனைசெய்து
வின்பா லுயிர்நிலை செய்த விறையோங்கு
நண்பா லொருவனை நாடுகின் றேனே. (கக)

462. பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோ
னிதஞ்செய்யு மொத்துட லெங்கும் புகுந்து
குதஞ்செய்யு மங்கியின் கோபந் தணிப்பான்
விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே. (கஉ)

463. ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே
வழிபல நீராட்டி வைத்தழு வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே. (கங)

464. சுக்கில நாடியிற் றோன்றிய வெள்ளியு
மக்கிர மத்தேதோன் றும்மவ்வி யோனியும்
புக்கிடு மெண்விரற் புறப்பட்டு நால்விர
லக்கர மெட்டுமெண் சாணது வாகுமே. (கச)

---

460. கர்ப்பத்துக் கேவலம் = கர்ப்பத்தி லான்மா கேவலாவஸ்தை யடைந்திருக்கையில்; மாயாள் கிளேகூட்ட=மாயாசக்தி தத்துவ சமூகங்களைச் சேர்த்தளிக்க; துரியம் பேதித்து=கேவல துரியங்கடந்து; நினைவு=ஜாக்கிராவத்தை; காமியம்=இன்ப நுகர்ச்சிக் குரிய எண்ணம்; எட்டு ஆதல்=கிட்டும்படியாக; எட்டு, முதனிலைத்தொழிற்பெயர்; அல்லது எண்ணுப்பெயராகக்கொள்ளின் எண்விதமான அனுபவப்பொருள்கள்.

461. செம்பால்=இரத்தம்; உயிர்நிலை=சீவன் வசித்தற்குரிய சரீரம்.

462. பதம்=அழகு; குதஞ்செய்யும்அங்கி=குதஸ்தானத்தில் வெளிப்படும் மூலாதாரத்தீ; கோபம்=உக்கிரம்.

463. ஒழிபல=அளவில்லாத மரணங்கள்; பலவழி = பலவிதத்தாலும்; நீர்=கருணை ; அழு = (முதனிலைத் தொழிற்பெயர்) அழுதல்; கரு=பிறவி; சுழி=சுழல்.

464. சுக்கிலநாடி = விந்துவரும் நாடி ; யோனி = நாதம் ; அக்கரமெட்டு = பூதவெழுத்துக்களைந்து, பிரணவவெழுத்துக்கள் மூன்று ஆக எட்டு.

465. போகத்து ளாங்கே புகுந்த புனிதனுங்
கோசத்து ளாகங் கொணர்ந்த கொடைத்தொழி
லோகத்து ளாங்கே யிரண்டெட்டு மூன்றைந்து
மோகத்து ளாங்கொரு மூட்டைசெய் தானே. (கரு)

466. பிண்டத்தி னுள்ளுறு பேதைப் புலனைந்தும்
பிண்டத்தி னூடே பிறந்து மரித்தது
வண்டத்தி னுள்ளுறு சிவனு மவ்வகை
யண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே. (கசு)

467. இலைப்பொறி யேற்றி யெனதுட லீசன்
றுலைப்பொறி யிற்கரு வைத்துட னூட்டி
நிலைப்பொறி முப்பது நீர்மை கொளுவி
யுலைப்பொறி யொன்பதி லொன்றுசெய் தானே.(கஎ)

468. இன்புற் றிருந்தவ ரிசைவித்து வைத்தமண்
டுன்பக் கலச மணைவா னொருவனே
யொன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே. (கஅ)

469. அறியீ ருடம்பினி லாகிய வாறும்
பிறியீ ரதனிற் பெருகுங் குணங்கள்
செறியீ ரவற்றினுட் சித்திக ளெட்ட
தறிவீ ரைந்தினுள் ளானது பிண்டமே. (ககூ)

---

465. கோசம்=பஞ்சகோசம்; இரண்டு எட்டு=அகார உகாரமென்கிற பிரணவம், அல்லது இரண்டு எட்டுமூன்று ஐந்து=முற்கூறிய பதினெட்டுக் கருவிகளெனினுமாம்; (457-செ).

466. பேதைப்புலன் = அறிவற்ற புலன்; அண்டம் = கர்ப்பகோளகை; அண்டத்து=முட்டைபோல.

467. ஐந்து=சிவ தத்துவம்; பொறிமுப்பது = புருடனொழிந்த முப்பது தத்துவங்கள்; உலைப்பொறி=உலைபோல்வதானசரீரம்.

468. துன்பக்கலசம் = சரீரம்; நீர்ச்சாலொன்பது=மலஜலங்கழியு நவத்துவாரம்; பதினெட்டு=பக்க வென்பு; அல்லது புகுகின்ற பத்தெட்டு என்றவிடத்துக் கூறிய பதினெட்டுக் கருவிகளெனினுமாம்.

469. உடம்பினிலாகிய ஆறு=பேறு, இழவு, துன்பம், பிணி, மூப்பு, சாக்காடு; பிறியீர்=பகுத்துணர்ந்து கொள்ளுங்கள்.

470. உடல்வைத்த வாறு முயிர்வைத்த வாறு
மடைவைத்த வொன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியு ளங்கி
கடைவைத்த வீசனைக் கைகலந் தேனே. (உ0)

471. கேட்டுநின் றேனெங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றான்முதல் யோனி மயமவன்
கூட்டுகின் றான்குழம் பின்கரு வையுரு
நீட்டிநின் றாகத்து நேர்பட்ட வாறே. (உக)

472. பூவுடன் மொட்டுப் பொருந்த வலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடு
நீரிடை நின்ற குமிழி நிழலதாய்ப்
பாருட லெங்கும் பரந்தெட்டும் பற்றுமே. (உஉ)

473. எட்டினு ளைந்தாகு மிந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாய்விடு
மொட்டிய பாச வுணர்வென்னுங் காயப்பை
கட்டி யவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. (உங)

474. கண்ணுத னுமங் கலந்துடம் பாயிடப்
பண்ணுதல் செய்து பசுபாச நீக்கிட
வெண்ணிய வேத மிசைத்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே. (உச)

475. அருளல்ல தில்லை யரனவ னன்றி
யருளில்லை யாதலி னூலோ ருயிர்க்குத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே. (உரு)

---

470. மடைவைத்த=மடைபோல் வைக்கப்பட்ட; தாமரைச்சென்னி (சென்னித்தாமரை) =உச்சியிலுள்ள ஆயிரவிதழ்த்தாமரை.

471. முதல்யோனி=முதற்காரணம்; நேர்பட்ட ஆறு=சேர்ந்திருக்குந்தன்மை.

472. பூ=கர்ப்பாசயம்; மொட்டு=லிங்கம்; கா உடைத்தீபம்=சுமையாயுள்ள தீபம்போலும் கரு; நிழல் = சாயல்; எட்டும்=சூட்சும சரீர கருவி யெட்டும்.

473. பாசவுணர்வு=மாயாகாரியப் பொருள்களை புணரு முணர்வு.

474. கண்ணுதல் நாமம் = பிரணவம், பஞ்சாக்கர மெனினுமாம்; வேதம் வைத்த பரப்பு=வேதமுறைத்துவைத்த கூட்டம்.

475. தருகின்றபோது=சிருட்டிக்கின்ற காலத்தில்; கைத்தாயர்= வளர்க்கின்றதாயர்.

476. வகுத்த பிறவியின் மாதுநல் லாளுந்
தொகுத்திரு ணீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்வகை யெங்கும்
வகுத்துள்ளு நின்றதோர் மாண்பது வாமே. (உசு)

477. மாண்பது வாக வளர்கின்ற வன்னியைக்
காண்பது வாண்பெண் ணலியெனுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
யாம்பதி செய்தானச் சோதிதன் னுண்மையே. ()

478. ஆண்மிகி லாணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தி லலியாகுந்
தாண்மிகு மாகிற் றரணி முழுதாளு
மாண்வச மிக்கிடிற் பாய்ந்தது மில்லையே. (உஅ)

479. பாய்ந்தபின் னஞ்சோடி லாயுளு நூறுகும்
பாய்ந்தபின் னாலோடிற் பாரினி லெண்பதாம்
பாய்ந்திடும் வாயு பகுத்தறிந் தவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாச்சலு மாமே. (உகூ)

480. பாய்கின்ற வாயுக் குறையிற் குறளாகும்
பாய்கின்ற வாயு விளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படிற் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லை பார்க்கிலே. (௩௦)

481 மாதா வுதர மலமிகின் மந்தனும்
மாதா வுதாஞ் சலமிகின் மூங்கையாம்
மாதா வுதர மிரண்டொக்கிற் கண்ணில்லை
மாதா வுதரத்தில் வந்த குழவிக்கே. (௩க)

482. குழவியு மாணும் வலத்தது வாகிற்
குழவியும் பெண்ணு மிடத்தது வாகிற்
குழவி யிரண்டா மபான னெதிர்க்கிற்
குழவி யலியாகுங் கொண்டகா லொக்கிலே (௩உ)

---

477. வழிபோல=வம்சத்திற் பிறந்தவர்களைப்போன்ற சாயலுள்ளவர்களாக.

479. அஞ்சு ஓடில்=பஞ்ச பூதங்களிலும் சரம்பாய்ந்தோடினால்; பாச்சலும் ஆம்=செலுத்தவும் கூடும்.

480. இளைக்கின்=சோர்ந்தால்; பாய்கின்ற வாயுவளையின் என்றும் பாடம்.

481. மலம்=அழுக்கு; இரண்டு=மலமும், ஜலமும்.

482. கொண்டகால்=பிராணவாயு.

483. கொண்டநல் வாயு விருவர்க்கு மொத்தெழிற்
கொண்ட குழவியுங் கோமள மாயிடுங்
கொண்டநல் வாயு விருவர்க்குங் குழறிடிற்
கொண்டது மில்லையாங் கோல்வளை யார்க்கே. (௩௩)

484. கோல்வளை யுந்தியிற் கொண்ட குழவியுந்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே. (௩௪)

485. உருவம் வளர்ந்திடு மொண்டிங்கள் பத்திற்
பருவம தாகவே பாரினில் வந்து
மருவி வளர்ந்திடு மாயையி னாலே
யருவம தாவதிங் காரறி வாரே. (௩௫)

486. இட்டா ரறிந்தில ரேற்றவர் கண்டிலர்
தட்டா னறிந்து மொருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனு மங்குளன்
கெட்டேனம் மாயையின் கீழ்மையெவ் வாறே. (௩௬)

487. இன்புறு நாடி யிருவருஞ் சந்தித்துத்
துன்புறு பாசத்திற் றோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் றோற்றிய
தொன்புற நாடிநின் றுதலு மாமே. (௩௭)

483. கோமளம்=அழகு; குழறிடில்=தமொறினால்.

484. தால்வளை = அண்ணத்தின்கண்ணதாம் தொளை; பால்வளர்ந்து=பகுதிபகுதியாய்ச் சரீர வுறுப்புகள் வளரப்பெற்று; பகலவன் பொன்னுரு = உதயகாலச் சூரியனது சிவந்தவுரு.

485. மாயையினாலே அருவமதாவது = மாயையால் தன்னுருவைத் தானறியாமலிருப்பது.

486. இட்டார்=தந்தையர்; ஏற்றவர்=தாயார்; தட்டான்=பிரமன் அல்லது சிவபெருமானெனினுமாம்; அ மாயை=முற்கூறிய விஷ்ணுமாயை; கெட்டேன் எம்மாயை யென்றும் பாடம்.

487. பாசம்=மாயை; முன்பு உற=மேலாகவிருக்க; முன்=இப்பிறவிக்குமுன்; தொன்பு=பழமையாகிய பிறவி; தொன்பு, புவிகுதிபெற்ற பண்புப்பெயர்.

488. குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைதன் கூட்டிட்டா
லயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோ
லியக்கில்லை போக்கில்லை யேனென்ப தில்லை
மயக்கத்தா லாக்கை வளர்க்கின்ற வாறே. (௩அ)

489. முதற்கிழங் காய முளையாய் முளைப்பி
னதற்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கு
மதற்கது வாமின்ப மாவது போல
வதற்கது வாய்நிற்கு மாதிப் பிரானே. (௩௯)

490. ஏனோர் பெருமைய னாகினு மெம்மிறை
யூனே சிறுமையு ளுட்கலந் தாங்குளன்
வானோ ரறியு மளவல்ல மாதேவன்
றானே யறியுந் தவத்தினி னுள்ளே. (௪0)

491. பரத்திற் பதிந்து பதிந்தநற் காய
முருத்தரித் திவ்வுட லோங்கிட வேண்டிற்
றிரைக்கட லுப்புத் திரண்டது போலத்
திரித்தும் பிறக்குந் திருவரு ளாலே. (௪க)

---

கரு-வது மூவகைச் சீவ வர்க்கம்.

492. சத்தி சிவன்விளை யாட்டா லுயிராக்கி
யொத்த விருமாயா கூட்டத் திடையூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. (க)

493. விஞ்ஞானர் நால்வரு மெய்ப்ரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தாங்கு சகலத்தி
னஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே. (உ)

---

488. அயிர்ப்பு=சந்தேகம்; மயக்கத்தால்=மாயா மயக்கத்தால்.

489. அதன்புதலாய்=அதன் செடியாய்; பலமாய்=பயனாய்.

491. பரத்திற் கரைந்து என்றும் பாடம்; திரித்தும்=மீண்டும்.

492. இருமாயா=சுத்தமாயை, அசுத்தமாயை; துரியம்பிரிவித்து=துரியாவத்தையில் பாசத்தையொழித்து.

493. விஞ்ஞானகலர் நால்வகையினரும், பிரளயாகலர் மூவகையினரும், சகலாகலர் மூவகையினரும் ஆக மூவகைச் சீவர்களும், பத்துவகையினர்களா யுள்ளாரென்பது கருத்து.

**494.** விஞ்ஞானர் கேவலத் தாராது விட்டவ
ரஞ்ஞான ரட்டவித் தேசராஞ் சார்ந்துளோ
ரெஞ்ஞான மேழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞான ராணவம் விட்டுநின் ருரே. (௩)

**495.** இரண்டாவ தின்முத்தி யெய்துவ ரத்தனை
யிரண்டாவ துள்ளே யிருமல பெத்தர்
திரண்டாகு நூற்றெட்டு ருத்திர ரென்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. (௪)

**496.** பெத்தத்தர் சித்தொடு பேண்முத்திச் சித்தது
வொத்திட் டிரண்டிடை யூடற்ருர் சித்துமாய்
மத்தது மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே. (௫)

**497.** சிவமாகி யைவகைத் திண்மலஞ் செற்ருே
ரவமாகாச் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்
பவமான தீர்வோர் பசுபாச மற்ருேர்
நவமான தத்துவ நாடிக்கொண் டாரே. (௬)

---

494. கேவலத்து ஆராது விட்டவர்—மும்மலத்தழுந்தாத அதிகார மலமாத்திர முடையராய் அணு சதாசிவரென்னும் பெய ருடையராய்ச் சாதாக்கியத்திலிருப்பவரும், மகேசுவர தத்து வத்தில் வசிக்கும் அட்டவித்தியேசுவரரும், மந்திரேசுவரர் என்னும் பெயர்கொண்டு சுத்தவித்தையில் வசிப்பவரும் என அபக்குவ விஞ்ஞானகலர் மூவர், அதிகாரமலமு மின்றிச் சிவ சாயுச்சியம்பெற்ற பக்குவர் ஒருவர் ஆக விஞ்ஞானகலர் நால் வகையினராதலுணர்க.

495. இரண்டாவதில் முத்தியெய்துவர் — அபக்குவர் மூவரென்ற விஞ்ஞானகலர் சிருட்டிக்குப்பின் மூத்திபெறுவர்; இரண்டா வது பிரளயாகலர் - இவர் பக்குவர் அபக்குவர் என இரு வகைப்படுவர்; பக்குவர் - பரமுத்தர் அபரமுத்தர் என இரு வகைப்படுவர்; ஆகப் பிரளயாகலர் மூவகையினராதலுணர்க.

496. பெத்தத்தர்—அதிகாரமலபத்தராகிய விஞ்ஞானகலர்; முத்தி சித்தது—சுத்தசிவமேயாவார்; ஒத்திட்டு இரண்டிடை யூடற் ருர்—இருமலபத்தரான பிரளயாகலரில் அபக்குவர்; சித்து மாய்—ஞானியராய்; சத்தத்து அமிழ்ந்து—சத்தாதி சூட்சும சரீரத்துள் ளிருப்பவர்களாய்; சத்தத்தழிந்து என்றும் பாடம்; கேவலத்துளார் — சகலாகலராய் விடுவர்.

497. ஐவகைத்திண்மலம்—ஆணவம், காமியம், மாயை, மாயேயம் திரோதாயி; சித்தர்—சித்தத்தையுடையோர் அல்லது சித்தர் கள்; முத்தாந்தம்—சாயுச்சியம்; பவம்—பிறப்பு; நவமான தத் துவம்—பதிகாணம் பெற்றுச் சிவமாதல்.

**498.** விஞ்ஞான ராணவங் கேவல மேவுவோர்
விஞ்ஞானர் மாயையிற் றங்கு மிருமல
ரஞ்ஞான ரச்சக லத்தர் சகலராம்
விஞ்ஞான ராதிய ரொன்பான்வே றுயிர்களே. (எ)

**499.** விஞ்ஞான கன்மத்தர் மெய்யகங் கூடிய
வஞ்ஞான கன்மத்தி னாற்சுவர் யோனிபுக்
கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெஞ்ஞான ராகிச் சிவமேவ லுண்மையே. (அ)

**500.** ஆணவந் துற்ற வவித்தா நனவற்றோர்
காணிய விந்துவா நாத சகலாதி
யாணவ மாதி யடைந்தோ ரவரன்றே
சேணுயர் சத்தி சிவதத் துவமாமே. (கூ)

---

கசு-வது பாத்திரம்.

**501.** திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தாற்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரு
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தாற்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. (க)

---

498. ஆணவகேவலம்=தனித்த ஆணவமல முற்றவர், (இவரே முற்கூறிய முத்திறப்பட்ட அபக்குவராகிய விஞ்ஞானகலர்); மாயையிற்றங்குமிருமலர்=சுத்தமாயையில் வசிக்கும் பிரளயாகலர்; (பிரளயாகலர் மூவராமாறு கூறியவாறு அபக்குவர்; இருவரும் பக்குவர் ஒருவருமாகக்கொள்க); அஞ்ஞானர் அச்சகலத்தார்=அஞ்ஞானத்தை யுடைய (மும்மலத்தரான) அச்சகலாகலர்; (சகலாகலர் - மந்தர், தீவிரர், தீவிரதரர் என்று மூவகைப்படுவர்); ஆகச் சீவர் வர்க்கம் ஒன்பது வகையாத லுணர்க.

499. விஞ்ஞானகன்மத்தர்=மேலான ஞானகன்மத்தைப் புரிபவர்; அஞ்ஞான கன்மத்தினால்=அந்த ஞானகன்மம்புரிவதாலே; சுவர்யோனி=தேவப்பிறப்பு; எ=(எவ்வு என்பதன்குறை) மேலெழுதல் என்பது பொருள்.

500. அவித்தாநனவு (அவித்து ஆம் நனவு)=மறைபட்ட அறிவு; விந்துவாநாதம் (விந்து நாதம் ஆம்)=விந்து நாதங்களாகிற; சேணுயர்=மிகச் சிறந்த.

501. திலம்=எள்; பலம்=பயன்; பரபோகம்=~~மேலானபதவாழ்வு.~~ சிவபோகம்.
"சிவஞானிகையிற் றுணர் திலமளவே செய்திடினும் நிலமலைபோற் றிகழ்ந்து" என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தம் இங்கே சிந்திக்கற்பாலது.

502. கண்டிருந் தாருயி ருண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தாருயிர் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனைச்
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே. (உ)

503. கைவிட்டி லேன்கரு வாகிய காலத்து
மெய்விட்டி லேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிலாத விடிஞ்சிலு மாமே. (ந)

504. ஆவன வாவ வழிவ வழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவ
னேவன செய்யு மிளங்கிளை யோனே. (ச)

---

### கஎ-வது அபாத்திரம்.

505. கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்குஞ்
சீலமு நோன்புமி லாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது வாகுமே. (க)

506. ஈவது யோக மியம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
யாவ லறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொள் ளீரே. (உ)

---

502. உயிர்கொள்ளுங்குணத்தன் = சீவான்மாக்களைத் தன்னிடத் தொடக்கிக்கொள்ளுஞ்சகுணமூர்த்தி; நன்றுணர்ந்தார்க்கு = நன்மார்க்கத்தை அல்லது மெய்ஞ்ஞானத்தை உணர்ந்தவர்க்கு.

503. நெய்விட்டிலாத = தைலம் விட்டெரிக்கப்படாத; இடிஞ்சில் = அகல் (ஆகுபெயராய்த் தீபத்தையுணர்த்திற்று).

504. ஏவன (எய்வன) = பொருந்தியவைகள்; இளங்கிளையோன் = முதிராத தொண்டன்.

505. வறடு = பால்கறவாப் பசு; குனிந்து = வணங்கி; கொணர்ந்து என்றும் பாடம்; குளகு = தழை; ஏர் = சிறப்பு; காலங்கழிந்த பயிர் = அகாலத்திட்டபயிர்.

507. ஆமா றறியா ரதிபஞ்ச பாதகத்
தோமாறு மீசற்குந் தூய குரவற்குஞ்
சாமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்
போமா நரகிற் புகான்போதங் கற்கவே. (௩)

508. மண்மலே யத்தனை மாதன மீயினு
மண்ண லிவனென் றஞ்சலி யத்தனு
யெண்ணி யிறைஞ்சாதார்க் கீந்த விருவரு
நண்ணுவ ரேழா நரகக் குழியிலே. (௪)

---

### கஅ-வது தீர்த்தம்.

509. உள்ளத்தி னுள்ளே யுளபல தீர்த்தங்கண்
மெள்ளக் குடைந்துநின் றூடார் வினைகெடப்
பள்ளமு மேடும் பரந்து திரிவரிக்
கள்ள மனமுடைக் கல்வியில் லோரே. (க)

510. தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங்
குளியறி வாளர்க்குக் கூடவு மொண்ணுன்
வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்குந்
தெளியறி வாளர்தஞ் சிந்தையுள் ளானே. (உ)

511. உள்ளத்தி னுள்ளே யுணரு மொருவனைக்
கள்ளத்தி னுலுங் கலந்தறி வாரில்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பத்தலுள் ளாமே. (௩)

---

507. தோம்மாறும்=குற்றம் (பயம்) ஒழியும்; சாம ஆதி=பொன்னுதி (ஆசை); விட்டோர்க்குத் தாடந்து கற்பிப்போர் என்றும் பாடம்; போதம்=ஞானம்.

508. இருவரும் = கொடுத்தவரும் வாங்கினவருமாகிய இருவரும்; ஏழாம் நரகம்=எழுவகையாகிய நரகங்கள்.

509. உணர்வெனுந் தீர்த்தநீர் என்றும் பாடம்.

510. தளி=குளிர்ச்சி அல்லது தீபம்; குளியறிவு=பிரபஞ்சத்தில் அழுந்திய வறிவு; வளியறிவு=பிராணவாயுவை யறியுமறிவு (யோகவறிவு).

511. கள்ளத்தினுலும்=வஞ்சனையாலாவது ; வெள்ளத்தை=(ஆறு குள முதலிய பெரிய) நீர் நிலையத்தை; பத்தல் = நீரூறும் துவாரம் அல்லது நீரிறைக்குஞ் சால்.

512. அறிவா ரமரர்க ளாதிப்பி ரானைச்
செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொண்
மறிவார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனன்மூழ்கப் புண்ணிய ராமே. (ச)

513. கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்ட
லுடலுறத் தேடுவார் தம்மையொப் பாரிலார்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை யொன்றறி யாரே. (ரு)

514. கலந்தது நீர துடம்பிற் கறுக்குங்
கலந்தது நீர துடம்பிற் சிவக்குங்
கலந்தது நீர துடம்பில் வெளுக்குங்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே. (சு)

---

## கசு-வது திருக்கோயி லிழிவு.

515. தாவர லிங்கம் பறித்தொன்றிற் றாபித்தா
லாவதன் முன்னே யரசு நிலைகெடுஞ்
சாவதன் முன்னே பெருநோ யடுத்திடுங்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. (க)

516. கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்மபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ண வனாணையே. (உ)

517. ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைக டப்பிடிற் றானே. (ங)

---

512. வலங்கொள் = வெற்றிகொண்ட அல்லது உலாவிய; மறிவார்=மீண்டுவருவர்; பொறி=அறிவு.

513. உடலுற=மாறுக.

516. அபிடேகத்தரசர்=முடிசூடியமன்னர் ; முட்டுவிக்கும்=இடருறச் செய்யும்.

517. 'அவனிமழை குன்றும்' என்றும் பாடம்.

518. முன்னவ ரூர்கோயிற் பூசைகண் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவ ளங்குன் றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே. (சு)

519. பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை யர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. (ரு)

---

உo-வது அதோமுக தரிசனம்.

520. எம்பெரு மானிறை வாமுறை யோவென்று
வம்பவிழ் வானோ ரசுரன் வலிசொல்ல
வம்பவள மேனி யறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் றானே. (க)

521. அண்டமொ டெண்டிசை தாங்கு மதோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
யுண்டது நஞ்சென் றுரைப்ப ருணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே. (உ)

522. செய்தா னறிவன் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகழு மனிதர்காண்
மெய்யே யுரைக்கிலவ் விண்ணோர்தொழச் செய்வன்
மைதாழ்ந் திலங்கு மணிமிடற் றோனே. (ங)

523. நந்தி யெழுந்து நடுவுற வோங்கிய
செந்தி கலந்துட் சிவனென நிற்கு
முந்தி கலந்தங் குலகம் வலம்வரு
மந்தி யிறைவ னதோமுக மாமே. (ச)

---

518. முட்டிடின்=தடைப்படின்.

519. பேர்கொண்ட பார்ப்பான்=பெயரளவினது மாத்திரமே வகித்த பார்ப்பான் (வேதாகம நெறிச்செல்லாப் பார்ப்பான்).

520. அசுரன்=சூரபன்மன்.

521. அதோமுகம்=பிரகிருதிமாயை.

523. செந்தி - தீ யென்பது தி யெனக் கடைக்குறைந்து நின்றது.

524. அதோமுகங் கீழண்ட மான புராண
னதோமுகந் தன்னொடு மெங்கு முயனுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானு
மதோமுக னூழித் தலைவனு மாமே. (ரு)

525. அதோமுக மாமல ராயது கேண்மி
னதோமுகத் தாலொரு நாருய் விரிந்து
வதோமுக மாகிய வந்தமில் சத்தி
யதோமுக மாகி யமர்ந்திருந் தானே. (சு)

---

உக-வது சிவ நிந்தை.

526. தெளிவுறு ஞானத்துச் சிந்தையி னுள்ளே
பளிவுறு வாரம ராபதி நாடு
வெளியனென் றீசனை நீச ரிகழிற்
கிளியொன்று பூனையாற் கீழது வாமே. (க)

527. முளிந்தவர் வானவர் தானவ ரெல்லாம்
விளிந்தவர் மெய்நின்ற ஞான முணரா
ரளிந்தமு தூறிய வாதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கவொண் ணுதே. (உ)

528. அப்பகை யாலே யசுரருந் தேவரு
நற்பகை செய்து நடுவே முடிந்தன
ரெப்பகை யாகிலு மெய்தா ரிறைவனைப்
பொய்ப்பகை செய்யினு மொன்றுபத் தாமே. (ங)

---

524. சதோமுகத்து (சத் ஓம் முகத்து)—சத்தாகிய பிரணவசொரூபியாயுள்ள; சிவசத்தியாகிய மாயையின் மேன்முகம்விந்து, நடுப்பாகம் மான், கீழ்ப்பாகம் மோகினி (அதோமுகமாயை) என்னப்படுவதன்றி, வேறின்மையால் அதோமுகமாயையிலு முருக்கொண்டுசகலாகலராய்ஆன்மாக்களுக்கும் அருள்புரிவனீசனென்பது அதோமுக தரிசனமென்பதன் கருத்து.

526. பளி—பள்ளி; கீழ்—கிழித்தல்.

527. முளிந்தவர் — விரதாதிகளால் சரீரமுலர்ந்தவர்; தளிந்தவர்— அடங்கினவர்.

528. பொய்ப்பகை செய்யினும் — விளையாட்டுக்காகப் பகைத்த போதினும்.

529. போகமு மாதர் புலவி யதுநினைந்
தாகமு முட்கலந் தங்குள ராதலில்
வேதிய ராயும் விகிர்தனு மென்கின்ற
நீதியு ளீச னினைப்பொழி வாரே. (௪)

## உ௨-வது குரு நிந்தை.

530. பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்க
ளுற்றிருந் தாரை யுலைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி யுற்றிருந் தாரவர்
பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே. (க)

531. ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோ
ரூரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிகுவர் மண்ணிலே. (உ)

532. பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவ
ரத்தமு மாவியு மாண்டொன்றின் மாய்ந்திடுஞ்
சத்திய மீது சதாநந்தி யாணையே. (௩)

533. மந்திர மோரெழுத் துரைசெய்த மாதவர்
சிந்தையி னொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர்கண் மண்ணிலே. (௪)

534. ஈச னடியா ரிதயங் கலங்கிடத்
தேசமு நாடுஞ் சிறப்பு மழிந்திடும்
வாசவன் பீடமு மாமன்னர் பீடமு
நாசம தாகுமே நந்நந்தி யாணையே. (௫)

---

529. ஆகமும் உள்கலந்து அங்கு உளர்=மார்பிலும் சிந்தையிலுங் (மாதர்) கலந்துள்ளார்.

530. பெற்றிருந்தார்=மாதாபிதாக்கள்; உற்றிருந்தார்=பெற்றோரை யொத்துள்ளவர்; உலைவன = வருந்தும்படியானவை.

531. சீர் எழுத்தாளர்=சிறந்த நூலுணர்ந்த குரவர்.

532. பத்தினி=கற்புடைய மாதர்; அத்தம்=செல்வம்.

533. நுந்திய=(இழிவென்று) ஒதுக்கப்பட்ட.

535. சன்மார்க்கச் சற்குரு சந்நிதி பொய்வரி
னன்மார்க்க முங்குன்று ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையு மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே. (௬)

536. கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
வெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றுங்
கைப்பட்ட நெய்பா றயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றுங் கன்மிஞா னிக்கொட்பே.

---

## ௨௩-வது மகேசுர நிந்தை.

537. ஆண்டா னடியவ ரார்க்கும் விரோதிக
ளாண்டா னடியவ ரையமேற் றுண்பவ
ராண்டா னடியாரை வேண்டாது பேசினர்
தாந்தாம் விழுவது தாழ்வா நரகமே. (௧)

538. ஞானியை நிந்திப் பவனு நலனென்றே
ஞானியை வந்திப் பவனுமெய் நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே. (௨)

---

## ௨௪-வது பொறையுடைமை.

539. பற்றிநின் றூர்நெஞ்சிற் பல்லிதா னொன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையு நாக்கையுந்
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே. (௧)

540. ஓலக்கஞ் சூழ்ந்த வுல்ப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனியன் பாதம் பணிந்துய்ய
மாலுக்கு மாதி பிரமற்கு மன்னவன்
ஞாலத் திவர்மிக நல்லரென் றானே. (௨)

---

536. எய்ப்பட்ட=இளைப்புற்ற.

537. விரோதிகள்=உலகங்கடந்த நடையுடையவர்.

539. பல்லி = உடம்பு (ஆகுபெயராய்ப் பொருமையைக் குறித்து நின்றது); தெற்றிக்கிடந்து = பின்னிக் கொண்டிருந்து; கமை=(க்ஷமை) பொறுமை.

541. ஞானம் விளைந்தவர் நம்மிட மன்னவர்
சேனை வளைந்து திசைதொறுங் கைதொழ
வூனை விளைந்திடு மும்பர்தம் மாதியை
யேனை விளைந்தரு ளெட்டலு மாமே. (௩)

542. வல்வகை யாலு மனையிலு மன்றிலும்
பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செய்யுங்
கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்தனுக்
கெல்லையி லாத விலயமுண் டாமே. (௪)

---

உடு-வது பெரியாரைத் துணைக்கோடல்.

543. ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
றேடவல் லார்க்கருள் தேவர்பி ரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே. (க)

544. தாமிடர்ப் பட்டுத் தளிர்போற் றயங்கினு
மாமனத் தங்கன்பு வைத்த திலையாகு
நீயிடர்ப் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே. (உ)

545. அறிவா ரமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிவதத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே. (௩)

---

542. கொல்லை=காடு (சர்வசூனிய இடுகாடு) ; இலயம்=ஐக்கியம்.

543. ஓடவல்லார்=க்ஷேத்திரம், தீர்த்தம், மூர்த்திகளை நாடித் தரிசிக்கும்படி யாத்திரை செய்யும் அன்பர்; பாடவல்லார்=இராக தாளங்களோடு ஈசனது திருநாமங்களைப் பஜனைசெய்வோர்; தேடவல்லார் = நாடி சோதனைசெய்து ஆறுதாரவழியே ஈசனைத்தேடி யறியும் யோகிகள்; கூடவல்லார்=ஈசனொடு வேறறக் கலந்திருக்கும் ஞானிகள்; (இவர்களே பெரியோர்களென்பதுய்த்துணரக் கிடந்தது).

546. தார்சடை யான்றன் றமரா யுலகினிற்
போர்புகழா வெந்தை பொன்னடி சேருவர்
வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங்
கோவடைந் தந்நெறி கூட லுமாமே. (௪)

547. உடையா னடியா ரடியா ருடன்போய்ப்
படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
வுடையான் றருகென வோலமென் றாரே. (௫)

548. அருமைவல் லான்கலை ஞாலத்துட் டோன்றும்
பெருமை வலோன்பிற விச்சுழி நீந்து
முரிமைவல் லானுணர்ந் தூழி யிருக்குந்
திருமைவல் லாரொடுஞ் சேர்ந்தனன் யானே. (௬)

அதிகாரம் உரு-க்குப் பாடல்-உகஉ.

இரண்டாந் தந்திர முற்றும்.

---

546. போர்புகழா=மதச் சண்டைகளைப் புகழாமல்; வாயடையா=மௌனமுடையாராய்.

547. ஆர் அழல் மேனி பதி=எரியுந் தீப்போலுந் திருமேனியனாகிய சிவபெருமானது கயிலை; கடை=கடைவாயில்; ஓலம்=அபயக்கூச்சல் (அடைக்கலம்).

548. கலைஞாலம்=ஞானபூமி, அல்லது சப்தப்ரபஞ்சம்; கலைஞானத்துட் டோன்றும் என்றும் பாடம்; திருமை=பெருமை.

## க-வது அட்டாங்க யோகம்.

**549.** உரைத்தன வற்கரி யொன்று மூடிய
நிரைத்தவி ராசி நிரைமுறை யெண்ணிப்
பிரைச்சத மெட்டும் பேசிய நந்தி
நிரைத்த வியம நியமஞ்செய் தானே. (க)

**550.** செய்த வியம நியமஞ்ச மாதிசென்
றுய்யப் பராசத்தி யுத்தர பூருவ
மெய்த கவச நியாசங்கண் முத்திரை
யெய்த வுரைசெய்வ னிந்நிலை தானே. (உ)

**551.** அந்நெறி யிந்நெறி யென்னாதட் டாங்கத்
தன்னெறி சென்றுச மாதியி லேநின்மி
னன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே. (ங)

**552.** இயம நியமமே யெண்ணிலா வாதன
நயமுறு பிராணுயா மம்ப்ரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
யயமுறு மட்டாங்க மாவது மாமே. (ச)

---

549. வற்கரி=குதிரைக்கயிறு (இது ஆகு பெயராய்ப் பிராணவாயுவுக்காயிற்று); இராசி = பன்னிரண்டென்னும் எண்ணுப் பொருள் விளக்கி நின்றது; பிரைச்சதம்=யோகம்.

550. பராசத்தி=சிற்சத்தி அல்லது பிராணவாயு; உத்தரம்=பின்பு; பூருவம்=முதல்; இநிலை=இந்த முறைப்படி.

551. அந்நெறி இந்நெறி என்னாது=யோகத்துக்கு வேறுபட்ட பல மார்க்கங்களைப் பயன் றருவனவென்று கொள்ளாமல்; நன்னெறி=நல்ல யோகநெறி; செல்வார்க்கு ஞாலத்திலே காலம் என்றும் பாடம்; ஆகத்தில் போக்கு இல்லை=(மறித்தும்) சரீரத்துட் புகுவதான ஜனனமில்லை.

552. அயம் உறு=நல்வினையான; பயமுறு என்றும் பாடம்.

(க) இயமம்.

553. எழுந்துநீர் பெய்யினு மெட்டுத் திசையுஞ்
செழுந்த ணியமங்கள் செய்மினென் றண்ணற்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
யழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே. (ரு)

554. கொல்லான் பொய்கூறான் களவிலா னெண்குண
னல்லா னடக்க முடையா னடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காம
மில்லா னியமத் திடையினின் றானே. (சு)

---

(உ) நியமம்.

555. ஆதியை வேதத்தி னப்பொரு ளாளனைச்
சோதியை யங்கே சுடுகின்ற வங்கியைப்
பாதியுண் மன்னும் பராசத்தி யோடே
னீதி யுணர்ந்து நியமத்த னாமே. (எ)

556. தூய்மை யருளுண் சுருக்கம்பொ றைசெம்மை
வாய்மை நிலைமை வரைதலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே. (அ)

---

553. எழுந்து=(மேகங்கள் கடனீரையுண்டு ஆகாயத்தில்) எழுந்து; தண்=சாந்தம்; அழுந்திய=(சிவபத்தியில்) உறுதியாயுள்ள; நால்வர்=சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்.

554. எண்குணன் = (நல்லோரானே) மதிக்கப்படுங் குணமுடையான்.

555. பாதியுள்=பாதிச் சரீரத்தில்; நீதி யுணர்ந்தான்=முறைப்படி தரிசித்தவன்.

556. உண்சுருக்கம்=(ஊண் முதல் குறுகின்றது) மித போஜனம்; நிலைமை=உறுதியுடைமை; வரைதல்=கொள்ளலும் நீக்கலு மென இருபொருளையுந் தந்துநின்றது; வளர்த்தலே என்றும் பாடம்; காண்பவை=நூல்களா லறியப்படுமவை; நேமி=நியமமாக வுடையவன்.

557. தவஞ்செபஞ் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொண் மதிசொல்லீ ரைந்து
நிவம்பல செய்யி னியமத்த னாமே. (கூ)

---

(ந) ஆதனம்.

558. பங்கய மாதி பரந்த பல்லாதன
மங்குள வாமிரு நாலு மவற்றினுட்
சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்
தங்க விருப்பத் தலைவனு மாமே. (௪௦)

559. ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைக ளதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே. (கக)

560. துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்
தரிய முழந்தாளி லங்கைக ளைநீட்டி
யுருகி யிடுமுடற் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே. (க௨)

561. ஒக்க வடியிணை யூருவி லேறிட்டு
முக்கி யுடலை முழங்கைக ளிலெற்றித்
தொக்க வறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட வாசனங் கொள்ளலு மாமே. (கந)

---

557. சித்தாந்தக் கேள்வி=வேதாகமங்களின் முடிந்தபொருளை விசாரித்தல் (பிரமவிசாரஞ் செய்தல்); மதி=வைதிக கன்மங்களில் சிரத்தையுள்ள புத்தி; நிவம்=(நிபம்) (இவைபோன்ற யோகநெறிக்குக்) காரணம்.

558. பங்கயமாதி=பதுமாசன முதலாக; இரு நாலு மவற்றினுள் - அவற்றினுள் இரு நாலும் என மாற்றிப் பொருள் கொள்க; சொங்கு=(சொக்கு) மயக்கம் (குற்றம்).

559. அணை=ஓரம்.

560. துரிசு இல்=குற்றமற்ற; உருகியிடும் உடல்=தளருந்தன்மையுள்ளதேகம்.

561. முக்கி = (முங்கியென்னுந் திசைச் சொல்லின் விகாரம்) அழுத்தி; துளங்காது=அசையாமல்.

562. பாத முழந்தாளிற் பாணிகளைநீட்டி
யாதர வோடும்வா யங்காந் தழகுறக்
கோதி னயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே. (கச)

563. பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திரம் வீரஞ் சுகாதன மோரேழு
முத்தம மாமுது வாசன மெட்டெட்டுப்
பத்தொடு நூறு பலவா சனமே. (கரு)

---

(ச) பிராணாயாமம்.

564. ஐவர்க்கு நாயக னவ்வூர்த் தலைமக
னுய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே. (கசு)

565. ஆரிய னல்லன் குதிரை யிரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவி னருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. (கஎ)

---

562. பாணி=கை; கொடிமூக்கில்=மூக்கினுனியில்.

563. பத்திரமுதல் சுகாசன மீறாகச் சொல்லப்பட்ட ஏழும் உத்தம ஆசனமாகும்; சுவத்திகம் கூட்ட ஆதனமெட்டாம்; இவ்வெட்டுடன் சோத்திரம் சுகாசனம் என்பன கூட்டப் பத்தாம். ஆசிரியர் கூறியவை எட்டேயாயினும், பத்து, எட்டெட்டு, நூறு, பல என்பன மதாந்தரமாமென்க. பல என்றது நூற்றுக்குமேலும் பலவுள வென்பதை விளக்கி நின்றது.

564. ஐவர்=பஞ்சேந்திரியங்கள்; ஊர்=சரீரம்; தலைமகன்=மனம்; குதிரை=பிராணவாயு; பற்றுக் கொடுக்கும்=பிடிகொடுக்கும் (வசப்படும்).

565. ஆரியன்=பெருமை பொருந்திய மனம்; குதிரை யிரண்டு=இடகலை பிங்கலை; விரகு = உபாயம்; கூரிய=நுண்ணிய அறிவுள்ள; வாரி=சேர்த்து.

566. புள்ளினு மிக்க புரவியை மேற்கொண்டாற்
கள்ளுண்ண வேண்டாந் தானே களிதருந்
துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கு
முள்ளது சொன்னோ முணர்வுடை யோருக்கே. ()

567. பிராணன் மனத்தொடும் போரா தடங்கிப்
பிராண னிருக்கிற் பிறப்பிறப் பில்லை
பிராணன் மடைமாறி பேச்சறி வித்துப்
பிராண னடைபேறு பெற்றுண் டீர்நீரே. (கக)

568. ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தா
லாறுதல் கும்பக மறுபத்து நாலதி
லூறுதன் முப்பத் திரண்டதி ரேசக
மாறுத லொன்றின்கண் வஞ்சக மாமே. (உ0)

569. வளியினை வாங்கி வயத்தி லடக்கிற்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாஞ்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே. (உக)

---

566. புள்ளினுமிக்க = (வேகத்தால்) பறவையினுஞ் சிறந்த; புரவியை=குதிரையை (பிராணவாயுவை); மேற்கொண்டால்= அடக்கிக்கொண்டால்; துள்ளி நடப்பிக்கும் = நடனமிட்டு நடத்தலைச் செய்விக்கும்.

567. போரா து = பிரியாது; மடைமாறி=இடகலை பிங்கலைகளில் மாறி (நடத்தல்); நடைபேறு=போதல் வருதல் (இறத்தல் பிறத்தல்).

568. வாமம்=இடகலை; ஆறுதல் = அடங்கியிருத்தல்; ஒன்றின் கண் மாறுதல்=மூக்குத் துவார மொன்றினாலே இழுத்தலும் விடுத்தலுஞ் செய்தல்; பூரகம் பதினாறு மாத்திரை, கும்பகம் அறுபத்துநாலு மாத்திரை, இரேசகம் முப்பத்திரண்டு மாத்திரை யளவெனக் கொள்க.

569. வயம்=வசம்; பழுக்கினும்பிஞ்சாம்=முதிர்ந்தாலும் இளமைத் தன்மை யுடையதாம்; வளியினும்=காற்றைவிட; அளியனும் ஆம் = மென்மைத் தன்மை யுடையனுமாம் (ஆகாயத்திற் பறக்குந் தன்மையுடையனுமா மென்பது கருத்து); வெளியிட்ட வெட்ட வெளியனுமாமே என்றும் பாடம்.

**570.** எங்கே யிருக்கினும் பூரி யிடத்திலே
யங்கே யதுசெய்ய வாக்கைக் கழிவில்லை
யங்கே பிடித்தது விட்டள வுஞ்செல்லச்
சங்கே குறிக்கத் தலைவனு மாமே. (உஉ)

**571.** ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே. (உங)

**572.** மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்
பாலாமி ரேசகத் தானுட் பதிவித்து
மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே
யாலால முண்டா னருட்பெற லாமே. (உச)

**573.** வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே
யேமுற்ற முப்பத் திரண்டுமி ரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக விவ்விரண்
டோமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க வுண்மையே. ()

**574.** இட்டதவ் வீடிள காதிரே சித்துப்
புட்டி படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிய பிராண னபானனுங் கும்பித்து
நட்ட மிருக்க நமனில்லை தானே. (உரு)

---

570. பூரியிடத்திலே = (இடத்திலே பூரி) இடகலை வழியாகப் பூரகத்தைச்செய்; பிடித்தது = கும்பித்தது; விட்டளவு= விடவேண்டிய மாத்திரையளவு; சங்கே குறிக்க=வெற்றிச் சங்க மூதுமாறு (பிராணவாயுவை ஜயித்து).

571. எற்றி=மேலேயேறும்படிசெய்து ; இருகால்=(இடகலை பிங்கலைகளால்) இருதடவை; பிடிக்குங் கணக்கு=கும்பிக்கும் வகை; குறியது ஆம்=கருத்துண்டாம்.

572. மேல்=சிரசு நேத்திரம் காது முதலியன; கீழ்=பாதம் பெருவிரல் முதலியன; நடு = இதயம், நாபி முதலியன; (இது வாயுத்தாரணை முறைமை கூறியதாம்).

573. இடகலையாற் பூரித்துக் கும்பித்துப் பிங்கலையா லிரேசிப்பதும், பிங்கலையாற் பூரித்துக் கும்பித்து இடகலையா லிரேசிப்பதும் பிராணாயாம முறையாமென்பது கூறிற்று; நாபித்தானத்திலுள்ள அக்கினி மண்டலத்தில் கும்பிக்கப்படுதலை ஓமத்தால் என்றருளினர்.

574. வீடு=சரீரம்; இளகாது=தளராதபடி; புட்டிபட=(புஷ்டிபட) பருக்கும்படி ; கொட்டிய = வியர்த்தமாய்ப் போகிற; நட்டம் இருக்க=நிலை நிறுத்தினவர்களா யிருக்க.

575. புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கி
லுறுப்புச் சிவக்கு முரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. (உஎ)

576. கூட மெடுத்துக் குடிபுக்க மங்கைய
ரோடுவர் மீளுவர் பன்னிரண் டங்குல
நீடுவ ரெண்விரற் கண்டிப்பர் கால்விரற்
கூடிக்கொ ளிற்கோல வஞ்செழுத் தாமே. (உஅ)

577. பன்னிரண் டானைக்குப் பகலிர வுள்ளது
பன்னிரண் டானையைப் பாக னறிகிலன்
பன்னிரண் டானையைப் பாக னறிந்தபின்
பன்னிரண் டானைக்குப் பகலிர வில்லையே. (உகூ)

---

(ரு) பிரத்தியாகாரம்.

578. கண்டுகண் டுள்ளே கருத்துற வோங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
யின்றுகண் டிங்கே யிருக்கலு மாமே. (௩0)

---

575. நெறிப்பட = முறைப்படி ; உறுப்புச் சிவக்கும் = (உறுப்பு சினையாகு பெயராய்ச் சரீரத்தைக் குறித்தது) தேகம் பொன்னிறமாம்.

576. கூடம்=சரீரம்; மங்கையர்=(சூரியகலை சந்திரகலைகளா வியங்கும்) பிராணவாயு; எண்விரல் கண்டிப்பர்=எட்டங்குலம் வெட்டிக்கொண்டு (நாலங்குலத்தை யெறிந்துவிடுவர்); நால் விரல் கூடிக்கொளின்=அந் நாலங்குலம் வீணாகாமற் கூடிவரப்பெறின்;அஞ்செழுத்தாம்=பஞ்சாக்கரசொரூபனுவான்.

577. ஆனை=(அடங்காத்தன்மையுள்ள) பிராணவாயு; பகல் இரவு= பகலு மிரவுமாகிய நாளினதெல்லை, அல்லது சாக்கிரசுழுத்தி, அல்லது தோற்ற நாசம், அல்லது ஞானஞ்ஞானம் ; பாகன்=ஜீவன்.

578. பண்டு = அநாதியாக; தேடியை = தேடப்பட்ட சிவபெருமானை.

**579.** நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலந்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே (ரு௧)

**580.** மூலத் திருவிரன் மேலுக்கு முன்னின்ற
பாலித்த யோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளெழுஞ் செஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே. (ரு௨)

**581.** நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குல
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேன்
மாசித்தி மாயோகம் வந்துதலைப் பெய்யுந்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாமே. (ரு௩)

**582.** சோதி யிரேகைச் சுடரொளி தோன்றிடிற்
கோதில் பரானந்த மென்றே குறிக்கொண்மி
னேர்திகழ் கண்டத்தே நிலவொளி யெய்தினு
லோதுவ துன்னுட லுன்மத்த மாமே. (ரு௪)

**583.** மூலத்து வாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத்து வாரத்தின் மேன்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்தது தானே. (ரு௫)

---

579. நாபிக்குங்கீழ்ப் பன்னிரண்டங்குலம்=நாபிக்குப் பன்னிரண் டங்குலத்தின் கீழுள்ள மூலாதாரம்; தாபிக்கும் மந்திரம்= அந்த மூலாதாரத்திலுள்ள மந்திரமாகிய பிரணவம், அல்லது மூலாதார அக்கரங்களாகிய "வ ஶ ஷ ஸ" என்னும் அக் கரங்களெனினுமாம்.

580. பாலித்த=பிறப்பைத்தருகின்ற; யோனி = லிங்க ஸ்தானம்; கோலித்த=வட்டமாயுள்ள; செஞ்சுடர்=பிரமரந்திர மார்க் கம்.

581. அதோமுகம்=கீழே; பன்னிரண்டங்குலம் = பன்னிரண்டங் குலத்திலுள்ள இதய ஸ்தானமாகிய அநாகதம்; (இந்த அநாகதமே மானத பூசைக்குரிய ஸ்தானமாம்) நினையவும் வல்லையேல்=தியானிக்கவும் வல்லமை யுடையவனுயின்.

582. சோதி யிரேகை=சந்திரனது பிறைவடிவான தீபவொளி; கண் டத்தே=விசுத்தியிலே; உன்மத்தமாம்=பரவசமாம்.

583. முக்காரமிட்டிரு = அடைத்துக்கொண்டிரு; மேலைத் துவா ரம்=ஆக்கினை சக்கரத்திலுள்ள சுழுமுனைத் துவாரம்.

584. எருவிடும் வாச லிருவிரன் மேலே
கருவிடும் வாச லிருவிரற் கீழே
யுருவிடு சோதியை யுள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே. (ருகசு)

585. ஒருக்கா லுபாதியை யொண்சோதி தன்னைப்
பிரித்துணர் வந்த வுபாதிப் பிரிவைக்
கரைத்துணர் வுன்னல் கரைதலுண் ணோக்கல்
பிரத்தியா காரப் பெருமைய தாமே. (ருஎ)

586. புறப்பட்ட வாயுப் புகவிடா வண்ணந்
திறப்பட்ட நிச்சயஞ் சேர்ந்துட னின்று
றுறப்பட்டு நின்றது வுள்ளமு மங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே. (ருஅ)

587. குறிப்பினி னுள்ளே குவலயந் தோன்றும்
வெறுப்பிரு ணீங்கி விகிர்தனை நாடுஞ்
சிறப்புறு சிந்தையைச் சிக்கென் றுணரி
லறிப்புறு காட்சி யமரரு மாமே. (ருகூ)

---

584. எருவிடும்வாசல்=குத ஸ்தானம்; கருவிடும்வாசல் = இலிங்க ஸ்தானம்; கருவிடும் சோதி = பிறப்பினை யொழிக்கும் சிவபெருமான்.

585. ஒருக்கலுபாதியை என்றும் பாடம்; உபாதி=மாயோபாதி; சோதி = சிவ சொரூபமான ஒளியுருவன்; அந்த உபாதிப் பிரிவை = அவ்வாறு பிரித்தறியப்பட்ட ஆன்மாவை; கரைத்து=சிவத்தொடு கலப்பித்து; கரைதல்=(அவ்வாறு) கலத்தல்.

586. புறப்பட்டவாயு=நால்விரல் வெளிச்செல்லும் வாயு; திறப்பட்ட நிச்சயம் = கடைப்பிடித்த உறுதி; உறப்பட்டு நின்றது= வசப்பட்டிருந்தது.

587. குறிப்பு=கருத்து; வெறுப்பு இருள்=வெறுக்கப்பட்ட அஞ்ஞானவிருள்; சிக்கென்றுணரில்=உறுதியாகவறியின்.

(சு) தாரணை.

588. கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணுத்தண் டூடே வெளியுறத் தானேக்கிக்
காணுக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணு ளடைக்கும் வழியது வாமே. (சo)

589. மலையார் சிரத்திடை வானீ ரருவி
நிலையாரப் பாயு நெடுநாடி யூடுபோய்ச்
சிலையார் பொதுவிற் றிருநட மாடுந்
தொலையாத வானந்தச் சோதிகண் டேனே. (சக)

590. மேலை நிலத்தினுள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தி லெழுகின்ற மூர்த்தியை
யேல வெழுப்பி யிவளுடன் சந்திக்கப்
பாலனு மாவான் பார்நந்தி யாணையே. (சஉ)

591. கடைவாச லைக்கட்டிக் காலை யெழுப்பி
யிடைவாச னேக்கி யினிது ளிருத்தி
மடைவாயிற் கொக்குப்போல் வந்தித் திருப்பா
ருடையாம லூழி யிருக்கலு மாமே. (சங)

---

588. கோணுமனத்தை=இந்திரிய வழியிற் செல்லாத மனத்தை; கீழ்க்கட்டி=கீழ் நோக்காதபடி தடுத்து, அல்லது பாத முதலான விடங்களினிறுத்தி; வீணுத்தண்டூடே = சுழுமுனை வழியே; வெளியுற நோக்கி=பரமாகாயத்தை யுற்றுநோக்கி; வாணுளடைக்கும் வழி=ஆயுளைச் செலவழியாதபடி தடுக்கும் நெறி.

589. மலையார் சிரத்திடை = (மேரு) மலையிற் பொருந்திய யுச்சியினின்று; வான் நீர் அருவி=தூயதான நீராறு அல்லது பரமாகாயத்திலுள்ள சந்திரமண்டலத்திலிருந்து பொழியும் அமுத தாரை; சிலையார்பொது = பலவித வாத்திய ஒலி கேட்கப்படும் பரமாகாயத் தானம்.

590. மேலை நிலத்தினுள்=ஆறுதாரத்திற்கு மப்பாற்பட்ட தானத்திற் குரியவளும்; வேதகப் பெண்பிள்ளை=வேறுபாட்டினைச் செய்கின்றவளும்; மூர்த்தியை ஏல எழுப்பி=(பாம்பின் வடிவுள்ளவளுமாகிய குண்டலி) சக்தியை முறைப்படி துயிலினின்று மெழுப்பி; இவளுடன் சந்திக்க = அவள் செல்லும் பிரம ரந்திர வழிசென்று பரசிவத்தைத் தரிசிக்க.

591. கடைவாயில் = மூலவழி; இடைவாசலூடே யிருவழியோட்டி என்றும் பாடம்; இடைவாசல்=புருவமத்திய ஸ்தானம், அல்லது சுழுமுனை யூடுபோம் நெறி; கொக்குப்போல்வந்திக்கப் பல்லார் என்றும் பாடம்; உடையாமல்=சாவாமல்.

592. கலந்த வுயிருடன் கால மறியிற்
கலந்தலே யாது காலி னெருக்கங்
கலந்த வுயிரது காலது கட்டிக்
கலந்த வுயிருடன் காலமு நிற்குமே. (சச)

593. வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு
வாய்திறப் பாரே வளியிட்டுப் பாய்ச்சுவர்
வாய்திற வாதார் மதியிட்டு மூட்டுவர்
கோய்திற வாவிடிற் கோணையு மாமே. (சரு)

594. வாழலு மாம்பல காலு மனத்திடைப்
போழ்கின்ற வாயு புறம்படாப் பாச்சுறி
லேழுசா லேக மிரண்டு பெருவாய்தற்
பாழி பெரியதோர் பள்ளி யறையிலே. (சசூ)

595. நிரம்பிய வீரைந்தி லைந்திவை போனு
லிரங்கி விழித்திருந் தென்செய்வை பேதாய்
வரம்பினுட் கோலி வழிசெய்கு வார்க்குக்
குரங்கினைக் கோட்டைப் பொதியலு மாமே. (சஎ)

---

592. உயிர்=சீவான்மா; உயிர்கால்=பிராணவாயு அல்லது சீவனை யும் வாயுவையும்.

593. மாடு=பெருமை அல்லது இரத்தினம் (சிவத்துக்கு உவமை யாகுபெயர்); மதியிட்டு மூட்டுவர்=அறிவினில் அடக்குவார்; கோதுற என்றும் பாடம்; கோய் = ஆபரணம் வைக்கும் செப்பு,அது கபால ஸ்தானம்அல்லது சுழுமுனை; (இரத்தின மென்றதற்கேற்ப அணிகலச் செப்பு என்றூர்).

594. போழ்கின்றவாயு=மனதைப்புலன்கடோறும் அலையச்செய்யும் பிராணவாயு; புறம்படாப்பாச்சு உறில்=புறத்திற்செல்லாத படி சுழுமுனையிற்செலுத்துதல்கூடுமாயின்; ஏழு சாலேகம்= ஏழுபலகணி (அவை இருகண், இரு செவி, நாசித்துவார மிரண்டு, வாயொன்று); இரண்டு பெருவாயில் = இடகலை பிங்கலை நாடிகள்; பள்ளியறை=சத்தியுஞ் சிவமுஞ் சையோ கமா யிருத்தற்குரிய சகஸ்திரவிதழ்த் தாமரை.

595. நிரம்பிய ஈரைந்தில் = சரீரத்தில் நிறைந்திருக்கும் தசவாயு வில்; ஐந்திவை=(இவை ஐந்து)=பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் (இவை பஞ்சப் பிராணன் எனப்படும்); குரங்கு - மனத்துக் காகுபெயர்; கோட்டை= சரீரம்.

596. முன்னமே வந்தன ரெல்லா முடித்தனர்
பின்னையே வந்தவர்க் கென்ன பிரமாண
முன்னுறு கோடி யுறுகதி பேசிடி
லென்னமா மாய மிடிகரை நிற்குமே. (சஅ)

597. அரித்த வுடலையைம் பூதத்தில் வைத்துப்
பொருத்தவைம் பூதஞ்சித் தாதியிற் போந்து
தெரித்த மனாதிசத் தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே. (சகூ)

---

(எ) தியானம்.

598. வருமாதி யீரெட்டுள் வந்ததி யானம்
பொருவாத புந்தி புலன்போக மேவ
லுருவாய சத்தி பரத்தியான முன்னுங்
குருவாய்ச் சிவத்தியானம் யோகத்திற் கூறே. (ரு௦)

599. கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணுக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு
வண்ணக்கி னுள்ளே யகண்ட வொளிகாட்டிப்
புண்ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. (ருக)

---

596. முன்னமேவந்தவர்=முன்னாலேபிறந்தவர்கள்; முடித்தனர்= சரீரத்தை யொழித்தழிந்தார்கள்; பின்னையே வந்தவர்=அவர்க்குப் பின்னாற் பிறந்தவர்; என்ன பிரமாணம் = (சாவாதிருப்பா ரென்பதற்கு) ஆதாரம் யாது; கதி=பிறப்பு; இடிகரை=அழியுந் தன்மையுள்ள தேகம்.

597. அரித்த உடல்=விடயங்களாற் கெடுக்கப்பட்டதேகம்; உடலை ஐம்பூதத்தி லொடுக்கிப், பூதங்களை அந்தக்கரணங்களிலொடுக்கி, அந்தக்கரணங்களைத் தன்மாத்திரையிற் சேர்த்து, தன்மாத்திரைகளை மாயையிலடக்கிச் சீவனைச் சிவத்தி லொடுக்குதலே விசாரணை யென்பது கூறிற்று.

598. ஈரெட்டு = தாரணையிற் போந்த பூதமைந்து புலனைந்து கரணம் நாலு மாயை ஒன்று ஆன்மா ஒன்று ஆகப் பதினாறு; புந்தி புலன் போகமேவல்=புந்தி புலனைக் கடந்து நிற்றல்; உருவாய சத்தி பரத்தியானம் = சத்திசிவ சம்பந்தமான சகுணத்தியானம்; உன்னுங் குருவாய் = (குருவாய் உன்னும்) குருவடிவமாய்க் கருதப்படும்; சிவத்தியானம் = நிஷ்கள சிவத்தியானம்; யோகத்தின்கூறு=யோகத்தினிரண்டு பகுதி.

599. ஞானக்கூட்டம்=ஞானேந்திரியங் கூடுமிடம்; பண்ணுக்கி= நாதத்தை யொலிக்கச்செய்து; புண்ணுக்கி=வருத்தி.

600. ஒண்ணு நயனத்தி லுற்ற வொளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடல்
விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணும மின்றது பார்க்கலு மாமே. (ருஉ)

601. ஒருபொழு துன்னா ருடலோ டுயிரை
யொருபொழு துன்னா ருயிருட் சிவனை
யொருபொழு துன்னார் சிவனுறை சிந்தையை
யொருபொழு துன்னார் சந்திரப் பூவையே. (ருக)

602. மனத்து விளக்கினை மான்பட வேற்றிச்
சினத்து விளக்கினைச் செல்ல நெருக்கி
யனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே. (ருச)

603. எண்ணா யிரத்தாண்டு யோக மிருக்கினுங்
கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை
யுண்ணாடி யுள்ளே யொளிபெற நோக்கிடிற்
கண்ணாடி போலே கலந்திருந் தானே. (ருரு)

604. நாட்ட மிரண்டு நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை
யோட்டமு மில்லை யுணர்வில்லை தானில்லை
தேட்டமு மில்லை சிவனவ னாமே. (ருசா)

---

600. ஒண்ணு ஆம்=(புருவ மத்தியை யுற்று நோக்குதலால்) ஒன்றாய்ச் சேர்ந்த; விண் ஆறு=பரமாகாய நெறி; பண்ணுமல் நின்றது=சுயம்புவான சிவம்.

601. சந்திரப்பூ = (ஆக்கினா சக்கரத்திலுள்ள) சந்திரன்போலும் வெண்ணிறமான தாமரைப்பூ; அல்லது ஆக்கினா சக்கிரத்தின் அதி தேவதையான சந்திர வண்ணமான ஹாகினி சக்தி.

602. மான்=மூலப்பிரகிருதி (அவித்தையென்னும் பொருள் தந்து நின்றது); அனைத்து விளக்கும்=அறியுந்தன்மையுள்ள கருவி கரணங்கள்; திரி = அறிவு; மாயாவிளக்கு = அணையாத விளக்கு.

603. கண்ணாடிபோலே = கண்ணாடியிற் காணப்படும் பிரதி பிம்பம் போல.

604. நடுமூக்கு=புருவ மத்தியிலுள்ள மூக்கினுனி; ஓட்டம்=பிராணவாயுவி னியக்கம்; உணர்வு = பிரபஞ்ச வுணர்ச்சி; தேட்டம்=ஆராய்ச்சி.

**605.** நயன மிரண்டு நாசிமேல் வைத்திட்
டுயர்விழா வாயுவை யுள்ளே யடக்கித்
துயரறு நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை தானே. (௫௭)

**606.** மணிகடல் யானை வளர்குழன் மேக
மணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்க டாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கவொண் ணாதே. (௫௮)

**607.** கடலொடு வேகக் களிறொடு மோசை
யடலொடு மவ்வீணை யண்ட ரண்டத்துச்
சுடர்மன்னு வேணு சுரிசங்கி னோசை
திடமறி யோகிக்கல் லாற்றெரி யாதே. (௫௯)

**608.** ஈச னியல்பு மிமையவ ரீட்டமும்
பாச மிரங்கப் பரந்துயி ராய்நிற்கு
மோசை யதன்மணம் போல விடுவதோ
ரோசையு மீச னுணரவல் லார்க்கே. (௬0)

**609.** நாத முடியிலே நல்லா ளிருப்பது
நாத முடிவிலே நல்யோக மிருப்பது
நாத முடிவிலே நாட்ட மிருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே. (௬௧)

---

605. உயர்விழா=உயர்வான மங்களமுள்ள; துயரறுநாடி=துயரறு நின்ற சுழுமுனை; தூங்க=தங்கியிருக்க.

606. தணிந்து=ஒத்து; மணி, கடல், யானை, குழல், மேகம், வண்டு, தும்பி, வளை (சங்கு), பேரிகை, யாழ் ஆகிய நாதங்கள் பத்துமென்று கொள்க.

607. அண்டரண்டத்து = மாஹா ஆகாயத்திலே; சுடர்மன்னு = (மன்னுசுடர்) நிலைபெற்றுள்ள சிவம்; சுரிசங்கு = சுழித்த லுள்ள சங்கம்.

608. பாசமிரங்க=பாசம் வருந்தும்படி (பாசங்கெட); பாசமிறங்க என்றும் பாடம்; நாதமே பிரபஞ்சமா யுள்ளதென்பது இம் மந்திரக் கருத்து.

610. உதிக்கின்ற வாறினு முள்ளங்கி யைந்துந்
துதிக்கின்ற தேசுடைத் தூங்கிரு ணீங்கி
யதிக்கின்ற வைவரு ணாதமொ டுங்கக்
கதிக்கொன்றை யீசன் கழல்சேர லாமே. (சுஉ)

611. பள்ளி யறையிற் பகலே யிருளில்லை
கொள்ளி யறையிற் கொளுந்தாமற் காக்கலா
மொள்ளி தறியிலோ ரோசனை நீளிது
வெள்ளி யறையில் விடிவில்லை தானே. (சுங)

612. கொண்ட விரதங் குறையாமற் றனொன்றித்
தண்டுட னோடித் தலைப்பட்ட யோகிக்கு
மண்டல மூன்றினு மொக்க வளர்ந்தபின்
பிண்டமு மூழி பிரியா திருக்குமே. (சுச)

613. அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்
டவ்வவர் மண்டலத் தவ்வவர் தேவரா
மவ்வ்வர் மண்டல மவ்வவர்க் கேவரி
லவ்வவர் மண்டல மாயமற் றோர்க்கே. (சுரு)

614. இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை யுள்ளே
முளைக்கின்ற மண்டல மூன்றினு மொன்றித்
துளைப்பெரும் பாசத் துருவிடு மாகி
விளைப்பின்றி மார்கழி யேற்றம தாமே. (சுசு)

---

610. உதிக்கின்ற ஆறினும்=(அப்பியாசத்தாற்) காணப்படும் ஆதார மாறினும்; உள்ளங்கி ஐந்து=உள் ஒளியாகிய, சந்திரவொளி, சூரியவொளி, அக்கினியொளி, தீபவொளி, மஹாஆகாய வொளி; ஐவருள் அதிக்கின்ற நாதம்=தன்மாத்திரை யைந்தனுள் சிறந்த நாதம்.

611. பள்ளியறை = ஆயிரவிதழ்ப் பூ; கொள்ளியறை = சுடுகாடு; வெள்ளி=சூனியம் அல்லது ஒளிமயம்.

612. ஒன்றி=(அதில்) நிலைத்திருந்த; தண்டு=முதுகந்தண்டுடு செல்லும் சுழுமுனை; தலைப்பட்ட=சேர்ந்த; மண்டலம் மூன்று= சோமசூரியாக்கினி மண்டலங்கள்; ஒக்க வளர்ந்தபின் = (சீதோஷ்ணங்களைச்) சமனுகக் கொண்டு வளர்ந்த பிறகு; பிண்டம்=சரீரம்.

613. அவ்வவர் மண்டலம்=சூரியன், சந்திரன், அக்கினிதேவன் ஆகிய மூவருக்கு முரிய மண்டலம்.

614. இருட்டு அறை = அவித்தியாமய சரீரம்; துளை=சுழுமுனை; பாசத் துருவிடுமாகில்=(பாசத்துத் துருவிடுமாகில்) அன்பினல் தேடுவானுயின்; மார்கழி ஏற்றமதாம்=மார்கழியென்று கூறப்படும் மாதமுடிவு தோன்றுவதாம்.

615. முக்குண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிட நாழிகை சாதிக்க
வைக்கு முயிர்நிலை வானவர் கோனே. (சுஎ)

616. நடலித்த நாபிக்கு நால்விரன் மேலே
மடலித்த வாணிக் கிருவிர லுள்ளே
கடலித் திருந்து கருதவல் லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந் தாரே. (சுஅ)

617. அறிவா யசத்தென்னு மாறு றகன்று
செறிவான மாயை சிதைத்தரு ளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான வன்பர் நிலையறிந் தாரே. (சுகூ)

(அ) சமாதி.

618. சமாதிய மாதியிற் றான்சொல்லக் கேட்கிற்
சமாதிய மாதியிற் றானெட்டுஞ் சித்தி
சமாதிய மாதியிற் றங்கினோர்க் கன்றோ
சமாதிய மாதி தலைப்படுந் தானே. (எ0)

619. விந்துவு நாதமு மேருவி லோங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடு
மந்தமி லாத வறிவி னரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே. (எக)

---

615. முக்கண் ணூடுற என்றும் பாடம்; மூடு=மறைப்பு; சிக்கென= உறுதியாக; திரித்து = மாறிமாறிச் செலுத்தி; நாழிகை = (குறித்த அளவான) நாழிகைவரை.

616. நடலித்த=(நடலமென்பத னடியாகப் பிறந்த பெயரெச்சம்) சீர்பெற்ற; மடலித்த=இதழ் பொருந்தியுள்ள ; வாணி= நாதந் தோன்றுமிடம்; கடலித்து=(அலையற்ற) கடலின் றன்மையாய்; கடலொத்த என்றும் பாடம் ; சடலத் தலைவன்= சீவான்மா.

617. அறிவாய்=ஞானமயமாய்; அசத்து என்னும் ஆறு=அசத்தென்று கூறப்பட்ட முப்பத்தாறு தத்துவங்கள்; செறிவான= பந்தித்திருக்கின்ற; அருள்=சிற்சத்தி; பெற்றி=தன்மை.

618. சமாது இயமம் ஆதியில்தான் = (இயமம் ஆதியில் சமாது தான்) இயமாதி யங்க சாதனையாலுண்டாஞ் சமாதி.

619. மேரு=புருவ மத்தியத்திலுள்ள சுழுமுனையினுச்சி.

620. மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மன மெங்கில்லை வாயுவு மங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே. (௭௨)

621. விண்டலர் கூபமும் விஞ்சத் தடவியுங்
கண்டுணர் வாகக் கருதி யிருப்பார்கள்
சென்று வெளியிற் செழுங்கிரி யத்திடை
கொண்டு குதிரைக் குசைச்செறுத் தானே. (௭௩)

622. மூல நாடிமுக் கட்டல குச்சியு
ணாலு வாச னடுவு ளிருப்பிர்காண்
மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனவிலு மில்லையே. (௭௪)

623. மண்டல மைந்து வரைகளு மீராறு
கொண்டிட நிற்குங் குடிகளு மாறெண்மர்
கண்டிட நிற்குங் கருத்து நடுவாக
வுண்டு நிலாவிடு மோடும் பதத்தையே. (௭௫)

---

620. மன்மனம்=ஸ்தூல சூக்கும சரீரங்க ளிரண்டினும் பிராண வாயுவொடு கலந்திருக்கும் மனம்; மனோலயம்=மனமொடுங்குமிடம் (அது பரசிவம்).

621. விண்டு=மலை; அலர்=விசாலமான; அத்து=அழகு; வெளி=மஹாசூனியாகாயம்; செழுங்கிரி=ஆக்கினையினுச்சி; குசைச் செறுத்தான்=கடிவாளத்தை யிழுத்து அடக்கினன்.

622. மூலநாடி=மூலாதாரத்திலுள்ள சுழுமுனை; முக்கட்டு=பிரமக் கிரந்தி, விஷ்ணுகிரந்தி, ருத்திரகிரந்தி என்கிற கட்டு; (முகடு) என்றும் பாடம்; அலகு உச்சி=விசாலமான புருவ மத்திய ஸ்தானம்; நாலுவாசல் நடு=கண் நாக்கு மூக்கு செவி இவை கூடுமிடம்; மேலைவாசல்=பிரம ரந்திரவழி.

623. மண்டலமைந்து=பூமண்டலம், ஜலமண்டலம், அக்கினி மண்டலம், வாயு மண்டலம், ஆகாசமண்டலம்; இவற்றுக்கு முறையே மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்திஸ்தானங்களாம்; வரைகள்=மூலமுதற் கூறப்படும் துவாதச ஸ்தானங்கள்; ஆறு எண்மர்=ஆதார தெய்வங்கள், மண்டல தெய்வங்கள்; சந்திர சூரியர்களும் சக்திகளுமாம்.

624. பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்
தேட்டற்ற வங்கிலஞ் சேரும் படிவைத்து
நாட்டத்தை மீட்டு நயனத் திருப்பார்க்குத்
தோட்டத்து மாம்பழந் தூங்கலு மாமே. (எசு)

625. உருவறி யும்பரி சொன்றுண்டு வானோர்
கருவரைப் பற்றிக் கடைந்தமு துண்டா
ரருவரை யேறி யமுதுண்ண மாட்டார்
திருவரை யாமனந் தீர்ந்தற்ற வாறே. (எஎ)

626. நம்பனை யாதியை நான்மறை யோதியைச்
செம்பொனி னுள்ளே திகழ்கின்ற சோதியை
யன்பினை யாக்கி யருத்தியொ டுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டு கூட்டமிட் டாரே. (எஅ)

627 மூலத்து மேலது முச்சது ரத்தது
காலொத் திசையிற் கலக்கின்ற சந்தினின்
மேலைப் பிறையினு ணெற்றிநேர் நின்ற
கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே.

628. கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை யெல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே. (அ0)

---

624. பொறிப்பட்ட=அடைக்கப்பட்ட; அங்கிலம்=அந்தத் துரியத் தானம்; மாம்பழம் = பரசிவம்; (இனிமைபற்றிவந்த உவம வாகுபெயர்).

625. உரு=தற்சொரூபம்; கருவரை=பெரிய மந்திரமலை; அமுதுண்டார் = தேவர்கள்; திருவரையாமனம் = அளவிடப்படாத பெருமையுள்ளமனம்; அற்ற ஆறே=அடங்கினவகையே.

626. கொம்பு=சுழுமுனை; கூட்டமிட்டார்=கலந்திருந்தார்.

627. மூலத்து=குதத்துக்கு; முச்சதுரத்தது=முக்கோணமு நாற்கோணமுமுள்ளது; கால் ஒத்து இசையில்=வாயுக்கள் பொருந்திச் சேரில்; சந்தினில்=பொருத்தில்; மேலைப்பிறை= மேலேயுள்ள சந்திரமண்டலம்.

628. கற்பனை=வீண்சிந்தனைகள்; கனல்=மூலாக்கினி; சிற்பன்= உலகமுண்டாக்கு மிறைவன்; புணர்மதி = சிவத்தொடு கலக்குமறிவு; தற்பரமாக=அப்பரசிவமேயாயிருக்க.

629. தலைப்பட் டிருந்திடத் தத்துவங் கூடும்
வலைப்பட் டிருந்திடு மாதுநல் லாளுங்
குலைப்பட் டிருந்திடுங் கோப மகலுந்
துலைப்பட் டிருந்திடு தூங்கவல் லார்க்கே. (அக)

630. சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவனு
மாதியு முண்ணின்ற சீவனு மாகுமா
லாதிப் பிரமன் பெருங்கடல் வண்ணனு
மாதி யடிபணிந் தன்புறு வாரே. (அஉ)

631. சமாதிசெய் வார்க்குத் தகும்பல யோகஞ்
சமாதிகள் வேண்டா மிறையுட னேகிற்
சமாதிதா னில்லை தானவ னாகிற்
சமாதியி லெட்டெட்டுச் சித்தியு மெய்துமே. (அங)

---

## உ-வது அட்டாங்க யோகப்பேறு.

### (க) இயமம்.

632. போதுகந் தேறும் புரிசடை யானடி
யாதுகந் தாரம ராபதிக் கேசெல்வ
ரேதுகந் தானிவ னென்றருள் செய்திடு
மாதுகந் தாடிடு மால்விடை யோனே. (க)

### (உ) நியமம்.

633. பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்
கற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு
முற்றெழுந் தாங்கே முனிவ ரெதிர்வரத்
தெற்றுஞ் சிவபதஞ் சேர்தலு மாமே. (உ)

---

629. தலைப்பட்டு=அவ்வாறு கூடி; தத்துவம்=மெய்ப்பொருளான சிவம்; வலைப்பட்டிருந்திடு மாது நல்லாள் = வலைபோலப் பிராணவாயுவைச் சுழுமுனை செல்லாது தடுத்துநிற்கும் குண்டலிசத்தி; குலை=கெடுத்தல்; துலைப்பட்டிருந்திடும்=தராசு முனை சமனாயிருக்கும்; தூங்கவல்லார் = யோக நித்திரை செய்பவர்.

631. பலயோகம் = மந்திரயோகம், பக்தியோகம், ஞானயோகம், கன்மயோகமாதிய; எட்டெட்டுச் சித்தி=கலைகளறுபத்து நான்கினு லடையப்படும் சித்திகள்.

632. யாது=எந்த வகையிலாயினும்; ஏது உகந்தானிவன்=(இவன் ஏது உகந்தான்) இவன் எதனை விரும்பினன்; மாது கந்து=உமாதேவி களிக்குமாறு.

633. முற்று (உம்)=எல்லாரும்; தெற்றும்=தெளிவினையளிக்கும்.

(ங) ஆதனம்.

634. வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த்
திருந்தம ராபதிச் செல்வ னிவனெனத்
தருந்தண் முழவங் குழலு மியம்ப
விருந்தின்ப மெய்துவ ரீச னருளே. (ங)

(ச) பிராணயாமம்.

635. செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்துக்
கும்பத் தமரர் குழாம்வந் ததிர்கொள்ள
வெம்பொற் றலைவ னிவனு மெனச்சொல்ல
வின்பக் கலவி யிருக்கலு மாமே. (ச)

(ரு) பிரத்தியாகாரம்.

636. சேருறு காலந் திசைநின்ற தேவர்க
ளாரிவ னென்ன வரனு மவனென்ன
வேருறு தேவர்க ளெல்லா மெதிர்கொள்ளக்
காருறு கண்டனை மெய்கண்ட வாறே. (ரு)

(சு) தாரணை.

637. நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ்
சொல்வழி யாளர் சுருங்காப் பெருங்கொடை
யில்வழி யாள ரிமையவ ரெண்டிசைப்
பல்வழி யெய்தினும் பார்வழி யாகுமே. (சு)

---

634. தண்முழவம் குழலும்=இனிய நாதமுள்ள மத்தளம் புல்லாங் குழல்; விருந்தின்பம்=புதியவின்பம்.

635. செம்பொற் சிவகதி=சிவந்த பொன்போலும் வண்ணனான சிவனது உலகம்; கும்பத்து அமரர்=பூரண கும்பங்களேந்திய தேவர்கள் (இது அஷ்டமங்கலங்களுக்கு முபலக்கணம்); எம் பொற்றலைவன்=எமது செல்வம்போற் சிறந்த தலைவன்.

636. தேவர்களாரிவனென்ன=(பிரத்தியாகார பலத்தினுற் சிவசாரூபம் பெற்றுச் செல்லுதலால்) தேவர்கள் இவன் யாரென்று ஐயுற்று வினவ.

637. சொல்வழி = நூல்கள்புகழும் தாரணை மார்க்கம்; சுருங்காப் பெருங்கொடை வழியில் ஆளர்=குறையாத பெருஞ்செல்வம் அருளுதலை முறைமையாகப் பெற்ற பிரமவிஷ்ணுக்கள்; பல்வழி=பலவிடங்கள்; பார்வழியாகும்=பூமியில் நடப்பது போலவாகும்.

(எ) தியானம்.

638. தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும்
வாங்கவல் லார்க்கும் வலிசெய்து நின்றிட்டுத்
தேங்கவல் லார்க்குந் திளைக்கு மமுதமுந்
தாங்கவல் லார்கட்குந் தன்னிட மாமே. (எ)

(அ) சமாதி.

639. காரிய மான வுபாதியைத் தான்கடந்
தாரிய காரண மேழுந்தன் பாலுற
வாரிய காரண மாயத் தவத்திடைத்
தாரிய றற்பரஞ் சேர்தல் சமாதியே. (அ)

---

௯-வது அட்டமா சித்தி.

640. பணிந்தெண் டிசையும் பரமனை நாடித்
துணிந்தெண் டிசையுந் தொழுதெம்பி ரானை
யணிந்தெண் டிசையு மட்டமா சித்தி
தணிந்தெண் டிசைச்சென்று தாபித்த வாறே. (க)

---

638. தூங்கவல்லார் = பாற்கடற் றயிலுந் திருமால்; ஏழ்புவனம் வாங்க வல்லார்=(ஒடுங்கிய) ஏழுலகங்களை மீண்டும் படைக்க வல்ல பிரமன்; வலிசெய்து நின்றிட்டுத் தேங்கவல்லார் = (தோன்றிய வுலகங்களைத் தம்) வலிமையைக்கொண்டு அழித்து அசையாது நிற்கும் உருத்திரன்; அமுதந் தாங்கவல்லார்=அமுதத்தை யடைந்திருக்கும் இந்திரன்; இடமாம் = (தியான) ஸ்தானமாம்.

639. காரியமான உபாதி (ஏழு) - அநீசத்துவம், கிஞ்சிஞ்ஞத்துவம், பரிச்சின்ன (கண்ட) த்துவம், மாயாசகித்துவம், அற்பசத்தித்துவம், பராதீனத்துவம், அபரோக்ஷத்துவம்; இவ்வேழும ஜீவனுக்குரிய காரியவுபாதிகளாம்; ஆரிய=சிறந்த; காரண (உபாதி) ஏழு - ஈசத்துவம், சர்வஞ்ஞத்துவம், வியாபகத்துவம், மாயா ரகிதத்துவம், சர்வ சத்தித்துவம், சுதந்தரத்துவம், பரோக்ஷத்துவம்; இவ்வேழும் ஈசனுக்குரிய காரணவுபாதிகளாம்; (இவற்றை வேறு வகையாகக்கூறலுமுண்டு). காரண மாய = காரணோபாதி ஏழும் (மாயா நிவிர்த்தியால்) கெட; தார்=ஒழுங்கு. உபாதி என்பது காரணமென்பதனோடும், ஏழென்பது காரியமென்பதனோடும் இயைந்து நின்றன.

640. துணிந்து எண்டிசையுந் தொழுது எம்பிரானை=(எண்டிசையும் எம்பிரானைத் துணிந்து தொழுது) அஷ்ட திக்குகளிலும் எமது பரமசிவத்தை நிச்சயித்து வணங்கி.

641. பரிசறி வானவர் பண்ப னடியெனத்
துரிசற நாடியே தூவெளி கண்டே
னரிய தெனக்கில்லை யட்டமா சித்தி
பெரிதருள் செய்து பிறப்பறுத் தானே. (௨)

642. குர்வ னருளிற் குறிவழி மூலப்
பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்
தெரிதரு சாம்பவி கேசரி சேரப்
பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே. (௩)

643. காயாதி பூதங் கலைகால மாயையி
லாயா தகல வறிவொன்ற தாதியே
யோயாப் பதியத னுண்மையைக் கூடினல்
வீயாப் பரகாய மேவலு மாமே. (௪)

644. இருபதி னாயிரத் தெண்ணூறு பேத
மருவிய கன்ம மாமந்த யோகந்
தருமிவை காய வுழைப்பாகுந் தானே
யருமிரு நான்கா யடங்குமா சித்திக்கே. (௫)

---

641. அடி என=திருவடிகளே பொருளென்று (அறிந்து வணங்கி); அரியது=(கிடைத்தற்கு) அரியதெனப்படுவது.

642. குறிவழி=(குரவனிவ்வாறிருக்கவென) குறித்துக்கூறிய நெறி; சங்கட்டம் பார்த்து=(பிராணன் சுழுமுனையிற் செல்லும்) வருத்தத்தையறிந்து; சாம்பவி கேசரி சேர=சாம்பவிமுத்திரையப்பியாசத்துடன் கேசரி முத்திரையப்பியாசமுங்கூட; சாம்பவி-சம்பு சம்பந்தமாதற்குரிய முத்திரை, இஃது அநாகத சக்கரத்திலிருக்கும் சிவத்தினிடம் சித்தத்தையும் வாயுவையு மொடுக்கி அடங்கி யிருக்கச்செய்யு மகிமையுடையது; கேசரி-சகல ஆகாயங்களும் அடங்கியிருக்கும் ஆக்கினையில் சித்தத்தையும வாயுவையும் ஒடுக்கி யிருக்கச்செய்யும் வல்லமையுடையது.

643. காயாதி = சரீர இந்திரிய அந்தக்கரண பிராணன்; அறிவொன்று (ஒன்று அறிவு)=ஒரு முகப்பட்ட சித்தவிருத்தி; ஓயா=முடிதலில்லாத; வீயா=சாதலில்லா.

644. கன்மம் ஆம் மந்தயோகம் = கன்மயோக மெனப்படுவதாகிய மத்திம யோகம்; காயவுழைப்பு = சரீரப் பிரயாசம்; இரு நான்கா யடங்கும் = (இருபதினாயிரத் தெண்ணூறு பேதங்களா மென்ற அக்கன்ம யோகம்) அட்டாங்கத்துள் அடங்கும்.

645. மதிதனி லீராருய் மன்னுங் கலையி
னுதய மதுநா லொழியவோ ரெட்டுப்
பதியுமீ ராருண்டு பற்றறப் பார்க்கிற்
றிதமான வீராறு சித்திக ளாமே. (சு)

646. நாடும் பிணியாகு நஞ்சனஞ் சூழ்ந்தக்கா
லீடுங் கலைகல்வி நீண்மேதை கூர்ஞானம்
பீடொன்றி னல்வாயா சித்திபே தத்தி
னீடுந் துரங்கேட்ட னீண்முடி வீராறே. (எ)

647. ஏழான திற்சண்ட வாயுவின் வேகியாந்
தாழா நடைபல யோசனை சார்ந்திடுஞ்
சூழான வோரெட்டிற் றேன்று நரைதிரை
தாழான வொன்பதிற் றன்பர காயமே. (அ)

648. ஈரைந்திற் பூரித்துத் தியான வுருத்திர
னேரொன்று பன்னொன்றி லீருகு மெண்சித்தி
சீரொன்று மேலேழ் கீழேழ் புவிச்சென்று
வோரொன்று வியாபியாய் நிற்றலீ ராறே. (கூ)

---

645. மதி = இடகலை (பிங்கலைக்கும் உபலக்கணம்); ஈராருய் மன்னுங்கலை = பன்னிரண்டங்குல மெனப்படும் பிராண வாயுவின் பக்கு; உதயம்=வெளிப்படுதல்; நால் ஒழிய=நால ங்குலம் வெளியிற்போய்விட; எட்டுப் பதியும் = எட்டங் குலமான பிராணவாயு உள்ளே வந்து தங்கும்; திதமான= (அழியாமல்) திரமாயிருத்தற்குரிய; ஈராறு=எட்டு.

646. நஞ்சனம்=நமது உறவினர்; கலை=கலைஞானங்கள்; மேதை= மறைவின்றிய புத்தி; கூர்ஞானம் = பூரண ஞானம்; பீடு=பெருமை; வயா=கிட்டா; துரம்=பொறுத்தல்(அடை தல்); கேட்டல்=உபதேசிக்கப் பெறுதல்; நீண் முடிவு ஈராறு = யோகாப்பியாச நீண்டகால எல்லை பன்னிரண்டு வருடங்கள்.

647. ஏழு, எட்டு, ஒன்பது என்பன - யோகத்தின் கால அளவை யாதலால், ஏழாவதாண்டில், எட்டாவதாண்டில், ஒன்பதாவ தாண்டில் என்றுகொள்க.

648. உருத்திரர் பதினொருவராதலால், உருத்திரனேர் ஒன்று பதி னென்றில் என வுவமித்துக்கூறினர்; இதனல் பதினொரு வருடம் யோகத்திற்பயிலுதலால், உருத்திரனை யொப்பாவா ரென்பது உய்த்துணர்ந்து கொள்ளப்படும்; ஓர் ஒன்று= ஒருமை பொருந்தும்.

649. தானே யணுவுஞ் சகத்துந்தன் னோன்மையு
மானக் ககனமும் பரகாயத் தேகமுந்
தானவ தும்பர காயஞ்சேர் தன்மையு
மானத வுண்மையும் வியாப்பிய மாமெட்டே. (சo)

650. தாங்கிய தண்மையுந் தானணுப் பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் குறைவில்லை
யாங்கே யெழுந்தோ மவற்று ளெழுந்துமிக்
கோங்கிய வாமுத்தி முந்திய வாறே. (கக)

651. முந்திய முந்நூற் றறுபது காலமும்
வந்தது நாழிகை வான்முத லாயிடச்
சிந்தைசெய் மண்முதற் றேர்ந்தறி வார்வல
ருந்தியு ணின்று வுதித்தெழு மாறே. (கஉ)

652. சித்தந் திரிந்து சிவமய மாகியே
முத்தந் தெரிந்துற்ற மோனர் சிவமுத்தர்
சுத்தம் பெறலாக வைந்திற் றுடக்கற்றோர்
சித்தம் பரத்திற் றிருநடத் தோரே. (கங)

---

649. அணு = அணிமா; சகம் = மகிமா; நோன்மை = கரிமா; ககனம்=லகிமா; பாகாயத்தேகம்=பிராப்தி; தானவது= பிராகாமியம்; ஆனதவுண்மை=ஈசத்துவம்; வியாப்பியம்= வசித்துவம்; (இவை அட்டமாசித்திகளாம்).

650. தண்மை=அப்புப்பூதம்(மற்றப்பூதங்கட்கும் உபலக்கணமாகக் கொள்க); தானணுப்பல்லுயிர் வாங்கிய காலத்தும்=தான் அணுத்தன்மை யெய்திப் பல உயிர்தொறும் வியாபித் திருப்பினும், அல்லது, தான் அணுவடிவ பல சீவர்களை யழித்த காலத்திலும்; முந்தியவாறே=முன்னிருந்தவாறே (நிர்விகாரி)யாம்.

651. காலம்=விநாடி; இது முந்நூற்றறுபது கொண்டது ஆறு நாழிகையாம்; இந்த ஆறுநாழிகையை ஒரு பாகமாக வைத்துப் பகலை ஐந்து பாகமாக்கி,ஒவ்வொருபங்கையும் முறையே ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவியெனப் பஞ்சபூத காலமாகக்கொள்க. இது தோற்ற முறையென்பது விளக்க, "வந்தது நாழிகை வான்முதலாக" என்றருளிச்செய்தார். பிருதிவி முதலாகக் கொள்ளின் ஒடுக்கமுறையாம். அது "மண்முதற் றேர்ந்தறிவார்"என்றதனுற்கொள்க. இவ்வாறே இரவையும் ஐந்து பங்காக்கிக்கொள்க.

652. திரிந்து=(விஷயங்களிலிருந்தும்) திரும்பி; முத்தம்=மோட்சம்; சுத்தம் = நின்மலம் அல்லது, சுத்தாவத்தை; சித்தம் பரத்தில்=சிதம்பரத்தில் (சிதாகாயத்தில்), அல்லது சிதம்பரமானது சிவத்திற் (பொருந்த).

653. ஒத்தவிவ் வொன்பது வாயுவு மொத்தன
வொத்தவிவ் வொன்பதின் மிக்க தனஞ்சய
னொத்தவிவ் வொன்பதி லொக்க விருந்திட
வொத்த வுடலு முயிரு மிருந்தவே. (கச)

654. இருக்குந் தனஞ்செய னென்பது காலி
னிருக்கு மிருநூற் றிருபத்து நான்கி
லிருக்கு முடலீ திருந்தில வாகி
லிருக்கு முடலது வீங்கி வெடித்ததே. (கரு)

655. வீங்குங் கழலை சிரங்கொடு குட்டமும்
வீங்கும் வியாதிகள் சோகை பலவதாய்
வீங்கிய வாதமுங் கூனு முடமதாம்
வீங்கு வியாதிகள் கண்ணின் மருவியே. (கசு)

656. கண்ணில் வியாதியு ரோகந் தனஞ்செயன்
கண்ணிலிவ் வாணிகள் காச மவனல்லன்
கண்ணினிற் கூர்மன் கலந்தில னாதலாற்
கண்ணினிற் சோதி கலந்தது மில்லையே. (கஎ)

657. நாடியி னோசை நயன மிருதயந்
தூடி யளவுஞ் சுடர்விடு சோதியைத்
தேவரு ளீசன் றிருமால் பிரமனு
மோவற நின்றங் குணர்ந்திருந் தாரே. (கஅ)

658. ஒன்பது வாச லுடையதோர் பிண்டத்து
ளொன்பது நாடி யுடையதோ ரோரிட
மொன்பது நாடி யொடுங்கவல் லார்கட்
கொன்பது வாச லுலைநல மாமே. (ககூ)

---

653. ஒன்பது வாயு = தனஞ்சயனொழிந்த மற்றைய வாயுக்கள்; ஒன்பதிலொக்க விருந்திட = ஒன்பதிலுங் கூடியிருக்க; ஒத்த உடலும் உயிரும் = (தம்முள்) ஒத்துவாழு முடலுமுயிரும்.

654. கால் = வாயு, இருநூற்றிருபத்துநான்கில் = இருநூற்றிருபத்து நான்கு புவனங்களில்; ஈது = இத்தனஞ்சயன.

657. நாடியினோசை = சுழுமுனையிற் கேட்கப்படும் நாதம்; தூடி = (துடி யென்பது நீண்டது) எட்டுவிநாடி கொண்ட கால வளவு; ஓவற = ஒழியாமல்.

658. ஒன்பது வாசல் = செவி முதலிய வொன்பது துவாரங்கள்; பிண்டம் = உடல்; ஒன்பது நாடி யுடையதோ ரோரிடம் = நாற்சந்தி கூடுமிடம்; உலை = கொல்லனுலைபோலுஞ் சரீரம்.

**659.** ஓங்கிய வங்கிக்கீ ழொண்சுழு ஊனச்செல்ல
வாங்கி யிரவி மதிவழி யோடிடத்
தாங்கி யுலகங்க ளேழுந் தரித்திட
வாங்கது சொன்னோ மறியுடை யோர்க்கே. (உ0)

**660.** தலைப்பட்ட வாறண்ண றையலை நாடி
வலைப்பட்ட பாசத்து வன்பிணை மான்போ
றுலைப்பட்ட நாடியைத் தூவழி செய்தால்
விலைக்குண்ண வைத்ததோர் வித்தது வாமே. (உக)

**661.** ஓடிச்சென் றங்கே யொருபொருள் கண்டவர்
நாடியி னுள்ளாக நாத மெழுப்புவர்
தேடிச்சென் றங்கே தேனை முகந்துண்டு
பாடியு ணின்ற பகைவரைக் கட்டுமே. (உஉ)

**662.** கட்டிட்ட தாமரை நாளத்தி லொன்பது
மட்டிட்ட கன்னியர் மாதுடன் சேர்ந்தனர்
தட்டிட்டு நின்று தளங்கனி னூடுபோய்ப்
பொட்டிட்டு நின்றது பூரண மானதே. (உங)

---

659. இம் மந்திரம் விபரீத கரணியைக் கூறிற்று. இரவி மதிவழி ஓடிட=மதிமண்டல நோக்கிச் சூரியன்செல்ல; அறிவுடையோர்=யோகஞானமுடையோர்.

660. துலைப்பட்டநாடி = தராசுபோலச் சமனுைத்த நாடி; விலைக்குண்ணவைத்தது=விலைக்கும் உண்ணுதற்கும் வைத்தது; (விலைக்கும் உண்ணற்கும் வைத்தவித்துத் தனக்கும் பிறர்க்குப் பயன்படுமாறுபோல, இதுவுமாகுமென்பது).

661. ஒருபொருள் = குண்டலிசத்தி; நாடியின் = சுழுமுனையின் மூலமாக); தேன்=மதியமுதம்; பாடி=பகைவர்தங்குமிடம் (சரீரம்); பகைவர் = புலனும், காமாதிகளும்.

662. நாள=தாமரைத்தண்டு போன்ற சுழுமுனை; ஒன்பது மட்டு இட்ட கன்னியர்=ஒன்பதென்னும் எண்பெற்ற பெண்கள் (நவசத்திகள்); தளங்களினூடு=மூலாதார முதலியவாதாரங்களின் வழி; பொட்டு = ஆக்கினை ஸ்தானம்.

663. பூரண சத்தி யெழுமூன் றறையாக
வேரணி கன்னிக ளெழுநூற்றஞ் சாயினர்
நாரண னன்முக னாதிய வைவர்க்குங்
காரண மாகிக் கலந்து விரிந்ததே, (௨௪)

664. விரிந்து குவிந்து விளைந்தவிம் மங்கை
கரந்து ளெழுந்து கரந்தங் கிருக்கிற்
பரந்து குவிந்து பார்முதற் பூத
மிரைந்தெழு வாயு விடத்தி லொடுங்கே. (௨௫)

665. இடையொடு பிங்கலை யென்னு மிரண்டு
மடைபடு வாயுவு மாறியே நிற்குந்
தடையவை யாறெழுந் தண்சுட ருள்ளே
மிடைவளர் மின்கொடி தன்னி லொடுங்கே. (௨௬)

666. ஒடுங்கி யொருங்கி யுணர்ந்தங் கிருக்கின்
மடங்கி மடங்கிடும் வாயு வதனுண்
மடங்கி மடங்கிடு மன்னுயி ருள்ளே
நடங்கொண்ட கூத்தனை நாடுகின் றேனே. (௨௭)

667. நாடியி னுள்ளே நாதத் தொலியுடன்
றேடியு டன்சென்றத் திருவினைக் கைக்கொண்டு
பாடியு ணின்ற பகைவரைக் கட்டிட்டு
மாடி லொருகை மணிவிளக் கானதே. (௨௮)

---

663. எழு மூன்று அறையாக=இருபத்தொரு பிரகாரமாக; ஐவர்க்கும்=பஞ்சமூர்த்திகட்கும்.

664. விரிந்துகுவிந்து=வியாபகமாயும் (பிரமத்தினிடம்) வியாப்பியமாயும்; இரைந்தெழுவாயு = நாதத்தோடு மேலெழும் வாயு; ஒடுங்கே=ஒடுங்குமே.

665. ஆறி = அடங்கி; தடை யவையாறு = பிரதிபந்தகமான காமாதி அரிசட்வர்க்கம்; தண்சுடர்=ஆக்கினையிலுள்ள சந்திர மண்டலம்; மின்கொடி = (அந்தமதி மண்டலத்திலுள்ள) சத்தி.

666. அங்கு இருக்கின்=அச்சத்தியிடத்திருந்தால்.

667. மாடில் = பெருமையினையுடைய ; மணிவிளக்கு = தூண்டா விளக்கு.

668. அணிமாதி சித்திக ளானவை கூறி
லணுவி லணுவின் பெருமையி னேர்மை
யிணுகாத வேகார் பரகாய மேவ
லணுவத் தனையெங்குந் தானாத லென்றெட்டே. ()

669. எட்டா கியசித்தி யோரெட்டி யோகத்தாற்
கிட்டாப் பிராணனே செய்தாற் கிடைத்திடு
மொட்டா நடுநாடி மூலத்த னல்பானு
விட்டான் மதியுண்ண வும்வரு மேலதே. (௯௦)

670. சித்திக ளெட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற்
புத்திக ளானவை யெல்லாம் புலப்படுஞ்
சித்திக ளெண்சித்தி தானாந் திரிபுரைச்
சத்தி யருடரத் தானுள வாகுமே. (௯க)

(க) அணிமா.

671. எட்டிவை தன்னோ டெழிற்பரங் கைகூடப்
பட்டவர் சித்தர் பரலோகஞ் சேர்தலா
லிட்டம தூள்ளே யிருக்கல் பரகாட்சி
யெட்டு வரப்பு மிடந்தானின் றெட்டுமே. (௯உ)

---

668. அணுவிலணுவி னேர்மை = அணுவுக்கணுவாதல்; பெருமையி னேர்மை=பெரிதிற் பெரிதாயிருத்தல்; வேகு ஆர்=வெந்து கொண்டிருக்கும்; அணுவத்தனை தானாதல் என்று கூட்டி, அணிமாவும் ஈசத்துவமும், எங்குந்தானாதல் என்றுகொள்க; நேர்மை யென்பது அணுவிலணுவின் என்பதனோடுங் கூட்டப்பட்டது.

669. கிட்டாப் பிராணன் செய்தால்=அடக்கமுடியாத பிராணவாயுவை யடக்கிக்கொண்டால்; மொட்டா நடுநாடி=மேன்மையுடைய சுழுமுனை நாடி; மூலத்தனல் பானுவிட்டால்= மூலத்துள்ள அக்கினி மண்டலம் சூரிய மண்டலத்தைக் கடந்து சென்றால்; மதியுண்ணவும் வரும் = மதிமண்டலத் தமுதத்தை யுண்ணுதலும் கிடைக்கும்.

670. புத்திகளானவையெல்லாம் = எல்லாஞானமும்; சித்திகள் எண்சித்தி = அக்கரவிலக்கண முதலாக அவத்தைப் பிரயோக மீறாகக் கூறப்பட்ட அறுபத்துநாலு சித்திகளும், அட்டமாசித்திகளும்; தானாந்திரி புரைச்சத்தி=தானாகவே யிருக்கின்ற திரிபுரைசத்தி.

671. எழில்பரம்=அழகியபரசிவம் அல்லது,பரஞானம்; பரலோகம்= சிவலோகம் அல்லது, மற்றய எல்லா உலகமும்; பரகாட்சி= பரசிவதரிசனம் அல்லது, பரசிவஞானம் ; எட்டுவரப்பும்= அட்டமாசித்திகள் முற்றும்; இடந்தானின்றெட்டும்=(நின்ற இடந்தான் எட்டும்) இருக்குமிடத்துக்கு வந்து சேரும்.

**672.** மந்தர மேறு மதிபானு வைமாற்றக்
கந்தாய்க் குழியிற் கசடற வல்லார்க்குத்
தந்தின்றி நற்கா மியலோகஞ் சார்வார்க்கு
மந்த வுலக மணிமாதி யாமே. (௯௯)

**673.** முடிந்திட்டு வைத்து முயங்கிலோ ராண்டி
லணிந்த வணிமாகை தானா மிவனுந்
தணிந்தவம் பஞ்சினுந் தானொய்ய தாகி
மெலிந்தங் கிருந்திடும் வெல்லவொண் ணாதே. (௯௪)

(உ) லகிமா.

**674.** ஆகின்ற வத்தனி நாயகி தன்னுடன்
போகின்ற தத்துவ மெங்கும் புகலதாய்ச்
சாய்கின்ற காலங்க டன்வழி நின்றிடின்
மாய்கின்ற வையாண்டின் மாலகு வாகுமே. (௯௫)

**675.** மாலகு வாகிய மாயனைக் கண்டபின்
றானொளி யாகித் தழைத்தங் கிருந்திடும்
பாலொளி யாகிப் படர்ந்தெங்கு நின்றது
மேலொளி யாகிய மெய்ப்பொருள் காணுமே. (௯௬)

---

672. மந்தரம்=மேரு (புருவமத்தியஸ்தானம்); ஏறும் மதிபானுவை மாற்ற=மேலே யேறுகின்ற சந்திரசூரியரை மேலது கீழது கீழது மேலதாய் மாற்றிவைக்க; கந்தாய்=அடித்தமுளைபோலசைவற்றிருந்து; குழியிற் கசடற வல்லார்க்கு = அமுத ஊற்றினாலே குற்ற மற்றிருக்க வல்லவர்க்கு; தந்து-தந்தது என்பதன் விகாரம்; காமிய லோகம்=போக உலகம்; அணிமாதியாம்=அணிமாதிகளாலே கிடைக்கும்.

673. முடிந்திட்டு வைத்து=(அமுதத்தைப் பானுவில்விடாம)லடக்கி வைத்துக்கொண்டு; முயங்கில்=(யோகத்தில்) பொருந்தி யிருந்தால்; அணிந்த=புகழ்ந்து கூறப்பட்ட, அணிந்தவணு மாயை என்றும் பாடம்; கைதானும்=சித்திக்கும்; தணிந்த= மெலிந்த; மெலிந்தங் கிருந்திடும் = இலேசாயங்கிருப்பன்.

674. போகின்ற தத்துவம் எங்கும்=(மூலாதாரத்தினின்று தான்) செல்கின்ற எல்லா தத்துவங்களிலும்; புகலதாய்=(அந்தச் சத்தியே) ஆதாரமாக; சாய்கின்ற காலம்=செல்லவேண்டிய காலம்வரை.

675. மா லகுவாகிய=பெருமையுள்ள சூக்கும ரூபியான; தான் ஒளியாகி=சுயஞ்சோதியாய்; மேலொளி=ஆகாயத்தி லமர்ந்த சோதி.

(ங) மகிமா.

676. மெய்ப்பொருள் சொல்லிய மெல்லிய லாளுடன்
றற்பொரு ளாகிய தத்துவங் கூடிடக்
கைப்பொரு ளாகக் கலந்திடு மோராண்டின்
மைப்பொரு ளாகு மகிமாவ தாகுமே. (ஙஎ)

677. ஆகின்ற காலொளி யாவது கண்டபின்
போகின்ற காலங்கள் போவது மில்லையா
மேனின்ற காலம் வெளியுற நின்றபின்
தானின்ற காலங்க டன்வழி யாகுமே. (ஙஅ)

678. தன்வழி யாகத் தழைத்திடு ஞானமுந்
தன்வழி யாகத் தழைத்திடும் வையகந்
தன்வழி யாகத் தழைத்த பொருளெல்லாந்
தன்வழித் தன்னரு ளாகிநின் றானே. (ஙகூ)

(௪) பிராத்தி.

679. நின்றன தத்துவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையா னவையெலாங்
கொண்டவை யோராண்டில் கூட விருந்திடில்
விண்டது வேநல்ல பிராத்திய தாகுமே. (௪0)

(௫) கரிமா.

680. ஆகின்ற மின்னொளி யாவது கண்டபின்
பாகின்ற பூவிற் பரப்பவை காணலா
மேகின்ற காலம் வெளியுற நின்றது
போகின்ற காலங்கள் போவது மில்லையே. (௪க)

---

676. மெய்ப்பொருள் சொல்லிய=உண்மை ஞானத்தை யுபதேசித்தருளிய; தற்பொருள்=தத் பதார்த்தமாகிய சிவம்; மைப்பொருளாகும் மகிமா=மறைந்தபொருளான மகிமா.

677. காலொளியாவது கண்டபின் = பிராணவாயுவை யொளிமயமாகச் செய்துகொண்டபின்; போகின்ற காலம்=கழிந்துபோதற்குரிய ஆயுட் காலம்; மேனின்ற காலம்=மேன்மையுள்ளதாயிருந்த கால தத்துவம்; நின்ற காலம்=செல்லற்கு என விருக்கும் ஆயுட்காலம்.

678. தன்வழியாக=தன்வசமாக; தன்னருள்=சிவத்தின் கருணை.

679. படை = கூட்டம்; கூடவிருந்திடில் = (பூததாரணையொடு) கூடவிருந்தால்; விண்டதுவே=வெளிப்பட்டதேயாம்.

680. ஆகின்ற மின்னொளி=யோகத்திலே காணப்படும் மின்னல் போலு மொளி; பாகின்ற=பரவுகின்ற; பூவின் பரப்பு=பரந்த ஆயிரவிதழ்த்தாமரை அல்லது பூமியின் பரப்பனைத்தும்; மேகின்ற-மேவுகின்ற என்பதன் விகாரம்.

681. போவதொன் றில்லை வருவது தானில்லை
சாவதொன் றில்லை தழைப்பது தானில்லை
தாமத மில்லை தமரகத் தின்னொளி
யாவது மில்லை யறிந்துகொள் வார்க்கே. (சஉ)

682. அறிந்த பராசத்தி யுள்ளே யமரிற்
பறிந்தது பூதப் படையவை யெல்லாங்
குறிந்தவை யோராண்டு கூட விருக்கில்
விரிந்தது பரகாய மேவலு மாமே. (சங)

(௬) பிராகாமியம்.

683. ஆன விளக்கொளி யாவ தறிகிலர்
மூல விளக்கொளி முன்னே யுடையவர்
கான விளக்கொளி கண்டுகொள் வார்கட்கு
மேலை விளக்கொளி வீடெளி தாகின்றே. (சச)

(எ) ஈசத்துவம்.

684. நின்ற சதாசிவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையவை யெல்லாங்
கொண்டவை யோராண்டு கூடி யிருந்திடிற்
பண்டையவ் வீசன தத்துவ மாகுமே. (சரு)

---

681. தாமதம்-இது உபலக்கணமாக நின்று முக்குணங்களை யுணர்த்தலால் முக்குணவத்தை யில்லையென்க ; தமர்=உட்டுளை (சுழுமுனைத் துவாரம்).

682. அறிந்த பராசத்தி=யோகப் பயிற்சியாற் கண்டு தரிசித்த சிற்சத்தி; குறிந்தவை-குறித்தவை என்பதன் விகாரம் ; விரிந்தது=(ஆன்மா) பரவுந்தன்மை (வியாபகம்) எய்தியது.

683. விளக்கு ஒளி=எப்பொருளையும் விளக்கும் பரசிவ ஒளி ; மூல விளக்கொளி = (சீவான்மாவின்) இயற்கைச் சொரூபமான சித்தொளி; கானவிளக்கொளி=கூட்டமான விளக்கொளி (ஆக்கினையிலுள்ள அந்தராத்மா); காணவிளக்கொளி - கால விளக்கொளி என்றும் பாடம்; மேலை விளக்கொளி=மேனிலத்துள்ள விளக்கொளி (பரசிவவொளி).

684. கொண்டு=தரித்துக்கொண்டு; சதாசிவம் சத்தி யிவர்களோடு பூதங்களையும் அவ்வவ்விடங்களில் தரித்துக்கொண்டிருக்க, ஈசத்துவங் கைகூடும் என்பது இம்மந்திரக்கருத்து.

685. ஆகின்ற சந்திரன் றண்ணளி யாயவ
னாகின்ற சந்திரன் றட்டமு மாயிடு
மாகின்ற சந்திரன் றன்கலை கூடிடி
லாகின்ற சந்திரன் றானவ னாகுமே. (சசு)

686. தானே படைத்திட வல்லவ னாயிடுந்
தானே யளித்திட வல்லவ னாயிடுந்
தானே சங்காரத் தலைவனு மாயிடுந்
தானே யிவனெனுந் தன்மைய னாகுமே. (சஎ)

687. தண்மைய தாகத் தழைத்த கலையினுள்
பண்மைய தாகப் பரந்தவைம் பூதத்தை
வண்மைய தாக மறித்திடி லோராண்டின்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் காணுமே. ()

(அ) வசித்துவம்.

688. மெய்ப்பொரு ளாக விளைந்தது வேதெனி
னற்பொரு ளாகிய நல்ல வசித்துவங்
கைப்பொரு ளாகக் கலந்த வுயிர்க்கெலாந்
தற்பொரு ளாகிய தன்மைய னாகுமே. (சகூ)

689. தன்மைய தாகத் தழைத்த பகலவன்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் கண்டிடின்
பொன்மைய தாகப் புலன்களும் போயிட
நன்மைய தாகிய நற்கொடி காணுமே. (ருO)

690. நற்கொடி யாகிய நாயகி தன்னுட
னக்கொடி யாக மறிந்திடி லோராண்டு
பொற்கொடி யாகிய புவனங்கள் போய்வருங்
கற்கொடி யாகிய காமுக னாமே. (ருக)

---

687. பண்மையதாக=தகுதியாக; வண்மையதாக=பெருமை பொருந்த; மறித்திடில்=அடக்கி வைத்திருந்தால்; மென்மையது=சூக்குமம்.

688. கைப்பொருளாகக் கலந்த வுயிர்க்கெலாம்=காணப்படுவனவாகிய சீவ வர்க்கங்கட்கெல்லாம்; தற்பொருள்=சிவம்.

689. தழைத்த பகல்=சிறப்புற்ற அந்நாளில்; புலன்களும்=சரீரமுற்றும்; நற்கொடி=நல்லகொடிபோலும் சத்தி.

690. அக்கொடி ஆகமறிந்திடில்=அந்தக்கொடி போன்ற சத்தியை யிதயத்திலிருத்தித் தியானித்தால்; பொற்கொடியாகிய புவனங்கள்=சத்தி சொரூபமாகிய புவனங்களெல்லாம்; கற்கொடி=கல்லினது கொடிபோன்ற கடின சித்தம்.

691. காமரு தத்துவ மானது வந்தபின்
பூமரு கந்தம் புவனம தாயிடு
மாமரு வுன்னிட மெய்திடு மானனாய்
நாமரு வும்மொளி நாயக மானதே. (ருஉ)

692. நாயக மாகிய நல்லொளி கண்டபின்
றாயக மாகத் தழைத்தங் கிருந்திடும்
போயக மான புவனங்கள் கண்டபின்
பேயக மாகிய பேரொளி காணுமே. (ருங)

693. பேரொளி யாகிய பெரியவவ் வேட்டையும்
பாரொளி யாகப் பதைப்பறக் கண்டவன்
றாரொளி யாகத் தரணி முழுதுமா
மோரொளி யாகிய காலொளி காணுமே. (ருச)

694. காலோ டுயிருங் கலக்கும் வகைசொல்லி
னூலது வக்கொடி நாயகி தன்னுடன்
காலது வைஞ்ஞூற் றொருபத்து மூன்றையுங்
காலது பெண்மண்டிக் கொண்டவிவ் வாறே. (ருரு)

---

691. காமரு தத்துவமானது வந்தபின்=அழகிய உண்மைப்பொருளானது சித்தித்தபின்; மாமருவு உன் னிடம் எய்திடும்=சிறப்புற்றதாய தான் நினைத்த விடங்களுக்குப் போகத்தக்க; மானன்=சீவன்; நாம் மருவும் ஒளி நாயகம்=நாமடைதற்குரிய பேரொளி.

692. தாயகம்=சொந்த இடம்; போய் அகமான புவனங்கள்=விசாலித்த இடமுள்ள உலகங்கள்; பேயகம் (பேசகம்)=புகழ்ந்து கூறப்படு மிடம்.

693. அவ்வேட்டை=அந்த இதழுள்ள தாமரையை; அவ்வெட்டையுமென்றும் பாடம்; தாரொளி=நேர்மையான ஒளி; காலொளி காணும்=பிராணவாயு ஒளிமயமாம்.

694. காலது வைஞ்ஞூற் றொருபத்து மூன்றையும் =.பிராணவாயு வியாபிக்கின்ற நாடிகள் ஐஞ்ஞூற்றுப் பதின்மூன்றையும் (எழுபத்தீராயிரம் நாடிகளில் பெருத்த நாடிகளைக் கணக்கிட்டுக் கூறினர்); பெண் = சத்தி; மண்டிக்கொண்ட = தன் வியாபகத்தி லடக்கிக்கொண்ட.

**695.** ஆறது வாறு மமிர்தத் தலையினு
ளாறது வாயிர முந்நூற்றொ டஞ்சுள
வாறது வாயிர மாகு மருவழி
யாறது வாக வளர்ப்ப திரண்டே. (ருசு)

**696.** இரண்டினின் மேலே சதாசிவ நாயகி
யிரண்டது கால்கொண் டெழுவகை சொல்லி
லிரண்டது வாயிர மைம்பத்தொ டொன்றாய்த்
திரண்டது கால மெடுத்தது மஞ்சே. (ருஎ)

**697.** அஞ்சுட னஞ்சு முகமுள நாயகி
யஞ்சுட னஞ்சது வாயுத மாவது
வஞ்சது வின்றி யிரண்டது வாயிர
மஞ்சது கால மெடுத்துளு மொன்றே. (ருஅ)

**698.** ஒன்றது வாகிய தத்துவ நாயகி
யொன்றது கால்கொண் டூர்வகை சொல்லிடி
லொன்றது வென்றிகொ ளாயிர மாயிர
மொன்றது கால மெடுத்துளு முன்னே. (ருகூ)

---

695. ஆறதுவாகு மமிர்தத்தலையினுள் (அலை அதுவாகும் அமிர்தத்து ஆறினுள்) = அலை வீசுகின்ற அமிர்தநதியிலே (அது - பகுதிப்பொருள் விகுதி); ஆயிர முந்நூற்றொடஞ்சுள = ஆயிரத்து முந்நூற்றைந்து நாடிகளுள; ஆறது வாயிரமாகு மருவழி - ஈண்டு ஆயிரமென்றது அளவின்மைபற்றி யாதலால் எழுபத்தீராயிர நாடிகளும் கொள்க. வளர்ப்பதிரண்டே = இந்நதிகளை விருத்தியாக்குவது சத்தி சிவமாகிய இரண்டு பொருள்களுமாம்.

696. இரண்டினின் மேலே=அக்கினி, பானுமண்டலங்களின்மேல்; இரண்டது கால் = இடகலை பிங்கலை; இரண்டது வாயிர மைம்பத்தொடொன்றாய் = அந்த இரண்டும் ஆயிரத்தைம்பத்தொன்றாய் (பலநாடிகளிலும் பிராணன் வியாபிப்பது பற்றி அவற்றுட் பெரிய நாடிகளைக்கூறினார்); காலமெடுத்தது=காலவளவை யெடுக்கத்தக்கது; அஞ்சே = பஞ்சபூத சம்பந்தத்தால் ஐவகைப்பட்ட பிராணவாயுவே யாம்.

697. அஞ்சுடன் அஞ்சு முகமுள நாயகி=அஞ்சுதலுள்ள பஞ்சமுகமுள்ள சதாசிவ சத்தி, பத்துத் திசைகளிலு முகமாயுள்ள நாயகி யெனினுமாம்; அஞ்சுடனஞ்சு=பத்துவகை வாயுக்கள்; அஞ்சதுவின்றி=நாகன், கூர்மன், கிரிகரன் தேவதத்தன், தனஞ்செயன் என்பன நீங்கியுள்ள (பிராணனை நீதில்); இரண்டது = இடகலை பிங்கலை யென்னும் பாகுபாடுள்ள பிராணன் இரண்டு.

698. ஊர்வகை=நடத்திச்செல்லுமுறை.

699. முன்னெழு மக்கலை நாயகி தன்னுடன்
முன்னுறு வாயு முடிவகை சொல்லிடின்
முன்னுறு மைம்பதொ டொன்றுட னஞ்சுமாய்
முன்னுறு வாயு முடிவகை யாமே. (௬0)

700. ஆய்வரு மத்தனி நாயகி தன்னுட
னாய்வரு வாயு வளப்பது சொல்லிடி
லாய்வரு மைஞ்ஞூற்று முப்பதொ டொன்பது
வாய்வரு வாயு வளப்புள் ளிருந்ததே. (௬௧)

701. இருநிதி யாகிய வெந்தை யிடத்து
விருநிதி வாயு வியங்கு நெறியி
லிருநூற்று முப்பத்து மூன்றுட னஞ்சா
யிருநிதி வாயு வியங்கு மெழுத்தே. (௬௨)

702. எழுகின்ற சோதியுண் ணாயகி தன்பா
லெழுகின்ற வாயு விடமது சொல்லி
லெழுநூற் றிருபத்தொன் பானது நாலா
யெழுந்துட னங்கி யிருந்ததிவ் வாறே. (௬௩)

703. ஆறது கால்கொண் டிரதம் விளைத்திடு
மேழது கால்கொண் டிரட்டி யிறக்கிட
வெட்டது கால்கொண் டிடவகை யேற்றபி
னொன்பது மாநில மொத்தது வாயுவே (௬௪)

704. சந்திரன் சூரியன் றற்பரன் றாணுவிற்
சந்திரன் றானுந் தலைப்படுந் தன்மையைச்
சந்தியி லேகண்டு தானுஞ் சகமுகத்
துந்திச் சமாதி யுடையொளி யோகியே. (௬௫)

---

699. வாயுமுடிவகை=வாயுமுடியுமுறை.

700. வளப்புள்ளிருந்து=வளமையிலிருந்து; அல்லது அளப்புள்ளிருந்து என்று கொண்டு அளவெனப் பொருள் கொள்க.

701. இருநிதிவாயு = சங்கநிதி பதுமநிதி போலும் வாயு; இயங்குமெழுத்தே = அகார உகார மகார அக்கர சொரூபமாக இயங்கும்.

703. ஆறதுகால்கொண்டு என்ற மந்திரமுதல் இம்மந்திரம் வரை குருபதேச நெறி நின்று பயின்று உணரத்தக்கது.

704. சந்திரன் சூரியன்=சந்திரகலை சூரியகலை; தாணுவின் சந்திரன்=பரமாகாயத்திலுள்ள பரசிவத்துக்குரிய சந்திரன்; சந்தியிலே கண்டு=சந்திக்கும்போது தரிசித்து; சகமுகம்=உலகமாகிய இடம்; உந்தி=உயர்வுள்ள.

705. அணங்கற்ற மாத லருஞ்சன நீவல்
வணங்குற்ற கல்விமா ஞான மிகுத்தல்
சிணுங்குற்ற வாயர் சித்திதாங் கேட்ட
னுணங்கற் றிரோதல்கால் வேகத்து நந்தலே. (சுசு)

706. மரணஞ் சிறைவிடல் வண்பர காய
மிரணஞ்சேர் பூமி யிறந்தோர்க் களித்த
லரணன் றிருவுரு வாதன்மூ வேழாங்
கரனுறு கேள்விக் கணக்கறிந் தோனே. (சுஎ)

707. ஓத மொலிக்கு முலகை வலம்வந்து
பாதங்க ளோவ நடந்தும் பயனில்லை
காதலி லண்ணலைக் காண வினியவர்
நாத னிருந்த நகரறி வோரே. (சுஅ)

708. மூல முதல்வேதா மாலரன் முன்னிற்கக்
கோலிய வைம்முகன் கூறப் பரவிந்து
சாலப் பரநாதம் விந்துத் தனிநாதம்
பாலித்த சத்தி பரைபரன் பாதமே. (சுகூ)

---

705. அணங்கற்றமாதல்=ஆசை யொழிதல்; சிணுங்குற்ற வாயர்= மறைபொருளாகப் பேசுபவர்; நுணங்கு அற்றிருத்தல் = அசைவற்றிருத்தல்; நந்தல்=(மேலே செல்லும்படி) தூண்டுதல்.

706. மரணஞ்சிறைவிடல் = மரணத்தையும், சிறைபோலுஞ் (சரீரமெடுத்தலாகிய) பிறப்பையும் ஒழித்தல்; பரகாயம் = பரகாயப்பிரவேசம்; இரணம் சேர் பூமி=பொன்மயமான சொர்க்கலோகம்; இறந்தோர்-இரந்தோர் என்றும் பாடம்; அரணன் திருவுருவாதல்=இரட்சகனது (பரசிவனது) உருவத்தைப் பெறுதல்; மூவேழாங்கரன்=(வெண்மை, செம்மை, கருமையென்று மூவருணங்களு முறழப்பெறுதலால்)இருபத்தொரு வகையாய ஏழுகிரணமுள்ள சூரியன், இங்கே பரசிவன்.

707. ஓதமொலிக்கும் (ஒலிக்கும் ஓதம்) ஒலிக்கின்ற கடல்; இனியவர்=பந்துக்கள்.

708. மூலமுதல்=மூலாதாரமுதல்; அரன் = உருத்திரன்; கோலிய=வியாபித்த; ஐமுகன்=சதாசிவன்;தனிநாதம்=தனித்த நாதம் (நாதாந்தம்); பாலித்த=பரிபாலனம் செய்கின்ற.

**709.** ஆதார யோகத் ததிதேவொ டுஞ்சென்று
மீதான தற்பரை மேவும் பரனொடு
மேதாதி யீரெண் கலைசெல்ல மீதொளி
யோதாவ சிந்தமி தானந்த யோகமே. (எ௦)

**710.** மதியமு ஞாயிறும் வந்துடன் கூடித்
துதிசெய் பவரவர் தொல்வான வர்கள்
விதியது செய்கின்ற மெய்யடி யார்க்குப்
பதியது காட்டும் பரமனின் றானே. (எக)

**711.** கட்டவல் லார்கள் கரந்தெங்குந் தானவர்
மட்டவிழ் தாமரை யுள்ளே மணஞ்செய்து
பொட்டெழக் குத்திப் பொறியெழத் தண்டிட்டு
நட்டிடு வார்க்கு நமனில்லை தானே. (எ௨)

ச-வது கலைநிலை.

**712.** காதல் வழிசெய்த கண்ணுத லண்ணலைக்
காதல் வழிசெய்து கண்ணுற நோக்கிடிற்
காதல் வழிசெய்து கங்கை வழிதருங்
காதல் வழிசெய்து காக்கலு மாமே. (க)

---

709. ஆதாரயோகம் = ஆதாரங்களைத் தரிசிக்கும் யோகம்; அதிதே=அவ்வவ் வாதாரங்களுக்கு அதிதேவதை; மீதான தற்பரை=மேலான தானத்தில் பராசத்தி (யோடு); மேதாதி= அறிவுத்தானமாதி; ஈரெண்கலை செல்ல = மதிமண்டலமடைய; ஓதா அசிந்தம்=பேசாததும் சிந்தித்தலற்றதும்.

710. மதியமும் ஞாயிறும் = இடகலையும் பிங்கலையும்; அது விதி செய்கின்ற = அந்த ஆதார யோகத்தை முறைப்படி செய்கின்ற; பதியது காட்டும் = மேலான நிலத்தைத் தரிசிப்பிக்கும்.

711. தாமரையுள்ளே மணஞ்செய்து = ஆயிரவிதழ்த் தாமரையிற் (சத்தி சிவங்களை) கலக்கச்செய்து; பொட்டு எழக் குத்தி= பிரமரந்திர மார்க்கந் திறக்கும்படி (வாயுவால்) மோதி; பொறிஎழ = பொறிகள் விடயங்களிற் செல்லாதொழிய; நட்டிடுவோர்க்கு=நேசித்திருப்பவர்க்கு.

712. காதல்வழி செய்த=பக்தியாகிய நெறியைத் தந்தருளிய; கண்ணுற நோக்கிடில்=இருவிழிகளுமொன்றுபட நோக்கியிருந்தால்; கங்கை=கங்கைபோலும் அமிர்தம்.

**713.** காக்கலு மாகுங் கரணங்க ளைந்தையுங்
காக்கலு மாகுங் கலைபதி னாறையுங்
காக்கலு மாகுங் கலந்தநல் வாயுவுங்
காக்கலு மாகுங் கருத்துற நில்லே. (உ)

**714.** நிலைபெற நின்றது நேர்தரு வாயு
சிலைபெற நின்றது தீபமு மொத்துக்
கலைவழி நின்ற கலப்பை யறியின்
மலைவறி வாகும் வழியிது வாமே. (ங)

**715.** புடையொன்றி நின்றிடும் பூதப் பிரானை
மடையொன்றி நின்றிட வாய்த்த வழியிற்
சடையொன்றி நின்றவச் சங்கர நாதன்
விடையொன்றி லேறியே வீற்றிருந் தானே. (ச)

**716.** இருக்கின்ற காலங்க ளேது மறியார்
பெருக்கின்ற காலப் பெருமையை நோக்கி
யொருக்கின்ற வாயு வெளிப்பெற நிற்கத்
தருக்கொன்றி நின்றிடுஞ் சாதக னாமே. (ரு)

**717.** சாதக மானவத் தன்மையை நோக்கியே
மாதவ மான வழிபாடு செய்திடும்
போதக மாகப் புகலுறப் பாய்ச்சினல்
வேதக மாக விளைந்து கிடக்குமே. (சு)

---

713. கலைபதினாறு=அமுதகலை பதினாறு; நல்வாயு=பிராணவாயு.

714. நேர்தருவாயு = நேரானவழியிற் (சுழுமுனையில்) செல்லும் வாயு; சிலைபெற நின்றது=கல்லில் வெட்டப்பட்டுள்ளது; கலைவழி நின்ற கலப்பை யறியின் = அமுதகலையிடத்து நின்ற (சிவசத்திகளின்) சையோகத்தையுணர்ந்தால்; மலைவு= மயக்க வுணர்வு.

715. புடையொன்றி நின்றிடும் பூதப்பிரானை = எங்கும் நிறைந்துள்ள பசுபதியான சிவபிரானை; மடை=அமிர்தம் வழியும் வழி; வாய்த்த வழியில்=கிடைத்த அந்த மார்க்கத்தினல்.

716. இருக்கின்ற காலம் = ஆயுளில் சென்றதுபோக எஞ்சியுள்ள காலம், அல்லது யோகத்திலிருக்கின்ற காலவெல்லை; ஒருக்கின்ற=(ஒருக்குகின்ற) ஆயுளை யழிக்கின்ற; வெளி=ஆகாயம்; சாதகன்=அப்பியாசி.

717. போதகமாக = சகத்திரவிதழ்ப் பூவிற்செல்ல; வேதகமாக= செம்பு முதலிய தங்கமாக மாறுவதுபோல.

718. கிடந்தது தானே கிளர்பயன் மூன்று
நடந்தது தானேயுண் ணடியை நோக்கிப்
படர்ந்தது தானே பங்கய மாகத்
தொடர்ந்தது தானேயச் சோதியு ணின்றே. (எ)

719. தானே யெழுந்தவத் தத்துவ நாயகி
யூனே வழிசெய்தெம் முள்ளே யிருந்திடும்
வானே ருலகின்ற வம்மை மதித்திடத்
தேனே பருகிச் சிவாலய மாகுமே. (அ)

720. திகழும் படியே செறிதரு வாயு
வழியும் படியை யறிகில ராரு
மழியும் படியை யறிந்தபி னந்தி
திகழ்கின்ற வாயுவைச் சேர்தலு மாமே. (கூ)

721. சோதனை தன்னிற் றுரிசறக் காணலா
நாதனு நாயகி தன்னிற் பிரியுநாள்
சாதக மாகுங் குருவழிப் பட்டு
மாதன மாக மதித்துக்கொள் ளீரே: (க0)

722. ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்
பேராமற் கட்டிப் பெரிதுண வல்லிரே
னீரா யிரமு நிலமாயி ரத்தாண்டும்
பேராது காயம் பிரானந்தி யாணையே. (கக)

---

718. பயன்மூன்று=தருமம், அருத்தம், காமம்; பங்கயம் ஆக=பங்கயத்தை யடைய.

719. தானே யெழுந்த=சுயம்புவாய்த் தோன்றிய; மதித்து இட=திரட்டித்தர; சிவாலயமாகும் = (இச்சரீரம்) சிவனுக்காலயமாகும்.

720. வாயு வழியும் படியை = பிராணவாயு வியாபகமற் றொடுங்கியிருத்தலே.

721. நாதனு நாயகிதன்னிற் பிரியுநாள்=அமுதமயமான சிவம் சூரிய மண்டலத்துள்ள சத்தியில் விழாது பிரியுநாள்; குருவழிப் பட்டு=குரு கூறிய நெறிநின்று; மாதனம்=பெருமையுள்ள செல்வம்.

722. பேராமற் கட்டி=இயங்கவொட்டாமலுள்ளடக்கி; உணவல்லிரேல் = (அமுதம்) அருந்தவல்லராவீரானல்; நீராயிரமும் நிலமாயிரத்தாண்டும்=நீரினுள்ளே ஆயிரவருஷ முழுகியிருந்தாலும் நிலத்தினுள்ளே ஆயிரவருஷம் புதைந்திருந்தாலும்; பேராது காயம்=சரீரமழியாது.

723. ஓசையி லேழு மொளியின் கணைந்து
நாசியின் மூன்று நாவி லிரண்டுந்
தேசியுந் தேனுந் தன்னிற் பிரியுநாண்
மாசறு சோதி வகுத்துவைத் தானே. (கஉ)

---

ரு-வது சரீரசித்தி யுபாயம்.

724. உடம்பா ரழியி லுயிரா ரழிவர்
திடப்பட மெஞ்ஞானஞ் சேரவு மாட்டா
ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
யுடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே. (க)

725. உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தே
னுடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டே
னுடம்புளே யுத்தமன் கோயிற்கொண் டானென்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. (உ)

726. சுழற்றிக் கொடுக்கவே சுத்திக் கழியுங்
கழற்றி மலத்தைக் கமலத்தைப் பூரித்
துழற்றிக் கொடுக்கு முபாய மறிவார்க்
கழற்றித் தவிர்ந்துட லஞ்சன மாமே. (ங)

---

723. ஓசையிலேழு = சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சரித்தல், சேர்த்தல் ; ஒளியின்கணைந்து=ரசம், ரூபம், கந்தம், வெம்மை, தகித்தல்; நாசியில் மூன்று=கந்தம், இயக்கம் (இடகலை பிங்கலைகள்); தேசி=பிராணவாயு; தேனு=சத்தி.

724. உடம்பார், உயிரார் - அவற்றின் பெருமை நோக்கி, அஃறிணை உயர்திணையில் வந்த திணைவழுவமைதி.

725. இழுக்கு = குற்றமுடையது; உறுபொருள் = அடையத்தக்க பயன்.

726. சுழற்றிக்(சுழித்து)கொடுக்க = பூரித்து ரேசிக்க; கழியும்= மிகும்; கமலத்தை=இதய தாமரையை; உழற்றிக்கொடுக்குமுபாயம் = (எழுபத்தீராயிரம் நாடிகளிலும்) சுழன்று வரச் செய்யும் வழி; அஞ்சனம்=(மறைபொருளைக்காணும்) மை.

727. அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்
வஞ்சக வாத மறுமத் தியானத்திற்
செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறு
நஞ்சறச் சொன்னே நரைதிரை நாசமே. (ச)

728. மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள
வேன்ற வியந்திரம் பன்னிரண் டங்குல
நான்றவிழ் முட்டை யிரண்டையுங் கட்டியிட்
டூன்றி யிருக்க வுடலழி யாதே. (ரு)

729. நூறு மறுபது மாறும் வலம்வர
நூறு மறுபது மாறு மிடம்வர
நூறு மறுபது மாறு மெதிரிட
நூறு மறுபது மாறும் புகுவரே. (சா)

730. சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தான்
மத்தியா னத்திலே வாக்கியங் கேட்கலாந்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படுஞ்
சத்தியஞ் சொன்னேஞ் சதாநந்தி யாணையே. (எ)

731. திறத்திறம் விந்து திகழு மகார
முறப்பற வேகினைந் தோதுஞ் சகார
மறிப்பது மந்திர மன்னிய நாத
மறப்பற யோகிக் கறநெறி யாமே. (அ)

---

727. அந்தியில் ஐ அறும்=மாலையிலே (யோகம் பயிலுதலால்) கபநீங்கும்; பித்து=பித்தம்; நஞ்சுஅற = சரீரத்திலுள்ள விஷ நீங்க.

728. மூன்று மடக்கு=இரேசக பூரக கும்பகம், அல்லது மூன்று கிரந்தி; பாம்பிரண்டெட்டு=உகார அகார வடிவான உச்சுவாச நிச்சுவாசம்; இயந்திரம் = பிராணவாயு; முட்டையிரண்டு= இடகலை பிங்கலை.

729. நூறு மறுபதும்=நூற்றறுபது மாத்திரை; ஆறு=ஆருதாரம்; எதிரிட=மேனேக்கிச்செல்ல; நூறுமறுபதுமாறும் புகுவரே =புருஷாயுசாகிய காலவரையறை கடந்து ஜீவிப்பரென்பது.

730. சத்தியார்=சத்தியை யுரிமையாக வுடைய சிவபிரான் அல்லது சத்தி; வாக்கியம்=வாக்கினது காரியமாகிய ஒலி (நாதம்); தித்தித்த=தாளக்குறிப்பு; சதாநந்தி=எக்காலத்து மானந்த மயமாயுள்ள சத்தி.

731. விந்து திகழும் அகாரம்=மஹா மாயையினின்று தோன்றும் அகாரம்; உறப்பற=அழுத்தமின்றி; சகாரம்=ஸகாரம்; மறிப்பது = மடக்கிக் கூறும்; நாதமறப்பற = நாதத்தை மறத்தலின்றி (நிற்றல்).

732. உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந்தி ரத்தினன்
முந்தி முகட்டி னிறுத்திய பானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே. (சு)

733. மாறா மலக்குதந் தன்மே லிருவிரற்
கூறா விலிங்கத்தின் கீழே குறிக்கொண்மி
னாறா வுடம்பிடை யண்ணலு மங்குளன்
கூறா வுபதேசங் கொண்டது காணுமே. (கo)

734. நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞாலமறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி யாணையே. (கக)

735. அண்டஞ் சுருங்கி லதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராண னிலைபெறு
முண்டி சுருங்கி லுபாயம் பல்வுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே. (கஉ)

---

732. உந்திச் சுழியினுடனேர் = நாபி ஸ்தானத்தினின்று தோன்றுகிற; சிவமந்திரம்=பிரணவம் அல்லது அம்சமந்திரம்; முகடு=கபால ஸ்தானம்; அபானனைச் சிந்தித்தெழுப்ப= தியானித்து அபான வாயுவை மேனோக்கு மாறு செய்ய.

733. மாறாமலக்குதம்=நீங்காத மலம்பொருந்திய அபானவாயில்; கூறா=அளவாக; ஆறா உடம்பு=ஒழியாத சரீரம்; கூறா வுபதேசம்=உச்சரித்த லில்லாத வுபதேசமொழி.

734. சதம் என்றிருப்பார்க்கு = சத்தியப் பொருளென்று கருதியிருப்போர்க்கு; பாலனும் ஆவார்=அச் சத்தியினுடைய குமரனே (முருகக்கடவுள்) யாவார்; பாலருமாவா ரென்றும் பாடம்.

735. அண்டம்=பீஜம்; பிண்டம்=சரீரம்; உண்டிசுருங்கில்=மித போஜனஞ் செய்யின்; கபாலி = கபாலத்தையுடைய சிவ பிரான்.

736. பிண்டத்து ளூற்ற பிழக்கடை வாசலை
யண்டத்து ளூற்று வடுத்தடுத் தேகிடில்
வண்டிச் சிக்கு மலர்க்குழன் மாதரார்
கண்டிச் சிக்குநற் காயமு மாமே. (கங)

737. சுழலும் பெருங்கூற்றுத் தொல்லைமுன் சிறி
யழலு மிரதத்து ளங்கியு ளீசன்
கழல்கொ டிருவடிக் காண்குறி லாங்கே
நிழலுளுந் தெற்றுளு நித்தலு மாமே. (கச)

738. நான்கண்ட வன்னியு நாலு கலையேழுந்
தான்கண்ட வாயுவுஞ் சரீர முழுதொடு
மூன்கண்டு கொண்ட வுணர்வு மருந்தாக
மான்கன்று நின்று வளர்கின்ற வாறே. (கரு)

739. அகுஞ் சனவேத சத்தியை யன்புற
நீகொள்ளி னெல்லின் வளர்கின்ற நேர்மையைப்
பாகு படுத்திப் பல்கோடி களத்தினு
லூழ்கொண்ட மந்திரந் தன்னு லொடுங்கே. (கசு)

---

736. பிழக்கடை = (புழைக்கடை யென்பதன் திரிபு) குதவாயில், ஈண்டு மூலாதாரத்துக்கு ஆகுபெயர்; வண்டிச்சிக்கும் என்றும் பாடம்.

737. சுழலும்=மனமருளும்; தொல்லைமுன்=அநாதிமுதலாக; இரதம=ஆக்கினையிலுள்ள முக்கோணம், அது தேர்போன்றிருத்தலால் அவ்வாறு கூறினர், சித்தர் பரிபாஷையுமாம்; அங்கியுளீசன்=அக்கினிக் கதிஷ்டான தேவதையான சிவபிரான்; நிழலுளுந் தெற்றுள்=நிழல் செய்கின்ற சித்திர மண்டபத்துள்.

738. வன்னி=அக்கினி ரூபனுன சிவன்; நாலுகலை=ஓமரூபி, அநந்தை, நாதை, அநாதை யென்பன; வாயு எழு=பஞ்சப் பிராணனேடு, இடகலை பிங்கலையுமாம்; மான்கன்று=ஜீவான்மா.

739. சனவேதசத்தி = திரோதாயி; நெல்லின் வளர்கின்ற நேர்மையை=ஒரு நெல்லினின்றும் பலநெல் உற்பத்தியாதல் போல ஒரு சரீரத்திலிருந்து பலசரீரம் வருதற்குரிய முறைமையை; பாகு=கரை; ஊழ்(முறை)கொண்ட மந்திரம் = அஜபாமந்திரம்.

**௯-வது காலசக்கரம்.**

**740.** மதிவட்ட மாக வரையஞ்சு நாடி
யதுவிட்டிங் கீரா றமர்ந்த வதனாற்
பதிவட்டத் துண்ணின்று பாலிக்கு மாறு
மதுவிட்டுப் போமாறு மாயலுற் றேனே. (௧)

**741.** உற்றறி வைந்து முணர்ந்தறி வாரேழுங்
கற்றறி வெட்டுங் கலந்தறி வொன்பதும்
பற்றிய பத்தும் பலவகை நாழிகை
யற்ற தறியா தழிகின்ற வாறே. (௨)

**742.** அருகின்ற வாண்டவை யையஞ்சு மூன்று
மொழிகின்ற முப்பது மூன்றென்ப தாகுங்
கழிகின்ற காலறு பத்திரண் டென்ப
தெழுகின்ற வீரைம்ப தெண்ணற் றிருந்தே. (௩)

**743.** திருந்து தினமத் தினதினத் தோடுநின்
றிருந்தறி நாளொன் றிரண்டெட்டு மூன்று
பொருந்திய நாளொடு புக்கறிந் தோங்கி
வருந்துத லின்றி மனைபுக லாமே. (௪)

---

740. மதிவட்டம்=துவாதசாந்தம்; வரை=புருவமத்தியிலுள்ளமேரு; அஞ்சு நாடியதுவிட்டு=ஐந்து நாடிகள் கூடுமிடத்தை விட்டு; ஈராறு அமர்ந்தவதனால்=சுவாசத்தோடு கூடியிருத்தலால்; பதிவட்டம்=சிவமிருக்கும் மதிமண்டலம்; மது=அமிர்தம்.

741. ஐந்து முணர்ந்தறிவார்=ஐம்புலன்களின் றன்மையை யுணர்ந்த் அறிஞர்; எழு=சுகுணவிருத்தி எழு; எட்டு=ஞானமூலங் களெட்டு, ஒன்பது=சிவபேதம் ஒன்பது; பத்து=பிராண வாயுவின் பேதங்கள் பத்து; அற்றது=இலயமாதல்.

742. ஐயஞ்சு மூன்று=இருபத்தைந்து முதல் இருபத்தெட்டு வரையிலும்; முப்பது மூன்று=முப்பதுமுதல் முப்பத்துமூன்று வரையிலும்; அறுபத்திரண்டு=அறுபதுமுதல் அறுபத்திரண்டு வரையிலும்; ஈரைம்பது= நூறு வயதிலும்; (கண்டங்களுளவாம்). கண்டங்கள் பலவுள வாயினும் ஈண்டு நாலு கூறப் பட்டன. ஏனைய ஜோதிடநூலில் விரிவுறக் காணலாம்.

743. தினம்=வாரம்; நாள் = நட்சத்திரம்; ஒன்று இரண்டு எட்டு மூன்று = ஜன்மத்திலிருந்து ஒன்று இரண்டு மூன்று எட்டாம் நட்சத்திரங்கள் (இவை ஆகாவென்பது); புக்கறிந்து= ஆராய்ந்தறிந்து.

**744.** மனைபுகு வீரு மனத்திடை நாடி
லெனவிரு பத்தஞ்சு மீரா றதனாற்
றனையறிந் தோரட்டுத் தற்குறி யாறு
வினையறி யாது விளங்கிய நாலே. (௫)

**745.** நாலுங் கடந்தது நால்வரு நாலஞ்சு
பாலங் கடந்தது பத்திப் பதினஞ்சு
கோலங் கடந்த குணத்தாண்டு மூவிரண்
டாலங் கடந்ததொன் றாரறி வாரே. (௬)

**746.** ஆறு மிருபது மையஞ்சு மூன்றுக்குந்
தேறு மிரண்டு மிருபத்தொ டாறிவை
கூறு மதியொன்றி னுக்கிரு பத்தேழு
வேறு பதியங்க ளுள்விதித் தானே. (௭)

**747.** விதித்த விருபத்தெட் டொடுமூன் றறையாகத்
தொகுத்தறி முப்பத்து மூன்று தொகுமின்
பதித்தறி பத்தெட்டுப் பாரா திகணு
துதித்தறி மூன்றிரண் டொன்றின் முறையே. (௮)

**748.** முறைமுறை யாய்ந்து முயன்றில வாகி
லிறையிறை யார்க்கு மிருக்க வரிது
மறையது கார ண மற்றொன்று மில்லை
பறையறை யாது பணிந்து முடியே. (௯)

---

744. இருபத்தஞ்சு = ஆன்ம தத்துவம் இருபத்தைந்து; ஈராறு= பன்னிரண்டங்குல அளவையுள்ள சுவாசம்; தனை=ஆன்மாவாகிய தன்னை; அட்டு = விலக்கி; தற்குறியாறு=ஆறுதாரத்துமுள்ள சிவசொருபமாறு; வினையறியாது=பந்தவினை காணாது; நாலு = மரணத்துக் கேதுவாக வெளிச் செல்லு நால்விரலளவுள்ள சுவாசம்.

745. நாலும்=கரணம் நான்கும்; நால்வரும்=பிரமனாதி நால்வரும்; நாலஞ்சு=நவவடிவம்; பாலம்=ஆக்கினை; பத்திப்பதினஞ்சு= (பதினஞ்சு பத்தி)=பதினைந்து பங்கு,அதாவது சூரிய சந்திர கலைகளி னியக்கத்தாலாகும் தேய்பிறை வளர்பிறை; கோலங் கடந்த = சொரூபங் கடந்த; ஆலங்கடந்த தொன்று=ஆலகாலவிடத்தை யடக்கிய சிவம்.

746-747. இவ்விரண்டு மந்திரங்களிலும் சரம் இராசி முதலியவற்றாலும் நட்சத்திரங்களினாலும் மாதம் உண்டாமென்பது கூறப்பட்டது. (இது யோகியர்க்கு).

748. இறை=கொஞ்சம்; மறையது=இரகசியத்துக்கு ; பறையறையாது=பகிரங்கப்படுத்தாமல்.

749. முடிந்த தறியார் முயல்கின்ற மூர்க்க
ரிடஞ்சி லிருக்க விளக்கெரி கொண்டு
கடிந்தனன் மூலக் கதுவ வல்லார்க்கு
நடந்திடும் பாரினி னண்ண லு மாமே. (௧0)

750. நண்ணுஞ் சிறுவிர னுகை மூன்றுக்கும்
பின்னிய மார்பிடைப் பேராம லொத்திடுஞ்
சென்னியின் மூன்றுக்குஞ் சேரவே நின்றிடி
லுன்னி யணைந்திடு மோவியந் தானே. (௧௧)

751. ஓவிய மான வுணர்வை யறிமின்கள்
பாவிக ளித்தின் பயனறி வாரில்லை
தீவினை யாமுடன் மண்டல மூன்றுக்கும்
பூவி லிருந்திடும் புண்ணியத் தண்டே. (௧௨)

752. தண்டுட னோடித் தலைப்பெய்த யோகிக்கு
மண்டல மூன்று மகிழ்ந்துட லொத்திடுங்
கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன்
பிண்டம் பிரியப் பிணங்குகின் றாரே. (௧௩)

---

749. முடிந்தது=மறைத்து வைத்தது; இடிஞ்சில் = விளக்கிடும் அகல், ஈண்டு சரீரத்துக்காகுபெயர்; இருக்க=(அழியாது) நிலைத்திருக்க; விளக்கெரி = தீபம்போலு மூலாக்கினி; கதுவல்=(பிராணவாயுவை) அடக்கிக்கொள்ளுதல்; நடந்திடும் பாரினில்=நிலையற்றவுலகில்; நண்ணலுமாம்=(அழியாமல்) இருப்பதுங்கூடும்.

750. விரல் = (விரலமென்பதன் விகாரம்) நெற்றி; மூன்றுக்கும்= கிரந்தி மூன்றுக்கும்; சென்னியின் மூன்றுக்கும்=கபாலத்திலுள்ள சந்திரன் பானு அக்கினி இவை மூன்றுக்கும்; ஓவியம் = சித்திரப்படம், இங்கே உவம ஆகுபெயராய் உன்மனசக்தியைக் குறித்து நின்றது.

751. ஓவியமான வுணர்வு=அசைவற்றிருக்குமறிவு; பயன்=மோட்சம்; புண்ணியத்தண்டு=புண்ணிய மார்க்கமான சுழுமுனை; பூ=ஆயிரவிதழ்ப்பூ.

752. தலைப்பெய்தயோகி = (கபாலத்தானத்தை) அடைந்தயோகி; மண்டலமூன்று மொத்திடும்=மதி கதிர் தீயென்னு மூன்று மண்டலங்களும் மாறுபடாம லொத்திருக்கும்; கண்டவர் கண்டனர்=இதை யுணர்ந்தவரே யுணர்வுள்ளவர்; வினைப் பயன்பிண்டம் பிரிய = பிராரப்த கன்மப்பயனால் சரீரம் ஒழிய.

753. பிணங்கி யழிந்திடும் பேரது கேணீ
யணங்குள ளாதித்த னாறு விரியின்
வணங்குட னேவந்த வாழ்வு குலைந்து
சுணங்கலுக் காகச் சுழல்கின்ற வாறே. (௧௪)

754. சுழல்கின்ற வாறின் றுணைமலர் காணான்
றழலிடைப் புக்கிடுந் தன்னுளி லாமற்
கழல்கண்டு போம்வழி காணவல் லார்க்குக்
குழல்வழி நின்றிடுங் கூத்தனு மாமே. (௧௫)

755. கூத்தன் குறியிற் குணம்பல கண்டவர்
சாத்திரந் தன்னைத் தலைப்பெய்து நிற்பர்கள்
பார்த்திருந் துள்ளே யனுபோக நோக்கிடி
லாத்தனு மாகி யலர்ந்திரு மொன்றே. (௧௬)

756. ஒன்றில் வளர்ச்சி யுலப்பில கேளினி
நன்றென்று மூன்றுக்கு நாளது சென்றிடுஞ்
சென்றிடு முப்பதுஞ் சேர விருந்திடிற்
குன்றிடைப் பொன்றிகழ் கூத்தனு மாமே. (௧௭)

757. கூத்தவ னொன்றிடுங் கூர்மை யறிந்தங்
கேத்துவர் பத்தினி லெண்டிசை தோன்றிடப்
பார்த்து மகிழ்ந்து பதுமரை நோக்கிடிற்
சாத்திடு நூறு தலைப்பெய்த லாமே. (௧௮)

---

754. ஆறின்=காமாதி அரிஷ்ட வர்க்கம் ஆறினால்; காணான்=அறியாதவன்; தழலிடைப்புக்கிடும்=நெருப்பில் விழுந்து அழிவான்; போம்வழி=ஈசனிடம் செல்லும்வழி; குழல்=பிரமரந்திரம்.

755. கூத்தன்குறியில் = சிவபெருமானது சொரூப தரிசனத்தால்; குணம் = நன்மை; சாத்திரந்தன்னை = சாத்திரங்கூறிய நெறியை; ஆத்தன் = பரமசிவன்; அலர்ந்திடுமொன்றே= (ஒன்று ஏ அலர்ந்திடும்) ஏகமாம் வியாபகமாவன்.

756. ஒன்றில்=சுழுமுனையொன்றில்; மூன்றுக்கு=மூன்று நாடிகளிலுஞ் செல்லுதலில்; நாள் = ஆயுள்; முப்பதும்=மூன்றினும் மாறிச்செல்லுதலான் முப்பதும், உண்மையான் ஆறும் கொள்ள முப்பத்தாறு மென்றுகொள்க; குன்றிடைப்பொன்றிகழ்=(பொன்றிகழ்குன்றிடை) பொன்மயமா மேருவில்.

757. அங்கு=அநாகதத்தில்; பத்தினில்=பத்து அக்கரங்கூடியிருக்குமிடத்தில்; பதுமரை=தாமரையிலுள்ள சிவபெருமானை; சாத்திடுநூறு=நூல்களிற் கூறிய நூறுவயதும்.

758. சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர்
காத்துட லாயிரங் கட்டுறக் காண்பர்கள்
சேர்த்துட லாயிரஞ் சேர விருந்தவர்
மூத்துடன் கூடி யுகமது வாமே. (கக)

759. யுகங்கோடி கண்டு மொசிவற நின்று
வகங்கோடி கண்டு ளயலறக் காண்பர்கள்
சிவங்கோடி விட்டுச் செறிய விருந்தங்
குகங்கோடி கண்டங் குயருறு வாரே. (உ0)

760. உயருறு வாருல கத்தொடுங் கூடிய
பயனுறு வார்பலர் தாமறி யாமற்
செயலுறு வார்சிலர் சிந்தையி லாமற்
கயலுறு கண்ணியைக் காணகி லாரே. (உக)

761. காணகி லாதார் கழிந்தோடிப் போவர்க
ணாணகி லாதார் நயம்பேசி விடுவர்கள்
காணகி லாதார் கழிந்த பொருளெல்லாங்
காணகி லாமற் கழிகின்ற வாறே. (உஉ)

762. கழிகின்ற வப்பொருள் காணகி லாதார்
கழிகின்ற வப்பொருள் காணலு மாகுங்
கழிகின்ற வுள்ளே கருத்துற நோக்கிற்
கழியாத வப்பொருள் காணலு மாமே. (உங)

---

758. காத்துடலாயிரம்=உடலை ஆயிரம் புருஷாயுசு காத்து; மூத்து= (அறிவில்) முதிர்ந்து.

759. ஒசிவு=தளர்வு; அயலற=வேறுபடாமல்; சிவங்கோடி=சிவமே முடிந்தவிடமாக.

760. செயலுறுவார் = (கன்மிகளைப்போல) கன்மங்களைச் செய்து கொண்டிருப்பார்கள்; சிந்தையிலாமல் = (இம்மை மறுமையைக்) கருதாமையால்; கயலுறுகண்ணி=சத்தி.

761. நாணகிலாதார்=வெட்கமில்லாதவராய்; நயம்=சாத்திரத்தின் நன்மை.

762. கழிகின்ற வப்பொருள் = உடலைவிட்டுப்போம் பொருள் (சீவான்மா); உள்ளே=சரீரத்தினுள்ளே; கழியாத அப்பொருள்=நீங்காதுள்ள சிவம்.

763. கண்ணன் பிறப்பிலி காணந்தி யாயுள்ளே
யெண்ணுந் திசையுட னேகாந்த னாயிடுந்
திண்ணென் றிருக்குஞ் சிவகதி யாநிற்கு
நண்ணும் பதமிது நாடவல் லார்கட்கே. (உச)

764. நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை
நாடவல் லார்க ணரபதி யாய்நிற்பர்
தேட வல்லார்க டெரிந்த பொருளிது
கூடவல் லார்கட்குக் கூறலு மாமே. (உரு)

765. கூறும் பொருளி தகார வுகாரங்க
டேறும் பொருளிது சிந்தையு ணின்றிடக்
கூறு மகாரங் குழல்வழி யோடிட
மாறு மமர்ந்திடு மண்ணலு மாமே. (உசு)

766. அண்ண லிருப்பிட மாரு மறிகில
ரண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வார்கட்
கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடு
மண்ணலைக் காணி லவனிவ னாகுமே. (உஎ)

767. அவனிவ னாகும் பரிசறி வாரில்லை
யவனிவ னாகும் பரிசது கேணீ
யவனிவ னோசை யொளியினு ளொன்றிடு
மவனிவன் வட்டம தாகிநின் றானே. (உஅ)

768. வட்டங்க ளேழு மலர்ந்திடு மும்முளே
சிட்ட னிருப்பிடஞ் சேர வறிகிலீ
ரொட்டி யிருந்துள் ளுபாய முணர்ந்திடக்
கட்டி யிருப்பிடங் காணலு மாகுமே. (உகூ)

---

763. கண்ணன்=திருமால்; திசை - எட்டு என்னும் பொருடந்து நின்றது; ஏகாந்தனாய்=தனிமையானவனாய்; திண்ணென்றிருக்கும்=உறுதியாயிருக்கும்.

764. நரபதியாய்=மனிதர்க்குள் தெய்வமாய்; கூடவல்லார்கள் = அடையத்தக்க பரிபாகிகள்.

765. தேறும்பொருள்=தெளியத்தக்கபொருள் ; மகாரம்=நாதம் ; ஆறு=ஆதாரமாறு.

767. ஓசை=நாதம்; = வட்டம் = பிரணவம்.

768. வட்டங்களேழு=ஆதாரசக்கரமாறும் மேலுள்ள மதிமண்டலமும்; கட்டி=கருப்புக்கட்டி; இது சிவத்துக்காகுபெயர்.

**769.** காணலு மாகும் பிரமனரி யென்று
காணலு மாகுங் கறைக்கண்ட னீசனைக்
காணலு மாகுஞ் சதாசிவ சத்தியுங்
காணலு மாகுங் கலந்துடன் வைத்ததே. (௩0)

---

### எ-வது ஆயுட் பரீட்சை.

**770.** வைத்தகை சென்னியி னேரிதாய்த் தோன்றிடி
லுத்தம மிக்கிடி லோரறு திங்களா
மத்த மிருத்திட் டிரட்டிய தாயிடி
னித்த லுயிர்க்கொரு திங்களி லோசையே (௧)

**771.** ஓசையு மீசனு மொக்கு முணர்வின்கண்
ணோசை யிறந்தவ ரீசனை யுள்குவ
ரோசை யிறந்தவர் நெஞ்சினு ளீசனு
மோசை யுணர்ந்த வுணர்விது வாமே. (௨)

**772.** ஆமே யழிகின்ற வாயுவை நொக்கிடி
னாமே லுறைகின்ற நன்மை யளித்திடும்
பூமே லுறைகின்ற போதகம் வந்திடுந்
தாமே யுலகிற் றலைவனு மாமே. (௩)

**773.** தலைவ னிடம்வலஞ் சாதிப்பா ரில்லை
தலைவ னிடம்வல மாயிடிற் றையற்
றலைவ னிடம்வலந் தன்வழி யஞ்சிற்
றலைவ னிடம்வலந் தன்வழி நூறே. (௪)

---

770. அத்தம்=கை; நித்தல்=நாள், அல்லது நீத்தல் முதல் குறுகி நின்றதெனக்கொண்டு நீங்குதலெனப் பொருள் படுத்தலுமாம்; ஓசை=பிராணன்.

771. உணர்வு = அறிவுருவனாகிய சிவபிரான்; இறந்தவர்=இலயமடையப்பெற்றவர்; உணர்ந்தவுணர்வு = சீவன் சிவத்தில் இலயமாங்கால் அறியப்படுமெறிவே (சிவமாம்).

772. அழிகின்றவாயு=வெளியிற் புறப்பட்டுப்போம் நாலங்குலவாயு; நா=அண்ணுக்கு; போதகம்=ஞானம்.

773. இடம் வலஞ்சாதிப்பார்=பிராணாயாமத்தைக் கிரமமாய் முடிப்பவர்; இடம் வலம் தன்வழி யஞ்சில் = இடகலை பிங்கலைகளில் முறையே வாயு இயங்கும் ஐந்துநாழிகையில்; தன்வழி நூறே=அவற்றின்வழியே வயது நூறு (மென்றறிக).

774. ஏறிய வாறினி லெண்பது சென்றிடுந்
தேறிய வேழிற் சிறக்கும் வகையெண்ணி
லாறொரு பத்தா யமர்ந்த விரண்டையுந்
தேறியே நின்று தெளியிவ் வகையே. (ரு)

775. இவ்வகை யெட்டு மிடம்பெற வோடிடி
லவ்வகை யையொன்ப தேயென்ன வறியலாஞ்
செவ்வகை யொன்பதுஞ் சேரவே நின்றிடின்
மூவ்வகை யாமது முப்பத்து மூன்றே. (சு)

776. மும்மூன்று மொன்று முடிவுற நின்றிடி
லெண்மூன்றி னுலு மிடவகை யாய்நிற்கு
மைம்மூன்று மோடி யகலவே நின்றிடிற்
பன்மூன்றொ டீராறு பார்க்கலு மாமே. (எ)

777. பார்க்கலு மாகும் பகல்முப் பதுமாகி
லாக்கலு மாகுமவ் வாறிரண் டுள்ளிட்டும்
போக்கலு மாகும் புகலற வொன்றெனிற்
றேக்கலு மாகுந் திருந்திய பத்தே (அ)

778. ஏயிரு நாளு மியல்புற வோடிடிற்
பாயிரு நாளும் பகையற நின்றிடுந்
தேய்வுற மூன்றுந் திகழவே நின்றிடி
லாயுரு வாமென் றளக்கலு மாமே (கூ)

779. அளக்கும் வகைநா லுமவ்வழி யோடிடில்
விளக்கு மொருநாலு மெய்ப்பட நிற்குந்
துளக்கும் வகையைந்துந் தூய்நெறி யோடிற்
களக்க மறமுன்றிற் காணலு மாமே. (க0)

---

774. ஆறினில்=ஆறுபகுதியாய நாழிகைகளிலும் (ஓடில்); எண்பது சென்றிடும்=வயது எண்பதுவரை செல்லும்; ஏழில்=ஏழாயின் ; ஆறொருபத்து=அறுபது வயதாம்.

775. எட்டு=எட்டுப்பகுதி; ஐயொன்பது=நாற்பத்தைந்து ; ஒன்பது=ஒன்பதாயின்.

776. இம்மந்திரமுதல் "ஒன்றிய நாள்கள்" என்ற மந்திரம்வரை சரநூலின் இரகசியமென்பாறிஞர் ; இவை குறிப்புரை மாத்திரையான் எளிதில் உணர்த்தற்கரிய அதிரகசியார்த்தங்களைக்கொண் டிருப்பதால், அவற்றை இந்நூலின் உரையிற் கூடியவரை யெழுதி விளக்குவாம்.

780. காணலு மாகுங் கருதிய பத்தோடிற்
காணலு மாகுங் கலந்த விரண்டையுங்
காணலு மாகுங் கலப்பற மூவைந்தேற்
காணலு மாகுங் கருத்துற வொன்றே. (கக)

781, கருது மிருபதிற் காண வாறுகும்
கருதிய வையைந்திற் காண்பது மூன்றுங்
கருது மிருப துடனாறு காணிற்
கருது மிரண்டெனக் காட்டலு மாமே. (கஉ)

782. காட்டலு மாகுங் கலந்திரு பத்தேழிற்
காட்டலு மாகுங் கலந்தெழு மொன்றெனிற்
காட்டலு மாகுங் கலந்திரு பத்தெட்டிற்
காட்டலு மாகுங் கலந்தவீ ரைந்தே. (கங)

783. ஈரைந்து மைந்து மிருமூன்று மெட்டுக்கும்
பாரஞ்சி நின்ற பகைபத்து நாளாகும்
வாரஞ்செய் கின்ற வகையாறஞ் சாமாகி
லோரஞ்சொ டொன்றொன் றெனவொன்று நாளே.

784. ஒன்றிய நாள்க ளொருமுப்பத் தொன்றாகிற்
கன்றிய நாளுங் கருத்துற மூன்றாகுஞ்
சென்றுயிர் நாலெட்டுஞ் சேரவே நின்றிடின்
மன்றியல் பாகு மனையி லிரண்டே. (கரு)

785. மனையினி லொன்றாகு மாதமு மூன்றுஞ்
சுனையினி லொன்றாகுந் தொனித்தன னந்தி
வினையற வோங்கி வெளிசெய்து நின்றாற்
றனையுற நின்ற தலைவனு மாமே. (கசு)

786. ஆரு மறியா ரளக்கின்ற வன்னியை
யாரு மறியா ரளக்கின்ற வாயுவை
யாரு மறியா ரழிக்கின்ற வப்பொரு
ளாரு மறியா வறிவறிந் தேனே. (கஎ)

787. அறிவது வாயுவொ டைந்தறி வாய
தறிவா யதுதா னுலகுயி ரத்தின்
பிறிவு செயாவகை பேணியுண் ணூடிற்
செறிவது நின்று திகழு மதுவே (கஅ)

788. அதுவரு ளும்மரு ளான துலகம்
பொதுவரு ளும்புக ழாளர்க்கு நாளு
மதுவரு ளும்மலர் மங்கையர் செல்வி
யிதுவருள் செய்யு மிறையவ னாமே. (கசூ)

789. பிறப்பது சூழ்ந்த பெருந்தகை நந்தி
குறிப்பது கூடிய கோலக் குரம்பைப்
பழப்பதி யாவது பற்றறும் பாச
மழப்படி செய்வார்க் ககலு மதியே. (உ0)

அ-வது வார சரம்.

790. வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதனிட
மொள்ளிய மந்த னிரவிசெவ் வாய்வலம்
வள்ளிய பொன்னே வளரும் பிறையிடந்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே. (க)

791. வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதன்மூன் றுந்
தள்ளி யிடத்தே தயங்குமே யாமாகி
லொள்ளிய காயத்துக் கூனமி லையென்று
வள்ள னமக்கு மகிழ்ந்துரைத் தானே. (உ)

792. செவ்வாய் வியாழஞ் சனிஞாயி றேயென்னு
மிவ்வா ரறிகின்ற யோகி யிறைவனே
யொவ்வாத வாயு வலத்துப் புரியவிட்
டவ்வா றறிவார்க்கவ் வானந்த மாமே. (ங)

790. இடம்=இடகலையில் (உதித்தோடும்); மந்தன் இரவி செவ்வாய் வலம்=சனி ஞாயிறு செவ்வாய் இம் மூன்றினும் வல முதித்தோடும்; பொன்=வியாழம்.

791. தள்ளி=(பிங்கலையை) விட்டு; ஊனமிலை=கெடுதியில்லை.

792. இவ் ஆர் அறிகின்ற யோகி=(செவ்வாய் வியாழம் சனி ஞாயிறு ஆகிய நான்கிலும்) அவற்றிற்குக் கூறிய இரகசியப்படி தவ முமோடுதலை யறிகின்றயோகி; இவ் வார் எனப் பிரித்து இவ் வாரங்களெனக் கொள்ளினுமாம். (வார் - வாரம் என்பதன் கடைக்குறை).

793. மாறி வருமிரு பான்மதி வெய்யவ்
னேறி யிழியு மிடைபிங் கலையிடை
யூறு முயிர்நடு வேயுயி ருக்கிரந்
தேறி யறிமின் றெரிந்து தெளிந்தே. (ச)

794. உதித்து வலத்திடம் போகின்ற போது
வதிர்த்தஞ்சி யோடுத லாமகன் றூரு
முயிர்த்தது வேமிக வோடிடு மாகி
லுதித்தவி ராசி யுணர்ந்துகொ ளுற்றே. (ரு)

795. நடுவுநில் லாம லிடம்வல மோடி
யடுகின்ற வாயுவை யந்தணன் கூடி
யிடுகின்ற வாறுசென் றின்பணி சேர
முடிகின்ற தீபத்தின் முன்னுண்டென் றூனே. (சு)

796. ஆயும் பொருளு மணிமலர் மேலது
வாயு விதமும் பதினு றுளவலி
போயம் மனத்தைப் பொருகின்ற வாதார
மாயுவு நாளு முகுர்த்தமு மாமே. (எ)

---

793. ஏறியிழியும்=ஏறியிறங்கும்; ஊறுமுயிர்=உயிர்வளரும்; நடு=சுழுமுனை; உயிருக்கிரந்தேறி யறிமின்=உயிர்க்(அபாயமுறுதலுக்கு) கிரங்கி (நடுநாடியில்) ஏறியறிந்து கொள்ளுங்கள்.

794. உதித்து=(அவ்வவ்வாரங்கட்குக் கூறியபடி இடபிங்கலைகளில்) உதித்து; அதிர்த்து=சிதறி (ஓடில்); அகன்றூரும்=இறந்தவருமாவர்; உயிர்த்தது=தோன்றியது; இராசி=ஒழுங்கு (சிதறியோடினுமென்று கூறிய முறைப்படி யறிகவென்பது அதாவது சாவாரென்பது).

795. நடுவு நில்லாமல்=சுழுமுனையில் நிலைத்திராமல்; அடுகின்ற=கொல்லுகின்ற; அந்தணன்=சிவபிரான்; பணி=பணிவிடை அல்லது குண்டலிசத்தி; முடிகின்ற தீபத்தின்முன்=பிராணன் சென்று அடங்கும் சோதியின் முன்.

796. ஆயும் பொருள்=(யோகிகளால்) ஆராய்ந் தறியப்படும் பரம்பொருள்; அணிமலர்=அழகிய தாமரைமலர்; பதினாறு=பூரக விலக்கணமான பதினாறு மாத்திரையளவு; மனத்தைப் பொருகின்ற ஆதாரம் = மனத்தை இலயப்படுத்திக்கொள்ளுங் காரணப்பொருள்; ஆயு=ஆயுள்; நாளுமுகுர்த்தமுமாமே=அப்பரம்பொருள் முகூர்த்தநா ளாயுமாம், இது மாதம் வருடம் யுகமுதலியவற்றிற்கு முபலக்கணம்.

### கூ-வது வார சூலம்.

797. வாரத்திற் சூலம் வருவழி கூறுங்கா
னேரொத்த திங்கள் சனிகிழக் கேயாகும்
பாரொத்த சேய்புத னுத்தரம் பானுநா
ணேரொத்த வெள்ளி குடக்காக நிற்குமே. (க)

798. தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை
யக்கணி சூலமு மாமிடம் பின்னுசிற்
றுக்கமு மில்லை வலமுன்னே தோன்றிடின்
மிக்கது மேல்வினை மேன்மேல் விளையுமே. (உ)

---

### கO-வது கேசரி யோகம்.

799. கட்டக் கழன்றுகீழ் நான்று விழாம
லட்டத்திற் கட்டி யடுப்பை யணைகோலி
விட்டத்தைப் பூட்டிமேற் பையைத்தாட் கோத்து
நட்ட மிருக்க நமனில்லை தானே. (க)

800. வண்ணா னொலிக்குஞ் சதுரப் பலகைமேற்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பினு
லண்ணாந்து பார்க்க வழுக்கற்ற வாறே. (உ)

---

797. நேரொத்த = (சூலத்தன்மையில்) சரியா யொத்திருக்கின்ற; பாரொத்த சேய்=பூமிக்கு இசைந்த புத்திரனாகிய செவ்வாய்.

798. அக்கணிசூலம் = எலும்புமாலை புனைந்த சூலம், இது ருத்திர மூர்த்தியின் சூலமென்பது குறித்துநின்றது; இடம்பின்னுகில் = இடப்புறத்தும் பின்புறத்துஞ் சூலநிற்கில்; வலமுன்னே தோன்றிடின் = வலப்புறத்து மெதிரிலு மிருந்தால்; வினை= துன்பம்.

799. நான்றுவிழாமல் = ஒழுகிவிழாதபடி; அட்டம் = அண்ணம்; அடுப்பு=மூன்று நாடி கூடுமிடம், அது திரிபதகையென்னப்படும், இதனை யக்கினி மண்டலமென்று கொள்வாருமுளர்; விட்டம்=புருவ நடுவிடம்; பை=பீஜம்; நட்டம்=நடு.

800. வண்ணான் = பிராணன்; சதுரப்பலகை=அறிகருவி நான்கும் சந்திக்கு மிடமாகிய நாற்சந்தி; மேற்கண்ணாறு=அதன்மேலிருக்கும் அமிர்த நதிவரும் துவாரம்; மோழை படாமல்= அது கீழ் ஒழுகும் ஆறு ஆகாதபடி; கரைகட்டி=கபால குகைத் துவாரத்தை நா நுனியால் தடுத்து; குளம் = கபால குகை; நிரப்பினுல் = (அமிர்த நதியால் அதை) நிரம்பியிருக்கச் செய்தால்.

801. இடக்கை வலக்கை யிரண்டையு மாற்றித்
துதிக்கையா லுண்பார்க்குச் சோரவும் வேண்டா
முறக்கத்தை நீக்கி யுணரவல் லார்கட்
கிறக்கவு வேண்டா மிருக்கலு மாமே. (௩)

802. ஆய்ந்துரை செய்யி லமுதநின் றூறிடும்
வாய்ந்துரை செய்யும் வருகின்ற காலத்து
நீந்துரை செய்யு நிலாமண்ட லமதாய்ப்
பாய்ந்துரை செய்தது பாலிக்கு மாறே. (௪)

803. நாவி னுனியி னடுவே சிவிறிடிற்
சிவனு மங்கே சிவனு முறைவிட
மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர்
சாவது மில்லை சதகோடி யூனே. (௫)

804. ஊனூறல் பாயு முயர்வரை யுச்சிமேல்
வானூறல் பாயும் வகையறி வாரில்லை
வானூறல் பாயும் வகையறி வாளர்க்குத்
தேனூற லுண்டு தெளிதலு மாமே. (௬)

805. மேலை யணுவில் விரைந்திரு காலிடிற்
காலனு மில்லை கதவுந் திறந்திடு
ஞால மறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவான் பராநந்தி யாணையே. (௭)

---

801. இடக்கை=இடகலை; வலக்கை=பிங்கலை; துதிக்கை=நாசாக்கிரம், அல்லது நாவைத் துதிக்கைபோல வளைக்கப்படுதலை; உறக்கம் - இது உயிர்க்குண மூன்றனுக்கு முபலக்கணம்.

802. ஆய்ந்துரை செய்யில்=ஆராய்ந்து கூறுமிடத்தில்; நின்று=நிலைபெற்று; வாய்ந்து=சித்திபெற்று; நீந்துரை செய்யும்=மிகுதியாகக் கூறப்பட்ட; நிலாமண்டலமதாய்=மதிமண்டலத்திருந்து அல்லது மதிமண்டலம்போல; பாலிக்குமாறுரைசெய்தது=அந்த அமுத நதியைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டே (இக்கேசரியோகம்) கூறப்பட்டது.

803. நடுவே = கபால குகையிலே ; சிவிறிடில்=துருத்தி போலக் குவித்துவைத் தடைத்தால்; மூவரும்=மும்மூர்த்திகளும் ; முப்பத்து மூவரும்=முப்பத்து முக்கோடி தேவர்களும்; ஊன்=உடம்பு.

804. ஊறல்=அமிர்தநதி; வானூறல்=ஆகாயகங்கை; தேனூறல்=மதியமிர்தம்.

805. அணு=அண்ணுக்கு; இருகால்=இருவகையான பிராணவாயு; கதவு=மேலாதார வாயிலின்மறைப்பு; பராநந்தி=பராசத்தி.

806. நந்திமுத லாக நாமேலே யேறிட்டுச்
சந்தித் திருக்கிற் றரணி முழுதாளும்
பந்தித் திருக்கும் பகலோன் வெளியாகச்
சிந்தித் திருப்பவர் தீவினை யாளரே. (அ)

807. தீவினை யாடத் திகைத்தங் கிருந்தவர்
நாவினை நாடி னமனுக் கிடமில்லை
பாவினை நாடிப் பயனறக் கண்டவர்
தேவினை யாடிய தீங்கரும் பாமே. (கூ)

808. தீங்கரும் பாகவே செய்தொழி லுள்ளவ
ராங்கரும் பாக வடையநா வேறிட்டுக்
கோங்கரும் பாகிய கோணை நிமிர்த்திட
வூன்கரும் பாகியே யூனீர் வருமே. (க0)

809. ஊனீர் வழியாக வுண்ணாவை யேறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாய நமவென்று
கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே. (கக)

810. வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர்
காய்ந்தறி வாகக் கருணை பொழிந்திடும்
பாய்ந்தறிந் துள்ளே படிக்கத வொன்றிட்டுக்
கூய்ந்தறிந் துள்ளுறை கோயிலு மாமே. (கஉ)

---

806. நந்தி=காரண நந்தீசர்; முதலாக=குருவாக; சந்தித்து= அடைத்து; பந்தித்திருக்கும் பகலோன்=அமிர்தம் பெருகாதபடி அதனைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் சூரியன்.

807. தீவினையாட=தீய கருமங்களைச் செய்ததனாலே; நாவினை= நாவினாலடைத்துச் செய்யப்படுவதாகிய கேசரியை; பாவினை = பாந்த கன்மங்களை; அல்லது செய்யுள் உருவமான வேதத்தை; தே வினை=தெய்வ பணிவிடை.

808. தீங்கரும்பாக=இனிய கரும்பினையொத்த; அரும்பாக அடைய நாவேறிட்டு = பூவரும்புபோல நாவைக் குவித்து மேலே செலுத்தி; கோங்கரும்பு - பாம்பின் றலைக்குவமை, இங்கே ஆகுபெயராய்க் குண்டலியை யுணர்த்திற்று; கோணை = குண்டலியின் மண்டலவடிவான வளைவை; ஊன்கரும்பாகி= (வெறுக்கப்படு மியல்புள்ள) சரீரம் விரும்பப்படும் கரும்பு போலாகி.

809. கான்=மேல்வீடு; கங்கை=இடகலை.

810. காய்ந்து = (அஞ்ஞானத்தை) எரித்து; படிக்கதவு=கேசரி முத்திரையாகிய தடை; கூய்ந்து=நிர்ம்மலமாகி.

811. கோயிலி னுள்ளே குடிசெய்து வாழ்பவர்
தாயினு நல்லார் தரணி முழுதுக்குங்
காயினு நல்லவர் காய்ந்தவர் தம்முளுந்
தியினுந் தீயரத் தீவினை யாளர்க்கே. (கங)

812. தீவினை யாளர்தஞ் சென்னியி னுள்ளவன்
பூவினை யாளர்தம் பொற்பதி யானவன்
பாவினை யாளர்தம் பாவகத் துள்ளவன்
மாவினை யாளர்தம் மதியினுள் ளானே. (கச)

813. மதியி னெழுங்கதிர் போலப் பதினாறாய்ப்
பதிமனை நூறுநூற் றிருபத்து நாலாய்க்
கதிமனை யுள்ளே கணைகள் பரப்பி
யெதிர்மலை யாம விருந்தனன் றானே. (கரு)

814. இருந்தனள் சத்தியு மக்கலை சூழ
விருந்தனள் கன்னியு மந்நடு வாக
விருந்தனண் மானே முகநில வார
விருந்தன டானு மமுதம் பொழிந்தே. (கசு)

---

812. தீ வினையாளர்=அக்கினி காரியம் புரியுமந்தணர்; பூ வினையாளர்=பூவினாலர்ச்சிக்குந் தொழிலுடைய பக்தர்; பொற்பதி யானவன்=எட்டிதழுள்ள சிவந்த இதயதாமரையாகிய ஸ்தானத்திலுள்ளவன்; மாவினையாளர்=பெருமை பொருந்திய யோக முயற்சி யுடையார்.

813. மதியினெழுங் கதிர்போலப் பதினாறாய்ப்பதி மனை = சந்திரனிடத்தில் தோன்றுகின்ற கதிர்களைப்போல பதினாறு இதழ்களுள்ள விசுத்தி ஸ்தானம்; நூறு நூற்றிருபத்து நாலாய்=(மூலாதாரமுதல் அநாகதம்வரை ஒளிபரப்பி நிற்கும் சூரியஅக்கினிக் கிரணங்கள்) இருநூற்று இருபத்து நாலாக; கணைகள் - உவம ஆகுபெயராய்ச் சந்திர கிரணங்களைக் குறித்தது; கலை யென்றும் பாடம்; மலையாமல்= மயங்காமல்.

814. சத்தி,கன்னி இரண்டுமொருபொருண்மேனின்றன; அக்கலை= அந்தக் கிரணங்கள்; அந் நடுவாக=அந்த விசுத்தி தத்துவத்தினடுவில்; மானே முக நிலவார=மான்போலும் விழிகளுள்ள மதிபோலு முகத்தினின்றும் நிலா வொளியுண்டாக.

815. பொழிந்த விருவெள்ளி பொன்மண் ணடையில்
வழிந்துள் ளிருந்தது வான்முத லங்கு
கழிந்தது போகாமற் காக்கவல் லார்க்குக்
கொழுந்தது வாகுங் குணமது தானே. (கஎ)

816. குணமது வாகிய கோமள வல்லி
மணமது வாக மகிழ்ந்தங் கிருக்கிற்
றனமது வாகிய தத்துவ ஞான
மினமது வாக விருந்தனன் றானே. (கஅ)

817. இருந்த பிராணனு முள்ளே யெழுமாம்
பரிந்தவித் தண்டுட னண்டம் பரிய
விரிந்தவப் பூவுடன் மேலெழ வைக்கின்
மலர்ந்தது மண்டலம் வாழலு மாமே. (கசு)

818. மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கீழ்க்கட்டிற்
பண்டகத் துள்ளே பகலே யொளியாகக்
குண்டலக் காதனுங் கூத்தொழிந் தானே. (உ0)

---

815. பொழிந்துஅவிரும் வெள்ளி=(அவ்வாறு சத்தியால்) சொரியப் பட்டு விளங்கும் வெண்ணிறமான அமுதம்; பொன்மண்= பொன்போலும் பிருதிவி, இங்கு மூலாதாரம்; வான்முதல்= ஆகாயமுதலிய பூதங்கள்; கழிந்தது போகாமல்=நீங்கிப் போகாமல்; கொழுந்ததுவாகும்=கொழுந்து விட்டுத் தழைக் கும்.

816. கோமளவல்லி=பசிய கொடிபோலு மிறைவி; மணமதுவாக= (ஈசனொடு) கலத்தலாகி; ஞானம் இனமதுவாக=சிற்சத்தி யொடு கூடிய சகுண சொரூபனாக.

817. பரிந்த=(பரித்த) சரீரத்தைத் தாங்கி நிற்பதாகிய; தண்டு= வீணா தண்டம்; அண்டம் பரிய=ஆகாயம் செல்ல; பூ=சகத் திரதளமலர்; மண்டலம்=மதிமண்டலம்.

818. மண்டலம் = அக்கினிமண்டலம்; மன=(மன்ன)சேர; ஒட்டி யாணத்தைக் கண்டு=ஒட்டியாண பந்தமென்னும் முத்தி ரையை (குருமுகத்தால்) உணர்ந்து; கீழ்க்கட்டில் = கீழ்ப் பாகத்தை யடைப்பின்; பண்டகத்துள்ளே=மேல்வீட்டில்; பகல் ஏய் ஒளியாக=பகலிற் பொருந்திய சூரியனொளி பரவி நிற்க; குண்டலக் காதனுங் கூத்தொழிந்தானே=(இதனை உணர்ந்தடைந்த யோகியிடம்) குழையணிந்த காதையுடைய சிவபெருமான் பஞ்ச கிருத்திய நடனமொழிந்திருந்தார்.

819. ஒழிகின்ற வாயுவு முள்ளே யமருங்
கழிகின்ற வாயுவுங் காக்கலு மாகும்
வழிகின்ற காலத்து வட்டக் கழலைப்
பழிகின்ற காலத்துப் பையகற் றீரே. (உக)

820. பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின்
மெய்யினி னுள்ளே விளங்கு மொளியதாங்
கையினுள் வாயு கதித்தங் கெழுந்திடின்
மையணி கோயின் மணிவிளக் காமே. (உஉ)

821. விளங்கிடும் வாயுவை மேலெழ வுன்னி
நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே
வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பிச்
சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே. (உங)

822. சொல்லலு மாயிடு மாகத்து வாயுவுஞ்
சொல்லலு மாகு மண்ணீர்க் கடினமுஞ்
சொல்லலு மாகு மிவையஞ்சுங் கூடிடிற்
சொல்லலு மாந்தூர தரிசனந் தானே. (உச)

---

819. வட்டம்=மூலவட்டம்; கழலை = சுழிமுனையினுட்டுளை; பழிகின்ற=(பழிக்கின்ற) நிந்திக்கப்படுகிற; பை=பாம்பின்படம் (குண்டலியின்முகம்); அகற்றீர்=விலக்குங்கள்.

820. பை = சரீரம்; படி = பூமிபூதத்துக்குரிய மூலம்; கதவொன்றிடின் = (மூலபந்தன மென்னு முத்திரையாகிய) கதவினலடைத்தால்; கையினுள் வாயு=வசப்பட்ட பிராணவாயு; கதித்தெழுந்திடின் = ஒலித்துக்கொண்டு மேலே கிளம்பினல்; கோயின் மணிவிளக்காம்=மேனிலையாகிய கோயிலில் விளங்கும் மாணிக்கதீபம்போலும் இறைவன் காணப்படுவன்.

821. நலங்கிடும் கண்டத்து நாபியினுள்ளே=சுருங்குகின்ற கழுத்து நாபி ஸ்தானங்களிலே; இதில் கண்டத்தைச் சுருக்குதலாகிய ஜாலந்திரையும் ஒட்டியாணபந்தமுத்திரையுங் கூறப்பட்டன. ஜாலந்திரையால் அமுதம் கீழொழுகாது தடைபடும்; ஒட்டியாணத்தால் வாயுவு மடங்கும் என்பது யோகநூற் கருத்து. உணங்கிட=அத்தானங்களை வாட்டிட.

822. மாகம்=ஆகாயம்; கடினம்=கொடுமை ஈண்டு நெருப்பு; அஞ்சுங்கூடிடில்=வெளி வளி ஒளி நீர் மண் ஆகிய பூதமைந்துஞ் சேர்ந்து கூடினல்; தூரதரிசனமாம்=தூரத்திலுள்ள பரம் பொருளைத் தரிசனஞ் செய்யலாம்.

823. தூர தரிசனஞ் சொல்லுவன் காணலாங்
காராருங் கண்ணி கடைஞான முட்பெய்திட்
டோராருந் தீபத் தெழிற்சிந்தை வைத்திடிற்
பாரா ருலகம் பகன்முன்ன தாமே. (உரு)

824. முன்னெழு நாபிக்கு முந்நால் விரற்கீழே
பன்னெழு வேதம் பகலொளி யுண்டென்னு
நன்னெழு நாதத்து நற்றீபம் வைத்திடத்
தன்னெழு கோயிற் றலைவனு மாமே. (உசு)

---

### கக-வது பரியங்கி யோகம்.

825. பூசு வனவெல்லாம் பூசிப் புலர்த்திய
வாச நறுங்குழன் மாலையுஞ் சாத்திய
காயக் குழலி கலவியொ டுங்கலந்
தூசித் துளையுறத் தூங்காது போகமே. (க)

826. போகத்தை யுன்னவே போகாது வாயுவு
மோகத்தை வெள்ளியு மீளும் வியாழத்திற்
சூதொத்த மென்முலை யாளுநற் சூதனுந்
தாதிற் குழைந்து தலைகண்ட வாறே. (உ)

---

823. கடைஞானம்=முடிந்தஞானம்; தீபம்=தீபம்போலுஞ் சிவம்; பாராருலகம் = பூவுலகமும் போகநிறைந்த ஏனைய உலகங்களும்; பகன் முன்னதாம் = பகலிற் காணப்படுவனபோல (நன்றாய்) விளங்கும்.

824. மூந்நால் விரல் கீழே=பன்னிரண்டு விரலளவைக்குக் கீழே; பகல்=நடு (சரீரத்தின் மத்தி); ஒளி=அக்கினி; தன்னெழு கோயில்=ஆன்மாவையே கோயிலாகக்கொண்டருளிய.

825. காய் அக்குழலி=(மனதை) வெதுப்புகின்ற அப்பெண்; ஊசித் துளை=ஊசியினாற் செய்யப்பட்ட துளை; தூங்காது=தளராது.

826. வெள்ளி=விந்து; வியாழம்=நாதம்; சூதன்=ஆடவன் (சூதம்=வாதரசம், விந்துவை இரசமென்பதும், நாதத்தைக் கந்தகமென்பதும் பரிபாஷை); தாது=நாதபிந்துக்கள்.

827. கண்டனுங் கண்டியுங் காதல்செய் யோகத்து
மண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டு வானீ ருருட்டிடத்
தண்டொரு காலுந் தளராது வங்கமே. (ங)

828. அங்கப் புணர்ச்சியு மாகின்ற தத்துவ
மங்கத்தில் விந்து வருகின்ற போகத்துப்
பங்கப் படாமற் பரிகரித் துத்தம்மைத்
தங்கிக் கொடுக்கத் தலைவனு மாமே. (ச)

829. தலைவனு மாயிடுந் தன்வழி ஞானந்
தலைவனு மாயிடுந் தன்வழி போகந்
தலைவனு மாயிடுந் தன்வழி யுள்ளே
தலைவனு மாயிடுந் தன்வழி யஞ்சே (ரு)

830. அஞ்சு கடிகையி லாறுங் கடிகைமேற்
றுஞ்சவ தொன்றத் துணைவி துணைவன்பா
னெஞ்சு நிறைந்தது வாய்கொளா தென்றது
பஞ்ச கடிகை பரியங்கி யோகமே. (சு)

831. பரியங்கி யோகத்துப் பஞ்ச கடிகை
யரியவிவ் வியோக மடைந்தவர்க் கல்லது
சரிவளை முன்கைச்சி சந்தனக் கொங்கை
யுருகத் தழுவ வொருவர்க் கொண்ணாதே. (எ)

---

827. கண்டனுங்கண்டியும்=(ஜாலந்தரத்தாற் சுருக்கப்பட்ட) கண்டத்தையுடைய ஆடவனும் மாதும்; மண்டலம்=பரிதிமதி மண்டலங்கள்; வண்டி=இடகலை பிங்கலை; வானீர் உருட்டிட=மேலான நாத பிந்துக்கள் திரண்டு தன்னிட மிருக்குமாறு செய்ய; தண்டு=இலிங்கம்.

828. அங்கப்புணர்ச்சி = பரியங்கியோகம்; பங்கப்படாமல்=நாத பிந்துக்கள் கெடாதபடி; தம்மை=தம்மிடத்தில்; தங்கிக் கொடுக்க=தங்கியிருக்கும்படி செய்துகொள்ள.

829. தன்வழியஞ்சு=ஐம்புலனுந் தன்வசமாதலால்.

830. அஞ்சு கடிகையில் = ஐந்து நாழிகைக்குமேல்; துஞ்சுவது= பொருந்துவது.

**832.** ஒண்ணாத யோகத்தை யுற்றவ ராரெனில்
விண்ணார்ந்த கங்கை விரிசடை வைத்தவன்
பண்ணா ரமுதினைப் பஞ்ச கடிகையி
லெண்ணா மெனவெண்ணி யிருந்தா னிருந்ததே. (அ)

**833.** ஏய்ந்த பிராய மிருபது முப்பதும்
வாய்ந்த குழலிக்கு மன்னர்க்கு மானந்த
மாய்ந்த குழலியோ டைந்து மலர்ந்திடச்
சோர்ந்தன சித்தமுஞ் சோர்வில்லை வெள்ளிக்கே. (௯)

**834.** வெள்ளி யுருகியே பொன்வழி யோடாமே
கள்ளத் தட்டானார் கரியிட்டு மூடினார்
கொள்ளி பறியக் குழல்வழி யேசென்று
வள்ளிய னாவி லடக்கிவைத் தாரே. (௧0)

**835.** வைத்த விருவருந் தம்மின் மகிழ்ந்துடன்
சித்தங் கலங்காது செய்கின்ற வானந்தம்
பத்து வகைக்கும் பதினெண் கணத்துக்கும்
வித்தக னாய்நிற்கும் வெங்கதி ரோனே. (௧௧)

**836.** வெங்கதி ருக்குஞ் சனிக்கு மிடைநின்ற
நங்கையைப் புல்கிய நம்பிக்கோ ரானந்தந்
தங்களிற் பொன்னிடை வெள்ளிதா ழாமுனந்
திங்களிற் செவ்வாய் புதைத்திருந் தாரே. (௧௨)

---

832. ஸ்ரீகண்ட ருத்திரமூர்த்தி இந்தயோகத்தை யாராய்ந்து வெளிப்படுத்தினாரென்பது இம்மந்திரக் கருத்து.

833. பிராயம்=வயது; இருபதுமுப்பதும் = பரியங்கி யோகத்துக்குரிய வயது முறையே பெண்ணிற்கு இருபதும், ஆடவற்கு முப்பதுமாம்; ஐந்தும்=ஐம்புலனும்;சோர்ந்தனசித்தம்=(சித்தம் சோர்ந்தன) மனமுருகிக் கூடியதனால்; வெள்ளிக்கு=விந்துவுக்கு.

834. வெள்ளி=விந்து; பொன்=நாதம்; கள்ளத்தட்டான்=யோகியைப்போல நடிக்கும் யோகி; கரி = சாட்சியான மனம்; குழல்=இலிங்கத்துவாரம்; வள்ளியல்=அழகுபொருந்திய.

835. பத்துவகைக்கும்=பத்துத் திசைகளுக்கும்; பதினெண் கணத்துக்கும்=தேவகணம் பதினெட்டுக்கும்.

836. வெங்கதிர்=பரசிவம், இது உவம ஆகுபெயர்; சனி=அவரது பாதத்தின் கீழுள்ள சனி; இடைநின்ற நங்கை=மத்தியிலுள்ள மனோன்மணி; நம்பி=ஈசன்; திங்கள்=விந்து; செவ்வாய்=நாதம்.

**837.** திருத்திப் புதனைத் திருத்தல் செய்வார்க்குக்
கருத்தழ காலே கலந்தங் கிருக்கில்
வருத்தமு மில்லையா மங்கைபங் கற்குந்
துருத்தியுள் வெள்ளியுஞ் சோரா தெழுமே. (கந)

**838.** எழுகின்ற தீயின்முன் னேகொண்டு சென்றிட்டான்
மெழுகுரு கும்பரி செய்திடு மெய்யை
யுழுகின்ற தில்லை யொளியை யறிந்தபின்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே. (கச)

**839.** வெளியை யறிந்து வெளியி னடுவே
யொளியை யறியி னுளிமுறி யாமே
தெளிவை யறிந்து செழுநந்தி யாலே
வெளியை யறிந்தனன் மேலறி யேனே. (கரு)

**840.** மேலாந் தலத்தில் விரிந்தவ ராரெனின்
மாலாந் திசைமுகன் மாநந்தி யாயவர்
நாலா நிலத்தி னடுவான வப்பொருண்
மேலா யுரைத்தனர் மின்னிடை யாளுக்கே. (கசா)

**841.** மின்னிடை யாளுமின் னாள னுங் கூட்டத்துப்
பொன்னிடை வட்டத்தி னுள்ளே புகப்பெய்து
தன்னொடு தன்னைத் தலப்பெய்த வல்லீரேன்
மண்ணிடைப் பல்லூழி வாழலு மாங்கே. (கஎ)

**842.** வாங்க லிறுதலை வாங்கலில் வாங்கிய
வீங்க வலிக்கும் விரகறி வாரில்லை
வீங்க வலிக்கும் விரகறி வாளரு
மோங்கிய தன்னை யுதம்பண்ணி னாரே. (கஅ)

---

837. புதன்=அறிவு; கலந்தங்கிருக்கில்=மேனிலையிற் பொருந்தி யிருக்கில்; வெள்ளி=சந்திர ஒளி.

838. உழுகின்றது=அழிக்கின்றது; தில்லைவெளி=சிதாகாயம்.

839. உளி=மனம்; முறி=அடிமை; மேல்=முன்னே.

840. மேலாந்தலம்=விண்ணுலகம்; நாலாநிலம் = துரியத்தானம்; மின்னிடையாள்=உமாதேவியார்.

841. மின்னாளன்=உமாதேவியை இடப்பாகத்தில் வைத்தவன்; வட்டம்=ஆகாயம்; தலப்பு=(தலப்பூ) மேனிலத்தாமரை.

842. வாங்கல்=பூரித்தல்; இறுதல்=இரேசகம்; வீங்க=கும்பிக்க; உதம்=கேட்டல்.

843. உதமறிந் தங்கே யொருசுழிப் பட்டாற்
கதமறிந் தங்கே கபாலங் கறுக்கு
மிதமறிந் தென்று மிருப்பா ளொருத்தி
பதமறிந் தும்முளே பார்கடிந் தாளே. (கக)

844. பாரில்லை நீரில்லை பங்கய மொன்றுண்டு
தாரில்லை வேரில்லை தாமரை பூத்தது
வூரில்லை காணு மொளியது வொன்றுண்டு
கீழில்லை மேலில்லை கேள்வியிற் பூவே. (உ0)

---

கஉ-வது அமுரி தாரணை.

845. உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க்
கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கு
முடலி லொருவழி யொன்றுக் கிறைக்கி
னடலைப் படாதுயிர் நாடலு மாமே. (க)

846. தெளிதரு மிந்தச் சிவநீர் பருகி
லொளிதரு மோராண்டி லூனமொன் றில்லை
வளியுறு மெட்டின் மனமு மொடுங்குங்
களிதருங் காயங் கனகம தாமே. (உ)

847. நூறு மிளகு நுகருஞ் சிவத்தினீர்
மாறு மிதற்கு மருந்தில்லை மாந்தர்க
டேறி லிதனைத் தெளியுச் சிகப்பிடின்
மாறு மிதற்கு மறுமயி ராகுமே. (௩)

---

843. சுழி=பிரமகிரந்தி ; கதம்=மார்க்கம் ; ஒருத்தி=சிவசத்தி ; பதம்=பரிபாகம்; பார்=ஆதாரங்கள்.

844. தார்=அரும்பு ; ஊர்=பிரபஞ்சம் ; கீழ்மேல்=ஆதியந்தம் ; கேள்வி=ஞானம்.

845. நடலை=கலக்கம்; நாடல்=அறிந்துகாத்தல்.

846. சிவநீர்=அமுரி (சிவாம்பு என்பது வடமொழி) ; வளியுறமெட்டு=பிராணனாகிய அகாரம்.

847. நூறுமிளகு=நூறுமிளகளவு, (சிவாம்பு நீரொடு ஒருநாளைக்கு ஒரு மிளகு வீதம் நூறுநாட்களில் நூறுமிளகும் சிவாம்பு நீரும் உண்ணவேண்டு மென்பது மொருபட்சம்); கப்பு = சேர்த்தல்.

848. கரையரு கேகின்ற கான னுவரி
வரைவரை யென்பர் மதியிலா மாந்தர்
நரைதிரை நீக்கி நகரவல் லார்க்கு
நரைதிரை மாறு நமனுமங் கில்லையே. (௪)

849. அளக நன்னுத லாயோ ரதிசயங்
களவு காயங் கலந்தவிந் நீரிலே
மிளகு நெல்லியு மஞ்சளும் வேம்பிடி
லிளகிடு மேனி யிருளுங் கபாலமே. (௫)

850. வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்று
நாரி மருந்தென்று நந்தி யருள்செய்தா
னாதி மருந்தென் றறிவா ரகலிடஞ்
சோதி மருந்திது சொல்லவொண் ணாதே. (௬)

---

௧௫-வது சந்திரயோகம்.

851. எய்து மதிக்கலை சூக்கத்தி லேறியே
யெய்துவ தூல மிருவகைப் பக்கத்து
ளெய்துங் கலைபோல வேறி யிறங்குமாந்
துய்யது சூக்கத்துக் காலத்த காயமே. (௧)

---

848. கரை=சுவாதிட்டானம்; உவரி=அமுரி ; வரைவரை = ஒழி ஒழி; நரை-சாரமற்றதென்பதும், திரை-பித்தமுள்ளதென் பதுங் குறித்து நின்றன.

849. களவு=வஞ்சித்தல்; இந்நீரிலே = இந்த அமுரியிலே ; இளகிடும் = மெதுவாம் ; இருளும் கபாலம் = கபாலத்தின் மேலுள்ள மயிர் கறுக்கும்.

850. விண்ணோர்மருந்து=அமுதம் ; நாரிமருந்து = சத்திமருந்து ; சோதிமருந்து=சிவாமிர்தம் (அமுரி).

851. மதிக்கலை சூக்கத்தில் = சந்திரனுடைய சூக்குமமாகிய ஒரு கலையிலிருந்து; எய்துவதூலம் = ஸ்தூலமாவனவாம்; இருவகைப்பக்கத்தும் = வளர்பிறை தேய்பிறை இரண்டிலும்; சூக்கத்துக்காலத்தகாயம் = அந்தச் சூக்குமத்தைக் காலத் தடைந்துள்ள சரீரம்; துய்யது=நிர்மலமாயது.

852. ஆகின்ற சந்திரன் சூரிய னங்கியு
ளாகின்ற வீரெட்டொ டாறிரண் டீரைந்து
ளேகின்ற வக்கலை யெல்லா மிடைவழி
யாகின்ற யோகி யறிந்த வறிவே. (௨)

853. ஆறுற தாங்கலை யாதித்தன் சந்திர
னாறு நலங்கினார் ஞாலங் கவர்கொளப்
பேறுங் கலைமுற்றும் பெருங்காலி வீரெட்டு
மாறுக் கதிர்கொள்ளு மற்றங்கி கூடவே. (௩)

854. பத்து மிரண்டும் பகலோ னுயர்கலை
பத்தி னொடாறு முயர்கலை யான்மதி
யொத்த நல்லங்கிய தெட்டெட் டுயர்கலை
யத்திற னின்றமை யாய்ந்துகொள் வீரே. (௪)

855. எட்டெட் டனலின் கலையாகு மீராறுட்
சுட்டப் படுங்கதி ரோனுக்குஞ் சூழ்கலை
கட்டப் படுமீரெட் டாகு மதிக்கலை
யொட்டப் படாவிவை யொன்றொ டொன்றுகவே.

856. எட்டெட்டு மீராறு மீரெட்டுந் தீக்கதிர்
சுட்டிட்ட சோமனிற் றோன்றுங் கலையெனக்
கட்டப்ப டுந்தார கைக்கதிர் நாலுள
கட்டிட்ட தொண்ணூற்றொ டாறுங் கலாதியே. (௬)

---

852. ஈரெட்டொ டாறிரண்டீரைந்தள் = முறையே சந்திரன் சூரியன் அக்கினிகளின் கலைகள் பதினாறு பன்னிரண்டு பத்து என்பவற்றுள்; இடைவழி=நடுநாடியின் வழியில்; இடகலை வழி யென்பாருமுளர்.

853. ஆறுறதாங்கலையாதித்தன்=பன்னிரண்டு கலையுளவாகிய சூரியன்;சந்திரன் ஆறு நலங்கினார்=சந்திரன்வழியாம்படி வருத்திச் செய்தவர்; பெருங்காலி வீரெட்டு=பிராணவாயுவி லிடகலை பிங்கலைக்குரிய பதினாறுகலைகளும்; மாறு=மாறுக.

854. அங்கியதெட்டெட்டு=அக்கினிகலை யறுபத்துநாலு.

855. ஒட்டப்படாவிவை = சேரக்கூடாதனவாகிய இந்த மூவிதக் கலைகளும்.

856. சுட்டிட்டசோமனில்=தகிக்கப்பட்ட சந்திரனில்; தாரகைக் கதிர் நாலுள=நட்சத்திரக் கதிர்போலக் கூடியிருக்கும் நாலு வகையான அம்சங்களுள; கட்டிட்ட தொண்ணூற்றொடாறும்=(அவை) சேர்க்கப்பட்டுள்ள தொண்ணூற்றாறு தத்துவங்களுமாம்.

**857.** எல்லாக் கலையு மிடையின் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலஞ்
செல்லா வெழுப்பிச் சிரத்துடன் சேர்தலா
னல்லோர் திருவடி நண்ணி நிற்போரே. (எ)

**858.** அங்கியிற் சின்னக் கதிரிரண் டாட்டத்துத்
தங்கிய தாரகை யாகுஞ் சசிபானு
வங்கியத் தாரகை யாவும் பரையொளி
தங்கு நவசக்ர மாகுந் தரணிக்கே. (அ)

**859.** தரணி சலங்கனற் காற்றத்த வான
மரணிய பானு வருந்திங்க ளங்கி
முரணிய தாரகை முன்னிய வொன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே. (கூ)

**860.** தாரகை மின்னுஞ் சசிதேயும் பக்கத்துத்
தாரகை மின்னுச் சசிவளர் பக்கத்துத்
தாரகை பூவிற் சகலத்தி யோனிக
டாரகைத் தாரகை தானுஞ் சொரூபமே. (கo)

**861.** முற்பதி னஞ்சின் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதி னஞ்சிற் பெருத்துச் சிறுத்திடு
மப்பதி னஞ்சு மறியவல் லார்கட்குச்
செப்பரி யான்கழல் சேர்தலு மாமே. (கக)

---

857. எல்லாக்கலையும்=சந்திரன் சூரியன் அக்கினி யிவற்றின் கலைக ளெல்லாம்; மூலம் = மூலாதாரம் ; சிரத்துடன்=கபாலத் தானத்திலே.

858. வங்கியத் தாரகை=கூட்டமான நட்சத்திரங்கள்.

859. அரணிய=அழகிய; முரணிய=மாறுபட்ட; ஒன்பான்=தரணி முதலாகக் கூறப்பட்ட ஒன்பதும்.

860. தாரகை பூவில் சகலத்தி யோனிகள் = தாரகைகளே யுலகில் சகலத்துக்கு முற்பத்தியிடம்; தானுஞ் சொரூபம் = ஆன்ம சொரூபம்.

861. முற்பதினஞ்சில் = வளர்பிறை பதினைந்து தினங்களில்; பின்=தேய்பிறை.

862. அங்கி யெழுப்பி யருங்கதி ரூட்டத்துத்
தங்குஞ் சசியாற் றுமமைந் தைந்தாகிப்
பொங்கிய தாரகை யாம்புலன் போக்கறத்
திங்கள் கதிரங்கி சேர்கின்ற யோகமே. (கஉ)

863. ஒன்றிய வீரெண் கலையு முடனுற
நின்றது கண்டு நினைக்கிலர் நீதர்கள்
கன்றிய காலன் கருத்துழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே. (கங)

864. அங்கி மதிகூட வாகுங் கதிரொளி
யங்கி கதிர்கூட வாகு மதியொளி
யங்கி சிவத்தினிற் கூடவத் தாரகை
தங்கி யதுவே சகலமு மாமே. (கச)

865. ஈராறு பெண்கலை யெண்ணிரண் டாண்கலை
பேராமற் புக்குப் பிடித்துக் கொடுவந்து
நேராகத் தோன்று நெருப்புற வேபெய்யி
லாராத வானந்த மானந்த மானதே. (கரு)

866. காணும் பருதியின் காலை யிடத்திட்டு
மாணு மதியதன் காலை வலத்திட்டுப்
பேணி யிவ்வாறு பிழையாமற் செய்வீரே
லாணி கலங்காதவ் வாயிரத் தாண்டே. (கசு)

867. பாலிக்கு நெஞ்சம் பறையோசை யொன்பதி
லாலிக்கு மங்கே யமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்குங்
காலைக்குச் சங்கு கதிரவன் றானே. (கஎ)

862. ஊட்டத்து = கொடுப்பதிலே; தாரகையாம் புலன்=நட்சத்திரங்களாகிற புலன்களிலே.

866. பருதி=பிங்கலை; மதி=இடகலை; ஆணி=சீவன்.

867. ஒன்பதில் = நவத் துவாரங்களில்; ஆலிக்கும் = ஒலிக்கும்; சங்கு கதிரவன் = (கதிரவன் சங்கு) சூரியன் சங்கினிற முள்ள சந்திரனுமான்.

868. கதிரவன் சந்திரன் கால மளக்கும்
பொதிரவ னுள்ளே பொழிமழை நிற்கு
மதிரவ ணண்டப் புறஞ்சென் றடர்ப்ப
வெதிரவ னீச னிடமது தானே. (கஅ)

869. உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
யந்திக்கு மந்திர மாரு மறிகிலா
ரந்திக்கு மந்திர மாரு மறிந்தபின்
றந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே. (ககூ)

870. ஊதிய மேது மறியா ருரைப்பினு
மோதியு மேது மறியாத வூமர்க
ளாதியு மந்தமு மந்திக்க வல்லிரேல்
வேதிய னங்கே வெளிப்படுந் தானே. (உ0)

871. பாம்பு மதியைத் தினலுறும் பாம்பினைத்
தீங்கு கதிரையுஞ் சோதித் தனலுறும்
பாம்பு மதியும் பகைதீர்த் துடன்கொளீஇ
நீங்கல் கொடானே நெடுந்தகை யானே. (உக)

872. அயின்றது வீழ்வள வுந்துயி லின்றிப்
பயின்ற சசிவீழ் பொழுதிற் றுயின்று
நயந்தரு பூரணை யுள்ள நடத்தி
வியந்தரு பூரணை மேவுஞ் சசியே. (உஉ)

---

868. பொதிர் = ஒளித்தல்; மழை = மழைபோலும் அமுதநீர்; அண்டப்புறம்=மேலாகாயத்தினிடம்.

869. சோதி= அக்கினி; அந்திக்கும்= அடக்கும்; மகன்=விநாயகக் கடவுள்.

870. ஊதியம் = பயன்; ஆதியுமந்தமும் = சுவாசம் உதித்தலு மொடுங்குதலும்.

871. பாம்பு=குண்டலி; மதி=மதியமுதம்; தீங்கு கதிரை=தீமை செய்கின்ற பானுவை; அனலுறும் பாம்பு = அக்கினியின் கண்ணுள்ள (மூலாதாரத்திலுள்ள) குண்டலி; உடன் கொளீஇ=ஒத்திருக்கச்செய்யின்.

872. அயின்றது=(பாம்பினால்) விழுங்கப்பட்ட மதி; சசிவீழ்பொழு தில்=சந்திரன் விடுபடுகிறகாலத்தில்; பூரணை=சுழுமுனை.

873. சசியுதிக் குமள வுந்துபி லின்றிச்
சசியு தித்தபே தனது ணருந்திச்
சசிசரிக் கின்றள வுந்துயி லாமற்
சசிசரிப் பின்கட்டன் கண்டுயில் கொண்டதே. (உங)

874. ஊழி தரியா திருக்கின்ற யோகிக
ணாழிகை யாக நமனை யளப்பர்க
ளூழி முதலா யுயர்வா ருலகினிற்
றாழவல் லாரிச் சசிவன்ன ராமே. (உச)

875. தண்மதி பானுச்சி சரிபூமி யேசென்று
மண்மதி காலங்கண் மூன்றும் வழிகண்டு
வெண்மதி தோன்றிய நாளில் விளைந்தபின்
றண்மதி வீழ்வள விற்கண மின்றே. (உரு)

876. வளர்கின்ற வாதித்தன் றன்கலை யாறுந்
தளர்கின்ற சந்திரன் றன்கலை யாறு
மலர்ந்தெழு பன்னிரண் டங்குல மோடி
யலர்ந்து விழுந்தமை யாரறி வாரே. (உசு)

877. ஆமுயிர்த் தேய்மதி நாளே யெனல்விந்து
போம்வழி யெங்கணு போகாதி யோகிக்குக்
காமுற வின்மையிற் கட்டுண்ணு மூலத்தி
லோமதி யத்துள்விட் டுரையுணர் வாலே. (உள)

878. வேறுறச் செங்கதிர் மெய்க்கலை யாறெடுஞ்
சூறுற நான்குந் தொடர்ந்துற வேதிற்கு
மீறிலி னன்கலை யீரைந்தொ டேமதித்
தாறுட் கலையு ளகலுவா வாமே. (உஅ)

---

874. ஊழிதரியாது=விதியையடையாமல் (விதிகடந்த); நாழி = அளக்கும் நாழி (படி); ஊழிமுதலாய் = கற்பத்துக்கு ஆதியானவர்களாய்; தாழ=தங்க.

875. சரி=மார்க்கம், அல்லது வசிக்குமிடம்; மண்மதி = உலகத்தாரான் மதிக்கப்பட்ட; விற்கண்ணயந்தே என்றும் பாடம்.

877. உயிர்த்தேய்மதி=சீவனுக்குஅபரபக்கம்; விந்துபோம்வழி யெங்கணும் போகாது = விந்து தான் போம்வழி யெவ்விடத்தும் செல்லாது தன்வசப்பட் டொடுங்குதலாம்; காமுறவு=ஆசையுறுதல் ; ஓமதியத்துள்விட்டு=பிரணவத்தை மதிமண்டலத்திலிட்டு.

878. சூறு=கீழ்ப்புறம்; இனன்=சூரியன்; கலை ஈரைந்து=கீழுமேலுமாகச்செல்லுகின்ற சூரியகலை பத்து; மதித்தாறுள்=சந்திரகலை யுட்பட்டிருக்க.

**879.** உணர்விந்து சோணி யுறவினன் வீசும்
புணர்விந்து வீசுங் கதிரிற் குறையி
லுணர்வு முடம்பு முவையொக்க நிற்கி
லுணர்வு முடம்பு மொருகால் விடாவே. (உசு)

**880.** விடாத மனபவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்க நாதங் கொளுவிக்
கடாவிடா வைம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன வின்பம் பருகா ரமுதமே. (கூ௦)

**881.** அமுதப் புலன்வரு மாற்றங் கரைமேற்
குமிழிக்கத் தற்சுட ரைந்தையுங் கூட்டிச்
சமையத் தண்டோட்டித் தரிக்கவல் லார்க்கு
நமனில்லை நற்கலை நாளில்லை தானே. (கூக)

**882.** உண்ணீ ரமுத முறுமூற லைத்திறந்
தெண்ணீ ரிணையடித் தாமரைக் கேசெலத்
தெண்ணீர்ச் சமாதி யமர்ந்துதீ ராநலக்
கண்ணுற்றொ டேசென்று கால்வழி மாறுமே. (கூஉ)

**883.** மாறு மதியுமா தித்தனு மாறின்றித்
தாறு படாமற்றண் டோடே தலைப்படி
லூறு படாதுடல் வேண்டு முபாயமும்
பாறு படாவின்பம் பார்மிசைப் பொங்குமே. (கூங)

அதிகாரம் கூ-க்குப் பாடல் கூகூரு.

**மூன்றாந்தந்திரம் முற்றும்.**

---

879. சோணி = (சோணிதம்) நாதம்; இனன்=சூரியன்; கதிரிற் குறையில்=சூரியன் (வன்மையிற்) குறையில்; உவை=அவ் விரண்டும்; ஒக்க நிற்கில்=ஒத்து நிற்குமானால்.

880. மனபவனத்தொடுமேவி = மனமும்பிராணனுமொத்து; சிவ சங்கநாதம்=சிவனது சங்கினதோசைபோலு நாதத்தொனி; கடா = முரட்டுத்தனம்; வீடுபடாதன=நீங்காத, அல்லது சரீரமழியாத.

881. ஆற்றங்கரைமேல் = கங்கை யமுனை சரஸ்வதி நருமதை கூடு மிடத்திற்குமேல்; தற்சுடரைந்தும் = சிவம் சத்தி நாதம் பிந்து சீவன் ஆகிய ஒளியைந்தும்; சமைய=பொருந்த.

882. ஊறல்=ஊற்றை; தெண்ணீர்=தெளிந்த குணம்; தீரா நலக் கண் = மாறாத ஞானக்கண்; கால் வழிமாறும்=இயல்பாய்ச் செல்லும் வழியை மாற்றுங்கள்.

883. மாறு மதியு மாதித்தனும்=ஒன்றோடொன்று மாறுபட்டிருக் கின்ற சந்திர சூரியர்களும்; தாறுபடாமல்=பிரிவில்லாதபடி.

# நாலாந்தந்திரம்.

## க-வது அசபை.

**884.** போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகன் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேனறை யோசிவ யோகத்தை
யேற்றுகின் றேனெம்பி ராணோ ரெழுத்தே. (க)

**885.** ஓரெழுத் தாலே யுலகெங்குந் தானாகி
யீரெழுத் தாலே யிசைந்தங் கிருவராய்
மூவெழுத் தாலே முளைக்கின்ற சோதியை
மாவெழுத் தாலே மயக்கம துற்றதே. (உ)

**886.** தேவ ருறைகின்ற சிற்றம்பல மென்றுந்
தேவ ருறைகின்ற சிதம்பர மென்றுந்
தேவ ருறைகின்ற திருவம்ப லமென்றுந்
தேவ ருறைகின்ற தென்பொது வாமே. (ங)

**887.** ஆமேபொன் னம்பல மற்புத மானந்த
மாமே திருக்கூத் தனவரத தாண்டவ
மாமே பிரளய மாகுமத் தாண்டவ
மாமே சங்காரத் தருந்தாண்ட வங்களே. (ச)

**888.** தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்
தாண்டவ மான தனுக்கிர கத்தொழிற்
றாண்டவங் கூத்துத் தனிநின்ற தற்பரந்
தாண்டவங் கூத்துத் தமனியந் தானே. (ரு)

---

884. அறை=பறையடித்துத் தெரிவித்தல்; ஓ=பிரணவம்; ஓரெழுத்து=அஜபா மந்திரம்.

885. ஓரெழுத்து=ஓ என்னுமெழுத்து; ஈரெழுத்து=அ, உ; இருவர்=சீவான்மா பரமான்மா அல்லது சத்தி சிவன்; மூன்றெழுத்து=அது மகாரங் கூடியது; மா எழுத்து=மகாரம், அது மாயை.

886. தென்பொது=பெருமையுள்ள சிற்சபை.

887. பொன்னம்பலத் தாண்டவமே, அற்புத தாண்டவம், ஆனந்த தாண்டவம், அனவரத தாண்டவம், பிரளய தாண்டவம், சங்கார தாண்டமென ஐவகைத் தாண்டவமாமென்க.

888. தாண்டவமான தனியெழுத் தோரெழுத்து=பஞ்சாக்கர நடனம்; தாண்டவமானவனுக்கிரகத்தொழில்=தாண்டவமும், சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகத் தொழில்களாம்; தமனியம்=பொன்னம்பல மென்பதைக் குறித்தது.

889. தானே பரஞ்சுடர் தத்துவ மாய்நிற்குந்
தானே யகார வுகாரம தாய்நிற்குந்
தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்துக்குத்
தானே தனக்குத் தராதலந் தானே. (சு)

890. தராதல மூலக்குத் தற்பர மாபரன்
றராதலம் வெப்பு நமவா சியவாந்
தராதலஞ் சொல்லிற் றனவா சியவாகுந்
தராதல யோகந் தயாவாசி யாமே. (எ)

891. ஆமே சிவங்க ளகார வுகாரங்க
ளாமே பரங்க ளறியா விடமென்ப
வாமே திருக்கூத் தடங்கிய சிற்பர
மாமே சிவகதி யானந்த மாமே. (அ)

892. ஆனந்த மூன்று மறிவிரண் டொன்றாகு
மானந்தஞ் சிவாய வறிவார் பலரில்லை
யானந்த மோடு மறியவல் லார்கட்கு
வானந்தக் கூத்தா யகப்படுந் தானே. (கூ)

893. படுவ திரண்டும் பலகலை வல்லார்
படுவ தோங்கார பஞ்சாக் கரங்கள்
படுவது சங்காரத் தாண்டவப் பத்தி
படுவது கோணம் பரந்திடும் வாறே. (கo)

---

889. தத்துவம்=மெய்ப்பொருள்; அகார உகாரமதாய் நிற்கும்= அட்சர சொரூபமாய் நிற்பவன்; தராதலம்=பூமி, ஆதார மென்பதைக் குறித்து நின்றது.

890. மூலை=மூலாதாரம்; வெப்பு=அக்கினி மண்டலம்.

891. சிவங்கள்=மேலே மாறிக்கூறிய பஞ்சாக்கரங்கள், அன்றிச் சத்தியும் சிவமும்; அறியாவிடம்=சூனியாகாயம்; சிற்பரம்= சிற்சிவம்; சிவகதி=சிவத்துக்கு இடம்.

892. ஆனந்தம் மூன்று=பிரணவ வியட்டியான அகார உகார மகா ரங்கள்; அறிவு இரண்டு=சத்தி சிவம்; ஆனந்தஞ் சிவாய= ஆனந்த வடிவான சிவாய, இது சத்தி சிவம் ஆன்மா எனு முப்பொருள் குறித்து நின்றது.

893. இரண்டு=அம்சமந்திரம் இரண்டு; படுவது ஓங்கார பஞ்சாக் கரங்கள்=சொல்லப்பட்ட அவ்விரண்டும் பிரணவமும் பஞ் சாட்சரங்களுமாம்; பத்தி=முறைமை; கோணம்=திசை.

894. வாறே சதாசிவ மாறிலா வாகமம்
வாறே சிவகதி வண்டுறை புன்னையும்
வாறே திருக்கூத்து வாகம வசனங்கள்
வாறே பொதுவாகு மன்றி னமலமே. (கக)

895. அமலம் பதிபசு பாசங்க ளாகம
மமலந் திரோதாயி யாகுமா னந்தமா
மமலஞ்சொல் லாணவ மாயை காமிய
மமலந் திருக்கூத்தங் காடு மிடந்தானே. (கஉ)

896. தானே தனக்குத் தலைவியு மாய்நிற்குந்
தானே தனக்குத் தனமலை யாய்நிற்குந்
தானே தனக்குத் தன்மய மாய்நிற்குந்
தானே தனக்குத் தலைவனு மாமே. (கங)

897. தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத்
தலைவனு மாய்நின்ற சற்பாத்தி ரத்தைத்
தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத்
தலைவனு மாய்நின்ற தாளிணை தானே. (கச)

898. இணையார் திருவடி யெட்டெழுத் தாகு
மிணையார் கழலிணை யீரைஞ்ச தாகு
மிணையார் கழலிணை யைம்பத் தொன்றாகு
மிணையார் கழலிணை யேழா யிரமே. (கரு)

---

894. மாறிலா = வேதத்தொடுமுரணாத; ஆகமம் = யோகநூல்; புன்னையும் = (புல் நையும்) பாபங்கள்கெடும்; மன்றின் அமலம்=சிற்சபையிலுள்ள நின்மல சிவம்.

895. திருக்கூத்தாடு மிடத்தில் ஆகமங்கூறிய பதிபசுபாசமெல்லா நிர்மலமேயா மென்பது கொள்க.

896. தலைவி=சத்தி; தனமலை=பெருஞ்செல்வம்; தன்மயம்=தற்பதப்பொருள்; தலைவன்=பதி.

897. சற்பாத்திரம்=சத்துப்பொருள்; தாதவிழ் ஞானத் தாளிணை யெனக்கூட்டி, மணம் பரவுகின்ற ஞானமயமான தாமரை போலும் பாதங்கள் என்று பொருள் கொள்க.

898. எட்டெழுத்து=அட்டாக்கர மந்திரம், அல்லது வரிவடிவில் எழுதப்படும் அ என்னு மெழுத்துமாம்; ஈரைந்து=சூக்கும தூல பஞ்சாக்கரங்கள்; ஏழாயிரம்—சப்தகோடி மந்திரங்கள்.

899. ஏழா யிரமா யிருபதாய் முப்பதா
யேழா யிரத்து மெழுகோடி தானாகி
யேழா யிரத்துயி ரெண்ணிலா மந்திர
மேழா யிரண்டா யிருக்கின்ற வாறே. (கசு)

900. இருக்கின்ற மந்திர மேழா யிரமா
மிருக்கின்ற மந்திர மித்திற மில்லை
யிருக்கின்ற மந்திரஞ் சிவன்றிரு மேனி
யிருக்கின்ற மந்திர மிவ்வண்ணந் தானே. (கள)

901. தானே தனக்குத் தகுநட்டந் தானாகுந்
தானே யகார வுகாரம தாய்நிற்குந்
தானே ரீங்காரத் தத்துவக் கூத்துக்குத்
தானே யுலகிற் றனிநடந் தானே. (கஅ)

902. நடமிரண் டொன்றே நளினம தாகு
நடமிரண் டொன்றே நமன்செயுங் கூத்து
நடமிரண் டொன்றே நகைசெயு மந்திர
நடஞ்சிவ லிங்க நலஞ்செம்பு பொன்னே. (கசு)

903. செம்புபொன் னாகுஞ் சிவாய நமவென்னிற்
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரஞ்
செம்புபொன் னாகும் ஸ்ரீயுங் கிரீயுமெனச்
செம்புபொன் னான திருவம் பலமே. (உ௦)

---

899. இருபதாய் முப்பதாய்=ஐம்பதாய்; உயிரெண்ணிலா மந்திரம்= சீவ சக்தியுள்ள அளவுபடாத மந்திரம்; ஏழு=வியாகிருதி மந்திரம் ஏழு; இரண்டு=அம்சமந்திரம் இரண்டு.

900. ஏழாயிரமா யிருக்கின்ற மந்திர மித்திறமில்லை=சப்தகோடி மஹா மந்திரங்களிலும் இந்த அஜபை போல்வது வேறில்லை.

901. ரீங்=மாயா பீஜமந்திரம்; தத்துவக்கூத்து = மாயையாலாம் பிரபஞ்சோற்பத்தி லயகாரண நடனம்.

902. நடமிரண்டு = அற்புதம் ஆனந்த மென்னு மிரு நடனங்கள்; நளினம்=இன்பம்; நடமிரண்டு=பிரளயம் சங்கார மென்னுந் தாண்டவங்கள்; நடமிரண்டு=பொது அனவரத மென்னு மிரு தாண்டவங்கள்; நகைசெயும்=(ஜீவத்துவ மொழித்துச் சிவத்துவம்) விளங்கச் செய்யும்; செம்பு பொன்னே=செம் பைப் பொன்னாக்குதல் போல்வதாம்.

903. செம்பு பொன்னாகும்=சீவன் சிவனும் (அன்றிச் செம்பைப் பொன்னாகச் செய்யும் பரிச வேதியுமாம்); சிற்பரம்=சத்தி சிவம்; ஸ்ரீயும் கிரீயும்=சத்தி பீஜங்களாகிய மந்திரங்கள்.

904. திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்
திருவம் பலமாக வீராறு கீறித்
திருவம் பலமாக விருபத்தஞ் சாக்கித்
திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே. (௨௧)

905. வாறே சிவாய நமச்சிவா யநம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே யருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே. (௨௨)

906. பொன்னன மந்திரம் புகலவு மொண்ணாது
பொன்னன மந்திரம் பொறிகிஞ்சு கத்தாகும்
பொன்னன மந்திரம் புகையுண்டு பூரிக்கிற்
பொன்னாகும் வல்லார்க் குடம்புபொற் பாதமே. ()

907. பொற்பாதங் காணலாம் புத்திர ருண்டாகும்
பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும்
பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும்
பொற்பாத நன்னடஞ் சிந்தனை சொல்லுமே. (௨௪)

908. சொல்லு மொருகூட்டிற் புக்குச் சுகிக்கலா
நல்ல மடவார் நயந்துட னேவருஞ்
சொல்லிலும் பாசச் சுடர்ப்பாம்பு நீங்கிடுஞ்
சொல்லுந் திருக்கூத்தின் சூக்குமந் தானே. (௨௫)

---

904. திருவம்பலமாக = சிற்சபை யுண்டாம்படி; ஈராறு கீறி = குறுக்கு ஆறு நீட்டத்து ஆறுமாகப் பன்னிரு வரை கீறி; இருபத்தஞ்சாக்கி = இருபத்தைந்து அறைகளாக்கி; திருவம்பலமாக = அதனைச் சிற்றம்பல சக்கரமாகக்கொண்டு (பஞ்சாக்கரங்களை மாறியிட்டு).

906. கிஞ்சுகம்=உவம ஆகுபெயராய் உதட்டைக் குறித்து நின்றது; புகை=சுவாசம்.

907. திருமேனியாயிடும்=சிவ சாரூபம் வரும், அல்லது சிவத்தின் மேனியாய்விடும்; நடனசிந்தனை = (பஞ்சாட்சர) நடன தியானத்தை; சொல்லுமே=(பரிபாகிகளுக்கு) உபதேசியுங்கள்.

908. கூட்டிற்புக்கு=பரகாயப் பிரவேசஞ் செய்து; சுடர்ப் பாம்பு நீங்கிடும் = குண்டலி சுழுமுனை வாயிலை விட்டுவிலகும்; சூக்குமம்=இரகசியம்.

909. சூக்கும மெண்ணா யிரஞ்செபித் தாலுமேற்
சூக்கும மான வழியிடைக் காணலாஞ்
சூக்கும மான வினையைக் கெடுக்கலாஞ்
சூக்கும மான சிவனதா னந்தமே. (௨௬)

910. ஆனந்த மொன்றென் றறைந்திட மானந்த
மானந்தம் ஆ-ஈ-ஊ ஏ-ஓமொன் றைந்திட
மானந்த மானந்த மஞ்சும் தாயிடு
மானந்தம் அம்-ஹ்ரீம்- அம்-க்ஷம்-ஆம்- ஆமே. ()

911. மேனி யிரண்டும் விளங்காமன் மேற்கொள்ள
மேனி யிரண்டுமிக் கார விகாரியா
மேனி யிரண்டும்ஊ ஆ-ஈ ஏ ஓ-என்று
மேனி யிரண்டும் ஈ-ஓ-ஊ ஆ-எ-கூத்ததே. (௨அ)

912. கூத்தே சிவாய நமமசி வாயிடுங்
கூத்தே-ஈ ஊ-ஆ- ஏ-ஓம்-சிவாய நமவாயிடுங்
கூத்தே -ஈ-ஊ-ஆ ஏ-ஓம்-சிவாய நமவாயிடுங் |மாறே
கூத்தே -இ-ஊ-ஆ- எ-ஓம்-நமசிவாய கோளொன்று

913- ஒன்றிரண் டாடவோ ரொன்று மூன்றட
வொன்றினின் மூன்றாட வோரேழ மொத்தாட
வொன்றி னலாடவோ ரொன்பது முடனாட
மன்றினி லாடினன் மாணிக்கக் கூத்தே. (௩0)

---

909. சூக்கும மெண்ணாயிரம்=மானசீகமாக எண்ணத்தக்க ஆயிரம் ஆவர்த்தி (தடவை); சூக்குமமான வினை = சூக்கும சரீரத்தைப் பற்றிநிற்கும் கன்மங்கள்; சூக்குமமானவழி=பிரமரந்திரவழி.

910. ஆனந்தமொன்றென்று=ஏகாரசமொன்றென்று; ஆ ஈ ஊ ஏ ஓ அம் ஹ்ரீம் அம் க்ஷம் ஆம் இவை பத்தும் சிதம்பர சக்கரத்திலிடவேண்டிய பீஜாட்சரங்கள்.

911. 912. இவ் விரண்டும் பஞ்சாக்கரங்களையும், பீஜாக்கரங்களையு மாறியிட்டு ஜபிக்கு முறை கூறின.

913. ஒன்று இரண்டு=முதலாவதும் இரண்டாவதுமாகிய பிருதிவி, அப்பு பூதங்கள்; ஒன்றினின் மூன்று=அக்கினி பூத வேறுபாடாகிய சூரியன், சந்திரன், அக்கினி; எழும் = ஏழுலகங்களும்; ஒன்பது=நவவடிவங்கள்; மாணிக்கக் கூத்து=அரிய கூத்து; அஜபை கூறப்புகுந்து பஞ்சாக்கரமும் சிதம்பர சக்கரமுங் கூறியது, அவை சூக்கும தூலங்களாமென்று விளக்கற்கு.

உ-வது திருவம்பலச் சக்கரம்.

914. இருந்தவிவ் வட்டங்க ளீராறி ரேகை
யிருந்த விரேகைமே லீரா றிருத்தி
யிருந்த மனைகளு மீராறு பத்தொன்
றிருந்த மனையொன்றி லெய்துவன் றானே. (க)

915. தானொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்
தானொன்று மந்நான்குந் தன்பே ரெழுத்தாகுந்
தானொன்று நாற்கோணந் தன்னைந் தெழுத்தாகுந்
தானொன்றி லேயொன்று மவ்வரன் றானே. (உ)

916. அரகர வென்ன வரியதொன் றில்லை
யரகர வென்ன வறிகிலர் மாந்த
ரரகர வென்ன வமரரு மாவ
ரரகர வென்ன வறும்பிறப் பன்றே. (ங)

917. எட்டு நிலையுள வெங்கோ னிருப்பிட
மொட்டி னிலொன்று மிருமூன்று மீரேழு
மொட்டிய விந்துவு நாதமு மோங்கிடப்
பட்டது மந்திரம் பான்மொழி பாலே. (ச)

918. மட்டவிழ் தாமரை மாதுநல் லாளுட
னொட்டி யிருந்த வுபாய மறிகிலர்
விட்ட வெழுத்தை விடாத வெழுத்துடன்
கட்டவல் லாருயிர் காக்கவல் லாரே. (ரு)

---

914. வட்டங்கள் = (இருபத்தைந்து) அறைகள்; ஈறுறிரேகை = முற்கூறிய பன்னிரண்டு வரைகள்; மேலீராறு இருத்தி = மேலும் ஈராறிட்டு; ஈராறு பத்தொன்று=(சூழ விருக்கும்) பன்னிரண்டும் பதினொன்றுமாகிய வீடுகளில்; ஒன்றில் = (இடையிலுள்ள) ஒரு அறையில்.

915. தன்னெழுத்து = சி; நான்கு=சிகாரமொழிந்த நாலு; நாற்கோணம்=நாற்றிசை.

917. எட்டு நிலை=(நடு வீட்டைச் சூழ விருக்கும்) எட்டு வீடு; ஒட்டினில்=(இந்த) அமைப்பில்; ஒன்று=(பிரபஞ்சமயமான) பிரணவம்; இருமூன்று=சடாட்சரம்; ஈரேழு = பதினாலு புவனங்கள்; பட்டது=உற்பத்தியாயிற்று; பான்மொழி=சத்தி.

918. ஒட்டியிருந்த உபாயம்=கூடியிருக்கும் வழி; விட்ட எழுத்து விடாத எழுத்து = பிரணவத்தில் நாதம் நீங்கிய வினைய வெழுத்துக்கள்.

919. ஆலய மாக வமர்ந்தபஞ் சாக்கர
மாலய மாக வமர்ந்தவித் தூலம்பே
ராலய மாக வருகின்ற சூக்கும
மாலய மாக வமர்ந்திருந் தானே. (௬)

920. இருந்தவிவ் வட்ட மிருமூன் றிரேகை
யிருந்த வதனு ளிரேகை யைந்தாக
விருந்த வறைக ளிருபத்தைந் தாக
விருந்த வறையொன்றி லெய்து மகாரமே. (௭)

921. மகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை
யொகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி
யகாரந் தலையா யிருகண் சிகாரமாய்
நகார வகாரநற் காலது நாடுமே. (அ)

922. நாடும் பிரணவ நடுவிரு பக்கமு
மாடு மவர்வா யமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநம சிவாய
வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே. (௯)

923. ஆயுஞ் சிவாய நமமசி வாயந
வாயு நமசிவா யயநம சிவாயந
வாயுமே வாயந மசியெனு மந்திர
மாயுஞ் சிகாரந்தொட் டந்தத் தடைவிலே. (௧0)

---

919. காரண சூக்கும தூல பஞ்சாட்சரங்களே இந்தச் சக்கரத்தில் ஆலயமா யிருக்க ஈச னெழுந்தருளி யிருந்தா னென்பது கருத்து.

920. இது 904-ம் மந்திரத்திற் கூறப்பட்டுள்ளது.

921. மகாரம்=நாதம்; சத்தி=சத்திபீஜம்; ஒகாரம் வளைத்திட்டு= மேலே ஓகாரத்தை வளையமாக இட்டு; உம் பிளந்து ஏற்றி= பிரணவத்தில் உம் என்பதைப் பிரித்திட்டு; அகாரந் தலை யாய் = எஞ்சிய அகாரம் சிரசாகவிட்டு ; கண்சிகாரமாய்= சிகாரங் கண்களாக; நகார வகார நற்காலது=நகார வகாரங் களைக் கால்களாகவிட்டு ; இது சிதம்பர சக்கர நடுவில் ஈசனைப் புருஷாகாரமாகக் காணுமுறை கூறியது.

922. பிரணவ நடு இரு பக்கமும்=பிரணவ நடுவில் இருபக்கத்தி லும்; அவர்=அந்த சத்தி சிவங்களின்; ஆடும்வாய்=பேசுவ தற் குரிய வாயாக; நடுவுள் = நடு வட்டத்தில்; முக நமசி வாய=நமசிவாய என்பதுமுகமாக; புறவட்டம்=மேல்வட்டம்.

923. இம் மந்திரம் சிகார முதலாக இட்டு அந்தம்வரை மாறியிடு முறை கூறியது.

924. அடைவினி லைம்பது மையைந் தறையி
னடையு மறையொன்றுக் கீரெழுத் தாக்கி
யடையு மகாரத்தி லந்தமாம் க்ஷவ்வு
மடைவி னெழுத்தைம்பத் தொன்று மமர்ந்ததே. ()

925. அமர்ந்த வரகர வாம்புற வட்ட
மமர்ந்த வரிகரி யாமத னுள்வட்ட
மமர்ந்த வசபை யாமத னுள்வட்ட
மமர்ந்த விரேகையு மாகின்ற சூலமே. (கஉ)

926. சூலத் தலையினிற் றோற்றிடுஞ் சத்தியுஞ்
சூலத் தலையினிற் சூழுமோங் காரத்தால்
சூலத் திடைவெளி தோற்றிடு மஞ்செழுத்
தாலப் பதிக்கு மடைவது வாமே. (கங)

927. அதுவா மகார விகார வுகாரம்
அதுவா மெகார மொகாரம தஞ்சா
மதுவாகுஞ் சக்கர வட்டமேல் வட்டம்
பொதுவா மிடைவெளி பொங்குநம் பேரே. (கச)

928. பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது
சோர்வுற்ற சக்கர வட்டத்துட் சந்தியி
னேர்பெற் றிருந்திட நின்றது சக்கரப்
பேர்பெற் றிருந்த வியல்பிது வாமே. (கரு)

---

924. க்ஷகாரம் நீங்கிய ஐம்பது அக்கரங்களையும் அறையொன்றுக்கு இவ்விரண்டாக விட்டுக்ஷகாரத்தைப் பிரணவ வட்டத் தமைந்த மகாரத்தோடுஞ் சேர்த்திடுக என்று முறை கூறியது.

925. புறவட்டம், அதனுள்வட்டம், அதனுள்வட்டம் ஆகிய மூன்றினும் முறையே அரகர அரிகரி அஜபா மந்திரங்களையிட்டும் ரேகை முனைகளில் சூலமிட்டும் சக்கரம் கீறுகவென்றது.

926. சூலத்தலை = சூலத்தின்முனை; சத்தி = சத்தி பீஜம்; சூலத்தைச்சூழ ஓங்கார மிட்டமைத்து, சூலரேகைகளுக்கு இடையிலே பஞ்சாக்கரங்களை யமைக்கவென்றது.

927. அப் பஞ்சாக்கரங்களாகிய அகர இகர உகர எகர ஒகரங்களை சக்கரவட்டம் அதன் மேல் வட்டங்களி னிடைவெளியின் முறையாக இடுக என்பதைக் கூறிற்று; நம்பேர்=நமசிவாய.

928. பேர்பெற்றது மூலமந்திரம் = பெயராகக் கூறப்பட்டதுவே மூல மந்திரமாம்.

929. இயலுமிம் மந்திர மெய்தும் வழியின்
செயலு மறியத் தெளிவிக்கு நாதன்
புயலும் புனலும் பொருந்தங்கி மண்வின்
முயலு மெழுத்துக்கு முன்னு விருந்ததே. (கசு)

930. ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினலு
மேறெட் டதின்மேலே விந்துவு நாதமுஞ்
சீறிட்டு நின்று சிவாய நமவென்னக்
கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப் போமே. (கஎ)

931. அண்ண லிருப்ப தவளக் கரத்துளே
பெண்ணி னல்லாளும் பிரானக் கரத்துளே
யெண்ணி யிருவ ரிசைந்தங் கிருந்திடப்
புண்ணிய வாளர் பொருளறி வார்களே. (கஅ)

932. அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்
திவ்விட்டுப் பார்க்கி லிலிங்கம தாய்நிற்கு
மவ்விட்டு மேலே வளியுறக் கண்டபின்
றொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே. (கக)

---

929. சிவசத்தி பீஜங்களே யன்றிப் பஞ்ச மஹா பூதங்களையும் குரு உபதேச முறைப்படி யிடவேண்டு மென்பது இம்மந்திரக் கருத்து.

930. ஆறு = வடமொழி உயிர் வருக்கத்தில் ஆறுவதாகிய ஊ; பதினலும்=பதினலாவதாகிய ஔ; எட்டு=அகரம்; விந்துவு நாதமும்=(இவற்றொடு) விந்து நாதங்களையும்; சீறிட்டு=உச்சரிக்கும்படி கூட்டியிட்டு; கூறிட்டு = பிளப்புண்டு; கூப்பிட்டு=கதறிக்கொண்டு.

931. அவளக்கரம் = சத்தியின் பீஜாக்கரம்; பிரானக்கரம் = சிவ பீஜாக்கரம்.

932. அகரத்தையும் அதன்மேல் அரவென்பதும் அதன்மேல் இகரமு மிடச் சிவலிங்க வடிவமாம் என்பது; மவ்விட்டு = மகரத்தை அவற்றின் முறையிட்டு உச்சரித்து; மேல்=கபால ஸ்தானம்; வளி = பிராணவாயு; தொ=தகர ஒகரம், இது தகராகாசத்தில் பிரணவ சொரூபனன சிவனிருக்கு மென்பதைக் குறித்தது.

933. அவ்வுண்டு சவ்வுண் டனைத்துமங் குள்ளது
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாரில்லை
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாளர்க்குச்
சவ்வுண்ட சத்தி சதாசிவன் றானே. (உ0)

934. அஞ்செழுத் தாலே யமர்ந்தன னந்தியு
மஞ்செழுத் தாலே யமர்ந்தபஞ் சாக்கர
மஞ்செழுத் தாகிய வக்க சக்கர
மஞ்செழுத் துள்ளே யமர்ந்திருந் தானே. (உக)

935. கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற்
கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினுர்
கூத்தனொ டொன்றிய கொள்கைய ராய்நிற்பர்
கூத்தனைக் காணுங் குறியது வாமே. (உஉ)

936. அத்திசைக் குண்ணின்ற வனலை யெழுப்பியே
யத்திசைக் குண்ணின்ற தவ்வெழுத் தோதினு
லத்திசைக் குண்ணின்ற வந்த மறையனை
யத்திசைக் குள்ளுற வாக்கினன் றானே. (உ௩)

937. தானே யளித்திடுந் தையலை நோக்கினுற்
றானே யளித்திட்டு மேலுற வைத்திடுந்
தானே யளித்த மகாரத்தை யோதிடத்
தானே யளித்ததோர் கல்லொளி யாகுமே. (உ௪)

---

933. அவ்வுண்டு சவ்வுண்டு=அம்சமந்திர மங்குள்ளது; கவ்வுண்டு=கலந்து; சவ்வுண்ட சத்தி=சவ்வு யென்னும் பீஜத்தமர்ந்த சத்தி.

935. குறி=அடையாளம் (மார்க்கம்); கூத்தனெழுத்து = பஞ்சாக்கரம்; முதலெழுத்து=சி, இதனொடு மகரமிட்டு உச்சரித்தல் கும்பக முறையாம்.

936. அத்திசை=முற்கூறியபடி உச்சரித்தலால் பிராணவாயு செல்லுந் திசை, அது மூலாதாரம்; அவ்வெழுத்து=ஓங்காரம்.

937. தையல்=குண்டலி; மகாரம்=நாதம்; கல்லொளி=வச்சிரமலையொளி, அல்லது மாணிக்கக்கற்போலுஞ் சிவம்.

938. கல்லொளி யேயென நின்ற வடதிசை
கல்லொளி யேயென நின்றன னிந்திரன்
கல்லொளி யேயென நின்ற சிகாரத்தைக்
கல்லொளி யேயெனக் காட்டினான் றானே. (உரு)

939. தானே யெழுகுணந் தன்சுட ராய்நிற்குந்
தானே யெழுகுணம் வேதமு மாய்நிற்குந்
தானே யெழுகுண மாவது மோதிடிற்
றானே யெழுந்த மறையவ னாமே. (உசா)

940. மறையவ னாக மதித்த பிறவி
மறையவ னாக மதித்திடக் காண்பர்
மறையவ னஞ்செழுத் துண்ணிற்கப் பெற்ற
மறையவ னஞ்செழுத் தாமது வாகுமே. (உஎ)

941. ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடு
மாகின்ற நாபியு ளங்கே மகாரமா
மாகின்ற சீயிரு தோள்வவ்வாய்க் கண்டபின்
னாகின்ற வச்சுடர் யவ்வியல் பாமே. (உஅ)

942. அவ்வியல் பாய விருமூன் றெழுத்தையுஞ்
செவ்வியல் பாகச் சிறந்தன னந்தியு
மொவ்வியல் பாக வொளியுற வோங்கிடிற்
பவ்வியல் பாகப் பரந்துநின் றானே. (உகூ)

---

938. கல் = கயிலைமலை; இந்திரன் = அரசன் (சிவபிரான்); கல்லொளி = வச்சிர மலைமே லொளி; கல்லொளியேயென = கல்லிலெழுதப்பட்ட தீபம்போல.

939. எழுகுணம் = அக்கர முண்டாதற் குரிய குணமுள்ள நாதம்; அந்த நாதமே வேதமும் சிவமுமாமென்பது கூறிற்று.

941. பாதமுமந்நவாய் = பாதமும் அந்த நகாரமாய்; நாபியுளங்கே மகாரமாம் = உந்தியினுள்ளிடத்திலே மகாரமாம்; சீ யிரு தோள்வவ்வாய் = இரண்டுதோள் சிகார வகாரமாக; அச்சுடர் யவ்வியல்பாமே = அந்த ஆன்மா யகாரத்தன்மையதாமென்க.

942. இருமூன்றெழுத்தையும் = பிரணவமும் பஞ்சாக்கரங்களையும்; ஒவ்வியல்பு = ஓங்காரத்தினியல்பு; பவ்வியல்பு = பா வடிவமான (வேதம்); முற்கூறியபடி யீசன் வேத வடிவனென்பதைக்கூறிற்று.

943. பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்
வரந்தரு மந்திரம் வாய்த்திட வாங்கித்
துரந்திடு மந்திரஞ் சூழ்பகை போக
வுரந்தரு மந்திர மோமென் றெழுப்பே. (௩௰)

944. ஓமென் றெழுப்பித்தன் னுத்தம நந்தியை
நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை
யாமென் றெழுப்பியவ் வாறறி வார்கண்
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே. (௩௧)

945. ஆகின்ற சக்கரத் துள்ளே யெழுத்தைந்தும்
பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கு
மாகின்ற வைம்பத் தொருவெழுத் துண்ணிற்கப்
பாகொன்றி நிற்கும் பராபரன் றானே. (௩௨)

946. பரமாய வஞ்செழுத் துண்ணடு வாக
பரமாய நவசிம பார்க்கின்ம வயநசி
பரமாய சியநம வாம்பரத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே. (௩௩)

947. நின்ற வெழுத்துக்கண் ணோர்தரு பூதமு
நின்ற வெழுத்துக்கண் ணோர்தரு வண்ணமு
நின்ற வெழுத்துக்கண் ணோர்தர நின்றிடு
மின்ற வெழுத்துள்ளு நின்றனன் றானே. (௩௪)

---

943. பரந்தது மந்திரம்=(இவ்வாறு) மந்திரங்கள் பரவின; சூழ்பகை= ஜனனமரணாதி துன்ப காரணங்கள்; ஓமென்றெழுப்ப = ஓமென் றுச்சரிக்க; எழுப்பே=எழுப்பவே யென்பதன் விகாரம்; அவ்வுண்டு சவ்வுண்டு என்றது முதல் இதுவரை மந்திரங்க டோன்றுமுறை கூறப்பட்டது.

944. ஓமென்றெழுப்பி=ஓமென்று நாதத்தை யெழச்செய்து; நடு எழுதீபத்தை = அநாகத சிவத்தை; நாம் ஆம் என்று எழுப்பி=நம் அம்மென்று மாறித் தொனியெழச் செய்து; அவ்வாறு அறிவார்கள்=சிவம் முற்கூறிய மந்திர சொரூப மாயிருத்தலை யறிபவர்கள்; மாமன்று=பெருமையுள்ள சிதம்பரம்.

945. இது 924-ம் மந்திரத்தில் குறிக்கப்பட்டது. அங்கே புறத்துப் பூசிக்கு முறையாம்; இங்கே அகத்துட் பூசிக்கு முறையாமென்றுகொள்க.

946. அஞ்செழுத்துண்ணடு = யகரம்; அதை முதலாகக்கொண்டு மாறியுச்சரிக்கு முறை கூறியது காண்க.

947. நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும் வண்ணமும் = அவ்வாறுநின்ற பஞ்சாக்கரங்களே பஞ்ச பூதங்களும் பஞ்சவண்ணங்களுமாய்ப் பொருந்தி நின்றன.

948. நின்றது சக்கர நீளும் புவியெலா
மன்றது வாய்நின்ற மாயநன் னாடனைக்
கன்றது வாகக் கரந்தன னந்தியுங்
குன்றிடை நின்றிடு கொள்கைய னாமே. (நடு)

949. கொண்ட விச்சக்கரத் துள்ளே குணம்பல
கொண்ட விச்சக்கரத் துள்ளே குறியைந்துங்
கொண்டவிச் சக்கரங் கூத்த னெழுத்தைந்துங்
கொண்டவிச் சக்கரத் துண்ணின்ற கூத்தே. (நசு)

950. வெளியி லிரேகையில் ரேகையி லத்தலை
சுளியி லுகாரமாஞ் சுற்றிய வன்னி
நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதந்
தெளியும் பிரகாரஞ் சிவமந் திரமே. (நஎ)

951. அகார வுகார சிகார நடுவாய்
வகார மோடாறும் வளியுடன் கூடிச்
சிகார முடனே சிவன்சிந்தை செய்ய
வொகார முதல்வ னுவந்துநின் றானே. (நஅ)

952. அற்ற விடத்தே யகாரம தாவது
வுற்ற விடத்தே யுறுபொருள் கண்டிடச்
செற்ற மறுத்த செழுஞ்சுடர் மெய்ப்பொருள்
குற்ற மறுத்தபொன் போலுங் குளிகையே. (நகூ)

---

948. சகலபுவன வடிவமான இச்சக்கரத்தை யாராதித்து நந்திதேவர் கைலையங்கிரிக்குக் காவற்றலைமை பூண்டாரென்றதைக் கூறிற்று.

949. குறியைந்து = சத்தியோஜாதம் வாமதேவம் அகோரம் தற்புருஷம் ஈசானியம் என்கிற பஞ்ச பிரம சொரூபத்தை; அன்றி பிரமனாதி ஐவருமெனினுமாம்.

950. சுளியில்=குற்றமற்ற; வன்னி=அக்கினி பீஜம். சிவமந்திரம்= பிரணவம்.

951. அகார உகார சிகார வகார மொடாறு மென்றது பிரணவ சகித பஞ்சாக்கரத்தை, பிரணவ சகிதமான பஞ்சாக்கரத்துக்குச் சாடாட்சரியென்று பெயர்; வளி=பிராணவாயு; ஒகார முதல்வன் = பிரணவமான மந்திரராஜன், அல்லது பிரணவத்துக்குரிய நாதனான சிவபிரான்.

952. அற்றவிடம்=பிரம ஸ்தானம்; அகாரம் ஒன்றே சிவனைத் தரிசிப்பிக்குங் குளிகைபோல்வதா மென்க.

953. அவ்வென்ற போதினி லுவ்வெழுத் தாலித்தா
லுவ்வென்ற முத்தி யுருகிக் கலந்திடு
மவ்வென்றெ னுள்ளே வழிபட்ட நந்தியை
யெவ்வணஞ் சொல்லுகே னெந்தை யியற்கையே. ()

954. நீரி லெழுத்திவ் வுலகா ரறிவது
வானி லெழுத்தொன்று கண்டறி வாரில்லை
யாரிவ் வெழுத்தை யறிவா ரவர்க
ளூனி லெழுத்தை யுணர்கிலர் தாமே. (சக)

955. காலை நடுவுறக் காயத்தி லக்கர
மாலை நடுவுற வைம்பது மாவன
மேலு நடுவுற வேதம் விளம்பிய
மூல நடுவுற முத்திதந் தானே. (சஉ)

956. நாவியின் கீழது நல்லவெழுத் தொன்று
பாவிக ளத்தின் பயனறி வாரில்லை
யோவிய ராலு மறியவொண் ணாதது
தேவியுந் தானுந் திகழ்ந்திருந் தானே. (சங)

957. அவ்வொடு சவ்வென் றரனுற்ற மந்திர
மவ்வொடு சவ்வென்ற தாரு மறிகில
ரவ்வொடு சவ்வென்ற தாரு மறிந்தபி
னவ்வொடு சவ்வு மனுதியு மாமே. (சச)

---

953. ஆலித்தால் = உச்சரித்தால்; உவ்வென்ற முத்தி=அங்குள்ள தென்று கூறப்பட்ட முத்தி.

954. நீரிலெழுத்து=நீரின்க ணெழுதப்படு மெழுத்துப்போல நிலையற்றது; வானில்=பரமாகாயத்தில்; ஊனிலெழுத்து=பிரமனு லெழுதப்படும் தலையெழுத்து.

955. கால்=பிராணவாயு; நடு=அநாகதம்; காயத்திலக்கரம்=பரமாகாயத்தில் அட்சர ரூபமாகத் தோன்றிய பிரணவம்; அக்கரமாலை = ஐம்பத்தோரட்சரங்களும் மாலைபோலிருக்க; வேதம் விளம்பியமூலம்=வேதங்களாற் சொல்லப்பட்ட மூலமந்திரமான பஞ்சாட்சரம்.

956. நாவியின்கீழது=மூலாதாரத்திலுள்ளது ; நல்ல எழுத்து= மாதுருகை யென்னும் பிரணவம்; ஓவியர்=பிரமனுதியர்.

958. மந்திர மொன்றுண் மலரா லுதிப்பது
வுந்தியி னுள்ளே யுதயம்பண் ணுநிற்குஞ்
சந்திசெய் யாநிற்பர் தாம தறிகிலர்
நந்தி தொழுதுபோ யார்த்தகன் றூர்களே. (சரு)

959. சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற
வாவிக்குண் மந்திர மாதார மாவண
பூவுக்குண் மந்திரம் போக்கற நோக்கிடி
லாவிக்குண் மந்திர மங்குச மாமே. (சகா)

960. அருவினி லம்பர மங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவா
யுருவிட வூறு முறுமந் திரமே. (சஎ)

961. விந்துவு நாதமு மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடி
லந்தர வானத் தமுதம்வந் தூறிடு
மங்குதி மந்திர மாகுதி யாகுமே. (சஅ)

962. ஆறெழுத் தோது மறிவா ரறிகிலா
ராறெழுத் தொன்றாக வோதி யுணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்
கோரெழுத் தாலே யுயிர்பெற லாமே. (சகூ)

---

958. உள் மலர் = இதயதாமரை, அநாகத ஸ்தான மென்பதைக் குறித்தது; உந்தி=மணிபூரகம்; சந்தி செய்யா நிற்பர்=அந்தணர்; ஆர்த்து=(வீணே) ஆரவாரித்து.

959. ஆவி=சீவன்; அங்குசம்=(மனமாகிய ஆனையையடக்கும்)அங்குசம் போல்வது.

960. அம்பரம் = கண்டஸ்தானம்; விந்து மருவிய = விந்துவொடு கூடிய; அகாரம்-தராசு முனையிலுள்ளது; சிகாரம்-உச்சியிலுள்ளது; உருவிட = அகார சிகாரங்களை யுருவிப் பரமாகாயத்திற்சேர; ஊறும்=தோன்றும்.

961. சந்திரன் = அன்னவடிவாய்ச் சிவசத்திகள் வசிக்கும் சந்திர மண்டலம்; அந்தரவானம் = பரமாகாயம்; அங்குதி மந்திரம்=அங்கே யுற்பத்தியாகும் மந்திரம்(பிரணவம்).

962. ஆறெழுத்து = முற்கூறப்பட்ட பிரணவ சகிதமான தூல பஞ்சாட்சரம்; ஆறெழுத்தொன்றாக=ஸ்தூலத்தைச் சூக்குமத்திலும், சூக்குமத்தைக் காரணத்திலு மொடுக்கி ஏகமாயிருக்கும்படி; வேறெழுத்து = வைகரி வடிவமாய் விகாரப்பட்ட தூலவெழுத்துக்கள்,

963. ஓது மெழுத்தோ டுயிர்க்கலை மூவஞ்சு
மாதி யெழுத்தவை யைம்பத்தோ டொன்றென்பர்
சோதி யெழுத்தி னிலையிரு மூன்றுள
நாத வெழுத்திட்டு நாடிக்கொள் வீரே. (ருo)

964. விந்துவி னுஞ்சுழி நாத மெழுந்திட
பந்தத் தலைவி பதினாறு கலையதாக்
கந்தர வாகரங் காலுடம் பாயினு
ளந்தமு மின்றியே யைம்பத்தொன் றுயதே. (ருக)

965. ஐம்ப தெழுத்தே யனைத்தும்வே தங்களு
மைம்ப தெழுத்தே யனைத்தாக மங்களு
மைம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபி
னைம்ப தெழுத்தும்போ யஞ்செழுத் தாமே. (ருஉ)

966. அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தன
னஞ்செழுத் தாற்பல யோனி படைத்தன
னஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கின
னஞ்செழுத் தாலே யமர்ந்துநின் றானே. (ருங)

967. வீழ்ந்தெழ லாம்விகிர் தன்றிரு நாமத்தைச்
சோர்ந்தொழி யாமற் றொடங்கு மொருவற்குச்
சார்ந்த வினைத்துயர் போகத் தலைவனும்
போந்திடு மென்னும் புரிசடை யோனே. (ருச)

963. ஓதுமெழுத்து = ஓங்காரம்; உயிர்க்கலை மூவஞ்சு = உயிரெழுத்துப் பதினைந்து; ஐம்பத்தோ டொன்றென்பர் = இவ்வுயிர் பதினாறும், மெய் முப்பத்தைந்துமாக ஐம்பத்தொன்று; சோதி=சிவம்; இருமூன்று நிலை=முற்கூறிய சடாட்சரம்.

964. விந்துவினின் றுற்பத்தியாம் ஐம்பத்தோரட்சரங்களும் தேவி வடிவ அவயவமாகத் தேவி மாதருகாவர்ண ரூபியாவா ளென்பதைக் கூறிற்று.

965. ஐம்பதெழுத்தும்போ யஞ்செழுத்தாமே = ஐம்பதெழுத்துக்களுள்ளும் ஐந்தெழுத்துக்களே பயனுடையனவா மென்பது.

966. பஞ்சாட்சரங்களே பிரபஞ்சமாய் விரிந்தன வென்கின்றது.

967. வீழ்ந்தெழலாம்=பந்தத் தழுந்தியும், பந்தங் கடக்கவுமாம்; தொடங்கும்=முயன்று ஜபிக்கின்ற; போந்திடும்=பிரத்தியட்சமாவான்.

968. உண்ணு மருந்து முலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்
விண்ணின் றமரர் விரும்பி யடிதொழ
வெண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே. (ருரு)

969. ஐந்தின் பெருமை யகலிட மாவது
வைந்தின் பெருமையே யாலய மாவது
வைந்தின் பெருமை யறவோன் வழக்கமு
மைந்தின் வகைசெயப் பாலனு மாமே. (ருசு)

970. வேரெழுத் தாய்விண்ணு யப்புற மாய்நிற்கு
நீரெழுத் தாய்நிலந் தாங்கியு மங்குள்ள
சீரெழுத் தாயங்கி யாயுயி ராமெழுத்
தோரெழுத் தீசனு மொண்சுட ராமே. (ருஎ)

971. நாலா மெழுத்தோசை ஞால முருவது
நாலா மெழுத்தினுண் ஞால மடங்கிற்று
நாலா மெழுத்தே நவிலவல் லார்கட்கு
நாலா மெழுத்தது நன்னெறி தானே. (ருஅ)

972. இயைந்தன ளேந்திழை யென்னுள்ள மேவி
நயந்தன ளங்கே நமசிவ வென்னும்
பயந்தன்னை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனன் மற்றும் பிதற்றறுத் தேனே. (ருகூ)

---

968. மருந்து=அமுதம்; காலம்=கால தத்துவம்.

969. ஐந்தின் வகைசெய=பஞ்சாட்சரங்களின் முறைப்படி ஜபிக்க.

970. வேரெழுத்து=மூலமானபிரணவம்; விண்ணு யென்றதனால் ஆகாயமாகக் கூறப்படும் பஞ்சபூதாக்கரங்களுங் கொள்ளக் கிடந்தமை காண்க; உயிராமெழுத்து = அன்னமந்திரம்; ஈசன்=சிவபிரான்; ஒண்சுடர்=துரியாதீதமான பரசிவம்.

971. நாலாமெழுத்து=பஞ்சாட்சரத்திலே சத்திரூபமாயுள்ள நாலாமெழுத்தான வகாரம்.

972. பயம்=பயன்; மற்றும் பிதற்று=பஞ்சாக்கரமின்றி வேறு கூறுதல்.

973. ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினை
யோமத்தி லேயுதம் பண்ணு மொருத்திதன்
ஞம நமசிவ வென்றிருப் பாருக்கு
நேமத் தலைவி நிலவி நின்றாளே. (சுO)

974. பட்டம் பரிசே பரமஞ் செழுத்ததி
னிட்ட மறிந்திட் டிரவு பகல்வர
நட்டம தாடு நடுவே நிலயங்கொண்
டட்டதே சப்பொரு ளாகிநின் றாளே. (சுக)

975. அகார முயிரே யுகாரம் பரமே
மகார மலமாய் வருமுப்பத் தாறிற்
சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமா
யகார முயிரென் றறையலு மாமே. (சுஉ)

976. நகார மகாரஞ் சிகார நடுவாய்
வகார மிரண்டும் வளியுடன் கூட்டி
யொகார முதற்கொண் டொருக்கா லுறைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே. (சுஙு)

---

973. ஆமம்=ஆமாசயம்; ஓமம்=ஓமஞ் செய்கிறதற்குரிய அக்கினித் தானம்; உதம்பண்ணும் = ஓமம் செய்யும் (ஜீரணிப்பிக்கும்) ஜாடராக்கினி ரூபியாயிருந்து ஜீரணிப்பித்துச் சீவர்களைக் காப்பவள் சத்தியாமென்பது கொள்க.

974. இட்டம்=பக்தி; வர = பக்தி செலுத்திவர; நட்டம் = பஞ்சகிருத்திய நடனம்; நிலயம்=இடம்; அட்டதேசு = அட்டதனுக்கள்.

975. உயிர்=ஆன்ம தத்துவம்; பரம்=சிவ தத்துவம்; மலம்=கலாதி மாயா தத்துவம்; முப்பத்தாறில் = முப்பத்தாறு தத்துவங்களில்; சிகார வகார யகார சொரூபமாய்ச் சிவத்துக்குச் சரீரமாகிய பஞ்சாக்கரமாயின.

976. வளி=பிராணவாயு (சீவான்மா வென்பது குறித்தது); ஒகார முதற்கொண்டு=பிரணவத்தை முதலிலிட்டு; மகாரமுதல்வன்=நாதசத்திக்குத் தலைவனான சிவபிரான்.

**977.** அஞ்சுள வானை யடவியுள் வாழ்வன
வஞ்சுக்கு மஞ்செழுத் தங்குச மாவன
வஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே
யஞ்சாதி யாதி யகம்புக லாமே. (௬௪)

**978.** ஐந்து கலையி லகராதி தன்னிலே
வந்த நகராதி மாற்றி மகராதி
நந்தியை மூலத்தே நாடிப் பரையொடுஞ்
சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே. (௬௫)

**979.** மருவுஞ் சிவாயமே மன்னு முயிரு
மருமந்த யோகமு ஞானமு மாகுந்
தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே
யருடங்கி யச்சிவ மாவது வீடே. (௬௬)

**980.** அஞ்சுக வஞ்செழுத் துண்மை யறிந்தபி
னெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சக மில்லை மனைக்கு மழிவில்லை
தஞ்ச மிதுவொன்று சாற்றுகின் றேனே. (௬௭)

**981.** சிவாயவொ டவ்வே தெளிந்துள்ளத் தோதச்
சிவாயவொ டவ்வே சிவனுரு வாகுஞ்
சிவாயவொ டவ்வுந் தெளியவல் லார்கள்
சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே. (௬௮)

---

977. அஞ்சுளவானை = ஐம்புலன்கள்; அடவி = தத்துவக்கூட்டங்களாலான சரீரம்; அஞ்சாதியாதியகம்=பஞ்சாக்கர முதல்வனாகிய சிவசத்திகளிருப்பிடம்.

978. ஐந்துகலை = நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தை சாந்தி சாந்தியாதீதம்; அகராதி = (இக்கலைகளாற் காரியப்பட்ட) அகர முதலிய வன்னங்களில்; நகராதிமாற்றி=நகரம் முதல் மாறியுச்சரிக்க, அல்லது சிவாகமங் கூறியபடி சிகாரம் முதலாக உச்சரிக்க; சடங்கு=கன்மங்கள்.

979. அருமந்த = (அருமருந்தன்ன) அரிய வமுதத்தையொத்த; தெருள்வந்த = தெளிவடைந்த; சீவனார் - பெருமைபற்றி ஒருமையிற் பன்மை வந்த பால் வழுவமைதி; வீடு = சீவத்தன்மையினின்றும் விடப்படுவதாகிய மோட்சம்.

980. அஞ்சுக = பஞ்சமலங்கள் நீங்க, அல்லது அம் சுகம் எனப் பிரித்து மிக வின்பந்தரு மெனினுமாம்.

981. சிவாயவொடவ்வே=பஞ்சாட்சரங்களோடு அன்ன மந்திரமும்.

982. சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
யொகார முடனே யொருகா லுரைக்கு
மகார முதல்வன் மதித்துநின் றானே. (௬௯)

983. நம்முத லோரைந்தி னுடுங் கருமங்க
ளம்முத லைந்தி லடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகுஞ் சதாசிவன் றானே. (எ0)

984. நவமுஞ் சிவமு முயிர்பர மாகுந்
தவமொன்றி லாதன தத்துவ மாகுஞ்
சிவமொன்றி யாய்பவ ராதர வாலச்
சிவமென்ப தானு மெனுந்தெளி வுற்றதே. (எக)

985. கூடிய வெட்டு மிரண்டுங் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துளே வைத்து
வாடிய வைவரு மங்குற வாவர்க
டேடி யதனைத் தெளிந்தறி யீரே. (எஉ)

986. எட்டு மிரண்டு மினிதறி கின்றில
ரெட்டு மிரண்டு மறியாத வேழைய
ரெட்டு மிரண்டு மிருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே. (எ௩)

---

982. 976-ம் மந்திரத்தில் பஞ்சாட்சரத்தைப் பிரணவ முதலிட்டு ஜபிப்பதாகிய வேதமுறை கூறினர்; இம்மந்திரத்தில் சிகார முதலிட்டு ஜபிப்பதாகிய ஆகமமுறை கூறினர்; அது சிவாய நம என்பதுவாம்.

983. நம் முதல் ஓர் ஐந்தில் = நகார முதலிய பஞ்சாக்கரங்களில்; அம்முதல் ஐந்தில்=அந்த முதல்வனது ஐந்து மூர்த்தங்களில்; வல்வினை=பெருஞ் செயல்கள்.

984. நவம் = நகாராதிய, அவை நமய என்பன; சிவம்=சிகாராதிய, அவை சிவ என்பன; உயிர் பரமாகும்=சீவனும் சிவமுமாம்.

985. எட்டு மிரண்டும்=அகாரமும் உகாரமும், அல்லது சூட்சுமசரீரம், சிவம் சீவன் எனினுமாம்; வாடியவைவர்=வாடுதலைச்செய்த ஐம்புலன்கள்.

986. இருமூன்று நான்கு என = பத்து என்று எண்டொகை கூற; பட்டது = அப்படிச் சொல்லப்பட்ட அதுவே; பாதம்=பகுதி (சித்தாந்த சன்மார்க்கத்துக் குரியதோ ரிலக்கணமாமென்க).

987. எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி
இட்ட நடுவு ளிறைவ னெழுத்தொன்றில்
வட்டத்தி லேயறை நாற்பத்தெட் டுமிட்டுச்
சிட்டஞ் செழுத்துஞ் செபிசீக் கிரமே. (எச)

988. தானவர் சட்டர் சதிர ரிருவர்க
ளானவிம் மூவரோ டாற்றவ ராதிக
ளேனைப் பதினைந்தும் விந்துவு நாதமுஞ்
சேனையுஞ் செய்சிவ சக்கரந் தானே. (எரு)

989. பட்டண மாதவ மாற்றும் பராபரம்
விட்டனர் தம்மை விகிர்தா நமவென்ப
ரெட்டனை யாயினு மீசன் றிறத்திற
மொட்டுவன் பேசுவ னொன்றறி யேனே. (எசு)

990. சிவமுதன் மூவரோ டைவர் சிறந்து
வவைமுத லாறிரண் டொன்றொடொன் றூன
வவைமுதல் விந்துவு நாதமு மோங்கச்
சவைமுதற் சங்கரன் றன்பெயர் தானே. (எஎ)

---

987. எட்டுவரையின் மேலெட்டு வரை கீறி = குறுக்காக எட்டுவரை கீறி, அதன்மேல், நீளத்தில் எட்டுவரை கீற, நாற்பத்தொன்பது அறைகளாம்; நடுவுள் = அவற்றுள் நடுவறையில்; வட்டத்தில் = அதைச் சூழ (உபதேச முறைப்படி பஞ்சாக்கரங்களை மேற்சூழ்ந்த அறைகளிலிட்டு).

988. தானவர் = க்ஷேத்திரபாலகர்; சட்டர் = சட்டநாதர் (வயிரவர்); சதிரர் = சபைபுரப்போர் (விநாயகர் சுப்பிரமணியர்); ஆற்றவர் = துவார பாலகர்; சேனை = சிவகணநாதர்கள்; சிவசக்கரம் = (இது) சிவசக்கரமாம்.

989. பட்டணம் = சிவசக்கரம்; எட்டனை = எள்ளளவு.

990. சிவன் முதன் மூவர் = சிவன் உமை முருகர்; ஐவர் = (அம்மூவரோடு விநாயகர் சண்டேசுவரர் கூட்ட) ஐவராம்; அவைமுத லாறிரண் டொன்றொடொன் றூன = அகரமுதலாகவுள்ள பதின்மூன்றுயிரும், அவை முதல் என்றதனாற் றழுவப்பட்ட மூன்றுமாகிய பதினாறுயிரும்; விந்துவு நாதமு மோங்க = விந்துவு நாதமும் விளங்க இடுக; சவை = திருவம்பல சக்கரம்; சங்கரன் பெயர் = சிவ, எனவே சிவ சக்கர மென்பதாயிற்று.

991. வித்தாஞ் சகமய மாக வரைகீறி
நத்தார் கலைபதி ஞாறுநாட் டிப்பின்
னுத்தாரம் பன்னிரண் டாதி கலைதொகும்
பத்தாம் பிரம சடங்குபார்த் தோதிடே. (எஅ)

992. கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை
கொண்டொழிந் தேனுடன் கூடிய காலத்துப்
பண்பழி யாத பதிவழி யேசென்று
நண்பழி யாமே நமவென லாமே. (எகூ)

993. புண்ணிய வானவர் பூமழை தூவிநின்
றெண்ணுவ ரண்ண லிணையடி மந்திர
நண்ணுவர் நண்ணி நமவென்னு நாமத்தைக்
கண்ணென வுன்னிக் கலந்துநின் றாரே. (அ0)

994. ஆறெழுத் தாலவ் வாறு சமயங்க
ளாறுக்கு நாலே யிருபத்து நாலென்பர்
சாவித் திரியிற் றலையெழுத் தொன்றுள
பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே. (அக)

995. எட்டினி லெட்டறை யிட்டோ ரறையிலே
கட்டிய வொன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்
சுட்டி யிவற்றைப் பிரணவஞ் சூழ்ந்திட்டு
மட்டு முயிர்கட்கு மாபதி யானுண்டே. (அ௨)

---

991. வித்து=விந்து; நத்தார்=விருப்பமுள்ள; கலைபதிஞாறு=சத்தி சொரூபமான சந்திரமண்டலம்; கலை தொகும் பத்தாம் பிரம சடங்கு=பிரமச்சடங்குக் குரிய பத்துக் கலையுள்ள அக்கினி.

992. கமல மலருள்=இதயதாமரையுள்; உடன்கூடிய காலத்து= அதனோடு கலந்திருந்த பொழுது; பண்பழியாத பதிவழி= குணங்கெடாத அந்தச் சக்கரத்தின் மூலமாய்; நமவென லாம்=சிவத்தைக் கண்டு நமஸ்கரிக்கலாம்.

993. கண்ணென வுன்னி = தங்களுடைய கண்களைப்போல அருமையாக மதித்து.

994. ஆறுக்கு நாலே=ஆறு அக்கரங்களும் ஒவ்வொன்று நாலுபாதமாக; இருபத்து நாலென்பர் சாவித்திரி=காயத்திரி இருபத்து நாலெழுத்துக்களா மென்பர்; தலையெழுத்தொன்று=பிரணவம்; பேதிக்க=அதைப் பிரித்தறிய.

995. 907-ம் மந்திரத்தில் குறிக்கப்பட்டது; மட்டும்=எல்லையில்லாமல் (யந்திர மிடுகின்ற).

996. நம்முத லவ்வொடு நாவின ராகியே
யம்முத லாகிய வெட்டிடை யுற்றிட்டு
வும்முத லாகவே யுண்பவ ருச்சிமேல்
னும்முத லாயவ னுற்றுநின் றானே. (அ௬)

997. நின்ற வரசம் பலகைமே னேராக
வொன்றிட மவ்விட்டு வோலையிற் சாதகந்
துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைந்
தன்ற வெதுப்பிடத் தம்பனங் காணுமே. (அ௪)

998. சரண விரளிப் பலகை யமன்றிசை
மரண மிட்டெட்டின் மகார வெழுத்திட்டு
வாரணமி லங்காயம் பூசி யடுப்பிடை
முரணிற் புதைத்திட மோகன மாகுமே. (அ௫)

999. ஆங்கு வட்டமேற்கி லையனார் கோட்டத்திற்
பாங்கு படவே பலாசப் பலகையிற்
காங்கரு மேட்டிற் கடுப்பூசி விந்துவிட்
டோங்காரம் வைத்திடு முச்சாட னத்துக்கே. (அ௬)

---

996. நம்முத லவ்வொடு = நகரமுதல் உயிரைக் குறிப்பிக்கு மகர மாகிய (யகரமிறுதியாக); எட்டிடை=இரண்டாவது பிரகார மாகிய எட்டறைகளில்; உம்முதலாக=அது முதற்கொண்டு; உம்முதலாயவன் = உகரத்துக்கு முதல்வனான சிவன்; அல்லது உச்சிமேலுள்ள அந்தமுதல்வன்.

997. ஒன்றிட=பொருந்த; மவ்விட்டு = மகரமுதலாக மாறியிட்டு, சாதகம் = சித்தி தரும்படியான ; அன்ற = வேகும்படி; தம்பனங்காணும்=ஸ்தம்பன கிரியையுண்டாம்.

998. சரணம் = சாதனம்; இரளி = கொன்றை; யமன்றிசை = தெற்கு; மரணமிட்டு = மாரகவச்கரமிட்டு; எட்டின் மகார வெழுத்திட்டு = எட்டறைகளிலும் மகரத்தை மாறியிட்டு; வாரணம்=மறைப்பு; ஐங்காயம்=சுக்கு கடுகு மிளகு உள்ளி பெருங்காயம்; முரணின்=மாறாக.

999. ஐயனார் கோட்டம்=அரிகர புத்திரனது ஸ்தானம்; பலாசம்= புரசு; காங்கருமேட்டில் = வெப்பமுள்ள கரிய தகட்டில்; கடு = விஷம்; உச்சாடனத்துக்கே = உச்சாடனஞ் செய்யு முறைக்கேயாம்.

1000. உச்சியம் போதி லொளிவன்னி மூலையிற்
பச்சோலை யிற்பஞ்ச காயத்தைப் பாரித்து
முச்சது ரத்தின் முதுகாட்டில் வைத்திடு
வைச்சபின் மேலோர் மாரணம் வேண்டிலே. (அஎ)

1001. ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி
யேய்ந்த வகார மூகார மெழுத்திட்டு
வாய்ந்ததோர் வில்லம் பலகை வசியத்துக்
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே. ()

1002. எண்ணுக் கருடனை யேட்டின் யகாரமிட்
டெண்ணப் பொன்னுளி லெழுவெள்ளி பூசிடா
வெண்ணுவற் பலகை யிட்டுமேற் கேநோக்கி
யெண்ணு வெழுத்தொடெண் ணாயிரம் வேண்டிலே.

---

௩-வது அருச்சனை.

1003. அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூகமு மாதவி மந்தாரந்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. (க)

1004. சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கர்ப்பூரங் காரகிற்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்
தாங்கே யணிந்துநீ ரர்ச்சியு மன்பொடே. (உ)

---

1000. பாரித்து=பூசி; முச்சதுரம்=முச்சந்தி; முதுகாடு=சுடுகாடு.

1001. வில்லம் = வில்வம்; ஏய்ந்த = பொருந்தியவைகள்; எண்பதி னாயிரம் வேண்டில்=எண்பதினாயிரம் ஜபிக்க.

1002. எண்ணு=சிந்தித்து ; யகாரமிட்டு=யகாரத்தை மாறியிட்டு; பொன்னுள்=வியாழக்கிழமை ; வெள்ளி=வெண்ணிறமான பற்பம் ; எண்ணு=மனதிற் சிந்தித்தன் மாத்திரையான ; "நின்ற வாசம் பலகை" என்ற மந்திர முதல் இம் மந்திர மிறுதியான ஆறு மந்திரங்களிலும் முறையே தம்பனமாதி ஷட் கருமங்கள் கூறினமை யறிக.

1003. மாதவி=குருக்கத்தி; வகுளம்=மகிழ்.

1004. சாங்கம்=முறைமை; கர்ப்பூரம்=பச்சைக்கர்ப்பூரம்.

1005. அன்புட னேநின் றமுதமு மேற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதொறுந்
துன்ப மகற்றித் தொழுவோர் நினையுங்கா
லின்ப முடனேவந் தெய்திடு முத்தியே. (௩)

1006. எய்தி வழிப்படி லெய்தா தனவில்லை
யெய்தி வழிப்படி லிந்திரன் செல்வமு
னெய்தி வழிப்படி லெண்சித்தி யுண்டாகு
மெய்தி வழிப்படி லெய்திடு முத்தியே. (௪)

1007. நண்ணும் பிறதார நீத்தா ரவித்தார்
மண்ணிய நைவேத்தி யமனுசந் தான
நண்ணிய பஞ்சாங்க நண்ணுஞ் செபமென்னு
மண்ணு மனபவ னத்தொடு வைகுமே. (௫)

1008. வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர்
வேண்டார்கள் கன்ம மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்ம மிகுதியோ ராய்ந்தன்பே. (௬)

1009. அறிவரு ஞானத் தெவரு மறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்க
ணெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கி
லெறிமணி யுள்ளே யிருக்கலு மாமே. (௭)

---

1005. அமுதம் = சோறு முதலியன; விளக்கு = ஒளிதரும் தீபம்; தீபம்=உபசாரதீபம்; துன்பமகற்றி = சிரமத்தைக் கருதா தொழித்து.

1007. அவித்தார் = இந்திரியங்களை யடக்கினவர்; மண்ணிய = நன்றாய்ப் பாகம்பண்ணப்பட்ட (அநுசந்தானம்); பஞ்சாங்கம்=பஞ்சாங்க நமஸ்காரம்; மனபவனத்தொடு = மனமும் வாயுவுங் கூடி யடங்கிநிற்க.

1008. கன்மமதி லிச்சையற்றபேர்=நிஷ்காமயோகிகள்.

1009. எறிமணி= ~~ஒலிவீசு~~ அடிக்கின்ற மணி அல்லது ஒலிக்கின்ற மணி.

1010. இருளும் வெளிபோ லிரண்டா மிதய
மருளறி யாமையு மன்னு மறிவு
மருளினை விட்டெறி யாமை மயங்கு
மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே. (அ)

1011. தானவ னாக வவனை தானாயிட
வான விரண்டி லறிவன் சிவமாகப்
போனவ னன்பிது நாலா மரபுறத்
தானவ னாகுமோ ராதித்த தேவரே. (கூ)

1012. ஓங்கார முந்திக்கீ ழுற்றிடு மெங்நாளு
நீங்கா வகாரமு நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் நகாரம் பயினெற்றி யுற்றிடும்
வீங்காகும் விந்துவு நாதமே லாகுமே. (க0)

1013. நமவது வாசன மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவற வாதி நாடுவ தன்றாஞ்
சிவமாகு மாமோனஞ் சேர்தன்மெய் வீடே. (கக)

1014. தெளிவரு நாளிற் சிவவமு தூறு
மொளிவரு நாளிலோ ரெட்டி லுகளு
மொளிவரு மப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரு நாதன் வெளியா யிருந்தே. (கஉ)

---

1010. இருளும் வெளிபோல் = இருளொடு கூடிய ஆகாயத்தைப் போல்; மருளறியாமை = மயக்கமுள்ள அஞ்ஞானம்; எறியாமை=ஒழியாமையால்.

1011. அறிவன் = கிஞ்சிஞ்ஞான ஆன்மா; இது நாலாம் (நாலாமிது) = நாலாம் பதவியாகிய இது (சாயுஜ்யம்).

1013. ஆசனம்=பீடம்(ஆவிடையார்); சித்திச் சிவம்=மோட்ச சித்தி தரும் சிவமாகிய பதியாம்; நமவற=பசுத்தன்மை யொழிய; நாடுவது=தேடியறிவது.

1014. சிவவமுது=சிவாம்பு, அல்லது சிவஞானம்; ஒளி = ஞானம்; எட்டிலுகளுமொளி = அகாரத்தில் விளங்குவதாம் ஆன்ம ஒளி; அப்பதத்து=அந்த அகார சப்தத்தில்.

சு-வது நவ குண்டம்.

1015. நவகுண்ட மானவை நானுரை செய்யி
னவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானு
நவகுண்டத் துள்ளெழு நன்மைக ளெல்லா
நவகுண்ட மானவை நானுரைப் பேனே. (க)

1016. உரைத்திடுங் குண்டத்தி னுள்ளேழுக் காலு
நகைத்தெழு நாற்கோண நன்மைக ளைந்து
பகைத்திடு முப்புரம் பாரங்கி யோடே
மிகைத்திடு கண்டங்கண் மேலறி யோமே. (உ)

1017. மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள்
காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர்
பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது
நானறிந் துள்ளெழ நாடிக்கொண் டேனே. (ங)

1018. கொண்டவிக் குண்டத்தி னுள்ளெழு சோதியா
யண்டங்க ளீரேழு மாக்கி யழிக்கலாம்
பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலா
மின்றுசொன் னூலா யெடுத்துரைத் தேனே. (ச)

1019. எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற்
பதித்த கலைகளும் பாலித்து நிற்குங்
கதித்தன னுள்ளெழக் கண்டுகொள் வார்க்கே
கொதித்தெழு வல்வினை கூடகி லாவே. (ரு)

---

1015. தீபம்=தீபம்போலும் பிராணாக்கினி, ஈசனெனினுமாம்.

1016. முக்காலும்=இறப்பு நிகழ்வு எதிர்பு என்னும் முப்பகுதியான கால தத்துவமும், அல்லது மூன்று வரைகளாயுள்ள முக்கோணமுமாம்; நன்மைகள் ஐந்து = பஞ்ச கிருத்தியங்கள்; முப்புரம்=முச்சரீரம்.

1017. மேல்=மேனிலை; கால்=பிராணவாயு; பார்=ஆதார ஸ்தானம்; அண்டம் = ஆகாயம்; சிறகற நின்றது = ஆதாரமின்றி நின்றது; நானறிந்து=நானறியும்படி.

1018. சோதியாய்=ஒளி சித்தித்தலால்; பண்டையுள்=பழமையாயுள்ள; பரந்த பரப்பு எல்லாம் = (பரப்பு எல்லாம் பரந்த) சர்வாண்டங்களிலும் பரவியுள்ள; நூல்=திருமந்திரம்.

1019. பதினாறு=பதினாறிதழ்; கலை=அட்சரம்.

1020. கூடமுக் கூடத்தி னுள்ளெழு குண்டத்து
ளாடிய வைந்து மகம்புறம் பாய்கிற்கும்
பாடிய பன்னீ ரிராசியு மங்கெழ
நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே. (சு)

1021. நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங்
கைச்சுட ராகுங் கருத்துற்ற கைகளிற்
பைச்சுடர் மேனி பதைப்புற் றிலிங்கமு
நற்சுட ராமெழு நல்லதென் றாளே. (எ)

1022. நல்லதென் றாளே நமக்குற்ற நாயகஞ்
சொல்லதென் றாளே சுடர்முடிப் பாதமா
மெல்லநின் றாளை வினவகில் லாதவர்
கல்லதன் றாளையுங் கற்றும்வின் னாளே. (அ)

1023. வின்னா விளம்பிறை மேவிய குண்டத்துச்
சொன்னா விரண்டுஞ் சுடர்நாகந் திக்கெங்கும்
பன்னாலு நாகம் பரந்த பரஞ்சுட
ரென்னாகத் துள்ளே யிடங்கொண்ட வாறே. (கூ)

1024. இடங்கொண்ட பாத மெழிற்சுட ரேக
நடங்கொண்ட பாதங்க ணன்னீ ரதற்குச்
சகங்கொண்ட கையிரண் டாறுந் தழைப்ப
முகங்கொண்ட செஞ்சுடர் முக்கண னார்க்கே. (க0)

---

1020. முக்கூடம் = முச்சந்தியுள்ள முக்கோணம்; ஆடிய ஐந்து = பஞ்ச கிருத்திய நடனம்; பன்னீரிராசி = பன்னிரு கலைகளுள்ள பிராணவாயு.

1021. சிரமுகவட்டமாம்=வட்டமான சிரசு முகம்;கருத்துற்றகை= தியானிப்பவரது கையில்.

1022. நாயகம்=தேவி; சொல்=உபதேசம்; சுடர்முடிப்பாதமாம்= சுடர்முடியும் பாதமுந்தோன்ற; கல்=கலை; தாள்=ஆதியான வேதம்; வின்னாளே=வேறானவளே.

1023. வின்னா=ஒளியையே நாவாகவுடைய; இரண்டும்=சத்தி சிவமிரண்டும்; நாகம் = மேரு.

1024. பாதமெழிற்சுடர்=பாதத்தினழகிய கிரணம்; நன்னீரதற்கு= அந்த அக்கினிக்கு நல்ல நீரின்றன்மையாம்; கை=கலை; செஞ்சுடர்=அழகிய மதி.

1025. முக்கணன் றானே முழுச்சுட ராயவ
னக்கணன் றானே யகிலமு முண்டவன்
றிக்கண னாகித் திகையெட்டுங் கண்டவ
னெக்கணன் றானுக்கு மெந்தை பிரானே. (கக)

1026. எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலாற்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலான்
மைந்த னிவனென்ன மாட்டிக் கொளீரே. (கஉ)

1027. மாட்டிய குண்டத்தி னுள்ளெழு வேதத்து
ளாட்டிய காலொன்று மிரண்டு மலர்ந்திடும்
வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ
நாட்டுஞ் சுடரிவர் நல்லொளி தானே. (கங)

1028. நல்லொளி யாக நடந்த வுலகெங்குங்
கல்லொளி யாகக் கலந்து ளிருந்திடுஞ்
சொல்லொளி யாகத் தொடர்ந்த வுயிர்க்கெலாங்
கல்லொளி கண்ணுளு மாகிநின் றானே. (கச)

1029. நின்ற விளக்குண்ட நிலையாறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்தெழு மாறுறுங்
கொண்டவித் தத்துவ முள்ளே கலந்தெழ
விண்ணுளு மென்ன வெடுக்கலு மாமே. (கரு)

---

1025. முழுச்சுடர்=பூரணவொளி; அகிலமுமுண்டவன் = உலகங்களைத் தன்னிடத் தொடுக்கிக்கொண்டவன்; திக்கணன் = திகாந்தம்வரை வியாபித்தவன்; திகை=திசை; எக்கணன்= எவ்விடத்தையு முருவமாகக்கொண்ட திருமால்.

1026. இருமூன்று வட்டமாய் = (அச்சுடரே) ஆறுவட்டங்களாய்; சண்முகம்=ஆறுமுகம் (பஞ்சமுகத்தோடு அதோமுகங்கூட முகமாறும்); கந்தன் சுவாமி=கந்தனாகிய தேவன்.

1027. மாட்டிய = பொருந்திய; ஆட்டிய = எடுத்துக்கூறப்பட்ட; காலொன்று மிரண்டும்=மூன்றுபாதங்களும் (பிரணவபாதங்கள்); கை இரண்டொன்று=சூரியன் சந்திரன் அக்கினியாகிய மண்டலமூன்று.

1028. கல்லொளி=நிலைபெற்ற ஒளி, அல்லது தன் அம்சமாகிய ஒளி.

1029. நிலையாறுகோணமாய் = (ஆறு நிலைக்கோணமாய்) மூலமுதலாய ஆறுநிலைகளும் ஆறுவகைக்கோணமாய்; வட்டம்=பிரணவம்; விண்ணுளுமென்ன=பரமாகாயத்தினுள்ளுமுள்ளதாம்படி.

1030. எடுக்கின்ற பாதங்கண் மூன்ற தெழுத்தைக்
கடுத்த முகமிரண் டாறுகண் ணாகப்
படித்தெண்ணு நாவெழு கொய்பொரு நாலு
மடுத்தெழு கண்ணு ணந்தமி லார்க்கே. (கசு)

1031. அந்தமில் லானுக் ககலிடந் தானில்லை
யந்தமில் லானை யளப்பவர் தாமில்லை
யந்தமில் லானுக் கடுத்தசொற் றானில்லை
யந்தமில் லானை யறிந்துகொள் பத்தே. (கள)

1032. பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு
மட்டிட்ட குண்ட மலர்ந்தெழு தாமரை
கட்டிட்டு நின்று கலந்தமெய் யாகமும்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே. (கஅ)

1033. பார்ப்பதி பாகன் பரந்தகை நாலஞ்சு
காற்பதி பத்து முகம்பத்துக் கண்களும்
பூப்பதி பாத மிரண்டு சுடர்முடி
நாற்பது சோத்திர நல்லிரு பத்தஞ்சே. (கசு)

1034. அஞ்சிட்ட கோல மளப்பன வையைந்து
மஞ்சிட்ட குண்ட மலர்ந்தங் கிருத்தலாற்
பஞ்சிட்ட சோதிப் பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதன் முத்தியே. (உ0)

---

1030. கடுத்த=ஒத்த; முகமிரண்டு ஆறுகண்ணாக=சத்தி சிவங்களின் முகமிரண்டும், கண்களாறுமாம்; படித்தெண்ணு=இப்படியாகக் கருதுக; கண்ணுணந்தம் = ஞானக் கண்ணலறியுமாநந்தம்.

1031. அகலிடம் = ஆதாரமாய்த் தங்குமிடம்; அடுத்தசொல் = குறித்துச்சொல்லுஞ்சொல்; பத்து=யகாரவடிவாம்.

1032. எட்டு = அகரம்; ஆறுநாலு = மூலம் சுவாதிஷ்டானங்கள்; தாமரை மலர்ந்தெழுகுண்டம் = (அவற்றின் மேலுள்ள) தாமரைமலர்போலும் விரிந்திருக்கின்ற அக்கினிமண்டலம்; பட்டிட்டு=பொருந்தி.

1033. இம்மந்திரம் பஞ்சமுக சதாசிவமும் சத்தியும் கூடிவிளங்குந் தன்மை கூறிற்று.

1034. அஞ்சிட்டகோலம் = ஐந்தென்று கூறப்பட்ட வன்னம்; ஐயைந்து - ஐந்துமைந்தும் உறழ்தலாலா மிருபத்தைந்து; மஞ்சு=அழகு; பஞ்சிட்ட = செம்பஞ்சுபோலும்; கொஞ்சிட்ட=அரியதான.

1035. முத்தநற் சோதி முழுச்சுட ராயவன்
கற்றற்று நின்றார் கருத்து ளிருந்திடும்
பற்றற நாடிப் பரந்தொளி யூடுபோய்ச்
செற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே. (உக)

1036. சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமு
மார்ந்த திசைகளு மங்கே யமர்ந்திடும்
பாய்ந்தவைம் பூதமும் பார்க்கின்ற வன்னியைக்
காய்ந்தவ ரென்றுங் கலந்தவர் தாமே. (உஉ)

1037. மெய்கண்ட மாம்விரி நீருல கேழை
யுய்கண்டஞ் செய்த வொருவனைச் சேருமின்
செய்கண்ட ஞானந் திருந்திய தேவர்கள்
பொய்கண்ட மில்லாப பொருள்கலந் தாரே. (உங)

1038. கலந்திரு பாத மிருகர மாகு
மலர்ந்திரு குண்ட மகாரத்தோர் மூக்கு
மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் ணெற்றி
யுணர்ந்திரு குஞ்சியங் குத்தம ஞர்க்கே. (உச)

1039. உத்தமன் சோதி யுளனொரு பாலனாய்
மத்திம னாகி மலர்ந்தங் கிருந்திடும்
பச்சிமத் திக்கும் பரந்து குழிந்தன
சத்தி மானாகத் தழைத்த கொடியே. (உரு)

---

1035. முத்த = அநாதிமலமுத்தனான, அல்லது முத்தினைப்போலும்; கற்றற்று நின்றார் = கலைகளைக் கற்று உலகங்கடந்துள்ளவர்; செற்று=சினமாதிய.

1036. பாய்ந்தவைம்பூதமும்=பரந்தபூதமைந்தும்; பார்க்கின்ற வன்னியை = எதிர்நோக்கி யிராநின்ற அக்கினி சொரூபனை; காய்ந்தவர்=உலகத்தைவெறுத்தவர்.

1037. உய்கண்டஞ்செய்த=உய்யுமாறு எல்லைவகுத்தருளிய; செய்கண்ட=செய்வழி யிஃதெனவுணர்ந்த; பொய்கண்டமில்லாப் பொருள்=அசத்தும் கண்டமுமில்லாப் பொருள்.

1038. இம்மந்திரம் அக்கினிகுண்டத்து ஈசன் திருவுருவைக் கருது முறைமை கூறிற்று.

1039. பாலனாய்=யௌவனமுள்ளவனாய்; மத்திமன்=நடு இடத்திலுள்ளவன்; சத்திமான்=சகளரூப சிவன்; கொடி=கொடிபோலுஞ் சத்தி.

**1040.** கொடியாறு சென்று குலாவிய குண்ட
மடியிரு கோணமா யந்தமு மொக்கும்
படியே முலகும் பரந்த சுடரை
மடியாது கண்டவர் மாதன மாமே. (௨௬)

**1041.** மாதன மாக வளர்கின்ற வன்னியைச்
சாதன மாகச் சமைந்த குருவென்றும்
போதன மாகப் பொருந்த வுலகாளும்
பாதன மாகப் பரிந்தது பார்த்தே. (௨௭)

**1042.** பார்த்திட மெங்கும் பரந்தெழு சோதியை
யாத்தம தாகவே யாய்ந்தறி வாரில்லை
காத்துட லுள்ளே கருதி யிருந்தவர்
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே. (௨௮)

**1043.** உகங்கண்ட வொன்பது குண்டமு மொக்க
வகங்கண்ட யோகியுண் ணாடி யெழுப்பும்
பயங்கண்டு கொண்டவிப் பாய்கரு வொப்பச்
சகங்கண்டு கொண்டது சாதன மாமே. (௨௯)

**1044.** சாதனை நாலு தழன்மூன்று வில்வயம்
வேதனை வட்டம் விளையாறு பூநிலை
போதனை போதஞ்சு பொற்கய வாரண
நாதனை நாடு நவகோடி தானே. (௩௦)

---

1040. கொடி=ரேகை; அடி=முதல்; அந்தமுமொக்கும்=முடிவு மொத்திருக்கும்; மடியாது=சோம்பலில்லாது.

1041. வன்னி=நவகுண்டாக்கினி; சாதனமாக=அப்பியாச முண்டாம்படி; போதனம் = அறிவித்தல்; பாதனம்=(உள்ளே) தாழநோக்குதல்.

1042. ஆத்தம்=உபகாரமுள்ளதாக ; காத்து = அவ்வக்கினியைக் காப்பாற்றி; மூத்து=முற்றி.

1043. உகங்கண்ட=பழமையான; பயங்கண்டுகொண்ட = அச்சமுள்ளதென்றுணர்ந்த; பாய்=நீங்குகிற.

1044. சாதனை=அப்பியாசம்; வில்வயம் = வில்லின்றன்மைபோன்றது; வேதன் = நாலு என்பதைக் குறித்தது; ஐ வட்டம்= அழகியவட்டம் ; ஆறுபூ=ஆறுபூமி (ஆதாரம்); போதஞ்சு= ஐந்துகாலம் (பஞ்ச பூதப் பகுப்பா லாயது) ; கயவாரணநாதன்=பெரிய யானைமுகமுள்ள விநாயகமூர்த்தி.

## ரு-வது சத்திபேதம்.

### (க) திரிபுரை சக்கரம்.

1045. மாமாயை மாயை வயிந்தவம் வைகரி
யோமாயை யுள்ளொளி யோராறு கோடியிற்
ருமான மந்திரஞ் சத்திதன் மூர்த்திக
ளாமா யலவாந் திரிபுரை யாங்கே. (க)

1046. திரிபுரை சுந்தரி யந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி யாம்பால வன்னத்தி
யிருள்புரை யீசி மனோன்மணி யென்ன
வருபல வாய்நிற்கு மாமாது தானே. (உ)

1047. தானுவ மைந்தவம் முப்புரந் தன்னிடை
தானான மூவுரு வோருத்த தன்மையள்
தானான பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி
தானான போகமு முத்தியு நல்குமே. (ங)

1048. நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்
பல்கும் பரவிந்து பாரண்ட மானவை
நல்கும் பரையபி ராமிய கோசரி
புல்கு மருளுமப் போதந்தந் தாளுமே. (ச)

---

1045. மாமாயை=காரணமாயை; வயிந்தவம்=விந்து; ஓமாயை=பிரணவம்; ஆறுகோடியிற்ருமான மந்திரம் = ஆறுகோடி வகையாயுள்ள மந்திரங்கள்; சத்திதன்மூர்த்திகளாம்=சத்தியின் (அக்கர) சொரூபங்களாம்.

1046. திரிபுரை - மூன்றுகண்டங்களாயுள்ள சக்கரத்துக்குரியவளாதலால், திரிபுரையென்று கூறப்படுவள்; சிந்துரப் பரிபுரை=செந்நிறமுள்ளபரிபுரை (ஜகத்தைப்பரித்து ஸ்திதித்தலால் பரிபுரை யெனப்படுவள்); இருள் புரை ஈசி=இருளை யொத்த கரிய நிறமுள்ள ஈசி.

1047. தானுவமைந்த=சுயம்புவாயுள்ள; முப்புரம்=திரிபுர யந்திரம்; மூவுரு=செம்மை கருமை வெண்மையான மூவண்ணமுள்ள மூன்றுரு; உத்தம்=கலத்தல்; மூவுருவோடுற்ற என்றும் பாடம்; செம்மை வெண்ணிறத்தாள் கல்விதானன போகம் = செந்நிறமுடையாள் போகத்தையும் வெண்ணிறமுடையாள் கல்வியையும் தரும்; முத்தி நல்கும் = (கருநிறமுடைய ஈசி) முத்தியருளுவள்.

1048. பல்கும்=பெருகுகின்ற; புல்குமருளுமப் போதந் தந்தாளும்=பொருந்திய வருளையும் ஞானத்தையுந் தந்து காக்கும்.

1049. தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்
லேரணி யங்குச பாச மெழின்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே. (ரு)

1050. குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்டவ ரத்தினின் மன்னுகோ லத்தள்
கண்டிகை யாரங் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றாளே. (சு)

1051. நின்ற திரிபுரை நீளும் புராதனி
குன்றலின் மோகினி மாதிருக் குஞ்சிகை
நன்றறி கண்டிகை நாற்காற் கரீடணி
துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே. (எ)

1052. சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள்
வத்துவ மாயாளு மாசத்தி மாபரை
யத்தகை யான மனோரணி தானுமாய்
வைத்தவக் கோல மதியவ ளாகுமே. (அ)

---

1049. காரணி = நீருண்டகரிய மேகம் போலு மழகிய ஈசி; சிலம்பணிதாளும், செம்பட்டணிந்த இடையும், கரும்புவில் மலர்வாளி அங்குசம் பாசம்புனைந்த சதுர்ப்புஜமும், வாரணி கொங்கையும், மாணிக்கக் குண்டலம் புனைந்த காதும், திருமுடி புனைந்த சிரசுமாகத் தியானிக்கு முறைகூறியது.

1050. இது சண்டிகாம்பிகை சொரூபதியானங் கூறியது. இச்சொரூபமே இலச்குமியென்னப்படுவது. கொண்டவரத்தின் = பத்தரால் கொள்ளப்பட்ட வரத்தினல்; தாங்கிநின்றாள் = காத்தளித்தாள்.

1051. புராதனி = பழமையானவள்; குன்றலில் மோகினி = இளமை குறையாத அழகினையுடையாள்; குன்றினின் மோகினி என்றும் பாடம்; கரீடணி = யானையை யுடையாள்; தாமரைச் சுத்தை = தாமரைமலரில் வசிக்கும் பரிசுத்தமானவள்.

1052. வம்பாரத்தனத்தி = கச்சினையும் மாலையையுமணிந்த தனத்தை யுடையாள்; சுகோதையள் = சுகோற்பத்திக்குக் காரணமாயுள்ளவள்; வத்துவம் = சத்தாமாத்திரையானவள்; மதியவள் ஞானசொரூபியான அவளே.

1053. அவளை யறியா வமரரு மில்லை
யவளன்றிச் செய்யு மருந்தவ மில்லை
யவளன்றி யையரா லாவதொன் றில்லை
யவளன்றி யூர்புகு மாறறி யேனே. (௯)

1054. அறிவார் பராசத்தி யானந்த மென்பா
ரறிவா ரறிவுரு வாமவ ளென்பா
ரறிவார் கரும மவளிச்சை யென்பா
ரறிவார் பரனு மவளிடந் தானே. (௧௦)

1055. தானெங் குளதங் குளதையன் மாதேவி
யூனெங் குளவங் குள்ளுயிர்க் காவலன்
வானெங் குளவங் குளேவந்தப் பாலதாங்
கோனெங்கு நின்ற குறிபல பாரே. (௧௧)

1056 பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந்
தராசத்தி யாய்நின்ற தன்மை யுணரா
வுராசத்தி யூழிக டோறு முடனே
புராசத்தி புண்ணிய மாகிய போகமே. (௧௨)

---

1053. ஐவரால்=பஞ்ச மூர்த்திகளால்; ஊர்=மோட்சம்.

1054. ஆனந்தம் = ஆனந்தமயம்; அறிவுருவு=சிற்சொரூபம்; சரு மம்=பஞ்ச கிருத்தியங்கள்; பரனுமவளிடந்தானே = சத்த ஞய சிவனு மவளிடமாகவே யுள்ளான் ; இது தேவி, சத்துச் சித்து ஆனந்தரூபமுடையாள் என்பதைக் கூறிற்று.

1055. தான்=சத்தி; ஊன்=(பூதகாரியமாகிய) சராசரம்; உயிர்க் காவலன்=சதாசிவன்; வான்=அவனிருக்குமாகாயம்; உள்ளே வந்து = சீவனுக்குள் அந்தரியாமியாயிருந்து; அப்பால தாம்கோன்=அவைகடந்து நின்ற இறைவன்.

1056. பராசத்திமாசத்தி-நிலைமொழிகள்வருமொழிகள் அடையடுத்து நின்றதொடராய்ப் பண்புத்தொகையாயிற்று ; தராசத்தி = (யாவையும்) தாங்குகின்றசத்தி; தன்மையுணராவுரு = இத் தன்மைத் தென்றறியப்படாத வடிவம்; ஆசத்தி=விருப்பத் தை (அளிப்பவள்); புராசத்தி=திரிபுரை.

1057. போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்
பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கு
மாகஞ்செய் தாங்கே யடியவர் நாடொறும்
பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. (௧௩)

1058. கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பியென் னுள்ளே நயந்துவைத் தேனே. (௧௪)

1059. வைத்த பொருளு மருவுயிர்ப் பன்மையும்
பத்து முகமும் பரையும் பராபரைச்
சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திடுஞ்
சத்தியும் வித்தைத் தலைவ வளாமே. (௧௫)

1060. தலைவி தடமுலை மேனின்ற தையற்
றொலைவிற் றவஞ்செயுந் தூய்நெறித் தோகை
கலைபல வென்றிடுங் கன்னிபென் னுள்ள
நிலைபெற விங்கே நிறைந்துநின் றாளே. (௧௬)

---

1057. போகஞ்செய் சத்தி = (விரும்பிய) போகமளிக்கும் சத்தி (சண்டிகாம்பிகை); பாகஞ்செய்து = கன்ம பரிபாகம் வருவித்து; ஆகம் = (அகம்) மனம்; பாகஞ்செய்ஞானம் = முதிர்ச்சிபெறுஞானம்.

1058. வானவர்நாடியை = தேவர்களால் கருதப்படுபவளை அல்லது தேவபோகங்களை யுடையாளை; சிறுமி = கௌரியென்னும் பொருள்பட நின்றது.

1059. வைத்தபொருள் = தாற்றுவித்துள்ள சராசரப் பொருள்கள்; உயிர்ப்பன்மை = ஜீவபேதங்கள்; பத்துமுகம் = பத்துத் திசை; சித்தக்கரணச் செயல்கள்=சித்தமாதிகரணச் செயல்கள்; வித்தைத் தலைவள் = பிரமவித்தியா நாயகி.

1060. தடமுலைமேனின்றதையல்=தளர்ந்து கீழ்நோக்காது மேலெழுந்துள்ள விசாலமான தனமுடையாள் (குன்றாவிளமையுடையாளென்பதைக் குறித்து நின்றது); கலைபல=அக்கரவிலக்கணமாதிகளும், வேதாதிபதினெண் வித்தைகளும்.

1061. நின்றவ ணேரிழை நீள்கலை யோடுற
யென்ற னகம்படிந் தேழுல குந்தொழ
மன்றது வொன்றி மனோன்மனி மங்கலி
யொன்றென்ன வொன்றிநின் றுத்தடைந் தாளே.

1062. ஒத்தடங் குங்கம லத்திடை யாயிழை
யத்தகை செய்கின்ற வாய பெரும்பதி
மத்தடை கின்ற மனோன்மனி மங்கலி
சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே. (கஅ)

1063. உணர்ந்துட னேநிற்கு முள்ளொளி யாகி
மணங்கமழ் பூங்குழன் மங்கையுந் தானும்
புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்
கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே. (கசு)

1064. அளியொத்த பெண்பிள்ளை யானந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்
தெளியுறு சித்துச் சிவகதி காட்டி
யொளியுற வைத்தென்னை யுய்யவுண் டாளே. (உ0)

1065. உண்டில்லை யென்ற துருச்செய நின்றது
வண்டில்லை மன்றினுண் மன்னி நிறைந்தது
கண்டிலர் காரண காரணி தன்னொடு
மண்டல மூன்றுற மன்னிநின் றாளே. (உக)

---

1061. நீள்கலையோடு=தனது பூரணகலைகளோடு; மன்று=சிற்சபை; ஒன்றென்ன வொன்றி=சிவத்தோடொன்றாகக்கலந்து.

1062. ஒத்தடங்கும்=(தன்னாயகனோடு) ஒத்துத்தங்கி யிருப்பள்; அத்தகைசெய்கின்ற=அப்படிப்பட்ட பெருமையைச் செய்கின்ற; மத்து=களிப்பு; சித்தடைக்கும்வழி = சித்துக்களை யளிக்குமார்க்கம்.

1063. உணர்ந்து = ஜீவசாட்சியாய்; உடனே = சிவத்தொடு கூடி; தானும்=சிவமும்; கணிந்து=(கணித்து) சிந்தித்து.

1064. அளியொத்த=(ஒத்த அளி)யாரிடத்தும் சமனான கருணை; புளியுறு புன்பழம் போல் = புளியம் பழமும் அதன் ஓடும் போல இப்ரபஞ்சப் பற்றற்றுள்ள; ஒளிஉற=ஞானமயமாக; என்னை யுய்யவுண்டான் = யானுய்யும்படி என்னைத் தனது வியாபகத்துள் நிலைபெறுவித் தருளினன்.

1065. உண்டில்லையென்ற துருச்செய நின்றது=உருவம் அருவமாகிய இருவடிவங்களையும் படைக்க நின்றது; காரணகாரணி= சர்வகாரணப் பொருள்களுக்குங் காரணமாயுள்ளவள்.

1066. நின்று ளவன்ற னுடலு முயிருமாய்ச்
சென்றாள் சிவகதி சேரும் பராசத்தி
யொன்றாக வென்னுட் புகுந்துணர் வாகியே
நின்றாள் பரஞ்சுட ரேடங்கை யாளே. (உஉ)

1067. ஏடங்கை நங்கை யிறையெங்கண் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும்வெண் டாமரை
பாடுந் திருமுறை பார்ப்பணி பாதங்கள்
சூடுமென் சென்னிவாய் தோத்திரஞ் சொல்லுமே.

1068. தோத்திரஞ் செய்து தொழுது துணையடி
வாய்த்திட வேத்தி வழிபடு மாறிரும்
பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும்
பார்த்திடும் பூம்பிள்ளை யாகுமா மாதிக்கே: (உச)

1069. ஆதி விதமிகுத் தண்டந்த மாறங்கை
நீதி மலரின்மே னேரிழை நாமத்தைப்
பாதியில் வைத்துப் பலகாற் பயில்வீரேற்
சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே. (உரு)

1070. மேதாதி யீரெட்டு மாகிய மெல்லியல்
வேதாதி நூலின் விளங்கும் பராபரை
யாதார மாகியே யாய்ந்த பரப்பின
ஞதாதி நாதத்து ணல்லரு ளாளே. (உசு)

---

1066. அவன் = பரமசிவன்; சென்றாள் = வியாபித்திருந்தாள்; ஒன்றாக=சிவமும் தானு மேகமாய்; ஏடங்கையாள்=புத்தகந்தரித்த அழகிய கையையுடையாள்.

1067. வேடம் = சொரூப நிறம்; பாடுந் திருமுறை = கானஞ் செய்தற்குரிய வேதபுத்தகம்.

1068. வழிபடுமாறிரும் = ஆராதனை செய்யும் நன்மார்க்கத்தில் நில்லுங்கள்; ஆர்த்திடும்=(வண்டுகள்) ஒலிக்கும்.

1069. ஆதிவிதம்=(சிவனது) சிருட்டித்தொழில்; நாமத்தை=திருநாமமாகியமந்திரத்தை;பாதி=நடுவில்;முக்காலமும்=மூன்று காலங்களினிகழும் வர்த்தமானங்களும்.

1070. மேதாதி யீரெட்டு=மேதைமுதலிய தத்துவங்கள் பதினாறு; நாதாதி நாதம்=நாதமும் அதீத நாதமும்.

1071. அருள்பெற்ற வர்சொல்ல வாரீர் மனிதர்
பொருள்பெற்ற சிந்தைப் புவனு பதியார்
மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவ னானே. (உஎ)

1072. ஆன வராக முகத்தி பதத்தின
ளீன வராக மிடிக்கு முசலத்தோ
டேனை யுழுபடை யேந்திய வெண்ணகை
யூன மறவுணர்ந் தாருளத் தோங்குமே. (உஅ)

1073. ஓங்காரி யென்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவ
ளாங்காரி யாகியே யைவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே. (உகூ)

1074. தானே தலைவி யெனநின்ற தற்பரை
தானே யுயிர்வித்தாய்த் தந்த பதினாலும்
வானோர் தலமு மனமுநற் புத்தியுந்
தானே சிவகதித் தன்மையு மாமே. (௩0)

---

1071. சொல்ல=உபதேசிக்க; பொருள்பெற்ற=இன்பப் பொருளை யடைந்த; புவனுபதியார்=பிரமனுதியர்; மருளுற்ற=(அவர்களைப் பரம்பொருளெனக் கருதும்) மயக்கம் பொருந்திய; அருமைப்பொருள்=சிறந்த முத்திச் செல்வம்.

1072. வராக முகத்தி=வாராகி; ஈனவர்=துஷ்டர்கள்; முசலம்= இருப்புலக்கை; உழுபடை = கலப்பை; ஊனம்=குற்றம்.

1073. ஓங்காரி = பிரணவ சொரூபி ; ஆங்காரி = ஆங்காரதத்துவ சொரூபி; ரீங்காரத்துள்ளே = மாயா பீஜத்துள்ளே; இது காளி சொரூபம்.

1074. உயிர்வித்தாய்=ஜீவர்களது தனுகரணுதிகட்குக் காரணமாய்; பதினாலு=பதினாலு புவனங்கள்; இம் மந்திரம் பந்தமோக்ஷ மிரண்டுந் தேவியே யென்று கூறிற்று.

(உ) வயிரவி மந்திரம்.

1075. பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி
தன்னி லகாரமு மாயையுங் கற்பித்துப்
பன்னிரண் டாதியோ டந்தப் பதினாலுஞ்
சொன்னிலை சோடச மந்தமென் றோதிடே. (க)

1076. அந்தப் பதினாலும் மதுவே வயிரவி
முந்து நடுவு முடிவு முதலாகச்
சிந்தைக் கலசத் தெழுகின்ற மாசத்தி
யந்தமு மாதியு மாகிநின் றாளே. (உ)

1077. ஆகின்ற மூவரு மங்கே யடங்குவர்
போகின்ற பூதம் பொருந்து புராதரர்
சார்கின்ற சார்வுழிச் சாரார் சதிர்பெறப்
போகுந் திரிபுரை புண்ணியத் தோரே. (ங)

1078. புண்ணிய நந்தி புனிதன் றிருவாகு
மெண்ணிய நாட்க ளிருபத்தேழ் சூழ்மதி
பண்ணிய வன்னி பகலோன் மதியீறு
திண்ணிய சிந்தைதன் றென்னனு மாமே. (ச)

1079. தென்னன் றிருநந்தி சேவகன் றன்னொடும்
பொன்னங் கிரியினிற் பூதலம் போற்றிடும்
பன்னும் பரிபிடி யந்தம் பகவனோ
டுன்னுந் திரிபுரை யோதிநின் றானுக்கே. (ரு)

---

1075. பன்னிரண்டாங்கலை = பன்னிரண்டு கலைவடிவான (பிராண வாயு வடிவான); தன்னில் = தன்னிடத்தி னின்றும்; பன்னிரண்டாதியோடந்தப் பதினாலும் = பன்னிரண்டு கலைகளின் முதலும் முடிவும் (மேற்சொன்ன) பதினாலு கலைகளும்; சொன்னிலை = சொல்லப்பட்ட இருப்பிடம்; சோடசம் = பதினாறு கலைகளுள்ள சந்திரமண்டலம்.

1076. சிந்தைக் கலசம் = இதயமாகிய கலசம்.

1077. மூவர் = பிரமனாதிமூவர்; போகின்ற பூதம் = அழிகின்ற பாராதிபூதம்; புராதரர்=அநாதியான ஆன்மாக்கள்; சதிர்= பெருமை; புண்ணியத்தோர்=புண்ணியான்மாக்கள்.

1078. திருவாகும்=ஐசுவரியமா யிருப்பன்; நாட்கள்=நட்சத்திரங்கள்; தென்னன்=பெருமைபொருந்திய சிவன்.

1079. சேவகன் = வீரத் தன்மையுள்ள சிவன்; பொன்னங்கிரியினில்=மேருமலையில்; பன்னும்=உபதேசிப்பன்; பரி=கருணையுள்ள; ஓதி நின்றானுக்கே=துதிபுரியுமவனுக்கே.

1080. ஓதிய நந்தி யுணருந் திருவரு
ணீதியில் வேத நெறிவந் துரைசெய்யும்
போத மிருபத் தெழுநாள் புணர்மதி
சோதி வயிரவி சூலம்வந் தாளுமே. (சு)

1081. சூலங் கபாலங்கை யேந்திய சூலிக்கு
நாலங் கரமுள நாகபா சாங்குச
மாலங் கயனறி யாத வடிவுக்கு
மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே. (எ)

1082. மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி
சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை
கல்லிய லொப்பது காணுந் திருமேனி
பல்லிய லாடையும் பன்மணித் தானே. (அ)

1083. பன்மணி சந்திர கோடி திருமுடி
சொன்மணி குண்டலக் காதி யுழைக்கண்ணி
நன்மணி சூரிய சோம நயனத்தள்
பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே. (கூ)

---

1080. நந்தியுணரும் = சிவனைச் சிந்தியுங்கள்; போதம்=ஞானம்; மதிசோதி = மதியின்கண் ஒளியாயுள்ளவன்; பரமசிவன் ஞானமருளுவர், தேவி காத்துரட்சிப்பள் என்பது கருத்து.

1081. நாலங்கரம்=அழகிய நாலு கைகளில்; நாகபாசம்=சர்ப்பவடிவமாயுள்ள கயிறு; மாலங்கய னறியாத வடிவு=சிவசொரூபம்; மேலங்கம் = மற்றொரு வடிவமாக (சிவனொடு அர்த்தநாரி வடிவமாதலே.)

1082. விடமி=கொடூர முடையவள்; கிஞ்சுகம்=முருக்கம்பூ; கல்லியல் = மாணிக்க மணிவண்ணம்; பல்லியலாடை=இடையுடை மேலாடை கச்சு முதலியன; பன்மணித்தான்=பல மணிகளா லமைந்தன.

1083. கோடி=முடியுறப்பு, ஈண்டுச் சென்னியணியைக் குறித்தது; பூரிக்கின்றாள்=களிக்கின்றாள்.

1084. பூரித்த பூவித மெட்டினுக் குள்ளேயோ
ராரியத் தாளுண்டங் கெண்மர் கன்னியர்
பாரித்த பெண்க ளறுபத்து நால்வருஞ்
சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண் டாரே. (க0)

1085. கண்ட சிலம்பு வளைசங்கு சக்கர
மெண்டிசை யோகி யிறைவி பராசத்தி
யண்டமொ டெண்டிசை தாங்கு மருட்செல்வி
புண்டரீ கத்தினுட் பூசனை யாளே. (கக)

1086. பூசனை கந்தம் புனைமலர் மாகோடி
யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும்
வாசமி லாத மணிமந் திரயோகந்
தேசந் திகழுந் திரிபுரை காணே. (க௨)

1087. காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனு மாயனுங்
காணுந் தலைவிநற் காரணி காணே. (க௩)

1088. காரண மந்திர மோதுங் கமலத்துப்
பூரண கும்ப விரேசம் பொருந்திய
நாரணி நந்தி நடுவங் குறைசெய்த
வாரண வேதநூ லந்தமு மாமே. (க௪)

---

1084. பூரித்த=செழித்த; ஆரியத்தாள்=பெருந்தன்மையுடையாள்; பாரித்த=பரவிய, அல்லது பணிவிடையில் தங்கியிருந்த; சாரித்து=வலஞ்சூழ்ந்து.

1085. கண்ட = ஆராய்ந்தெடுத்த; அருட்செல்வி = கருணையையே செல்வமாக வுடையவள்; புண்டரீகத்தினுள்=இதயதாமரை யுள்ளே (அநாகதத்துள்), அல்லது புண்டரீக வடிவமான யந்திரத்தில்.

1086. கோடி = புதிய வஸ்திரம்; யோசனை = காததூரம்; பஞ்சத் தொலி=ஐவகைவாத்திய கோஷம்; வாசமிலாத = சொல் லற் கரிய; தேசம்=அவ்விடம், அல்லது ஒளி.

1087. பூணும் பலபல பொன்போல=(பலபலபூணும் பொன்போல) பலவகையான அணிகளும் அவற்றுக்குக்காரணமான பொன் னையும்போல; காணும்=உண்டாக்குவள்; தலைவி=தேவி.

1088. காரண மந்திரம்=காரண பஞ்சாக்கரம்; தாமரை=அநாகதத் தில்; பூரணம் = பூரகம்; நடு=பொதுவாக; அந்தமுமாம் = முடிவான பொருளுமாவாள்.

1089. அந்த நடுவிர லாதி சிறுவிரல்
வந்த வழிமுறை மாறி யுரைசெய்யுஞ்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடு
நந்தி யிதனை நவமுரைத் தானே. (கரு)

1090. உரைத்த நவசத்தி யொன்று முடிய
நிரைத்த விராசி நெடுமுறை யெண்ணிப்
பிரைச்சத மெட்டுமுன் பேசிய நந்தி
நிரைத்து நியதி நியமஞ்செய் தானே. (கசு)

1091. தாமக் குழலி தயைக்கண்ணி யுண்ணின்ற
வேமத் திருளற வீசு மிளங்கொடி
யோமப் பெருஞ்சுட ருள்ளெழு நுண்புகை
மேவித் தமுதொடு மீண்டது காணே. (கஎ)

1092. காணு மிருதய மந்திர முங்கண்டு
பேணு நயவென்று பேசுந் தலைமேலே
வேணு நடுவு மிகநின்ற வாகுதி
பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே. (கஅ)

---

1089. நடுவிரலாதி = நடுவிரலை யாதியாகக்கொண்டு; சிறுவிரல்= சுண்டு விரல்; வந்தவழிமுறை = வந்த முறைப்படி; மாறி யுரை செய்யும்=மாற்றி மந்திரங்கூறி நியாசம் செய்யுங்கள்; எனைய மந்திரங்கட் கியற்று நியாசம் போலாது மத்திமை தொட்டு அநாமிகைகனிஷ்டிகை அங்குஷ்டம் தர்ஜனிவரை மந்திரங் கூறி நியாசம் செய்யப்படுதல் கொள்க.

1090. நவசத்தி = ஆருதாரத்தின்மேலாதார சக்திகள்; நியதி= விதி; நியமஞ்செய்தான்=ஏற்படுத்தினான்.

1091. எமம்=இரவு; வீசும் = ஒழிக்கின்ற; ஓமப் பெருஞ்சுடர்= ஓமஞ் செய்தற்குரிய பெருமையுள்ள நாபிகுண்டத்தக்கினி; நுண்புகை=நுண்ணிய புகைபோல்வதான (பிராணவாயு.)

1092. இருதய மந்திரம்=இதயாலயம், அல்லது இதயத்திற் செபிக்கும் மந்திரம்; தலை=முடிவு; வேணு = சுழுமுனை; நடு = எழுத்து; அந்தஞ்சிகை=முடிவிலே சிகையாகவிட்டு.

1093. சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதிப்
பகைநின்ற வங்கத்தைப் பாரென்று மாறித்
தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம்
வகைநின்ற யோனி வருத்தலு மாமே. (௧௯)

1094. வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்
பொருத்தி யணிவிரற் சுட்டிப் பிடித்து
நெறித்தொன்ற வைத்து நெடிது நடுவே
பெருத்த விரலிரண் டுட்புக்குப் பேசே. (௨0)

1095. பேசிய மந்திர மிகாரம் பிறித்துரை
கூச மிலாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராண னுபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன்கொண்டு கூவே. (௨௧)

1096. கூவிய சீவன் பிராணன் முதலாகப்
பாவியல் சவ்வுடன் பண்ணு மகாரத்தை
மேவிய மாயை விரிசங்கு முத்திரை
தேவி நடுவுட் டிகழ்ந்துநின் றூமே. (௨௨)

---

1093. சிகைநின்ற=முதன்மையா யிருந்த; கவசம்=கவசமந்திரம்; பகைநின்ற அங்கத்தைப் பாரென்று=பகையுள்ள சரீரத்தை பார்த்தருள் (காப்பாற்று) என்று; நேத்திர முத்திரை = சின்முத்திரை; வருத்தல்=வருந்தும்படி செய்தல்.

1094. வருத்த மிரண்டும்=சூலம் யோனியென்னு மிரண்டு முத்திரைகளும் கஷ்டப்பட்டுச் செய்யப் படுவனவாம்; மாறிப் பொருத்தி=ஒன்றின்மேலொன்றாகமாறி வைத்து; சுட்டிப் பிடித்து=சுட்டுதல்போல நீட்டிப் பிடித்து; நெறித்து= அநாமிகை தர்ஜனிகளை நீட்டிப் பிடித்து; பெருத்தவிரல்= நடுவிரல்; இது சூலமுத்திரை யோனிகளைக் கூறியது, அன்றிச் சூலமுத்திரையையே யெனினுமாம்.

1095. பேசியமந்திரம் = உச்சரிக்கப்பட்ட மந்திரம்; சகாரத்தை முன்கொண்டு=சகர மெய்யை முதலிட்டு;விந்து=விருத்தாகாரமான அட்சரம், அது மகரமெய்; என் கூறியவாறோவெனின், ச்+இ+ம் என்பன ஒருப்பட வமைத்து க்கூறின் (சிம்) என்பதாம். இம்மந்திரத்தைப் பிராணயாம சித்திக் காம்பொருட்டு ஜபிக்க வென்றதா மென்க.

1096. கூவிய=ஜபிக்கின்ற, அல்லது ஒலிக்கின்ற; சீவன்=ஆன்மா; சவ்வுடன் பண்ணும் மகாரம்=சகரத்தொடு கூடிய மகரம், அஃதாவது (சம்) என்பது; சங்குமுத்திரை=சங்கமுத்திரை (அதுவே தேவிக் கிருப்பிடமாம்).

1097. நின்ற வயிரவி நீலி நிசாசரி
யொன்று மிரண்டு மொருங்கிய வுள்ளத்துச்
சென்றரு ளாயகி தேவர்பி ரானுக்கே
நன்றருள் ஞாலத்து நாடிடுஞ் சாற்றியே. (உ௩)

1098. சாற்றிய வேதஞ் சராசர மைம்பூத
நாற்றிசை முக்கண்ணி நாடு மிருள்வெளி
தோற்று முயிர்ப்பன்மை சோதிப் பராபரை
யாற்றலொ டாய்நிற்கு மாதி முதல்வியே. (உ௪)

1099. ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
யோதி யுணரி லுடலுயி ரீசனும்
பேதை யுலகிற் பிறவிக ளாசமா
மோத வுலவாத கோலமென் றருகுமே. (உ௫)

1100. கோலக் குழலி குலாய புருவத்த
ணீலக் குவளை மலரன்ன கண்ணினு
ளாலிக்கு மின்னமு தானந்த சுந்தரி
மேலிச் சிவத்தை வெளிப்படுத் தாளே. (உ௬)

1101. வெளிப்படு வித்து விளைவறி வித்துத்
தெளிப்படு வித்தென் சிந்தையி னுள்ளே
களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதியை
யொளிப்படு வித்தென்னை யுய்யக்கொண் டாளே. ()

---

1097. நிசாசரி—இருளிற் சரிப்பவள், சருவசங்கார காலத்து நிலை பெற்ற விருளிற் சரிப்பவ ளாதலால் அப்பெயரெய்தியது; ஒன்று மிரண்டும்—முக்குணம், அல்லது முக்குற்றம;தேவர் பிரானுக்கே நன்றருள்—தேவர் தலைவனாகிய சிவபிரானுக்கே நல்ல அருட்சத்தி.

1098. இம்மந்திரம் எல்லாம் சத்தி சொரூபமே யென்றது.

1099. கன்னித்துறை—சத்திமார்க்கம், அல்லது வயிரவி சக்கரம்; உடல் உயிர் ஈசன்—ஜக ஜீவ பரம்; உலவாதகோலம்—அழி வற்ற சரீரம்.

1100. ஆலிக்கும்—மகிழ்ச்சி தருகின்ற;சிவத்தை வெளிப்படுத்தாள்— உருவமற்ற சிவத்துக்கு உருவமாய் நின்று விளக்கினாள், அல்லது சிவ சொரூபத்தை யுபதேசித்தாள்.

1101. விளைவு—பயன்; களிப்படுவித்து = ஆனந்த முண்டாய்படி செய்து; ஒளிப்படுவித்து—பிரகாசிப்பித்து.

1102. கொண்டனள் கோலங் கோடி யனேகங்கள்
கண்டன வெண்ணெண் கலையின்கண் மாலைகள்
விண்டனண் மேலை விரிகதிர் மூன்றையுந்
தண்டலை மேனின்ற தையனல் லாளே. (உ௮)

1103. தையனல் லாளைத் தலத்திற் றலைவியை
மையலை நோக்கு மனோன் மணி மங்கையைப்
பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்
வெய்ய பவமினி மேவகி லாவே. (உ௯)

1104. வேயன தோளி விரையுறு மென்மல
ரேய குழலி யிளம்பிறை யேந்திழை
தூய சடைமுடிச் சூலினி சுந்தரி
யேயென துள்ளத் தினிதிருந் தாளே. (௩0)

1105. இனியதென் மூலை யிருக்குங் குமரி
தனியொரு நாயகி தானே தலைவி
தனிப்படி வித்தனள் சார்வு படுத்து
நனிப்படி வித்துள்ள நாடிநின் றாளே. (௩௧)

1106. நாடிய கண்மூன்று நடுவெழு ஞானத்துக்
கூடி யிருந்த குமரி குலக்கன்னி
யாடகச் சீரடி யம்பொற் சிலம்பொலி
யூடக மேவி யுறங்குகின் றாளே. (௩௨)

---

1102. கலையின்கண்மாலைகள்=கலைகளினால் விரிக்கப்பட்ட சித்திக் கூட்டங்கள்; தண்டலை = அநேக விதமொடுகூடிய உச்சித் தாமரை.

1103. தலத்திற்றலைவி=உலக நாயகி; மையலை நோக்கும்=மயக்கத்தை யொழியும்படி பார்க்கின்ற; மனோன்மணி = உன்மனு தத்துவ நாயகி; பவம்-மரணத்துக்கு முபலக்கணம்.

1105. தென்மூலை யிருக்கும்=தென்கீழ்த்திசையில் அக்கினி வடிவமா யுள்ளவள்; ஒரு நாயகி=ஏகமா யிருக்கின்ற இறைவி; தனிப்படி வித்தனள்=தத்துவக்கூட்டங்களி னின்று வேறு படுத்தினள்; சார்வுபடுத்து=(சிவத்தொடு) கூட்டி; நனிப்படி வித்து=மிக மேன்மையை யுண்டாக்கி.

1106. கண்மூன்று நடுவெழு ஞானத்து = மூன்று கண்களில் நடுவுள்ளதான நெற்றிக் கண்ணி லுண்டாகும் ஞானத்தொடு; சிலம்பொலி யூடகமேவி=சிலம்பொலியில் லயித்திருக்கும் மனத்தில்.

1107. உறங்கு மளவின் மனோன்மணி வந்து
கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப்
பிறங்கொளித் தம்பலம் வாயி லுமிழ்ந்திட்
டுறங்கலை யாவென் றுபாயஞ்செய் தாளே. (௩௩)

1108. உபாய மளிக்கு மொருத்தி யென்னுள்ளத்
தபாய மறக்கெடுத் தன்பு விளைத்துச்
சுவாவை விளக்குஞ் சுழியகத் துள்ளே
யவாவை யடக்கிவைத் தஞ்சலென் றாளே. (௩௪)

1109. அஞ்சொன் மொழியா ளருந்தவப் பெண்பிள்ளை
செஞ்சொன் மடமொழி சீருடைச் சேயிழை
தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்
கிஞ்சொ லளிக்கு மிறைவியென் றாரே. (௩௫)

1110. ஆருயி ராயு மருந்தவப் பெண்பிள்ளை
காரியல் கோதையள் காரணி நாரணி
யூரு முயிரு முலகு மொடுக்கிடுங்
கோரியென் னுள்ளங் குலாவிநின் றாளே. (௩௬)

1111. குலாவிய கோலக் குமரியென் னுள்ள
நிலாவி யிருந்து நெடுநா ளணைந்து
முலாவி யிருந்துணர்ந் துச்சியி னுள்ளே
கலாவி யிருந்த கலைத்தலை யாளே. (௩௭)

---

1107. கறங்கு = ஒலிக்கின்ற; தம்பலம் = தாம்பூலநீர்; உறங்கல் = தூங்கற்க.

1108. அபாயம் = ஜனனமரணாதிகள்; சுவா = நாய், இங்கே மனதுக்கு உவம ஆகுபெயர்; விளக்குஞ் சுழியகம் = ஜாக்கிர ஸ்தான மாகிய ஆக்கிஞ சக்கரம்.

1110. ஆருயிராயும் = ஜீவவர்க்கங்களை யுணர்ந்திருக்கின்ற; காரியல் = கருமையுள்ள; கோரி = கோர ரூபமுள்ளாள்.

1111. உணர்ந்து = பரிபாக முணர்ந்து; கலாவி = கலந்து; கலைத் தலையாள் = இளம்பிறை சூடிய சென்னியுடையாள்; அல்லது கலைகளுக்குத் தலைவி யெனினுமாம்.

1112. கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கண்ணுண்
முலைத்தலை மங்கை முயங்கி யிருக்குஞ்
சிலைத்தலை யாய தெரிவினை நோக்கி
யலைத்தபூங் கொம்பின ளங்கிருந் தாளே. (௩௮)

1113. இருந்தன ளேந்திழை யென்னுள்ள மேவிப்
பொருந்திரு நால்விரல் புக்கனல் புல்கித்
திருந்திய தாணுவிற் சேர்ந்துட னின்றி
யருந்தவ மெய்தின ளாதியி னாளே. (௩௯)

1114. ஆதிய னாதிய காரண காரணி
சோதிய சோதி சுகபர சுந்தரி
மாது சமாதி மனோன்மணி மங்கலி
யோதியென் னுள்ளத் துடனியைந் தாளே. (௪0)

1115. இயைந்தன ளேந்திழை யென்னுள மேவி
நயந்தன ளங்கே நமசிவ வென்னு
மயன்றனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனண் மற்றும் பிதற்றறுத் தாளே. (௪௧)

1116. பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்
முயற்றியின் முத்தி யருளு முதல்வி
கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்
முகத்தரு ணோக்கமு முன்னுள்ள தாமே. (௪௨)

1117. உள்ள திதயத்து நெஞ்சத் தொருமூன்றுட்
பிள்ளைத் தடமுளே பேசப் பிறந்தது
வள்ளத் திருவினை வயிற்றினுண் மாமாயைக்
கள்ள வொளியின் கருத்தாகுங் கன்னியே. (௪௩)

---

1112. கண்ணுள்=ஜீவர்களுக்குக் கண்போலுஞ் சிவத்துள்; சிலைத்தலை=மேருவினுச்சி; தெரிவினை=அறியப்படுஞ் சிவம்.

1113. நால்விரல்=நால்விர லளவுள்ள பிராணனொடு.

1114. அகாரணகாரணி=தனக்கோர் காரணமில்லாதவளும், உலக காரண மானவளும்.

1115. அயன்=வேதம், பயனென்றும் பாடம்; ஒரும்பதம்=உணரத் தக்க பரிபாகம்.

1116. முயற்றி=முயற்சி; கம்பலை = நாதவடிவான ஒலி; முன்னுள்ளது=அநாதியாகவே யுள்ளது.

1117. மூன்று=மூந்நாடி; பிள்ளைத்தடம் = சுழுமுனை; வள்ளத் திரு = வளமையுள்ள ஞானச்செல்வம்; மாமாயை = சுத்த மாயா சொரூபமான பிரணவம்.

1118. கன்னியுங் கன்னி யழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றன ளேமொழி
பன்னிய நன்னூற் பகைவரு மங்குள
ரென்ன விம்மாயை யிருளது தானே. (சச)

1119. இருளது சத்தி யொளியதெம் மண்ணல்
பொருளது புண்ணியர் போகத்து ளின்பந்
தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
யருளது செய்யுமெம் மாதிப் பிரானே. (சரு)

1120. ஆதி யனாதியு மாய பராசத்தி
பாதி பராபரை மேலுறை பைந்தொடி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
யோதுமென் னுள்ளத் துடன்முகிழ்த் தாளே. (சசா)

1121. ஓதிய வண்ணங் கலையி னுயர்கலை
யாதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமுந் தத்துவ மாய்நிற்ப
ளாதியென் றோதின ளாவின் கிழத்தியே. (சஎ)

1122. ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடுந்
தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. (சஅ)

1123. வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்
தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்ப
ளெனையடி மைகொண்ட வேந்திழை யீசன்
கணவனைக் காணவ னாதியு மாமே. (சகூ)

---

1118. ஐவரை=பிரமனாதி பஞ்சமூர்த்திகளை; நன்னூல் = கலை; பகைவர் = காமாதிகள்; இருள்=அவித்தை.

1119. சத்தி=மாயாசத்தி; போகம்=சீவ பர ஐக்கியம்.

1120. பாதி=பரசிவனது அர்த்தசரீரம்;மேல்=துவாதசாந்தத்தலம்; முகிழ்த்தாள்=கலந்தாள்.

1122. ஆவின்கிழத்தி=உயிர்களுக்குத்தலைவி; நாவின்கிழத்தி=வாகீசுவரி; தேவின்கிழத்தி=சதாசிவ பத்தினி.

1123 கணவனைக்காண வனாதியுமாமே = தனது கணவனாகிய சிவனைத் தோற்றுவித்தலால் அநாதியுமாவாள்.

1124. ஆதி யனாதி யகாரண காரணி
வேதம தாய்ந்தனள் வேதியர்க் காய்நின்ற
சோதித் தனிச்சுட ருருவமாய் நிற்கும்
பாதி பராபரை பன்னிரண் டாதியே. (௫)

---

(௩) பூரணசத்தி.

1125. அளந்தே னகலிடத் தந்தமு மாதியு
மளந்தே னகலிடத் தாதிப் பிரானை
யளந்தே னகலிடத் தாணொடு பெண்ணு
மளந்தே னவளரு ளாய்ந்துணர்ந் தேனே. (௧)

1126. உணர்ந்தில ரீசனை யூழிசெய் சத்தி
புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்
கணங்களைத் தன்னருட் செய்கின்ற கன்னி
குணர்ந்த வழிகொண்டு கும்பக மாகுமே. (௨)

1127. கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும்
வம்பிற் றிகழு மணிமுடி வண்ணனு
மின்பக் கலவி யினிதுறை தையலு
அன்பிற் கலவியு ளாயொழிந் தாரே. (௩)

1128. இன்பக் கலவியி லிட்டெழு கின்றதோ
ரன்பிற் புகவல்ல னாமெங்க ளப்பனுந்
துன்பக் குழம்பிற் றுயருறும் பாசத்து
ளென்பிற் பராசத்தி யென்னம்மை தானே. (௪)

---

1124. பன்னிரண்டாதி = பன்னிரண்டு கலையுள்ள பிரானுக்குத் தலைவி; அல்லது பன்னிருதானத் தலைவி யெனினுமாம்.

1125. அந்தமுமாதியும்=லயமும் தோற்றமும்; ஆணொடு பெண்ணும்=ஆண் பெண்களி னியல்பும்; அருள்=சிவசத்தி.

1126. ஊழி = விதி; குணர்ந்தவழி = தோற்றுவித்த முறை; கொணர்ந்த என்பது குணர்ந்தவென விகாரமாயிற்று; கும்பகம்=ஒடுக்கம்.

1127. களிறு = இந்திரியம்; கோல் = மனம்; பாகன் = ஆன்மா; அண்ணல்=பரசிவன்; தையல்=சத்தி; கலவி=சேர்தல்.

1128. இட்டு = இடுதற்பொருட்டு ; குழம்பு = சேறு (கருப்பாசய வுதிரம்), பாசம்=சரீரம்; என்பு=வீணாதண்டம்.

1129. என்னம்மை பென்னப்ப னென்னுஞ் செருக்கற்
றன்னம்மை யூழித் தலைவனு மங்குளன்
மன்னம்மை யாகி மருவி யுரைசெயும்
பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே. (௫)

1130. தார்மே லுறைகின்ற தண்மலர் நான்முகன்
பார்மே லிருப்ப தொருநூறு தானுள
பூமே லுறைகின்ற போதகம் வந்தன
ணமே லுறைகின்ற நாயகி யாணையே. (௬)

1131. அணைய மாய்வருந் தாது ளிருந்தவர்
மாணைய மாய மனத்தை யொருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை யறிந்தபின்
றாணைய மாய தனுதனந் தானே. (எ)

1132. தானே யெழுந்தவித் தத்துவ நாயகி
வானே ரெழுந்து மதியை விளக்கின
டேனே ரெழுகின்ற தீபத் தொளியுடன்
மானே நடமுடை மன்றறி யீரே. (அ)

1133. அறிவான மாயையு மைம்புலக் கூட்டமு
மறிவான மங்கை யருளது சேரிற்
பிறியா வறிவறி வாருள்ளம் பேணு
நெறியாய சித்த நினைந்திருந் தாளே. (௯)

---

1129. உன்=தியானித்தற்குரிய.

1130. தண்மலர்=தட்பத்தைக்கொண்ட திருமாலினுந்தித்தாமரை; பார்=மூலத்தானத்துள்ள பூமண்டலம்;போதகம்=ஞானம்; நாமேலுறைகின்ற நாயகி=வாகீசுவரி.

1131. ஆணையம்=உண்மை; தாதுளிருந்தவர் = தாமரைப் பீடத்தி லிருந்தவர் ; மாண் ஐயம் = மிக்க ஐயமாதி குற்றங்களை யுடையதுமான ; பாணையம் = நாதத்தின் றன்மையான ; தாணையமாய்=திருவடி யின்பங் கிடைக்கப்பெற்று ; அதன் ஆதனம்=அத்திருவடிக்குப் பீடமாவர்.

1132. வான் நேர் எழுந்து = பராகாயத்துக் கெதிராயோங்கி; மதி=ஞானம்; மான்=சிவபெருமான்.

1133. அறிவானமாயை = ஞானேந்திரியங்கள்; நெறியாய = நன்னெறிப்பட்ட; நினைந்திருந்தாள்=அருள்செயக் கருதியிருந்தனள்.

1134. இரவும் பகலு மிலாத விடத்தே
குரவஞ்செய் கின்ற குழவியை நாடி
யரவஞ்செய் யாம லருளுடன் றூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே. (கo)

1135. பாலனு மாகும் பராசத்தி தன்னொடு
மேலணு காவிந்து நாதங்கள் விட்டிட
மூலம தாமெனு முத்திக்கு நேர்படச்
சாலவு மாய்நின்ற தற்பரத் தாளே. (கக)

1136. நின்ற பராசத்தி நீள்பரன் றன்னொடு
நின்றறி ஞானமு மிச்சையு மாய்நிற்கு
நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே
மன்ற னவற்றுண் மருவிடுந் தானே. (கஉ)

1137. மருவொத்த மங்கையுந் தானு முடனே
யுருவொத்து நின்றமை யொன்று முணராக்
கருவொத்து நின்று கலக்கின்ற போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே. ()

1138. சிந்தையி னுள்ளே திரியுஞ் சிவசத்தி
விந்துவு நாதமு மாயே விரிந்தனள்
சந்திர பூமி சடாதரி சாத்தவி
யந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே. (கச)

---

1134. இரவும் பகலும் = லயமும் தோற்றமும், அல்லது மறப்பும் நினைப்பு மெனினுமாம்; குரவம் = விளையாட்டு; அரவஞ் செய்யாமல் = மந்திரோச்சாரணாதி யில்லாமல்; பருவஞ் செய்யாதது=பால யவ்வனாதி பருவபேதங்க ளின்றியது.

1135. விந்து நாதங்கள் விட்டிட=பிந்து நாத தத்துவங்களையுங் கடந்திருக்க; மூலமதாமெனு முத்தி=சிவமேயென்று கூறப்படுவதான முத்தி.

1136. நன்றறியுங் கிரியாசத்தி=ஈசனை நன்கு புலப்படுத்துங் கிரியா சத்தி; மனறன்=சபேசனாகிய சிவம்; அவற்றுள் = (ஞானம் இச்சை கிரியை என்னும்) சத்திகளுள்.

1137. மருவொத்தமங்கை=பூவினிடத்து மணம்போன் றுள்ளசத்தி; உருவொதது = சொரூப வேறுபாடின்றி யேகமாய்; திரு ஒத்த சிந்தை=சத்தியோ டொத்துள்ள சிந்தை.

1138. சிந்தையினுள்ளே திரியும்=சிவத்தி னிதயத்தி லிச்சா மாத்திரமா யிருக்கும், அல்லது அன்பரிதயத்துலாவுகின்ற; சந்திர பூமி=சந்திரமண்டலம்; சாத்தவி = சத்துவ குணமுள்ளாள்.

1139. ஆறி யிருந்த வமுத பயோதரி
மாறி யிருந்த வழியறி வாரில்லை
தேறி யிருந்துநற் றீபத் தொளியுட
னூறி யிருந்தன ளுள்ளுடை யார்க்கே. (௧௫)

1140. உடையவ னங்கி யுருத்திர சோதி
விடையவ னேறி விளங்கி யிருக்குங்
கடையவர் போயிடுங் கண்டவர் நெஞ்சத்
தடையது வாகிய சாதகர் தாமே. (௧௬)

1141. தாமே யுறைவிட மாறித ழானது
பார்மே லிதழ்பதி னெட்டிரு நூறுள
பூமே லுறைகின்ற புண்ணியம் வந்தனள்
பார்மே லுறைகின்ற பைங்கொடி யாளே. (௧௭)

1142. பைங்கொடி யாளும் பரம னிருந்திடத்
திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலாற்
பெண்கொடி யாக நடந்த துலகே. (௧௮)

1143. நடந்தது வம்மலர் நாலுட னஞ்சா
யிருந்தனர் கன்னிக ளெட்டுட னொன்றாய்ப்
படர்ந்தது தன்வழிப் பங்கயத் துள்ளே
தொடர்ந்தது வுள்வழிச் சோதி யடுத்தே. (௧௯)

---

1139. ஆறியிருந்த = சிவத்து ளடங்கி யிருந்த; மாறியிருந்த=சத்தி சிவமென்கிற பேதரூபங்களாயிருந்த; ஊறி=அமுதமாய்த் தோன்றி.

1140. அங்கி யுருத்திரசோதி = அக்கினி மண்டல வாசியாயுள்ள உருத்திரனாகிய சோதி; ஏறி = மேனிலத்துச் சென்று; அடையதுவாகிய சாதகர்=அடை யோகாப்பியாசிகள்.

1141. மாறிதழ் = சந்திரமண்டலம் கீழ்நோக்கியும் பானுமண்டலம் மேனோக்கியு மிருத்தல்; புண்ணியம் வந்தனள்=புண்ணிய மாக வந்தனள்.

1142. திண்கொடியாகத் திகழ்தரு சோதியாம் = அச் சிவத்தி னிடத்து வலிய கொடிபோன்று விளங்குகின்ற சோதி சொரூபியாம்; விண்கொடி=மின்னல்.

1143. நாலுடனஞ்சா=ஒன்பதாக; கன்னிக ளெட்டுடனொன்று= (முற்கூறிய)நவசத்திகள்; தன்வழி=பூரண சத்தியின் ஏவல் வழி; உள்வழி = பிரம ரந்திரவழி, "சோதி உள்வழி" என மாற்றிச் சிவமிருக்குமிடம் எனினுமாம்.

1144. அடுக்குந் தாமரை யாதி யிருப்பிட
மெடுக்குந் தாமரை யிலக்கத் துள்ளது
மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல
முடுக்குந் தாமரை முச்சதி ரத்ததே. (உ0)

1145. முச்சதி ரத்தே யெழுந்த முளைச்சுட
ரெச்சதி ரத்து மிடம்பெற வோடிடக்
கைச்சதி ரத்துக் கடந்து ளொளிபெற
வெச்சதி ரத்து மிருந்தன டானே. (உக)

1146. இருந்தன டன்முக மாறொடு நாலாய்ப்
பரந்தன வாயு திசைதிசை தோறுங்
குவிந்தன முத்தின் முகவொளி நோக்கி
நடந்தது தேற லதோமுக மம்பே. (உஉ)

1147. அம்பன்ன கண்ணி யரிவை மனோன்மணி
கொம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய
செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறு
நம்பனை நோக்கி நவிலுகின் றாளே. (உ௩)

1148. நவிலும் பெருந்தெய்வ நான்மறைச் சத்தி
துகிலுழை யாடை நிலம்பொதி பாத
மகிலமு மண்ட முழுதுஞ்செம் மாந்து
புகலுமுச் சோதி புனையநிற் பாளே. (உச)

---

1144. தாமரையாதி யிருப்பிடம்=(ஆதி யிருப்பிடம் தாமரை) பரமசிவமிருக்கின்ற விடம் இதயதாமரை மலர்; இலக்கம்=அநாகதம்; மடுக்குந் தாமரை=அமுத நிறையுந் தாமரை, அது விசுத்தி; முச்சதிரத்தது = மூலாதாரம்.

1145. முளைச்சுடர்=தோன்றுதலையுடைய சோதி; கை=அழகு.

1146. முகமாறொடு நாலாய்=(பூரண சத்திக்குப் பத்துத் திசைகளும்) பத்துமுகமா யிருக்க; சத்தி யுயிர்ப்பே வாயுவென்பது விளக்க, வாயு திசைதிசைதோறும் பரந்தன என்றது; குவிந்தன=குவியலாயுள்ளன; அதோமுகம்=கீழ்முகம்; அம்பு=அம்பு(போலவேகமாய்).

1147. செறிகமழ்=(கமழ்செறி) இயற்கை மணம் நிறைந்த; நவிலுகின்றாள் = துதிக்கின்றாள், அல்லது (அடியார்க்கு) உபதேசிக்கின்றாள்.

1148. துகிலுழை யாடை=(உழை துகிலாடை) திசைகள் வஸ்திரமாகவும்; செம்மாந்து=ஓங்கி நிமிர்ந்து; முச்சோதி=சூரிய சந்திராக்கினி.

1149. புனையவல் லாள்புவ னத்திறை யெங்கள்
வனையவல் லாளண்ட கோடிக ளுள்ளே
புனையவல் லாண்மண்ட லத்தொளி தன்னை
புனையவல் லாளையும் போற்றியென் பேனே. (உ௫)

1150. போற்றியென் பேன்புவ னாபதி யம்மையென்
னாற்றலு ணிற்கு மருந்தவப் பெண்பிள்ளை
சிற்றங் கடிந்த திருநுதற் சேயிழை
கூற்றந் துரக்கின்ற கோள்பைந் தொடியே. (உ௬)

1151. தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி
வடிவார் திரிபுரை யாமங்கை கங்கைச்
செடியார் வினைகெடச் சேர்வரை யென்றென்
றடியார் வினைகெடுத் தாதியு மாமே. (உ௭)

1152. மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி
பல்லிசைப் பாவை பயன்றரு பைங்கொடி
புல்லிசைப் பாவையைப் போகத் துரந்திட்டு
வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே. (உ௮)

1153. தாவித் தவப்பொரு டானவ னெம்மிறை
பாவித் துலகம் படைக்கின்ற காலத்து
மேவிப் பராசத்தி மேலொடு கீழ்த்தொடர்ந்
தாவிக்கு மப்பொரு டாமது தானே. (உ௯)

---

1149. புனையவல்லாள்=(சிவத்தைத்தனது பாதிச்சரீரத்தில்) தரிக்கவும் வல்லவள்; வனைய=சிருட்டிக்க; புனைய=அலங்கரிக்க.

1150. ஆற்றல் = அறிவு அல்லது தொழில்; கோள் = வல்லமை, கொள் என்றும் பாடம்.

1151. செடி=துன்பம்; என்று என்று = சூரியனென்னும்படி, அல்லது எந்நாளும்.

1152. வியோமம் = ஆகாயம்; இசை=சந்தம்; பா=வேதம்; வை=வைக்கப்பட்டுள்ள; புல்லிசைப்பாவை=புல்லினாற் செய்யப்பட்ட பதுமைபோலும் (பயனற்ற சரீரம்); வல்லிசை=(அஞ்ஞானத்தை யொழிக்க) வல்ல உபதேசம்.

1153. தாவித்த=நிச்சயித்த; பாவித்து=சங்கற்பித்து; ஆவிக்குமப்பொருள்=ஜீவான்ம வர்க்கங்கட்குரியவக்கருவிகாரணங்கள்.

1154. அதுவிது வென்பா ரவனை யறியார்
கதிவர நின்றதோர் காரணங் காணார்
மதுவிரி பூங்குழன் மாமங்கை நங்கை
திதமது வுன்னார்க டேர்ந்தவர் தாமே. (௩௦)

(௪) ஆதாரவாதேயம்.

1155. நாலித ழாறி லவிர்ந்தது தொண்ணூறு
தானித ழானவை நாற்பத்து நாலுள
பாலித ழானவப் பங்கய மூலமாய்த்
தானித ழாகித் தரித்திருந் தாளே. (௧)

1156. தரித்திருந் தாளவ டன்னொளி நோக்கி
விரித்திருந் தாளவள் வேதப் பொருளைக்
குறித்திருந் தாளவள் கூறிய வைந்து
மறித்திருந் தாளவள் மாதுநல் லாளே. (௨)

1157. மாதுநல் லாளு மணாள னிருந்திடப்
பாதிநல் லாளும் பகவரு மானது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. (௩)

1158. வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க்
கள்ளடை யாரக் கமழ்குழ லார்மன
மள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற
பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே. (௪)

---

1154. கதி=முத்தி; காரணம் = மெய்ஞ்ஞானம்; திதம்=நிலைமை.

1155. நாலிதழ் = மூலாதாரம்; ஆறு = சுவாதிட்டானம்; தொண்ணூறு=ஆதாரமொழிந்த தத்துவங்கள்; நாற்பத்து நாலு= மூலமும் ஆக்கினையுமொழிந்த வினைய விதழ்கள்; பாலிதழான = பக்கத்தில் இதழ்களுள்ள; தானிதழாகி=சத்தியு மோரிதழ் போன்று.

1156. தன்னொளி=சிவம்; ஐந்து=ஐந்தொழில்; மறித்து=ஒடுக்கி.

1157. பெய்ய=கொள்ள; வேதனை=தாபத்திரயம், அல்லது ஜனன மரணம்; வெள்ளடை=பிறவி; வெள்ளிடையென்றும்பாடம், அது பரமாகாயம்.

1158. கமழ் குழலார் மனம் அள் அடையானும்=மாதரால் கவரப்படும் தன்மை யில்லாத சிவமும் (மோகமில்லாத சிவம்); பிறவி பெண்ணாமே=பிறவி பெண்ணிடத்திலேயே யுண்டாம்.

1159. பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை
பெண்ணிடை யாணும் பிறந்து கிடந்தது
பெண்ணுடை யாணென் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை யாணிடைப் பேச்சற்ற வாறே. (ரு)

1160. பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை
மாச்சற்ற சோதி மனோன்மணி மங்கையாங்
காச்சற்ற சோதிக் கடவு ளுடன்புணர்ந்
தாச்சென்ற னுட்புகுந் தாலிக்குந் தானே. (சு)

1161. ஆலிக்குங் கன்னி யருமை மனோன்மணி
பாலித் துலகிற் பரந்துபெண் ணாகும்
வேலைத் தலைவியை வேத முதல்வியைப்
பாலித் தொருவ னுகந்துநின் றானே. (எ)

1162. உகந்துநின் றானம்பி யொண்ணுதற் கண்ணோ
டுகந்துநின் றானம் முழைபுக நோக்கி
யுகந்துநின் றானிவ் வுலகங்க ளெல்லா
முகந்துநின் றானவ டன்றோ டொகுத்தே. (அ)

1163. குத்து முலைச்சி குழைந்த மருங்கின
டுத்தி விரிந்த சுணங்கின மொழி
புத்தகச் சீறடிப் பாவை யுணர்வினைத்
தொத்த கருத்தது சொல்லகி லேனே. (கூ)

1164. சொல்லவொண் ணாத வழற்பொதி மண்டலஞ்
சொல்லவொண் ணாது திகைத்தங் கிருப்பார்கள்
வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி
மல்லவொண் ணாத மனோன்மணி தானே. (கய)

---

1159. பெண்=சத்தி; பெண்ணை=சத்தியையே சொரூபமாகவுடைய சிவம்; பெண்ணுடையாண்=அர்த்தநாரி சொரூபன்.

1160. மாச்சற்ற=குற்றமற்ற, மாசு மாச்செனவிகாரமாயிற்று; காச்சற்ற=பகையற்ற.

1161. வேலைத்தலைவி=பஞ்சகிருத்தியங்க ளியற்று மீசுவரி.

1162. அவடன்றோடொகுத்து=அச்சத்தியின் தோள்களைத் தழுவி.

1163. குழைந்த=துவளுதலையுடைய; துத்தி=பொறி; சீறடி=சிறிய பாதம்; தொத்த=மறைத்த.

1164. வினை=மறைத்தற்றொழில்; மல்ல=வெற்றிகொள்ள.

1165. தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே வடவரைத் தண்கடற் கண்ணே. (௧௧)

1166. கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்
மண்ணுடை யாரை மனிதரிற் கூட்டொணாப்
பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்
விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. (௧௨)

1167. கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி
பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்
விண்டெண் டிசையும் விரைமலர்க் கைக்கொண்டு
தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே. ()

1168. கன்னி யொளியென நின்றவிச் சந்திரன்
மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறஞ்
சென்னி யிருப்பிடஞ் சேர்பதி னறுடன்
பன்னி யிருப்பப் பராசத்தி யாமே. (௧௪)

1169. பராசத்தி யென்றென்று பல்வகை யாலுந்
தராசத்தி யான தலைப்பிர மாணி
யிராசத்தி யாமள வாகமத் தாளாகுங்
குராசத்தி கோலம் பலவுணர்ந் தேனே. (௧௫)

1170. உணர்ந்துல கேழையும் யோகினி சத்தி
யுணர்ந்துயி ராய்நிற்கு முன்னத னீசன்
புணர்ந்தொரு காலத்துப் போகம தாகி
யிணைந்து பரமென் றிசைந்திது தானே. (௧௬)

---

1165. வடவரை=மஹாமேரு.

1166. பண்=திவ்யகுணம்; பதைப்பு=சலனம்; மேலுற=மேம்பட்டிருக்க.

1168. கன்னி=கெடாத; பன்னி=துதித்து.

1169. தராசத்தி = தாங்குகின்ற சக்தி; தலைப்பிரமாணி=முக்கிய பிரமாணமான வேதத்தை யுடையாள்; இராசத்தி=இராஜ இராஜேசுவரி; யாமளவாகமம்=சாமளாகமம்; குராசத்தி = (குரு ஆசத்தி) குருவாகா நின்றசத்தி.

1170. முன்னதன்=சிருட்டிக்குமுன்.

1171. இதுவப் பெருந்தகை யெம்பெரு மானும்
பொதுவக் கல்வியும் போகமு மாகி
மதுவக் குழலி மனோன்மணி மங்கை
யதுவக் கல்வியு ளாயுழி யோகமே. (௧௭)

1172. யோக நற்சத்தி யொளிபீடந் தானாகும்
யோகநற் சத்தி யொளிமுகந் தெற்காகும்
யோகநற் சத்தி யுதர நடுவாகும்
யோகநற் சத்திதா ளுத்தரந் தேரே. (௧௮)

1173. தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற
வார்ந்தெழு மாயையு மந்தம தாய்நிற்கு
மோர்ந்தெழு விந்துவு நாதமு மோங்கிடக்
கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே. (௧௯)

1174. தானான வாறெட்ட தாம்பரைக் கண்மிசை
தானான வாறுமீ ரேழுஞ் சமைகலை
தானான விந்து சக்மே பரமெனுந்
தானும் பரவாத னையெனத் தக்கதே. (௨0)

1175. தக்க பராவித்தை தானிரு பானேழிற்
றக்கெழு மோருத் திரஞ்சொல்லச் சொல்லவே
மிக்கிடு மெண்சத்தி வெண்ணிற முக்கண்ணி
தொக்கத்தை யோடுதோண் முத்திரை யாளே. (௨௧)

1176. முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தா
ளத்துவ மாயல்ல வாய சகலத்தள்
வைத்த பராபர னாய பராபரை
சத்தியு மானந்த சத்தியுங் கொங்கே. (௨௨)

---

1171. இது=இச்சக்தியும்; மது = தேன்.

1173. சிவனங்கி=சிவமாகிய தீ; கூர்ந்து=கருதி.

1174. ஆறு=ஆறாதாரம்; எட்டு=யோகம்.

1175. பராவித்தை=ஸ்ரீவித்தை; உருத்திரம் = உருத்திரமென்னும் தேவி யாகமம்.

1176. அத்துவமாய்=அத்துவிதமாய்; சகலத்தள்=சகுண சொரூபி யானவள்; கொங்கே=மணக்கின்றாள்.

1177. கொங்கின்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி
பொங்கிய குங்குமத் தொளி பொருந்தின
ளங்குச பாச மெனுமகி லங்கனி
தங்கு மவண்மனை தானறி வாயே. (௨௩)

1178. வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
யாயு மறிவுங் கடந்த வரனுக்குத்
தாயு மகளுநற் றாரமு மாமே. (௨௪)

1179. தாரமு மாகுவ டத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகுங் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடை யாளே. (௨௫)

1180. பத்து முகமுடை யாணம் பராசத்தி
வைத்தன ளாறங்க நாலுடன் றன்வேத
மொத்தன ளாதார மொன்றுட னோங்கியே
நித்தமாய் நின்றாளெந் நேரிழை கூறே. (௨௬)

1181. கூறிய கன்னி குலாய புருவத்தள்
சீரிய ளாயுல கேழுந் திகழ்ந்தவ
ளாரிய நங்கை யமுத பயோதரி
பேருயி ராளி பிறிவறுத் தாளே. (௨௭)

1182. பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
யறிவொன்ற நின்றன ளாருயி ருள்ளே. (௨௮)

---

1178. கணம்=யோகினியாதி கணங்கள்; தாயும்=சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவம் தோன்றுதலின் தாயும்; மகளும்=சிவதத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றுதலின் மகளும்; தாரமும் = சிவ தத்துவத்தோடு கூடி உலகந் தோன்றுதற்கேதுவாயிருத்தலின் தாரமும்.

1181. ஆரிய நங்கை=மகிமையுள்ள பெண்; உயிராளி=சீவர்க்குத் தலைவி.

1182. குறி=தியானத்திற் குறிக்கப்படுங்குறி; பொறி=ஞானேந்திரியம்.

1183. உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங்
கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்
கொள்ளத் தவநெறி கூடிய வின்பத்து
வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே. (உகூ)

1184. புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி
யிருந்தருள் செய்கின்ற வின்ப மறியார்
பொருந்தி யிருந்த புதல்வி பூவண்ணத்
திருந்த விலக்கி லினிதிருந் தாளே. (௩௦)

1185. இருந்தன ளேந்திழை யென்னுள்ள மேவித்
திருந்து புணர்ச்சியிற் றேர்ந்துணர்ந் துன்னி
நிரந்தர மாகிய நிரதி சயமொடு
பொருந்த விலக்கின் புணர்ச்சி யதுவே. (௩க)

1186. அதுவிது வென்னு மவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகு
மதிமல ராள்சொன்ன மண்டல மூன்றே. (௩உ)

1187. மூன்றுள மண்டல மோகினி சேர்விட
மேன்றுள வீரா றெழுகலை யுச்சியிற்
றோன்று மிலக்குற வாகுதன் மாமாயை
யேன்றன ளேழிரண் டிந்துவோ டேறே. (௩௩)

1188. இந்துவி னின்றெழு நாத மிரவிபோல்
வந்துபின் னுக்கின் மதித்தெழுங் கண்டத்தி
லுந்திய சோதி யிதயத் தெழுமொலி
யிந்துவின் மேலுற்ற வீறது தானே. (௩ச)

1183. வள்ளல் தலைவி=பரசிவ நாயகி.

1184. போகமாசத்தி = போகேசுவரி; பூவண்ணம் = செந்தாமரை வடிவம்; இலக்கில்=குறிக்குமிடத்தில்.

1185. புணர்ச்சி=சிவ சத்திக்கூட்டம்.

1186. மதிமலராள்=சந்திர மண்டலத்துள்ள தாமரைப் பீடத்தாள்.

1188. இது வைசந்தியாதி வாக்குத்தோன்று முறைகூறிற்று.

1189. ஈறது தான்முத லெண்ணிரண் டாயிர
மாறுத லின்றி மனோவச மாயெழிற்
றாறது செய்யுஞ் சுகந்தச் சுழிபது
பேறது செய்து பிறந்திருந் தாளே. (௩௫)

1190. இருந்தன ளேந்திழை யீறதி லாகத்
திருந்திய வானந்தஞ் செந்நெறி நண்ணிப்
பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி
வருந்த விருந்தனண் மங்கைநல் லாளே. (௩௬)

1191. மங்கையு மாரனுந் தம்மொடு கூடிநின்
றங்குலி கூடி யகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல் லாளுங் குமாரர்க ளைவருந்
தங்களின் மேவிச் சடங்குசெய் தாரே. (௩௭)

1192. சடங்கது செய்து தவம்புரி வார்கள்
கடந்தனி னுள்ளே கருதுவ ராகிற்
றொடர்ந்தெழு சோதி துணைவழி யேறி
யடங்கிடு மன்பின தாயிழை பாலே. (௩௮)

1193. பாலித் திருக்கும் பனிமல ராறினு
மாலித் திருக்கும் மவற்றி னகம்படி
சீலத்தை நீக்கத் திகழ்ந்தெழு மந்திர
மூலத்து மேலது முத்தது வாமே. (௩௯)

1194. முத்து வதனத்தி முகந்தொறு முக்கண்ணி
சத்தி சதிரி சகளி சடாதரி
பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி
வித்தகி யென்னுள்ள மேவிநின் றாளே. (௪0)

1195. மேவிய மண்டல மூன்றுடன் கீழெரி
தாவிய நற்பதத் தண்மதி யங்கதிர்
மூவருங் கூடி முதல்வியார் முன்னிற்பா
ரோவினு மேவிடு முள்ளொளி யாமே. (௪௧)

---

1189. தூறது = மதிமண்டலத் தாமரை.

1191. மாரன்=சிவம்; அங்குலி=மகத் தத்துவம்; கொங்கை நல்லாள்=அகங்கார தத்துவம்; குமாரர்கள் ஐவர்=சூட்சுமபூதங்கள் ஐந்து; தங்களின் மேவி = பஞ்சீகரணப்பட்டு; சடங்கு செய்தார்: அதனால் உலகமாயின.

1193. மலராறு=ஆறுதாரம்.

1195. ஓவினும்=விலக்கினும், அல்லது கண்மூடினும்.

1196. உள்ளொளி மூவிரண் டோங்கிய வங்கங்கள்
வெள்ளொளி யங்கியின் மேவி யவரொடுங்
கள்ளவிழ் கோதைக் கலந்துட னேநிற்குங்
கொள்ள விசுத்திக் கொடியமு தாமே. (௪௨)

1197. கொடியதி ரேகை குருவுள் ளிருப்பப்
படியது வாருணைப் பைங்கழ லீசன்
வடிவது வானந்தம் வந்து முறையே
யிடுமுத லாறங்க மேந்திழை யாளே. (௪௩)

1198. ஏந்திழை யாளு மிறைவர்கண் மூவருங்
காந்தார மாறுங் கலைமுத லீரெட்டு
மாந்த குளத்திபு மந்திர ராயுவுஞ்
சார்ந்தன ரேத்த விருந்தனள் சத்தியே. (௪௪)

1199. சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி யென்ப தறிகிலர்
பத்தியைப் பாழி லுகுத்தவப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே. (௪௫)

1200. ஆரே திருவின் றிருவடி காண்பர்க
ணோரே நின்றோதி நினையவல் லார்க்குக்
காரே குழலி கமல மலரன்ன
சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே. (௪௬)

1201. சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து
முந்தையில் வைத்துத்தம் மூலத்தி லேவைத்து
நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச்
சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே. (௪௭)

1202. சமாதி செய்வார்கட்குத் தான்முத லாகிச்
சிவாதி யிலாருஞ் சிலைநுத லாளை
நவாதி யிலாத நயந்தது வோதி
லுவாதி யவளுக் குறைவில தாமே. (௪௮)

---

1198. காந்தாரம்=தோணி; தகுளத்தி=தோழி.

1199. சாதகம்=சாதகர்க்குரிய.

1200. நினையும் வல்லார்க்கு என்றும் பாடம்.

1201. சிராதியில்=சிரசுமுதலியவற்றில்; சந்தையில்=ஜபித்தலில்.

1202. நவாதி=ஒன்பது முதலிய மூர்த்தங்கள்; உவாதி=விகாரம்.

1203. உறைபதி தோறு முறைமுறை மேவி
நறைகமழ் கோதையை நாடொறு நண்ணி
மறையுட னேநிற்கு மற்றுள்ள நான்கு
மிறைதினைப் போதினி லெய்திட லாமே. (சகூ)

1204. எய்திட லாகு மிருவினை யின்பயன்
கொய்தளிர் மேனி குமரி குலாங்கன்னி
மைதவழ் கண்ணிநன் மாரிதுர்க் கையொடு
கைதவ மின்றிக் கருத்துறு மாறே. (ரு0)

1205. கருத்துறுங் காலங் கருது மனமுந்
திருத்தி யிருந்தவை சேரு நிலத்து
வொருத்தியை யுன்னி யுணர்ந்திடு மண்மே
லிருத்திடு மெண்குண மெய்தலு மாமே. (ருக)

1206. ஆமையொன் றேறி யகம்படி யானென
வோமவென் றோதியெம் முள்ளொளி யாய்நிற்குந்
தாம நறுங்குழற் றையலைக் கண்டபின்
சோம நறுமலர் சூடிநின் றாளே. (ருஉ)

1207. சூடிடு மங்குச பாசந் துணைவழி
கூடு மிருவளைக் கோலக்கைக் குண்டிகை
நாடு மிருபத நன்னெடு ருத்திர
மாடிடுஞ் சீர்புனை யாடக மாமே. (ருங)

1208. ஆமயன் மாலர னீசன் சதாசிவன்
றாமடி சூடிநின் றெய்தினர் தம்பதந்
காமனுஞ் சாம னிரவி கனலுடன்
சோமனும் வந்தடி சூடநின் றாளே. (ருச)

---

1203. மற்றுள்ள நான்கு=சிவாதி தத்துவங்கள்.

1204. கைதவமின்றி=பொய்யில்லாமல்.

1205. எண்குணம் = முற்கூறிய தன் வயத்தனுதலாதிச் சிவ குணங்கள்.

1206. ஆமையொன்றேறி=ஆமையானது தன் உறுப்புக்களை அடக்குதல்போலப் பஞ்சேந்திரியங்களையும் அடக்கி; ஓம = (ஓம் + அ)=பிரணவம்.

1207. உருத்திரம்=உருத்திர மந்திரம்.

1208. பதம்=பதவி; சாமன்=புதன்.

1209. சூடு மிளம்பிறை சூலி கபாலினி
நீடு மிளங்கொடி நின்மலி நேரிழை
நாடி நடுவிடை ஞான முருவநின்
றூடு மதன்வழி யண்ட முதல்வியே. (ருரு)

1210. அண்ட முதலா யவனி பரியந்தங்
கண்டதொன் றில்லை கனங்குழை யல்லது
கண்டனுங் கண்டியு மாகிய காரணங்
குண்டிகை கோளிகை கண்டத னாலே. (ருசா)

1211. ஆலமுண் டானமு தாங்கவர் தம்பதஞ்
சாலவந் தெய்துந் தவத்தின்பந் தான்வருங்
கோலிவந் தெய்துங் குவிந்தபத வையோ
டேலவந் தீண்டி யிருந்தனண் மேலே. (ருஎ)

1212. மேலா மருந்தவ மேன்மேலும் வந்தெய்தக்
காலால் வருந்திக் கழிவர் கணத்திடை
நாலா நளினநின் றேத்திநட் டுச்சிதன்
மேலா மெழுத்தின ளாமத்தி னாளே. (ருஅ)

1213. ஆமத் தினிதிருந் தன்ன மயத்தின
ளோமத்தி லேயு மொருத்தி பொருந்தின
ளேம நமசிவ வென்றிருப் பார்க்கு
நேமத் துணைவி நிலாவிநின் றாளே. (ருகூ)

1214. நிலாமய மாகிய நீள்படி கத்தின்
சிலாமய மாகுஞ் செழுந்தா ளத்தின்
சுலாமய மாகுஞ் சுரிகுழற் கோதை
கலாமய மாகக் கலந்துநின் றாளே. (சா0)

---

1210. கண்டன்=பின்னமானவன்; கண்டி=பின்னமானவள்; குண்டிகை கோளிகை கண்டதனால் = ஆண்பெண் என்னும் பேதப்படப் (இப்பிரபஞ்சத்தை) படைத்ததனால்.

1211. குவிந்தபதவை = சிறுவழி (சுழுமுனை); மேல் = கபாலத்தானத்தில்.

1212. காலால்வருந்தி = நடந்து அலைந்து; நாலாம் நளினம் = நாலிதழ்த் தாமரை; எழுத்து=பிரணவம்; ஆமம் = (ஜீரணிப்பிக்கும் தானமாகிய) ஆமாசயம்.

1213. ஓமம்=அக்கினி மண்டலம்; நேமம்=நியமம்.

1214. சுலா=வட்டவடிவம்.

1215. கலந்துநின் றுள்கன்னி காதல ஞேடுங்
கலந்துநின் றுளுயிர்க் கற்பனை யெல்லாங்
கலந்துநின் றுள்கலை ஞானங்க ளெல்லாங்
கலந்துநின் றுள்கன்னி காலமு மாயே. (௬௧)

1216. காலவி யெங்குங் கருத்து மருத்தியுங்
கூலவி யொன்றாகுங் கூட லிழைத்தனண்
மாலினி மாகுலி மந்திர சண்டிகை
பாலினி பாலவன் பாகம தாமே. (௬௨)

1217. பாகம் பராசத்தி பைம்பொன் சடைமுடி
யேக மிருதய மீரைந்து திண்புய
மோக முகமைந்து முக்கண் முகந்தொறு
நாக முரித்து நடஞ்செய்யு நாதர்க்கே. (௬௩)

1218. நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின்
றோதிடுங் கூட்டங்க ளோரைந் துளவவை
வேதனு மீரொன்ப தின்மரு மேவநின்
றாதியு மந்தமு மாகிநின் றுளே. (௬௪)

1219. ஆகின்ற நாள்கலை யைம்பத் தொருவர்க
ளாகிநின் றூர்களி லாருயி ராமவ
ளாகிநின் றுளுட ளுகிய சக்கரத்
தாகிநின் றனவ ளுயிழை பாடே. (௬௫)

1220. ஆயிழை யாளொடு மாதிப் பரமிட
மாயதொ ரண்டவை யாறு மிரண்டுள
வாய மனந்தொ றறுமுக மவைதனி
லேயவார் குழலி யினிதுநின் றுளே. (௬௬)

---

1215. காலமுமாய்=கால தத்துவமுமாய்.

1216. காலவி=கால சொரூபமானவள்; கூலவி= அநுகூலமானவள்; மாகுலி = பெருமையான குலமுள்ளவள்; பாலினி = பரிபாலனஞ் செய்பவள்; பாலவன் = பால் வண்ணமானவன்.

1218. நாலொன்பதின்மர்=முப்பத்தாறு தத்துவங்கள்; ஓரைந்து= பஞ்சப்பிரமம்; ஈரொன்பதின்மர் = பதினெட்டுத் தேவ கணங்கள்.

1219. கலை=அக்கரம்; சக்கரம் = தேவி யந்திரம்; பாடு = பக்கம்.

1220. அண்டவை=சக்கரம்; ஆறுமிரண்டு=எட்டிதழ்கள்.

1221. நின்றன ணேரிழை யோடட னேர்பட
வின்றெ னகம்படி யேழு முயிர்ப்பெய்துந்
துன்றிய வோரொன் பதின்மருஞ் சூழலு
ளொன்றுயர் வோதி யுணர்ந்துநின் றூளே. (சுஎ)

1222. உணர்ந்தெழு மந்திர மோமெனு முள்ளே
மணந்தெழு மாங்கதி யாகிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே. (சுஅ)

1223. ஆமது வங்கியு மாதியு மீசனு
மாமது மண்டல மாருத மாதியு
மேமது சீவன் சிகைபங் கிருண்டிடக்
கோமலர்க் கோதையுங் கோதண்ட மாகுமே. (சுகூ)

1224. ஆகிய கோதண்டத் தாகு மனோன்மணி
யாகிய வைம்பத் துடனே யடங்கிடு
மாகும் பராபரை யோடப் பரையவ
ளாகு மவளங் கருமத்த டானே. (எ0)

1225. தானிகழ் மோகினி சார்வான யோகினி
போன மயமுடை யாரடி போற்றுவ
ரான வராவியி னூகிய வச்சிவந்
தானும் பரசிவ மேலது தானே. (எக)

1226. தானந்த மேலே தருஞ்சிகை தன்னுட
னனந்த மோகினி யம்பொற் றிருவொடு
மோனையில் வைத்து மொழிதரு கூறது
வானவை யோமெனு மவ்வுயிர் மார்க்கமே. (எஉ)

---

1221. எழு=எழுவகை வாயு; ஒன்று=சிவம்.

1222. மணந்தெழும் = வியக்தமாய்த் தோன்றும்; சூதனுஞ் சூதியும்=பிந்து வடிவமான சிவனும் நாதவடிவமான சத்தியும்; கணந்து=கலந்து.

1223. சீவன்சிகை = சீவ அக்கரமும் அதன் முடிவிலிடும் நாத அக்கரமும்; கோதண்டம்=சுழுமுனை.

1225. போனமயம் = வடிவமொழிந்தவர் (பிறப்பற்றவர்); ஆவியி னூகிய=உயிர்தொறு நிறைந்த.

1226. மோனையில்=முதலில்.

1227. மார்க்கங்க ளீன்ற மனோன்மணி மங்கலி
யார்க்கு மறிய வரியா ளவளாகும்
வாக்கு மனமு மருவியொன் றாய்விட்ட
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே. (எங)

1228. நுண்ணறி வாகு நுழைபுலன் மாந்தர்க்குப்
பின்னறி வாகும் பிரானறி வத்தடஞ்
சென்னெறி யாகுஞ் சிவகதி சேர்வார்க்குத்
தன்னெறி யாவது சன்மார்க்க மாமே. (எச)

1229. சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்
துன்மார்க்க மானவை யெல்லாந் துரந்திடு
நன்மார்க்கத் தேவரு நன்னெறி யாவதுஞ்
சன்மார்க்கத் தேவியுஞ் சத்தியென் பாளே. (எரு)

1230. சத்தியு நாளுஞ் சயம்புவு மல்லது
முத்தியை யாரு முதலறி வாரில்லை
யத்திமேல் வித்திட லத்தி பழுத்தக்கால்
மத்தியி லேற வழியது வாமே. (எசு)

1231. அதுவிது வென்றவ மேகழி யாதே
மதுவிரி பூங்குழன் மங்கைநல் லாளைப்
பதிமது மேவிப் பணியவல் லார்க்கு
விதிவழி தன்னையும் வென்றிட லாமே. (எஎ)

1232. வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைபெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் றன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே. (எஅ)

---

1228. சன்மார்க்கம்=(சத்+மார்க்கம்) உண்மை மார்க்கம்.

1229. சன்மார்க்கத் தேவியும் = சத்மார்க்கத்திலே விளங்குகின்ற பரமேசுவரியும்.

1230. நாளும்=சிவனும்; அத்தி=அகாரம்; வித்து=மகாரம்; பழுத்தக் கால்=முதிர்ந்தால்; மத்தி=ஆக்கினை.

1231. பதிமது=சந்திர மண்டலத்தமுது. நல்லாளிடத்துப் பொருந்திய

1232. வென்றிடும்=மேம்பாட்டினைக் கொண்ட.

1233. ஓரைம்ப தின்மரு ளொன்றியே நின்றது
பாரம் பரியத்து வந்த பரமிது
மாரங் குழலாளு மப்பதி தானுமுன்
சாரும் பதமிது சத்திய மாமே. (எகூ)

1234. சத்தியி ேைடு சயம்புவு நேர்படில்
வித்தது வின்றியே யெல்லாம் விளைந்தன
வத்தகை யாகிய வைம்பத் தொருவருஞ்
சித்தது மேவித் திருந்திடு வாரே. (அO)

1235. திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும்
பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த
வருந்திட வவ்விட மாரமு தாக
விருந்தன டானங் கிளம்பிறை யென்றே. (அக)

1236. என்று மெழுகின்ற வேரினை யெய்தினு
ரன்றது வாகுவர் தார்குழ லாளொடு
மன்றரு கங்கை மதியொடு மாதவர்
துன்றிய தாரகை சோதிநின் ருளே. (அஉ)

1237. நின்றன ணேரிழை யாளொடு நேர்பட
வொன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது
சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய
துன்றிடு ஞானங்க டோன்றிடுந் தானே. (அங)

1238. தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி
யீன்றிடு மாங்கவ ளெய்திய பல்கலை
மான்றரு கண்ணியு மாரனும் வந்தெதிர்
சான்றது வாகுவர் தாமவ ளாயுமே. (அச)

---

1233. ஓரைம் பதின்மர் = (ஒரு ஐம்பதின்மர்) ஐம்பத்தொரு அக்கர வடிவ தேவதைகள்; பாரம் பரியம்=பரம்பரை.

1234. சயம்பு=சயம்புவாகிய சிவம்.

1238. வேண்டுரு=விரும்பும் வடிவம்;

1239. ஆயு மறிவுங் கடந்தணு வாரணி
மாயம தாகி மதோமதி யாயிடுஞ்
சேய வரிவை சிவானந்த சுந்தரி
நேயம தாநெறி யாகிநின் றாளே. (அரு)

1240. நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்
பிறிவது செய்யாது பின்னுக னோடுங்
குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கு
மறிவொடு மாங்கே யடங்கிட லாமே. (அசு)

1241. ஆமயன் மாலர னீசன்மா லாங்கதி
யோமய மாகிய வொன்பது மொன்றிடத்
தேமய னுளுந் தெனுதென வென்றிடு
மாமய மானது வந்தெய்த லாமே. (அஎ)

1242. வந்தடி போற்றுவர் வானவர் தானவ
ரிந்து முதலாக வெண்டிசை யோர்களுங்
கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும்
வந்தனை செய்யும் வழிநவில் வீரே. (அஅ)

1243. நவிற்றுநன் மந்திர நன்மலர் தூபங்
கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம்
பயிற்று முலகினிற் பார்ப்பதி பூசை
யவிகொண்ட சோதிக்கோ ரர்ச்சனை தானே. (அகூ)

1244. தாங்கி யுலகிற் றரித்த பராபர
னோங்கிய காலத் தொருவ னுலப்பிலி
பூங்கிளி தங்கும் புரிகுழ லாளன்று
பாங்குட னேற்பப் பராசத்தி போற்றே. (கூ0)

---

1239. அணு=நுட்பமானவள்; மதோமதி=மதோன்மத்தி, மனோன்மனி என்றும் பாடம்; சேய=செந்நிறமுள்ள.

1240. குறியது=குறிக்குமிடத்தில்.

1241. மாலாங்கதி=விரும்பும் பதவி; தேமயன் = இன்பவடிவன்; தெனுதென=நாதக்குறி.

1243. அவிகொண்ட=வேள்வி யவிசுண்ட.

1245. பொற்கொடி மாதர் புனைகழ லேத்துவ
ரற்கொடி மாதுமை யார்வத் தலைமக
ணற்கொடி மாதை நயனங்கண் மூன்றுடை
விற்கொடி மாதை விரும்பி விளங்கே. (கூக)

1246. விளங்கொளி யாய விரிசுடர் மாலை
துளங்கு பராசத்தி தூங்கிரு ணீங்கக்
களங்கொண் மணியுடன் காம விநோத
முளங்கொ ளிலம்பிய மொன்று தொடரே. (கூஉ)

1247. தொடங்கி யுலகினிற் சோதி மணாள
னடங்கி யிருப்பதென் னன்பின் பெருமை
யிடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங்கை
யொடுங்கி யுமையொடு மோருரு வாமே. (கூங)

1248. உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி
தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற்
புரிவளைக் கைச்சியெம் பொன்னணி மாதை
மருவி யிறையவன் மகிழ்வன மாயமே. (கூச)

1249. மாயம் புணர்க்கும் வளர்சடை யானடித்
தாயம் புணர்க்குஞ் சலநதி யமலனைக்
காயம் புணர்க்குங் கலவியுண் மாசத்தி
யாயம் புணர்க்குமவ் வியோனியு மாமே. (கூரு)

1250. உணர்ந்தொழிந் தேனவ னுமெங்க ளீசனைப்
புணர்ந்தொழிந் தேன்புவ னுபதி யாரை
யணைந்தொழிந் தேனெங்க ளாதிதன் பாதம்
பிணைந்தொழிந் தேன்ற னருள்பெற்ற வாறே. (கூசு)

---

1245. மாதர் = பரிவாரப் பெண்கள்; அற்கொடி = கரியகொடி; வில்=ஒளி.

1246. தூங்கிருள் = நிலைபெற்ற அஞ்ஞானம்; லம்பியம் = புனை போலு முபதேசமொழி.

1247. இடங்கொள்=பரந்த.

1248. தெருவம் புகுந்தமை=வெளியிட்டமை.

1249. தாயம்=பாத்தியம்; காயம்புணர்க்கும்=தேகத்தைச் சிருஷ்டிக்கின்ற.

1250. பிணைந்து=கலந்து; தன்=அச்சிவத்தின்.

1251. பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி
நற்றா ளிறைவனே நன்பய னேயென்பர்
கற்றா னறியுங் கருத்தறி வார்கட்குப்
பொற்றா ளுலகம் புகறனி யாமே. (கூஎ)

1252. தனிநாய கன்றனோ டென்னெஞ்ச நாடி
யினியா ரிருப்பிட மேழுல கென்பர்
பனியான் மலர்ந்தபைம் போதுகை யேந்தி
கனியாய் நினைவதென் காரண மம்மையே. (கூஅ)

1253. அம்மனை யம்மை யரிவை மனோன்மணி
செம்மனை செய்து திருமங்கை யாய்நிற்கு
மிம்மனை செய்த விருநில மங்கையு
மம்மனை யாதி யமர்ந்துநின் றாளே. (கூகூ)

1254. அம்மையு மத்தனு மன்புற்ற தல்லது
வம்மையு மத்தனு மாரறி வாரென்னை
யம்மையொ டத்தனு மியானு முடனிருந்
தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே. (௧௦௦)

---

## (ரு) ஏரொளிச் சக்கரம்.

1255. ஏரொளி யுள்ளெழு தாமரை நாலித
ழேரொளி விந்துவி னாலெழு நாதமா
மேரொளி யக்கலை யெங்கு நிறைந்தபி
னேரொளிச் சக்கர மந்நடு வன்னியே. (௧)

---

1251. பொற்றாளுலகம்=அழகிய திருவடியாகிய மோட்ச உலகம்.

1253. அம்மனை=உச்சிவீடு; இம்மனைசெய்த=இவ்வுடலைத்தந்த.

1254. அம்மையும் அத்தனும் = தாயுந் தகப்பனும்; அம்மை யொடத்தனும்=சத்தியும் சிவமும்.

1255. தாமரை நாலிதழ் = மூலத்தாமரை; ஏரொளி = மூலமுதல் கபாலம் வரையுமுள்ள அக்கினிக் கதிரொளி; வன்னி= அக்கினிபீஜம்.

1256. வன்னி யெழுத்தவை மாபல முள்ளன
வன்னி யெழுத்தவை வானுற வோங்கின
வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம்
வன்னி யெழுத்திடு வாறது சொல்லுமே. (௨)

1257. சொல்லிய விந்துவு மீராறு நாதமாஞ்
சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன
சொல்லிடு நூறொடு நாற்பத்து நாலுரு
சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே. (௩)

1258. மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடு
மேல்வரு நாதமு மோங்கு மெழுத்துடன்
மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவரின்
மேல்வருஞ் சக்கர மாய்வரு ஞாலமே. (௪)

1259. ஞாலம தாக விரிந்தது சக்கர
ஞாலம தாய்விடும் விந்துவு நாதமு
ஞாலம தாயிடு மப்பதி யோசனை
ஞாலம தாக விரிந்த தெழுத்தே. (௫)

1260. விரிந்த வெழுத்தது விந்துவு நாதமும்
விரிந்த வெழுத்தது சக்கர மாக
விரிந்த வெழுத்தது மேல்வரும் பூமி
விரிந்த வெழுத்தினி லப்புற மப்பே. (௬)

1261. அப்பது வாக விரிந்தது சக்கர
மப்பினி லப்புற மவ்வன லாயிடு
மப்பினி லப்புற மாருத மாயெழ
வப்பினி லப்புற மாகாச மாமே. (௭)

1262. ஆகாச வக்கர மாவது சொல்லிடி
லாகாச வக்கரத் துள்ளே யெழுத்தவை
யாகாச வவ்வெழுத் தாகிச் சிவானந்த
மாகாச வக்கர மாவ தறிமினே. (௮)

---

1257. ஈராறு=பிராணன்; நாதமாம்=பிராணனே அக்கரவடிவான நாதமாம்.

1258. மேல்வரும் = சென்னியளவுஞ் சென்ற; அவ்வெழுத்து= அகரவுயிர்.

1259. யோசனை=ஓர் நீட்டலளவை.

1260. அப்புறம்=அதன் மேற்புறம்.

1262. ஆகாசவக்காம்=அகரமாகிய ஆகாச பீஜம்.

1263. அறிந்திடு சக்கர மையஞ்சு விந்து
வறிந்திடுஞ் சக்கர நாத முதலா
வறிந்திடு மவ்வெழுத் தப்பதி யோர்க்கு
மறிந்திடு மப்பக லோனிலை யாமே. (௯)

1264. அம்முத லாறுமவ் வாதியெழுத் தாகு
மம்முத லாறுமவ் வம்மை யெழுத்தாகு
மம்முத னாலு மிருநடு வன்னியே
யிம்முத லாகு மெழுத்தவை யெல்லாம். (௧௦)

1265. எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலு
மெழுத்தவை யாறது வந்நடு வன்னி
யெழுத்தவை யந்நடு வச்சுட ராகி
யெழுத்தவை தான்முத லந்தமு மாமே. (௧௧)

1266. அந்தமு மீறு முதலா னவையற
வந்தமு மப்பதி னெட்டுட னாதலா
லந்தமு மப்பதின் மூன்றி லமர்ந்தபி
னந்தமு மிந்துகை யாருட மானதே. (௧௨)

---

1263. ஐயஞ்சு=(ஐந்து ஐந்து) பத்து: அவை ஆதாரமாறு, மண்டல மூன்று, அதீதமொன்றுமாம்; அப்பதியோர் = அந்தந்தச் சக்கரங்களிலுள்ளவர்; பகலோன்=சூரியனான சிவம்.

1264. அம்முதலாறும் = அந்த முதன்மையான ஆதார மாறும்; அம்முதனாலும்=அதீதமுதலான நாலும்; இருநடு=மூல முதலான இரண்டுக்கும் மத்தி (அது நாபி ஸ்தானம்); வன்னி=அக்கினி; இம்முதலாகும் = இந்த நாபி ஸ்தான முதலாக வெழுத்துக்க ளுற்பத்தியாம்.

1265. எழுத்தவை = மூலாதார முதலாக அதீத மிறுதியாயுள்ள சக்கரங்களிலுள்ள எழுத்துகள்; ஆறது அந்நடு = ஆதார மாறில் நடு ஆதாரத்தில்; அச்சுடராகி=அந்தச் சோதியாகிய சிவமேயாய்.

1266. அப்பதினெட்டுடன்=விசுத்தி ஆக்கினைகளி னெழுத்துக்கள்; பதின்மூன்றின் = துவாதசாதீதத்தில்; இந்துகை=சந்திர மண்டலத்தின்கண்; ஆருடம்=அறிதல்.

1267. ஆவின மானவை முந்நூற் றறுபது
மாவின மப்பதி னைந்தின மாயுறு
மாவின மப்பதி னெட்டுட னுயுறு
மாவின மக்கதி ரோன்வர வந்ததே. (௧௩)

1268. வந்திடு மாகாச மாறது நாழிகை
வந்திடு மக்கர முப்பதி ராசியும்
வந்திடு நாளது முந்நூற் றறுபதும்
வந்திடு மாண்டு வகுத்துரை யவ்வியே. (௧௪)

1269. அவ்வின மூன்றுமவ் வாடது வாய்வரு
மெவ்வின மூன்றுங் கிளர்தரு வேரதாஞ்
செவ்வின மூன்றுந் தழைத்திடுந் தண்டதா
மிவ்வின மூன்று மிராசிக ளெல்லாம். (௧௫)

1270. இராசியுட் சக்கர மெங்கு நிறைந்தபி
னிராசியுட் சக்கர மென்றறி விந்துவா
மிராசியுட் சக்கர நாதமு மொத்தபி
னிராசியுட் சக்கர நின்றிடு மாறே. (௧௬)

---

1267. ஆவினம்=(அவ்வினம்) அதன்வகை; முந்நூற்றறுபது=நாள்; பதினைந் தினமாயுறும் = பட்ச சம்பந்தமாகும்; பதினெட்டு=மாதம் பன்னிரண்டும், ருது ஆறும்; அக்கதிரோன்= அந்த மஹா சூரியன் (சிவம்).

1268. ஆறது=மூலமாக; முப்பது = பகலுக்கும் இரவுக்கும் வகுக்கப்பட்ட முப்பது நாழிகை; அவ்வியே - அவ்விதியே என்பதில் தி குறைந்து நின்றது.

1269. அவ்வின மூன்றும் = 1267-ம் செய்யுளிற் கூறிய மூன்றும்; எவ்வினம் = மேற்கொண்ட அம் மூன்றினிலும்; செவ்வினம் = சிறந்த இனம்; தண்டதாம் = சுழு முனையில் (பிராணன் சேர்தலால்) உண்டாம்.

1270. இராசியுட் சக்கர மெங்கு நிறைந்தபின் = மூலாதாரமுதல் ஆறு தாரங்களினு முள்ள இராசிகளி லெல்லாம் நிறைந்தபின்; இராசியுட் சக்கரம்=இராசிமண்டலம்; நாதமுமொத்தபின்=(விந்துவொடு) நாதமு மொத்துக் கலந்தபின்; இராசியுட்சக்கர நின்றிடும்=இராசிச் சக்கர நிலைபெறும்.

**1271.** நின்றிடு விந்துவென் றுள்ள வெழுத்தெலா
நின்றிடு நாதமு மோங்கு மெழுத்துட
னின்றிடு மப்பதி யவ்வெழுத் தேவரி
னின்றிடு மப்புறந் தாரகை யானதே. (கஎ)

**1272.** தாரகை யாகச் சமைந்தது சக்கரந்
தாரகை மேலோர் தழைந்தது பேரொளி
தாரகை சந்திர னற்பக லோன்வரத்
தாரகை தாரகை தாரகை கண்டதே. (கஅ)

**1273.** கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாங்
கண்டிடு நாதமுந் தன்மே லெழுந்திடக்
கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின்
கண்டிடு மப்புறங் காரொளி யானதே. (ககூ)

---

1271. விந்துவென்றுள்ள=விந்துமுதலாகக் கூறப்பட்டுள்ள; நாதமு மோங்கும்=நாதமுங் கூடியெழும்; அப்பதி=அவ்வவ் விராசி மண்டலம்; அவ்வெழுத்தேவரில்=அதற்குரிய வெழுத்துக் களேவரில்; தாரகையானது=நட்சத்திரங்களாம், (ஆதாரம் ஒவ்வொன்றுக்கும் முறையே இராசி யிரண்டும், நட்சத்திர நாலரையுமாக நிற்கும்.)

1272. தாரகையாகச் சமைந்தது சக்கரம் = (இதுவே) நட்சத்திர சக்கரமாகப் பொருந்தியது; பேரொளி=செழித்த சிவ ஒளி; தாரகை சந்திர னற்பகலோன்வர=நட்சத்திர சக்கரத்தில் சந்திரனும் சூரியனும் வர; தாரகை = நட்சத்திர மண்டலம்; தாரகை தாரகைகண்டதே = நட்சத்திர வடிவமான அட்சரம் முறையாகக் காணப்பட்டது.

1273. கண்டிடு சக்கரம்=(இவ்வாறு) காணப்பட்ட சக்கரம்; விந்து வளர்வதாம் = விந்துவினு லுண்டாவதாம்; நாதமுந் தன் மேலெழுந்திட = அவ் விந்துவின்மேல் நாதமுந்தோன்ற; வன்னிக்கொழுந்து அன ஒத்தபின்=அக்கினிக் கொழுந்து போலக் கலந்தெழுந்து நின்றதன்மேல்; காரொளி=கரிய ஒளி, (சத்தியுஞ் சிவமு மொத்திருக்கும் அர்த்தநாரீசுவர வடிவமான சிவவொளி.)

1274. காரொளி யண்டம் பொதிந்துல கெங்கும்
பாரொளி நீரொளி சாரொளி சாலொளி
வானொளி யொக்க வளர்ந்து கிடந்துபி
னேரொளி யொன்றாய் நிறைந்தங்கு நின்றதே. (உ0)

1275. நின்றது வண்டமு நீளும் புவியெலா
நின்றவிவ் வண்ட நிலைபெறக் கண்டிட
நின்றவிவ் வண்டமு மூல மலமொக்கு
நின்றவிவ் வண்டம் பலமது விந்துவே. (உக)

1276. விந்துவு நாதமு மொக்க விழுந்திடில்
விந்துவு நாதமு மொக்க விரையதாம்
விந்திற் குறைந்திடு நாத மெழுந்திடில்
விந்துவை யெண்மடி கொண்டது வீசமே. (உஉ)

1277. வீச மிரண்டுள நாதத் தெழுவன
வீசமு மொன்று விரைந்திடு மேலுற
வீசமு நாதமு மெழுந்துட னொத்தபின்
வீசமும் விந்து விரிந்தது காணுமே. (உங)

---

1274. காரொளி = (நிலமும் நீரும் அடங்குதற்குரிய) தீயொளி; சாலொளி=வாயுவொளி; மூலாதாரத்தி லிருந்து தோன்றிய ஒளி ஐம்பூத மண்டலங்களினும் நிறைந்து நிற்பதனால் "ஏரொளி" என்னப்பட்டதாய் எங்குமாய் நின்றதென்பது கருத்து.

1275. நிலைபெறக் கண்டிட = நிலைபெறச் செய்தற்பொருட்டு; மூல மலமொக்கும்=ஆணவ மலத்தையொக்கும்; அண்டம்பலம்= அண்டத்துக்குப் பலம்.

1276. விந்துவு நாதமுமொக்க விழுந்திடில்=விந்து நாதங்கள் சமமாய்க் கலப்பின்; விந்திற் குறைந்திடு நாத மெழுந்திடில்= விந்துகுறைந்து நாதம் மேற்பட்டுத் தோன்றில்; எண்மடி= எட்டுமடங்கு; வீசம்=பீஜம்.

1277. வீசமிரண்டுள நாதத்தெழுவன = (நாதத்தெழுவன வீசமிரண்டுள) நாதத்தில் தோன்றும் இரண்டு பீஜங்கள் (மந்திரஙகள்) உண்டு; மேலுற=மேல் நிலையைப் பொருந்துமாறு; வீசமும் நாதமு மெழுந்துட னொத்தபின் = பீஜ நாதங்களிரண்டு மொத்துக் கபால ஸ்தானம் சென்றபின்; விந்து வீசம் = விந்து பீஜம்; விரிந்தது காணும் = பரந்து தோன்றும்.

1278. விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம்
விரிந்தது விந்துவு நாதத் தளவினில்
விரிந்தது வுட்கட்ட வெட்டெட்டு மாகில்
விரிந்தது விந்து விரையது வாமே. (உச)

1279. விரையது விந்து விளைந்தன வெல்லாம்
விரையது விந்து விளைந்த வுயிரும்
விரையது விந்து விளைந்தவிஞ் ஞானம்
விரையது விந்து விளைந்தவன் றுளே. (உரு)

1280. விளைந்த வெழுத்தது விந்துவு நாதமும்
விளைந்த வெழுத்தது சக்கர மாகும்
விளைந்த வெழுத்தவை மெய்யினி னிற்கும்
விளைந்த வெழுத்தவை மந்திர மாமே. (உசு)

1281. மந்திர சக்கர மானவை சொல்லிடிற்
றந்திரத் துள்ளெழு தோன்றெறி வட்டமாங்
கந்தரத் துள்ளுமி ரேகையி லொன்றில்லை
பந்தம தாகும் பிரணவ முன்னிடே. (உஎ)

---

1278. கெட்டது வீசம் = பீஜம் மறைந்தது; உள்கட்ட = உள்ளே பூரித்துக் கும்பிக்க; எட்டெட்டு=அறுபத்துநாலு மாத்திரை; விந்து விரையதுவாம்=விந்துவே (சகலத்துக்கும்) வித்தாம்.

1279. விளைந்தனவெல்லாம்=சகல ப்ரபஞ்சமும் தோன்றின; விஞ்ஞானம்=சிறந்த மெய்ஞ்ஞானம்; விளைந்தவன்றுளே=(விளைந்தது அவன்றுள் - தொகுத்தல் விகாரமாயிற்று) பரசிவன் திருவடி தோன்றின.

1280. விந்துவும் நாதமும் விளைந்த வெழுத்தது சக்கரமாக=(அவ்வாறு தோன்றிய) விந்து நாதங்களாகிய வெழுத்துக்களே சக்கரமுமாக; அவை மெய்யினினிற்கும் = அவ்வெழுத்துக்கள் சரீரத்துள்ளும் பொருந்தியிருக்கும்; அவை மந்திர மாமே=அவ்வெழுத்துக்களே மந்திரமுமாகும்.

1281. தந்திரத்துள்ளெழு தோன்றெறி வட்டமாம்=உபாயமாயுணர்தலிலெழுந்து காணப்படு மக்கினி வட்டமேயாகும்; கந்தரத்துள்ளும் = ஆகாய ஸ்தானமாகிய விசுத்தியிலும்; பந்தமதாகும்=(அநாதியே) உபாதியாய் உள்ள; உன்னிட = முதன்மையாகக்கொண்டு தியானிக்க.

**1282.** உன்னிட்ட வட்டத்தி லொத்தெழு மந்திரம்
பின்னிட்ட ரேகை பிழைப்பது தானில்லை
தன்னிட் டெழுந்த தகைப்பறப் பின்னிற்கப்
பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே. (உஅ)

**1283.** பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்
காக்கலு மாகுங் கருத்திற் றடமெங்கு
நோக்கலு மாகு நுணக்கற்ற நுண்பொரு
ளாக்கலு மாகு மறிந்துகொள் வார்க்கே. (உகூ)

**1284.** அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து
விரிந்திடுஞ் சக்கர மேலெழுத் தம்மை
பரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி நாலுங்
குவிந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே. (௩0)

**1285.** கூறிய சக்கரத் துள்ளெழு மந்திர
மாறியல் பாக வமைந்து விரிந்திடுந்
தேறிய வஞ்சுடன் சேர்ந்தெழு மாரண
மாறியல் பாக மதித்துக்கொள் வார்க்கே. (௩க)

---

1282. உன்னிட்ட வட்டத்தில்=தியானிக்கப்படும் பிரணவ வட்டத்தில்; பின்னிட்ட=கலந்துள்ள; ரேகை பிழைப்பது தானில்லை=சக்கரத்தின் வரைகள் தவிறுதலில்லை; பன்னிட்ட=சொல்லப்பட்ட.

1283. பகையறு சக்கரம் = (ஜனன மரணங்களாகிற) பகையையொழிக்குஞ் சக்கரம்; காக்கலுமாகுங் கருத்திற் றடமெங்கும் = எவ்விடத்திலும் கருத்தினி லமைக்கத்தக்கதாம்; நுணக்கற்ற = தளருதலில்லாத; ஆக்கலுமாகும் = அடைதலுங் கூடும்; அறிந்துகொள்வரர்க்கே=இந்தச் சக்கரத்தையுணர்ந்தவர்களுக்கே.

1284. ஆதியெழுத்து = சிவபெருமானெழுத்து; மேலெழுத்து அம்மை=மேலே தேவியட்சரம்; பாரங்கிநாலும் = பார், நீர், தீ, வாயு ஆக நாலும்; குவிந்திடும்=கூடிய.

1285. ஆறியல்பு = தம்பனம், மோகனம், உச்சாடனம், வித்துவேஷணம், மாரணம், வசியம்; அஞ்சுடன் = மாரணமொழிந்த ஏனைய ஐந்தொடு.

1286. மதித்திடு மம்மையு மாமாது மாகு
மதித்திடு மம்மையு மங்கன லொக்கு
மதித்தங் கெழுந்தவை காரண மாகிற்
கொதித்தங் கெழுந்தவை கூடகி லாவே. (கூஉ)

1287. கூடிய தம்பன மாரண வசிய
மாடியல் பாக வமைந்து செறிந்திடும்
பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறூர்
தேடியுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே. (கூகூ)

1288. தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே
யளிந்த வகாரத்தை யங்நடு வாக்கிக்
குளிந்த வரவினைக் கூடியுள் வைத்து
வளிந்தவை யங்கெழ நாடிய காலே. (கூச)

1289. காலரை முக்கான் முழுதெனு மந்திர
மாலித் தெழுந்தமைந் தூறி யெழுந்ததாய்ப்
பாலித் தெழுந்து பகையற நின்றபின்
மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே. (கூரு)

---

1286. அம்மையும் அங்கன லொக்கும்=தேவியும் அவ்விடத்து அக்கினியை ஒத்திருப்பள்; அவை காரணமாகில் (உம்)=அந்தப் பஞ்சபூதங்களே ஷட்கருமங்களுக்குங் காரணமாயினும்; அவைகூடகிலா=அவையொன்றோடொன்றுசேருதலில்லை.

1287. ஆடியல்பாக = விளையாட்டாகவே; பாடி=பகைவர் தங்குமிடம், இங்கே சரீரம்.

1288. மூலத்தினுள்ளே=மூலாதாரத்தினிடத்திலே; அகாரத்தை யங்நடுவாக்கி=அகரவெழுத்தை யதனடுவிலேயிட்டு; குளிந்த வரவினை=வட்டமாயுள்ள அரவின் வடிவான குண்டலியை; அளிந்தவை யங்கெழும்=அவைகனிந்து அங்கு தோன்றும்.

1289. காலரை முக்கான் முழுதெனு மந்திரம்=கால்மாத்திரை, அரைமாத்திரை, முக்கான்மாத்திரை, முழுமாத்திரை யளவாக வுச்சரிக்கப்படு மந்திரம்; ஆலித்து=சப்தித்து; பாலித்து=அநுக்கிரகித்து; மாலுற்ற=விரும்பப்பட்ட; மாறிக்கொள்வார்க்கே = முறைப்படி மாற்றி யுச்சரிக்க யுணர்ந்தவர்களுக்கே.

**1290.** கொண்டவிம் மந்திரங் கூத்த னெழுத்ததாய்ப்
பண்டையு ணுவிற் பகையற விண்டபின்
மன்று ணிறைந்த மணிவிளக் காயிடு
மின்று மிதயத் தெழுந்து நமவெனே. (௯௬)

---

(௬) வயிரவச் சக்கரம்.

**1291.** அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு
வறிந்தவச் சத்தமி மேலிவை யுற்ற
மறிந்தவை யொன்றுவிட் டொன்றுபத் தாக
வறிந்து வலமது வாக நடவே. (௧)

**1292.** நடந்த வயிரவனற் சூல கபாலி
கடந்து பகைவனைக் கண்ணது போக்கித்
தொடர்ந்த வுயிரது தொட்டுண்ணும் போழ்து
படர்ந்த வுடல்கொடு பந்தாட லாமே. (௨)

**1293.** ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவ
ணுமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங்
காமே தமருக பாசமுங் கையது
வாமே சிரத்தொடு வாளது கையே. (௩)

---

1290. கூத்தனெழுத்ததாய்=தாண்டவம் புரியு மீசனெழுந்தருளி இருந்த வெழுத்தாய்; உணுவிற் பகையற விண்டபின்=உண்ணுவினுற் பகைகெட வுச்சரித்தபின்; நமவெனே=நமவெனக் கூட்டி யுச்சரிக்க.

1291. அறிந்த பிரதமையோடு ஆறும்=ஆருதாரங்களினுங் காணப் பட்ட பிரதமையாதி திதிகள் ஆறும்; சத்தமிமேல் = மேலே சத்தமி முதலியன; ஒன்று விட்டொன்று பத்து = சத்தமியைவிட்டு அட்டமி, நவமிவிட்டு தசமி, துவாதசி, சதுர்த்தசி நாலும், முன்கூறிய பிரதமையாதி யாறும் ஆகப்பத்து; வலமதுவாக=வலப்பக்கம் (வளர்பிறை பிரதமை) முதலாக.

1292. சூலகபாலி=சூலத்தையும் கபாலத்தையு முடையவன்; கடந்து=ஜயித்து; பந்தாடலாம்=பந்துபோலக் கொண்டு விளையாடலாம் (சத்துருக்களை விளையாட்டாகவே ஜயிக்கலாமென்பது).

1293. ஆமேவப்பூண்டருள்=சீவான்மாக்கள் விரும்புமாறு கருணை கொண்டெழுந்தருளிய; தமருகம்=உடுக்கை; சிரத்தொடு= தலையுடன்.

1294. கையது வாறுங் கருத்துற நோக்கிடு
மெய்யது செம்மை விளங்கு வயிரவன்
றுய்ய ருளத்திற் றுளங்குமெ யுற்றதாய்ப்
பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே. (௪)

1295. பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்
பூசனை செய்யு மதுவுட னுடுமால்
பூசனை சாந்து சவாது புழுகுநெய்
பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே (௫)

1296. வேண்டிய வாறு கலகமு மாயிடும்
வேண்டிய வாறினுண் மெய்யது பெற்றபின்
வேண்டிய வாறு வரும்வழி நீநட
வேண்டிய வாறது வாகுங் கருத்தே. (௬)

---

(எ) சாம்பவி மண்டலச் சக்கரம்.

1297. சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடி
லாம்பத மெட்டாக விட்டிடின் மேலதாங்
காண்பதந் தத்துவ நாலு ணயனமு
நாம்பதங் கண்டபி னுடறிந் தோமே. (க)

---

1294. கையது ஆறும்=கபாலம், சூலம், தமருகம், பாசம், சிரம், வாள் என்று கூறிய ஆயுதங்களாறு மேந்திய கைகளாலும்; செம்மை = செந்நிறம்; துய்யர்=பரிசுத்தர்; துளங்கும்= பிரகாசிப்பன்; மெய்யுற்றதாய்=உண்மையாகவே; "ஆமேவ" என்றது முதலிவ்விருமந்திரங்களும் பைரவ சொருபத் தியானங்கூறின.

1295. ஓராயிரம் பூசனை=சகஸ்திர நாமார்ச்சனை; மதுவுடனுடும்= தேனபிஷேகத்தில் (விரும்புவர்); சாந்து=சந்தனம்; புழுகு நெய்=புனுகுதைலம்; பூசலை வேண்டும்=சாத்துதலை விரும் புவர்.

1296. வேண்டியவாறு கலகமுமாயிடும்=விரும்பியபடி (பகைவர்க ளுக்குள்) சண்டையுண்டாம்; ஆறினுண் மெய்யது பெற்ற பின்=தம்பனுதி ஷட்கருமங்களி னுண்மையை யடைந்த பிறகு; வரும் வழி=வரும்விதமாக.

1297. எட்டாக இட்டிடின்=எட்டு ரேகைகளாகக் கீறினுல் அல்லது; எட்டு=எட்டிதழ்; தத்துவம் நாலு = பிந்து நாதம் சத்தி சிவம் என்னும் நான்கனுள், (இவற்றுள் பிந்துவே நயனமா மென்க); நாடறிந்தோம் = உலகத்தரா லறியப்பட்டோம் (பிரசித்தி யடைந்தோம்).

1298. நாடறி மண்டல நல்லவிக் குண்டத்துக்
கோடற வீதியுங் கொணர்ந்துள் ளிரண்டழி
பாடறி பத்துட ளுறு நடுவீதி
யேடற நாலைந் திடவகை யாமே. (உ)

1299. நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டல
நாலுநல் வீதியு ணல்ல விலிங்கமாய்
நாலுநற் கோணமு நந்நாலி லிங்கமாய்
நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே. (௩)

1300. ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறு நரும்மில் சிவாய நமவென்று
கூறுமின் கூறிற் குறைகளு மில்லையே. (௪)

1301. குறைவது மில்லை குரைகழற் கூடு
மறைவது மாரண மவ்வெழுத் தாகித்
திறமது வாகத் தெளியவல் லாருக்
கிறவில்லை யென்றென் றியம்பினர் காணே. (ரு)

---

1298. கோடற=விகாரம் நீங்க; இரண்டு=இரண்டு பக்கங்களிலு முள்ள வீதி; பத்துடனாறு நடுவீதி=எட்டிதழ் நடுவிலுள்ள பதினாறு வீதி; ஏடற=இதழ் நீங்க; நாலைந்திடவகையாம்= நாலு மூலையும், அவற்றி னிடையிடம் நாலும், அவற்றின் மத்தியுமாம்.

1299. நல் வீதியுள் நல்ல இலிங்கமாய்=நடுவீதியில் சிறந்த லிங்காகார முடையதாய்; நந்நாலி லிங்கமாய்=நாலு கோணங்களிலு நாலு லிங்கங்களாக; நற்பூநடு=(அநாகத) தாமரையினடுவில்.

1300. ஆறிருபத்து நாலஞ் செழுத்து=(ஆறு+இருபத்து நாலு+ அஞ்சு எழுத்து) முப்பத்தைந்து மெய்யெழுத்துக்கள்; அஞ்சு ஐயும்=பஞ்சாக்கரமும், சக்தி பீஜமான 'ஐயும்' என் பதும்; வேறுருவாக=வேறுபட்ட அக்கர சொருபங்களாக; தேறுநருமில்=(இதனை) அறிபவருமில்லை.

1301. குரைகழல் கூடும்=ஒலிக்கின்ற கழலணிந்த திருவடியை யடையும்; திறமதுவாக=அதுவே யுறுதியுள்ளதாக.

1302. காணும் பொருளுங் கருதிய தெய்வமும்
பேணும் பதியும் பெருகிய தீர்த்தமு
மூனு முணர்வு முறக்கமுந் தானைக்
காணுங் கனகமுங் காரிகை யாமே. (சு)

1303. ஆமே யெழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்
போமே யதுதானும் போம்வழி யேபோன
னாமே நினைத்தன செய்யலு மாகுமப்
பார்மே லொருவர் பகையில்லை தானே. (எ)

1304. பகையில்லை யென்றும் பணிந்தவர் தம்பா
னகையில்லை நாளு நன்மைக ளாகும்
வினையில்லை யென்றும் விருத்தமு மில்லை
தகைவில்லை தானுஞ் சலமது வாமே. (அ)

1305. ஆரு முரைசெய்ய லாமஞ் செழுத்தாலே
யாரு மறியாத வானந்த ரூபமாம்
பாரும் விசும்பும் பகலு மதியதி
யூனு முயிரு முணர்வது வாமே. (கூ)

1306. உணர்ந்தெழு தந்திர மோமெனு முள்ளே
யணைந்தெழு மாங்கத னாதிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாலே. (கo)

---

1302. பேணும் பதியும்=விரும்பத்தக்க பதவியும்; காணுங் கனகமும்=உண்டாகுஞ் செல்வமும்; காரிகையாம் = (இவ்வியந்திரத்தினா லறியப்படும்) இறைவியேயாம்.

1303. எழுத்தஞ்சுமாம் வழியேயாக = பஞ்சாக்கர முற்பத்தியாம் வழியே வழியாக (அது நாத முற்பத்தியாம் மார்க்கம்); போம்வழி=(மேலே)செல்லும் (பிரம ரந்திர) மார்க்கம்; அப்பார்மேல் = அப் புறவுலகங்களில் (தேவலோக முதலிய வற்றில்).

1304. பணிந்தவர்=(சாம்பவி யந்திரத்தை) வணங்கினவர்; நகை= பரிகாசம்; விருத்தம் = காரியவிரோதம்; தகைவு=தடைபடுதல்; சலமதுவாம்=அது மண்முடையதாம் (மேன்மையுடையதாம்).

1305. மதி = புத்தி; அதியூன் = மேம்பட்ட சரீரம்; உணர்வு = ஞானம்.

1306. அதனாதி=அம்மந்திர தெய்வம் (சிவபெருமான்); கணந்து= கலந்து; அக்காமுகையாலே=அவ்விருப்பத்தினாலே.

(அ) புவனுபதி சக்கரம்.

1307. ககராதி யோரைந்துங் காணிய பொன்மை
யகராதி யோரா றரத்தமே போலுஞ்
சகராதி யோர்நான்குந் தான்சுத்த வெண்மை
ககராதி மூவித்தை காமிய முத்தியே. (க)

1308. ஓரி லிதுவே யுரையுமித் தெய்வத்தைத்
தேரிற் பிறிதில்லை யாளென்று செப்பக்கேள்
வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந்
தேரி லறியுஞ் சிவகாயந் தானே. (உ)

1309. ஏக பராசக்தி யீசற்கா மங்கமே
யாகம் பராவித்தை யாமுத்தி சித்தியே
யேகம் பராசத்தி யாகச் சிவகுரு
யோகம் பராசத்தி யுண்மையெட் டாமே. (ங)

1310. எட்டா கியசித்தி யெட்டாகும் யோகத்துக்
கட்டாகு நாதாந்தத் தெட்டுங் கலப்பித்த
தொட்டாத விந்துவுந் தானற் றொழிந்தது
கிட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே. (ச)

---

1307. ககராதியோ ரைந்து = ககரமுதலான ஐந்தெழுத்துக்கள்; (வடமொழி க வருக்கம் ஐந்து); அகராதியோராறு = ஆ ஈ ஊ எ ஐ ஒ என்றஆறு; சகராதியோர் நான்கு=சவ்வருக்கம் நாலு; மூவித்தை = மூவகையாகக் கூறப்பட்ட மந்திரங்கள்; காமியமுத்தி=விரும்பிய போகமுத்தி.

1308. பிறிதில்லை=வேறு தெய்வங் கிடையாது; அரியும் என்றும் பாடம்; சிவகாயம்=சிவசொரூபம்.

1309. அங்கம் = சரீரம்; பராவித்தை = பிரமவித்தை; சிவகுருயோகம்=குருவாகிய சிவயோகம்; எட்டாம்=யோகம், எட்டங்கமுடைய தாதலால், அவற்றுக் கதிதெய்வமாய் விளங்கும் (பராசத்தியும்) எட்டுவகைப்பட நிற்கும்.

1310. எட்டாகிய=அடையப்படுவென வாகிய; கட்டாகும்=உறுதியுடையதாயிருக்கும்; நாதாந்தத்தெட்டுங் கலப்பித்தது=நாத முடியுமிடத்து எட்டுயோகங்களையு மொன்றாகச் செய்தது, அல்லது எட்டுச் சித்திகளையு மடையச்செய்தது; ஒட்டாத விந்துவும்=(அவ்விடத்து) கலவாத விந்து சக்தியும்; கீழான=இழிவான.

1311. ஏதும் பலமா யிந்திரா சன்னடி
யோதிக் குருவி னுபதேச முட்கொண்டு
நீதங்கு மங்க நியாசந் தனைப்பண்ணிச்
சாதங் கெடச்செம்பிற் சட்கோணந் தானிடே. (ரு)

1312. சட்கோணந் தன்னில் ஸ்ரீம்ஹ்ரீந் தானிட்டு
வட்கோண மாறின் றலையில்ரீங் காரமிட்
டெக்கோண முஞ்சூழ வெழில்வட்ட மிட்டுப்பின்
மிக்கீரெட் டக்கர மம்முதன் மேலிடே. (சு)

1313. இட்ட விதழ்க ளிடையந்த ரத்திலே
யட்டஹவ் விட்டதின் மேலே யுவ்விட்டுக்
கிட்ட விதழ்களின் மேலே க்ரோஞ்சிரோ
மிட்டுவா மத்தாங்கி ரோங்கென்று மேவிடே. (எ)

1314. மேவிய சக்கர மீது வலத்திலே
கோவை யடையவே குரோங்சிரோங் கென்றிட்டுத்
தாவில் ரீங்காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து
பூவைப் புவன பதியைப்பின் பூசியே. (அ)

---

1311. இந்து இராசன் அடி = சந்திரமண்டலத் திறைவன் பாதம்; நீதங்குமங்க நியாசம் = நீ அதற்குரிய அங்கநியாசம், (கர நியாசத்துக்கு முபலக்கணமாம்); சாதம் = பிறப்பு; செம்பில் = தாமிரத் தகட்டில்; சட்கோணம் = அறு கோண யந்திரம்.

1312. வட்கோணம் = அழகிய அவ்வறுகோணம்; தலையில் = உச்சியில்; எக்கோணமும் = அவ்வறுகோணம் முழுவதையும்; வட்டமிட்டு = வட்டமாகவோர் இரேகை கீறி; ஈரெட்டக்கரம் = உயிரெழுத்துப் பதினாறும்; அம்முதன் மேலிடே = (அவ்வட்டத்தின்மேல் பதினாறிதழிட்டு அவ்விதழ்களில் முறையே) அகரமுதலாக எழுதுக.

1313. இடை யந்தரத்தில் = மத்தியிலுள்ள வெளியில்; அட்ட = பொருந்திய; க்ரோம் சிரோம் = க்ரோம் ச்ரோம் என்னும் பீஜங்கள்; வாமத்து = இடப்புறத்தில்.

1314 கோவையடையவே = மாலைமாதிரியாக; ரீங்காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து = அதாவது ஹ்ரீ எனக் கீழிருந்து சுற்றி வட்டஞ்செய்து; பூவை = நாகணவாய்ப் பறவை, இது தேவிக்கு உவம ஆகுபெயர்.

1315. பூசிக்கும் போது புவனு பதிதன்னை
யாசற் றகத்தினி லாவா கனம்பண்ணிப்
பேசிப் பிராணைப் பிரதிட்டை யதுசெய்து
தேசுற் றிடவே தியான மதுசெய்யே. (கூ)

1316. செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்
கையிற் படையங் குசபாசத் தோடபய
மெய்யி லணிகல மிரத்தின மாமேனி
துய்ய முடியும வயவத்திற் றேற்றமே. (க0)

1317. தோற்போர்வை நீக்கித் துதித்தடை விற்பூசித்துப்
பாற்போ னகமந் திரத்தாற் பயின்றேத்தி
நாற்பால நாரதா யாசுவா காவென்று
சீர்ப்பாகச் சேடத்தை மாற்றிப்பின் சீவியே. (கக)

1318. சீவிப்ப தன்முன்னே தேவியையுத் வாகனத்தாற்
பாவித் திதய கமலம் பதிவித்தங்
கியாவர்க்கு மெட்டா வியந்திர ராசனை
நீவைத்துச் சேவி நினைந்தது தருமே. (கஉ)

---

1315. ஆசற்று = களங்கமற்று; அகத்தினி லாவாகனம்பண்ணி = இதயத்தில் தேவி சொருபத்தைக் கருதி யமைத்து.

1316. இது தேவியைத் தியானிக்கும் சொருபவிலக்கணங் கூறியது.

1317. தோற்போர்வை நீக்கி=சரீரத்தின் மேலிடும் வஸ்திரத்தை யொழித்து; அடைவில் = முறைப்படி; பாற்போனகம்= பாலும் சோறும் கலந்ததாகிய பாயசம்; நாற்பால=நாற்புறத்தும்; சீர்ப்பு=சிறப்பு; சேடத்தைமாற்றி=நிர்மாலியத்தை யொழித்து; சீவி=க்ஷேமமுறுக.

1318. உத்வாகனம் = இதயகமலத்திலிருந்து யந்திரத்தில் ஆவாகனஞ்செய்த தெய்வத்தை மீண்டும் இதயத்தில் சேர்த்தல்; பாவித்து=சிந்தித்து; பதிவித்து=எழுந்தருளச் செய்து; இயந்திரராஜனை=யந்திரங்களுட் சிறந்த புவனுபதி யந்திரத்தை.

(கூ) நவாக்கரீ சக்கரம்.

1319. நவாக்கரி சக்கர நானுரை செய்யி
னவாக்கரி யொன்று நவாக்கரி யாக
நவாக்கரி யெண்பத் தொருவகை யாக
நவாக்கரி யக்கிலீ சௌமுத லீறே. (க)

1320. சௌமுத லௌவொடு ஹௌவுட னுங்கிரீம்
கௌவு ளுமையுளுங் கலந்திரீஞ் சிரீமென்
றெவ்வி லெழுங்கிலீ மந்திர பாதமாச்
செவ்வு ளெழுந்து சிவாய நமவெனே. (உ)

1321. நவாக்கரி யாவது நானறி வித்தை
நாவாக்கரி யுள்ளெழு நன்மைக ளெல்லா
நவாக்கரி மந்திர நாவுளே யோத
நவாக்கரி சத்தி நலந்தருந் தானே. (ங)

1322. நலந்தரு ஞானமுங் கல்வியு மெல்லா
முரந்தரு வல்வினை யும்மைவிட் டோடுஞ்
சிரந்தரு தீவினை செய்வ தகற்றி
வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. (ச)

---

1319. நவாக்கரியொன்று=அற்புதமான ஏகாட்சரி; நவாக்கரியாக= நவாக்கரி (மந்திரம்) ஆக; எண்பத்தொரு வகையாக = (அக்கர மாறு முறையால் அது) எண்பத்தொரு வகையாக; அக்கிலி சௌமுதலீறே = அந்தக் கிலீம் முதலும் சௌ இறுதியுமாய் (உள்ளதாம்).

1320. சௌமுதல்...பாதமா = சௌ ஔ ஹௌ கிரீம் கௌ ஐ இரீம் சிரீம் கிலீம் என்பன மந்திரத்தின் பாதங்களாக; செவ்வுள்=செம்மையுள் (நன்மையோடு).

1321. நாவுளேயோத (உளே நா ஒத)=வாயினுள்ளே நாவினலோத (வாய் திறந்து உச்சரியாது நாப்புடை பெயருமளவில் உச்சரிக்க); நவாக்கரிசத்தி=நவாக்கரி மந்திரத்துக்குரிய தேவி.

1322. உரந்தரு வல்வினை = வலிமையுள்ள சஞ்சிதாதி கர்மங்கள்; சிரந்தரு தீவினை=முதன்மையான கொடிய வினை (மஹாபாதகங்கள்); சோதி=சத்தி, அல்லது சிவம்.

1323. கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை
கொண்டிடு முள்ளே குறித்த வினைகளை
வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கு
நின்றிடுஞ் சக்கர நினைக்கு மளவே. (௫)

1324. நினைத்திடு மச்சிரீ மக்கிலீ மீறு
நினைத்திடுஞ் சக்கர மாதியு மீறு
நினைத்திடு நெல்லொடு புல்லினை யுள்ளே
நினைத்திடு மர்ச்சனை நேர்தரு வாளே. (௬)

1325. நேர்தரு மத்திரு நாயகி யானவள்
யாதொரு வண்ண மறிந்திடும் பொற்பூவைக்
கார்தரு வண்ணங் கருதின கைவரு
நார்தரு வண்ண நடந்திடு நீயே. (௭)

1326. நடந்திடும் பாரினி னன்மைக ளெல்லாங்
கடந்திடுங் காலனு மெண்ணிய நாளும்
படர்ந்திடு நாமமும் பாய்கதிர் போல
வடைந்திடு வண்ண மடைந்திடு நீயே. (௮)

---

1323. கண்டிடும் சக்கரம் வெள்ளி பொன் செம்பிடை=சக்கரத்தை வெள்ளி பொன் தாமிரத் தகடுகளில் எழுதுங்கள்; மண்டலம் = ஒரு மண்டலம் (நாற்பத்தைந்து நாள் ஓத); நினைக்கு மளவே = சிந்தித்த வப்பொழுதே.

1324. அச்சிரீம் அக்கிலீமீறு = அந்தச்சிரீயும் அக்கிலீயுமென்பன விறுதியாக; நெல்லொடு புல்லினை=சம்பாநெல்லும் அறுகம் புல்லும் (அர்ச்சனைத் திரவியங்களாக); நேர்தருவாள் = பிரத்தியட்சமாவாள்.

1325. அத்திருநாயகி = அந்தச் சர்வைசுவரிய காரணியானதேவி; யாதொருவண்ண மறிந்திடும் = எவ்விதமான நிறமுடையாளென வுணரவிரும்பின்; பொற்பூவைக் கார்தருவண்ணம்= அழகிய காயாம் பூப்போலுங் கரிய வண்ணமாம்; நார்தரு வண்ணம்=(தேவிக்கு) விருப்பமுண்டாம்படி.

1326. கடந்திடுங் காலனு மெண்ணிய நாளும்=யமனையும் அவனாற் கருதப்பட்டுள்ள ஆயுளெல்லையும் கழிந்துபோம்; படர்ந்திடு நாமமும்=பெயரும் பரவும்; பாய்கதிர்போல=பரவுகின்ற கிரணங்களையுடைய சூரியனைப்போல; அடைந்திடு நீயே= நீ தேவியை யடைவாயாக.

1327. அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுட னெல்லா
மடைந்திடு மாதி யருளுந் திருவு
மடைந்திடு மண்டத் தமரர்கள் வாழ்வு
மடைந்திடும் வண்ண மறிந்திடு நீயே. (௯)

1328. அறிந்திடு வார்க ளமரர்க ளாகத்
தெரிந்திடு வானோர் தேவர்க டேவன்
பரிந்திடும் வானவன் பாய்புனல் சூடி
முரிந்திடு வானை முயன்றிடு நீரே. (௧௦)

1329. நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்
பாரணி யும்ஹிரீ முன்ஸ்ரீ மீறுந்
தாரணி யும்புகழ் தையனல் லாடனைக்
காரணி யும்பொழிற் கண்டுகொ ளீரே. (௧௧)

1330. கண்டுகொள் ளுந்தணி நாயகி தன்னையு
மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும்
பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர்
நின்று கொளுநிலை பேறுடை யாளையே. (௧௨)

---

1327. கல்=இரத்தினங்கள்; திருவும் = (மற்றுமுள்ள) செல்வமும் அல்லது முத்திச்செல்வம்; அமரர்கள் வாழ்வும்=தேவருடைய போகங்களும்; வண்ணமறிந்திடு=அம்முறைமையையுணர்ந்துகொள்க.

1328. அமரர்களாகத் தெரிந்திடு = தேவர்களாமாறு செய்கின்ற; வானோர் தேவர்கள் தேவன்=விண்ணுலக வாசிகளாகிய தேவர்களுக்குத் தேவன்; பரிந்திடும்=(அடியார்க்கு)இரங்கியருளும்; பாய்புனல்=கங்காநதி; முரிந்திடுவானை=(முரித்திடுவானை) சங்கரிக்கின்றவனை.

1329. நீர்பணி=நீங்கள் வணங்குதற்குரிய; வண்ணம்=(வர்ணம்) எழுத்துக்கள்; பாரணியும்=உலகம் புகழ்கின்ற; தாரணியும் புகழ்=(புகழ்த்தாரணியும்) புகழ்ச்சியை மாலையாகவணிந்த; காரணியும் பொழில்=மேகங்கள் தங்கும் கடம்பவனம்.

1330. மொண்டுகொளும் = அள்ளிக்கொள்ளும்படியான; முகவசியம்=முகவசீகரம், அழகு எனினுமாம்; பரஞ்சுடர் நின்று கொளும்=பரசிவமானது மஞ்சமாக நின்று தாங்கும்படியான; நிலைபேறு=தானமாக.

1331. பேறுடை யாடன் பெருமையை யெண்ணிடி
னாடுடை யார்களு நம்வச மாகுவர்
மாறுடை யார்களும் வாழ்வது தானிலை
கூறுடை யாளையுங் கூறுமி னீரே. (கங)

1332. கூறுமி னெட்டுத் திசைக்குந் தலைவியை
யாறுமி னண்டத் தமரர்கள் வாழ்வென
மாறுமின் வையம் வரும்வழி தன்னையுந்
தேறுமி னாயகி சேவடி சேர்ந்தே. (கச)

1333. சேவடி சேரச் செறிய விருந்தவர்
நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர்
பூவடி யிட்டுப் பொலிய விருந்தவர்
மாவடி காணும் வகையறி வாரே. (கரு)

1334. ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கர
மைம்முத லாக வமர்ந்திரீ மீருகு
மம்முத லாகி யவர்க்குடை யாடனை
மைம்முத லாக வழுத்திடு நீயே. (கசா)

---

1331. நாடுடையார்கள் = சீமையை யாளு மரசர்கள்; மாறுடையார்கள்=பகைவர்கள்; கூறுடையாளை = ஈசனது ஒருபாதியில் வசிப்பவளை.

1332. ஆறுமின்=ஆசையை யடக்கிக்கொள்ளுங்கள் ; மாறுமின்= மாற்றிக்கொள்ளுங்கள்;வையம் வரும்வழி=உலகில்பிறத்தல்; தேறுமின்=தெளிவடையுங்கள்.

1333. இருந்தவர்=பெரியதவசிகள்; நாவடியுள்ளே = உண்ணாக்கினாலே ; நவின்று=உச்சரித்து; பூவடியிட்டு=பூவினால் திருவடியில் அர்ச்சித்து; மாவடி=பொருந்திய திருவடி (அது மோட்சம்).

1334. ஐம்முதலாக=ஐயும் என்பது முதலாக; இரீமீருகும்=(ஹ்றீம்) இரீமீருகவுள்ளதாம்; அம்முதலாகி யவர்க்குடையாடனை= அகர முதலாகிய அக்கரசொரூபியாய் அந்தப் பரமசிவனுக்குரிய தேவியை; மைம்முதலாக=மாயைக்குத் தலைவியாக.

1335. வழுத்திடு நாவுக் கரசிவ டன்னைப்
பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந்
தொகுத்தொரு நாவிடைச் சொல்ல வல்லானை
முகத்துளு முன்னெழக் கண்டுகொ ளீரே. (கஎ)

1336. கண்டவிச் சக்கர நாவி லெழுதிடிற்
கொண்டவிம் மந்திரங் கூத்தன் குறியதா
மன்றினுள் வித்தையு மானுடர் கையதாய்
வென்றிடும் வையக மெல்லியன் மேவியே. (கஅ)

1337. மெல்லிய ளாகிய மெய்ப்பொரு ளாடனைச்
சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்
பல்லியல் பாகப் பரந்தெழு நாட்பல
நல்லியல் பாலே நடந்திடுந் தானே. (கக)

1338. நடந்திடு நாவினு ணன்மைக ளெல்லாந்
தொடர்ந்திடுஞ் சொல்லொடு சொற்பொரு டானுங்
கடந்திடுங் கல்விக் கரசிவ ளாகப்
படர்ந்திடும் பாரிற் பகையில்லை தானே. (உ௦)

---

1335. நாவுக்கரசு = வாகீசுவரி; ஒரு நாவிடை = (தன்னைத்துதிக்குமவனது) ஒரு நாவினாலே; முகத்துளும் = வாக்கிலும்.

1336. கூத்தன் குறியது = தாண்டவ மூர்த்தியின் சொரூபமேயாம்; மன்றினுள்வித்தை=சிதம்பர சக்கரம்; மெல்லியல்=வாகீசுவரி.

1337. சொல்லியலால் = உபதேசம்பெற்ற முறைப்படி; பல்லியல் பாகப் பரந்தெழும் = (நன்மையுந் தீமையு மாறி மாறி வருதலால்) பல வேறுபாடுகள் நிறைந்ததாய்த் தோன்றுகிற; நல்லியல்பு=சுபகரம்.

1338. சொல்லொடு சொற்பொருடானுங் கடந்திடும்=சொல்லுக்கும் பொருளுக்கு மெட்டாதிருக்கும்; கல்விக்கரசிவளாக= சத்தப் பிரபஞ்சத்துக் கிறைவியிவளாக; படர்ந்திடும் பாரில்= பரவிய உலகத்தில்,

1339. பகையில்லை கௌமுத லையது வீறு
நகையில்லை சக்கர நல்லறி வார்க்கு
மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம்
வகையில்லை யாக வணங்கிடுந் தானே. (௨௧)

1340. வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை
நலங்கிடு நல்லுயி ரானவை யெல்லாங்
கலங்கிடுங் காம வெகுளி மயக்கந்
தொடங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே. (௨௨)

1341. தானே கழறித் தணியவும் வல்லனாய்த்
தானே நினைத்தவை சொல்லவும் வல்லனாய்த்
தானே தனிநடங் கண்டவ டன்னையுந்
தானே வணங்கித் தலைவனு மாமே. (௨௩)

1342. ஆமே யனைத்துயி ராகிய வம்மையுந்
தாமே சகலமு மீன்றவத் தையனு
மாமே யவளடி போற்றி வணங்கிடிற்
போமே வினைகளும் புண்ணிய னாகுமே. (௨௪)

1343. புண்ணிய னாகிப் பொருந்தி புலகெங்குங்
கண்ணிய னாகிக் கலந்தங் கிருந்திடுந்
தண்ணிய னாகித் தரணி முழுதுக்கு
மண்ணிய னாக வமர்ந்திருந் தானே. (௨௫)

---

1339. கௌமுத லையது ஈறு=கௌ என்னுமெழுத்து முதலாக ஐயென்னுமெழுத்திறுதியாக (உச்சரிப்பின்); நகையில்லை=அவமான மடைதலில்லை; பல்லுருவெல்லாம்=(எழுவகைத் தோற்றமெண்பத்து நான்கிலட்சம் பேதமான) சீவவர்க்கங்களெல்லாம்; வகையில்லையாக=(இவை வெல்லும்) திறமின்மையால்.

1340. தத்துவ நாயகி=பிருதிவியாதி நாதமீறான தத்துவங்களுக்கு இறைவி; நலங்கிடும்=அடங்கும்.

1341. தானேகழறித் தணியவும்=(தனக்குமேற் பேசுவோரின்மையால்) தானொருவனே சபையில்பேசித் தணிவுற்றிருக்கவும்; நினைத்தவை=(பிறர்மனதிற்) கருதினவற்றை; தனிநடம்=சங்கார காலத்தில் தனித்திருந்து செய்யும் நடனம்; தலைவனுமாம்=உலகிற்கு இறைவனுமாம், அல்லது சிவசொரூபனுமாம்.

1342. அனைத்துயிராகிய அம்மை=சகல ஜீவசொரூபமுந் தானான ஈசுவரி; சகலமும்=ஜடசித் தனைத்தும்.

1343. கண்ணியன்=மதிக்கப்படுவன்; தண்ணியன்=சுகமளிப்பவன்; அண்ணியன்=அருகிலிருப்பவன் (உறவினன்).

1344. தானது கிரீங் கௌவது வீரு
நானது சக்கர நன்றறி வார்க்கெலாங்
கானது கன்னி கலந்த பராசத்தி
கேளது வையங் கிளரொளி யானதே. (உசு)

1345. ஒளிக்கும் பராசத்தி யுள்ளே யமரிற்
களிக்குமிச் சிந்தையிற் காரணங் காட்டித்
தெளிக்கு மழையுடன் செல்வ முண்டாக்கு
மளிக்கு மிவளை யறிந்துகொள் வார்க்கே. (உஎ)

1346. அறிந்திடுஞ் சக்கர மருச்சனை யோடே
வெறிந்திடும் வையத் திடரவை காவன்
மறிந்திடு மன்னனும் வந்தனை செய்யும்
பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே. (உஅ)

1347. புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங்
குகையில்லை கொல்வதி லாமை யினாலே
வகையில்லை வாழ்கின்ற மன்னுயிர்க் கெல்லாஞ்
சிகையில்லை சக்கரஞ் சேர்ந்தவர் தாமே. (உகூ)

---

1344. கிரீம் கௌவதுவீருக=கிரீம் முதல் கௌ இறுதியாக (மாறி); நானது சக்கரம் = நான் (அறிந்துள்ள) அந்த நவாக்கரி யந்திரம்; கான்=கடம்பாடவி; கேளது=உறவானது.

1345. ஒளிக்கும்=(வஞ்சகர்க்கு) மறைந்திருக்கும்; காரணங்காட்டி= காரணப்பொருளான சிவத்தைத் தரிசிப்பித்து, அல்லது எவ்விஷயத்துக்கும் ஏதுவினை யுணர்த்தி; தெளிக்கும்= தெளிவிக்கும்; அளிக்கும்=காப்பாற்றுவாள்.

1346. எறிந்திடும் = விலக்கும்; காவல் மறிந்திடும் = (மறித்திடும்) சிறையிலிடுகின்ற; பொறிந்திடும் = கலக்கஞ்செய்கின்ற; புகை = துக்கம்.

1347. புகையில்லை = துக்கமில்லை; சொல்லிய பொன்னொளி = (யோகிகட் குண்டாமென்று) கூறிய பொன்போலுமொளி; குகை=நரகம் அல்லது கர்ப்பாசயம்; வகை=வேறுபாடு; சிகை=முடிவு.

1348. சேர்ந்தவ ரென்றுந் திசையொளி யானவர்
காய்ந்தெழு மேல்வினை காணகி லாதவர்
பாய்ந்தெழு முள்ளொளி பாரிற் பரந்தது
மாய்ந்தது காரிருண் மாறொளி தானே. (௩௦)

1349. ஒளியது ஹௌமுன் கிரீமது வீருங்
களியது சக்கரங் கண்டறி வார்க்குத்
தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப்
பணிவது பஞ்சாக் கரமது வாமே. (௩௧)

1350. ஆமே சதாசிவ நாயகி யானவ
ளாமே யதோமுகத் துள்ளறி வானவ
ளாமே சுவையொளி யூறோசை கண்டவ
ளாமே யனைத்துயிர் தன்னுளு மாமே. (௩௨)

1351. தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்
டென்னுளு மாகி யிடம்பெற நின்றவண்
மண்ணுளு நீரனல் காலுளும் வானுளுங்
கண்ணுளு மெய்யுளுங் காணலு மாமே. (௩௩)

---

1348. திசையொளியானவர் = திக்குக்களுக்குத் தீபம்போல்பவர், அல்லது திக்குக்களில் விளங்கும் மதிகதிர்போல்பவர்; மேல்வினை = ஆகாமிய கன்மம், அல்லது சஞ்சித கன்மம்; உள்ளொளி = ஞானவொளி, பரசிவமெனினுமாம்; காரிருள் = ஆணவவிருள்; மாறொளி=மயக்கவறிவாகிய ஒளி.

1349. ஹௌமுன் கிரீமது வீரும்=ஹௌ என்பது முதலாகக் கிரீம் என்பது இறுதியாக (மாற); களியது=களிப்பினைத்தருவது; ஞானமுஞ் சிந்தையும் = அறிவும் மனமும்; பஞ்சாக்கரமது வாமே=அந்த நவாக்கரியே பஞ்சாக்கரமுமாம்.

1350. அதோமுகத்துள்ளு மறிவானவள்=கீழ்நோக்கிய முகமுள்ள விலங்காதி ஜீவ வர்க்கங்களுக்குள்ளு மறிவாய் விளங்குபவள், அல்லது அசுத்த மாயாப் பிரபஞ்சத்துள்ளும் அறிவாய் விளங்குபவ ளெனினுமாம்.

1351. தன்னுளுமாகித் தரணிமுழுதுங்கொண்டு=தனக்குள்ளே பிரபஞ்சமெல்லாவற்றையு மடக்கிக்கொண்டு; இடம்பெற = வசிக்குமிடமாக; கண்ணுளும் = கண்ணிலேயும் (ஊனக் கண்களினுலும்); மெய்யுளும்=சரீரத்தினுள்ளேயும்.

1352. காணலு மாகுங் கலந்துயிர் செய்வன
காணலு மாகுங் கருத்து ளிருந்திடிற்
காணலு மாகுங் கலந்து வழிசெயக்
காணலு மாகுங் கருத்துற நில்லே. (௩௪)

1353. நின்றிடு மேழு புவனமு மொன்றாகக்
கண்டிடு முள்ளங் கலந்தெங்குந் தானாகக்
கொண்டிடு வையங் குணம்பல தன்னையும்
விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே. (௩௫)

1354. மெய்ப்பொரு ளௌமுதல் ஹௌவது வீறாக்
கைப்பொரு ளாகக் கலந்தெழு சக்கரந்
தற்பொரு ளாகச் சமைந்த முதேசுவரி
நற்பொரு ளாக நடுவிருந் தாளே. (௩௬)

1355. தாளதி னுள்ளே சமைந்தமு தேசுவரி
காலது கொண்டு கலந்துற வீசிடி
னாளது நாளும் புதுமைகள் கண்டபின்
கேளது காயமுங் கேடில்லை காணுமே. (௩௭)

---

1352. கலந்துயிர் செய்வன=உயிரினுட் கலந்திருந்து அவை செய்கின்றவைகள்; கருத்துளிருந்திடின் = அவற்றின் மனத்திலேதேனுமிருப்பினும்; கலந்து வழிசெய=அவற்றோடு கலந்து தன்றொழில் அவற்றின் தொழிலாகச் செய்ய.

1353. ஒன்றாகக்கண்டிடும்=போகங்களினுயர்வு தாழ்வறச் சமத்துவ மாகக்காணும், அல்லது ஏக காலத்தில் காணும்; எங்குந் தானாக=எவ்விடத்து மான்மசொரூப மாக.

1354. ஔமுதல் ஹௌவது வீறாக=ஔகாரமுதல் ஹௌ இறுதியாக; கலந்தெழு சக்கரம்=பொருந்தியுள்ள யந்திரம் (மாறியெழுதப்பட்டுள்ள சக்கரம்); தற்பொருளாக = தத்பதப் பொருளாக; அமுதேசுவரி = அமுதேசுவரியம்பிகை; நற்பொருளாக = அவ்வியந்திரத்தின் நல்ல பிரமேயப்பொருளாக.

1355. தாளதினுள்ளே=(சகத்திராவிதழ்ப் பூவிற்கு) தாள்போலுஞ் சுழுமுனையிலே; காலதுகொண்டு=பிராணவாயுவொடு கூட; கலந்துறவீசிடில் = பரசிவத்தோடு கலக்கும்படி மேலேறச் செய்திடில்; நாளது நாளும்=நாளுக்குநாள்.

1356. கேடில்லை காணுங் கிளரொளி கண்டபி
னூடில்லை காணு நாண்முத லற்றபின்
மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்
காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே. (௯அ)

1357. உற்றிட மெல்லா முலப்பில்பா ழாக்கிக்
கற்றிட மெல்லாங் கடுவெளி யானது
மற்றிட மில்லை வழியில்லை தானில்லை
சற்றிட மில்லை சலிப்பற நின்றிடே. (௯௯)

1358. நின்றிடு மேழ்கட லேழ்புவி யெல்லா
நின்றிடு முள்ள நினைத்தவை தானெக்கு
நன்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட
நின்றிடு மேலை விளக்கொளி தானே. (௪0)

---

1356. நாடு இல்லை=தேசபேதமுமில்லை; நாண்முதலற்றபின்=நாள் முதலிய காலவரையறை யொழிந்த பின்னர்; மாடில்லை= முன், பின், கீழ், மேல் என்னும் பக்க வேறுபாடுமில்லை; காடு=பல துக்கம் நிறைந்த பிரபஞ்சம் (உவம ஆகுபெயர்).

1357. உலப்பில்பாழாக்கி = மாயாகாரியந் தோன்றுவா றொழித்து; கற்றிடமெல்லாம் = (முன்னர்) பிரபஞ்சத்திலறிந்த வெல்லாம்; கடுவெளியானது=வெட்டவெளி (இன்மை) ஆயிற்று; மற்றிடமில்லை=(தான் பூரணனானதால்) தனக்கு வேறான இடமில்லை; வழியில்லை = (போதல் வருதலுக்குரிய) மார்க்கமில்லை; தானில்லை = (சிவமேயாய்விட்டதனால்) தானெனப்படும் பொருளில்லை; சற்றிடமில்லை = (தான் அசைதற்குச்) சிறிதுமிடமில்லை; சலிப்பற நின்றிடே = அசைவற நிற்பாயாக.

1358. நின்றிடு மேழ்கடலேழ்புவியெல்லாம் = (தானே யாதாரமாக நிற்றலால்) ஏழ் கடல்புவி யெல்லாந் தன்னிடத்திலேயே நிலைபெறும்; நின்றிடு முள்ளம் = நிலைபெற்றமனம்; நினைத்தவைதானெக்கும்=கருதிய வினைத்து மொப்ப முன்னிற்கும்; சத்தி நிலைபெற=தேவி (இதயத்தில்) நிலையாயிருக்க; கண்டிட நின்றிடும் = பார்த்த விடமெல்லாம் சத்தியே தோன்றி நிற்கும்; மேலை விளக்கொளி = மேனிலத்துள்ள தீபவொளி.

1359. விளக்கொளி யௌமுத வௌவது வீறு
விளக்கொளிச் சக்கர மெய்ப்பொரு ளாகும்
விளக்கொளி யாகிய மின்கொடி யாளை
விளக்கொளி யாகி விளங்கிடு நீயே. (சுக)

1360. விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லில்
விளங்கிடு மெல்லிய லானது வாகும்
விளங்கிடு மெய்ந்நின்ற ஞானப் பொருளை
விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே. (சுஉ)

1361. தானே வெளியென வெங்கு நிறைந்தவ
டானே பரம வெளியது வானவ
டானே சகலமு மாகி யழித்தவ
டானே யணைத்துள வண்ட சகலமே. (சுங)

1362. அண்டத்தி னுள்ளே யளப்பரி தானவள்
பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தி னுள்ளே குணம்பல காணிலுங்
கண்டத்தி னின்ற கலப்பறி யார்களே. (சுச)

---

1359. யௌமுத வௌவதுவீறு=யௌமுதல் ஔ ஈறாக (மாற); விளக்கொளிச் சக்கரம்=(யாவற்றையு)முணர்த்தும்ஒளியாகிய நவாக்கரி சக்கரம்; விளக்கொளியாகிய மின்கொடியாளை= (அச்சக்கரத்திலங்கும்) தீபச்சுடராகிய மின்கொடிபோன்ற தேவியை (தரிசித்து); விளக்கொளியாகி விளங்கிடு நீயே= நீயும் (உலகத்துக்கு) தீபச்சுடராய் விளங்குவாயாக.

1360. மேல்வரும் = நவாக்கரியுணர்ந்தபின்; மெல்லியலானது வாகும் = தேவியே யாகும்; விளங்கிடுவார்கள்=விளக்கப் பெற்றவர்கள்; விளங்கினர்=தாமும் உலகத்துக்கு விளக்கு வார்கள்; "விளங்கு", என்னும் தன்வினை பிறவினைப் பொருடந்து நின்றது.

1361. வெளியென=ஆகாயத்தைப்போல; பரமவெளி=பரமாகாயம் (ஞானகாய மெனினுமாம்); சகலமும் = சரம் அசரமாகிய எல்லாவுயிரும்; அண்ட சகலம்=(சகல அண்டம்) எல்லா வுலகும்.

1362. பிண்டம்=சரீரம்; குண்டம்=(அக்கினித் தானமான) நாபித் தானம்; குணம்=நன்மை; கண்டம்=(வைகரிவாக்குப் பிறக்கு மிடமாகிய) விசுத்தி.

1363. கலப்பறி யார்கடல் சூழுல கெல்லா
முலப்பறி யாருட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் தானே (௬௫)

1364. தானே யெழுந்தவச் சக்கரஞ் சொல்லிடின்
மானே மதிவரை பத்திட்டு வைத்தபின்
றேனே யிரேகை திகைப்பற வொன்பதிற்
றூனே கலந்த வறையெண்பத் தொன்றுமே. (௬௬)

1365. ஒன்றிய சக்கர மோதிடும் வேளையில்
வென்றிகொண் மேனி மதிவட்டம் பொன்மையாங்
கன்றிய ரேகை கலந்திடுஞ் செம்மையி
லென்றிய லம்மை யெழுத்தவை பச்சையே. (௬௭)

1366. ஏய்ந்த மரவுரி தன்னி லெழுதிய
வாய்ந்தவிப் பெண்ணெண்பத் தொன்றி னிரைத்த
காய்ந்தவி நெய்யுட் கலந்துட னேமமு [பின்
மாய்ந்தலத் தாமுயி ராகுதி பண்ணுமே. (௬௮)

---

1363. கலப்பு=கலந்திருத்தல், அல்லது தோற்றம்; உலப்பு=அழிதல், அல்லது ஒடுக்கம்; சிலப்பு=(சிலம்பு) ஒலித்தல், இங்கே பேசுவித்தல்; தலைப்பறி = (தலைப்பொறி யெனற்பாலது தலைப்பறியென மருவிற்று) தலையெழுத்து; சமைந்தவர்=பெற்றவர்.

1364. தானேயெழுந்த=சுயம்புவாகத் தோன்றிய; மானே=(மன் என்பதன் விகாரம்) (மாணவனுகிய) இந்திரனே; வரை பத்திட்டு வைத்தபின் = குறுக்கு நெடுக்குமாகப் பத்துக் கோடு கிழித்திட்டபின்; இரேகை = ரேகைக்குட்பட்ட அறை; ஒன்பதில் = ஒன்பதினுல்; கலந்தவறை யெண்பத் தொன்றுமே=உண்டான அறை எண்பத்தொன்ருகும்.

1365. மேனி மதிவட்டம்=சக்கரசொரூபத்தின் (மேலிடும்) சந்திரன்போலும் வட்டமான ரேகை; பொன்மையாம் = பொன் வண்ணமாயிடுதலாம்; கன்றிய ரேகை=அழுந்த இடப்பட்ட வேனைய ரேகை; செம்மையில்=செந்நிறத்தாயிடுதலாம்; என்று இயல்=(உதயகால) சூரியன்போலும்; எழுத்து = மந்திர அக்கரங்கள்; பச்சையே=பசிய நிறமுள்ளனவா யிடுதலாம்.

1366. மரவுரி=மரப்பட்டை; பெண்=(ஆகுபெயர்) தேவி மந்திரம்; எண்பத்தொன்றில் நிரைத்தபின் = யந்திரத்தின் எண்பத்தொரு அறைகளிலும் (முறையாக மாறி) எழுதிய பின்னர்; காய்ந்தவி = சமைத்த அவிசு (சோறு); ஆந்தலத்து=செய்யத் தக்கவிடத்தில்; உயிராகுதி=பிராணுகுதி.

1367. பண்ணிய பொன்னைப் பரப்பற நீபிடி
யெண்ணிய நாட்களி லின்பமு மெய்திடு
நண்ணிய நாமமு நான்முக னொத்தபின்
றுண்ணென நேயநற் சேர்க்கலு மாகுமே. (சகூ)

1368. ஆகின்ற சந்தனங் குங்குமங் கத்தூரி
போகின்ற சாந்து சவாது புழுகுநெ
யாகின்ற கர்ப்பூர மாகோ சனநீருஞ்
சேர்கின்ற வொன்பதுஞ் சேரநீ வைத்திடே. (ருய)

1369. வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற்
கைச்சிறு கொங்கை கலந்தெழு கன்னியைத்
தச்சிது வாகச் சமைந்தவிம் மந்திர
மர்ச்சனை யாயிர மாயிரஞ் சிந்தியே. (ருக)

1370. சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியா
லெந்தை கரங்க ளிருமூன்று முள்ளது
பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு
முந்தகி லீமெழ முன்னிருந் தாளே. (ருஉ)

---

1367. பண்ணியபொன்னை = (இயந்திரவடிவமாக) செய்யப்பட்ட பொன்போலுந் தேவியை; பரப்பு அற = அவசரப்படாமல், அல்லது இடம்பஞ் செய்யாமல்; எண்ணிய நாள்=(மந்திர சித்தியாதற்கென) கருதப்பட்டுள்ள வரையறைநாள்; நாமமும் நான்முகனொத்தபின் = பேர் பிரமனை யொத்தபின் (அது வேதா, அறிவுள்ளவனென்பது பொருள்); நேய நற் சேர்க்கலு மாம் = (நல்நேயம் சேர்க்கலுமாம்) நல்ல நேயப் பொருளாகிய சிவத்தொடு (உன்னை) கூட்டுதலுமாகும்.

1368. போகின்றசாந்து = (வாசனை) பரவுகின்ற கலவைச்சாந்து; கர்ப்பூரம்=பச்சைக்கர்ப்பூரம்; ஆகோசனம்=கோரோசனை.

1369. பொன்=தங்கவாபரணம், அல்லது சுவர்ண புஷ்பம்; நோக்கிடில்=செய்திடில்; கை=அழகு; தச்சு=வசியம்; அர்ச்சனை யாயிரம்=சகத்திர நாமார்ச்சனை; ஆயிரஞ்சிந்தியே=ஆயிரம் ஆவர்த்தி ஜபிக்க.

1370. எந்தை=(தாயாதலேயன்றி) தந்தையுமானதேவி; பந்தம்= மழு; படை=அங்குசம்; கிலீமெழ = கிலீம் என்னும் பீஜத்தில் தோன்றுமாறு.

1371. இருந்தனர் சத்திக ளறுபத்து நால்வ
ரிருந்தனர் கன்னிக ளெண்வகை யெண்ம
ரிருந்தனர் சூழ வெதிர்சக்க ரத்தே
யிருந்த கரமிரு வில்லம்பு கொண்டே. (ருங)

1372. கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க்
கண்டவிம் முத்தங் கனறிரு மேனியாய்ப்
பண்டமர் சோதி படரித ழானவ
ளுண்டங் கொருத்தி யுணரவல் லாருக்கே. (ருச)

1373. உணர்ந்திருந் துள்ளே பொருத்தியை நோக்கிற்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியு
மணந்தெழு மோசை யொலியது காணுந்
தணந்தெழு சக்கரந் தான்றரு வாளே. (ருரு)

1374. தருவழி யாகிய தத்துவ ஞானங்
குருவழி யாகுங் குணங்களு ணின்று
கருவழி யாகுங் கணக்கை யறுத்துப்
பெருவழி யாக்கும் பேரொளி தானே. (ருசா)

---

1371. சத்திகளறுபத்து நால்வர்=அறுபத்து நான்கு யோகினி சத்திகள்; கன்னிகளெண்வகை யெண்மர்=மதிக்குந்தன்மையுள்ள வசினியாதி கன்னியரெண்மர்; சூழவெதிர் = (எதிர்சூழ) சந்நிதியில் சூழ்ந்திருக்க; காமிருவில்லம்புகொண்டே=இரு கரங்களிலும் வில்லும் அம்புங்கொண்டு.

1372. கொண்டகனகம் = (கனகங்கொண்ட) சுவர்ணத்தாலியன்ற; கண்டவிம்முத்தம்=விளங்குகின்ற பருத்தமுத்து; கனல் திருமேனி=அக்கினிபோலும்(பிரகாசிக்கும்) செந்நிறமேனி; பண்டமர் சோதி படரிதழ் = அநாதியே யியல்பிலமைந்த செவ்வொளிபரவும் அதரம்.

1373. எங்கும்=எவ்விடத்திருப்பினும்; மணந்து=கலந்து; ஓசை யொலி=நாதவொலி; தணந்தெழு சக்கரம்=(எழுசக்கரம் தணந்து) தானமர்ந்திருக்கும் சக்கரத்தினின்றும் வேறாகத் தோன்றி.

1374. தருவழியாகிய=முத்தியருளு மார்க்கமாகிய; குருவழியாகும்= குருமூலமாய்க் கிடைக்கும்; கணக்கு = காரணம் (அது கன்மம்); பெருவழி=பெருமையுள்ள முத்திநெறி.

1375. பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்
சீரொளி யாகித் திகழ்தரு நாயகி
காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்
பாரொளி யாகப் பரந்துநின் றாளே. (ருஎ)

1376. பரந்த கரமிரு பங்கய மேந்திக்
குவிந்த கரமிரு கொய்தளிர்ப் பாணி
பரிந்தருள் கொங்கைகண் முத்தார் பவள
மிருந்தநல் லாடை மணிபொதிந் தன்றே. (ருஅ)

1377. மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை
யணிபவ ளன்றி யிருளில்லை யாகுந்
தணிபவர் நெஞ்சினுட் டன்னரு ளாகிப்
பணிபவர்க் கன்றோ பரகதி யாமே. (ருகூ)

1378. பரந்திருந் துள்ளே யறுபது சத்தி
கரந்தன கன்னிக ளப்படி சூழ
மலர்ந்திரு கையின் மலரவை யேந்திச்
சிறந்தவ ரேத்துஞ் சிரீந்தன மாமே. (கூ0)

---

1375. பேரொளி=அகண்டவொளி; பெரியபெருஞ்சுடர்=முச்சுடரினு மேம்பட்ட ஒளி; காரொளியாகிய கன்னிகை=கரியநிறமுள்ள சத்தி பேதமான வாகீசுவரி; பாரொளியாக=உலகத்துக்கொளியாக (சகலஜீவருக்கு மறிவொளியாக).

1376. பரந்தகரம், குவிந்தகரம்—சின்முத்திரையும் அபயமுந்தரித்த கரமாதல் விளக்கிற்று; பாணி=சாயல்; அருள்கொங்கை=(வாக்கை விரும்பு மன்பர்க்குப் பால்) அருளுங்கொங்கை; மணிபொதிந்தன்றே=இரத்தினங்களினாலாயது.

1377. இருளில்லையாகும் = கரியமணிகளாலாய பணி யணிபவளில்லையாம்; தணிபவர்=அடக்கமுடையாராயிருப்பர்; தன்னருளாகி=தனது கருணையினால் தோன்றி (இருப்பவள்).

1378. உள்ளே=சக்கரத்தினுள்ளே; அறுபது சத்தி = முற்கூறிய யோகினிகள்; கன்னிகள்=வசினியாதியெண்பர்; சிரீம் தனமாம்=சிரீம் என்னும் பீஜமிட ஐசுவரிய முண்டாம்.

1379. தனமது வாகிய தையலை நோக்கி
மனமது வோடி மரிக்கிலோ ராண்டிற்
கனமிவை யற்றுக் கருதிய நெஞ்சந்
தினகர னிடஞ் செய்திய தாமே. (௬௧)

1380. ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்
போகின்ற பேரொளி யாய மலர்த்தாய்
போகின்ற பூரண மாக நிறைந்தபின்
சேர்கின்ற செந்தழன் மண்டல மானதே. (௬௨)

1381. ஆகின்ற மண்டலத் துள்ளே யமர்ந்தவ
ளாகின்ற வைம்பத் தறுவகை யானவ
ளாகின்ற வைம்பத் தறுசத்தி நேர்தரு
வாகின்ற வைம்பத் தறுவகை சூழவே. (௬௩)

1382. சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமா
யாங்கணி முத்த மழகிய மேனியுந்
தாங்கிய கையவை தார்கிளி ஞானமா
யேந்து கரங்க ளெடுத்தமா பாசமே. (௬௪)

---

1379. மரிக்கில்=அடங்கினல்; கனமிவையற்ற=(மனதைமேனோக்க வொட்டாது பிரபஞ்சத்தி லழுத்தும்) ஆசை முதலியன ஒழிந்து; செய்தியதாம்=காரியமுடையதாம்.

1380. முழுமலர்=பெரியதாமரைமலர்; மலர்த்தாய் = (தாய்மலர்) தேவி செல்லுதற்குரிய மலர்; அழன்மண்டலம்=அக்கினி மண்டலம்.

1381 மண்டலக்துள்ளே = அக்கினிமண்டலத்துள்ளே; ஐம்பத்தறுவகையானவள் = அக்கரம் ஐம்பத்தொன்றும் பீஜமைந்துமானவள்; சத்திநேர்தரு=(சொரூபமுதலியவற்றால்) தேவியையொத்திருக்கின்ற; ஐம்பத்தறுவகை சூழ=ஐம்பத்தாறு அக்கரதேவதைகள் சூழ.

1382. முடிபாதம்=கேசாதிபாதம்; தாங்கியகை=அன்பரை யாதரிக்குங்கை; தார்கிளி=படிக மாலையும் கிளியும்; ஞானம்=சின்முத்திரை; மாபாசம்=பெரிய பாசம் (உபலக்கணத்தால் அங்குசமுங்கொள்க).

1383. பாசம தாகிய வேரை யறுத்திட்டு
நேசம தாக நினைந்திரு மும்முளே
நாசம தெல்லா நடந்திடு மையாண்டிற்
காசினி மேலமர் கண்ணுத லாகுமே. (சுரு)

1384. கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி
பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்
விண்ணமர் சோதி விளங்க ஹ்ரீங்கார
மண்ணுடை நாயகி மண்டல மாகுமே. (சுகு)

1385. மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்
கண்டகத் துள்ளே கருதி யிருந்திடும்
விண்டகத் துள்ளே விளங்கி வருதலாற்
றண்டகத் துள்ளவை தாங்களு மாமே. (சுஎ)

1386. தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்
தோங்கி யெழுங்கலைக் குள்ளுணர் வானவ
ளோங்க வரும்பிறப் பெண்ணி யறுத்திட
வாங்கிய நாதம் வலியுட னாகுமே. (சுஅ)

---

1383. பாசமதாகிய வேரை=ஆசையாகிய வேரினை; நாசமதெல்லாம் தீமையானவையாவும்; ஐயாண்டில்=(வரையறுத்த) ஐந்து வருஷத்தில்.

1384. கண்ணுடைநாயகி=கருணையுள்ளதேவி; பண்ணுறு நாதம்= இசையொடு கூடிய நாதம்; விண்ணமர் சோதி=பரமாகாயத்தில் வீற்றிருக்கும் சிவம்; மண்ணுடைநாயகி = உலகையாளுந்தேவி; மண்டலம் ஆகும்=சூரியமண்டலம் காணப்படும் (பானுமண்டலத்தில் தேவி வீற்றிருத்தலைத் தரிசிக்கலாமென்பது).

1385. மண்டலத்துள்ளே = சூரியமண்டல மொத்த நவாக்கரியந்திரத்தில்; விண்டு=களங்கமொழிந்து; தண்டகத்து= வீணாதண்டத்தில்.

1386. நாபித்தடமலர் மண்டலத்து=நாபித்தானமாகிய மணிபூரக மண்டலத்துள்ள மலரினின்று; எழுங்கலைக்கு = தோன்றும் நாதவடிவான கலைக்கு; வாங்கியநாதம்=தோன்றுகிற நாதம்; வலியுடனாகும்=மென்மேலும் உரத்ததா யொலிக்கும்.

1387. நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்
பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம்
பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தா
ளாவுக்கு நாயகி யங்கமர்ந் தாளே. (௬௯)

1388. அன்றிரு கையி லளந்த பொருண்முறை
யின்றிரு கையி லெடுத்தவெண் குண்டிகை
மன்றது காணும் வழியது வாகவே
கண்டங் கிருந்தவர் காரணி காணுமே. (௭௦)

1389. காரணி சத்திக ளைம்பத் திரண்டெனக்
காரணி கன்னிக ளைம்பத் திருவராய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்குங்
காரணி தன்னரு ளாகிநின் றாளே. (௭௧)

1390. நின்றவிச் சத்தி நிலைபெற நின்றிடிற்
கண்டவிவ் வன்னி கலந்திடு மோராண்டிற்
கொண்ட விரதநீர் குன்றும னின்றிடின்
மன்றினி லாடு மணியது காணுமே. (௭௨)

---

1387. நாவுக்கு நாயகி=வாகீசுவரி; பூவுக்கு நாயகி=ஆயிரவிதழ்ப் பூவுக்குரிய தேவி; பாவுக்கு நாயகி=கவிகளுக்குரிய நாயகி; ஆவுக்கு நாயகி=உயிர்களுக் கிறைவி.

1388. அன்று = அநாதியில்; இருகையி லளந்த பொருண்முறை= இரு கைகளினால் (சின்முத்திரையும் புத்தகமுங் காட்டி) ஞானப்பொருளை யளவுபடுத்திக் கூறிய; வெண்குண்டிகை= வெள்ளிய கமண்டலம் (உபலக்கணத்தால் படிகவடமுங் கொள்க); வழியதுவாக = மார்க்கமுண்டாம்படி; கண்டு= காணப்பட்டு.

1389. சத்திகள்=அக்கர அதிதேவதைகளாகிய சத்திகள்; கன்னிகள்= அவ்வக்கர தெய்வங்கள்; காரணி சக்கரத்துள்ளே கரந்து= தேவி யந்திரத்தினுண் மறைந்து.

1390. நின்றவிச்சத்தி = அவ்வாறிருந்த தேவியினிடத்தில்; இவ் வன்னிகலந்திடு மோராண்டில் = இம்மண்டலத்துள்ள தீ யுயிரோடு ஒன்றி யொருவருடத்தில் கலக்கும்; மணியது காணும்=மணிநாதங் கேட்கப்படும்.

1391. கண்டவிச் சத்தி யிருதய பங்கயங்
கொண்டவித் தத்துவ நாயகி யானவள்
பண்டையவ் வாயுப் பகையை யறுத்திட
வின்றென் மனத்து ளினிதிருந் தாளே. (எங)

1392. இருந்தவிச் சத்தி யிருநாலு கையிற்
பரந்தவிப் பூங்கிளி பாச மழுவாள்
கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டே
குரந்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே. (எச)

1393. உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்
பரந்த பவளமும் பட்டாடை சாத்தி
மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து
தழைந்தங் கிருந்தவ டான்பச்சை யாமே. (எரு)

1394. பச்சை யிவளுக்குப் பாங்கிமா ராறெட்டுக்
கொச்சைய ரெண்மர்கள் கூடி வருதலாற்
கச்சணி கொங்கைகள் கையிரு காப்பதா
யெச்ச விடைச்சி யினிதிருந் தாளே. (எசு)

---

1391. கண்டவிச்சத்தி=மணிபூரகத்தில்தரிசிக்கப்பட்ட இந்தத்தேவி; இருதயபங்கயங்கொண்டவித் தத்துவநாயகி=இதய ஸ்தானமாகிய அநாகத தாமரைமலரையடைந்த வித்தத்துவங்கட்கிறைவி; பண்டை யவ்வாயுப் பகையை யறுத்திட=பழமையான அவ் வாயு பூதத்தாலாந் தீமையை விலக்கும்பொருட்டு (அநாகதம் வாயு மண்டலமாதலால் அதில் அம்மையைத் தரிசிக்க வாயுவை ஜயித்திடுவெனென்பது கொள்க).

1392. பூங்கிளி=அழகியகிளி ; இருநாலுகையெனவகுத்து, கிளி பாசம் மழு வாள் கேடகம் வில் அம்பு என ஏழு கூறினர்; ஆறு திருக்கரங்களில் பாசமாதியாறு படைகளும், ஏனையவிரு கரங்களிலும் வரதம், அபயம் இரண்டும், அபயகரத்தில் கிளியையு மமைத்துக்கொண்டு கூறுக. குரந்து(குரைத்து)= ஆரவாரித்து.

1393. மலர்ந்தெழுகொங்கை=அடிபரந்து நிவந்தகொங்கை; பச்சையாமே=(அத்தேவியினிறம்) பச்சையாம்.

1394. பாங்கிமார்=பக்கத்திருக்கும் பரிவாரப்பெண்கள்; கொச்சையரெண்பர்=மழலை மொழியுடைய தோழியரெண்மர்;கையிரு= (இருகை) இருபுறத்தும் ; எச்ச=குறைந்த (எய்த்தவென்பதன் மரூஉ வெனினுமாம்).

1395. தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக்
காலது வாகக் கலந்துகொள் ளென்று
மாலது வாக வழிபாடு செய்துநீ
பாலது போலப் பரந்தெழு விண்ணிலே. (எ எ)

1396. விண்ணமர் நாபி யிருதய மாங்கிடைக்
கண்ணமர் கூபங் கலந்து வருதலாற்
பண்ணமர்ந் தாதித்த மண்டல மானது
தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே. (எ அ)

1397. கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள
தாபத்துச் சத்தி தயங்கி வருதலா
லாபத்துக் கைக ளடைந்தன நாலைந்து
பாச மறுக்கப் பரந்தன சூலமே. (எ கூ)

1398. சூலந்தண் டொள்வாள் சுடர்பறை ஞானமாய்
வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு
காலம்பூப் பாச மழுகத்தி கைக்கொண்டு
கோலஞ்சேர் சங்கு குவிந்தகை யெண்ணதே. (அ0)

---

1395. தாளதினுள்ளே=(தாமரை)நாளம்போலும் பிரமரந்திரத்திலே; காலதுவாக = (அதுகாலாக) பிராணவாயுவோ டபேதமாக; மால்=விருப்பம்; பாலதுபோல=பாலைப்போல(களங்கமற்று) விண்ணிலே=ஆகாய ஸ்தானமாகிய புருவமத்திய ஸ்தானத்திலே.

1396. விண்=ஆகாயம் (புருவமத்தியம்); நாபியிருதயமாங் கிடைக் கண் = மணிபூரகம் அநாகதத்துக்கு மிடையிலே; அமர் கூபம்=உள்ளகிணறு,இதுவிசுத்தி;) மதிமண்டலத்தமிர்தம் பெருகிவிசுத்தியில் விழுந்து நிறைதலா லதைக் கூபமென்றார்); தண்ணமர்கூபம்=குளிர்ச்சிபொருந்திய கிணறு.

1397. தாபத்துச்சத்தி=(ஆதித்தமண்டலம்)வெப்பத்துடன் பொருந்திய சத்தி; ஆபத்துக்கைகள் = ஆபத்துக்காலத்திலுதவுங் கைகள்; சூலம்=சூலமுதலிய படைகள்.

1398. தண்டு = கதை; பறை=ஓர்வாத்தியம், (பறனையென்பதன் றிரிபு எனக் கொள்ளினுமாம்); கத்திகை=மாலை.

1399. எண்ணமர் சத்திக ளைம்பத்து நாலுட
னெண்ணமர் சத்திக ளைம்பத்து நால்வரா
மெண்ணிய பூவித ழுள்ளே யிருந்தவ
ளெண்ணிய வெண்ணங் கடந்துநின் றாளே. (அக)

1400. கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு
தொடர்ந்தணி முத்துப் பவளங் கச்சாகப்
படர்ந்தல்குற் பட்டாடை பாதச் சிலம்பு
மடந்தை சிறியவள் வந்துநின் றாளே. (அஉ)

1401. நின்றவிச் சத்தி நிரந்தர மாகவே
கண்டிடு மேரு வணிமாதி தானாகப்
பண்டைய வானின் பகட்டை யறுத்திட
வொன்றிய தீப முணர்ந்தார்க்குண் டாமே. (அங)

1402. உண்டோ ரதோமுக முத்தம மானது
கண்டவிச் சத்தி சதாசிவ நாயகி
கொண்ட முகமைந்து கூறுங் கரங்களு
மொன்றிரண் டாகவே மூன்றுநா லானதே. (அச)

1403. நன்மணி சூலங் கபாலங் கிளியுடன்
பன்மணி நாக மழுகத்தி பந்தாகுங்
கன்மணித் தாமரைக் கையிற் றமருகம்
பொன்மணி பூணாரம் பூசனை யானதே. (அரு)

---

1399. பூவிதழ்=விசுத்தியின் சக்கரப்பூவிதழ்; எண்ணங்கடந்து நின்றாள்=சங்கற்பத்துக் கெட்டாதிருக்கின்றவள்.

1400. தியான சொரூபங் கூறியது இம்மந்திரம்.

1401. நிரந்தரம்=எப்பொழுதும்; மேருவணிமாதிதானாக=புருவமத்திய மேருவினிடத்துணரப்படுவனவாகிய அணிமா முதலிய எட்டுச் சித்திகளுந் தானேயாய்; பண்டைய வானின் பகட்டை யறுத்திட = அநாதியாகக் கட்டிய ஆன்மாவின் பாசத்தை யொழித்திட; தீபம்=தீபம்போலுந்தேவி.

1402. அதோமுகம் = கீழ்நோக்கியிருக்கும் சந்திரமண்டலம்; கரங்களும் ஒன்று இரண்டு மூன்று நாலு=திருக்கரங்கள் பத்து.

1403. நன்மணி=நல்லமணிவடம்; கன்மணித்தாமரை=மாணிக்க மணிபோற் சிவந்த தாமரை.

1404. பூசனைச் சத்திக ளெண்ணைவர் சூழவே
நேசவள் கன்னிக ளறுபத்து நேரதாய்க்
காசினிச் சக்கரத் துள்ளே கலந்தவண்
மாசடை யாமன் மகிழ்ந்திருந் தாளே. (அகூ)

1405. தாரத்தி னுள்ளே தயங்கிய சோதியைப்
பாரத்தி னுள்ளே பரந்து ளெழுந்திட
வேரது வொன்றிநின் றெண்ணு மனோமயங்
காரது போலக் கலந்தெழு மண்ணிலே. (அஎ)

1406. மண்ணி லெழுந்த வகார வுகாரங்கள்
விண்ணி லெழுந்து சிவாய நமவென்று
கண்ணி லெழுந்தது காண்பரி தன்றுகொல்
கண்ணி லெழுந்தது காட்சி தரவென்றே. (அஅ)

1407. என்றங் கிருந்த வமுத கலையிடைச்
சென்றங் கிருந்த வமுத பயோதரி
கண்டங் கரமிரு வெள்ளிபொன் மண்ணடை
கொண்டங் கிருந்தது வண்ண மமுதே. (அகூ)

1408. அமுதம தாக வழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழு முள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்
கெமுதம தாகிய கேடிலி தானே. (கூ0)

---

1404. எண்ணைவர்=நாற்பதின்மர்; கன்னிகள்=பரிவாரப்பெண்கள். காசினிச்சக்கரம்=பூப்பிரஸ்தார யந்திரம்.

1405. தாரம்=பிரணவம்; பாரம்=பிராணவாயு; வேர்=மூலாதாரம்; மனோமயம்=மனத்தின் சொரூபம்; காரதுபோல=சுழுத்தியவத்தையி லிருத்தல்போல.

1406. மண்ணில்=மூலாதாரத்தில்; விண்ணில்=பரமாகாயத்தில்; கண்ணில்=பிரமரந்திரத்துவாரத்தில்; கண்ணிலெழுந்தது=கண்ணுக்குத் தோன்றுமாறு (வரிவடிவமாய்) தோன்றியது.

1407. அமுதகலையிடை = அமுதமயமான சந்திர மண்டலத்தில்; அமுதபயோதரி=அமுதேசுவரி; கண்டங்கரம்=கண்டத்திலும் கரங்களிலும்; மண்ணடை = மண்ணாற்செய்த கமண்டலம்; வண்ணமமுதே=நிறம் அமுதம்போலும் வெண்மையாம்.

1408. படிகமதாக = பளிங்குபோலு நிறமுடையதாக; குமுதம்= அல்லி; குளிர்ந்தெழு முத்து=குளிர்ச்சியை யுடையதாய்ப் பருத்துள்ள முத்து; கெமுதம்=(கெழுமுதம்) பொருந்திய ஆநந்தமயம்.

1409. கேடிலி சத்திகண் முப்பத் தறுவரு
நாடிலி கன்னிக ளொலொன் பதின்மரும்
பூவிலி பூவித முள்ளே யிருந்திவர்
நாளிலி தன்னை நணுகினின் றார்க்கே. (கூக)

1410. நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங்
கண்டது சோதி கருத்து ளிருத்திடக்
கொண்டது வோராண்டு கூடி வருகைக்கு
விண்ட வௌகாரம் விளங்கின வன்றே. (கூஉ)

1411. விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம்
வணங்கிடு மண்டல மன்னுயி ராக
நலங்கிளர் நன்மைக ளாரண னொத்துச்
சுணங்கிடை நின்றிவை சொல்லலு மாமே. (கூங)

1412. ஆமே யதோமுக மேலே யமுதமாய்த்
தாமே யுகாரந் தழைத்தெழுஞ் சோமனுங்
காமேல் வருகின்ற கற்பக மானது
பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே. (கூச)

---

1409. கேடிலிசத்திகள்=நீங்கற்ற சத்திகள்; கன்னிகள்=சத்தி வடிவமான கன்னிகள்; பூவிலி = தோற்றமில்லாதவள்;

1410. புந்திநிறைந்திடும் வன்னி = இதயதாமரையில் வசிக்கின்ற தீயுருவனன சிவபிரான்; சோதி = அமுதேசுவரி; கூடி வருகைக்கு=சித்தியாதற்கு; விண்ட ஔகாரம்=முற்கூறிய ஔகாராதி பீஜங்கள்.

1411. வானிடை நின்றவையெல்லாம்=வானுலகங்களிலுள்ளவுயிர்க ளெல்லாம்; மண்டல மன்னுயிராக = பூமியிலுள்ள நிலை பெற்ற வுயிர்களைப்போல;

1412. அதோமுகமேல் = கீழ் நோக்கியுள்ள சந்திரமண்டலத்தின் மேல்; உகாரம்=உகாரவடிவமாய்; கா=(முற்கூறியகடம்ப) வனம்.

1413. பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட
வக்களி யாகிய வாங்காரம் போயிடு
மற்கட மாகிய மண்டலந் தன்னுளே
பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே. (கூரு)

1414. பேதை யவளுக்குப் பெண்மை யழகாகுந்
தாதை யிவளுக்குத் தாணுவு மாய்நிற்கு
மாதை யவளுக்கு மண்ணுந் திலகமாய்க்
கோதையர் சூழக் குவிந்திடங் காணுமே. (கூசு)

1415. குவிந்தனர் சத்திகண் முப்பத் திருவர்
நடந்தனர் கன்னிக ளுலெண்மர் சூழப்
பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே
யிருந்தனள் காணு மிடம்பல கொண்டே. (கூஎ)

1416. கொண்டங் கிருந்தனர் கூத்த னொளியினைக்
கண்டங் கிருந்தனர் காரணத் துள்ளது
பண்டை மறைகள் பரந்தெங்குந் தேடுமா
லின்றென் மனத்துளே யில்லடைந் தாளுமே. (கூஅ)

---

1413. அக்களியாகிய = அந்தமயக்கந் தருவதாகிய; மற்கடமாகிய (மன்கடமாகிய) மண்டலம் தன்னுள் = பெருமையுள்ள மயானமென்னப்படும் மஹா சூனியாகாயத்தில்.

1414. பெண்மை=பெண்டன்மை; மாது ஐ அவளுக்கு=பெண்ணரசியாகிய தேவிக்கு; மண்ணும் திலகமாய்=அலங்கரிக்கின்ற பொட்டுப் போல்வதாகி; குவிந்திடம்=கூடியிருக்குமிடம்.

1415 பரந்திதழாகிய = விசாலமான இதழ்களை யுடையதாகிய; இடம்பல கொண்டு=ஆதாரங்க ளெல்லாவற்றையுந் தனக்கிடமாகக் கொண்டு.

1416. கூத்தன்=பஞ்சகிருத்திய நடனமூர்த்தி; கண்டங்கிருந்தனர்= அவ்விடத்து (சிவசத்தியின் கூட்டத்தையோகியர்) தரிசித்திருந்தார்கள் ; காரணத்துள்ளது = (அக்கூட்டமே யாவற்றுக்கும்) காரணமாயுள்ளது ; இல்லடைந்தாளும் = குடியிருக்கும் வீடாகக்கொண்டு என்னையாளும்.

1417. இல்லடைந் தானுக்கு மில்லாத தொன்றில்லை
யில்லடைந் தானுக் கிரப்பது தானில்லை
யில்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வா
ரில்லடைந் தானுக்கு வில்லாதில் லானையே. (கூகூ)

1418. ஆனை மயக்கு மறுபத்து நாற்றறி
யானை யிருக்கு மறுபத்து நாலொளி
யானை யிருக்கு மறுபத்து நாலறை
யானையுங் கோடு மறுபத்து நாலிலே. (க00)

அதிகாரம் ௫ - க்குப் பாடல் - 535.

**நாலாந்தந்திரம் முற்றிற்று.**

---

1417. இரப்பது = விரும்பிக்கேட்பது; இல்லாதில்லானையே (ஆன் ஐ இல்லாது இல்) = இடபவாகனத்தையுடைய சிவபிரானில்லாதிரான்.

1418. ஆனை = (பிரணவ சொரூபியான) ஆன்மா; அறுபத்து நாற்றறி = (ஆக்கினையினின்று மேனோக்கி யெழுந்த) அறுபத்துநான்கு கிரணங்கள்; ஆனை = பிரணவ சொரூபியான சிவபெருமான்; ஒளி = முற்கூறிய கிரண ஒளி; அறை = அந்தக் கிரணங்களாலாகிய அறைகள்; ஆனையுங்கோடும் = சிவமும் மூலாதாரத்தினின்றெழுந்து அதீதம்வரை சென்றிருக்கும் நாதநிலையும்.

# ஐந்தாந்தந்திரம்.

## க-வது சுத்த சைவம்.

**1419.** ஊருரு முலகமு மொக்கப் படைக்கின்ற
பேரறி வாளன் பெருமை குறித்திடின்
மேருவு மூவுல காளியி லங்கெழுந்
தாரணி நால்வகைச் சைவமு மாமே. (க)

**1420.** சத்து மசத்துஞ் சதசத்துந் தான்கண்டு
சித்து மசித்துஞ் சேர்வுறு மேலீத்த
சுத்த மசுத்தமுந் தோய்வுறு மேநின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே. (உ)

**1421.** கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோக
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
தொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. (ங)

---

1419. மேருவும்=மஹாமேருமலையும்; மூவுலகாளியில் = சிவபிரானிடமிருந்து; நால்வகைச் சைவம்=மேலே கூறப்படும் சுத்தம், அசுத்தம், மார்க்கம், சடுஞ்சுத்தம்; அசைக்கப்படாது அளத்தற் கருமைக்கு மேருவும், பரந்து விசாலித்திருத்தற்குப் பூமியும், தவறாது மெய்ப்பயன் தருதற்குச் சைவமும் உவமையாய் ஈசன் பெருமையை விளக்கி நிற்றலறிக.

1420. சத்து=மெய்ப்பொருளாகிய பதி; அசத்து = பாசம்; சதசத்து = ஆன்மா; சித்து = ஞானம்; அசித்து = அஞ்ஞானமாகிய அவித்தை; சுத்தம் = சுத்தமாயை; அசுத்தம் = அசுத்தமாயை; நித்தம்=நித்தியம்; பரம்=சிவம்; நேயம்= அன்பு.

1421. மெய்யோகம்=உண்மையை விளக்கும் யோகம்; முற்பதம்= யோகத்து முந்திய பாதமான சரியை கிரியைகள்; முறைமுறை நண்ணி=உபதேசக் கிரமப்படி அடைந்து; தொற்பதம்=துவம்பதமென்பதன் றிரிபு, அதன்பொருள் ஆன்மா; தற்பரம்=தத் என்னும் பதப்பொருளான சிவம்.

1422. வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்த
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்
பூதாந்த போதாந்த மாகப் புனஞ்செய்ய
நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே. (௪)

---

### உ-வது அசுத்த சைவம்.

1423. இணையார் திருவடி யேத்துஞ்சீ ரங்கத்
திணையா ரிணைக்குழை யீரணை முத்திரை
குணமா ரிணைக்கண்ட மாலையுங் குன்றா
தணைவாஞ் சரியை கிரியையி னார்க்கே. (௧)

1424. காதுப்பொ னார்ந்த கடுக்க னிரண்டுஞ்சேர்த்
தோதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன்
சோதனை செய்து வுபதேச மார்க்கரா
யோதி யிருப்பா ரொருசைவ ராகுமே. (௨)

---

1422. வேதாந்தம் சுத்தம் விளங்கிய சித்தாந்தம்=வேதாந்தமாவது சுத்தசைவ சித்தாந்தம்; நாதாந்தம்=நாத தத்துவத்திறுதிப் பொருளான சிவம்; பூதாந்தம்=பூதங்களின்முடிவு; போதாந்தம்=ஞானமுடிவு; புனஞ்செய்ய = (தத்துவக் காட்டினை) திருத்திப் பண்படுத்த; பூரணர்=பூரணப்பொருளை யடைந்தவர்; ஞானநேயத்தர்=ஞானமயமான ஞேயப் பொருளாகிய சிவமாவார்.

1423. சீரங்கம் = (சிவபக்தியினால்) சிறப்புற்ற சரீரம்; இணைக்குழை = இரண்டு குண்டலங்கள்; ஈரணைமுத்திரை = பொருந்திய விபூதிருத்திராட்ச சின்னங்கள்; குன்றாதணைவாம் = குறைவற வணியப் படுவனவாம்; சரியை கிரியையினார்க்கு = சரியா கிரியானுஷ்டான முடையவர்க்கு.

1424. பொனார்ந்த = பொன்னாற் செய்யப்பட்ட; கட்டிரண்டு = பொன்னாற் கட்டப்பட்ட இரண்டு வடங்கள்; சோதனை= அத்துவாசோதனை; உபதேசமார்க்கராய்=குருவா லுபதேசிக்கப்பட்ட நெறியினிற்பவராய்.

1425. கண்டங்க ளொன்பதுங் கண்டவர் கண்டனர்
கண்டங்க ளொன்பதுங் கண்டா யரும்பொருள்
கண்டங்க ளொன்பதுங் கண்டவர் கண்டமாங்
கண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே. (ரு)

1426. ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்
மோன திசையு முழுவெண்ணெண் சித்தியு
மேனை நிலமு மெழுதா மறையீறுங்
கோனொடு தன்னையுங் காணுங் குணத்தரே. (சு)

---

ரு-வது மார்க்க சைவம்.

1427. பொன்னுற் சிவசாத னம்பூதி சாதன
நன்மார்க்க சாதன மாஞான சாதனந்
துன்மார்க்க சாதனந் தோன்றாத சாதனஞ்
சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே. (க)

---

1425. கண்டங்களொன்பதுங் கண்டவர்=நவகண்டமான பூமியை வலஞ்செய்து வந்தவர்; கண்டங்களொன்பதும் கண்டவர்= (சிவபெருமானது சொரூபபேதங்களான) ஒன்பது பகுப்பையும் கண்டவர்; கண்டமாங் கண்டங்கள்=வேறுபட்ட பல வண்டங்கள்.

1426. புவியெழு நன்னூல்=எழுலகும் நல்லஞானக் கலைகள்; மோன திசை=மௌனநிலைமை; எண்ணெண் சித்தியும்=அறுபத்து நான்கு கலைஞானங்களாற் பெறப்படும் அறுபத்துநான்கு சித்திகளும்; ஏனை நிலமும்=(இவ்வுலக நீங்கிய) மற்றைய வுலகங்களும்; மறையீறும் = வேதாந்தமும்; கோனொடு = தலைவனுடன்; தன்னையும்=ஆன்மாவையும்.

1427. பொன்னுற் சிவசாதனம் = பொன்போலுஞ் சரியை கிரியை யோகம் ஞானமாகிய நான்கு சிவசாதனம், அல்லது பொன்னு லியன்ற கண்மணிமாலை யணியுநெறி; பூதிசாதனம்=விபூதி மார்க்கம் ; நன்மார்க்க சாதனம் = நல்லமார்க்கமாகிய சைவ நெறி; தோன்றாதசாதனம்=உண்டாகாத வழி.

1428. கேடறு ஞானி கிளர்ஞான பூபதி
பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தி
னூடுறு ஞானோ தயனுண்மை முத்தியோன்
பாடுறு சுத்தசை வப்பத்த நித்தனே. (உ)

1429. ஆகம மொன்பா னதிலான நாலேழு
மோகமி னாலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்
றாக முடிந்த வருஞ்சுத்த சைவமே. (ந)

1430. சுத்த மசுத்தந் துரியங்க ளோரேழுஞ்
சத்து மசத்துந் தணந்த பராபரை
யுத்த பராபரை யுள்ளாம் பராபரை
யத்த னருட்சத்தி யாயெங்கு மாமே. (ச)

1431. சத்து மசத்துந் தணந்தவர் தானாகிச்
சித்து மசித்துந் தெரியாச் சிவோகமாய்
முத்தியு ளானந்த சத்தியுண் மூழ்கினோர்
சித்தியு மங்கே சிறந்துளர் தானே. (ரு)

---

1428. ஞானபூபதி=ஞானசிரேஷ்டன்; பாடு=குற்றம்; வேதாந்த சித்தாந்த பாகத்தினூடுறு = வேதாந்தத்தின் சித்தாந்தப் பகுதியிலுள்ள; உண்மை முத்தியோன்=ஜீவன்முத்தி யெய்தினவன்; பாடு=பெருமை; பத்தன்=கோட்பாடுடையவன்.

1429. ஒன்பான் அதிலான = சிவமூர்த்த மொன்பதி லிருந்துண்டான; முப்பேதம்=கர்மம் உபாசனை ஞானம்; வேகம்= கெடுதி; மெய்ம்மை=உண்மைப்பொருள்.

14 30. ஓரேழும்=கேவலத்தில் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென மூன்று, சுத்தத்தில் சாக்கிரம் சொப்பனமென விரண்டு, துரியத்தில் துரியம் துரியாதீதமென இரண்டு ஆக எழவத்தையும்; உத்த (உற்ற வென்பது உத்தவென. எதுகை நோக்கித் திரிந்தது)=(ஆன்மாக்களை) பிரேரேபிக்கின்ற; உள்ளாம்பராபரை = (ஆன்மாவுக்கு) உள்ளிருந்து நடத்தும் கிரியாசத்தி.

1431. சத்தும் அசத்தும் தணந்தவர்=சத்து அசத்துக்களையும் (விபரித்தறியப்படும் மலம்) ஒழிந்தோர்;சித்தும் அசித்துந்தெரியா=சித்தும் அசித்தென்பதுந் தோன்றாமல்; சிவோகமாய்= சிவமேதானென்னும்படி; முத்தியுள்=ஜீவன்முத்தி நிலையில்.

1432. தன்னைப் பரனைச் சதாசிவ னென்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற
முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை
யுன்னத் தகுஞ்சுத்த சைவ ருபாயமே. (௬)

1433. பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போத
மாரண மந்த மதித்தானந் தத்தோடு
நேரென வீராறு நீதி நெடும்போகங்
காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே. (௭)

1434. மாறுத ஞான மதிப்பற மாயோகந்
தேறுது சிந்தையைத் தேற்றிச் சிவமாக்கிப்
பேறுன பாவனை பேணி நெறிநிற்றல்
கூறுகு ஞானி சரியை குறிக்கிலே. (௮)

1435. வேதாந்தங் கண்டோர் பிரமவித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதா ரணமன்ன சைவ ருபாயமே. (௯)

---

1432. தன்னை=(ஆன்மாவாகிய) தன்னையும்; பரனை=தலைவனாகிய பரசிவனையும்; முன்னை=அநாதி; முன்கட்டை = அநாதி பந்தத்தை.

1433. அற்ற அப்போதம்=ஒழிந்த அந்த ஆன்ம போதம்; ஆரணம் அந்தம்=வேதாந்தம்; மதித்த=கலந்த; ஈராறு நீதிநெடும் போகம்=துவாதசாந்தத்தில் முறையாகப் பெறப்படும் சிவ போகம்; காட்சி=பிரத்தியட்சம்.

1434. மாறுத=வேறுபடாத; மதிப்பு=எல்லை; மாயோகந்தேறுது= சிறந்த யோகத்தையே மதித்திராமல்; சிவமாக்கி=பரிசுத்த மாகச்செய்து; பேறுன பாவனை பேணி = கைவல்யந்தரும் சிவோகம் பாவனைசெய்து ; கூறுகுஞானி = (ஞானபாதங் களி லொரு) பகுதியான ஞானமுடையார்.

1435. பிரமவித்தியாதரர்=பிரமவித்தையை யுணர்ந்தவர்; நடுக்கற்ற யோகிகள்=அசைவற்ற யோகிகள்; வேதாந்தமில்லாத சித் தாந்தம்=வைதிக சம்பந்தமில்லாத சித்தாந்த முணர்ந்தவர்; சைவருபாயம்=சைவாது சூழ்ச்சி (சித்தாந்தம்.)

1436. விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்
கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிக
ளெண்ணினைச் சென்றணு காம லெனப்படு
மண்ணலைச் சென்றணு காப்பசு பாசமே. (க0)

1437. ஒன்று மிரண்டு மிலதுமா யொன்றாக
நின்று சமய நிராகார நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. (கக)

---

சு-வது கடுஞ்சுத்த சைவம்.

1438. வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி
யாடம்பர மின்றி யாசாபா சஞ்செற்றுப்
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ் சிவபோத கர்சுத்த சைவரே. (க)

1439. உடலான வைந்தையு மோராறு மைந்து
மடலான மாமாயை மற்றுள்ள நீவப்
படலான கேவல பாசந் துடைத்துத்
திடமாய்த் தனையுறல் சித்தாந்த மார்க்கமே. (உ)

---

1436. வியன்மேகங்கள் = பரந்தமேகங்கள்; காட்சிகள் = காணப்படுவன; எண்ணினை=மனத்தினை.

1437. ஒன்றாகநின்று = அத்துவிதமா யிருந்து; சமய நிராகார நீங்கி=மதநிந்தை செய்தலொழிந்து; பராபரை பாதத்தால்= சத்திநி பாதமுறைமையால்; நேயத்தை = சிவத்தை; சிவமாதல்=(ஆன்மா) சிவமாய்விடுதல்.

1438. வேடங்கடந்து = (சைவர்க்குக் கூறப்பட்டுள்ள) வேடங்களின்றி; ஆடம்பரம் = இடம்பம்; பாடொன்று = துன்பம் பொருந்திய; பாழ்பட=இல்லாதொழியும்படி; சிவபோதகர்= சிவஞானிகள்.

1439. உடலான வைந்து (ஐந்து ஆன உடல்) = பஞ்சபூதங்களாலாக்கப்பட்ட சரீரம், அல்லது ஸ்தூலாதி உடம்பின்கண் விளங்குவனவான சாக்கிராதி அவத்தை ஐந்தும் எனினுமாம்; ஆறு=காமாதியாறு; ஐந்து=புலனைந்து; நீவப்படல் ஆன= ஒழிக்கத்தக்கதான; கேவலபாசம்=சகஜமலமான ஆணவம்; தனையுறல் = ஆன்மாவான தன்னை யடையப் பெறுதல், அல்லது சிவத்தை யடைதல்.

1440. சுத்த சிவனுரை தானத்திற் றோயாமன்
முத்தர் பதப்பொருண் முத்திவித் தாமூல
மத்தகை யான்மா வரனை யடைந்தற்றாற்
சுத்த சிவமாவ ரேசுத்த சைவரே. (௩)

1441. நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே. (௪)

1442. சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தா
லாற்றரி தாகிய வைந்து மடங்கிடு
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே. (௫)

---

ரு-வது சரியை.

1443. நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்
றாய்ந்திடுங் காலாங்கி கஞ்சன் மலையமா
னோர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்தசை வத்துக் குயிரதே. (க)

---

1440. உரைதானத்தில்=உரைக்கப்பட்ட பதமுத்திகளில்; முத்தர் பதப்பொருள் = முத்தர் கூறும் உபதேசார்த்தம்; முத்திவித்தாமூலம்=முத்தியடைவதற்கு விதைபோலும் மூலம்; அத்தகையான்மா=அப்பெருமையுள்ள ஆன்மா; அற்றால்= அதனால்.

1441. தற்பதம்=(தத்பதம்) தத் என்னும் பதப்பொருளாகிய சிவம்; தத்துவம்=உண்மைப்பொருள்.

1442. ஆற்றரிதாகிய ஐந்து = தடுத்தற்கரிதான ஐம்புலன்; மேல்=அதன்பின்; பாசாயுச்சியம்=சிவனேதானும் முத்தி.

1443. நேர்ந்திடுமூல=முத்திக்கு வழியாயுள்ள; காலாங்கி, கஞ்சன், மலையமான், கந்துரு; இந்நால்வரும் முத்திசாதனங்களை யாராய்பவருட் சிறந்தவராய், ஆசிரியர்க்கு மாணாக்கராயுள்ளவர்கள்; உயிரது=ஜீவனை யொப்பானது.

1444. உயிர்க்குயி ராய்நிற்ற லொண்ஞான பூசை
யுயிர்க்கொளி நோக்கின் மகாயோக பூசை
யுயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை
செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே. (௨)

1445. நாடு நகரமு நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மானென்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே. (௩)

1446. பத்தர் சரியை படுவோர் கிரியையோ
ரத்தகு தொண்ட ரருள்வேடத் தாகுவோர்
சுத்த வியமாதி சாதகர் துயோகர்
சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே. (௪)

1447. சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னாயினோர்
சேர்ந்தவெண் யோகத்தார் சித்தர் சமாதியோ
ராய்ந்த கிரியையோ ரர்ச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீணிலத் தோரே. (௫)

---

1444. உயிர்க்குயிராய் நிற்றல் = உயிர்க்குயிராயிருப்பதை யுணர்தல், அஃதாவது ஆன்மாவுக் கிருப்பிடமான இதயத்தில் சிவத்தைத் தியானித்தல், (ஞான பூசையாம்); உயிர்க்கொளி நோக்கின் = அத்தானத்தில் உயிர்க்கொளிதந்து நிற்றலை அறியின்; யோகபூசை = அது யோகபூசை யென்னப்படும்; உயிர்ப்பெறுமாவாகனம் = (பாணலிங்காதிகளில்) பிராண பிரதிஷ்டை ஆவாகனாதி செய்தல்; சிவபூசை = சிவபூசை என்னப்படும்.

1445. தேடித்திரிந்து = யாத்திரைசெய்து; கூடியநெஞ்சத்து = (அன்பு) பொருந்திய மனசில்.

1446. சரியைபடுவோர் = சரியைமார்க்கத்தி லிருப்பவர்; அருள் வேடத்தாகுவோர் = சிவசின்னாதிபூண்டு பணிசெய்வோர்; இயமாதிசாதகர் = இயம முதலிய அட்டாங்கயோகம் பயில்வோர்; சித்தர்=சித்திபெற்றவர்.

1447. இம்மந்திரம் சைவராயினோர், ஞானபாதத்தோர், யோக பாதத்தோர், கிரியாபாதத்தோர், சரியாபாதத்தோர் என நால்வகைப்படுவாரென்று கூறுகின்றது.

1448. கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை
யரிய சிவனுரு வமரு மரூபம்
தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை
யுரியன நேயத் துயர்பூசை யாமே. (௬)

1449. சரியாதி நான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்
பொருளான நந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே. (௭)

1450. சமையம்பல சுத்தித் தன்செய லற்றிடு
மமையும் விசேடமு மரன்மந்தி ரசுத்தி
சமைய நிருவாணங் கலாசுத்தி யாகு
மமைமன்னு ஞானமார்க் கம்மபி டேகமே. (௮)

---

1448. கிரியையோகங்கள் கிளர்ஞானபூசை, யரியசிவனுரு வமரு மரூபம்—கிரியையோகங்கள் அரியசிவனுருவமரும், கிளர் ஞானபூசை அரூபம் எனக்கூட்டிக் கிரியையும் யோகமும் ஸாகாரபூசையாம்; விளங்குகின்ற ஞானபூசை நிராகாரபூசை யாமென்று கொள்க.

1449. ஞானநான்கு = சரியையின்ஞானம், கிரியையின்ஞானம், யோகத்தின் ஞானம், ஞானத்தின் ஞானம்; வேதாந்தம் (ஆறு) = காபிலம், காணதம், பாதஞ்சலம், அட்சபாதம், வியாசம், ஜைமினீயம்; சித்தாந்தமாறு = பைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம்; பொன்னகர் போந்து=சிவலோகத்தினின்றும் குருவடிவாகவந்து; மருளாகுமாந்தர்=அஞ்ஞானமுள்ள மனிதர். (சரியையாதிகள் ஞானந்தரும், மற்றவை அஞ்ஞானிகளுக்காக நந்தியருளின வென்று கொள்க).

1450. சமையம் பலசுத்தி தன் செயலற்றிடும் = சமையதீட்சையால் பலவகைச் சுத்திகளுண்டாய்த் தற்சுதந்தரமொழிந்திடல்; விசேடமுமரன் மந்திர சுத்தி=பஞ்சாட்சர தியானஞ் செய்து சுத்தியடைந்திருத்தல் விசேஷம்; நிருவாணங் கலாசுத்தி = கலைகளுணர்ந்து தத்துவங் களைதல் நிருவாணம்; ஞானமார்க்க மபிடேகம்=ஞான முணர்ந்திருத்தல் அபிடேகம்.

## ரு-வது கிரியை.

1451. பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்
டெத்திக் கிலரில்லை யென்ப தினமலர்க்
கொத்துத் திருவடி நீழல் சரணெனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே. (க)

1452. கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினு
மூனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்குழல் சேரவொண் ணாதே. (உ)

1453. கோனக்கன் றாயே குரைகழ லேத்துமின்
ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும்
வானக்கன் றாகிய வானவர் கைதொழு
மானக்கன் றீச னருள்வள்ள மாமே. (ரு)

1454. இதுபணிந் தெண்டிசை மண்டல மெல்லா
மதுபணி செய்கின் றவளொரு கூற
னிதுபணி மானுடர் செய்பணி யீசன்
பதிபணி செய்வது பத்திமை காணே. (ச)

---

1451. பரமொருதெய்வம்=ஒப்பற்ற மேலான தெய்வம்; இல்லையென்பது = (இவரில்லாததிக்கு) இல்லையென்று கூறுகின்றது (வேதம்); இனமலர்க்கொத்து=பலவிதங்களான பூங்கொத்துகளை (இட்டர்ச்சித்து); தத்தும் = மென்மேலும் ஏறுகின்ற.

1452. கோடி=திகாந்தம் (வரை); வானுறு=மேன்மை பொருந்திய; ஊனினை நீக்கி = சரீராபிமானம் விட்டு; பூங்குழல் சேரவொண்ணாது = பூவையணிந்த கூந்தலையுடைய சத்தியை யடைய முடியாது (சத்திநிபாதம் பெறுதலாகாது).

1453. கோனக்கன்=பதியாகிய நக்கன்; ஞானக்கன்று=ஞானவிருட்சம்; வானக்கன்று = வானுலகத்துப் பசுக்களாகிய தேவர்கள்; மானக்கன்றீசன்=பெருமையுள்ள இடபவாகனத்தை யுடைய ஈசன்; அருள் வளமாம்=அருட்செல்வ முண்டாம்.

1454. இது பணிந்து = இவ்வுரையை வணங்கி யேற்றுக்கொண்டு; அது பணி செய்கின்றவள் = அந்தச்சிருட்டியாதி தொழில்களைச் செய்கின்ற தேவி; மானுடர் செய்பணி ஈசன் பதி பணி=மனிதர் செய்யத்தகுந்த சிவபணியே சிவபணிவிடை; பத்திமை=(அப்பணிவிடை செய்தலே கிரியா பாதத்தோர் செய்கின்ற) சிவபத்தி.

1455. பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த வருளாற் றுரிசற்ற யோகத்தி
லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே. (௫)

1456. அன்பி னுருகுவ னாளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கரு
ளென்பினுட் சோதி யிலங்குகின் றானே. (௬)

---

எ-வது யோகம்.

1457. நெறிவழி யேசென்று நேர்மையு ளொன்றித்
தறியிருந் தாற்போலத் தம்மை யிருத்திச்
சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே. (க)

1458. ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லா
லூழிதோ றூழி யுணரவுந் தானொட்டா
னாழி யமரு மரியய னென்றுளா
ரூழி முயன்று மொருச்சியு ளானே. (௨)

---

1455. பத்தன் கிரியை சரியை பயில்வுற்று=பக்தனாய்க் கிரியை சரியையிற் பயின்று; அருளால் = ஈசன் கருணையால்; யோகத்திலுய்த்தநெறி=யோகபாதத்திற் கூறப்பட்ட மார்க்கம்; உணர்கின்ற=அந்த யோகத்தா லறியப்படுகின்ற; சித்தம்—அந்தக் கரணங்கட்கு உபலக்கணம்.

1456. செம்பொன்செய் மேனி=சிவந்த பொன்னைப்போலு மொளிர்கின்ற திருமேனி; மொழிவதெனக்கருள்=(எனக்கு அருள் மொழிவது) எனக்கு ஞானத்தை யுபதேசிப்பதற்கு; என்பினுள்=எலும்பினாலான சரீரத்துள்.

1457. நெறிவழி=குருவுபதேச மார்க்கப்படி; நேர்மையுளொன்றி=சரியான யோகமார்க்கத்திற் பொருந்தி; தறி = ஸ்தம்பம்; தாக்கினும் = அடித்தாலும்; குறி=கருதினிற்கு முறை.

1458. ஊழிதோறூழி=பலவூழிகாலம்; உணரவுந்தானொட்டான் = அறியமுடியாதவ னாகின்றான்; ஒருச்சி (ஒருவி என்பதன் திரிபு)=விலகி.

1459. பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
வோவியம் போல வுணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே. (௩)

1460. உய்ந்தன மென்பீ ருறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை யுறவே தெளிந்திரு ணீங்கினுன்
முந்தப் பிறவிக்கு மூலவித் தாகுமே. (௪)

1461. எழுத்தொடு பாடலு மெண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியு நீங்கா
வழித்தலைச் சோமனோ டங்கி யருக்கன்
வழித்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே. (௫)

1462. விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ ராகும்
விரும்பிநின் றேசெயின் மெய்யுரை யாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்
விரும்பிநின் றேசெயில் விண்ணவ னாகுமே. (௬)

1463. பேணிற் பிறவா வுலகருள் செய்திடுங்
காணிற் றனது கலவியு ளேநிற்கு
நாணி னரக நெறிக்கே வழிசெயு
மூனிற் சுடுமங்கி யுத்தமன் றானே. (௭)

---

1459. ஓவியம்போல=சித்திரம்போல (அசைவற்று); நாவி=புனுகுப் பூனை; நடுதறி=நாட்டப்பட்ட ஸ்தம்பம்.

1460. உறுபொருள்=அடைதற்குரியபொருள் (சிவம்); கந்தமலரிற் கலக்கின்ற = மலரினிடத்து வாசனையைப்போல (உயிர் தோறும்) கலந்திருக்கின்ற; பிறவிக்கு மூலவித்தாகும் = பிறவியைக் கொடுத்தற்கு ஆதி காரணமாகும்.

1461. எழுத்து=இலக்கணம்; பழித்தலைப்பாசம்=பழிக்கப்படுதலை யுடைய பாசம்; வழித்தலை=முறையே; வழித்தலைச் செய்யும்=மூலமாக மேன்மையைச் செய்யும்.

1462. மெய்யுரையாகும்=குருவினது உபதேசவுண்மை சித்திக்கும்; விண்ணவனாகும்=(மனிதருள்) தேவனாவான் அல்லது சிவமாவான்.

1463. பிறவாவுலகு=(மீண்டும்) பிறவியில் விழுத்தாத சிவலோகம்; தனது கலவியுளே நிற்கும் = சீவனிற் கலந்துநிற்கும் (சீவனொடு வேறறச் சிவம் கலந்திருக்கும்); நரகநெறி = பாப மார்க்கம்; ஊனிற்சுடுமங்கி = சரீரத்தினுள் வெப்பந்தந்து நிற்கின்ற அக்கினி.

1464. ஒத்தசெங் கோலா ருலப்பில மாதவ
ரெத்தனை யாயிரம் வீழ்ந்தவ ரெண்ணில
சித்தர்க டேவர்கண் மூவர் பெருமையா
மத்த னிவனென்றே யன்புறு வார்களே. (அ)

1465. யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோ
ராகத் தருகிரி யாதி சரியையாந்
தாகத்தை விட்ட சரியையொன் றுமொன்று
ளாதித்தன் பத்தியு ளன்புவைத் தேனே. (௯)

1466. யோகச் சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே யட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்
யோகவபி டேகமே யொண்சித்தி யுற்றலே. (௧௦)

---

அ-வது ஞானம்.

1467. ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நகரின்மிக் காரே. (௧)

---

1464. ஒத்தசெங்கோலார்=நேர்மையான செங்கோல் செலுத்திய அரசர்கள்; மூவர் பெருமையாம் = மும்மூர்த்திகட்கும் பெருமைதரும்.

1465. யோகாதி மூன்று = யோகம் கிரியை சரியை; தாகத்தை விட்ட=ஆசையை யொழித்த; ஒன்றுள்=கிரியியையினால்; ஆதித்தன்=ஞான சூரியனாகிய பரமேசுவரன்.

1466. யோகச்சமயம் = யோக பாதத்தில் சமயதீட்சை; யோகம் பலவுன்னல் = பலவகையான யோகங்களைப் பயிலக் கருதுதல்; விசேடம் = விசேட தீட்சை; பரோதயம் = சிவந்தோன்றப்பெறுதல்; சித்தியுற்றல்=யோகத்தில் சித்தி பெறுதல். (சரியையாதி நான்கு பாதங்களில் ஒவ்வொன்றுக்கும் நான்கு தீட்சைகளு முளவென்பது உணர்க).

1467. நாட்டில்லை = உலகத்திலில்லை; ஞானத்தின் மிக்கவை= ஞானத்துக்கு வேறானவை; ஞானத்தின் மிக்கார் = ஞானத்தினாற் சிறந்தவர்.

**1468.** சத்தமுஞ் சத்த மனனுந் தருமன
முய்த்த வுணர்வு முணர்த்து மகந்தையுஞ்
சித்தமென் றிம்மூன் றுஞ் சிந்திக்குஞ் செய்கையுஞ்
சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. (௨)

**1469.** தன்பா லுலகுந் தனக்கரு காவது
மன்பா லெனக்கரு ளாவது மாவன
வென்பார்கண் ஞானமு மெய்துஞ் சிவோகமும்
பின்பாலி னேயமும் பெற்றிடுந் தானே. (௩)

**1470.** இருக்குஞ் செம்மி யிடம்பிரம மாகும்
வருக்கஞ் சராசர மாகு முலகந்
தருக்கிய வாசார மெல்லாந் தருமே
திருக்கிலா ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே.

**1471.** அறிவு மடக்கமு மன்பு முடனே
பிறியா நகர்மன் னும் பேரரு ளாளன்
குறியுங் குணமுங் குறைகழ னீங்கா
நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே. (௫)

---

1468. சத்தமும் = நாதமும்; சத்தமனனும்=நாதவழித்தான மனமும்; உணர்வும்=புத்தியும்; அகந்தையும் = அகங்காரமும்; இம்மூன்றும்=இந்த மூன்று கரணங்களும்; சத்தங் கடந்தவர்=சத்தப்பிரபஞ்சங் கடந்த ஞானிகள்.

1469. தன்பாலுலகும்=தன்னிடத்திற் கற்பிதமானவுலகமும்; தனக்கருகாவதும்=தன்னிடம்வந்து சூழ்ந்திருத்தலும்; அன்பால்=பக்தி செய்வதால்; பின்பாலினேயமும் = அதன்பின்னரடையப்படும் ஞேயமாகிய சிவமும்; பெற்றிடுந்தானே = தானாகவே யடையப்பெறுவான் (முயற்சியின்றியே யடைவன்).

1470. செம்மி=மறைந்து; வருக்கஞ் சராசரம் = (சராசர வருக்கம்) சராசரக்கூட்டம்; தருக்கிய=மேம்பட்ட; ஆசாரம்=ஒழுக்கம்; திருக்கிலா=மாறுபாடில்லாத.

1471. பிறியாநகர்=அழியாத முத்திநகரம்; குறியும்=இலக்கணமும்; நீர்த்தொனி=நீரின்கண்ணதாமொலி; நீரினிடத்தி லடங்கி நிற்கும் ஒலி காற்று முதலிய கூட்டுறவால் தோன்று மாறு போல, அறிவடக்கமாதியால் ஆன்மாவி லடங்கி நிற்கும் ஞானம் பிரகாசிக்குமென்பது.

1472. ஞானம் விளங்கெழு கின்றதோர் சிந்தையு
ளேனம் விளங்கெதி ரேகாண் வழிதொறுங்
கூனன் மதிமண்ட லத்தெதிர் நீர்கண்டு
வூன மறுத்துநின் றொண்சுட ராகுமே. (கூ)

1473. ஞானிக் குடன்குண ஞானத்தி னான்குமா
மோனிக் கிவையொன் றுங் கூடாமுன் மோகித்து
மேனிற்ற லாஞ்சத்தி வித்தை விளங்கிடுந்
தானிக் குலத்தோர் சரியை கிரியையே. (எ)

1474. ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நானென தென்னுமை
ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே. (அ)

1475. நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயங் கரைஞானங் கண்டுளோன்
றிண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. (கூ)

---

1472. ஏனம்=கருவி (ஈண்டுச் சாதனம், அஃதாவது யோகம்); காண்வழி=ஆதார மார்க்கங்கள்; மதிமண்டலத்தெதிர் நீர்= சந்திரமண்டலத்துப் பெருகும் அமுதம்; ஊனமறுத்து = மலமொழித்து; ஒண்சுடர்—பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்ச் சிவமென்பதைக் குறித்து நின்றது.

1473. ஞானத்தினான்கு=ஞானத்திற் சரியை, ஞானத்திற்கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தின் ஞானமென்பன; மோனிக்கு=மவுனநிலையாகிய அதீதஞானிக்கு; இவை=இந்நான்கில்; முன்மோகித்து = சிவசந்நிதியில் தன்னை மறந்து; மேனிற்றலாம் = அதீதத்திலிருத்தலாம்; சத்திவித்தை = குண்டலி சத்தியின் வலிகொண்டியற்றும் யோக வித்தை; தானிக்குலத்தோர்=ஆதார யோகிகள்.

1474. நானெனது என்னுமை = அகங்கார மமகார மொழிந்திருத்தல்; நாதாந்த நல்லொளி=நாதாந்தத்து நல்லொளி காணுதல்.

1475. ஞானாதி=முற்கூறிய ஞானத்தின் ஞானமாதி நாற்பாதங்கள்; பிணக்கு=பந்தம்; கண்ணிய=கருதிநின்ற; நேயங்கரை= சிவத்தினது மாயா சபள சொரூப மறைந்து; ஞானம்=ஞானத்தின் ஞானம்; சிவமுத்தன்=சிவத்துவமடைந்த முத்தன்.

1476. ஞான சமயமோ நாடுந் தனைக்காண்டன்
ஞான விசேடமே நாடு பரோதய
ஞானநிர் வாணமே நன்றறி வானருண்
ஞானபி டேகமே நற்குரு பாதமே. (௪0)

---

௬-வது சன் மார்க்கம்.

1477. சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு
சீற்ற மொழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. (௧)

1478. சைவப் பெருமைத் தனிநா யகனந்தி
யுய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு
தெய்வச் சிவநெறிச் சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே. (௨)

1479. தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்திச் சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. (௩)

---

1476. தனைக்காண்டல்=ஆன்மாவைத் தரிசித்தல்; பரோதயம் = சிவம் தோன்றுதல், அல்லது பராவத்தையடைதல்; நன்றறி வானருள் = தூயவறிவினனாகிய சிவ சக்தி (தோய்தல்); குருபாதம்=குருபாத (தரிசனம்).

1477. சன்மார்க்கமாம்=சன்மார்க்கத்துக்குரிய; தற்சிவ தத்துவத் தோற்றங்களான=தத்பதப்பொருளான சிவ தத்துவ சொரூபங்களான, (அவை சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம்) என்பன; சுருதிச் சுடர்கண்டு=வேதத்தில் விளங்குஞ் சிவத்தையுணர்ந்து; சீற்றம்=கோபம், (காமாதிகட்கும் உபலக்கணம்); குறிப்பறிந்தார்கள் = சன்மார்க்கவியலுணர்ந்தார்கள்.

1478. உய்யவகுத்த=நிலைபெற்றிருத்தற் பொருட்டுச் செய்தருளிய; குருநெறி = குருபாரம்பரையாக வனுட்டிக்கப்படு மார்க்கம்; தெய்வச் சிவநெறிச்சன்மார்க்கம்=தெய்வீகமுள்ள சைவநெறியாகிய சன்மார்க்கம்.

1479. தெரிசிக்க...தரும் - குருபக்தி செய்யுங் குவலயத்தோர்க்குத் தெரிசிக்க, பூசிக்க,...சூட(சன்மார்க்கம்)தரும்(உண்டாகும்) என்று கூட்டிமுடிக்க; முத்திச்சார்பு ஊட்டும் = முத்திப் பேற்றைக் கொடுக்கும்.

1480. தெளிவறி யாதார் சிவனை யறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதார் தீரார் பிறப்பே. (௪)

1481. தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று
மோனம தாமொழி யான்முத்த ராவது
மீனமில் ஞானா னுபூதியி லின்பமுந்
தானவ னுயுற லானசன் மார்க்கமே. (௫)

1482. சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு மிடத்தொடு தெய்வமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தரிசன
மெம்மார்க்கத் தார்க்கு மியம்புவன் கேண்மினே. ()

1483. சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்குந்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றார்
சன்மார்க்கந் தானவ னாகுஞ்சன் மார்க்கமே. (௭)

---

1480. சீவனுமாகார் = சித்துப்பொருளுமாகார் (ஜடப்பொருளாவார்).

1481. ஐந்தாமலம்=ஆணவம், மாயை, காமியம், மாயேயம், திரோதாயி; மோனமதா மொழிப்பால்=மோனநிலை சித்திப்பதான (குருவுபதேச) மொழியினால்; ஞானானுபூதியில் = ஞானானுபவத்தினால்; தானவனுயுறலான = ஆன்மா சிவமாய்ப் பசுத்துவ மொழிதலான.

1482. முகம்=நோக்கியிருக்குந் திசைமுகம்; பீடம் = ஆசனம்; இடம் = தங்குதற்குரிய இடம்; வருக்கம்=கூடுதற்குரிய சங்கம்.

1483. பின்மார்க்கம் = சன்மார்க்கத்திற் கீழிட்ட ஸகமார்க்கம் புத்திரமார்க்கம் தாசமார்க்கம் என்பன; சாதனம்=பயிற்சி; பேதையர்=ஞானமுணராதவர்; துரியத்துரிசு=துரியமாகிய தாழ்வை, (துரீயாதீதத்தை நோக்கத் துரியம் தாழ்வுடையதாதலால் துரியத் துரிசென்றார்); சன்மார்க்கம்=நன்னெறி; தானவனாகும்=ஆன்மா சிவமாகும்.

1484. சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்
பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்று
னன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே
சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே. ()

1485. அன்னிய பாசமு மாகுங் கருமமு
முன்னு மவத்தையு மூலப் பகுதியும்
பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந்
தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே. (௯)

1486. பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்
தொசியாத வுண்மைச் சொருபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே. (௧௦)

1487. மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வருப்பது
மார்க்கஞ்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றிலே
மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர்
மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே. (௧௧)

---

1484. அருஞ்சீடர்க்கு=அருமையான (சிறந்த) சீடர்க்கு; சிவனொடு நாடல் = சிவத்துக்குச் சமானமாய்க் கருதப்படுதல்; சொன்மார்க்கம்=(அதனை) உபதேசிக்கு நெறி.

1485. அன்னிய பாசமும்=தனக்கு வேறானபாசமும்; ஆகுங்கருமமும்=அப்பாசத்தினு லுண்டாகுங் கன்மங்களும்; முன்னுமவத்தையும்=(அக்கன்மங் காரணமாக) வரும் ஜனனமரணாதி துன்பங்களும்; மூலப்பகுதியும் = (அத்துன்பானுபவத்துக் கேதுவான சரீரகதிதரும்) மூலப்பிரகிருதியும்; பின்னிய ஞானமும் = (பதிபசு பாசங்கட்குள்ள) வேறுபாட்டுணர்வு; தன்னொடு=(ஆன்மாவாகிய) தன்னொடு.

1486. பசுபாசநீக்கி=(பாசசம்பந்தத்தால்) பசு என்னப்படும் ஆன்மாவினின்றும் பாசத்தை யொழித்து; கசியாத=உருகாத; ஒசியாத=கெடாத; சொரூபோதயம்=ஆன்மாவி னியற்கையான சொரூபம்.

1487. சித்தயோகம்=சித்தம் சிவத்தொ டைக்கியப்படுதல்.

### ௧௦-வது சக மார்க்கம்.

1488. சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது
மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம்
பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்
துன்மார்க்க ஞானத் துறுதியு மாமே. (௧)

1489. மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்
குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார்
வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகு
முருவுங் கிளையு மொருங்கிழப் பாரே. (௨)

1490. யோகச் சமாதியி னுள்ளே யகலிடம்
யோகச் சமாதியி னுள்ளே யுளரொளி
யோகச் சமாதியி னுள்ளே யுளசத்தி
யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே. (௩)

1491. யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகஞ் சிவரூப முற்றிடு முள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்திய
தாகு மிரண்டு மழியாத யோகிக்கே. (௪)

---

1488. சகமார்க்கம் = தோழனைப்போலப் பத்தி புரிவதாகிய யோக நெறி; மன்=பெருமையுள்ள அல்லது நிலைபெற்றுள்ள; பின் மார்க்கம் = குறித்த நான்குநெறியு மொழிந்த ஏனையவை; பேரா=ஒழியாமல்; உன்=அலைகிற.

1489. துவாதசமார்க்கம் = பன்னிரண்டாதாரங்களின் வழி (பன்னிரண்டாதாரங்களாவன—மூலாதார முதலாறும், மண்டல மூன்றும், சமனை, உன்மனை, அதீதம் என்னு மூன்றுமாம்); குருவுஞ் சிவனுஞ் சமயமும்=குருவையும், குருவினு லறிவிக்கப்படும் சிவத்தையும், அச்சிவத்தை யடைதற்குரிய சகமார்க்கத்தையும்.

1490. யோகச்சமாதியாகிய சகமார்க்கத்தில் சகல பிரபஞ்சமும், சிவமும், சத்தியும், சர்வசித்திகளும் உள்ளனவென்பது இம் மந்திரக் கருத்து.

1491. புருடார்த்த சித்தி=தருமார்த்தகாமப் பேறு.

1492. ஆதார சோதனை யானாடி சுத்திகண்
மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி
போதா லயத்துட் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்கெட லாஞ்சக மார்க்கமே. (ரு)

1493. பிணங்கிநிற் கின்றவை யைந்தையும் பின்னை
யணங்கி யெறிவ னயிர்மன வாளாற்
கணம்பதி னெட்டுக் கருது மொருவன்
வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றானே. (சு)

1494. வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்
வளங்கனி யொப்பதோர் வாய்மைய னாகு
முளங்கனிந் துள்ள முகந்திருப் பார்க்குப்
பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றானே. (எ)

---

### கக-வது சற்புத்திர மார்க்கம்.

1495. மேவிய சற்புத்திர மார்க்கமே யத்தொழி
லாவிப்ப தாஞ்சக மார்க்கஞ் சகத்தொழி
லாவதி ரண்டு மகன்று சகமார்க்கத்
தேவியோ டொன்றல்சன் மார்க்கத் தெளிவதே. (க)

---

1492. ஆதாரசோதனை = முறையே ஆறு தாரங்களையும் தரிசித்துச் செல்லுதல்; மேதாதி = மேதை முதலிய தாதுக்கள்; ஈரெண் = பதினாறுகலைகள்; விண்ணொளி = பரமாகாய மதி மண்டலவொளி; போதாலயம் = ஞானாகாரமான ஆலயம்; சாதாரணம் = சீவ இயல்பு.

1493. பிணங்கி நிற்கின்ற = மாறுபட்டுள்ளவாய; அணங்கி = வருத்தி; அயிர் = கூர்மை; கணம் = வர்க்கம்; பதினெட்டு = தேவர் சித்தர் அசுரர் தைத்தியராதி பதினெண் வகுப்பினர்.

1494. வளங்கனி = (வளம் கன்னி) செல்வத்துக்குரிய இலக்குமி; வளநிறத்தார்க்கும் = அழகிய மார்பினையுடைய திருமாலுக்கும்; வளங்கனி = கொழுங்கனி; வாய்மையனாகும் = சத்துப் பொருளானவான்; உள்ளே பகுந்து நின்றான் = இதயத்திலே (தன் ஆனந்தத்தை) பகிர்ந்து கொடுத்து அமர்ந்தருளினான்.

1495. அத்தொழில் = முற்கூறிய சகமார்க்கச் செயல்; சகத்தொழில் = சகமார்க்கத்துக்குச் சாதகமான சற்புத்திர மார்க்கம், அல்லது யோகஞ் செய்தலாகிய தொழில்; சகமார்க்கத் தேவி = யோகமார்க்கத்துக்குரிய தேவி; தெளிவு = துணிவு.

1496. பூசித்தல் வாசித்தல் போற்றல் சபித்திட
லாசற்ற நற்றவம் வாய்மை யழுக்கின்மை
நேசித்திட் டன்னமு நீசுத்தி செய்தன்மற்
றாசற்ற சற்புத்தி ரம்மார்க்க மாகுமே. (௨)

1497. அறுகாற் பறவை யலர்ந்தேர்ந் துழலு
மறுகா நரையன்னந் தாமரை நீலங்
குறுகா நறுமலர் கொய்வன கண்டுஞ்
சிறுகா லறநெறி பேரகி லாரே. (௩)

1498. அருங்கரை யாவது வவ்வடி நீழல்
பெருங்கரை யாவது பின்னுக ளாணை
வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லா
மொருங்கரை யாயுல கேழினைத் தானே. (௪)

1499. உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி
வியந்து மரனடிக் கேமுறை செய்மின்
பயந்தும் பிறவிப் பயனது வாகும்
பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே. (௫)

1500. நின்று தொழுவன் கிடந்தெம்பி ரான்றன்னை
யென்றுந் தொழுவ னெழிற்பரஞ் சோதியைத்
துன்று மலர்தூவித் தொழுமின் றொழுந்தோறுஞ்
சென்று வெளிப்படுந் தேவர் பிரானே. (௬)

---

1496. வாசித்தல்=ஸ்தோத்திர பாராயணஞ்செய்தல்; சபித்திடல்=ஜெபஞ் செய்தல்; சுத்திசெய்தல் = அபிடேகமாட்டல்; மற்று=தூபதீபாதிகளீதல்.

1497. அறுகாற்பறவை = வண்டு; மறுகா = அலைந்து; நரை அன்னம்=வெள்ளையன்னம்; சிறுகால்=இளம்பருவத்தில்;

1498. அருங்கரையாவது = (சம்சாரத்துக்கு) அரிய கரையானது; ஆணை=வாக்குவடிவமான கட்டளை; அரையராய்=அரசாய்.

1499. பயந்துபரிக்கில் = பயந்து சற்புத்திர மார்க்கத்தைக் கைப்பற்றினால்; அப்பான்மையனும் = (சிவமும்) அந்தத் தன்மையனாவான்.

1500. சென்று=இதயத்திலெழுந்தருளி.

1501. திருமன்னுஞ் சற்புத்திர மார்க்கச் சரியை
யுருமன்னி வாழு முலகத்தீர் கேண்மின்
கருமன்னு பாசங்கை கூம்பத் தொழுது
விருமன்னு நாடோறு மின்புற் றிருந்தே. (எ)

---

## கஉ-வது தாச மார்க்கம்.

1502. எளியன றீப மிடமலர் கொய்த
லளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல்பன் மஞ்சன மாதி
தளிதொழில் செய்வது தான்றாச மார்க்கமே. (க)

1503. அதுவிது வாதிப் பரமென் றகல்வ
ரிதுவழி யென்றங் கிறைஞ்சின ரில்லை
விதிவழி யேசென்று வேந்தனை நாடு
மதுவிது நெஞ்சிற் றணிக்கின்ற வாறே. (உ)

1504. அந்திப்பன் றிங்க ளதன்பின்பு ஞாயிறு
சிந்திப்ப னென்று மொருவன் செறிகழல்
வந்திப்ப வானவர் தேவனை நாடொறும்
வந்திப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே. (ந)

---

1501. திரு மன்னும்=முத்திச் செல்வம் உண்டாம்; உரு மன்னி வாழும் = மானிடவடிவ மெடுத்துள்ள ; கருமன்னும் = பிறவிக்கேதுவான ; கைகூம்ப = கைகுவிக்கும்படி (தாழும்படி).

1502. எளி=பணிவாக; அளிதின்=அன்புடன்; தூர்த்தல்=திருவலகிடல்; பளி=(பள்ளி) கோயில்; தளி=கோயில்.

1503. அதுவிதுவாதிப்பரம் என்று=(ஆதிப்பரமதுவிது என்று) ஆதியான கடவுள் அது இது என்று (தெளியாது கருதி); விதிவழி = வேதாகமம் விதித்தமுறைப்படி ; வேந்தனை= தேவர்பெருமானை சிவத்தை ; அதுவிது=அதுபரம் இது பரமென்னும் (சந்தேகத்தை); தணிக்கின்ற=ஒழிக்கின்ற.

1504. அந்திப்பன்=அடக்குவேன்; திங்கள்=இடகலை; ஞாயிறு= பிங்கலை ; வகை = சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம் தாசமார்க்கமென்னும் நாகுன் வகை.

1505. அண்ணலை வானவ ராயிரம் பேர்சொல்லி
யுன்னுவ ருண்மகிழ்ந் துண்ணின் றடிதொழக்
கண்ணவ னென்று கருது மவர்கட்குப்
பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே. (௪)

1506. வாசித்தும் பூசித்து மாமலர் கொய்திட்டும்
பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின்
மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை
நேசத் திருந்த நினைவறி யாரே. (௫)

---

௧௬-வது சாலோகம்.

1507. சாலோக மாதி சரியாதி யிற்பெறுஞ்
சாலோகஞ் சாமீபந் தங்குஞ் சரியையான்
மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சாரூபம்
பாலோக மில்லாப் பரனுரு வாமே. (௧)

1508. சமயங் கிரியையிற் றன்மனங் கோயில்
சமய மனுமுறை தானே விசேடஞ்
சமயத்து மூலந் தனைத்தேறன் மூன்றுஞ்
சமயாபி டேகமே தானுஞ் சமாதியே. (௨)

---

1505. உண்ணின் றடிதொழ=(அடிதொழ உள் நின்று) (அவனது) திருவடியைத் தொழுவதற்கு அந்தச்சிவமே யிதயத்திருந்து; கண்ணவன்=(அவன்கண்) (அவனேயறிவிக்கின்ற) கண்ணுவான்; பண்ணவன்=தேவனாகிய சிவபிரான்.

1506. பாசிக்குளம்=அழுக்குப்படிந்த குளம் (அது ஈண்டுக் கருப்பாசயத்துக்கு உவம ஆகுபெயர்); கல்லாமனம் = கல்லுக்குச் சமானமான (கடின)மனம்; நேசித்திருந்த நினைவு=அறிஞர் அன்புசெய்திருந்த கருத்து.

1507. சரியாதியில்=சரியை முதலிய நான்கில்; சாலோகம் சரியையால் தங்கும் = சாலோக பதவி சரியையால் எய்தப்பெறும்; சாமீபம் மாலோகம் சேரில் தங்கும் = சாமீப பதவி கிரியையால் மாலோகத்தைச் சேரின் எய்தப்பெறும்; வழியாகும் சாரூபம்=அக்கிரியையின் வழித்தாம் (யோகத்தால் எய்தப்பெறும்) சாரூபம்; பாலோகமில்லாப் பரனுருவாம் = விரிந்தவுலக சம்பந்தமில்லாத சிவத்தினுருவமாதல்.

1508. கிரியையின் நான்குபாதமும் கூறியது இம்மந்திரம்.

### ௧௪-வது சாமீபம்.

1509. பாசம் பசுவான தாகுமிச் சாலோகம்
பாச மருளான தாகுமிச் சாமீபம்
பாசஞ் சிரமான தாகுமிச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச்சி யம்மே. (௧)

---

### ௧௫-வது சாரூபம்.

1510. தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந்
தங்குஞ்சன் மார்க்கந் தனிலன்றிக் கைகூடா
வங்கத் துடல்சித்தி சாதன ராகுவ
ரிங்கிவ ராக விழிவற்ற யோகமே. (௧)

1511. சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
சயிலம தாகுஞ் சராசரம் போலப்
பயினுங் குருவின் பதிபுக்க போதே
கயிலை யிறைவன் கதிர்வடி வாமே. (௨)

---

### ௧௬-வது சாயுச்சியம்.

1512. சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தனைச் சாராம னீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச்சி யம்மே. (௧)

---

1509. பாசம் பசுவானதாகும் = செயலற்றிருந்த பாசம் ஜீவத்துவமுடையதுபோல நெகிழ்ச்சி பெறும்; பாசமருளானதாகும்= பாசம் வருத்துந் தன்மையறும்; பாசஞ்சிரமானதாகும்= பாசம் அதிகார மாத்திரையாய் நிற்கும்; கரை=அற்றொழிதல்.

1510. எட்டாம் யோகம்=அட்டாங்கயோகம்; அங்கத்துடல்=அவயப்பாகுபாடுள்ள சரீரம்; சித்திசாதனர்=சித்தி கைவந்தவர்.

1511. சயிலலோகம் = (லோக சயிலம்) பொன்னாகிய மஹாமேரு; சயிலமதாகுஞ் சராசரம் போல=அந்த மஹாமேருவின் தன்மையை யடையுஞ் சராசரங்களைப்போல; குருவின்பதி= குருவடிவமா யெழுந்தருளிய சிவலோகம்; கதிர்வடிவாகும்= ஒளியுருவமாகும்.

1512. சம்பந்தமாவது=கூடிநிற்றல்; சாருதல் = அருகிற் கூடிநிற்றல்; சாராமனீவுதல் = அதனொடு சார்ந்து நில்லாம லிரண்டறக் கலத்தல்; (இதனாற் சாயுச்சியம் முத்திறப்படுமென்பது

1513. சாயுச்சி யஞ்சாக் கிராதீதஞ் சாருதல்
சாயுச்சி யம்முப சாந்தத்துத் தங்குதல்
சாயுச்சி யஞ்சிவ மாதல் முடிவிலாச்
சாயுச்சி யம்மனத் தானந்த சத்தியே. (உ)

---

### கஎ-வது சத்தி நிபாதம்.

#### (க) மந்தம்.

1514. இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தாளே. (க)

1515. தீம்புல னான தெசையது சிந்திக்கி
லாம்புல னாயறி வார்க்கமு தாய்நிற்குந்
தேம்புல னான தெளிவறி வார்கட்குக்
கோம்புல னாடிய கொல்லையு மாமே. (உ)

1516. இருணீக்கி யெண்ணில் பிறவி கடத்தி
யருணீங்கா வண்ணமே யாதி யருளு
மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருணீங்கா வின்பம் புலம்பயி றானே. (௩)

---

1513. சாக்கிராதீதஞ் சாருதல் = மேலாலவத்தையில் சாக்கிராதீதத்தை யடைதல்;உபசாந்தம்=விருப்பு வெறுப்பாகிய பிரபஞ்சவியல் கடந்த நிலைமை; ஆனந்த சத்தி=சிவத்தினது ஆனந்த சத்திமயமாய் நிற்றல்.

1514. இருட்டறை = அவித்தியாமய சரீரம்; குமரி = சத்தி; குருட்டுக் கிழவன் = ஞானக்கண்ணிழந்த அநாதியான்மா; மணம் புரிந்தாள்=மேன்மைபெறச் செய்தனள்.

1515. தீம்புலன்=இன்பமுறுதற்குரிய விஷயம்; தெசை=நிலைமை; ஆம்புலனாய்=பொருந்தியவறிவாய்; கோம்புலன் (கோப்புலன் என்பது எதுகைநோக்கி மெலிந்து நின்றது)=சிவஞானம்.

1516. கடத்தி=தாண்டுவித்து; பொருணீங்காவின்பம்=மெய்ம்மை யொழியாத வின்பம் (நிலைபெற்ற வின்பம்); புலம்பயில்தானே=தானேபொருந்திச் சரீரமாய்நிற்கும்.

1517. இருள்சூ ழறையி லிருந்தது நாடிற்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போன்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
யருள்சூ ழிறைவனு மம்மையு மாமே. (௪)

(உ) மந்ததரம்.

1518. மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
யருட்டிகழ் ஞான மதுபுரிந் தாளே. (௫)

1519. கன்னித் துறைபடிந் தாடிய வாடவர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்திலர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்துண்டேற்
பின்னைப் பிறவி பிறிதில்லை தானே. (௬)

1520. செய்யன் கரியன் வெளியனற் பச்சைய
னெய்த வுணர்ந்தவ ரெய்வ ரிறைவனை
மைவென் றகன்ற பகடுரி போர்த்தவெங்
கைய னிவனென்று காதல்செய் வீரே. (௭)

---

1517. நாடின்=தேடுங்கால்; சூழ்விளக்கது=ஒளி சூழ்ந்தவிளக்கு; எரிந்தாற்போல் = (தேடப்பட்ட பொருளை விளக்குதற்கு) பிரகாசித்தல்போல; மருள்சூழ் மயக்கத்து=அஞ்ஞானத்தா னிறைந்த மயக்கத்தில்; மலர்நந்தி=(இதயதாமரையில் வசிக்கிற சிவம்; இறைவனும்=(தேடப்படும் பொருள்போல்) சிவமும் ; அம்மையுமாம் = (விளக்குகின்ற விளக்கைப்போல) சத்தியுமாகும்.

1518. வெருட்டி வினையறுத்து=கன்மங்களை அச்சுறுத்தி யழித்து; குணம்பல=பலநன்மைகளை; அருட்டிகழ் ஞானம்=அருள் மயமான ஞானம்.

1519. கன்னித்துறை=குமரிநதித் துறை; கன்னித்துறை= தேவி யின்நெறி.

1520. செய்யன் = பிரமன்; கரியன்=இந்திரன்; வெளியன்=உருத்திரன்; பச்சையன்=திருமால்; எய்வர் (எய்துவர் என்பதன் விகாரம்) = அடைவார்கள்; மைவென்றகன்றபகடு = அஞ்சனத்தை மேற்கொண்டு பரந்த (கரிய நிறமுள்ள) யானை ; வெங்கையன்=வஞ்சகன்.

**1521.** எய்திய காலங்க ளெத்தனை யாயினுந்
தையலுந் தானுந் தனிநா யகமென்பர்
வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்
கையிற் கருமஞ்செய் காட்டது வாமே. (அ)

**1522.** கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர்
வண்டுகொண் டாடு மலர்வார் சடையண்ண
னின்றுகண் டார்க்கிரு ணீக்கிநின் றானே. (௯)

---

(௩) தீவிரம்.

**1523.** அண்ணிக்கும் பெண்பிள்ளை யப்பனார் தோட்டத்தி
லெண்ணிக்கு மேழேழ் பிறவி யுணர்விக்கு
முண்ணிற்ப தெல்லா மொழிய முதல்வனைக்
கண்ணுற்று நின்ற கனியது வாகுமே. (௧0)

**1524.** பிறப்பை யறுக்கும் பெருந்தவ நல்கு
மறப்பை யறுக்கும் வழிபட வைக்குங்
குறப்பெண் குவிமுலை கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே. (௧௧)

---

1521. தனிநாயகம் = ஒப்பற்ற இறைமைத் தன்மை; கையில் = கரத்தால் (சின்முத்திரையால்); கருமஞ் செய் காட்டு = யோகஞ்செய்வதற்காய்க் காட்டியருளிய (உபதேசம்).

1522. இரண்டும் = சூரிய சந்திர ஒளி யிரண்டும்; தொடர்ந் தாங்கு=ஒன்றை யொன்று தொடர்ந்து வருவது போல்; ஓயும்=தளர்வுறும்; நின்றுகண்டார்க்கு = சன்மார்க்கத்தி னிலைத்துத் தரிசித்தவர்க்கு; நின்றான்=நிலைத்திருந்தருளி னான்.

1523. அண்ணிக்கும்=பொருந்தியிருக்கின்ற; அப்பனார் தோட்டத்தில்=பரம சிவத்துக்குரிய கொல்லை போல்வதான சரீரத்தில்; எண்ணிக்கும் (எண்ணிகுமென்பது எதுகைநோக்கி விரித்தல் விகாரம் பெற்றது) = அளவுகடந்த; உண்ணிற்பதெல்லாம் ஒழிய = அகத்துளிருக்குஞ் செயலையெல்லாம்; கண்ணுற்றுநின்ற = (அப் பெண்ணினாலே) அறியப்பட்டிருந்த; கனியதுவாகும்=பழம் அச்சிவமேயாம்.

1524. மறப்பு = அவித்தியா காரியமான மறதி; குறப்பெண்= குறிஞ்சி நிலத்திற் பிறந்தவள் (மலையரசன்மகள்); கோமள வல்லி=அழகிய கொடிபோல்பவள்.

1525. தாங்குமி னெட்டுத் திசைக்குந் தலைமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடு
மாங்கது சேரு மறிவுடை யார்கட்குத்
தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே. (௧௨)

1526. நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகினும் பன்மலர் தூவிப் பணிகுவ
னணுகிய தொன்றறி யாத வொருவ
னணுகு முலகெங்கு மாவியு மாமே. (௧௩)

(ச) தீவிரதரம்.

1527. இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனு ஞானத்தாற் றன்செய லற்றாற்
றிரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (௧௪)

1528. இரவும் பகலு மிலாத விடத்தே
குரவஞ் செய்கின்ற குழலியை யுன்னி
யரவஞ் செய்யாம லவளுடன் சேரப்
பரிவொன்றி லாளும் பராபரை தானே. (௧௫)

1529. மாலை விளக்கு மதியமு ஞாயிறுஞ்
சால விளக்குந் தனிச்சுட ரண்ணலுண்
ஞானம் விளக்கிய நாதனென் றுட்புகுந்
தூனை விளக்கி யுடனிருந் தானே. (௧௬)

---

1525. தாங்குமின்—இதயத்தில் தரித்துக்கொள்ளுங்கள்; ஆங்கது—அச்செயல்; ஒளிநீலம்—(நீல ஒளி) சத்தி (சத்தி நிபாதம்).

1527. நேரொப்பில்—சமமாயொத்த விடத்து; தருமெனுஞானத்தால் — சத்தியா லருளப்படுவதாம் ஞானத்தினல் (சத்தி நிபாதத்தால்); திரிமலம்—ஆணவம் மாயை காமியம்.

1528. குரவஞ் செய்கின்ற — குரவ மலரை அணிகின்ற, அல்லது குரவையாட்டயர்கின்ற; அரவஞ்செய்யாமல் — மௌனமாயிருந்து.

1529. மாலை விளக்கு மதியமு ஞாயிறும்—மாலையில் வைக்கப்படுந் தீபமும் சந்திரனும் சூரியனும் (போல்); விளக்கிய—விளக்குதற்பொருட்டு; நாதனென்றுட்புகுந்து — குருவாயென்னுள்ளத்தமர்ந்து, நாதனென்னுட்புகுந்து என்றும் பாடம்; ஊனை—சரீரத்தை.

## சஅ-வது புறச்சமய தூஷணம்.

1530. ஆயத்து ணின்ற வறுசம யங்களுங்
காயத்து ணின்ற கடவுளைக் காண்கிலா
மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
பாசத்தி லுற்றுப் பதைக்கின்ற வாறே. (க)

1531. உள்ளத்து ளேதான் கரந்தெங்கு நின்றவன்
வள்ளற் றலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பை புகுந்து புறப்படுங்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே. (உ)

1532. உள்ளத்து முள்ளன் புறத்துள்ள னென்பவர்க்
குள்ளத்து முள்ளன் புறத்துள்ள னெம்மிறை
யுள்ளத்து மில்லை புறத்தில்லை யென்பவர்க்
குள்ளத்து மில்லை புறத்தில்லை தானே. (ங)

1533. ஆறு சமயமுங் கண்டவர் கண்டில
ராறு சமயப் பொருளு மவனலன்
றேறுமின் றேறித் தெளிமின் றெளிந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. (ச)

---

1530. ஆயத்துணின்ற=கட்டுக்குள் அமைந்துள்ள; மாயக்குழி= கருப்பாசயம்; பாசத்தில்=கட்டுக்குள்.

1531. வள்ளல் தலைவன் (இருபெயரொட்டுப் பண்புத்தொகை) = (அன்பர் விரும்பியவற்றை) கொடுக்குமிறைவன்; மலருறை மாதவன் = ஆயிரவிதழ்ப்பூவில் வசிக்கின்ற உமாதேவி நாயகன்; பொள்ளல்=துவாரம்; குரம்பை=உடல்; புகுந்து= (அநாதியிலேயே) பிரவேசித்து; வெளிப்படும் = (பரிபாக முதிர்ச்சியில்) வெளிப்படுகின்ற.

1532. உளனெனக் கருதி வழிபடுவோர்க் குளனுவன், இலனெனக் கருதி வழிபடா தொழிவார்க் கிலனுவன் பரசிவனென்பது கூறிற்று இம்மந்திரம்.

1533. ஆறுசமயம்=பைரவம், ஜைனம், பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம், உலகாயதம், சூனியவாதம் என்பன; மாறுதலின்றி= தவறுதலில்லாமல்; மனை=வீடு (மோட்சம்).

1534. சிவமல்ல தில்லை யறையே சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்
கவமல்ல தில்லை யறுசம யங்க
டவம்வல்ல நந்திதாட் சார்ந்துய்யு நீரே. (௫)

1535. அண்ணலை நாடிய வாறு சமயமும்
விண்ணவ ராக மிகவும் விரும்பியே
முண்ணின் றழிய முயன்றில ராதலான்
மண்ணின் றொழியும் வகையறி யார்களே. (௬)

1536. சிவகதி யேகதி மற்றுள்ள வெல்லாம்
பவகதி பாசப் பிறவியொன் றுண்டு
தவகதி தன்னொடு நேரொன்று தோன்றி
லவகதி மூவரு மவ்வகை யாமே. (௭)

1537. நூறு சமய முளவா நுவலுங்கா
லாறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா
வீறு பரநெறி யில்லா நெறியன்றே. (௮)

---

1534. அறையே = பறையடித்துத் தெரிவிப்பதாகும்; சிவமாந் தவம்=சீவன் சிவமாதற்குரிய சன்மார்க்க நெறியினலாகுந் தவம்; தலைப்படுவார்க்கு=(முத்தியடைய) முயல்வார்க்கு; அவம்=வியர்த்தம்; தவம் வல்ல நந்தி=தவத்தின் மேம்பட்ட (குருவான) நந்திபிரான்.

1535. விரும்பி = விரும்புதலால், (விரும்பி யென்னும் எச்சம் காரணப்பொருளில் வந்தது); எம் (எமம்) உள் நின்று அழிய= அகத்திலுள்ள ஆசை கெடுமாறு; மண்ணின் றொழியும் வகை=பூமியிற் பிறப்பதை நீக்குதற்குரிய மார்க்கம்.

1536. சிவகதியேகதி = சிவத்தையடையு நெறியே மோட்ச நெறி; பவகதி = பிறப்புக்கிடமான நெறி; தவகதி தன்னொடு நேரொன்று=தனக்குத்தானே சமானமாந் தன்மையுள்ள சன்மார்க்கமாகிய தவமார்க்கம்; அவகதி மூவரும் = பயனற்ற பதமுத்திகட் கிறைவராகிய மும்மூர்த்திகளும்.

1537. நூறுசமயம் = அளவிறந்த மதங்கள், அல்லது வருத்துதற் குரிய மதங்கள்; ஆறுசமயம்=ஆறாகிய உட்சமயம் புறச் சமயங்கள்; அவ்வாறுட்படுவன=அவ்வாறு சமயமும் கூறும் வழிகளுள் பொருந்துவன; ஈறு = அம்மதங்க ளெல்லாஞ் சென்றடைந்து முடிவினைப் பெறுவனவான பூரணநெறி; பரநெறி=சிவநெறி; இல் ஆம் நெறி=மோட்சமருளும் நெறி.

1538. கற்றுங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்தசிவ னெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் தெரியார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே. (௯)

1539. மயங்குகின் றாரு மதிதெளிந் தாரு
முயங்கி யிருவினை முழைமுகப் பாச்சி
யியங்கிப் பெறுவரே யீறது காட்டிற்
பயங்கெட் டவர்க்கோர் பரநெறி யாமே. (௧௦)

1540. சேய னணியன் பிணியிலன் பேர்நந்தி
தூயன் றுளக்கற நோக்கவல் லார்கட்கு
மாயன் மயக்கிய மானிட ராமவர்
காயம் விளக்குங் கருத்தறி யார்களே. (௧௧)

1541. வழியிரண் டுக்குமோர் வித்தது வான
பழியது பார்மிசை வாழ்த லுறுதல்
சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்
றழிவறி வார்நெறி நாடநில் லாரே. (௧௨)

---

1538. கலதிகள்=வீணர்கள்; கோதாட்டார்=பாராட்டார்கள்.

1539. முயங்கி=அனுபவித்து; முழை முகப்பு ஆச்சி=கபாலகுகை முனையிலிருக்கின்ற அம்மை; இயங்கி=(அவ்வழி) சென்று; ஈறு=வினைமுடிவு, அல்லது துவாதசாந்தம்.

1540. சேயன் = எட்டாதவன்; அணியன் = சமீபத்திலுள்ளவன்; பிணியிலன்=பாசபந்த மில்லாதவன்; துளக்கற=அசைவற; மாயன்மயக்கிய = விஷ்ணு மாயையால் மயக்கப்பட்டுள்ள; காயம் விளக்குங் கருத்து=சரீரத்தாலாம்பயன்.

1541. வழியிரண்டு = ஊர்த்துவகதி. அதோகதி; சுழி=பிரணவம், அல்லது புருவமத்திய ஸ்தானம்; அழிவறிவார் = பிரபஞ்ச நாசத்தை அறிவார்; நெறி=முற்கூறிய விருநெறி.

1542. மாதவ ரெல்லமா தேவன்பி ரானென்பர்
நாதம தாக வறியப் படுநந்தி
பேதஞ் செய்யாதே பிரானென்று கைதொழி
லாதியு மந்நெறி யாகிநின் றானே. (௧௩)

1543. அரனெறி யப்பனை யாதிப் பிரானை
யுரநெறி யாகி யுளம்புகுந் தானைப்
பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்
பரனறி யாவிடிற் பல்வகைத் தூரமே. (௧௪)

1544. பரிசற வானவன் பண்பன் பகலோன்
பெரிசறி வானவர் பேற்றிற் றிகழுந்
துரிசற நீங்கின தூய்மணி வண்ண
னரிதவன் வைத்த வறநெறி தானே. (௧௫)

1545. ஆன சமய மதுவிது நன்றெனு
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமி
னூனங் கடந்த வுருவது வாமே. (௧௬)

---

1542. நாதமதாக=நாதசொரூபமாக; பேதஞ்செய்யாது=வேறாகக் கருதாமல்; அந்நெறி=அபேதமாகக் கருதப்படு மந்தமுறைமையில்.

1543. அரனெறி = சன்மார்க்க சிவநெறி; உரநெறி=ஞானநெறி; பரநெறி = முத்திமார்க்கம்; பல்வகைத் தூரம் = நெடுந் தூரம்.

1544. பரிசறவானவன்=மாயாகுண ரகிதனான பரசிவன்;பண்பன்= சிற்குணன்; பெரிசறிவானவர் = மிகுதியு முணர்ந்த தேவர்கள்; பேறு=செல்வப்பேறு; தூய்மணி வண்ணன்=வெள்ளிய படிக மணிபோலும் நிறத்தையுடையவன் ; வைத்த அறநெறி=மானிடர்பொருட்டு நியமித்தருளிய சன்மார்க்கம்.

1545. மாயமனிதர் = வஞ்சகமுள்ள மனிதர்; கானங்கடந்த=கீதமயமான வேதங்களை அருளிய, அல்லது நாத தத்துவங் கடந்த; ஊனங்கடந்த வுரு=குற்றமில்லாத வடிவம்.

1546. அங்நெறி நாடிய வமரர் முனிவருஞ்
சென்னெறி கண்டார் சிவனெனப் பெற்றார்பின்
முன்னெறி நாடி முதல்வ னருளிலார்
சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே. (௧எ)

1547. உறுமா றறிவது முண்ணின்ற சோதி
பெறுமா றறியிற் பிணக்கொன்று மில்லை
யறுமா றதுவான வங்கியு ளாங்கே
யிறுமா றறிகில ரேழைக டாமே. (௧அ)

1548. வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையங்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே. (௧௯)

1549. வழிசென்ற மாதவம் வைகின்ற போது
பழிசெல்லும் வல்வினைப் பற்றறுத் தாங்கே
வழிசெல்லும் வல்வினை யார்திறம் விட்டிட்
டுழிசெல்லி லும்பர் தலைவன்முன் னாமே. (௨௦)

---

1546. சென்னெறி=(முத்தியில்) செல்லத்தக்க நெறி; பின் முன்னெறி=சன்மார்க்கத்தை வெளிப்படுத்திய பின்னும்அதற்கு முன்னும் (மனிதரா னியமிக்கப்பட்டுள்ள) நெறிகள்.

1547. உறுமாறு=அடையத்தக்க மார்க்கம்; பிணக்கு=விரோதம்; அறுமாறு = (பிறவி) நீங்கும்வழி; அங்கியுள் = பிராணக்கினியுள், அல்லது அக்கினியுருவனான சிவபிரானிடத்தில்; இறுமாறு = இலயிக்கின்ற வகை; ஏழைகள் = மதியீனர்கள்.

1548. வழிநடக்கும் பரிசு ஒன்று=சன்மார்க்க வழியிற் செல்லுதற்குரிய சாதனமொன்று; கழிநடக்கு=வரம்புகடந்து நடத்தல்; கற்பனை = கற்பித்த மதங்கள்; சுழி = (ஜனனமரணங்களாகிற) சுழற்சி; பழி=வைராக்கியம் (அநித்தியமானவற்றை வெறுத் தொழித்தல்).

1549. பழிசெல்லும் = நிந்தனை பரவுகின்ற; ஆங்கேவழி = அத்தன்மைத்தான (தீய)நெறி; உழி=சன்மார்க்கத்தில்; முன்னும்=பிரத்தியட்சமாவான்.

### ௪௬-வது நிராசாரம்.

1550. இமையங்க ளாய்நின்ற தேவர்க ளாறு
சமையங்கள் பெற்றனர் சாத்திர மோதி
யமையறிந் தோமென்ப ராதிப் பிரானுங்
கமையறிந் தாருட் கலந்துநின் றானே. (௧)

1551. பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி
தாங்கு மனிதர் தரணியி னேரொப்பர்
நீங்கிய வண்ண நினைவுசெய் யாதவ
ரேங்கி யுலகி லிருந்தழு வாரே. (௨)

1552. இருந்தழு வாரு மியல்புகெட் டாரு
மருந்தவ மேற்கொண்டங் கண்ணலை யெண்ணில்
வருந்தா வகைசெய்து வானவர் கோனும்
பெருந்தன்மை நல்கும் பிறப்பில்லை தானே. (௩)

1553. தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர்
பாரறி வாளர் படுபயன் றானுண்பர்
காரறி வாளர் கரந்து பிறப்பார்க
ணீரறி வார்நெடு மாமுகி லாமே. (௪)

---

1550. இமையங்களாய் = இமயமலைபோல (சொரூபமுடையவராய்ச் செயலற்றிருந்த); ஆறுசமையங்கள் பெற்றனர்=ஆறுவகை மதங்கட்கு மிறைவராயிருந்தனர்; சாத்திரம்=அம்மத சாத்திரம்; அமை = அடையத்தக்கது; கமை = பொறுமை.

1551. நேரொப்பர் = அச்சிவத்துக்குச் சமானமாவார்கள்; நீங்கிய= (அஞ்ஞானம்) ஒழிந்த.

1552. இயல்பு=பிரகிருதி; பெருந்தன்மை=ஞானம்(நிராகாரபாவனை செய்தற்குரிய பேரறிவு.)

1553. தூரறிவாளர்=(ஈசனைத் தமக்கு) புறம்பாக அறிகின்றவர்கள்; துணைவர் நினைப்பிலர் = (பெத்தமுத்திகளில்) துணையாம் சிவத்தைக்கருதாதவர்கள்; பாரறிவாளர் = உலகினையறியுமறிவினர்; படுபயன்றானுண்பர் = உலகத்துண்டாம் பயனையனுபவிப்பர்; காரறிவாளர் = பாசவறிவினர், அல்லது அஞ்ஞானிகள்; கரந்து=இறந்து; நீரறிவார்=சிவத்தின் றன்மையை யறிபவர்; நெடுமாமுகிலாம்=(கைம்மாறு கருதாத) பெருமை பொருந்திய மேகம்போலும் (உலகுக் குபகரிப்பவர்).

1554. அறிவுடன் கூடி யழைத்ததோர் தோணி
பறியுடன் பாரம் பழம்பதி சிந்துங்
குறியது கண்டுங் கொடுவினை யாளர்
செறிய நினைக்கிலர் சேவடி தானே. (ரு)

1555. மன்னு மொருவன் மருவு மனோமய
னென்னின் மனித ரிகழ்வரிவ் வேழைக
ளுன்னி மனமே தொழுமின் றுணையிலி
தன்னையு மங்கே தலைப்பட லாமே. (சு)

1556. ஓங்காரத் துள்ளொளி யுள்ளே யுதயமுற்
றூங்கார மற்ற வனுபவங் கைகூடார்
சாங்கால முன்னார் பிறவாமை சார்வுறார்
நீங்காச் சமயத்து ணின்றொழிந் தார்களே. (எ)

---

உ0-வது உட்சமயம்.

1557. இமையவர் தம்மையு மெம்மையு முன்ன
மமைய வகுத்தவ னாதி புராணன்
சமையங்க ளாறுந்தன் றாளிணை நாட
வமையங் குழல்கின்ற வாதிப் பிரானே. (க)

---

1554. தோணி = தோணிபோலுஞ் சிவம்; பறியுடன் = பொன் போலுமுடலுடன்; பாரம் = தத்துவ சமூகம்; பழம் பதி = அநாதியான சரீரம்; குறியது = கருத்து; சேவடி = (தோணிபோலு மீசன்) செய்ய திருவடிகள்.

1555. மன்னுமொருவன் = நித்தியனாயுள்ள ஈசன்; மனோமயன் = மனத்தினைச் சரீரமாகக்கொண்டு வசிப்பவன் (வேறு சரீர மில்லாதவன்); துணையிலி = ஒப்பற்ற ஈசன்; அங்கே = அம்மனத்தின்கண்.

1556. ஒளி=ஒளிமயனான ஈசன்; உள்ளே யுதயமுற்று=மனத்தின் கண் நிராகாரமாகத் தோன்றப்பெற்று; நீங்காச்சமயம் = மயக்கமொழியாத மதக்கோட்பாடு.

1557. ஆதிபுராணன் = பிரபஞ்சத்துக்கு ஆதியாகிய அநாதிமுதல் வன்; அமைய அங்கு உழல்கின்ற = அச் சமயங்களோடும் பொருந்தி யிருக்கின்ற (தேவரையும் மனிதரையும் படைத் தருளியவன் ஆதிமுதல்வனாகிய இப்பெருமானே உட்சமய மாறுக்கும் இறைவனாமென்பதுணர்த்தியது இம்மந்திரம்).

1558. ஒன்றது பேரூர் வழியா றதற்குள
வென்றது போல விருமுச் சமயமு
நன்றிது தீதிது வென்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே. (௨)

1559. சைவப் பெருமைத் தனிநாய கன்றன்னை
யுய்ய வுயிர்க்கின்ற வொண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை யின்பஞ்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. (௩)

1560. சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற்
பவனவன் வைத்த பழவழி நாடி
யிவனவ னென்ப தறியவல் லார்கட்
கவனவ னங்குள தாங்கட னாமே. (௪)

1561. ஆமா றுரைக்கு மறுசம யாதிக்குப்
போமாறு தானில்லை புண்ணிய மல்லதங்
காமாம் வழியாக்கு மவ்வே றுயிர்கட்கும்
போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே. (௫)

---

1558. ஒன்றது பேரூர் = ஒரு பெரிய ஊருக்கு; வழியாறுள = செல்லுமார்க்கம்ஆறுண்டு; என்றதுபோல விருமுச்சமயமும் = என்று கூறுதல்போல ஆறுசமயங்களும் (மோட்சத்துக்கு வழியாம்); குன்றுகுரைத்தெழு நாயையொத்தார்கள் = மலையின்மேலே கோபித்துக் குலைத்தெழுகின்ற நாயைப் போலப் பயனற்றொழிந்தார்கள்.

1559. உயிர்க்கின்ற = உயிருக்குயிரா யிருக்கின்ற; மெய்ய (மெய்ம்மை யென்னும் பண்புப் பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்) மெய்யான.

1560. அவன்—பகுதிப்பொருள் விகுதி, பலரறிசுட்டெனினு மமையும்; பவன் = பரமசிவன்; பழவழி = அநாதியான சன்மார்க்க நெறி ; இவனவனென்பது = இந்தச் சீவன் சிவமே யென்பதை, அல்லது சீவன் சிவம் என்னு மியல்பினை; அவனவன் = அவ்வச்சமயங் கூறுந் தேவன்; அங்கு = அவ்வச் சமயங்களில்.

1561. அறுசமயாதிக்கு = அறுவகைச் சமயமுதலியனவைகட்கு; ஆமாம் வழியாக்கும் = உரியதான மார்க்கத்தை யுண்டாக்கும்; அவ்வேறுயிர்கட்கும் = பரிபாக நூனுதிக்கம் பெற்ற அந்தச் சீவர்களுக்கும்; ஆதாரப் பூங்கொடி = ஆதாரங்கட்குரிய சத்தி, அல்லது ஜகத் ஆதாரமாயுள்ள சத்தி.

1562. அரனெறி யாவ தறிந்தேனு நானுஞ்
சிரநெறி தேடித் திரிந்தவந் நாளு
முரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந்
தரநெறி நின்ற தனிச்சுடர் தானே. (௬)

1563. தேர்ந்த வரனை யடைந்த சிவநெறி
பேர்ந்தவ ருன்னிப் பெயர்ந்த பெருவழி
யார்ந்தவ ரண்டத்துப் புக்கவ் வருணெறி
போந்து புனைந்து புணர்நெறி யாமே. (௭)

---

1562. அறிந்தேனும் நானும் = அறிந்துள்ளவனுமாகிய நானும்; சிர நெறி=தலைமையான மார்க்கங்கள்; உரநெறி=கடின வழி; உள்ளக் கடல்=(காமாதிகணிறைந்து) கடல்போலு முள்ள மனம்; தரம்=முறை; நெறி நின்ற = அந்நெறிக டோறு முடனாகி நின்ற; தனிச்சுடர் = ஒப்பற்ற ஞான வொளி (சத்தி), (நன்னெறி யுணராது வேறு நெறிகளி லலைந்து கொண்டிருந்த காலத்திலும் கூட விருந்து பரி பாகம் வருவித்து இந்தச் சன்மார்க்கத்திற் கூட்டியதும் சிவ சத்தியேயென்பது கருத்து).

1563. தேர்ந்த வரனையடைந்த = சிவசத்தியா லுணர்ந்த சிவத்தை யடைந்த; சிவ நெறி = சைவ நெறியானது; பேர்ந்தவர் = (சிவ நெறியைவிட்டு) விலகி வேறு நெறி சென்றவர்; உன்னி = மெய்ந் நெறியென்று கருதி; பெயர்ந்த பெரு வழி = சென்றடைந்த பெருமையுள்ள சமயங்கள்; ஆர்ந்த வரண்டத்துப்புக்கு = (அண்டத்து ஆர்ந்தவர்புக்கு) (அந்தச் சமயாசாரம் தவறுதொழுகிய புண்ணியத்தால) போக பூமிதோறுஞ் சென்று புசித்து ஒழிந்து (பூமியில் மீண்டும்) பிறந்து; அவ்வருணெறி = அந்தச் சத்தியால் முறை யாக; போந்து = (உட்சமயங்களில்) புகுந்து; புனைந்து புணர்நெறியாம் = (பிறகு பரிபாக முதிர்ச்சியால்) புகழ்ந்து வந்தடைந்த சன்மார்க்க நெறியாம; வேறு சமயக் கோட் பாடுடையார் அப்புண்ய வசத்தால் போக பூமிகளிற்சென்று இன்ப நுகர்ந்தொழிந்து, மீண்டும் பூமியிற் பிறந்து, உட் சமயஞ் சார்ந்து, பின்னர்ச் சத்தியி னருளால் பரிபாக முதிர்ந் து, இதுவே உண்மை நெறியென்று புகழ்ந்து கைக் கொண்ட நெறியே சிவ சன்மார்க்க நெறியாமென்று பொருள் கொள்க.

1564. ஈரு மனத்தை யிரண்டற விசுமி
னூருஞ் சகாரத்தை யோதுமி னோதியே
வாரு மரனெறி மன்னியே முன்னியத்
தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே. (அ)

1565. மினற்குறி யாளனை வேதியர் வேதத்
தனற்குறி யாளனை யாதிப்பி ரான்றனை
நினைக்குறி யாளனை ஞானக் கொழுந்தி
னயக்குறி காணி லரனெறி யாமே. (௯)

1566. ஆய்ந்துணர் ரார்க்கி னன்மாச் சதுர்பல
வாய்ந்துண ராவகை நின்ற வரனெறி
பாய்ந்துணர் வாரரன் சேவடி கைதொழு
தேர்ந்துணர் செய்வதோ ரின்பமு மாமே. (௧௦)

1567. சைவ சமயத் தனிநா யகனந்தி
யுய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு
தெய்வ சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத்து ளார்க்கு வகுத்துவைத் தானே. (௧௧)

---

1564. ஈருமனத்தை=மனதைத் தண்டித் தடக்குங்கள்; இரண்டற= பேத நெறி யொழிய; ஊருஞ் சகாரத்தை = அம் என்பதனுடன் ஊரப்படும் சகாரத்தை, அது "சம்" என்பது, இது சத்தி சிவ சொரூபம்; முன்னி=எதிர்ப்பட்டு; அத்தூரும்= செந்நிறம் பொருந்திய.

1565. மினற்குறியாளன்=(யோககாட்சியிற் றோற்றும்) மின்னலாகிய குறியுடையவன்; அனற்குறியாளன் = அக்கினி சொரூபமுடையவன்; நினைக்குறியாளன் = (அன்பர்) தியானித்தற்குரிய சகுணத் திருமேனி யுடையவன்; ஞானக் கொழுந்தி னயக்குறிகாணில் = ஞானச் சிகையின் வண்ணமாகத் தியானிப்பின் (அறிவுருவாகக்கருதின்).

1566. சதுர்பல வாய்ந்து = வெகு சாமர்த்திய முடையவராய்; உணர்செய்வது=ஞானத்திறல் உண்டாவது.

1567. 1478-ம் மந்திரமே யிதுவாம், இரண்டற்ற அத்துவித நெறியே சன்மார்க்கமா மென்பது வலியுறுத்தற் பொருட்டு, ஈண்டனுவாதஞ் செய்யப்பட்டது போலும்.

1568. இத்தவ மத்தவ மென்றிரு பேரிடும்
பித்தரைக் காணி னருமெங்கள் பேர்நந்தி
யெத்தவ மாகிலெ னெங்கு பிறக்கிலெ
னொத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே. (௧௨)

1569. ஆமே பிரான்முக மைந்தொடு மாருயி
ராமே பிரானுக் கதோமுக மாறுள
தாமே பிரானுக்குந் தன்சிர மாலைக்கு
நாமே பிரானுக்கு நரரியல் பாமே. (௧௩)

1570. ஆதிப்பி ரானுல கேழு மளந்தவ
னோதக் கடலு முயிர்களு மாய்நிற்கும்
பேதிப் பிலாமையி னின்ற பராசத்தி
யாதிக்கட் டெய்வமு மந்தமு மாமே. (௧௪)

1571. ஆய்ந்தறி வார்க ளமரர் வித்தியாதர
ராய்ந்தறி யாவண நின்ற வரனெறி
வாய்ந்தறிந் தேனவன் சேவடி கைதொழக்
காய்ந்தறிந் தேனிம்மை யம்மைகண் டேனே. (௧௫)

---

1568. ஆஸ்திக சமயங்களும், அவற்றிற் கூறப்பட்ட தவநெறிகளும், முத்தி நெறியேயாய்ச் சன்மார்க்கத்துக்குறுப்பாய் நிற்றலால், எவ்விடத்தும் பேத பாவனை யொழிக வென்பது உணர்த்திற்று இம்மந்திரம்; ஒல்லை=சிறுபொழுது.

1569. பிரான்முக மைந்தொடு = ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதமென்னும், இவ்வைந்து முகங்களோடு; அதோமுகம்=அதோ முகமாயை (அதுவே ஜீவோபாதி யாதலால்) முகமாறுள = ஈசனுக்கு அவ்வதோ முகத்தோடு கூடி யாறுமுகமாம்; சிரமாலைக்கும்=(அவ்வதோ முக மாயா சம்பந்தமான) சிரமாலை யணிந்திருந்தாலும்; நாமே= பெருமைபொருந்திய; நரரியல்பாம்=ஜீவத்துவம் சுதர்மமேயாம், (ஆதலால் சீவனுக்கும் சிவனுக்கும் பேதமின்று அபேதமாமென்பது கருத்தாகக்கொள்க).

1570. பேதிப் பிலாமையின் = சிவத்துக்கு வேறில்லாமையால்; நின்ற = சிவத்தொடு கலந்திருந்த; ஆதிக்கண் = பிரபஞ்சோற்பத்தி காலத்திலும்; அந்தமும்=இலயகாலத்திலும்.

1571. காய்ந்து அறிந்தே னிம்மை அம்மை கண்டேன் = இம்மை மறுமைப் பயன்களை வெறுத்துணர்ந்து (உண்மை நெறியை) கண்டேன்.

1572. அறியவொண் ணாதவ் வுடம்பின் பயனை
யறியவொண் ணாத வறுவகை யாக்கி
யறியவொண் ணாத வறுவகை கோசத்
தறியவொண் ணாததோ ரண்டம் பதிந்ததே. (௧௯)

அதிகாரம் உ௩-க்குப் பாடல் ௧௫௪.

ஐந்தாந் தந்திர முற்றிற்று.

---

1572. உடம்பின் பயனை=சரீரத்தினாற் பெறப்படும் முத்தியாகிய பிரயோசனத்தை; அறுவகை யாக்கி=உட்சமயங்க ளாறினாலடையச் செய்து; அறுவகை=பந்த மொழியும் விதம்; அண்டம்=ஆகாயம் (சிதாகாயமாகிய சிவம்).

# ஆறுந்தந்திரம்.

## ௧-வது சிவகுரு தரிசனம்.

1573. பத்திப் பணித்துப் பரவு மடிநல்கிச்
சுத்த வுரையாற் றுரிசறச் சோதித்துச்
சத்து மசத்துஞ் சதசத்துங் காட்டலாற்
சித்த மிறையே சிவகுரு வாமே. (௧)

1574. பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு
நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே
கூசற்ற முத்தியிற் கூட்டலா நாட்டத்த
தாசற்ற சற்குரு வம்பல மாமே. (௨)

1575. சித்திக ளெட்டொடுந் திண்சிவ மாக்கிய
சுத்தியு மெண்சத்தித் தூய்மையும் யோகத்துச்
சத்தியு மந்திர சாதக போதமும்
பத்தியு நாத னருளிற் பயிலுமே. (௩)

---

1573. சுத்தவுரையால் = பரிசுத்தமாகிய வுபதேச மொழியால்; சத்தும்=சிவத்தையும்; அசத்தும்=பாசத்தையும்; சதசத்தும்=ஆன்மாவையும்; காட்டலால் = (உள்ளபடியே) தரிசிப்பித்தலால்; சித்தம்=நிச்சயமாகவே ; இறையே சிவகுரு வாம்=பரசிவனே சிவ நெறி போதிக்கும் குருவாகும்.

1574. பாசத்தைக் கூட்டியே கட்டி = மாயைக் கூட்டிப் பந்தித்து; பறித்திட்டு=மூலமலத்தைத் தொலைத்து; நேசித்த காயம்=அதுவே தானெனக் கருதி விரும்பி யிருந்த சரீரம்; கூசற்ற=அச்சமற்ற; நாட்டத்தது=கருத்தினை யுடையது, அல்லது கருணைப் பார்வை யுடையது; ஆசற்ற=நிர்மலமான; அம்பலமாம்=சிதாகாச (சொரூபனான) சிவமேயாம்.

1575. சுத்தியும்=அத்துவ சோதனையும்; எண்சத்தித் தூய்மையும் = தன் வயத்தனாதலாதி எண்குணங்களையுடைய நிர்மலத்துவமும்; யோகத்துச் சத்தியும்=யோகத்தினாலாகும் சக்தியும்; மந்திர சாதக போதமும்=மந்திரங்களைப் பயிலலாம் அறிவும்; நாதனருளிற் பயிலும் = சற்குருவின் கருணையாலேயே கைகூடும்.

1576. எல்லா வுலகிற்கு மப்பாலோ னிப்பாலாய்
நல்லா ருள்ளத்து மிக்கரு ணல்கலா
லெல்லாரு முய்யக்கொண் டிங்கே யளித்தலாற்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே. (௪)

1577. தேவனுஞ் சுத்த குருவு முபாயத்துள்
யாவையு மூன்று யுனக்கண் டுரையாலே
மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால்
யாவையு நல்குங் குருபர னன்புற்றே. (௫)

1578. சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணு வதிமூடர்
பொய்த்தகு கண்ணு னமரென்பர் புண்ணிய
ரத்த னிவனென் றடிபணி வாரே. (௬)

1579. உண்மையிற் பொய்ம்மை யொழித்தலு முண்மைப் [பார்
திண்மையு மொண்மைச் சிவமாய வவ்வரன்
வண்மையு மெட்டெட்டுச் சித்தி மயக்கமு
மண்ண லருளன்றி யாரறி வாரே. (௭)

---

1576. எல்லாவுலகிற்கும் அப்பாலோன் = எல்லாவுலகிற்கும் அதீதமாகிய சிவம்; இப்பாலாய் = இவ்வுலகில் (மானிட வுருவங்கொண்டு) வந்து; உய்யக்கொண்டு = ஈடேறும்படி யடிமைகொண்டு; சொல்லார்ந்த = புகழ் நிறைந்த.

1577. தேவனும் = சிவனும்; சுத்த குருவும் = நிர்மலரான குருவும்; உபாயத்துள் = பதார்த்த வகையுள்; மூன்று யுனக்கண்டு = பதிபசு பாசமென்னு மூன்றினுளொன்றாய்க் கருதப்படுதலை யுணர்ந்து; உரையால் = உபதேசத்தால்; மூவாப் பசுபாசம் = கெடாத பசுவினது பாசம்; முத்திப்பால் = சரியையாதி, அல்லது சன்மார்க்காதிய.

1578. அத்தனை = பரசிவனை, அல்லது அதனையென்று பிரித்து அந்தப் பரசிவமாகிய தன்னை; பொய்த்தகுகண் = நிலையற்ற மாயாகாரியமாகிய ஊனக்கண்; நமர் = (மனிதராகிய) நம்மிலொருவர்.

1579. உண்மையில் = நித்தியமான ஞானத்தினாலே; பொய்ம்மை = அஞ்ஞானம்; உண்மைப்பார் திண்மையும் = உண்மையாகக் காணப்பட்ட பிரபஞ்சத்தின் (மயக்கும்) வலிமையும்; ஒண்மைச்சிவமாய = சுத்தசிவமாகிய; வண்மையும் = தன்மையும்; எட்டெட்டுச் சித்தி மயக்கமும் = அறுபத்துநான்கு சித்திகளாலாகும் மயக்கமும்; அருளன்றி = அருளல்லாமல்.

1580. சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனவடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே. (அ)

1581. குருவே சிவமெனக் கூறின னந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்குங்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே. (௯)

1582. சித்த மியாவையுஞ் சிந்தித் திருந்திடு
மத்த னுணர்த்துவ தாகு மருளாலே
சித்தமி யாவையுந் திண்சிவ மானக்கா
லத்தனு மவ்விடத் தேயமர்ந் தானே. (௧௦)

1583. தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த
கோனந்தி யெந்தை குறிப்பறி வாரில்லை
வானந்தி யென்று மகிழு மொருவற்குத்
தானந்தி யங்கித் தனிச்சுட ராமே. (௧௧)

---

1580. அடிசேர = அந்தக் குருவின் திருவடியையடைய; நவமான தத்துவம்=பதிகரணமாக மாற்றுதலாகிய புதிய தத்துவம்; பவம்=பிறப்பு.

1581. உரை = வேதாகமப் பிரமாணம்;

1582. சித்தமியாவையும்—அருளாலே=சித்தமானது எல்லாவற்றையுஞ் சிந்தித் துணர்வதும்,சிவபெருமான் தனதருட் சத்தியாலுணரும்படி செய்தலேயாம் (அன்றி யதுதானே யுணராது என்பது); சிவமானக்கால்=பதி கரணமாக மாறுதலைப் பெற்றால்.

1583 சீர்மையுள்=சன்மார்க்க வொழுக்கத்துள்; சந்தித்த=காணப் படுவதான; சீர்=முறைமை; வானந்தி = மேலான நந்தி; அந்தியங்கித் தனிச்சுடராம் = மாலைக் காலத்து வைக்கப் படுந் தீயாலாகிய ஒப்பற்ற தீபம்போலாவான் (ஈசன்).

1584. திருவாய சித்தியு முத்தியுஞ் சீர்மை
மருளா தருளு மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமு நாத
னுருவா யருளா விடிலோர வொண்ணுதே. (௧௨)

1585. பத்தியு ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான்
முத்தியின் ஞான முளைத்தலா லம்முளை
சத்தி யருடரிற் றுனெளி தாமே. (௧௩)

1586. இன்னெய்த வைத்ததோ ரின்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை யெம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு
மன்னெய்த வைத்த மனமது தானே. (௧௪)

1587. சிவமான ஞானந் தெளியவொண் சித்தி
சிவமான ஞானந் தெளியவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத் தேபாஞ்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே. (௧௫)

---

1584. மருளாது = மயங்காதபடி; வாய்மைப் பொருளாய = உண்மைப் பொருளான; வேதாந்த போதமும் = வேத முடிவான மெய்ஞ்ஞானமும்; நாதனுருவாய்=சிவபெருமான் மானிடவுருவங்கொண்டு; அருளாவிடில் = உபதேசிக்கா விட்டால்.

1585. வைராக்கியமும் = பிரபஞ்ச வெறுப்பும்; பரசித்திக்கு வித்தாம் = சிவத்தையடைதற் கேதுவாம்; சிவோகம் = சிவோகம் பாவனை; ஞானமுளைத்தலால் = ஞானோதய மாதலால்; அம்முளை = அந்த ஞானோற்பத்தி.

1586. இன்னெய்தவைத்த = இத்தன்மைய வெல்லா மடையும்படி வகுத்துள்ளதாகிய; ஓர் இன்பப் பிறப்பினை = ஒப்பற்ற முத்தியின்ப மடைதற்குரிய மானிட ஜனனத்தை; தன்னெய்துங்காலத்து = தன்னை யடையுங் காலத்தில்; மன்னெய்தவைத்த மனம் = இந்திரியங்கட்குத் தலைமை பொருந்திய மனது.

1587. சிவபரம்=சிவசாயுச்சியம்;

1588. அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றுஞ்
செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்
மறந்தொழிந் தேன்மதி மாண்டவர் வாழ்க்கை
பிறிந்தொழிந் தேனிப் பிறவியை நானே. (கசு)

1589. தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவ
னிருக்கின்ற தன்மையை யேது முணரார்
பிரிக்கின்ற விந்தப் பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட வீசனைக் கண்டுகொண் டேனே. (கள)

---

உ-வது திருவடிப்பேறு.

1590. இசைந்தெழு மன்பி லெழுந்த படியே
பசைந்தெழு மீசரைப் பாசத்து ளேகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
வுவந்த குருபத முள்ளத்து வந்ததே. (க)

1591. தாடந்த போதே தலைதந்த வெம்மிறை
வாடந்த ஞான வலியையுந் தந்திட்டு
வீடந்த மின்றியே யாள்கென விட்டருட்
பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே. (உ)

---

1588. அகலிட முற்றும்=பிரபஞ்சமுழுவதும்; செறிந்துணர்ந்து= அன்பினலடைந்து அறிந்து; மதிமாண்டவர் வாழ்க்கை= அறிவற்றவாது வாழ்க்கை;

1589. தரிக்கின்ற=(தாஞதாரமாயிருந்து) தாங்குகின்ற; பிரிக்கின்ற இந்தப் பிணக்கு=சிவத்தையுந் தன்னையும் வேருகப் பிரியச் செய்கின்ற இந்த மாறுபாடு; எல்லாம் கருக்கொண்ட = எல்லாவற்றையும் (சங்காரகாலத்தில்) தன்னு ளடக்கிக் கொண்டிருக்கிற.

1590. இசைந்து=ஒத்து; பசைந்தெழும்=விரும்பித் தோன்றுகிற; பாசத்துள் ஏக = அன்பின்வழிசெல்ல; சிவந்த = (அஞ்ஞானத்தை) கோபித்த; சென்னிகைவைக்க = சிரசிலே கையைவைக்க (ஹஸ்த தீட்சை செய்ய).

1591. தாடந்தபோதே=திருவடி தரிசனந் தந்தவப்பொழுதிலேயே; தலைதந்த=தலைமைத் தன்மையைத் தந்தருளிய; வாடந்த= ஒளியுள்ள அல்லது (அஞ்ஞானத்தை யறுக்கும்) வாளினைப் போலும்; வீடந்தமின்றியே யாள்கென = முடிவற்று முத்தி யுலகையாள்கவென்று; அருட்பாடின்=அருளின் முறைமை யாலே; முடிவைத்து=(திருவடியை) முடியாகச்சூட்டி; பார் வந்து = (குருவடிவமாக) பூமியிலெழுந்தருளி; (எம்மிறை தந்ததே என்று கூட்டி முடிக்க).

1592. தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு
வான சொரூபங்க ளான்கு மகற்றின
வேனைய முத்திரை யீந்தாண்ட நானந்தி
தானடி முற்சூட்டித் தாபித்த துண்மையே. (௩)

1593. உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போற் சிவமாத றீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. (௪)

1594. குரவ னுயிர்முச் சொரூபமுங் கைக்கொண்
டரிய பொருண்முத் திரையாகக் கைக்கொண்டு
பெரிய பிரானடி நந்திபேச் சற்று
வுருகிட வென்னையங் குய்யக்கொண் டானே. (௫)

1595. பேச்சற்ற வின்பத்துப் பேரானந் தத்திலே
மாச்சற்ற வென்னைச் சிவமாக்கி மாள்வித்துக்
காச்சற்ற சோதி கடன்மூன்றுங் கைக்கொண்டு
வாச்ச புகழ்மாளத் தாடந்து மன்னுமே. (௬)

---

1593. உயிர்பரமற்று=சீவன் சிவனென்கிற வேறுபாடற்று; திரையற்ற நீர்போல் = அலையில்லாத சாகரம்போல்; சிவமாதல் தீர்த்து = சிவத்தோடொப்பாத லொழித்து; சொரூபத் திருத்தினன்=சொரூபத்தி லிருக்கச் செய்தான்; சொல் லிறந்தோம் = பேச்சற்ற நிலைபெற்றோம்.

1594. உயிர்முச்சொரூபம்=தூல சூக்கும காரண சரீரங்கள்; பொருண்முத்திரையாக=உடல்பொருள் ஆவி மூன்றையும் காணிக்கையாக; பிரானடி நந்தி = சிவபெருமானது திருவடியைப் பெற்ற நந்திதேவர்; பேச்சற்று = மௌனமாயிருந்து.

1595. மாச்சு = (மாய்த்து என்பதன்போலி) ஒடுங்கச் செய்து; மாள்வித்து = பசுத்துவ மொழித்து; அற்ற=தற் சுதந்தரமற்ற; காச்சற்ற=கொடுமையில்லாத; கடன் மூன்றும்=திரிகரணங்களா லியற்றப்படுங் கிரியைகள்; வாச்ச (வாய்த்த)=பொருந்திய; புகழ்=தற்புகழ்ச்சி.

1596. இதயத்து நாட்டத்து மென்றன் சிரத்தும்
பதிவித்த பாதம் பராபர நந்தி
கதிவைத்த வாறுமெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்பவொண் ணாதே. (எ)

1597. திருவடி வைத்தென் சிரத்தரு ளோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்
கருவழி வாற்றிடக் கண்டுகொண் டேனே. (அ)

1598. திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. (௯)

1599. மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை
மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்
பால்வைத்த சென்னிப் படரொளி வானவன்
றாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே. (௧௦)

---

1596. பதிவித்தபாதம் = (பாதம்பதிவித்த) தனது திருவடிகளை நிலைபெறுவித்த; பராபர நந்தி = தெய்வங்கட்கு மேலான நந்தி தேவர்; கதி=மோட்சம்; மெய்காட்டிய=உண்மையை யுணர்த்திய; விதி=வேதாகமவிதி.

1597. திருவடிவைத்து = திருவடி தீட்சைசெய்து; அருளோக்கி= சட்சு (கடாட்ச) தீட்சைபுரிந்து; பெரு வடிவைத்தந்த = பெருமையுள்ள சிவ சொரூபத்தை யருளிய; பேர்=பெரிய; குருவடி விற்கண்ட = குரு சொரூபமாகக் காணப்பட்ட; கருவழி வாற்றிட = பிறப்பினது முடிவைச் செய்ய; (நந்தி தன்னை, கோனை, கோவைக் கண்டுகொண்டேன் என்று முடித்துக் கொள்க.)

1598. திருவடிஞானம்=ஈசன் திருவடி யறிகிறதற் குரிய மெய்ஞ் ஞானம்; திண்சித்தி=(பிறரால் தடுத்தற்கரிய) வலிமையுள்ள சித்திகள்.

1599. மேல்வைத்தவாறு = முற்கூறிய மார்க்கங்கள்; மேல்வினை = பூர்வகன்மம்; மால்வைத்த = ஆசைகள் பொருந்திய; மாய மதாக்கிடும்=வஞ்சனை யாதிகளிற் செலுத்திவிடும்; பால் = (பண்பாகுபெயர்) சந்திரன்; வைத்தவாறு=ஈசன் நியமித்த நெறியில்; தரிப்பித்த=நிலைபெறுவித்த.

1600. கழலார் கமலத் திருவடி யென்னு
நிழல்சேரப் பெற்றே னெடுமா லறியா
வழல்சேரு மங்கியு ளாதிப் பிரானுங்
குழல்சேரு மின்னுயிர்க் கூடுங் குலைந்ததே. (௧௧)

1601. முடிமன்ன ராகின்மூ வுலகம தாள்வ
ரடிமன்ன ரின்பத் தளவில்லை கேட்கின்
முடிமன்ன ராய்நின்ற தேவர்க ளீசன்
குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே. (௧௨)

1602. வைத்தே னடிக்கண் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே யெரியும் புலன்வழி போகாம
லெய்த்தே னுழலு மிருவினை மாற்றிட்டு
மெய்த்தே னறிந்தேனவ் வேதத்தி னந்தமே. (௧௩)

1603. அடிசார லாமண்ணல் பாத மிரண்டு
முடிசார வைத்தனர் முன்னை முனிவர்
படிசார்ந்த வின்பப் பழவடி வெள்ளக்
குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே. (௧௪)

---

1600. திருவடியென்னு நிழல்=(ஜனனமரண சம்சார துக்கமாகிற கோடைக்கு) நிழலாமென்று கூறப்படும் திருவடி; அழல் சேரு மங்கியுள் = வெப்பம் பொருந்திய அக்கினி பூதத் துக்குள் (அந்தர்யாமியாயுள்ள); குழல்சேருமின் உம்=(கரிய) கூந்தலையுடைய மின்னலொளிபோலும் உமாதேவியாரும்; உயிர்க்கூடு=சரீரம்; குலைந்தது=ஒழிந்தது.

1601. முடிமன்னராகின் = மகுடந்தரித்த வரசரானல்; மூவுலகம தாள்வர்=மூன்று உலகங்களையுமாளா நிற்பர்; அடிமன்னர்= (ஈசனது) திருவடிபுனைந்த நிலைபெறுடையவர்; இன்பத் தளவில்லை=இன்பத்துக் களவில்லை, அல்லது இன்பத்தி னளவு(மன்னவர்க்கு)இல்லை; ஈசன் குடிமன்னராய்=ஈசனது பணிவிடை புரியும் மன்னவராய்; நின்றார் = (தம் பதவி களில்) நிலைபெற்று நின்றார்.

1602. அடிக்கண் = அடிகளாகிய கண்களை (திருவடி ஞானத்தை); பொய்த்தே யெரியும்=பொய்யானதாயும் தீப்போலெரிகின் றதாயுமுள்ள; உழலும் = (பல வண்டங்களிலும்) சென்றலை தற்காதாரமான; மாற்றிட்டு = (மாற்றியிட்டு) ஒழித்து; மெய்த்தேன் அறிந்தேன் = நிஜாநந்தத்தை யுணர்ந்தேன்; வேதத்தினந்தம்=வேதாந்தப்பொருள்.

1603. அடி சாரலாம் = மோட்ச மடைதலாகும்; முன்னை முனி வர் = பூர்வகாலத்திருஷிகள்; படிசார்ந்த = சோபான முறைப்படி யடையப்பட்ட; பழவடிவின்ப வெள்ளக்குடி= பழமையான மோட்ச வின்பத்துள் (மூழ்கும்) அடியரோடு; சார்நெறி=சேர்தற்குரிய சன்மார்க்கம்.

1604. மந்திர மாவது மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவது
மெந்தை பிரான்ற னிணையடி தானே. (கரு)

---

௬-வது ஞாதுருஞானஞேயம்.

1605. நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்
பாங்கான பாசம் படரா படரினு
மாங்கார நீங்கி யதனிலை நிற்கவே
நீங்கா வமுத நிலைபெற லாமே. (க)

1606. ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நின்றிடு
ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகு
ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை யுற்றவ
ராயத்தி னின்ற வறிவறி வாரே. (உ)

1607. தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந்
தானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு
தானென்ற பூவை யவனடி சாத்தினு
னானென் றவனென்கை நல்லதொன் றன்றே. (ங)

---

1604. ஈசன்றிருவடிகளே மந்திர முதலியவெல்லாமு மாமென்ற திம்மந்திரம்.

1605. ஞேயம்=அறியப்படு பொருள்; பாங்கான பாசம்=சகச மலம்; படரா படரினும் = மேற்படா மேற்படினும்; அதனிலை நிற்க = அந்த ஞேயத்தினிலைத்திருக்க; நீங்காவமுதம் = அழியாத முத்தி.

1606. ஞானாதி=ஞானமும் அதன் பயனாகிய மோட்சமும்; ஞாதுரு= அறிபவனாகிய ஆன்மா; ஞேயத்தின் = சிவாநந்தத்தில் (நின்றால்); ஞேயத்தை ஞேயத்தையுற்றவர் = (காணப்படு பொருள்களாகிற) சத்தியையும் சிவத்தையும் அடைந்தவர்; ஆயத்தினின்ற வறிவு = சத்தி சிவ ஐக்கியத்தினாலாகும் மெய்ஞ்ஞானம்.

1607. சத்துவம்=உண்மைப்பொருள்; இரண்டுந்தனிற் கண்டு= அவ்விரண்டு உண்மைப்பொருள்களையுந் தன்னிடத்தில் தரிசித்து; தானென்ற பூவை=ஆன்மாவாகிற மலரை; நானென் றவனென்கை=சீவன் சிவனென்று பிரித்துக்கூறுதல்.

1608. வைச்சன வாறு மாற்றி யெனைவைத்து
மெச்சப் பரன்றன் வியாத்துவ மேலிட்டு
நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தா
லச்சங் கெடுத்தென்னை யாண்டன னந்தியே. (௪)

1609. முன்னை யறிவறி யாதவம் மூடர்போற்
பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான்
றன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்
தென்னை யறிவித் திருந்தன னந்தியே. (௫)

1610. காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங்
கோணாத போகமுங் கூடாத கூட்டமு
நாணாத நாணமு நாதாந்த போதமுங்
காணா யெனவந்து காட்டின னந்தியே. (௬)

---

1608. வைச்சன=(வைத்தன) (சீவனுக்குபகாரமாக) நியமித்துள்ள; ஆறுமாற்றி = முப்பத்தாறு தத்துவங்களையுங் களைந்து; எனைவைத்து=என்னை நிலைத்திருக்கச்செய்து ; பரன்றன் வியாத்துவமேலிட்டு = சிவ வியாபக மேலாம்படி வைத்து; நிச்சயமாக்கி=சத்தாக்கி; சிவமாக்கி=(பின்னர்) சிவமாகச் செய்து;ஞேயத்தால்=அச்சிவத்தினாலே; அச்சங்கெடுத்து= ஜனன மரண பயமொழித்து.

1609. முன்னை=குருவுபதேசம் பெறுமுன்னர், அல்லது பந்தகாலத்தில்; பின்னை=பந்தமொழிந்த காலத்தில் ; அறிவறியாமையைப் பேதித்தான்=அறிதலும் அறியாதிருத்தலும் என்பனவற்றை யொழித்தான் (அறிவே யுருவாம்படிசெய்தான்); தன்னை யறியப்பரனாக்கி=(ஆன்மாவாகிய) தன்னை யுணரும்படி சிவமாகச் செய்து ; தற்சிவத்து = அந்தச் சிவத்தினிடத்திலே; என்னை யறிவித்து=ஆன்மாவை யறியும்படி விளக்கி.

1610. காணாதகண்=(உலகப்பொருளை) அறியாதகண் (ஞானக்கண்); கேளாத கேள்வி = கேளாது கேட்ட வுபதேச மொழி; கோணாதபோகம் = குறைதல் நிறைதலில்லாத போகம் (சிவபோகம்) ; கூடாத கூட்டம் = பிரிதலுங் கூடுதலுமில்லாத சேர்க்கை (சீவ சிவ ஐக்கியம்) ; நாதாந்தபோதம்= நாதமுடிவான ஞானம்; காணாயென=கண்டுகொள்ளென்று.

1611. மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடு
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியு முன்னிற்கு
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைந் கருமமு முன்னுமே. (எ)

1612. முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றின்பால்
வைத்த கலைகா ளுன்மடங் கான்மாற்றி
யுய்த்தவத் தானந்தத் தொண்குரு பாதத்தே
பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே. (அ)

1613. மேலைச் சொரூபங்கண் மூன்று மிருசத்தி
பாலித்த முத்திரை பற்றும் பரஞானி
யாலித்த நட்டமே ஞேயம் புகுந்தற்ற
மூலச் சொரூபன் மொழிஞா துருவனே. (௯)

---

௪-வது துறவு.

1614. இறப்பும் பிறப்பு மிருமையு நீங்கித்
துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்
கறப்பதி காட்டு மமரர் பிரானே. (க)

---

1611. ஊமையா மொழிமுற்றும்=பேசாத மந்திரம் (அஜபா காயத்திரி) சித்திக்கும்; ஐங்கருமமும்=பஞ்ச கிருத்தியங்களும்; முன்னும்=சித்திக்கும்.

1612. முத்திரை மூன்று=சாம்பவி முதலிய முத்திரை மூன்று; மூன்றின்பால் = இடைகலை பிங்கலை சுழுமுனைகளில்; கால் நான்மடங்கான் மாற்றி = பிராணவாயு நாலு விரற்கடை வீணே வெளிச் செல்லுதலை (கிறுத்துதலால்) அடக்கி; வத்தானந்தத்து = (வஸ்து ஆனந்தத்து) சிவாநந்தமயமான; பெத்தமறுத்தோர்=பந்த மொழிந்துள்ளோர்.

1613. மேலைச் சொரூபங்கள் = முற்கூறப்பட்ட ஞாதுரு ஞான ஞேயங்கள்; சத்தி பாலித்த முத்திரை பற்றும் = சிவசத்தியருளிய சாம்பவியாதி முத்திரைகளைப்பற்று கின்ற; நட்டமே ஞேயம் புகுந்த=(களிப்பினைத் தருகின்ற)நடனத்தின் வழியே ஞேயத்திலே படிந்து; அற்றமூலச் சொரூபன் = நீங்கிய மூலப்பிரகிருதியாலான சரீரத்தையுடைய ஆன்மா; ஞாதுருவன்=ஞாதுருவென்னப் படுவன்.

1614. துறக்குந் தவங்கண்ட=துறத்தலாலாகிய தவத்தி னலறியப் பட்ட; வாய் மொழிவார்கட்கு = வாயாற் றுதிப்பவர்கட்கு; அறப்பதி=முத்தியுலகம்.

1615. பிறந்து மிறந்தும்பல் பேதைமை யாலே
மறந்து மலவிரு ணீங்க மறைந்து
சிறந்த சிவனருட் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே. (௨)

1616. அறவன் பிறப்பிலி யாருமி லாதா
னுறைவது காட்டக முண்பது பிச்சை
துறவெனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே. (௩)

1617. நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தா
னெறியில் வழுவி னெருஞ்சின்முட் பாயு
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியி னெருஞ்சின்முட் பாயகி லாவே. (௪)

1618. கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரு
நாடி வளைந்தது நான்கட வேனலே
னுடல் விடையுடை யண்ண றிருவடி
கூடுந் தவஞ்செய்த கொள்கையன் றானே. (௫)

---

1615. பல் பேதைமையால்=பலவகை யறிவீனத்தினால்; மல விருணீங்க=ஆணவமலம் பரிபாகப்பட்டொழிய; மறைந்து சிறந்த=ஆன்மாவுக்குள் மறைந்து சிறந்திருந்த; சிவனருள்சேர் பருவத்து = சிவ சத்திபதியும் பரிபாக காலத்தில்; சுடரொளியாம் சிவம் வெளிப்படும்.

1616. அறவன்=தரும சொரூபன்; ஆருமிலாதான்=சங்கமில்லாதவன்; காட்டகம்=சுடுகாட்டினிடம்; துறவெனுங்கண்டீர்=துறவுடையுங்களென்னுங் குறியாம் என்றுணருங்கள்.

1617. நெறியைப் படைத்தான் = நடை பாதையை யுண்டாக்கியவொருவன்; நெருஞ்சில் படைத்தான்=(பக்கத்தில்) நெருஞ்சிற் பூண்டையு முண்டாக்கி வைத்தான்; இம்மந்திரம் எடுத்துக்காட்டுவமை நயத்தால், துறவற வில்லற நெறிகளை விளக்கிய; நெறி=(துறவாகிய) சன்மார்க்கம்; நெருஞ்சில்=நெருஞ்சின் முட்போன்ற ஆசைகணிறைந்த ஏனைய நெறி. துறவறநெறி யொழுகின் பிரபஞ்சவாசை பற்றாது, தவறில் பற்றிவருத்துமென்றுகொள்க.

1618. கேடும் = ஜனனமரணத் துன்பங்களையும்; கடமையும் = மனிதப் பிறவிக்குரிய செயலையும்; கேட்டு=குரு முகத்தாற் கேட்டுணர்ந்தவதனால்; ஐவரும்=ஐம்புலன்களும்; நாடி வளைந்தது=தேடி வந்தென்னைச் சூழ்ந்த அச் செயலுக்கு; நான்கடவேனலேன்=நானுட்பட்டவனல்லன்.

1619. உழவ னுழவுழ வானம் வழங்க
வுழவ னுழவினிற் பூத்தது வேளை
யுழவ னுழத்தியர் கண்ணேக்கு மென்றிட்
டுழவ னதனை யுழலொழிந் தானே. (௬)

1620. மேற்றுறந் தண்ணல் விளங்கொளி கூற்றுவ
னுட்டுறந் தார்க்கவ னண்பனல் லாவிலி
கார்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்
பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே. (௭)

1621. நாகமொன் றோன்று படமைந்து நாலது
போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது
வாகமி ரண்டும் படம்விரித் தாட்டொழிந்
தேகப் படஞ்செய் துடம்பிட மாமே. (௮)

---

1619. இம்மந்திரமும் எடுத்துக்காட்டுவமை நயத்தால் துறவை விளக்கியது; உழவன் = சரியை கிரியாதிகளிற் பயிலுமான்மா; வானம் = சிதாகாச சொரூபனாகிய சிவபிரான்; உழவினிற் பூத்தது வேளை = அச்செயலான் ஞானப்பயிர் தோன்றியது; உழத்தியர் = இச்சா ஞானக் கிரியை என்னும் சத்திகள்; கண்ணேக்கும் = பாதுகாத்தருளுவர்; அதனை யுழவொழிந்தான் = அம்முயற்சியை வருந்திச்செய்தலொழிந்திருந்தான், தற்சுதந்தர மற்றிருந்தான்.

1620. மேல்துறந்த = அநாதியிலே துறவியாகிய; அண்ணல்விளங்கொளி = பெருமை நிறைந்த ஜோதிவடிவனான சிவபெருமான்; கூற்றுவன் நாள் துறந்தார்க்கு = (யோகவலியால்) யமன் வருங் காலங் கடந்தவர்க்கு; நல் ஆவிலி = நன்மை பொருந்திய பசுத்துவ மில்லாதவன் (அநாதி முத்தன்); கார் துறந்தார்க்கு = அஞ்ஞான மொழிந்தவர்க்கு; கண்ணுதலாய் நிற்கும் = சகள சொரூபனாய்த் தோன்றி நிற்பன்; பார்துறந்தார்க்கே = உலகைத்துறந்தவர்களுக்கே; பதஞ்செயலாம் = முத்தியை யருளுதலுண்டாம்.

1621. நாகமொன்று = ஜீவனொன்றே; படமைந்து = ஐம்பொறிகள்; போகநான்கு = தர்மார்த்த காம மோட்சங்கள்; உட்புற்றின் (புற்றினுள்) = சரீரத்தினுள்; ஆகமிரண்டும் = காரண சூக்கும சரீரங்கள் இரண்டிலும்; படம் விரித்தாட்டொழிந்து = பொறிகளிற் சென்றுழலுதலை யொழிந்து; படஞ்செய்து = (பாடஞ்செய்து) பக்குவப்படுத்தி; உடம்பிடமாம் = உடம்பிலே நிலைபெற்றிருக்கும்.

1622. அகன்றார் வழிமுத லாதிப் பிரானு
மிவன்றா னெனநின் றெளியனு மல்லன்
சிவன்றாள் பலபல சீவனு மாகு
நயன்றான் வரும்வழி நாமறி யோமே. (௯)

1623. காம்பு திறந்தன வொன்பது வாய்தலு
மாம்பற் குழலியின் கஞ்சுளி பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே. (௧௦)

---

## ௫-வது தவம்.

1624. ஒடுங்கு நிலைபெற்ற வுத்தம ருள்ள
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
யிடும்பையு மில்லை யிராப்பக லில்லை
படும்பய னில்லை பற்றுவிட் டோர்க்கே. (௧)

1625. எம்மா ருயிரு மிருநிலத் தோற்றமுஞ்
செம்மா தவத்தின் செயலின் பெருமையு
மம்மான் றிருவருட் பெற்றவர்க் கல்லா
திம்மாத வெத்தி னியல்பறி யாரே. (௨)

---

1622. அகன்றார்வழிமுதல் = துறவிகள் பரம்பரைக்கு முதல்வனா கிய சிவன்; சிவன்றாள் = சிவசத்தி; வரும்வழி = அச்சத்தி சீவனால் வருமுறைமை; நாமறியோம் = அவித்தியாபாச சம்பந்தராயுள்ள நம்மாலுணர்வதன்று.

1623. காம்பு = அடைப்பு; ஆம்பற்குழலி = ஆம்பல் மலரணிந்த கூந்தலையுடைய தேவி; கஞ்சுளி = சட்டை; வேம்பேறி = வீணா தண்டத்திலேறி; நோக்கினன் = தரிசித்தான்; மீகாமன்=ஜீவன்; கூரையின் கூம்பு=முகட்டினது உச்சி; பூக்கின்ற=பிரகாசிக்கின்ற.

1624. ஒடுங்குநிலை = புலன்வழிச் செல்லாது சிவத்தில் நிலைபெற் றிருத்தலாகிய அவதாரம்; நடுங்குவது = சலிப்பது; அங்கு= அந்த நிலைமையில்; இடும்பை = (ஜனனமரணாதி) துன்பம்; இராப்பகல் = நினைப்பு மறப்பு; படும்பயன் = அடைதற் குரிய பயன்.

1625. எம்மாருயிரும்=நமது சீவனிலைமையும்; இருநிலத் தோற்ற மும் = பிரபஞ்ச உற்பத்தியும்; செம்மா தவத்தின் = செப்பமாய பெருமையுள்ள தவத்தின்.

1626. பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்
மறப்பில ராகிய மாதவஞ் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. (௩)

1627. இருந்து வருந்தி யெழிற்றவஞ் செய்யும்
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே
யிருந்திந் திரனே யெவரே வரினுந்
திருந்துந் தன்சிந்தை சிவனவன் பாலே. (௪)

1628. கரந்துங் கரந்திலன் கண்ணுக்குந் தோன்றான்
பரந்த சடையன் பசும்பொன் னிறத்த
னருந்தவர்க் கல்லா லணுகலு மாகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே. (௫)

1629. இன்னெய்த வைத்ததோ ரின்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை யெம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு
மன்னெய்த வைத்த மனமது தானே. (௬)

1630. அமைச்சரு மானைக் குழாமு மரசும்
பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே
யமைத்ததோர் ஞானமு மாத்தமு நோக்கி
யிமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே. (௭)

1626. பிறப்பறியார் = பிறப்பினுலாந் துன்பத்தை யுணராதவர், (பிறப்பு இறப்புக்கும் உபலக்கணம்);பிச்சை செய் மாந்தர் = யாசகஞ் செய்யு மனிதர்கள்.

1627. இருந்து = (மனமொருமைப்பட்டு) இருந்து ; வருந்தி = (விரதாதிகளால்) வருந்தி; பேதிக்க = (அத்தவத்தினின்றும்) விலக்க; இந்திரனே யெவரே = இந்திரனுவது மற்றெவராவது; திருந்தும் = சிறப்புற்றிருக்கும்.

1628. கரந்துங் கரந்திலன் = (பந்தமுடையாருக்கு) மறைந்திருந்தாலும், (பந்தமற்றவர்க்கு) மறைந்தவனல்லன்.

1629. இன் = பூமணம் (இங்கே பெருமை); இன்பப் பிறப்பினை = முத்தியின்பம் பெறுதற்குரிய மானிடப்பிறப்பை; முன் = முற்பிறப்பில் ; எம்மிறைதன் (ஐ) எய்துங்காலத்து = எமதிறைவனை யடைதற்குரிய பரிபாக தசையில் ; மன்னெய்த = நிலைபேறடைய.

1630. பூசல் = சண்டை; பட்டார் = இறந்தொழிந்தார்; நடுவே = அப்படி யிறந்தொழிந்தார்க் கிடையிலே; ஞானம் = சிற்பிரபஞ்சம்; ஆத்தம் (ஆப்தம்) = வருடம் (பல்லாண்டுகள்); இமைத்து = கண்களைத் திறந்து.

1631. சாத்திர மோதுஞ் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோ
லார்த்த பிறவி யகலவிட் டோடுமே. (அ)

1632. தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டிற்
றவம்வேண்டா ஞான சமாதிகை கூடிற்
றவம்வேண்டா மச்சக சன்மார்க்கத் தோர்க்குத்
தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே. (கூ)

கூ-வது தவதூடணம்.

1633. ஓதலும் வேண்டா முயிர்க்குயி ருள்ளுற்றாற்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே. ()

1634. கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
சுத்தமும் வேண்டாந் தொடக்கற்று நிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே. (உ)

---

1631. சதுர்களை = பெருமையை; மாத்திரைப்போது = இமை கொட்டு நேரம்; மறித்து=(பகிர்முகப் பார்வையை) தடுத்து; உள்ளே=சரீரத்தினுள்ளே; பசுமரத் தாணிபோல்=பச்சை மரத்திலடித்த ஆணியைப்போல (நிலைபெற்று); ஆர்த்த = பந்தித்திருக்கும்.

1632. ஞானந் தலைப்பட=ஞானமுண்டாக; ஞானசமாதி = ஞான நிஷ்டை; கைகூடின் = சித்தித்தால்; சகசன்மார்க்கத் தோர்க்கு = ஞானயோக நெறியுடையார்க்கு; மாற்றம் = தடுமாற்றம்.

1633. உயிர்க்குயிர் = சிவம்; காதல் = பக்தி நெறி; காயமிடங்கண்டால் = சிவமானது இச்சரீரத்தை யாலயமாகக் கொண்டெழுந்தருளினால்; போதலும் = (தவமியற்றற் பொருட்டு வனமுதலிய தேடி) போகுதலும்.

1634. கருத்தறிந்து = வேதாகமங்களி னுண்மைப் பொருளை யுணர்ந்து; ஆறினால்=அடங்கினால்; சத்தமும் = நாதானுசந்தானமும்; சுத்தமும் = ஸ்நாநமுதலிய சுத்தமும்; தொடக்கு = சம்பந்தம்; சித்தமும் = தியானஞ் செய்தற்குரிய சிந்தனையும்.

1635. விளைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யுரை செய்வார்
விளைவறி பார்பண்டை மெய்யுறஞ் செய்வார்
விளைவறி வார்விண்ணின் மண்ணின்மிக் காரே. (௩)

1636. கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழற்
றேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி
வாடித் தவஞ்செய்வ தேதவ மிவைகளைந்
தூடிற் பலவுல கோரெத் தவரே. (௪)

1637. மனத்துறை மாகட லேழுங்கை நீந்தித்
தவத்திடை யாளர்தஞ் சார்வத்து வந்தார்
பவத்திடை யாகா ரவர்பணி கேட்கின்
முகத்திடை நந்தியை முந்தலு மாமே. (௫)

1638. மனத்திடை நின்ற மதிவா ளுருவி
யினத்திடை நீகக யிரண்டற வீர்த்துப்
புனத்திடை யஞ்சும்போ காமன் மறித்தாற்
றவத்திடை யாரொளி தன்னொளி யாமே. (௬)

---

1635. விளைவு=மனித சரீரத்தினுலாம் பயன்; பண்டை=அநாதியாயுள்ள.

1636. கூடி=மனவொருமைப் பட்டு; தேடி=தவநெறியை யாராய்ந்து; வாடி = உபவாசாதிகளினுல் வருந்தி; தவமிவைகளைந்து = இவ்வகைத் தவங்களழிந்து; ஊடிற்பல = பலவாறு மாறுபாடையின்; உலகோ ரெத்தவரே = உலகின ரெவ்வகை யான தவமுடையராவார்.

1637. மனத் துறை=மனதை வழியாகக்கொண்டு; கடலேழு=எழுவகைப்பிறவியாகிய சமுத்திரங்கள்; கைநீந்தி=முறையாகக் கடந்த; சார்வத்து=கூட்டத்தில் அல்லது பரம்பரையில்; பவத்திடையாகார் = பிறப்பிற் சேரார்; முகத்திடை = பிரத்தியட்சமாக.

1638. மதிவாளுருவி = அறிவாகியவாளை (மனமாகிய உறையினின்றும்) கழற்றி; இனத்திடை நீக்கி=(காமாதிபகைவர்) கூட்டத்தினின்றும் நீக்கி; இரண்டற = துவிதமொழிய; புனத்திடை = (பிரபஞ்சமாகிய) வனத்தில்; அஞ்சும் = ஐந்தாகிய புலன்களையும்; மறித்தால் = தடுத்தால்; தவத்திடையாரொளி = தவமார்க்கத்தினுற் பெறுமொளி; தன்னொளியாமே = தன்சுயமான ஒளியேயாம் (ஆன்மாவினியற்கையான சிவாபிவியக்தியுண்டாம்).

1639. ஒத்து மிகவுநின் ருனை யுரைப்பது
பத்தி கொடுக்கும் பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுக்கு முனிவனென் னும்பதச்
சத்தான செய்வதுந் தான்றவன் தானே. (எ)

1640. இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி
மலர்தொட்டுக் கொண்டே வரும்புனல் காணேன்
றலைதொட்ட நூற்கண்டு தாழ்ந்ததென் னுள்ளந்
தலைதொட்டுக் கண்டேன் றவங்கண்ட வாறே. (அ)

1641. பட்டர்சடை மாதவம் பத்திய பத்தர்க்
கிடரடை யாவண்ண மீச னருளு
மிடரடை செய்தவர் மெய்த்தவ நோக்கி
லுடரடை செய்வ தொருமனத் தாமே. (கூ)

1642. ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போ
யீற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட வாரொக்கு
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே. (கo)

---

1639. ஒத்து=ஜீவனொடு வேறறக் கலந்து; உரைப்பதும் = துதிப்பதும்; முனிவனென்னும் பதச்சத்தான செய்வதும்=முனிவனெனும் பதப்பொருளாகிய சத்தானதை யுண்டாக்குவதும்; முனிவன்=உலகங் கடந்தவன், அவன் சத்தா மாத்திரமான சிவபிரான் (சிவமாக்குவது மென்பது பொருள்.)

1640. இலைதொட்டு=பத்திரங் கிள்ளி; மலர்தொட்டு=மலர்களொடு கலந்து; தலைதொட்ட நூல்=முதன்மை பெற்ற ஞானகலை; தாழ்ந்தது = அடங்கிற்று; தலைதொட்டு = அதுமுதலாக; தவங்கண்டவாறு=(முன்னோர்) தவத்தை யறிந்தவழி.

1641. பத்தியம் = இதம் ; இடரடை செய்தவர் = விரதாதிகளால் துன்பமுறு தவசிகள் ; உடர் அடை செய்வது=உடம்பினை வாராதபடி தடுத்தலைச் செய்வது; ஒரு மனத்தாம் = ஒருமைப்பட்ட மனத்தினாலாம்.

1642. ஈற்று=முடிவில்; தவம்புரித லாலாந் துன்பத்துக்கஞ்சி உணவுக்காக வருந்துதல், ஆற்று முதலைக் கஞ்சி யீற்றில் கரடிக் கெதிர்ப்பட்ட வாறொக்குமென்று பொருள்கொள்க.

**1643.** பழுக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங்
குழக்கன்று துள்ளியக் கோணியைப் பல்காற்
குழக்கன்று கொட்டிலிற் கட்டவல் லார்க்குள்
ளிழுக்காது நெஞ்சத் திடவொன்று மாமே. (௧௧)

**1644.** சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவாற்
சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோ ருறவுண்டாற்
சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ்
சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே. (௧௨)

---

**எ-வது அருளுடைமையின் ஞானமெய்தல்.**

**1645.** பிரானரு ளுண்டெனி லுண்டுநற் செல்வம்
பிரானரு ளுண்டெனி லுண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையு முண்டு
பிரானரு ளாற்பெருந் தெய்வமு மாமே. (௧)

**1646.** தமிழ்மண் டலமைந்துந் தாவிய ஞான
முமிழ்வது போல வுலகந் திரிவா
ரவிழு மனமுமெம் மாதி யறிவுந்
தமிழ்மண் டலமைந்துந் தத்துவ மாமே. (௨)

---

1643. பழுக்கின்ற வாறும்=(தவத்தில்) முதிர்ச்சியடையும் விதமும்; பழம் = (அத்தவத்தின்) பயன்; குழக்கன்று=இளங்காளை (பிராணவாயுவுக் குவம ஆகு பெயர்); கோணி = பைபோலுஞ் சரீரம்; கொட்டில் = பிரமரந்திரம்; உவம ஆகு பெயர்; இழுக்காது = தவறாமல்; நெஞ்சத்திட = (ஈசனை) நெஞ்சிலிருத்திக்கொள்ள; ஒன்றும்=கூடும்.

1644. சிவமாக=பரிசுத்தமாக; சிவானந்தஞ் சேர்ந்தோர்=ஞானத்தாற் சிவானந்த மெய்தப்பெற்ற (மெய்ஞ்ஞானிகள்); சித்தஞ் சிவமாதல் செய்தவப்பேறு = மனம் நிஷ்களங்க மெய்தப்பெறுவதே தவம் புரிதலா லாகும் பயனாகும்.

1645. பெருந்தன்மை = பெருமைத் தன்மை; பெருந்தெய்வம் = மேலான தெய்வம்.

1646. தமிழ்மண்ட லமைந்தும்=பஞ்ச திராவிடமென்று வழங்கப்படுவனவான தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மாராட்டிரம் என்னும் ஐந்து தேசங்களினும்; தாவிய = பரந்த; ஞானம் = சன்மார்க்கத்தா லுண்டாகும் ஞானம்; உமிழ்வதுபோல = (நீருட்கொண்டு) உமிழ்வதுபோல; உலகந் திரிவார் = (எங்கும் பரம்பும்படி சித்தர்கள்) உலகத்தில் திரிவார்கள்; அவிழு மனம்=மலர்ந்த மனம்; ஆதியறிவும்=பதிஞானமும்; தத்துவமாம் = உண்மையாய் விளங்குவனவாம்.

1647. புண்ணிய பாவ மிரண்டுள பூமியி
னண்ணும் பொழுதறி வார்சில ஞானிக
ளெண்ணி யிரண்டையும் வேரறுத் தப்புறத்
தண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வீரே. (௩)

1648. முன்னின் றருளு முடிகின்ற காலத்து
நன்னின் றுலகி னடுவுயி ராய்நிற்கும்
பின்னின் றருளும் பிறவியை நீக்கிடு
முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே. (௪)

1649. சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாவே
சிவனருள் கூடினச் சிவலோக மாமே. (௫)

1650. புண்ணிய னெந்தை புனித னிணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவ ராவதும் வானவ ராவது
மண்ண லிறைவ னருள்பெற்ற போதே. (௬)

1647. பூமியினண்ணும்பொழுது = பூமியிற் பிறக்கும்போது; எண்ணி யிரண்டையும் = புண்ணியபாவங்க ளிரண்டையு மாராய்ந்துணர்ந்து; வேரறுத்து=பற்றறவொழித்து; அப்புறத்து=பந்தவினை யொழிந்தவிடத்து; புண்ணிய பாவ கன்மங்க ளொழிந்தவிடமே யீசனிருப்பிடமா மென்பது.

1648. முன்னின்றருளும்=எதிர்தோன்றி யருளுவன்; முடிகின்ற காலத்து=தவம் முற்றுப்பெற்ற காலத்து; நல் நின்றுலகில் = நன்மை நிலைபெற்ற வுலகத்தில்; நடுவுயிராய் நிற்கும்=உயிர்கட்குப் பொதுவாய் நிற்பன்.

1649. தேவருமாவார் = சுவர்க்காதி புவனபதிகளாவார்; தெய்வத்தோடொப்பர்=மனிதயாக்கையுடையாராயினும் தெய்வத் தன்மை பெற்றிருப்பர்; வினைசேரகிலா = வினைகள் அடையமாட்டா; சிவலோகமாம்=சிவலோகஞ் சித்திக்கும் அல்லது அவர்கள் இருக்குமிடம் சிவலோகத்தை யொப்பாகும், (என்பதனுற் சீவன்முத்த ராவாரென்பது கருத்தாம்).

1650. நண்ணி = சேர்தலால்; விளக்கென=விளக்கொளிபோல; இறைவனருள் பெற்றபோது=சிவபெருமானது கருணையை அடைந்த காலத்தில்.

1651. காயத்தே ரேறி மனப்பாகன் கைகூட்ட
மாயத்தே ரேறி மயங்கு மவையுணர்
நேயத்தே ரேறி நிமல னருள்பெற்
றாயத்தே ரேறி யவனிவ னாமே. (எ)

1652. அவ்வுல கத்தே பிறக்கி னுடலொடு
மவ்வுல கத்தே யருந்தவர் நாடுவ
ரவ்வுல கத்தே யரனடி கூடுவ
ரவ்வுல கத்தே யருள்பெறு வாரே. (அ)

1653. கதிர்கண்ட காந்தங் கனலின் வடிவாம்
மதிகண்ட காந்த மணிநீர் வடிவாஞ்
சதிகொண்ட சாக்கி யெரியின் வடிவா
மெரிகொண்ட வீச னெழில்வடி வாமே. (கூ)

1654. நாடு முறவுங் கலந்தெங்க ணந்தியைத்
தேடுவன் றேடிச் சிவபெரு மானென்று
கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல
வீடு மளவும் விடுகின்றி லேனே. (க0)

---

1651. காயத்தேர்=உடம்பாகிய தேர்; கைகூட்ட=சேர்த்து வைக்க; மாயத்தேர்=நிலையற்ற பிரபஞ்ச வாழ்வாகிய தேர்; மயங்கு மவை=மயங்குகின்ற சீவான்மாக்கள்; நேயத்தேர்=பக்தியாகிய இரதம்; ஆயத்தேர் = சிறப்புடைய அச் சமாதியென்னு மிரதம்.

1652. அவ்வுலகத்து = அச் சிவலோகத்து.

1653. காந்தம் = சூரிய, சந்திர காந்தக்கற்கள்; மணி = முத்து (தெளிவுக்குவமை); சதி=தீத்தட்டுங்கருவி; சாக்கி=(சக்கி) தீத்தட்டுங்கல்; எரிகொண்ட ஈசன்=அக்கினியை யேந்தியிருக்கும் சிவபெருமான்.

1654. நாடும் உறவும்=கருதலும் நேசித்தலும்; வீடுமளவும்=சாகும் வரைக்கும்.

### ௮-வது அவவேடம்.

1655. ஆடம்ப ரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகா
ளாடியும் பாடியு மழுது மரற்றியுந்
தேடியுங் காணீர் சிவனவன் றாள்களே. (௧)

1656. ஞானமி லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
யீனம தேசெய் திரந்துண் டிருப்பினு
மான நலங்கெடு மப்புவி யாதலா
லீனவர் வேடங் கழிப்பித்த லின்பமே. (௨)

1657. இன்பமுந் துன்பமு நாட்டா ரிடத்துள
நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்கா
மென்ப விறைநாடி நாடொறு நாட்டினின்
மன்பதை செப்பஞ் செயின்வையம் வாழுமே. (௩)

1658. இழிகுலத் தார்வேடம் பூண்பர்மே லெய்த
வழிகுலத் தோர்வேடம் பூண்பர் தேவாகப்
பழிகுலத் தாகிய பாழ்சண்ட ரானார்
கழிகுலத் தோர்கள் களையப்பட் டாரே. (௪)

---

1655. ஆடம்பரம் = இடம்பம்; அடிசில்=சோறு; பயன் = பிரயோசனம்; வேடங்கள் கொண்டு = பொய்யாகத் தவச்சின்னங்க ளணிந்து; வெருட்டிடும்=(அறியாரை) மயக்குகின்ற.

1656. ஞானமிலார் = சிவஞானமில்லாதவர்கள்; இருப்பினும் = (சுகமாக வாழ்ந்து) இருந்தபோதிலும்; மானம் நலம்=பெருமையும் இன்பமும்; அப்புவி=அந்த நாடு; ஈனவர்=ஈனத்தொழிலினராகிய அவர்கள்.

1657. நாட்டார் = உலகத்தார்; நன்செயல் புன்செயலால்=புண்ணிய பாவச்செயல்களால்; இறைநாடி=அரசன் யோசித்து; செப்பம்=நன்மையாகிய செயல்; வையம் வாழும்=உலகம் க்ஷேமமுறும்.

1658. இழி குலத்தார்= இழிந்த குடியிற் பிறந்தவர்; வழிகுலத்தோர்=பரம்பரையாக உயர்குடியிற் பிறந்தோர்; பழிகுலம்=நிந்திக்கப்பட்ட குலம்; பாழ்சண்டர்=வீணரான கொடியர்; கழிகுலத்தோர்=ஈனகுலத்தார்; களையப்பட்டாரே=விலக்குதற் குரியவரே.

1659. பொய்த்தவஞ் செய்வார் புகுவார் நரகத்துப்
பொய்த்தவஞ் செய்தவர் புண்ணிய ராகாரேற்
பொய்த்தவ மெய்த்தவம் போகத்துட் போக்கியஞ்
சத்திய ஞானத்தாற் றங்குந் தவங்களே. (௫)

1660. பொய்வேடம் பூண்பர் பொசித்தற் பயனுக
மெய்வேடம் பூண்போர் மிகுபிச்சை கைக்கொள்வர்
பொய்வேட மெய்வேடம் போலவே பூணினு
முய்வேட மாகு முணர்ந்தறிந் தோர்க்கே. (௬)

---

௯-வது தவவேடம்.

1661. தவமிக் கவரே தலையான வேட
ரவமிக் கவரே யதிகொலை வேட
ரவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந்
தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே. (௧)

1662. பூதி யணிவது சாதன மாதியிற்
காதணி தாமிர குண்டலங் கண்டிகை
யோதி யவர்க்கு முருத்திர சாதனந்
தீதில் சிவயோகி சாதனந் தேரிலே. (௨)

---

1659. புண்ணியராகாரேல் = புண்ணியமுடைய ராகாதவரானல்; பொய்த்தவம்=பொய்த்தவ வேடமாணது; மெய்த்தவம் = மெய்த்தவத்தினைப் (போன்றிருந்து); போகத்துட் போக்கியம்=சுகானுபவப் பொருள்களி லொன்றும்; சத்திய ஞானத்தாற் றங்குந் தவங்களே=தவங்களானவை சத்தியத் தாலும் ஞானத்தாலும் நிலைபெறுவதாகும்.

1660. பொசித்தற்பயனுக=உண்பதையே பயனுகக்கருதி; மிகு பிச்சை = மேலாகிய பிச்சையுணவு; மெய்வேடம் போல= மெய்த்தவவேடத்தை யொக்க; உய்வேடமாகும் = உய்தற் குரிய தவவேடமாகும்; உணர்ந்தறிந்தோர்க்கு = (வீட்டு நூல்களை) ஆராய்ந் தறிந்தவர்களுக்கு.

1661. தலையானவேடர் = மேன்மையான தவவேடமுடையார்; அதிகொலைவேடர்=அதிகமாகக் கொலைபுரிகின்ற கிராத ராவார்; அவமிக்கவர்=தீ நெறியின் மேம்பட்டவர்; வேடத் தாகார் = வேடத்தினுலே தவசிகளாகார்; அவ்வேடம் = அந்தத் தவவேடம்.

1662. பூதி=விபூதி; ஆதியில்=முதலில் (அணியத்தக்க); காதணி தாமிர குண்டலம்=காதிலணியத்தக்க தாமிரத்தாலாகிய குண்டலம்; கண்டிகை = உருத்திராக்கமாலை; ஓதியவர்க் கும்=வேதாகமங்களை யோதி யறிந்தவர்களுக்கும்; உருத்திர சாதனம்=சிவசின்னம்.

1663. யோகிக் கிடுமது வுட்கட்டுக் கஞ்சுளி
தோகைக்குப் பாசத்துச் சுற்றுஞ் சடையதோன்
ருகத்து நீறணி யங்கக் கபாலஞ்
சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே. (௩)

1664. காதணி குண்டலங் கண்டிகை நாதமு
மூதுநற் சங்கு முயர்சட்டிக் கப்பரை
யேதமில் பாதுகை யோகாந்த மாதன
மேதமில் யோகப் படந்தண்ட மீரைந்தே. (௪)

## ௧௦-வது திருநீறு.

1665. நூலுஞ் சிகையு முணரார்நின் மூடர்க
ணூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம்
பாலொன்று மந்தணர் பார்ப்பார் பரமுயி
ரோரொன் றிரண்டு மோங்கார மோதிலே. (௧)

1666. கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்வாரே யாமாகிற்
றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே. (௨)

---

1663. உட்கட்டு=கோவணம்; கஞ்சுளி=பொக்கணம் அல்லது மேற்போர்வை; தோகைக்குப் பாசத்து = மயிலிறகாலாகிய குஞ்சம்போல; நீறணி=திருநீறணிதல்; கபாலம்=தலையோடு; சீகத்தம் = (ஸ்ரீ ஹஸ்தம்) அழகியகை; மாத்திரை=மாத்திரைக்கோல்.

1664. யோகாந்தமாதனம் = யோகத்துக்குரிய அழகிய ஆசனம்; யோகப்படம்=யோகப்பட்டிகை; தண்டம்=யோகதண்டம்.

1665. நூலதுவேதாந்தம் = நூலெனப்படுவது வேதாந்தம்; சிகை ஞானமாம்=சிகையென்று கூறப்படுவது அவ்வேதாந்தங் கூறும் ஞானமாகும்; பாலொன்றும் = நல்லொழுக்கத்தினிலைபெறு; பரமுயிர்=சிவமும் உயிரும்.

1666. கங்காளன்=என்புமாலையணிந்த சிவபெருமான்; கவசம்= இரட்சை; மங்காமல் = ஒளிகெடாதபடி (சதாகாலமும் என்பது விளக்குகின்றது); பூச = தரித்துக்கொள்ள; சிவகதி=சிவலோகம்; திருவடி=சாயுச்சிய முத்தி.

1667. அரசட னலத்தி யாகுமக் காரம்
விரவு கனலில் வியனுரு மாறி
நிரவய னின்மலன் ருள்பெற்ற நீத
ருருவம் பிரம னுயர்குல மாமே. (ந)

---

### கக-வது ஞானவேடம்.

1668. ஞானமி லார்வேடம் பூண்டு நரகத்தர்
ஞானமு ளோர்வேட மின்றெனி னன்முத்தர்
ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்பான்
ஞானமுள வேட நண்ணிநிற் பாரே. (க)

1669. புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை
நன்ஞானத் தார்வேடம் பூணா ரருணண்ணித்
துன்ஞானத் தோர்சம யத்துரி சுள்ளோர்
பின்ஞானத் தோரொன்றும் பேசகில் லாரே. (உ)

1670. சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கு
மவமான சாதன மாகாது தேரி
னவமா மவர்க்கது சாதன நான்கு
முவமான மில்பொரு ளுள்ளுற லாமே. (ந)

---

1667. அக்காரம்=அந்த விபூதி; விரவுகனலில் = தம்மிடத்துற்ற தீயினால்; உருமாறி=வடிவம் மாறி; நிரவயன் (நிரவயவன்)= வடிவமற்ற (நிஷ்களம்) சிவம்; நீதர் = நீதியையுடையவர்; பிரமனுயர்குலம்=பிரமன் முகத்திருந்து தித்த அந்தணர்குலம்.

1668. நரகத்தர்=நரகத்தையடைபவர்; இன்றெனின் (உம்) = இல்லாமலிருந்தாலும்; முத்தர்=முக்தியடைந்தவராவார்; நக்கன்பான் ஞானம்=சிவஞானம்.

1669. புன்ஞானத்தோர்=சிற்றறிவோர்; அருணண்ணி=அருளை யடைந்ததனால்; துன்ஞானத்தோர் சமயத் துரிசுள்ளோர்= பொய்ஞ்ஞான முடையவரும், மதவைராக்கியமான குற்ற முள்ள (ஞானம்) உடையவரும்.

1670. அவமாம் அவர்க்கு = (மனிதப்பிறப்பாலாம்) பயனடையாத அவர்க்கு; சாதன நான்கும்=சரியையாதி நான்கு சாதனங் களாலும்; உவமானமில்பொருள்=சிவம்; உள்ளுறலாம்= உள்ளத்தின்கண் அடையலாம்.

1671. கத்தித் திரிவர் கழுவடி நாய்போற்
கொத்தித் திரிவர் குரக்களி ஞானிக
ளொத்துப் பொறியு முடலு மிருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே. (௪)

121, 1678, 127, 256,

1672. அடியா ரவரே யடியா ரலர்தா
ரடியாரு மர்காரவ் வேடமு மாகா
ரடியார் சிவஞான மானது பெற்றோ
ரடியா ரலர்தா ரடியார்க ளன்றே. (௫)

1673. ஞானிக்குச் சுந்தர வேடமு நல்லவாந்
தானுற்ற வேடமுந் தற்சிவ யோகமே
யானவவ் வேட மருண்ஞான சாதன
மான்து மாமொன்று மாகா தவனுக்கே. (௬)

1674. ஞானத்தி னுற்பத நண்ணுஞ் சிவஞானி
தானத்தில் வைத்த தனியால யத்தனு
மோனத்த னுதலின் முத்தனுஞ் சித்தனு
மேனைத் தவசி யிவனென லாகுமே. (௭)

1671. கழுவடிநாய்=கழுமரத்தின் கீழே நிற்கும்நாய்; கொத்தித் திரிவர்=கழுகு முதலியபோலப் பிடுங்கித்தின்று திரிவார்கள்; குரக்களி=விலங்கின் குளம்புபோல வேறுபட்டுள்ள களிப்பினையுடைய; ஒத்து=கூடி.

1672. அடியாரவரே = (செத்துத் திரிவாரென்ற) சிவஞானிகள்; அலாதார்=பொய்வேட ஞானியர்.

1673. தற்சிவயோகம்=தனக்குரிய சிவயோகம்; அவ்வேடம்=முற்கூறிய தவவேடம்.

1674. தானத்தில்=உலகத்தில்; ஆலயத்தனும்=சிவாலயம்போல்பவனும்; சிவனை இதயத்தில் வைத்திருக்கும் சிவஞானியைச் சிவாலயனென்றும், முத்தனென்றும், சித்தனென்றும் கூறலாம்; பொய் வேடத்தாரை அங்ஙனங்கூற வியலாதென்பது.

1675. தானற்ற தன்மையுந் தானவ னுதனு
மேனைய வச்சிவ மான வியற்கையுந்
தானுரு சாதக முத்திரை சாத்தனு
மேன்மு நந்தி பதமுத்தி பெற்றதே. (அ)

---

௧௨-வது சிவவேடம்.

1676. அருளா லரனுக் கடிமைப் தாகிப்
பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி
யிருளான தின்றி யிருஞ்செய லற்றோர்
தெருளா மடிமைச் சிவவேடத் தாரே. (௧)

1677. உடலிற் றுவக்கிய வேட முயிர்க்காகா
துடல்கழன் றால்வேட முடனே கழனு
முடலுயி ருண்மையென் றோர்ந்துகொள் ளாதார்
கடலி லகப்பட்ட கட்டையொத் தாரே. (உ)

1671, …, 127, 256,
1678. மயலற் றிருளற்று மாமன மற்றுக்
கயலுற்ற கண்ணியர் கையிணக் கற்றுத்
தயலற் றவரோடுந் தாமேதா மாகிச்
செயலற் றிருந்தார் சிவவேடத் தாரே. (௩)

---

1675. தானற்ற தன்மையும் = தானற்றிருக்குந் தன்மையும்; ஏனைய=தாவர சங்கமங்கள்; சிவமான வியற்கையும்=சிவமாகவிளங்கு மியல்பும்; சாதகமுத்திரை=(தன்றவத்துக்கு) துணைக்கருவியான சின்னமும்; எனமும் = பலியேற்கும் பாத்திரமும்; முத்திபெற்றதே = முத்திபெறுவதற் கேது வான சாதனங்களே யாம்.

1676. பொருளாந்தனதுடலில்=சிவம் வெளிப்படுதற்குரிய தனதுடலிலே; பொற்பதி=(சிவபெருமான் வசிக்கின்ற) அழகிய இடம்; இருள்=அவித்தை; தெருளாமடிமை=மெய்யடிமை.

1677. உடலிற்றுவக்கிய=சரீரத்திற் பொருந்திய; உயிர்க்காகாது= சீவனுக்குச் சம்பந்தமில்லை; உயிருண்மை = சீவன்சத்து; கடலிலகப்பட்ட கட்டை யொத்தார் = கடலிலகப்பட்ட கட்டை அலைகளால் அங்கும் இங்கும் அலைக்கப்படுதல் போலக் கன்மத்தால் பல அண்டங்களிலும் அலைந்து திரிவர்.

1678. கையிணக்கு=கூட்டுறவு; தயலற்றவரோடும்=பெண்விழைவற்ற பெரியோருடன் (கூடி), தயல்=(தையல் என்பதன் திரிபு); செயல்=உலகவியாபாரம்.

1679. ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின்
வேடங்கொண் டென்செய்வீர் வேண்டா மனிதரே
நாடுமி னந்தியை நம்பெரு மான்றன்னைத்
தேடுமின் பப்பொருள் சென்றெய்த லாமே. (௪)

## ௧௫-வது அபக்குவன்.

1680. குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே. (௧)

1681. மனத்தி லெழுந்ததோர் மாயக்கண் ணாடி
நினைப்பி னதனி னிழலையுங் காணார்
வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார்
புறக்கடை யிச்சித்துப் போகின்ற வாறே. (௨)

1682. ஏயெனி லென்னென மாட்டார் பிரசைகள்
வாய்முலை பெய்ய மதுரநின் றாறிடுந்
தாய்முலை யாவ தறியார் தமருளோ
ரூனிலை செய்யு முருவிலி தானே. (௩)

---

1679. ஓடுங் குதிரை=வெளியிற்செல்லும் பிராணவாயு; திண்ணம்=உறுதி; தேடுமின்பப்பொருள் = தேடுதற்குரிய ஆனந்தமய சிவம்.

1680. குருடு=அஞ்ஞானம்; குழி = நரகக்குழி, அல்லது கர்ப்பாசயம்.

1681. மாயக் கண்ணாடி=வஞ்சத்தையுடைய சித்தம்; நினைப்பின்=எண்ணுதலால்; நிழல்=சாயை; விளக்கியுங்கொள்ளார்=விளக்கியுந் தெரிந்துகொள்ளார்; புறக்கடை=பின்புறம்; (திரோதாயியென்னும் மாயையானது முற்புறமொளியாய்ப், பிற்புறம் மங்கலாய் நிற்கும் கண்ணாடி போன்றுள்ளதென்பதும், பந்தகாலத்திற் பிற்புறங்காண நிற்குமென்பதும், முத்திதசையில் முற்புறந்தோன்ற நின்று உண்மைவிளக்குமென்பதும் ஆகமக்கருத்தாமென்க).

1682. எய்—விளித்தற்குறி; மதுரம்=மதுரமானபால்; தமருளோர்=அடியாராயுள்ளவர்; ஊனிலைசெய்யும் = சரீரத்தை யழியாது நிலைபெறச் செய்யும், அல்லது சரீர மில்லாமற்போம்படி (பிறவியில்லாமல்) செய்யும்.

1683. வாயொன்று சொல்ல மனமொன்று சிந்திக்க
நீயொன்று செய்ய வுறுதி நெடுந்தகாய்
தீயென்றிங் குன்னைத் தெளிவன் றெளிந்தபின்
பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரே. (௪)

1684. பஞ்சத் துரோகத்துப் பாதகர் தம்மை
பஞ்சச் சமயத்தோர் வேந்த னருந்தண்டம்
விஞ்சச்செய் திப்புவி வேறே விடாவிடிற்
பஞ்சத்து ளாய்ப்புவி முற்றும்பா ழாகுமே. (௫)

1685. தவத்திடை நின்றவர் தாமுண் ணுங் கன்மஞ்
சிவத்திடை நின்றது தேவ ரறியார்
தவத்திடை நின்றறி யாதவ ரெல்லாம்
பவத்திடை நின்றதோர் பாடது வாமே. (௬)

1686. கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலுந்
தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலுந்
பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலு
மென்றிவை யிறைபா லியற்கை யல்லவே. (௭)

1687. விடிவ தறியார் வெளிகாண மாட்டார்
வெடியில் வெளியில் விழிக்கவு மாட்டார்
கடியதோ ருண்ணிமை கட்டுமின் காண்மின்
விடியாமை காக்கும் விளக்கது வாமே. (௮)

---

1683. தீயென்று=தீயுருவனான சிவமென்று; உன்னை=(ஆன்மாவான) உன்னை; பேய் என்று=பேய்போல்பவனென்று.

1684. பஞ்சத்துரோகம்=பொய், கொலை, களவு, கட்குடி, குருநிந்தை என்கிற ஐந்துபாதகங்கள்; பஞ்சச் சமயம்=கருப்புக்காலம்; விஞ்ச=மிகுதியாக; இப்புவிவேறே = இந்நாட்டினின்றும் வேறு நாட்டுக்கு; புவிமுற்றும்=அந்தநாடுமுழுமையும்.

1685. உண்ணுங்கன்மம்=கன்மானுபவம்; சிவத்திடை நின்றது= சிவானுபவமாகவே யிருந்தது; பவத்திடை = பிறப்பினில்; ஓர் பாடதுவாம்=ஒப்பற்ற துன்பமேயாம்.

1686. கன்றலும்=கோபித்தலும்; பின்றலும் = குறைவுபடுதலும் (தாழ்ச்சியாதலும்); பிறங்கலும்=மேன்மையடைதலும்.

1687. விடிவது=(சித்தம் சிவத்தில்) விழித்தல்; வெளி=பரமாகாயம்; வெடியில்=அச்சமில்லாத; கொடியது ஓர் உள் = கொடிய வொப்பற்ற மனம்; நிமை=கண்ணிமை; கட்டுமின்= அடக்குங்கள்; காண்மின்=அகத்தில் நோக்குங்கள்; விடியாமை=விடியா திருக்கும் அஞ்ஞானவிருள்; காக்கும்=தடுக்கும்; விளக்கதுவாம் = விளக்குப் போல்வதாகும் (ஞானமுண்டாம்).

1688. வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப்
பெத்த மறமுத்த னாகிப் பிறழ்வுற்றுத்
தத்துவ முன்னித் தலைப்படா தவ்வாறு
பித்தான சீடனுக் கீயப் பெறாதானே. (௯)

1689. மன்னு மலமைந்து மாற்றும் வகையோரான்
றுன்னிய காமாதி தோயுந் தொழினீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதா
னன்னிய னாவ னசற்சீட னாமே. (௧௦)

---

௧௪-வது பக்குவன்.

1690. தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியறி வார்நல் வழியறி வாள
ரழிவறி வார்மற்றை யல்லா தவரே. (௧)

1691. பதைத்தொழிந் தேன்பர மாவுன்னை நாடி
யதைத்தொழிந் தேனினி யாருடன் கூடேன்
சிதைத்தடி யேன்வினை சிந்தனை தீர
வுதைத்துடை யாயுகந் தாண்டரு ளாயே. (௨)

---

1688. வைத்த=அநாதிபந்தமாய் உள்ள; பசுபாசம் = பசுத்துவத்துக்குக் காரணமான ஆணவமல ; பெத்தமற = பந்தமொழிய; பிறழ்வுற்று=மாறுதலையடைந்து ; தத்துவமுன்னி= மெய்ப்பொருளைத் தியானித்து; தலைப்படாது = மேம்பாடடையாமல்; பித்தான=(பிரபஞ்ச மாயையில்) மதிமயங்கியிருக்கின்ற; ஈயப் பெறா=உபதேசங்கள் செய்யக்கூடாவாம்.

1689. ஓரான் = ஆராய்ந்தறியாதவன்; தோயுந்தொழில்=பொருந்துஞ் செய்கை; பின்னிய=கலந்த (நிறைந்த); அன்னியனாவன் = (உபதேசத்துக்கு) புறம்பாவான்; அசற்சீடன் = பொய்ச் சீடன்.

1690. தொழில்=(செய்யத்தக்க) கன்மங்கள்; பழுது=குற்றமுள்ள (நெறி); வழியறிவார் = முறையாகத்தெரிந்து கொள்வார்; அழிவு=அழிவினைச் செய்யும் துன்மார்க்கம்.

1691. பதைத்து=பதறி; பரமா=பரமசிவனே ; அதைத்து=அலைந்து; உதைத்து=தண்டித்து; உடையாய்=என்னையடிமையாக உடையவனே.

1692. பதைக்கின்ற போதே பரமெனும் வித்தை
விதைக்கின்ற வித்தினை மேனின்று நோக்கிச்
சிதைக்கின்ற சிந்தையைச் செவ்வே நிறுத்தி
யிசைக்கின்ற வன்பருக் கீயலு மாமே. (௩)

1693. கொள்ளினு நல்ல குருவினைக் கொள்க
வுள்ள பொருளுட லாவி யுடனீக
வெள்ளத் தனையு மிடைவிடா தேநின்று
தெள்ளி யறியச் சிவபதந் தானே. (௪)

1694. சோதி விசாகந் தொடர்ந்திரு தேணண்டு
வோதிய நாளே யுணர்வது தானென்று
நீதியு ணீர்மை நினைந்தவர்க் கல்லது
வாதியு மேது மறியகி லானே. (௫)

1695. தொழிலார மாமணித் தூய்தான சிந்தை
யெழிலா லிறைவ னிடங்கொண்ட போதே
விழலார் விறலாம் வினையது போகக்
கழலார் திருவடி கண்டரு ளாமே (௬)

---

1692. பதைக்கின்றபோது = (ஜனனமரணவஸ்தையைக் கருதி மனம்) பதறுகின்ற காலத்தில்; பரமெனும் வித்தை=மேன்மையானதெனப்படும் பிரமஞானத்தை; மேனின்றுநோக்கி= புருவமத்திய வாகாயத்திலிருந்து பார்த்து ; சிதைக்கின்ற = கெடுக்கின்ற ; செவ்வே நிறுத்தி = நன்மெனறியிலிருத்தி ; இசைக்கின்ற=ஈசன்றிருவடியிற் பொருத்திவைக்கின்ற.

1693. உள்ளபொருள் = உரிமையாயுள்ள திரவியம்; ஆவி=சீவன்; தெள்ளியறிய=(தத்துவக்கூட்டங்களை) ஆராய்ந்துணர.

1694. சோதி=சுவாதி நட்சத்திரம்; இருதேள் நண்டு = பெருமை பொருந்திய விருச்சிக கடக லக்கினங்கள் ; ஓதிய நாள்= கூறப்பட்ட முகூர்த்த தினங்களில், (நட்சத்திரங்களைக் கூறிப் பின்னர் நாள் என்றதனால், திங்கள் புதன் வியாழன் வெள்ளியாகிய சுப வாரங்களுங் கொள்க).

1695. தொழிலார = சரியை கிரியை முற்றுப் பெற ; விழலார் = பயனற்றவர் ; விறலாம்=வலிதாகும்; கண்டு அருளாம் = காணப்பெற்றுச் சிவபிரானருள் பெறலாகும்.

1696. சாத்திக ஞய்ப்பர தத்துவந் தானுன்னி
யாத்திக பேத நெறித்தோற்ற மாகியே
யார்த்த பிறவியி னஞ்சி யறநெறி
சாத்தவல் லானவன் சற்சீட ஞமே. (எ)

1697. சத்து மசத்துமெவ் வாறெனத் தானுன்னிச்
சித்தை யுருக்கிச் சிவனருள் கைகாட்டப்
பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச்
சத்தியி லிச்சை தகுவோன்சற் சீடனே. (அ)

1698. அடிவைத் தருளுதி யாசானின் றுன்னு
வடிவைத்த மாமுடி மாயப் பிறவி
யடிவைத்த காய வருட்சத்தி யாலே
யடிபெற்ற ஞானத்த ஞசற்று ளோனே. (௯)

1699. சீராரு ஞானத்தி னிச்சை செலச்செல்ல
வாராத காதற் குருபரன் பாலாகச்
சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோ
ஞராயு ஞானத்த ஞமடி வைக்கவே. (௧௦)

---

1696. சாத்திகஞய் = சத்துவகுணப் பிரதானஞய்; ஆத்திக பேத நெறி = ஆஸ்திகமத பேதங்களாய நெறி; தோற்றம் = மூலமான அபிப்பிராயம்; ஆர்த்த = பந்தித்த; சாத்த வல்லான்=கைக்கொள்ள வல்லவன்.

1697. எவ்வாறென = எத்தன்மையை யுடையனென்று; சித்தை யுருக்கி=(பாசத்தொடு கலந்த) சித்துருவஞன ஆன்மாவை உருக்கி வேறுபிரித்து; கைகாட்ட = உபசரிக்க; ஆனந்த சத்தி = சிவத்தினதானந்த சத்தியாகிய மோட்சத்தில்; இச்சை தகுவோன்=விருப்பமிகுந்துள்ளவன்.

1698. இன்றுன்ஞ=இப்பொழுது சிந்தித்து; அடி வைத்த=தொடங்கிய; காய அருட்சத்தி=பரமாகாயத்திலிருக்கும் சிற்சத்தி; அடிபெற்ற ஞானத்தன்=வேரூன்றிய ஞானமுள்ளவன்.

1699. வாராதகாதல் = (அபக்குவர்க்கு) வாராத அன்பு; குருபரன் பாலாக=குருவினிடத்துண்டாக; சாதக நான்கும்=சரியையாதி நான்கும்; அடிவைக்க = திருவடி தீட்சை செய்து உபதேசிக்க.

1700. உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி
யிணக்கிற் பராபரத் தெல்லையு ளிட்டுக்
குணக்கொடு தெற்குத் தரபச்சி மங்கொண்டு
வுணர்த்துமின் ஞவுடை யான்றன்னை யுன்னியே. ()

1701. இறையடி தாழ்ந்தை வணக்கமு மெய்திக்
குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச்
சிறையுட னீயறக் காட்டிச் சிவத்தோ
டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே. (௧௨)

1702. வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புலன்வழி மாற்றிச்சித் தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீட னாமே. (௧௩)

1703. சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோ னீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்த
லற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே. (௧௪)

அதிகாரம் ௧௪-க்குப் பாடல்-௧௩௧.

ஆறந்தந்திர முற்றிற்று.

---

1700. இணக்கில்=ஒன்றோடும் பற்றுதலில்லாத ; பராபரத்தெல்லையுள் = சிவவியாபகத்தில் ; ஆவுடையான் றன்னை = பசுபதியை.

1701. ஐவணக்கம் = ஏகாங்கம், திரியாங்கம், பஞ்சாங்கம், ஷாஷ்டாங்கம், அஷ்டாங்கம் என்பன ; சிறையுடல் = பந்தமான சரீரம்; நீயற=நீயென்பதல்லவென்று; அறிவுக்கு=ஆன்மாவுக்கு, அல்லது சீடனறிவுக்கு.

1702. வேட்கை=மூவகை யாசைகள்; வாழ்க்கைப்புலன்=பிரபஞ்ச வாழ்வுக்காதாரமான இந்திரியங்கள்; சித்தாந்தத்து=சித்தசாந்தியினால்; தாழ்க்கும்=வணங்கும்.

1703. தயா=சீவகாருணியம், சாயைபோல்=நிழலைப்போல்; தண்மை=பொறுமை ; சாந்தமென்பது பொருள் ; தெளிவு=சாரம்; சற்சீடன்=சற்சீடனும்.

# ஏழாந்தந்திரம்.

## க-வது ஆறாதாரம்.

1704. நாலு மிருமூன்று மீரைந்து மீராறுங்
கோலிமே னின்ற குறிகள் பதினாறு
மூலங்கண் டாங்கே முடிந்த விரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே. (க)

1705. ஈராறு நாதத்தி லீரெட்டா மந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசத்தி
போதா லயத்தவி காரந் தனிற்போத
மேதாதி யாதார மீதான வுண்மையே. (உ)

1706. மேலென்றுங் கீழென் றிரண்டறக் காணுங்காற்
றானென்று நானென்றுந் தன்மைக ளோராறும்
பாரெங்கு மாகிப் பரந்த பராபரங்
காரொன்று கற்பக மாகநின் றானே. (௩)

1707. ஆதார சோதனை யானாடி சுத்திகண்
மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்கெட்டான் றன்சக மார்க்கமே. (ச)

1708. மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி
யாதார சோதனை யத்துவா சோதனை
தாதார மாகவே தானெழச் சாதித்தா
லாதாரஞ் செய்போக மாவது காயமே (ரு)

---

1704. நாலும் = நாலிதழுள்ள மூலாதாரமும்; இருமூன்றும் = ஆறிதழுள்ள சுவாதிட்டானமும்; ஈரைந்தும்=பத்திதழுள்ள மணிபூரகமும்; ஈராறும்=பன்னிரண்டிதழுள்ள அநாகதமும்; கோலி=ஆராய்ந்து; பதினாறும்=பதினாறிதழுள்ள விசுத்தியும்; முடிந்த விரண்டும்=முடிவு பெற்ற இரண்டிதழுள்ள ஆக்கினையும்; குறிகள்=அச்சரங்கள் அல்லது இதழ்கள்.

1705. ஈராறு நாதத்தில் = நாததத்துவத்தில் பன்னிருகலைகள்; ஈரெட்டாம்=பதினாறு கலைகள் (சந்திரமண்டலம்); மேதாதி= பிருதுவி முதலாக; போதாலயம் = ஞான ஸ்தானம்; அவிகாரம்=நிஷ்கள சிவம்; மீதான=மேலாக வுள்ள.

1706. ஓராறு = தான், நான், நீ, அவன், அவள், அது; காரொன்று கற்பகமாக=மேகத்தையும் கற்பகத்தையு மொப்பாக.

1707. மேதாதியீரெண் = பஞ்சகலை, நாலுவாக்கு, சுத்தவித்தை, மாஹேசுவரம், சதாசிவம், சாதாக்கியம், விந்து, நாதம், குடிலை; சாதாரணம்=சுபாவச் செயல்.

1708. அத்துவா=மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை; தாது ஆரமாக=மூலாதார முதலாகக்கொண்டு; போகம் = சிவபோகம்.

1709. ஆறந்த முங்கூடி யாகு முடம்பினிற்
கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மி
னூறிய வக்கர மன்பதின் மேலே
யூறிய வாதரத் தோரெழுத் தாமே. (௬)

1710. ஆகு முடம்பு மழிகின்ற வவ்வுடல்
போகு முடம்பும் பொருந்திய வாறுதா
னாகிய வக்கர மைம்பது தத்துவ
மாகு முடம்புக்கு மாறந்த மாமே. (௭)

1711. ஆயு மலரி னணிமலர் மேலது
வாய விதழும் பதினறு மங்குள
தூய வறிவு சிவானந்த மாகிப்போய்
மேய வறிவாய் விளைந்தது தானே. (௮)

உ-வது அண்டலிங்கம்.

1712. இலிங்கம தாவ தியாரு மறியா
ரிலிங்கம தாவ தெண்டிசை யெல்லா
மிலிங்கம தாவ தெண்ணெண் கலையு
மிலிங்கம தாக வெடுத்த துலகே (௧)

1713. உலகி லெடுத்தது சத்தி முதலா
வுலகி லெடுத்தது சத்தி வடிவா
யுலகி லெடுத்தது சத்தி குணமா
யுலக மெடுத்த சதாசிவன் றானே. (௨)

1709. ஆறந்தமும் = ஆறு அவயவங்களும் (அத்துவாக்களாறும்); ஆறிய=அமைந்துள்ள; ஊறிய=உள்ள அல்லது அமுதமூறுதற்குரிய; ஓரெழுத்து=பிரணவம்.

1710. ஆகுமுடம்பு = தோற்றுதலையுடைய தூலசரீரம்; போகுமுடம்பு=தூலத்தினின்றும் வெளியேறிச்செல்லுஞ் சூக்குமசரீரம்; ஆறந்தம்=அத்துவாக்களாறு மவயவமாம்.

1711. ஆயுமலர்=ஆராய்தற்குரிய மலர்வடிவான ஆதாரங்கள்; இதழ் பதினாறு = விசுத்தி; அறிவு=ஆன்மா; மேயவறிவாய் = பொருந்திய சிவமாய்.

1712. இலிங்கம்=அடையாளம் (இங்கே சொரூபம்); ஜடசித் பிரபஞ்சமாகிய வுலகமும், சத்தமய பிரபஞ்சமுமாகிய சமஸ்த கலைகளும் சிவலிங்கமாகிய சொரூபமாமென்ப துணர்த்திற்று இம்மந்திர மென்க.

1713. உலகமெடுத்தது=பிரபஞ்சத்தைத் தனக்குருவமாக எடுத்துக் கொண்டது; சத்திமுதலா = தனது சத்தியை முதற்காரணமாகக்கொண்டு; (சத்தியே பிரபஞ்சமாக விரிதலால் அது சிவத்துக்கு வடிவமாயிற்று என்பது கருத்து.)

1714. போகமு முத்தியும் புத்தியுஞ் சித்தியு
மாகமு மாறாறு தத்துவத் தப்பாலா
மேகமு நல்கி யிருக்குஞ் சதாசிவ
மாகம வத்துவா வாறுஞ் சிவமே. (௩)

1715. ஏத்தின ரெண்ணிலி தேவரெம் மீசனை
வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென்
றார்த்தன ரண்டங் கடந்தப் புறநின்று
காத்தன னென்னுங் கருத்தறி யாரே. (௪)

1716. ஒண்சுட ரோனயன் மால்பிர சாபதி
யொண்சுட ரான விரவியொ டிந்திரன்
கண்சுட ராகிக் கலந்தெங்குந் தேவர்க
டண்சுட ராயெங்குந் தற்பர மாமே. (௫)

1717. தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்
மாபரத் துண்மை வழிபடு வாரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்கும்
பூவகத் துண்ணின்ற பொற்கொடி யாமே. (௬)

1718. தூய விமானமுந் தூலம தாகுமா
லாய சதாசிவ மாகுநற் சூக்குமம்
பாய பலிபீடம் பத்திர லிங்கமா
மாய வரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே. (௭)

---

1714. ஆறாறு தத்துவத்து அப்பாலாம் ஏகம்=முப்பத்தாறு தத்துவங்களுக்கும் வேறாயுள்ள ஆன்மா; ஆகம அத்துவா=ஆகமங் கூறுகின்ற அத்துவாக்கள்.

1715. வாசப்பசுந்தென்றலென்றது, வாயு பூதமென்று குறித்தற்கு; அஃது உபலக்கணமாய் ஏனையபூதங்களையுந் தழுவிநின்றது. பஞ்சபூதங்களையும் தன்னுருவமாகக்கொண்ட சகுண பரசிவத்தையே தேவர் அறிந்து வாழ்த்துவரன்றி, நிர்க்குண சிவத்தை யறிந்ததில்லையென்ப திம்மந்திர முபதேசித்தருளியது.

1716. ஒண்சுடர்=அக்கினி; பிரசாபதி=நவப்பிரசாபதி; கண்சுடராகி=காணுங் கண்ணுக்கொளியாய்; தண்சுடர்=சந்திரன், அல்லது இன்பந்தரும் ஒளிமயன்.

1717. தாபரத்துண்ணின்று = அசரப் பொருள்களிலு மிருந்து; மாபரம்=பெருமையுள்ள பரசிவம்; பூவகம்=சகத்திரவிதழ்த் தாமரைமலர்; பொற்கொடி=சிவசத்தி.

1718. விமானமும் = கர்ப்பக்கிருக மேற்கட்டும்; பாய=பரந்த; பத்திரம்=ரிஷபம்; அரனிலை=சிவாலயம்.

1719. முத்துடன் மாணிக்க மொய்த்த பவளமுங்
கொத்துமக் கொம்பு சிலைநீறு கோமள
மத்தன்றன் னாகம மன்ன மரிசியா
முய்த்ததன் சாதனம் பூமண லிங்கமே. (அ)

1720. துன்றுந் தயிர்நெய்பா றுய்ய மெழுகுடன்
கன்றிய செம்பு கனலிர தஞ்சலம்
வன்றிறற் செங்கல் வடிவுடை வில்லம்பொன்
றென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே. (கூ)

1721. மறையவ ரர்ச்சனை வண்படி கந்தா
னிறையவ ரர்ச்சனை யேயபொன் னாகுங்
குறைவிலா வசியர்க்குக் கோமள மாகுந்
துறையுடைச் சூத்திரர் தொல்வாண லிங்கமே. (க0)

1722. அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி
யெதுவுண ராவகை நின்றவ னீசன்
புதுவுணர் வான புவனங்க ளெட்டு
மிதுவுணர்ந் தென்னுடல் கோயில்கொண் டானே. ()

---

1719. கொத்தும் அக்கொம்பு=சித்திரவேலை செய்யப்பட்ட அக் கட்டை; சிலை=பளிங்கு, சலவைக்கல்லாதிய; அத்தன்றன் ஆகமம் = சிவாகம மெழுதிய புத்தகம்; லிங்கமே = சிவ சொரூபமே யாம்.

1720. மெழுகு=பசுவின் சாணம்; கன்றிய=கடினமான; இரதம்= வாத ரசம்; வில்லம் = வில்வம்; தென்றியங்கு ஒன்றை= அழகு விளங்கும் (தயிர்முதற் பொன்னிறுதியாகக் கூறப்பட் டுள்ளவற்றுள்) ஒன்றை.

1721. கோமளம்=மரகதலிங்கம்; துறை=பூசிக்கும் வகை; வாண லிங்கம்=பாணலிங்கம்.

1722. அது = சிவம்; ஒருதன்மை=அத்துவிதமுறை; எது=எதனு லும்; புதுவுணர்வு=தற்போத மொழிந்தவிடத்தே தோன் றும் ஞானம்; புவனங்களெட்டு=பஞ்சபூதம், சூரியன், சந் திரன், ஆன்மாவென்னு மெண்வகை அங்கத்துடன் கூடிய பிரபஞ்சம்; இது=இச்சரீரமுந் தனக்கோருருவமா மென்னு மிதனை.

1723. அகலிட மாயறி யாம லடங்கு
முகலிட மாய்நின்ற வூனதி னுள்ளே
பகலிட மாமுனம் பாவ விநாசன்
புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே. (௧௨)

1724. போது புனைகழல் பூமிய தாவது
மாது புனைமுடி வானக மாவது
நீதியு ளீச னுடல்விசும் பாய்நிற்கு
மாதி யுறநின்ற தப்பரி சாமே. (௧௩)

1725. தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணுந்
திரைபெறு நீரது மஞ்சன சாலை
வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை
கரையற்ற நந்தி கலையுந் திக்காமே. (௧௪)

---

## ௩-வது பிண்ட லிங்கம்.

1726. மானிட ராக்கை வடிவு சிவலிங்க
மானிட ராக்கை வடிவு சிதம்பர
மானிட ராக்கை வடிவு சதாசிவ
மானிட ராக்கை வடிவு திருக்கூத்தே. (௧)

---

1723. அறியாமல்=(பந்தனையுடையரால்) உணர்தற் கரிதாய்; உக விடம்=அழிதற்கிடம்; பகலிடமாம்=சூரிய மண்டலத்தை யிடமாகக் கொண் டெழுந்தருளிய; முனம் பாவம் = பூர்வ ஜன்மங்களி லார்ஜித்துள்ள பாவகன்மம்; விநாசன் = ஒழிப் பவன்.

1724. போது புனை=(அன்பர் அர்ச்சிக்கும்) மலரிணையணிந்த; மாது புனை = கங்காதேவியை யணிந்த; உறநின்றது = (ஈசன் அண்டசொரூபி) ஆக நின்றது.

1725. தரை=(ஆதாரபீடமாகிய) இடம்; லிங்கம் விண்=சொரூபம் பரமாகாயம்; திரைபெறுநீரது = கடல்; மஞ்சனசாலை = நீராடுதற்குரியவிடம்; மஞ்சு நீர்=மேகங்கள் நீர்ப்பாத்திரம்; வானுடு=விண்ணில் விளங்கும் நட்சத்திரம்; கரை=எல்லை; அற்ற நந்தி=பிரபஞ்சங் கடந்த சிவம்.

1726. ஆக்கை வடிவு = சரீரத்தினது வடிவம்; சிதம்பரம் = சிதாகாசம்; திருக்கூத்து=தாண்டவ சொரூபம்.

1727. உலந்திலர் பின்னு முளரென நிற்பர்
நிலந்தரு நீர்தெளி யூனவை செய்யப்
புலந்தரு பூதங்க ளைந்துமொன் றாக
வலந்தரு தேவரை வந்துசெய் வீரே. (௨)

1728. கோயில்கொண் டன்றே குடிகொண்ட வைவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்
தாயில்கொண் டாற்போற் றலைவனென் னுட்புக
வாயில்கொண் டீசனு மாளவந் தானே. (௩)

1729. கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை
வாயில்கொண் டானடி நாடிகள் பத்துள
பூசைகொண் டான்புல னைந்தும் பிறகிட்டு
வாயில்கொண் டானெங்கண் மாநந்தி தானே. (௪)

---

௪-வது சதாசிவ லிங்கம்.

1730. கூடிய பாத மிரண்டும் படிமிசை
பாடிய கையிரண் டெட்டும் பரந்தெழுந்
தேடு முகமைந்து செங்கையின் மூவைந்து
நாடுஞ் சதாசிவ நல்லொளி முத்தே. (௧)

---

1727. நிலந்தருநீர்=நிலமுற்பத்தியாதற் கிடமானநீர்; தெளியூன்=(காணப்படும்)தூலவுடல்; புலந்தரு=அறியப்படுகிற; வலந்தரு=(ஜனனமரணங்களை) வெற்றிகொள்ளுமாறருளுகின்ற; தேவரை வந்திசெய்வீரே யென்றும் பாடம், வணங்குங்களென்பது பொருள்.

1728. அன்றே=அநாதியிலேயே; ஐவர்=பஞ்சகர்த்தர்கள்; வாயில் கொண்டு=(சரீரத்தை) வழியாகக்கொண்டு; ஆங்கே=அச்சரீரத்தினிடத்திலே; வழிநின் றருளுவர்=சரீரத்திலிருந்தே முறையாக அருள்புரிவார்; தாய் இல் கொண்டாற்போல்=தாயாய் (கன்றினையூட்டக் கருதி) வீடுதேடி வந்ததுபோல்; வாயில் கொண்டு=(அன்பினை) வழியாகக்கொண்டு.

1729. கொல்லை = காடு; அடிநாடிகள் = திருவடி செல்லுதற்குரிய நாடிகள்; பிறகிட்டு = பின்னிடச்செய்து (வென்று); வாயில்கொண்டான்=(அந்நாடிகளையே) வழியாகக்கொண்டான்.

1730. பாடிய = (வேதங்களால்) புகழ்ந்து கூறப்பட்ட; இரண்டு மெட்டும்=பத்தும்; செங்கை=ஆதிரைநாள், (அதுபோலு மொளிதரும் கண்கள்); மூவைந்து=முகத்துக்கு மூன்று கண்களாக ஐந்து முகங்கட்கும் பதினைந்து கண்கள்.

1731. வேதா நெடுமா லுருத்திரன் மேலீசன்
மீதான வைம்முகன் விந்துவு நாதமு
மாதார சத்தியு மந்தச் சிவனொடுஞ்
சாதா ரணமாஞ் சதாசிவந் தானே. (௨)

1732. ஆகின்ற சத்தியி னுள்ளே கலைநிலை
யாகின்ற சத்தியி னுள்ளே கதிரெழ
வாகின்ற சத்தியி னுள்ளே யமர்ந்தபின்
னாகின்ற சத்தியு ளத்திசை பத்தே. (௩)

1733. அத்திசைக் குள்ளே யமர்ந்தன வாறங்க
மத்திசைக் குள்ளே யமர்ந்தன நால்வேத
மத்திசைக் குள்ளே யமர்ந்த சரியையோ
டத்திசைக் குள்ளே யமர்ந்த சமயமே. (௪)

1734. சமயத் தெழுந்த வவத்தையீ ரைந்துள
சமயத் தெழுந்த விராசியீ ராறுள
சமயத் தெழுந்த சரீரமா றெட்டுள
சமயத் தெழுந்த சதாசிவந் தானே. (௫)

---

1731. மேல்=(அவர்கட்கு) மேலான; மீதான ஐம்முகன் = மஹேச னுக்கும் மேற்பட்ட சதாசிவம்; சாதாரணம்=பொது.

1732. ஆகின்ற=யாவுமுண்டாகின்ற; கலை=பஞ்சகலை, அல்லது சுவாசப்பகுதி, சந்திரனென்னினுமாம்; கதிர் = சூரியன், அல்லது சதாசிவம்; சத்தியினுள்ளே யமர்ந்தபின்=(சத்தியைத் தனக்குருவமாகக்கொண்டு) அச் சத்தியினிடத்துச் சதாசிவனிருந்தபிறகு; அத்திசை பத்து=கிழக்கு முதலான அத்திக்குகள் பத்து.

1733. அத்திசைக்குள் = (கற்பிக்கப்பட்ட) அத் திக்குக்களுக்குள்; ஆறங்கம் = வேதாங்கங்களாறு; சரியையோடு = சரியையாதிகளோடு (கூடிய); சமயம்=சன்மார்க்கம், அல்லது அறு சமய மென்னினுமாம்; இது விசுவரூபத் தியல்பு கூறியது.

1734. அவத்தை ஈரைந்து=கீழாலவத்தை மேலாலவத்தை பத்து; இராசி ஈராறு = சுவாச கலைகள் பன்னிரண்டு, அல்லது மேஷ முதலிய இராசிகள் பன்னிரண்டு; ஆறெட்டு = பிரமனாதி சத்தி அந்தமான ஆறு, பிருதிவியாதி வடிவம் எட்டு.

1735. நடுவு கிழக்குத் தெற்குத் தரமேற்கு
நடுவு படிக நற்குங்கு மவன்ன
மடையுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பா
லடியேற் கருளிய முகமிவை யஞ்சே. (சு)

1736. அஞ்சு முகமுள வைம்மூன்று கண்ணுள
வஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
வஞ்சுட னஞ்சா யுதமுள நம்பியென்
னெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே. (எ)

1737. சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சத்தி யுருவ மருவஞ் சதாசிவஞ்
சத்தி சிவதத் துவமுப்பத் தாறே. (அ)

1738. தத்துவ மாவ தருவஞ் சராசரந்
தத்துவ மாவ துருவஞ் சுகோதயந்
தத்துவ மெல்லாஞ் சகலமு மாய்நிற்குந்
தத்துவ மாகுஞ் சதாசிவன் றானே. (கூ)

---

1735. நடுவு=ஊர்த்துவ முகமும்; கிழக்கு, தெற்கு, மேற்கு, உத்தரம் என்னும் நாற்றிசைக்கு நாலுமுகமும் ஆக ஐந்து முகங்கள்; அவற்றுக்கு முறையே படிகநிறம் குங்குமநிறம், கரிய நிறம், செவ்வரத்தப்பூநிறம் பாலிறமுமாம் என்பன கூறிற்று.

1736. ஐந்து முகங்களும் பதினைந்து கண்களும் பத்துக்கைகளுமுளனாய்ச் சதாசிவனெனதிதயம் புகுந்தானென்பது.

1737. சத்திதராதலம்=சத்திபூமியாம்; அண்டஞ் சதாசிவம்=சதாசிவம் ஆகாசரூபி ; சத்திசிவதத்துவம்=சத்தி சிவங்கட்குரிய தத்துவங்கள்.

1738. தத்துவம்=சத்திசிவ தத்துவங்கள்; அருவம் சராசரம் உருவம் என்று கூட்டி, அருவமும் உருவமுமான சராசரப் பிரபஞ்சமாமென்று கொள்க ; சுகோதயம்=இன்ப வுற்பத்திக்குக் காரணம்; சகலமுமாம்=சகலாவஸ்தைக் குரியனவாம்.

1739. கூறுமி னூறு சதாசிவ னெம்மிறை
வேறே ருரைசெய்து மிகைப்பொரு ளாய்நிற்கு
மேறுரை செய்தொழில் வானவர் தம்மொடு
மாறுசெய் வானென் மனம்புகுந் தானே. (௧௦)

1740. இருளார்ந்த கண்டமு மேந்து மழுவுஞ்
சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையு
மருளார்ந்த சிந்தையெம் மாதிப் பிரானைத்
தெருளார்ந்தென் னுள்ளே தெளிந்திருந் தேனே. ()

1741. சத்திதா னிற்கின்ற வைம்முகஞ் சாற்றிடி
லுத்தமம் வாம முரையத் திருந்திடுந்
தத்துவம் பூருவந் தற்புரு டன்சிர
மத்தகு கோர மகுடத்தீ சானனே. (௧௨)

1742. நாணுநல் லீசான நடுவுச்சி தானாகுந்
தாணுவின் றன்முகந் தற்புரு டம்மாகுங்
காணு மகோர மிருதயங் குய்யமா
மாணுற வாமமாஞ் சத்திநற் பாதமே. (௧௩)

---

1739. கூறுமினூறு=மிகுதியாகத் துதியுங்கள்; வேறேருரை = வேதத்துக்கு விரோதமான நூல்; மிகைப்பொருள்=குற்றமுள்ள பொருள்; ஏறுரை செய்தொழில்=தம்மை மேம்படவுரைக்குஞ் செயல்; மாறுசெய்வான் = விரோதப்பட்டிருப்பன்.

1740. இருளார்ந்த கண்டம்=காளகண்டம்; சுருள்=சுருட்டுதல், (முறுக்கியுள்ள); தெருள் = தெளிவு; தேவர்க்கு அநுக்கிரகிப்பவன் என்பது விளக்க, இருளார்ந்த கண்டமும் சோதிப் பிறைச்சடையும் விசேடணமாகக் கூறப்பட்டன.

1741. சத்திதானிற்கின்ற = சத்தி விளங்கியிருக்கின்ற; உத்தமம் வாமம்=சிரேஷ்டமான வாமமுகம்;உரை அத்து இருந்திடும்= சொல்லுகின்ற செந்நிறம் பொருந்திய; தத்துவம் பூருவம்= தத்துவம் தோற்றுதற்குரிய சத்தியோ ஜாதம்;சிரம் அத்தகு= தலைமைபொருந்திய அத்தகைய; மகுடத்தீசானமே=உச்சியிலீசானமுகமாம்.

1742. நாண் = அடக்கம்; ஈசானநடுவுச்சி=நடுவிலுள்ள ஈசானமேயுச்சியாம்; முகம் தற்புருடமாகும்=முகம் தற்புருடமாம்; அகோரமிருதயம்=இதயஸ்தானம் அகோரமாகும்; குய்யமாம் மாணுறவாமம்=பெருமையுள்ள வாமமே குய்ய ஸ்தானமாம்; சத்தி=சத்தியோ ஜாதம்; சதாசிவனது சிரசு முகம் ஏனைய அவயவங்களும் சத்தியே யாமென்பது விளக்கின இவ்விரு மந்திரங்களும்.

1743. நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவசங் கண்ணும்
வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாஞ்
செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னொதுஞ்
செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே. (கச)

1744. எண்ணி லிதய மிறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை யிச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே. (கரு)

1745. சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடுஞ்
சத்தி யறுகோணஞ் சயனத்தை யுற்றிடுஞ்
சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடுஞ்
சத்தி யுருவாஞ் சதாசிவன் றானே. (கசா)

1746. மானந்தி யெத்தனை காலம ழைக்கினுந்
தானந்தி யஞ்சின் றனிச்சுட ராய்நிற்குங்
கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்
மேனந்தி யொன்பதின் மேவிநின் றானே. (கஎ)

1747. ஒன்றிய வாறு முடலி னுடன்கிடந்
தென்றுமெம் மீச னடக்கு மியல்பது
தென்றலைக் கேறத் திருந்து சிவனடி
நின்று தொழுதனனென் னெஞ்சத்தி னுள்ளே. ()

---

1743. வஞ்சமில்விந்து=குற்றமற்ற சுத்தமாயை; செஞ்சுறு=நிறைவுள்ள; சேகரிமின்=தலை அணிபோலும் சிறந்த பராசத்தி; செஞ்சுடர்=தீ, அல்லது இளஞ்சூரியன்.

1744. பரை=பராசத்தி; ஆதி=ஆதிசத்தி; இச்சை=இச்சாசக்தி; கிரியை=கிரியாசத்தி; ஞானசத்தியாதிய முறையே சதாசிவனுக்கு இதயம், சிரசு, சிகை, கவசம், கண்களுமாமெனக.

1745. நாற்கோணம் = மூலாதாரம் ; அறுகோணம்=சுவாதிட்டனம்; வட்டம்=ஆக்கினை.

1746. மானந்தி = ஆசைமிகுந்து;அஞ்சில் = பஞ்ச சத்திகளில் ; கானந்தி=பிராணவாயுவை யொடுக்கி; உந்தி=மேலேசெலுத்தி ; கமலத்தின்மேல்=உச்சித் தாமரையில் ; ஒன்பதின் மேவி = நவ வடிவங்களிற் பொருந்தி.

1747. ஒன்றிய வாறும்=ஈசன் சகத்திற் கலந்திருக்கு முறைமையும்; உடலினுடன் கிடந்து=சரீரபேதங்கடோறு மிருந்து; தென்றலை=அழகிய சிரசு.

1748. உணர்ந்தே னுலகினி லொண்பொரு ளானைக்
கொணர்ந்தேன் குவலயங் கோயிலென் னெஞ்சம்
புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே
பணிந்தேன் பகலவன் பாட்டு மொலியே. (௧௯)

1749. ஆங்கவை மூன்றினு மாரழல் வீசிடத்
தாங்கிடு மீரேழு தானடு வானதி
லோங்கிய வாதியு மந்தமு மாமென
வீங்கிவை தம்முட லிந்துவு மாமே. (௨௦)

1750. தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்
தன்மேனி தற்சிவன் றற்சிவா னந்தமாந்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே. (௨௧)

1751. ஆரு மறியா ரகார மவனென்று
பாரு முகாரம் பரந்திட்ட நாயகி
தார மிரண்டுந் தரணி முழுதுமாய்
மாறி யெழுந்திடு மோசைய தாமே. (௨௨)

---

1748. குவலயம்=உலகு ; கோயிலென்னெஞ்சம்=என்னெஞ்சாகிய கோயில் ; புணர்ந்தேன்=சேர்ந்தேன் ; பாட்டுமொலி (ஒலி பாட்டும்) = நாதவடிவமான அவன்பாடலான வேதமும்; புனிதனும் பாட்டுமொலியே பொய்யல்ல மெய்யே என்று கூட்டி, சிவபிரானும் அவன் பாடலாகிய வேதமும் பொய் யல்ல மெய்யேயாம் என்று கொள்க.

1749. மூன்றினும்=மூன்றுலகங்களிலும் ; ஈரேழு தான் நடுவான தில் = பதினான்கு லோகங்களில் மத்தியான ஆகாயத்தில் ; ஈங்கு = இவ்வுலகத்தில் ; இவை=ஜீவவர்க்கங்கள் ; உடல் இந்து = சரீரத்திலுள்ள சந்திரன்.

1750. சதாசிவ சொரூபமே சிவலிங்கமாதியாமென்கின்றது.

1751. அகாரமவன்=அகாரமே சிவம் ; பரந்திட்ட நாயகி=பிரபஞ்ச மாய்ப் பரவிய சத்தி; தாரமிரண்டும்=பிரணவ வுறுப்புக்களா கிய அகாரம், உகாரமிரண்டும்; ஓசை=நாதம்.

1752. இலிங்க நற்பீட மிசையுமோங் கார
மிலிங்கநற் கண்ட நிறையு மகார
மிலிங்கத்துள் வட்ட நிறையு முகார
மிலிங்க மகார நிறைவிந்து நாதமே. (௨௬)

## ௫-வது ஆத்தும லிங்கம்.

1753. அகார முதலா யனைத்துமாய் நிற்கு
முகார முதலா யுயிர்ப்பெய்து நிற்கு
மகார வுகார விரண்டு மறியி
லகார வுகார மிலிங்கம தாமே. (௧)

1754. ஆதார மாதேய மாகின்ற விந்துவு
மேதாதி நாதமு மீதே விரிந்தன
வாதார விந்து வதிபீட நாதமே
போதாவி லிங்கப் புணர்ச்சிய தாமே. (௨)

1755. சத்தி சிவமா மிலிங்கமே தாபரஞ்
சத்தி சிவமா மிலிங்கமே சங்கமஞ்
சத்தி சிவமா மிலிங்கஞ் சதாசிவஞ்
சத்தி சிவமாந் தாபரந் தானே. (௩)

---

1752. அகார உகார மகாரங்களாகிய பிரணவ வுறுப்புக்களும், ஓங்காரமாகிய பிரணவமுமே சிவலிங்க ரூபமாமென்றது.

1753. உயிர்ப்பெய்து நிற்கும் = சுவாசமாய்ப் பொருந்தியிருக்கும்; அகார வுகார மிலிங்கமதாம் = அகார வுகாரங்களே யான்ம லிங்கமாம்.

1754. ஆதேயம்=ஆதாரத்தில் நிலைத்துள்ளது; போதா=மொட்டாக (சிவலிங்கத்தில் தோன்றுந் தண்டாகாரம்);லிங்கப் புணர்ச்சியதாம் = இலிங்கத்தின் கலப்பாம்; நாதமும் பிந்துவுங் கலத்தலே ஆன்ம லிங்கமாமென்பது.

1755. தாபர லிங்கம் = தாபர சொரூபம் ; சங்கம லிங்கம்=சங்கம சொரூபம் ; தாபரந் சத்தி சிவமாகும் = உலகமே சத்தி சிவ ரூபங்களாம்.

1756. தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம்
வானே ரெழுகின்ற வைம்ப தமர்ந்திடம்
பூனே ரெழுகின்ற பொற்கொடி தன்னுடன்
ருனே ரெழுகின்ற வகாரம தாமே. (௪)

1757. விந்துவு நாதமு மேவு மிலிங்கமாம்
விந்து வதேபீட நாத மிலிங்கமா
மந்த விரண்டையு மாதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே. (௫)

1758. சத்திநற் பீடந் தகுநல்ல வான்மா
சத்திநற் கண்டந் தகுவித்தை தானுஞ்
சத்திநல் லிங்கந் தகுஞ்சிவ தத்துவஞ்
சத்திநல் லான்மா சதாசிவந் தானே. (௬)

1759. மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை
மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது
நலம்புகுந் தென்னொடு நாதனை நாடு
மிலம்புகுந் தாதியு மெற்கொண்ட வாறே. (௭)

---

1756. ஐம்பதமர்ந்திடம் = வர்ண சொரூபங்கள் சூக்குமமா யமர்ந்த விடம் (அது மூலாதாரம்); பூனேர் (பூநேர்) எழுகின்ற = பூவை யொத்துத் தோன்றுகின்ற அல்லது உச்சித்தாமரையில் நேர்மையாகத் தோன்றுகின்ற; ஏரெழுகின்ற வகாரமதாம்=அழகு பெறத்தோன்றுகிற அகார மாகும்.

1757. அந்த விரண்டையும்=நாதவிந்துக்களிரண்டையும்; வந்த கருவைந்தும் = தோன்றிய வுருவமைந்தும் (பஞ்ச கர்த்தர்கள்); ஐந்து = பஞ்ச கிருத்தியங்கள்.

1758. ஆன்மா=சீவான்மா; வித்தை=ஞானம்; நல்லான்மா=(ஆன்ம லிங்கத்திற்குச் சீவனாய் நிற்கும்) பரமான்மா.

1759. மன்னிய வாழ்க்கை=நிலைபெற்ற முத்தியானந்தம்; என்னொடு நாதனை நாடும் = சீவனாகிய என்னையும் தலைவனாகிய சிவபிரானையுமாராயும்; இலம்புகுந்து = சரீரமாகிய வீட்டிற் புகுந்து.

1760. பராபர னெந்தை பனிமதி சூடி
தராபரன் றன்னடி யார்மனக் கோயிற்
சிராபரன் றேவர்கள் சென்னியின் மன்னு
மராமரன் மன்னி மனத்துறைந் தானே. (௮)

1761. பிரானல்ல நாமெனிற் பேதை யுலகங்
குராலென்னு மென்மனங் கோயில்கொ ளீச
னராநின்ற செஞ்சடை யங்கியு நீரும்
பொராநின் றவர்செயப் புண்ணியன் றானே. (௯)

1762. அன்றுநின் றான்கிடந் தானவ னென்று
சென்றுநின் றெண்டிசை யேத்துவர் தேவர்க
ளென்றுநின் றேத்துவ னெம்பெரு மான்றனை
யொன்றியென் னுள்ளத்தி னுள்ளிருந் தானே. (௧௦)

---

### ௯-வது ஞான லிங்கம்.

1763. உருவு மருவு முருவோ டருவு
மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்குங்
குருவு மெனநிற்குங் கொள்கைய னாகுந்
தருவென நல்குஞ் சதாசிவன் றானே. (௧)

---

1760. தராபரன்=உலகங்களுக்கு இறைவன்; சிராபரன்=மேலான தேவன், அல்லது கபாலத்தானத்தமர்ந்த ஈசன்; மராமரன் (மரு ஆம் அரன்)=வாசனையுள்ள (மலர்போல்பவனான) சிவ பெருமான்.

1761. பிரானல்ல நாமெனில் = (நல்லபிரான் நாமெனில்) நன்மை பொருந்திய கடவுள் நாமேயென்னில்; குரால்=பசு; பொரா நின்றவர்=மாறுபடுகின்றவர்; செய=கருணைபுரிய.

1762. அன்று நின்றான் = அந்நாளில் கட்புலனாய்த் தோன்றினான்; கிடந்தான்=(அவ்விடத்தில்) இருந்தான்; ஒன்றி=கலந்து.

1763. உருவோடருவும்=உருவாருவமும்; மருவு = பொருந்திய; தருவென=கற்பகத்தருவைப்போல; சதாசிவம் சீவான்மாக்களுக்குக் குருவும், விரும்பியவற்றைத் தரும் இறைவனுமா மென்பது.

1764. நாலான கீழ துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிகநாப்ப
ணாலான வொன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் றானே. (உ)

1765. தேவர் பிரானைத் திசைமுக நாதனை
நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை
யேவர் பிரானென் றிறைஞ்சுவ ரவ்வழி
யாவர் பிரானடி யண்ணலு மாமே. (ரு)

1766. வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற
வாண்டொரு திங்களு நாளு மளக்கின்ற
காண்டகை யானொடுங் கன்னி யுணரினு
மூண்டகை மாறினு மொன்றது வாமே. (௪)

1767. ஆதிபரந் தெய்வ மண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வ
நீதியுண் மாதெய்வ நின்மல னெம்மிறை
பாதியுண் மன்னும் பராசத்தி யாமே. (ரு)

---

1764. நாலான கீழதுருவம் = (கீழது நாலான வுருவம்) = கீழுள்ள நாலுருவம் (அவை பிரமன் விண்டு உருத்திரன் மஹேசன் ஆகிய உருவ மூர்த்திகள்); மேலான நான்குமருவம்=மேலாயுள்ள நாலும் அருவுருவம் (அவை விந்துநாதம் சத்தி சிவம்); நாலான ஒன்று=கீழுள்ள நாலும், மேலுள்ள நாலுந்தானேயான சதாசிவம்; பாலாமிவை=(உருவம்அருவம் உருவாருவமெனும்) முப்பகுதியவான ஒன்பது வடிவமும்.

1765. திசைமுகநாதனை = திக்குகட்கு இறைவனை; நால்வர் பிரானை=பிரமனாதி நால்வர்க்குந் தலைவனை; நடுவுற்ற = (உருவம் அருவம் இரண்டுக்கும்) பொதுவிலுள்ள; அவ்வழி= அவ்வண்ணமாக; அண்ணலுமாம்=அடைதலுங்கூடும்.

1766. அளக்கின்ற=அளவிட்டுத்தெரிவிக்கின்ற;கன்னி=சத்தியை; மூண்ட கைமாறினும்=பொருந்திய இடமாறி வணங்கினாலும்(தனித்தனியாக வேறுபடுத்தி வணங்கினாலும்);ஒன்றது வாம்=(சிவ வணக்கமாகிய) ஒரே வணக்கமாகும்.

1767. பாதியுள்=அர்த்த பாகத்தில்; மன்னும்பராசத்தி=(பராசத்தி மன்னும்) பராசத்தி வசிக்கும்; பராசத்தி சிவனுக்குப் பாதிச் சரீரமாதலால் சத்தி சிவங்களிலெதனை யாராதித்தாலும் அது சிவ வணக்கமேயாமென்பது.

1768. சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபதந் தோயாத தூவொளி
யத்தன் றிருவடிக் கப்பாலைக் கப்பாலா
மொத்தவு மாமீசன் றூன வுண்மையே. (சு)

1769. கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்று
மெழுந்திடங் காணி லிருக்கலு மாகும்
பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையு ளானே. (எ)

1770. எந்தை பரமனு மென்னம்மை கூட்டமு
முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம்பெருங் கண்ணியை
யுந்தியின் மேல்வைத் துகந்திருந் தேனே. (அ)

1771. சத்தி சிவன்விளை யாட்டா முயிராகி
யொத்த விருமாயா கூட்டத் திடையூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமக மாக்குமே. (கூ)

---

1768. சத்திக்கு மேல் = சத்தி தத்துவத்துக்குமேல்; பராசத்தி தன்னுள்=சிற்சத்தியினிடத்தில் ; சுத்தசிவபதம்=சிற்சிவத்துக்கிடம்; தோயாத தூவொளி=யாதினுந்தாக்கற்ற சோதியான நிஷ்கள சிவம்; அப்பாலைக் கப்பாலாம்= கடந்து நிற்பதாம் ; ஒத்தவுமாம் = அச்சத்திக் கொத்ததுமாகும் ; ஈசன்றூன வுண்மை=ஈசனிருக்கின்ற வுண்மை நிலைமை.

1769. கொழுந்தினை=இவ்வாறு கூறிய சிகையாகிய ஞானலிங்கத்தை ; எழுந்திடம் = (அந்தச்சிவம்) வெளிப்படுமிடமாகிய சிற்சத்தி ; பரம் திடம் காணின் = பரத்தினது உண்மையையறிய விரும்பினுல்; பார்ப்பதிமேலே திரண்டெழக்கண்டவன் = பருவத ராஜபுத்திரியாகிய உமாதேவி தன் சரீரத்திலே யுருவோடு காணப்படும் அர்த்தநாரீசுவரமூர்த்தி.

1770. கூட்டமும்=கலப்பும்; சந்தித்திருந்தவிடம் = கூடியிருந்த ஸ்தானம்; உந்தியின்மேல் வைத்து=நாபியாகிய மணிபூரகத்துக்கு மேலான அநாகதத்தில் மனதைவைத்து; உகந்திருந்தேன்=மகிழ்வுற்றிருந்தேன்.

1771. விளையாட்டு=விளையாட்டினுல் ; இருமாயாகூட்டத்திடை= சுத்தம் அசுத்தமென்கிற இருமாயைகளின் சம்பந்தத்தில் ; சுத்தமதாகும் துரியம் பிரிவித்து=சுத்தாவஸ்தையின் கண்ணுள்ள துரியத்தில் (மாயையினின்றும்) வேறுபடுத்தி ; சிவமகமாக்கி=(அகம் சிவம் ஆக்கி) என்னைச் சிவமாகும்படி செய்து.

1772. சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமாஞ் சிவஞ்சத்தி யுமாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்தி தானென்றுஞ் சமைந்துரு வாகுமே. (௧௦)

---

எ-வது சிவ லிங்கம்.

1773. குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்
பரக்கின்ற காற்றுப் பயில்கின்ற தீயு
நிரைக்கின்ற வாறிவை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. (௧)

1774. வரைத்து வலஞ்செயு மாறிங்கொன் றுண்டு
நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி
யுரைத்தவ னுமமு ணரவல் லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே (௨)

1775. ஒன்றெனக் கண்டேயெம் மீச னொருவனை
நன்றென் றடியிணை நானவ னைத்தொழ
வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற
வன்றென் றருள்செயு மாதிப்பி ரானே. (௩)

1776. மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்
பலந்தரு மைம்முகன் பரவிந்து நாத
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. (௪)

---

1772. சத்திசிவமாஞ் சிவஞ்சத்தியுமாகும் = சத்தியே சிவமாம், சிவமே சத்தியுமாம் (இரண்டும் வேறல்ல ஒன்றேயாம்); தாபரம்=உலகம்; சத்திதானென்றுஞ் சமைந்துருவாகும்= சத்தியே எப்பொழுதுஞ் சராசரப் பிரபஞ்ச வடிவமாய்ப் பொருந்தியிருக்கும்.

1773. குரைக்கின்ற=ஒலிக்கின்ற; இவை=பூதங்கள்; வரைத்து= ஓரளவுபடுத்தி.

1774. நீர்மலரேந்தி=நீரையும் மலரையுமெடுத்து (மஞ்சனமாட்டி அருச்சித்து); உணர=தியானிக்க; புரைத்து=தவறி.

1775. ஒன்றெனக்கண்டு = சிவ மொன்றே பொருளென்றறிந்து; இன்புறவன்றென்று=(இன்புற என்று அன்று)இன்பமடைக வென்று அப்பொழுது.

1776. மலர்ந்த=(திருமா லுந்திக்கமலத்தில்) தோன்றிய; பலந்தரு மைம்முகன்=(முத்தி) பயனை யருளும் சதா சிவம்; பரா நந்தி = துதிக்கப்படுகின்ற சிவபிரான்.

1777. மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்
றாவி யெழுமள வன்றே யுடலுற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. (௫)

---

### ௮-வது சம்பிர தாயம்.

1778. உடல்பொரு ளாவி யுலகத்தார் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
நொடியினடி வைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடிய பிறப்பறக் காட்டின னந்தியே. (௧)

1779. உயிருஞ் சரீரமு மொண்பொரு ளான
வியவார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமுஞ் சிற்சத்தியா திக்கே
யுயலார் குருபர னுய்யக்கொண் டானே. (௨)

1780. பச்சிம திக்கிலே வைச்சவா சாரிய
னிச்சலு மென்னை நினையென்ற வப்பொரு
ளுச்சிக்குங் கீழது வுண்ணுக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. (௩)

---

1777. மேவி யெழுகின்ற செஞ்சுடரூடு = மூலத்தைப் பொருந்தி யிருந்து மேலேயெழுந்து செல்லுகின்ற அக்கினியோடு; ஆவி யெழுமளவு = பிராணன் பிரம ரந்திரத்தின் வழியே மேலே சென்றிருக்குமட்டும்; உடலுற மேவப்படுவதும் = உடம்பினுலேபொருந்தஅடையப்படுவதாகிய பழிபாவங்களை யும்; பாவித்தடக்கின் = உணர்ந்து வாயுவை யடக்கினுல்.

1778. உலகத்தார் = சீடராகியமனிதர்; பற்றறப்பார்த்து = வேரோ டறுமாறு திருக்கண்ணோக்கி (சட்சு தீட்சை); கைவைத்து = ஹஸ்ததீட்சைசெய்து; அடிவைத்து = திருவடி தீட்சை செய்து; உணர்வாக்கி = ஞானவடிவமாக்கி; காட்டினன் = உபதேசித்தான்.

1779. வியவார் = (மேலென்று) கருதி மகிழாதவர்; பரம் = உடலாதி பாரத்தை; செயலார் = அநுக்கிரகத் தொழிலுடையவர்; உயல் ஆர் = கடைத்தேறும்வண்ண மெழுந்தருளிய.

1780. பச்சிம திக்கிலே வைச்ச = (என்னைத் தனக்கு) மேற்றிசையி லிருத்தி (உபதேசித்த); நிச்சலும் = தினந்தோறும்; உச்சி = கபாலத்தானம்; வாய்திறவாது = வாய்திறந்து உச்சரிக்க எண்ணாது.

1781. பொட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனைப்
பொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்
றட்டொக்க மாறினன் றன்னையு மென்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே. (௪)

1782. தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவ
னிருக்கின்ற தன்மையை யேது முணரார்
பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட வீசனைக் கண்டுகொண் டாரே. (௫)

1783. கூடு முடல்பொரு ளாவி குறிக்கொண்டு
நாடி யடிவைத் தருண்ஞான சத்தியாற்
பாட லுடலினிற் பற்றற நீக்கியே
கூடிய தானவ னுங்குளிக் கொண்டே. (௬)

1784. கொண்டா னடியே னடிமை குறிக்கொள்ளக்
கொண்டா னுயிர்பொருள் காயக் குழாத்தினைக்
கொண்டான் பலமுற்றுந் தந்தவன் கோடலாற்
கொண்டா னெனவொன்றுங் கூறகி லேனே. (௭)

1785. குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி
னெறிக்கும் பிராண னிலைபெற்ற சீவன்
பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை
பிறக்க வறியாதார் பேயுட னொப்பரே. (௮)

---

1781. பொட்டடித்து - சந்தேகங்கொண்டு; பொட்டடித்து=சந்தேகத்தை நீக்கி; மாசெலாம்=மல முழுதையும்; தட்டொக்க=தராசுத்தட்டு ஒத்திருக்கும்படி; மாறினன் = மாற்றிவைத்தான்.

1782. பிரிக்கின்ற விந்து=(சிவனையும் சீவனையும்) வேறும்படி செய்கின்ற மாயை; பிணக்கு=மாறுபாடு; கருக்கொண்ட=(பிரபஞ்சத்தைத் தன்னுள்) அடக்கி வைத்திருக்கின்ற.

1783. பாடல்=(படல் என்பது எதுகை நோக்கி நீண்டது)=துன்பானுபவத்துக்கு இடமான; பற்று=ஆசை; கூடிய=கூடியது என்பது ஈறுகெட்டது) சீடனொடு ஏகமாய்ச் சேர்ந்தது.

1784. அடிமை குறிக்கொள்ள=அடிமைத் தொண்டொன்றினையே கருதியிருக்க; பலமுற்றுந்தந்து = (சரீரத்தினலடைதற்குரிய) பயன் முழுவதையுமளித்து.

1785. நெறிக்கும் = நன்கு நிற்கும்; பிராணனிலைபெற்ற = பிராணவாயுவில் நிலைத்திருக்கப்பெற்ற; பறிக்கின்ற = (யமனால்) வலிந்து கொள்ளப்படுகின்ற; நேர்மை=முறைமை; பிறக்க=(பிறங்க என்பது வலித்தல் விகாரம் பெற்றது) விளங்க.

1786. உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்று
முணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
யுணர்வுடை யார்க ளுணர்ந்தவக் கால
முணர்வுடை யார்க ளுணர்ந்துகண் டாரே. (கூ)

1787. காயப் பரப்பி லலைந்து துரியத்துச்
சால விரிந்து குவிந்து சகலத்தி
லாயவவ் வாறு றடைந்து திரிந்தோர்க்குத்
தூய வருடந்த நந்திக்கென் சொல்வதே. (கா)

1788. நானென நீயென வேறில்லை நண்ணுத
லூனென வூனுயி ரென்ன வுடனின்று
வானென வானவர் நின்று மனிதர்க
டேனென வின்பந் திளைக்கின்ற வாறே. (கக)

1789. அவனு மவனு மவனை யறியா
ரவனை யறியி லறிவானு மில்லை
யவனு மவனு மவனை யறியி
லவனு மவனு மவனிவ னாமே. (கஉ)

---

1786. உணர்ந்தவக்காலம் = சிவத்தை யறிந்த அப்பொழுது; உணர்ந்து கண்டார்=(பதிபசுபாச வியல்பின்) உண்மையை யறிந்துகொண்டவர்கள்.

1787. பரப்பு=சமுத்திரம்(ஈண்டு அளவின்மையைக் குறித்தது); துரியத்து=கேவல துரியத்தில்; குவிந்து=ஒடுங்கி; சகலத்தில்= சகலாவஸ்தையில்; ஆறு ஆறடைந்து=பிருதிவி முதல் நாத மீறான முப்பத்தாறு தத்துவங்களோடுங் கூடி.

1788. ஊனுயிரென்ன = உடலையு முயிரையும்போல (அபேதமாய்); வானென = ஆகாயம்போல; வானவர் = (ஆகாயத்தமர்ந் தருளிய) சத்தி சிவமாமிருவர்; நின்று=கலந்திருத்தலினால்.

1789. அவனும் அவனும் = கன்ம காண்டியும் பக்தி காண்டியும்; அவனை யறியார்=சிவத்தை யறியமாட்டார்கள்; அவனை அறியில் = அச்சிவத்தை (ஞானகாண்டி) அறிவானானால்; அறிவானுமில்லை=சீவபோத பேத நிகழாவாம்; அவனு மவனும் அவனை யறியில் = அக்கன்ம பக்திகாண்டிகள் (ஞானத்தை யுடையவர்களாய்) அச்சிவத்தை அறிவார்களானால்; அவனிவனும்=அச்சிவமாவார்கள் (தத்துவமசி வாக்கியார்த்தம்).

1790. நானிது தானென நின்றவ னூடோறு
மூனிது தானுயிர் போலுணர் வானுளன்
வானிரு மாமுகில் போற்பொழி வானுள
னானிது வம்பர நாதனு மாமே. (௧௩)

1791. பெருந்தன்மை தானென யானென வேறா
யிருந்தது மில்லைய தீச னறியும்
பொருந்து முடலுயிர் போலுமை மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே. (௧௪)

---

௯-வது திருவருள் வைப்பு.

1792. இருபத மாவ திரவும் பகலு
முருவது வாவ துயிரு முடலு
மருளது வாவ தறமுந் தவமும்
பொருளது வுண்ணின்ற போகம தாமே. (௧)

1793. காண்டற் கரியன் கருத்தில னந்தியுந்
தீண்டற்குஞ் சார்தற்குஞ் சேயனுந் தோன்றிடும்
வேண்டிக் கிடந்து விளக்கொளி யானெஞ்ச
மீண்டிக் கிடந்தங் கிருளறு மாமே. (௨)

---

1790. நானிதுதானென = நானிந்தச் சீவனே யென்னும்படி (சீவனுக்கபேதமாய்); ஊனிது தானுயிர்போல்=இந்த வுடலைத் தானென்றிருக்கு முயிரைப்போல; இருமாமேகம்=பெருமைமிக்குள்ள மேகம்; அம்பரநாதன்=பரமாகாயத்துக் கிறைவனாகிய சிவபிரான்.

1791. பெருந்தன்மை = பெருந்தன்மையுள்ள சிவபிரான்; நான் = சீவன்; உமை மெய்யே திருந்த=உமை யென்னும் சிற்சத்தியே தனக்குச் சரீரமாகத் திருந்தியிருக்க; முன்=அநாதி.

1792. இரவும் பகலும்=அஞ்ஞானமும் ஞானமும்; போகம் = சிவபோகம்.

1793. விளக்கொளியால் = யாவையும் விளக்குகின்ற ஞானத்தால்; இருள்=அஞ்ஞானம்.

1794. குறிப்பினி னுள்ளே குவலயத் தோன்றும்
வெறுப்பிரு ணீங்கில் விகிர்தனு நிற்குஞ்
செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடி
லறிப்புறு காட்சி யமரரு மாமே. (௩)

1795. தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞக னெம்மிறை
யார்ந்தறி வாரறி வேதுணை யாமெனச்
சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே. (௪)

1796. தானே யறியும் வினைக ளழிந்தபி
ஞானே யறிகில னந்தி யறியுங்கொ
லூனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின்
றேனே யனையனந் தேவர்பி ரானே. (௫)

1797. நானறிந் தன்றே யிருக்கின்ற வீசனை
வானறிந் தாரறி யாது மயங்கின
ரூனறிந் துள்ளே யுயிர்க்கின்ற வொண்சுடர்
தானறி யான்பின்னை யாரறி வாரே. (௬)

1798. அருளெங்கு மான வளவை யறியா
ரருளை நுகரமு தானதுந் தேரா
ரருளைங் கருமத் ததிசூக்க முன்னா
ரருளெங்குங் கண்ணான தாரறி வாரே. (௭)

---

1794. குறிப்பினுள் = கருத்தில்; குவலயம் = பிரபஞ்சம்; வெறுப்பிருள்=வெறுக்கத்தக்க அஞ்ஞானம்; செறிப்பு=பந்தம்; சிக்கென=உறுதியாக; அறிப்புறு=அறியத்தக்க; அமரருமாம் = தேவரைப்போல நெடுங்கால மழியாதிருத்தலுமாம்.

1795. பேர்ந்து = (அஞ்ஞானம்) ஒழிந்து; அறிவான் = அறியப்படுவான்; அறிவேதுணையாமென=(ஈசனை யறிய) ஞானமே துணையாமென்று.

1797. அன்று = கன்மமொழிந்த வப்பொழுது; வானறிந்தார் = சுவர்க்க இன்பத்தை யறிந்து துய்க்கின்ற தேவர்கள்; உயிர்க்கின்ற=உயிராயிருக்கின்ற;

1798. எங்குமான அருள் அளவு=எங்கும் வியாபித்துள்ள திருவருளினெல்லை; நுகர அமுதானதும் = அனுபவிக்க அமுதமானதும்; ஐங்கருமத்து ஆதிசூக்கம் = நித்திய, நைமித்திய, காமிய, நிஷித்த, பிராயச்சித்த மென்னும் பஞ்ச கன்மங்கட்கும் அப்பாலாயிருப்பதும்; கண்=அறிவு.

1799. அறிவி லணுக வறிவது நல்கிப்
பொறிவழி யாசை புகுத்திப் புணர்ந்திட்
டறிவது வாக்கி யடியரு ணல்குஞ்
செறிவொடு நின்றார் சிவமாயி னாரே. (அ)

1800. அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான வானந்தத் தாரமு தூட்டி
யருளாலென் னந்தி யகம்புகுந் தானே. (௯)

1801. அருளா லமுதப் பெருங்கட லாட்டி
யருளா லடிபுனைந் தார்வமுந் தந்திட்
டருளான வானந்தத் தாரமு தூட்டி
யருளாலென் னந்தி யகம்புகுந் தானே. (௧0)

1802. பாசத்தி லிட்ட தருளந்தப் பாசத்தி
னேசத்தை விட்ட தருளந்த நேசத்திற்
கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தி
னேசத்துத் தோன்றா நிலையரு ளாமே. (௧௧)

1803. பிறவா நெறிதந்த பேரரு ளாளன்
மறவா வருடந்த மாதவ னந்தி
யறவாழி யந்தண னாதிப் பராபர
னுறவாகி வந்தென் னுளம்புகுந் தானே. (௧௨)

---

1799. அறிவிலணுக=ஞானத்திற் பொருந்த; ஆசைபுகுத்தி = விடயானுபவத்தில் விருப்பமுண்டாக்கி; புணர்ந்திட்டு=தானும் அவ்வுயிரிற் கலந்து; செறிவு=நன்னெறி யொழுக்கம்.

1800. அருளில்=அருளால் ; இளைப்பாறி = (சிறட்டி முதலாகச் சனனமரணத்தாலாகும்) களைப்பாறி; மறைந்திட்டு = கேவலத்திலொடுங்கி; ஆனந்தத்து ஆரமுது=சிவானந்தபோகம்.

1801. அடிபுனைந்து = திருவடி சூட்டி; ஆர்வம் = முத்தியிலாசை; திருவருள், பந்தமோட்ச மிரண்டினு முபகரிக்குந்தன்மை இவ்விரு மந்திரங்களானும் வியந்து கூறப்பட்டது.

1802. பாசத்திலிட்டது=பாசத்தாற் பந்தித்தது; பாசத்தினேசத்தை விட்டது=பந்தமாகிய பிரபஞ்சத்திலாசை யொழிந்தது; அந்த நேசத்தில்=அப்பொழுதுண்டான சிவபக்தியில்; கூசு=அச்சம்; அந்தக்கூட்டம்=முத்தியாகிய அந்த ஐக்கியம்; தோன்றா நிலை = சிவமென்றும் ஆன்மாவென்றும் பகுத்தறியப்படா நிலை.

1803. பிறவாநெறி=பிறத்தலில்லாத முத்திநெறி; மறவாவருள் = மறதியில்லாதிருக்கும் ஞானம்.

1804. அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே
யகம்புகுந் துந்தெரி யானரு ளில்லோர்க்
ககம்புகுந் தானந்த மாக்கிச் சிவமா
யகம்புகுந் தானந்தி யானந்தி யாமே. (௧௩)

1805. ஆயு மறிவோ டறியாத மாமாயை
யாய கரணம் படைக்குமைம் பூதமு
மாய பலவிந் திரிய மவற்றுட
னாய வருளைந்து மாமருட் செய்கையே. (௧௪)

1806. அருளே சகலமு மாய பவுதிக
மருளே சராசர மாய வகில
மிருளே வெளியே யெனுமெங்கு மீச
னருளே சகளத்த னன்றியின் றாமே. (௧௫)

1807. சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான வைம்முக னீச னரனும்
பவமுறு மாலும் பதுமத்தோ னீறா
நவமவை யாகி நடிப்பவன் றானே. (௧௬)

1808. அருட்கண்ணி லாதார்க் கரும்பொரு டோன்றா
வருட்கண்ணு ளோர்க்கெதிர் தோன்று மரனே
யிருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்றா
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே. ()

---

1804. தெரியான்=அறியப்படமாட்டான்; அருள் = ஞானம், அல்லது சருணை; அகம் புகுந்து = அகத்திற் புகப்பெற்று; ஆனந்தி=ஆனந்தமடையப்பெற்றவனான ஆன்மா; ஆனந்தியாம்=இடப வாகனத்தையுடைய சிவபிரானேயாம்.

1805. அறியாத மாமாயை=மூலப்பிரகிருதி; படைக்கும்=சரீரோற்பத்திக்குபாதானமாயுள்ள; அருளைந்தும்=பஞ்ச சத்திகளும்.

1806. பவுதிகம் = பூதகாரியம்; அகிலம் = உலகம்; இருள் வெளி = இருளும் வெளியும்; சகளத்தன் = மாயையாற் றிருமேனிகொண்ட சிவபிரான்.

1807. சிவமுதல் பிரமனிறுதியான நவ வடிவங்களும் சிவமே யென்று கூறிற்று இம்மந்திரம்.

1808. அருட்கண்=அருளாகிய கண்; அரும்பொருள்=சிவம்; இருட்கண் = குருட்டுக்கண்; தெருட்கண் = ஒளியுடையதாய்க் காணுங் கண்.

1809. தானே படைத்திடுந் தானே காத்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனு மாமே. (௧அ)

1810. தலையான நான்குந் தனதரு வாகு
மலையா வருவுரு வாகுஞ் சதாசிவ
நிலையான கீழ்நான்கு நீடுரு வாகுந்
துலையா விவைமுற்று மாயல்ல தொன்றே. (௧௯)

1811. ஒன்றது வாலே யுலப்பிலி தானாகி
நின்றது தான்போ லுயிர்க்குயி ராய்நிலை
துன்றி யவையல்ல வாகுந் துணையென்ன
நின்றது தான்விளை யாட்டென்னு ணேயமே. (௨0)

1812. நேயத்தே நின்றிடு நின்மலன் சத்தியோ
டாயக் குடிலையு ளாத மடைந்திட்டுப்
போயக் கலைபல வாகப் புணர்ந்திட்டு
வீயத் தகாவிந்து வாக விளையுமே. (௨௧)

---

1809. இவை = படைத்தலாதிகளை; முத்திதந்திடும் என்றதில், அநுக்கிரகமுங் கொள்ளக்கிடந்தது; வியாபித்தலைவன்=எல்லாவற்றிலும் வியாபித்திருக்கும் பதி.

1810. தலையான நான்கும் = மேலுள்ள சிவம் சத்தி நாதம் விந்து; அருவாகும்=அருவ வடிவமுடையனவாம்; அருவுருவாகுஞ் சதாசிவம் = சதாசிவம் அருவுருவமாகும்; கீழ்நான்கும் = கீழுள்ள மஹேசுரன்; உருத்திரன், விண்டு, பிரமன்; உருவாகும் = உருவமுடையனவாம்; இவை முற்றுமாயல்லது ஒன்றே=இவ் வுருவமெல்லாந் தானே யாகியும் அவையல்லவாகியும் இருப்பது சிவமாகிய ஒரு பொருளே.

1811. ஒன்றதுவால் = ஏகமான சத்தியின் வியாபாரத்தால்; நிலைதுன்றி=நிலைத்துள்ளதாய்;என்னுள் நேயம்=என் மனதுக்கு விருப்பமுள்ள சிவம்.

1812. நேயத்தே நின்றிடும் = அன்பி னிலைபெற்று நிற்கும்; குடிலையுள்=மகா மாயையில்; வீயத்தகா=கெடுதலில்லாத; விந்து=சுத்தமாயை.

1813. விளையும் பரவிந்து தானே வியாபி
விளையுந் தனிமாயை மிக்கமா மாயை
கிளையொன்று தேவர் கிளர்மனு வேத
மளவொன்றி லாவண்ட கோடிக ளாமே. (உஉ)

## க0-வது அருளொளி.

1814. அருளிற் றலைநின் றறிந்தழிந் தாரு
ரருளிற் றலைநில்லா ரைம்பாச நீங்கா
ரருளிற் பெருமை யறியார் செறியா
ரருளிற் பிறந்திட் டறிந்தறி வாரே. (க)

1815. வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி
யாரா வமுதளித் தானந்தி பேர்நந்தி
போரா யிரமுடைப் பெம்மான்பே ரொன்றினி
லாரா வருட்கட லாடுகென் றானே. (உ)

1816. ஆடியும் பாடியு மழுது மரற்றியுந்
தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்
கூடிய வாறே குறியாக் குறிதந்தெ
னூடுநின் றானவன் றன்னரு ளுற்றே. (௩)

1817. உற்ற பிறப்பு முறுமல மானதும்
பற்றிய மாயாப் படல மெனப்பண்ணி
யத்தனை நீயென் றடிவைத்தான் பேர்நந்தி
கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே. (௪)

---

1813. தனிமாயை=அசுத்தமாயை; மாமாயை=சுத்தமாயை; மனு=மந்திரம்.

1814. அருளிற்றலை நின்று=அருளிலே சிறப்புற்றிருந்து; அழிந்தார்=இறந்து (கேவலத்தில்) இளைப்பாறுதலையடையார்; ஐம்பாசம்=ஆணவாதி பஞ்சபாசம்; செறியார்=அடையார்.

1815. வாராவழி=பிறவா நெறி; பேரொன்று=சூக்கும பஞ்சாக்கரமாகிய பிரணவம்; வாராவருட் கடல் = (பெத்தர்களுக்கு) கிட்டாத கிருபாச் சமுத்திரம்.

1816. குறியாக்குறி=புருவ நடுவி னிற்குந் திருவடி; என்னூடு=எனதுள்ளத்தில்.

1817. உறுமலம்=உயிரில் வேறறக் கலந்துள்ள மூலமலம்; மாயாப் படலம்=மாயா ஜாலக்கூட்டங்கள்; அத்தனை நீயென்று = (தத்துவங்களொடு கூடாது தனித்திருக்கும்) அவ்வளவே ஆன்மா வாகிய நீ யென்றுணர்த்தி; கற்றன=பயின்றுள்ள மாறுபாடான சமயக் கொள்கைகள்.

1818. விளக்கினை யேற்றி வெளியை யறிமின்
விளக்கி னின்முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே. (௫)

1819. ஒளியு மிருளு மொருகாலுந் தீரா
வொளியுளோர்க் கன்றோ வொழியா தொழியு
மொளியிருள் கண்டகண் போலவே றாயுள்
ளொளியிரு ணீங்க வுயிர்சிவ மாமே. (௬)

1820. புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி
நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி
யறமே புகுந்தெனக் காரமு தீந்த
திறமே தென்றெண்ணித் திகைத்திருந் தேனே. (௭)

1821. அருளது வென்ற வகலிட மொன்றும்
பொருளது வென்ற புகலிட மொன்று
மருளது நீங்க மனம்புகுந் தானைத்
தெருளுறும் பின்னைச் சிவகதி யாமே. (௮)

---

1818. விளக்கினை = அருளாகிய ஞானவொளியை; வெளி=ஆகாய சொரூபியாகிய சிவம்; வேதனை=துன்பங்கள்; விளக்கை விளக்கும்=சிவத்தை யறிவிக்கும்; விளக்குடையார்=அருளை யுடையோர்; விளக்கில் விளங்கும் விளக்கு = அருட்சத்தி யைச் சொரூபமாகக்கொண்டதி லொளிரும் சிவம்.

1819. ஒளியு மிருளும்=நினைப்பு மறப்பும்; ஒருகாலும்=ஒரேகாலத் திலும்; ஒளியுளோர்க்கு=ஞானத்தை யுடையவர்க்கு; ஒழியா தொழியும்=நழுவாது நழுவும்; கண்போல = கண்(அவற் றுக்கு வேறாக விருத்தல்) போல; உயிர்=ஆன்மா.

1820. புறமே திரிந்தேனை=பகிர்முகப்பட்டுப் பிரபஞ்சத்தி லலைந்த வென்னை; நிறம்=இதயம்; அறமே புகுந்த = துறவறத்திற் சென்ற (அகரந் தொகுத்தல் விகாரம்); திறம்=தன்மை.

1821. அகலிடமொன்று = ஒப்பற்ற வியாபக ஸ்தானம்; பொரு ளது = சிவம்; புகலிடமொன்று = ஒப்பற்ற அடைக்கல ஸ்தானம்; மருளது நீங்க=இவற்றின் சிந்தனையால் விபரீத வுணர்ச்சி நீங்க; தெருளுறும்=தெளியுங்கள்.

1822. கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை
வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொரு ணீக்குமின்
பாறணி யும்முடல் வீழவிட் டாருயிர்
தேறணி வோமிது செப்பவல் லீரே. (௯)

---

## ௧௧-வது சிவபூசை.

1823. உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபு ரவாசற்
றெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே. (௧)

1824. வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவு நாமிலங் காலையு மாலையு
மூட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே. (௨)

1825. பான்மொழி பாகன் பராபரன் றானாகு
மான்கொடிச் சதாசிவன் றன்னையா வாகித்து
மேன்முக மீசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னாமே. (௩)

---

1822. இங்கு பிறந்து இறந்தமை=(சிவபெருமான்) இவ்வுலகத்திற் பிறந்திறந்தமை; நீர் கூறுமின் = (வேதாந்திப் பிரமாணங் கொண்டு) நீங்கள் சொல்லுங்கள்; வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொருணீக்குமின்=(ஆதலால்) வேறு தெய்வம்மெய்ப் பொருளாமென்று கொள்வதை யொழியுங்கள்; பாறு = பருந்து; தேறணிவோம்=தெளிதலை யடைவோம்.

1823. பெருங்கோயில்=பெருமையுள்ள கர்ப்பக் கிருகம்; தெள்ளத் தெளிந்தார்க்கு=நன்றாய்த் தெளிந்தார்க்கு; சீவன் சிவலிங் கம் = சீவனே சிவலிங்கம்; காளாமணி = (களாமணி) அழகிய மாணிக்கம்;

1824. வேட்டவி யுண்ணும்=வேள்வியில் அவிசையருந்தும்; காட்ட வும்=தூபதீபாதிகளாகக் காட்டவும்; நாமிலம=நாம் சொந்த மாக ஒன்றையுமுடையோ மல்லம்; பாட்டவி காட்டுதும்= தோத்திரப்பாடலையே அவிசாகக் கொடுப்போம்.

1825. ஆவாகித்து = ஆன்மாவில் எழுந்தருளப்பண்ணி; மேன் முகம்=மேல்இடம்; கைக்கொண்டு=கையை யுச்சியிற் கூப் பிக்கொண்டு; சீன்முகம் = (சீலமுகம்) அழகிய முகம்; சிவனவனும்=அவன் சதாசிவனாகத் தோன்றுவன்.

1826. நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழ லீசனைக் காண வரிதாங்
கனைகழ லீசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே. (௪)

1827. மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ளீச னிலைபெறு காரண
மஞ்சமு தாமுப சாரமெட் டெட்டொடு
மஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே. (௫)

1828. புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
வண்ண லதுகண் டருள்புரி யாநிற்கு
மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே. (௬)

1829. அத்த னவதீர்த்த மாடும் பரிசுகே
ளொத்த மெஞ்ஞானத் துயர்ந்தார் பதத்தைச்
சுத்தம தாக விளக்கித் தெளிக்கவே
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. (௭)

1830. மறப்புற்று விவ்வழி மன்னிநின் றாலுஞ்
சிறப்பொடு பூநீர் திருந்தமு னேந்தி
மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ண
மறப்பெற வேண்டு மமரர் பிரானே. (௮)

---

1826. நினைவதும்=தியானிப்பதும்; ஈசனைக் காண்குறவல்லார் = சிவபெருமானை இதய ஸ்தானத்தில் அறியவல்லவர்; போற்ற வல்லார்=(பகிர்முகத்திற் பிம்பாதிகளில் ஆவாகித்து) அர்ச்சிக்கவும் வல்லவராவார்.

1827. அஞ்சமுது = பஞ்சாமிர்தம்; எட்டொடெட்டு = பதினாறு.

1828. புண்ணியஞ் செய்வார்க்கு = சிவபுண்ணியஞ் செய்ய விரும்புவோர்க்கு; நண்ணறியாமல் = சேருமுபாய முணராமல்; நழுவு கின்றார்=விலகிப்போகின்றார்கள்.

1829. அத்தனவதீர்த்தம்=சிவபிரானது அற்புத தீர்த்தம்; ஒத்த= சிவபிரானை யொத்த; தெளிக்க=சிரசின் மேலே தெளித்துக் கொள்ள; மூலன்=பிரபஞ்ச காரணனான பரசிவன்.

1830. இவ்வழி=இந்த நெறி; முன்=சந்நிதியில்; அற=முற்றும்.

1831. ஆரா தனையு மமரர் குழாங்களுந்
தீராக் கடலு நிலத்தும தாய்நிற்கும்
பேரா யிரமும் பிரான்றிரு நாமமு
மாரா வழியெங்க ளாதிப் பிரானே. (௯)

1832. ஆனந்து மாட்டி யமரர் கணந்தொழத்
தானந்த மில்லாத் தலைவ னருளது
தேனுந்து மாமல ருள்ளே தெளிந்ததோர்
பாரைங் குணமும் படைத்துநின் றானே. (௰)

1833. உழைக் கொண்ட பூநீ ரொருங்குட னேந்தி
மழைக்கொண்ட மாமுகின் மேற்சென்று வானோர்
தழைக்கொண்ட பாசந் தயங்கிநின் றேத்தப்
பிழைப்பின்றி யெம்பெரு மானரு ளாமே. (௧௧)

1834. வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு
வுள்ளக் கடற்புக்கு வார்சுமை பூக்கொண்டு
கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதா
ரள்ளற் கடலு ளழுந்துகின் றாரே. (௧௨)

1835. கழிப்படுந் தண்கடற் கௌவை யுடைத்து
வழிப்படு வார்மலர் மொட்டறி யார்கள்
பழிப்படு வார்பல ரும்பழி வீழ
வெளிப்படு வோருச்சி மேவிநின் றானே. (௧௩)

1831. தீரா=(அலையுமோசையும்) ஒழியாத; அதாய் = அதனதன் றன்மையாய்; பிரான்றிருநாமம் = தூலசூக்கும காரண பஞ்சாக்கரங்கள்; ஆராவழி=நிரம்பத் துதியாவிடத்து.

1832. அந்தமில்லாத்தலைவன்=எந்நாளும் அழிதலில்லாத இறைவன்; தேனுந்து = தேன்றுளிக்கின்ற; மாமலருள் = பெருமையுள்ள மலரினுள்; பார் ஐங்குணம் = பிருதிவியின்கணுள்ள சத்தப் பரிச இரச ரூப கந்தம்.

1833. உழை = பூமி; தழைக்கொண்ட பாசம் = பூரண பக்தி; பிழைப்பின்றி=தவறுபடாமல்.

1834. வெள்ளக்கடலுள்=பிரவாகமான கடல்போலுங் கங்கையுள்; உள்ளக் கடல்புக்கு = மனதின் கண்ணதான ஆசைக்கடலில் முழுகி; வார் = பெரிய; கள்ளக்கடல் = கடல்போலும் வஞ்சனை; அள்ளல்=எழுவகை நரகிலொன்று.

1835. கௌவை உடைத்து = ஒலியைத் தாழச்செய்து; மொட்டு= அரும்பு; அறியார்=(அதனலாம் பயனை)உணரார்; பழிவீழ= பழிக்கப்படும் அஞ்ஞான நீங்க; வெளிப்படுவோர் = துறந்தெழுவோர்; உச்சி=துவாதசாந்தம்.

1836. பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்
பயனறி வார்க்கரன் ருனே பயிலு
நயனங்கண் மூன்றுடை யானடி சேர
வயனங்க ளாலென்றும் வந்துநின் ருனே. (கச)

1837. ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்
ருர்த்தெம தீச னருட்சே வடியென்றன்
மூர்த்தியை மூவா முதலுரு வாய்நின்ற
தீர்த்தனை யாருந் துதித்துண ராரே. (கரு)

1838. தேவர்க ளோடிசை வந்துமண் ணேடுறும்
பூவொடு நீர்சுமந் தேத்திப் புனிதனை
மூவரிற் பன்மை முதல்வனுய் நின்றரு
ணீர்மையை யாவர் நினைக்கவல் லாரே. (கசு)

1839. உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்
பிழைப்பின்றி யீசன் பெருந்தவம் பேணி
யிழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னி நில்லீரே. ()

---

1836. பயனறிவு=மெய்ஞ்ஞானம்; பயிலுஃ=கூடியிருப்பன்; வயனம்=(வயணம்) ஏது.

1837. மூர்த்தி=சகளசொரூபியான சிவபிரான்; மூவா முதலுரு=பிரபஞ்சந் தோன்றுதற்குக் கெடாத காரண சொரூபம்; தீர்த்தன்=பரிசுத்தன்.

1838. ஓடிசை=பரந்த கீர்த்தி; மூவரிற் பன்மை=மூவரொடு கலத்தலாற் பன்மையாய்; முதல்வனுய் = (அம்மூவர்க்கும் வேருய தனி) முதல்வனுய்; நீர்மை=இயல்பு; வல்லாரே என்பதன் ஏகாரம் எதிர்மறைப் பொருளது, ஆதலால் நினைப்பதன் அருமை விளக்கிற்று.

1839. பிழைப்பு=தவறுதல்; ஈசன் பெருந்தவம்=சிவபிரானைக்குறித்துச் செய்யப்படும் பெரிய தபசு; இழைக்கொண்ட = கலந்திருக்கின்ற; மழைக்கொண்டல்போல=(மெய் குளிர்ந்து) மழைத்துளி சிதறுமேகம் போல (ஈண்டு மெய் சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர் சொரிதல்.

1840. வென்று விரைந்து விரைப்பணி யென்றனர்
நின்று பொருந்த விறைபணி நேர்படத்
துன்று சலமலர் தூவித் தொழுதிடு
கொண்டிடு நித்தலுங் கூறிய வாறே. (௧௮)

1841. சாத்தியும் வைத்துஞ் சயம்புவென் றேத்திய
மேத்திய நாளு மிறையை யறிகிலா
ராத்தி மலக்கிட் டகத்திழுக் கற்றக்கான்
மாத்திக்கே செல்லும் வழியது வாமே. (௧௯)

1842. ஆவிக் கமலத்தி னப்புறத் தின்புற
மேவித் திரியும் விரிசடை நந்தியைக்
கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்
தாவிக்கு மந்திரந் தாமறி யாரே. (௨0)

1843. சாணுகத் துள்ளே யழுந்திய மாணிக்கங்
காணு மளவுங் கருத்தறி வாரில்லை
பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந் தானே. (௨௧)

1844. பெருந்தன்மை நந்தி பிணங்கிரு ணேமி
யிருந்தன்மை யாலுமென் னெஞ்சிடங் கொள்ள
வருந்தன்மை யாளனை வானவர் தேவர்
தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே. (௨௨)

---

1840. வென்று = (புலன்களை) ஜயித்து; விரைப்பணி = வாசனையுள்ள தூபாதிகளாற் செய்யப்படும் பூசை; துன்று=பொருந்திய; கூறிய=(வேதாகமங்கள்) கூறின.

1841. சாத்தியும்=ஆடையாபரண கந்தபுஷ்பாதிகளா லலங்கரித்தும்; வைத்தும் = (விக்கிரக முதலிய சொரூபங்களாகச் செய்து) வைத்தும்; ஆத்தி=(ஆர்த்தி) ஆசை; மலக்கிட்டு=ஒழித்து; அகத்து இழுக்கு=மனக் களங்கம்; திக்கு=முத்தியுலகம்.

1842. ஆவிக்கமலம்=அநாகதமலர்; அப்புறத்து=மஹா ஆகாயத்தானத்தில்; சிவத்திடை=சிவமெனக் கருதப்பட்ட பிம்பத்தில்; தாவிக்கும்=நிறுத்துதற்குரிய; மந்திரம்=இரகசியம் அல்லது மந்திரம்.

1843. சாணுகம்=(விசுத்தி முதலாகவுள்ள) சாணளவான ஆகாயத்தானத்தில்; பெருக்கி = (அன்பினை) விருத்தியாக்கி; மாணிக்கமாலை=ஈசன்.

1844. பிணங்கிருள்=மாறுபடும் அஞ்ஞானவிருள்; நேமி=சக்கராயுதம்; தாங்கிநின்றார்=இதயத்தி லிருத்திக்கொண்டுள்ளார்.

1845. சமைய மலசுத்தி தன்செய லற்றிடு
மமையும் விசேடமு மாமந் திரசுத்தி
சமைய நிர்வாணங் கலாசுத்தி யாகு
மமைமன்னு ஞானமா ஞர்க்கபி டேகமே. (௨௩)

1846. ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது
வூழி னுயிரை யுணரவுந் தாஞெட்டா
வாழி யமரு மரியய னென்றுளோ
ரூழி கடந்துமொ ருச்சியு ளானே. (௨௪)

---

௪௨-வது குருபூசை.

1847. ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையு
மாகின்ற வாதார மாறு றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் னியானே. ()

1848. கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுற மாமல ரிட்டு வணங்கினு
மூனினை நீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்குழல் சேரவொண் ணுதே. (௨)

---

1845. சமையமலசுத்தி = சமயதீட்சையால் மலசுத்தியுண்டாம்; விசேட நிர்வாண தீட்சைகளால் அத்துவா சுத்தி யுண்டாம் என்பது கொள்க.

1846. ஊழில்=முறைமைப்படி; உணரவுந்தாஞெட்டா=(வினைகள்) கருதவும் விடா; ஒருச்சி=ஆராய்தற்குரிய தூரம்.

1847. போகின்றுபதேசம் = முத்தி அடைதற் குரிய வுபதேசம்; ஆதாரம்=பூசித்தற்குரிய ஆறு தாரங்கள்; ஆறு றதனின்மேற் போகின்ற=முப்பத்தாறு தத்துவங்களையுங் கண்டு கழித்து, அவற்றின்மேற் செல்லுகின்ற; பொற்பையும் = அழகிய மார்க்கத்தையும்.

1848. கானுறு = காட்டிலுள்ள; கோடி=அளவில்லாத அல்லது திகாந்தம்வரை; வானுற = சிறப்பினையடைய; ஊனினை நீக்கி=தேகத்தில் தாக்கற்றிருந்து.

1849. மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பர
னாவயின் ஞான நெறிநிற்ற லர்ச்சனை
யோவற வுட்பூ சனைசெய்யி லுத்தமஞ்
சேவடி சேரல் செயலற றானே. (௩)

1850. உச்சியுங் காலையு மாலையு மீசனை
நச்சுமின் னச்சி நமவென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினு
நச்சுமின் பேர்நந்தி நாயக னாமே. (௪)

1851. புண்ணிய மண்டலம் பூசைநா றுருமாம்
பண்ணிய மேணியும் பத்துநூ றுருமா
மெண்ணிலிக் கைய மிடிற்கோடி யாகுமாற்
பண்ணிடில் ஞானியூண் பார்க்கில் விசேடமே. (௫)

1852. இந்துவும் பானுவு மிலங்குந் தலத்திடை
வந்தித்த தெல்லா மசுரர்க்கு வாரியா
மிந்துவும் பானுவு மிலங்காத் தலத்திடை
வந்தித்த னந்திக்கு மாபூசை யாமே. (௬)

1853. இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவு நாதமு மாகிமீ தானத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே. (௭)

---

1849. மிக்கிடின் = விருத்தியடைந்தால்; ஆவயின்=அவ்விடத்தில்; ஓவற = ஒழியாமல்; செயலறல் = சரியையாதிக ளொழிந்திருத்தல்.

1850 உச்சி=நடுப்பகல்; நச்சுமின்=விரும்பிப் பூசியுங்கள்; விச்சுமின்=புகழுங்கள்; சுடர்மூன்றினும்=சந்திர சூரியாக்கினி யென்னு மும்மண்டலங்களிலும்.

1851. புண்ணியமண்டலம்=புண்ணியக்ஷேத்திரம்; பண்ணியமேனி= தவசிகள்; எண்ணிலி=ஆசையற்ற ஞானி; பண்ணிடின்ஞானி யூண்=ஞானிக்குப் போஜனமிட்டால்.

1852. இந்துவும் பானுவு மிலங்குந்தலம் = பூமி; வாரியாம் = பயன்படுவதாம்; இந்துவும் பானுவுமிலங்காத் தலத்திடை= கேவல சகல மிறந்த சமாதியில்; வந்தித்தல்=அபேதமாதல்.

1853. மீதானம்=மேலிடம்; சாக்கிராதீதம் = மேலாலவஸ்தை யில் துரியாதீத ஸ்தானம்.

1854. மனபவ னங்களை மூலத்தான் மாற்றி
யனித வுடற்பூத மாக்கி யகற்றிப்
புனித னருடனிற் புக்கிருந் தின்பத்
தனியுறு பூசை சதாசிவற் காமே. (அ)

1855. பகலு மிரவும் பயில்கின்ற பூசை
யியல்புடை யீசர்க் கிணைமல ராகப்
பகலு மிரவும் பயிலாத பூசை
சகலமுந் தான்கொள்வன் றாழ்சடை யோனே. (௯)

1856. இராப்பக லற்ற விடத்தே யிருந்து
பராக்கற வானந்தத் தேறல் பருகி
யிராப்பக லற்ற விறையடி யின்பத்
திராப்பகன் மாயை யிரண்டடித் தேனே. (௧௦)

---

### ௯-வது மகேசுவர பூசை.

1857. படமாடக் கோயிற் பகவற்கொன் றீயி
னடமாடக் கோயி னம்பர்க்கங் காகா
நடமாடக் கோயி னம்பர்க்கொன் றீயிற்
படமாடக் கோயிற் பகவற்க தாமே. (௧)

---

1854. மனபவனங்கள்=மனமும் பிராணவாயுவும்; மாற்றி=தடுத்து; அனிதம்=அநித்தியம்; பூதமாக்கி=பூதங்களை மஹாபூதங்களோடு சேர்த்து; அருடனிற் புக்கிருந்து = ஞானத்திலொடுங்கியிருந்து.

1855. இணைமலராக=இரண்டு மலர்களைச் சாத்துதன் மாத்திரையேயாக; பகலு மிரவும் பயிலாத பூசை=அந்தர்முகப்பூசை.

1856. பராக்கு=பராமுகம்; இராப்பகலற்ற=மறப்பு நினைப்பொழிந்த; மாயையிரண்டடித்தேன் = சுத்தாசுத்த மாயைகளிரண்டையு மொழித்தேன்.

1857. படம் = துகிற்கொடி; நடமாடக் கோயினம்பர்க் கங்காகா= நடக்கின்ற சரீரமாகிய கோயிலி லெழுந்தருளிய மகேசுவரர்க்குச் செய்யப்படும் பூசை யாவதில்லை; மகேசுவரருக்குச் செய்யயப்படும் பூசை கோயிலி லெழுந்தருளிய சிவபிரானுக்குமாமென்பது கருத்து.



௧. பரமற்கொன்றீயல் எனவும், நடமாடுங்கோயல் எனவும், நடமாடுங்கோயில் எனவும், படமாடுங்கோயிற் பரமற்கங் காதே எனவும் முன் உள்ள பாடம் நன்று.

1858. நண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமு முண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி யெடுத்துரைத் தானே. (உ)

1859. மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை
யாத்தனுக் கீந்த வரும்பொரு ளானது
மூர்த்திகண் மூவர்க்கு மூவேழ் குரவர்க்குந்
தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரே. (௩)

1860. அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை யென்பது நிச்சயந் தானே. (௪)

1861. ஆறிடும் வேள்வி யருமறை நூலவர்
கூறிடு மந்தணர் கோடிபே ருண்பதி
னீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை
பேறெனி லோர்பிடி பேறது வாகுமே. (௫)

1858. தண்டறு=நீங்குதலில்லாத; கொண்டது=ஏற்றுக்கொண்ட பொருள்; எண்டிசை நந்தி = எட்டுத்திக்குகளிலு நிறைந்துள்ள சிவபெருமான்.

1859. ஆத்தனுக்கு = மகேசுரனுக்கு; மூவர்க்கும்=பிரம விட்டுணு உருத்திரர்களுக்கும்; மூவேழ் குரவர்க்கும் = கடந்த இருபத்தொரு தலை முறையிலுள்ள மூதாதையர்க்கும் (பிதுர்க்களுக்கும்); தீர்த்தமதாம் = பரிசுத்தமான தாம்.

1860. அகரம்(அகாரம்)=பிராமணர் வசிக்குமிடம்; சிகரம்=கோபுரத்தோடுங் கூடிய கோயில்; பகலூண்பலத்துக்கு = பகலிற் புசித்ததனு லுண்டாகும் பயனுக்கு.

1861. ஆறிடும் வேள்வி=துன்பமொழிதற்குரிய யாகம்; கூறிடும்= புகழப்படும்; நினைவின்பயன்=அன்னமிட வேண்டுமென்னு மெண்ணத்திலுண்டாகும் பயன்; பேறெனில்=பயனுடையது யாதெனில்.

1862. ஏறுடை யாயிறை வாவெம்பி ரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்க
ளாறணி செஞ்சடை யண்ண லிவரென்று
வேறணி வார்க்கு வினையில்லை தானே. (சு)

1863. சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட
பேர்நந்தி யென்னும் பிறங்கு சடையனை
நாளெனுந்து நொந்து வருமள வுஞ்சொல்லப்
பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே. (எ)

1864. அழிதக வில்லா வரனடி யாரைத்
தொழுதகை ஞாலத்துத் தூங்கிரு ணீங்கும்
பழுது படாவண்ணம் பண்பனை நாடித்
தொழுதெழ வையகத் தோரின்ப மாமே. (அ)

1865. பகவற் கேதாகிலும் பண்பில ராகிப்
புகுமத்த ராய்நின்று பூசனை செய்யு
முகமத்தோ டொத்துநின் றாழிதோ றாழி
யகமத்த ராகிநின் றுய்ந்தொழிந் தாரே. (கூ)

1866. வித்தக மாகிய வேடத்த ருண்டவூ
ணத்த னயன்மா லருந்திய வண்ணமாஞ்
சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. (க0)

---

1862. நிகழ்தேவர்கள் = பிரத்தியட்சமாய் விளங்குந் தேவர்கள்; வேறணிவார்க்கு=பிரபஞ்சங் கடந்தவராகக் கருதிப் பூசிப்பவர்க்கு.

1863. திரு முகமாய்விட்ட=அடியார் வடிவமாகத் தோன்றிய; வருமளவும்=வெளிப்படும் வரைக்கும்; சொல்ல=துதிக்க.

1864. அழிதகவில்லா=அழியுந்தன்மை யில்லாத; தொழு தகை= வணங்குந் தகைமைவாய்ந்த; தூங்கிருள்=பொருந்திய பாசமாகிய இருள்; பண்பனை=மகேசுவரவடிவான சிவபெருமானை.

1865. பகவற்கு = மகேசுரற்கு; மத்தராய் = மயக்கமுடையாராய்; முகமத்தோடு = உபசாரங்களோடு; அகமத்தராகி = மதி மயங்கினவராய்.

1866. வித்தகமாகிய=ஞானசாதனமாகிய; வண்ணமாம்=தன்மையாம்; சேடம் = உண்டதன் மிகுதி.

1867. தாழ்விலர் பின்னு முயல்வ ருருந்தவ
மாழ்வினை யாழ வவர்க்கே யறஞ்செய்யு
மாழ்வினை நீக்கி யருவினை தன்னொடும்
போழ்வினை தீர்க்குமப் பொன்னுல காமே. (கக)

கச-வது அடியார் பெருமை.

1868. திகைக்குரி யானொரு தேவனை நாடும்
வகைக்குரி யானொரு வாதி யிருக்கிற்
பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்யு
மகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே. (க)

1869. அவ்வுல கத்தே பிறந்தவ் வுடலொடு
மவ்வுல கத்தே யருந்தவ நாடுவ
ரவ்வுல கத்தே யரனடி கூடுவ
ரவ்வுல கத்தே யருள்பெறு வாரே. (உ)

1870. கொண்ட குறியுங் குலவரை யுச்சியு
மண்டரு மண்டத் தமரரு மாதியு
மெண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்தினு
ளுண்டெனி னுமினி யுய்ந்தொழிந் தோமே. (ங)

---

1867. தாழ்விலர் = தாழ்தியாதவர்; பின்னும் = மென் மேலும்; ஆழ்வினையாழ=ஆகாமிய கன்ம மடங்கிப்போக; ஆழ்வினை= பிராரப்த கன்மம்; அருவினை = சஞ்சித கன்மம்; போழ்வினை=துன்பந் தரும்வினை; பொன்னுலகாம்=முத்தியுலக முண்டாகும்.

1868. திகைக்கு=திசைகளுக்கு; வகைக்கு=மார்க்கத்துக்கு; வாதி= மதத்தை நிலைநிறுத்தும் வல்லமையுடையவன்; பார்=(அவ னிருக்கும்) நாட்டில்; அகக் குறை=தானிய விலைக்குறைவு (பஞ்சம்).

1869. அவ்வுலகத்து = அச் சிவலோகத்தில்; அவ்வுடல் = அந்த உலகத்துக்குரிய வுடல்.

1870. கொண்டகுறி=(சீவான்மாக்கள்) அடைந்த பலவகையான வடிவங்கள்; அண்டரும்(அண்டுதல் அரும்)=அடைதற்கரிய; என் கைத்தலத்தினுள்=என் கை வசத்தில்.

1871. அண்டங்க ளேழு மகண்டமு மாவியுங்
கொண்ட சராசர முற்றுங் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப் பாதியுங்
கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே. (௪)

1872. பெண்ணல்ல வாணல்ல பேடல்ல மூடத்து
ளுண்ணின்ற சோதி யொருவர்க் கறியொணுக்
கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக் கேட்டிடு
மண்ணல் பெருமையை யாய்ந்தது மூப்பே. (௫)

1873. இயங்கு முலகினி லீச னடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்
புயங்களு மெண்டிசை போதுபா தாள
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே. (௬)

1874. அகம்படி கின்றநம் மையனை யோரு
மகம்படி கண்டவ ரல்லலிற் சேரா
ரகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்ச
மகம்படி கண்டா ரழிக்கலு மெட்டே. (௭)

1875. கழிவு முதலுங் காதற் றுணையு
மழிவு மதாய்நின்ற வாதிப் பிரானைப்
பழியும் புகழும் படுபொருண் முற்று
மொழியுமென் னுவி யுழவுகொண் டானே. (௮)

---

1871. அகண்டம்=ஆகாயம்; என் கண்ணின்றி=என் னறிவைத்தவிர.

1872. மூடத்துள் = மயக்கத்துக்கிடமாயதனுள்; மூப்பு=(சிவகதியின்) முதிர்ச்சி.

1873. மயங்காவழி=ஞானவழி; போது = (திருவடி)தாமரை மலர்; பகிரண்டம்=புறவண்டம்.

1874. படிகின்ற=தங்கியிருக்கின்ற; அகம்படி=மனவடக்கம்;அகம்படி கண்டார் = அகங்காரம் அடங்கியுள்ளவர்; எட்டு=புரியட்டகம்.

1875. கழிவும்=பெருமையும்; முதலும்=தலைமையும்; உழவு=உழுதற்குரிய பயிரிடு நிலம்;

1876. என்றுயோ டென்னப்ப னேழேழ் பிறவியு
மன்றே சிவனுக் கெழுதிய வாவண
மொன்று யுலகம் படைத்தா னெழுதினு
னின்றுன் முகில்வண்ண னேரெழுத் தாயே. (கூ)

1877. துணிந்தா ரகம்படி துன்னி யுறையும்
பணிந்தா ரகம்படி பாற்பட் டொழுகு
மணிந்தா ரகம்படி யாதிப் பிரானைக்
கணிந்தா ரொருவர்க்குக் கைவிட லாமே. (க0)

1878. தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி
மிலைமிசை வைத்தனன் மெய்ப்பணி செய்யப்
புலைமிசை நீக்கிய பொன்னுல காளும்
பலமிசை செய்யும் படர்சடை யோனே. (கக)

1879. அறியாப் பருவத் தரனடி யாரைக்
குறியா லறிந்தின்பங் கொண்ட தடிமை
குறியார் சடைமுடி கட்டி நடப்பார்
மறியார் புனன்மூழ்க மாதவ மாமே. (கஉ)

1880. அவன்பா லணுகியே யன்புசெய் வார்கள்
சிவன்பா லணுகுதல் செய்யவும் வல்ல
னவன்பா லணுகியே நாடு மடியா
ரிவன்பாற் பெருமை யிலயம தாமே. (கங)

---

1876. ஏழேழ் பிறவி=எழுவகைத்தாய் வரும் பல பிறவி; அன்று= அநாதியில் ; ஆவணம்=முறிச்சீட்டு; நேரெழுத்து=(சாட்சியாக) ஒத்து இட்ட கையெழுத்து.

1877. பாற்பட்டொழுகும்=வசப்பட்டு நடக்கின்ற; அணிந்தார் = துதித்தவர்; கணிந்தார் (கணித்தார்)=மதித்துள்ளவர்.

1878. தலைமிசை=தலையால் ; மிலைமிசை (மிசைமிலை) = தலையிலணியும்படி; புலை=குற்றம்; பலமிசை செய்யும்=பயனைப் பொருந்துமாறு செய்கின்ற.

1879. அறியாப்பருவம் = இளம்பருவம்; குறியால்=சிவசின்னங்களால்; மறியார் புனன்=அலைகளைச் சுருட்டும் நீர்.

1880. அவன்=சிவ தொண்டன்; இலயமதாம்=அடங்கியிருக்கும்.

1881. முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்க
ளெண்ணிறந் தன்பால் வருவ ரிருநிலந்
தெண்ணிரு நாலு திசையந் தரமொக்கப்
பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே. (கச)

1882. சிவயோகி ஞானி செறிந்தவத் தேச
மவயோக மின்றி யறிவோருண் டாகு
நவயோகங் கைகூடு நல்லியல் காணும
பவயோக மின்றிப் பரலோக மாமே. (கரு)

1883. மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
மேலுணர் வான்மிகு ஞாலங் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கண்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே. (கசு)

கரு-வது போசன விதி.

1884. எட்டுத் திசையு மிறைவ னடியவர்க்
கட்ட வடிசி லமுதென் றெதிர்கொள்வ
ரொட்டி யொருநில மாள்பவ ரங்கிலம்
விட்டுக் கிடக்கில் விருப்பறி யாரே. (க)

1885. அச்சிவ னுண்ணின்ற வருளை யறிந்தவ
ருச்சியம் போதாக வுள்ளமர் கோவிற்குப்
பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்
திச்சைகெட் டேகாந்தத் தேறி யிருப்பரே. (உ)

---

1881. முன்னிருந்தார் = முதன்மையா யுள்ளவர்; முழுதெண் = யாவையு மறிகின்ற; தெண் = தெளிவு; பதஞ் செய்யும் = பாவனம் பண்ணுவன்.

1882. அவயோகம் = கெடுதி சம்பந்தம். நவயோகம் = புதுமையான அதிர்ஷ்ட சம்பந்தம்; பவயோகம் = பாவ சம்பந்தம்.

1883. மேலுணர்வால் = மேலாகிய அறிவினல்; மேலுணர்வார் = மேன்மையாகக் கருதுவார்கள்.

1884. அடியவர்க்கட்ட = சிவனடியவர்க்காகச் சமைத்த; விட்டுக் கிடக்கில் = நீங்கியிருந்தால்.

1885. அருளை யறிந்தவர் = கருணையையுணர்ந்த அடியவர்; கோவிற்கு = ஆலயமாகக் கருதப்படும் சரீரத்துக்கு; பேதமற நினைந்து = அபேதத்தியானஞ் செய்து; இச்சை கெட்டு = விருப்பமின்றி.

## சசு-வது பிட்சா விதி.

1886. விச்சுக் கலமுண்டு வேலிச்செய் யொன்றுண்டு
உச்சிக்கு முன்னே யுழவு சமைந்தது
எச்சங்கெட் டச்செய் யறுத்துண்ண மாட்டாதா
ரிச்சைக்குப் பிச்சை யிரக்கின்ற வாறே. (க)

1887. பிச்சைய தேற்றான் பிரமன் றலைதன்னில்
பிச்சைய தேற்றான் பிரியா வறஞ்செய்யப்
பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப்
பிச்சைய தேற்றான் பிரமன்பர மாகவே. (உ)

1888. பரந்துல கேழும் படைத்த பிரானை
யிரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கு
நிரந்தர மாக நினையு மடியா
ரிரந்துண்டு தன்கழ லெட்டச்செய் மாறே. (ங)

1889. வரவிருந் தான்வழி நின்றிடு மீசன்
றரவிருந் தான்றன்னை நல்லவர்க் கின்பம்
பொரவிருந் தான்புக லேபுக லாக
வரவிருந் தாலறி யானென்ப தாமே. (ச)

1890. அங்கார் பசியு மாவாவும் வெகுளியுந்
தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்
பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்துந்
தங்கார் சிவனைத் தலைப்படு வாரே. (ரு)

---

1886. விச்சு = வித்து (பிராணாயாமம்); கலம் = பாத்திரம் (பிராணனியங்குதற்குரிய மூக்கு); வேலிச்செய் = வேலியையுடைய விளைநிலம் (ஆக்கினை ஸ்தானம்); உச்சிக்கு முன் = தலையுச்சியின் கீழ்; உழவு சமைந்தது = யோகாப்பியாசத்தால் அமிர்தமுண்டாயது; இச்சைக்கு=(உடலை வளர்க்குட்)விருப்பத்தால்.

1887. பிரியாவறம் = கெடாத தருமம்; பிரமன் சிரங்காட்டி = பிரம கபாலத்தைக் காண்பித்து; பரமாக=மேன்மையாக.

1888. எற்றுக்கிரக்கும் = எதற்காகப் பலி யெடுக்கின்றானென்னில்; நிரந்தரமாக=இடை விடாமல்.

1889. வர=(அடியார்கள் அந்நெறியில்) வருதற் பொருட்டு; வழி= துறவறநெறி; பொர=உண்டாதற் பொருட்டு.

1890. பொங்கார்=பெருமைநிறைந்த; புண்ணியலோகம் = போக பூமி.

1891. மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங்
கையக நீண்டார் கடைத்தலைக் கேசெல்வ
ரையம் புகாம லிருந்த தவசியார்
வையக மெல்லாம் வரவிருந் தாரே. (கூ)

---

கஎ-வது முத்திரை பேதம்.

1892. நாலேழு மாறவே நண்ணிய முத்திரை
பாலான மோன மொழியிற் பதிவித்து
மேலான நந்தி திருவடி மீதுய்யக்
கோலா கலங்கேட்டுக் கூடுநன் முத்தியே. (க)

1893. துரியங்கண் மூன்றுஞ் சொருகிட னாகி
யரிய வுரைத்தார மங்கே யடக்கி
மருவிய சாம்பவி கேசரி யுண்மை
பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே. (உ)

1894. சாம்பவி நந்தி தன்னருட் பார்வையா
மாம்பவ மில்லா வருட்பாணி முத்திரை
யோம்பயி லோங்கிய வுண்மைய கேசரி
நாம்பயி னாதன்மெய்ஞ் ஞானமுத் திரையே. (ந)

---

1891. கையகநீண்டார் = கையினைநீட்டித் தருபவர்; இல்லந் தோறுஞ் சென்று ஐயமேற்றுண்பவரும், அவ்வாறின்றித் தாமிருக்கு மிடந்தேடி வலியவருவதை யேற்றுண்பவரு மென, இருதிறத்தா யுள்ளார் சிவஞானியரென்பது விளக்கிற்று இம்மந்திரம்.

1892. நாலேழும்=கரணமொன்றும்கன்மஞானேந்திரியங்கள் பத்து மாகிய தத்துவங்கள் பதினொன்றும்; ஆற=அடங்க; கோலாகலம்=நாதத்தினாவாரம்.

1893. துரியங்கண்மூன்று=ஜீவதுரியம், பரதுரியம், சிவதுரியம்; சொருகிடம் = அடங்குமிடம்; தாரம்=நாக்கு; பிறழ் = விளங்கும்.

1894. ஆம்பவம்=இனிமேலுண்டாம் பிறப்பு; பாணிமுத்திரை= சின்முத்திரை; நாம் (நாமம்) பயில்=பெருமை பொருந்திய.

1895. தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடு
ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலா
லேனைச் சிவமாஞ் சொரூப மறைந்திட்ட
மோனத்து முத்திரை முக்தாந்த முத்தியே. (ச)

1896. வாக்கு மனமு மிரண்டு மவுனமாம்
வாக்கு மவுனத்து வந்தாலு மூங்கையாம்
வாக்கு மனமு மவுனமாஞ் சுத்தரே
யாக்குமச் சுத்தத்தை யாரறி வார்களே. (ரு)

1897. யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியா
மேகத்த ஞானத்து முத்திரை யெண்ணுங்கா
லாகத் தகுவேத கேசரி சாம்பவி
யோகத்துக் கேசரி யோகமுத் திரையே. (சு)

1898. யோகியெண் சித்தி யருளொலி வாதனை
போகிதன் புத்தி புருடார்த்த நன்னெறி
யாகுநன் சத்திய மாதார சோதனை
யேகமுங் கண்டொன்றி லெய்திநின் றானே. (எ)

1899. துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமா
மவாவறு மீரை வகையங்க மாறுந்
தவாவறு வேதாந்த சித்தாந்தத் தன்மை
நவாவக மோடுன்ன னற்சுத்த சைவமே. (அ)

---

1895. தானம் = கண்ட ஸ்தானம்; ஞானத்தினுள் = ஞானத்தினல்; மோனத்துமுத்திரை=மௌனமுத்திரை; முத்தாந்த முத்தி=முடிந்தமுத்தி.

1896. வாக்குமனமு மிரண்டு மவுனமாம் = வாக்கு மௌனம், மனமௌனமென, இருவகையாகு மௌனமாம்; அச்சுத்தத்தை=அந்தச் சுத்தாவத்தையை.

1897. யோகத்தின் முத்திரை=யோகமுத்திரை; ஏகத்த=ஒப்பற்ற; ஆகத்தகுவேத=சித்தியடைவதற் குரியதாய் வேதங்கூறிய.

1898. ஒலிவாதனை=காற்றினலாம் வேறுபாடு; ஏகமும்=முற்றும்; ஒன்றில்=சிவத்தில்.

1899. துவாதசமார்க்கம்=யோகநெறி; சோடசமார்க்கம்=பதினறுவகைச்சைவம்; ஈரைவகையங்கம்=தசாங்கம்; ஆறும்=காமாதி ஆறும்; நவா=அவாவற்ற.

1900. மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை
ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை
தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை
கானிக்கு முத்திரை கண்ட சமயமே. (௬)

1901 தூநெறி கண்ட சுவடு நடுவெழும்
பூநெறி கண்டது பொன்னக மாய்நிற்கு
மேனெறி கண்டது வெண்மதி மேதினி
நீனெறி கண்டுளெ நின்மல னாமே. (௭)

---

௪௮-வது பூரணக்குகைநெறிச் சமாதி.

1902. வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி
யுளரொளி பானுவி னுள்ளே யொடுங்கித்
தளர்விற் பிதிர்பதந் தங்கிச் சசியு
ளுளதுறும் யோகி யுடல்விட்டாற் றனே. (௧)

1903. தானிவை யொக்குஞ் சமாதிகை கூடாது
போன வியோகி புகலிடம் போந்துபின்
னானவை தீர நிரந்தர மாயோக
மானவை சேர்வா ரருளின்சார் வாகியே. (௨)

---

1900. முத்தர்க்கு = ஜீவன்முத்தர்க்கு; நாதர்க்கு=ஆசாரியர்க்கு; தேனிக்கு முத்திரை=இனியதேனு முத்திரை; கானிக்கும்= வாயு வடங்கும்.

1901. சுவடு=பிரமரந்திரமார்க்கம்; பூநெறி=உச்சித்தாமரைக்குரிய நெறி; மதிமேதினி = சந்திரமண்டலம்; நீனெறி=பிராண வாயு மேற்செல்லும் நெறி.

1902. உளரொளி=இயங்குகின்ற ஒளி; பானு=சூரியன்; பிதிர்பதம்= பிதிர்லோகம்; சசியுள்=சுக்கிலபட்சத்தில்.

1903. கைகூடாது=சித்திபெறுமல்; புகலிடம்போந்து = தபோ பலனுக்கீடாக அடைதற்குரியபதவியையடைந்து; பின்னால்= உலகிற் பிறந்தபின்; நிரந்தரம்=இடைவிடாது; அருளின் சார்வாகி=ஈசனருளுக்குரியராய்.

1904. தானில் வகையே புலியோர் நெறிதங்கி
யான சிவயோகத் தாமாறு மவ்விந்து
தானதி லந்தச் சிவயோகி யாருமுன்
னூனத்தோர் சித்திவந் தோர்காய மாமே. (ங)

1905. சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டாற்
றவலோகஞ் சேர்ந்துபின் றூன்வந்து கூடிச்
சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்
புவலோகம் போற்றுநர் புண்ணியத் தோரே. (ச)

1906. ஊனமின் ஞானிநல்லி யோகி யுடல்விட்டாற்
றூனற மோனச் சமாதியுட் டங்கியே
தானவ னாகும் பரகாயஞ் சாராதே
யூனமின் முத்தராய் மீளா ருணர்வுற்றே. (ரு)

1907. செத்தார் பெறும்பய னாவது வேதெனிற்
செத்துநீர் சேர்வது சிதநினைக் கூடிடிற்
செத்தா ரிருந்தார் செகத்திற் றிரிமலஞ்
செத்தார் சிவமாகி யேசித்தர் தாமே. (சு)

1908. உன்னக் கருவிட் டுரவோ னரனருள்
பன்னப் பரனே யருட்குலம் பாலிப்ப
னென்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடுஞானி
யுன்னிச்சைக் கீச னுருச்செய்யுந் தானே. (எ)

---

1904. புலியோர் நெறி = சர்ம மார்க்கம்; விந்துதானதில் = சுத்த மாயையில்; ஊனத்தோர் சித்திவந்து=அச்சரீரத்திலேயே யொப்பற்ற சித்தியடையப்பெற்று; ஓர் காயமாகும்=வேறு சரீரமாக மாறும்.

1905. சிவயோகிஞானி=சிவயோகியாகியஞானி ; தவலோகம்=மே லேழுலகங்களில் ஆறுவது உலகம்; புவலோகம்=மத்திய லோகம்.

1906. ஞானிநல்லியோகி = ஞானியாக நல்லயோகி; பரகாயம் = வேறு சரீரம்; முத்தராய்=ஜனனமரணங்களினின்றும் விடு பட்டவராய்; உணர்வுற்று=தத்துவ ஞானமடைந்து.

1907. செத்தார் = பிரபஞ்சமறந்து சமாதியிலேயே யிருப்பவர்; செத்து நீர் சேர்வது = அவிச்சை கெட்டுச் சிவத்தை யடை தல்; திரிமலஞ் செத்தார்=மும்மலமற்றவர்; சித்தர்தாம்= சித்தராவர்.

1908. கருவிட்டு = பிறப்பற்று; உரவோனரன் = சர்வசக்தியுள்ள ஈசன்; புதல்வர்க்கும்=சீடர்களுக்கும் ; உன்னிச்சைக்கு= கருதும் விருப்பத்துக்கு.

1909. எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்
தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பர
மங்காங் கெனநின் றகிலமுண் வான்றோய்த
லிங்கே யிறந்தெங்கு மாய்நிற்கு மீசனே. (அ)

௪௬-வது சமாதிக் கிரியை.

1910. அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் வெப்புந் தீயினி
னொந்தது நாய்நரி நரிநரி றுண்செரு
வந்துநாய் நரிக்குண வாகும்வை யகமே. (௧)

1911. எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடி
லண்ணறங் கோயி லழலிட்ட தாங்கொக்கு
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமா
மெண்ணாரு மன்ன ரிழப்பா ரரசே. (௨)

1912. புண்ணிய மாமவர் தம்மமைப் புதைப்பது
நண்ணி யனல்கோக்கி னாட்டி லழிவாகு
மண்ணி லழியி னலங்கார பங்கமா
மண்ணுல கெல்லா மயங்குந்தீ மண்டியே. (௩)

1913. அந்தமின் ஞானி யருளை யடைந்தக்கா
லந்த வுடற்றன் குகைசெய் திருத்திடிற்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரு
மந்தமி லின்ப வருள்பெறு வாரே. (௪)

---

1909. அருளாம்=ஞானம்பொருந்திய; அகிலமுண்வான்றோய்தல்= உலகங்களை வியாபித்திருக்கும் பரமாகாயத்தில் தங்குதல்; இங்கே=இவ்வுலகத்தில்.

1910. அந்தமில்=அழியாத; நாடெலாம்=அந்தத்தேசமுற்றும்;நொந் தது=வருத்தப்படுவதாகும்; செருவந்து=சண்டையுண்டாய்; வையகம்=அந்தநாடு.

1911. எரிதாவிடில்=எரிக்கப்பட்டால்.

1912. அனல்கோக்கின் = தீயிட்டால்; அலங்கார பங்கமாம் = நாடு விகாரப்படும்; தீ மண்டி=நெருப்புப்பற்றி.

1913. அருளையடைந்தக்கால் = சிவத்தை யடைந்தால்; (தேக வியோக மெய்தின்); குகை=நிலவறை.

1914. நவமிகு சாணாலே நல்லாழஞ் செய்து
குவைமிகு சூழவைஞ் சாணாகக் கோட்டித்
தவமிகு குகைமுக் கோணமுச் சாணுக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே. (ரு)

1915. தன்மனை சாலே குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
யுன்னருங் கான முயர்ந்த மலைச்சார
லிந்நிலந் தான்குகைக் கெய்து மிடங்களே. (சு)

1916. நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழப்
பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செயு நேர்மைய தாமே. (எ)

1917. பஞ்ச லோகங்க ணவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலா சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேலே
பொன்செய்நற் சுண்ணம் பொதியலு மாமே. (அ)

1918. நள்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புழுகுபன் னீர்சேர்த்து
வொள்ளிய தூப முவந்திடு வீரே. (கூ)

---

1914. நவமிகு சாணாலே = ஒன்பது சாணளவாக; ஐஞ்சாணாகக் கோட்டி = ஐந்துசாணகலமாகச் செய்து; முக்கோணமுச் சாணுக்கி = மூன்று சாணகலத்தில் முக்கோணவடிவாகச் செய்து; பத்மாசனம்=பதுமாசனமாகும்.

1915. தன்மனை=தன்வீட்டின்பக்கத்தில்;ஆற்றிடை=நதியினிடையிலுள்ள திட்டில்; நற்பூமி=சௌக்கியமான இடம்.

1916. பஞ்சாங்கபாதமாய் = பஞ்சாங்கமிட்டு வணங்கத் தக்க வளவுள்ளதாய்; நவபாதநேர்விழ=ஒன்பதடி நீளமுள்ளதாக; ஓசம்=கோயில்; நிற்பவர்=நிலைபெற்றுவாழ விரும்புவோர்.

1917. பாரித்து=நிரப்பி; முஞ்சி=தர்ப்பாசனம்; சுண்ணம்=சாந்து; பொதியல்=பூசுதல்.

1918. நள்குகை=குகைநடுவில்; படுத்து=செய்து; களபம்=கலவை.

1919. ஓதிடும் வெண்ணீற்று னுத்தூளங் குப்பாய
மீதினி லிட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமு நீறும் பொலிவித்து
மீதி லிருத்தி யிருத்திடு வீரே. (கo)

1920. விரித்தபின் னுற்சாரு மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகமிள நீருங்
குருத்தலம் வைத்தோர் குகைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே. (கக)

1921. மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்லமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே. (கஉ)

1922. ஆதன மீதி லரசு சிவலிங்கம்
போது மிரண்டினி லொன்றைத்தா பித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வங்
காதலற் சோடசங் காணுப சாரமே. (கங)

---

உo-வது விந்துற்பனம்.

1923. உதயத்தில் விந்துவி லோங்குண் டலியு
முதயக் குடிலில் வயிந்தவ மொன்பான்
விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி
கதியிற் காரணங் கலைவை கரியே. (க)

---

1919. உத்தூளம்=தெளித்தல்; குப்பாயம்=சட்டை; சுண்ணம்= வாசனைப்பொடி.

1920. சாரு=சாய்மனை; போனகம்=சோறு; குருத்தலம்=அந்தக் குருவின் முன்னிலம்; மேல்வட்டஞ்சாத்திடுவீர் = மேனி லையை மூடுங்கள்.

1922. ஆதனம்=சமாதியின்மேலுள்ள வேதிகை; போதும்=தகுதி யுள்ளதும்; மேதகு=சிறப்பான.

1923. உதயத்தில் = தோற்றத்தில்; குடில்=பரமாகாயம்; வயிந் தவமொன்பான் = விந்து மாயாகாரியமான ஒன்பதும்; கதியில்=முறையாக.

1924. செய்திடும் விந்துபே தத்திற னையைந்துஞ்
செய்திடு நாதபே தத்திற னாலாறுஞ்
செய்திடு மற்றிவை யீரிரண் டிற்றிறஞ்
செய்திடு மாறாறு சேர்தத்து வங்களே. (உ)

1925. வந்திடும் பேதமெ லாம்பர விந்து
தந்திடு மாமாயை வாகேசி தற்பரை
யுந்து குடிலையோ டேழுறு குண்டலி
விந்துவி லிந்நான்கு மேவா விளங்குமே. (ங)

1926. விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி
வளங்கொ ளுகார மகாரத்துள் விந்து
களங்கமி னாதாந்தங் கண்ணினு ணண்ணி
யுளங்கொண் மனாதியு ளந்தமு மாமே. (ச)

1927. அந்தமு மாதியு மாகிப் பராபரன்
வந்த வியாபி யெனலாய வந்நெறி
கந்தம தாகிய காரண காரியந்
தந்தைந் கருமமுந் தான்செய்யும் வீயமே. (ரு)

1928. வீயம தாகிய விந்துவின் சத்தியா
லாய வகண்டமு மண்டமும் பாரிப்பக்
காயவைம் பூதமுங் காரிய மாயையி
லாயிட விந்து வகம்புற மாகுமே. (சு)

---

1924. திறன்=வகை; ஐயைந்தும்=சிவபேதமிருபத்தைந்தும்; ஈரிரண்டு = விந்து பரவிந்து நாதம் பரநாதம் என்னும் நான்கு; தத்துவங்கள்=உண்ணிலைக்கருவிகள்.

1925. பேதம் = முற்கூறிய இருபத்தைந்து ; எழுறு = இன்பம் பொருந்திய; மேவாவிளங்கும்=இருந்துதோன்றும்.

1926. நிவிர்த்தாதி=நிவிர்த்தி முதலான கலைகள்; கண்ணினுள்=கருத்தினுள்; மனாதி=மனமுதலாயகாரணங்கள்.

1927. கந்தமதாகிய=வாசனைபரவிய; காரணகாரியந்தந்து=காரணமுங் காரியமுமாயிருந்து.

1928. பாரிப்ப=உண்டாக; காயவைம்பூதமும்=ஆகாயமாதி பஞ்ச பூதங்களும்; காரியமாயை = விந்துவின் விகாரப்பாடான அசுத்தமாயை.

1929. புறமக மெங்கும் புகுந்தொளிர் விந்து
நிறமது வெண்மை நிகழ்நாதஞ் செம்மை
யுரமகிழ் சத்தி சிவபாத மாயுட்
டிறனொடு வீடளிக் குஞ்செயற் கொண்டே. (எ)

1930. கொண்டவிவ் விந்து பரமம்போற் கோதற
நின்ற படங்கட மாய்நிலை நிற்றலிற்
கண்டக லாதியின் காரண காரியத்
தண்ட மனைத்துமாய் மாமாயை யாமே. (அ)

1931. அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கு நந்தி
யிதுவித்தி லேயுள வாறை யுணரார்
மதுவித்தி லேமல ரன்னம தாகிப்
பொதுவித்தி லேநின்ற புண்ணியன் றானே. (கூ)

1932. வித்தினி லன்றி முளையில்லை யம்முளை
வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை
வித்து முளையு முடனல்ல வேறில்லை
யத்தன்மை யாகு மரனெறி காணுமே. (க0)

1933. அருந்திய வண்ண மவைமூன்று கூறும்
பொருந்து முடன்மனம் போமல மென்னத்
திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட்
டிருந்தன முன்னு ளிரதம தாமே. (கக)

---

1929. சத்திசிவபாதமாய் = முறையே நாதமும் விந்துவும் சத்தி சிவபாதமாய் (பாதம் என்றது இருப்பிட மாதல்பற்றியே போலும்.)

1930. பிரமம்போல் = (காரணகாரியமாயுள்ள) சிவத்தைப்போல; படம்=வஸ்திரம்; கடம் = மட்குடம்; மாமாயையாகும்= மஹாமாயை என்று கூறப்பட்டிருக்கும்.

1931. அது வித்தில் = அந்த விந்துவாகிய வித்தில்; அண்ணிக்கும்=கலந்திருப்பன்; மதுவித்தில்=தேனுக்குக் காரணமானதில்; மலர்=உச்சித்தாமரை; பொதுவித்தில்=(வித்துப் பொதுவில்) விந்து மாயாவடிவான சிற்சபையில்.

1932. உடன் நல்ல=ஒன்றுகூடி நல்லனவாம்; அத்தன்மை=வித்து முளையும் அபேதமாயுள்ள தன்மை.

1933. முன்னுளிரதம்=முந்தின தினத்திலுண்ட அன்ன ரசம்.

1934. இரத முதலான வேழ்தாது மூன்றி
னுரிய தினத்தி னெருபுற் பனிபோ
லரிய துளிவிந்து மாசுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே. (கஉ)

1935. காயத்தி லேமூன்று நாளிற் கலந்திட்டுக்
காயத்துட் டன்மன மாகுங் கலாவிந்து
நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடாமையின்
மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே. (கங)

1936. அழிகின்ற விந்து வளவை யறியார்
கழிகின்ற தன்னையுட் காக்கலுந் தேரா
ரழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோ
ரழிகின்ற தன்மை யறிந்தொழி யாரே. (கச)

---

உக-வது விந்து ஜயம்.

(போகசரவோட்டம்.)

1937. பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோ
யோர்க்கின்ற வுள்ள முருக வழன்மூட்டிப்
பார்க்கின்ற கண்ணுளை பாழ்பட மூலத்தே
சேர்க்கின்ற போகி சிவயோகி தானே (க)

1938. தானே யருளாற் சிவயோகந் தங்காது
தானேயக் காமாதி தங்குவோ னும்முட்குந்
தானே யதிகாரந் தங்கிற் சடங்கெடு
மூனே யவற்றுள் ளுயிரோம்பா மாயுமே. (உ)

---

1934. புற்பனிபோல்=புல்லினுனியிலுள்ள பனித்துளிபோல; எழ்தாது மூன்றின்=எழு தாதுக்களில் இரசம், இரத்தம், சுக்கிலம் என்னு மூன்றினும்.

1935. கலந்திட்டு=பரந்து; நேயத்தே=சிவத்திலே; மாயத்தே=பிரபஞ்ச வாழ்விலே; மனத்தோடு=மனத்தொடுகூடி.

1936. அளவை=மிகுதியை; கழிகின்ற=பயன்படா தொழிகின்ற; தன்னை=ஆன்மாவை; ஒழியார்=(உலகவாசை)யொழிந்திலர்.

1937. பார்க்கின்ற=விரும்பிப்பார்ப்பதற்குரிய; ஓர்க்கின்ற=கருதுகின்ற; அழல்=மூலாக்கினி; மூலத்து=மூலாதாரத்தில்.

1938. சிவயோகந்தங்காது=சிவயோகமார்க்கத்தில் நில்லாமல்; உட்கும் = அழிவான்; அதிகாரந்தங்கின் = சுதந்தரமுடையவனயின்; ஓம்பா=காக்கப்படாமல்.

1939. மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டி
லோயா விருபக்கத் துள்ளௗர் பக்கத்து
ளேயாவெண் ணுளின்ப மேற்பனி மூன்றிரண்
டாயா வபரத்து ளாதிகா ளாறுமே. (௯)

1940. ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்
வேறன்பு வேண்டுவோர் பூவரிற் பின்னங்கோ
டேறு மிருபத் தொருநா ளிடைத்தோங்கு
மாறின் மிகுத்தோங்கு மக்காலஞ் செய்யவே. (௰)

1941. செய்யு மளவிற் றிருநான் முகூர்த்தமே
யெய்யுங் கலைகால மிந்து பருதிகா
ணுயு மிடத்தோடி னன்காம நூனெறி
செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே. (௧௧)

1942. விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போ
னடுங்கா திருப்பானு மையைந்து நண்ணப்
படுங்காதன் மாதின்பாற் பற்றற விட்டுக்
கடுங்காற் கரணங் கருத்துறக் கொண்டே. (௧௨)

---

1939. மாயாள்=மாயாவொரு மானபெண்; இவர்=கூட; ஓயா=ஒழியாத; இருபக்கம் = சுக்கிலபக்கம், கிருஷ்ணபக்கம்; எண் = (சந்திரசூரியரைக் கொண்டு) எண்ணப்படுகிற; பனி=கெடுதி; மூன்றிரண்டு=ஆறுநாட்கள்; பெண்களைக் கூடுதற்குப் பூர்வபட்சத்தில் சூரியனுக்குரிய ஆறுநாட்களும், அபரபட்சத்துள் சூரியனுக்குரிய ஆறுநாட்களும் உரியனவா மென்பது கொள்க.

1940. ஆறைந்துபன்னொன்று = பூர்வபட்சத்தில் ஆறுநாட்களும், அபரபட்சத்தில் சூரியனுக்குரிய ஒன்பது நாட்களில் பிரதமை, அஷ்டமி, த்ரயோதசி, அமாவாசை யொழிந்த ஐந்து நாட்களுமான பதினொரு நாட்களும்; சகமார்க்கம் = யோக நெறியுடையார்க்காகு மார்க்கம்; வேறன்பு = சகமார்க்க நீங்கிய வேறு பக்திநெறி; பூவரிற்பின்=மங்கையர்க்குப் பூப்பு உண்டாயின் அதன்பின்; ஓங்கும் = அமுதம் பெருகும்; செய்ய = கலவிசெய்ய.

1941. அளவிற்று=அளவானகாலம், இருநான்முகூர்த்தம் = (இரவாகிய) எட்டு முகூர்த்தமேயாம்; எய்யுங்கலைகாலம்=சர்ப்பாசயத்தில விந்துவைப் பதியவிடுக்குங்காலம்; இந்து பருதினையும் கால் (காலம்)=சூரியன் சந்திரனைத் தன்னுள் அடக்குவதான பிங்கலையில் வாயு சரிக்குங்காலம்; வலமிடந் தீர்ந்து விடுக்க=இடகலையிலோடாது பிங்கலையில் மாற்றிவிடுக்க.

1942. முனைந்து=ஊக்கங்கொண்டு; நடுங்காது=சலனப்படாமல்; ஐயைந்தும்=பொறியும் புலனுமாகிய பத்தும்; படும்=உண்டாகும்; கடுங்கால்=வேகமுள்ளபிராணவாயு.

1943. கொண்ட குணனே நலனேநற் கோமளம்
பண்டை யுருவே பகர்வாய் பவளமே
விண்டு தனமே மிடைய விடும்போதிற்
கண்ட கரணமுட் செல்லக்கண் டேவிடே. (எ)

1944. விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே
தொட்டுறுங் காலங்க டோன்றக் கருதிய
கட்டிய வாளுள்சா நாள்குணங் கீழ்மைசீர்ப்
பட்ட நெறியிதென் றெண்ணியும் பார்க்கவே. (அ)

1945. பார்த்திட்டு வையத்துப் பரப்பற் றுருப்பெற்று
வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே
சேர்த்துற் றிருதிங்கள் சேரா வகலினு
மூப்புற்றே பின்னுளி லாமெல்லா முள்ளவே. (கூ)

1946. வித்திடு வோர்க்கன்றி மேலோர் விளைவில்லை
வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை
வித்தினில் வித்தை விதற வுணர்வரேன்
மத்தி லிருந்தோர் மாங்கனி யாமே. (க0)

1947. கருத்தினி லக்கர மாயுவு மியாவுங்
கருத்துள னீசன் கருவுயி ரோடுங்
கருத்தது வித்தாய்க் காரண காரியங்
கருத்துற மாறிவை கற்பனை தாமே. (கக)

---

1943. கொண்டகுணம்=இயல்பாயுள்ள பெண்மைக்குணம்; கோமளம்=இளமை; விண்டு=மலை; மிடைய=கூட; கரணம்=கலவி.

1944. விதியிலே=முறைமையாக; தொட்டு=தொடங்கி; உறுங்காலம்=உலகிலிருக்குங்கால (பலன்கள்); கீழ்மை=தீ நெறியொழுக்கம்.

1945. வையத்துப் பரப்பு=உலகவியாபாரம்; உருப்பெற்று=பருத்து; சேர்ந்துற்று = கூடியிருந்து ; மூப்புற்று = கருமுதிர்ந்து; பின்னுளில்=பிறந்தபின் உலகிலிருக்குமாயுளில்.

1946. வித்தினில்வித்து = விந்துமாயையினின் றுற்பத்தியாகும் விந்து; விது = சலனம்; மத்து = சுபோதம்; மாங்கனி= பரசிவத்துக்குவமவாகு பெயர்.

1947. கருத்தினில் = எண்ணத்திலேயே ; அக்கரம்=(அட்சரம்) ஞானமென்றபொருள்; கருத்ததுவித்தாய்= (நாயகனது) எண்ணமே மேலனுபவத்துக்குக் காரணமாய் ; கற்பனை= நாயகனது சங்கற்பம்.

1948. ஒழியாத விந்து வுடனிற்க நிற்கு
மழியாப் பிராண னதிபலஞ் சத்தி
யொழியாத புத்தி தபஞ்செப மோன
மழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே. (க௨)

1949. வற்ற வனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே (க௩)

1950. யோகியு ஞானியு முத்தம சித்தனும்
யோகியு ஞான புரந்தர னவோனு
மோக முறினு முரையமிர் துண்போனு
மாகிய விந்து வழியாத வண்ணலே. (க௪)

1951. அண்ண லுடலாகி யவ்வனல் விந்துவு
மண்ணிடை மாய்க்கும் பிராணனும் விந்துவுங்
கண்ணுங் கனலிடைக் கட்டிக் கலந்தெரித்
துண்ணி லமிர்தாகி யோகிக் கறிவாமே. (க௫)

1952. அறியா தழிகின்ற வாதலா னுளும்
பொறியா லழிந்து புலப்புகின் றூர்க
ளறிவாய் நனவி லதீதம் புரியச்
செறிவா யிருந்து சேரவே மாயுமே. (க௬)

---

1948. அழியா=அழியாமல்; சத்தி=சாமர்த்தியம்; மோனம்=மௌனநிலை; சித்தி=காயசித்தி, அட்டமாசித்தி முதலியன; வற்றில்=மூலாக்கினியாற் சரீரத்தில் சுண்டிநிற்பின்.

1949. மறித்து=கீழ்நோக்காமல் தடுத்து; ஏற்றி=மேலேறச்செய்து; துற்றசுழி=பொருந்திய ஆக்கினை; முற்றுமதியம் = கலைநிறைந்த சந்திரன்; செற்று=பிழிந்து.

1950. ஞானபுரந்தரன்=மேலானஞானமுள்ளவன்; ஆகிய=சரீரத்தின்கண்ணுண்டான.

1951. அண்ணல்=சிவபிரான்; அனல்விந்து = அக்கினிமயமான விந்துமாயை; கண்ணுங்கனல் = மதிக்கப்படுமூலாக்கினி; கட்டி=ஒன்றுசேர்த்து.

1952. நனவில் அதீதம்=ஜாக்கிராதீதம்; செறிவாய்=(இரண்டு விந்துக்களும்) கலந்து; மாயும்=கட்டுப்படும்.

1953. மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்
காதல தாகிய காமங் கழிந்திடுஞ்
சாதலு மில்லை சதகோடி யாண்டினுஞ்
சோதியி னுள்ளே துரிசறுங் காலமே. (கஎ)

1954. காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்
காலங் கடந்தழிந் தான்விந்து செற்றவன்
காலங்க ளின்விந்து செற்றுற்ற காரிகை
காலின்கண் வந்த கலப்பறி யாரே. (கஅ)

1955. கலக்குநாண் மூன்று டன்னிடைக் காத
லலத்தக வேண்டிலங் நாரி யுதரக்
கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை
விலக்கு வனசெய்து மேவணை வீரே. (கசு)

1956. மேலா நிலத்தெழு விந்துவு நாதமுங்
கோலா னடத்திக் குறிவழி யேசென்று
பாலா மமிர்துண்டு பற்றறப் பற்றினன்
மாலான தும்மாள மாளுமவ் விந்தே. (உ0)

1957. விந்து விளைவும் விளைவின் பயன்முற்று
மந்த வழிவு மடக்கத்தி லாக்கமு
நந்திய நாசமு நாதத்தாற் பேதமுந்
தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே. (உக)

---

1953. மாய=அழியும்படி; உன்ன = எண்ணுதலால்; துரிசறுங் காலமே=காலவெல்லையாகிற குற்றமொழியும்.

1954. செற்றவன்=அடக்கினவன்; விந்துசெற்றவன்=விந்துவினுற் சயிக்கப்பட்டவன் (காமுகன்); காலங்களில் = யௌவன காலங்களில்; உற்றகாரிகை=தான்கூடின பெண்ணினிடத்தில்; காலின்கண்=தனஞ்செயனென்னும் வாயுமூலமாக.

1955 கலக்குநாண்முன்னுள் = பெண்ணொடு கலத்தற்குமுதல் நாளிலேயே; காதனலம் = காமவின்பம்; உதரக்கலம்= வயிறுகியபாத்திரம்; மேவணைவீரே=தக்கமுறைப்படி கூடுக.

1956. மேலாநிலத்து = ஆறுதாரங்கட்கு மப்பாலுள்ளவிடத்துக்கு; கோலால்=சுழுமுனை நாடியால்; குறி=ஆசிரியன் கூறிய குறி; மாலானது=போகமானது; மாளுமவ்விந்தே=அந்த விந்துவுங் கட்டுப்படும்.

1957. அந்தவழிவு=அந்த (விந்து) வெளிச்செல்லுதல்; அடக்கம்= விந்துவை (வெளிவிடாது) உள்ளடக்குதல்; ஆக்கம்=உண்டாம் பயன்; நந்திய=மிகுந்த.

1958. விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து
நந்திய வங்கியி னாலே நயக்தெரித்
தந்தமில் பானு வதிகண்ட மேலேற்றிச்
சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே. (உஉ)

1959. அமுதச் சசிவிந்து வாம்விந்து மாள
வமுதப் புனலோடி யங்கியின் மாள
வமுதச் சிவபோக மாதலாற் சித்தி
யமுதப் பலாவன மாங்குறும் யோகிக்கே. (உரு)

1960. யோகமவ் விந்து வொழியா வகைபுணர்ந்
தாக மிரண்டுங் கலந்தாலு மாங்கிரு
போகஞ் சிவபோகம் போகிநற் போகமா
மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே. (உச)

1961. மாத ரிடத்தே செலுத்தினு மவ்விந்து
காதலி னால்விடார் யோகங் கலந்தவர்
மாத ருயிராசை கைக்கொண்டே வாடுவர்
காதலர் போன்றங்ஙன் காதலாஞ் சாற்றிலே. (உரு)

1962. சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியா
லேற்றிய மூலத் தழலை யெழமூட்டி
நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ
டாற்றி யமுத மருந்தவிந் தாமே. (உசு)

---

1958. வீசம்=(பீஜம்) விதை; பானுவதிகண்டம் = சூரியன்வசிக்கின்றபாகம் (அது நாபிக்குமேல் இதயம்வரை); சந்திரன் சார்பு=சந்திரகண்டம் (இதயத்துக்கு மேலுள்ள பாகம்.)

1959. சசிவிந்துவாம் விந்துமாள = சந்திரனிடத்திருந்துண்டாம் பனித்துளிகளாலாகும் (சரீர) விந்துவானது கட்டுப்பட; அங்கியின்மாள=சிவாக்கினியாற் கட்டுப்பட; அமுதச்சிவயோகம் = அழிவற்றசிவயோகம்; பலாவனம் = பலாக்கனிபோலும் சிவபிரானிருக்கும்வனம் (முத்தியுலகம்.)

1960. ஆகமிரண்டு=ஆண் சரீரம் பெண்சரீரம்; போகமாமோகம் = சிற்றின்ப போககாரணமான மோகம்.

1961. மாதருயிர் = பெண்களை யுயிர்போலக் (கருதி); காதலர் போன்று=தமதுயிரின்மே லாசையுள்ளவர்கள்போல.

1962. சத்தியால்=நாதசத்தியினால்; நடுநாடி ஆற்றி = சுழிமுனையிற் செல்லும்படிசெலுத்தி; விந்தாம்=விந்து ஜயமாம்.

1963. விந்துவு நாதமு மேவக் கனன்மூல
வந்த வனன்மயிர்க் காமே றுறு மன்னிடச்
சிந்தனை மாறச் சிவமக மாகவே
விந்துவு மாளுமெய்க் காயத்தில் வித்திலே (உஎ)

1964. வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்
வித்துக்குற் றுண்ணுமல் வித்துச்சுட் டுண்பவன்
வித்துக்குற் றுண்பானில் வேறல னீற்றவன்
வித்துக்குற் றுண்ணுமல் வித்துவித் தானன்றே. ()

1965. அன்னத்தில் விந்து வடங்கும் படிகண்டு
மன்னப் பிராணனும் விந்து மறித்திட்டு
மின்னொத்த விந்துநா தாந்தத்து விட்டிட
வன்னத் திருவிந்து மாயுங்கா யத்திலே. (உகூ)

1966. அன்னப் பிராணனு மார்க்கு மிருவிந்து
தன்னை யறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்
சொன்னமு மாமுருத் தோன்றுமெண் சித்தியா
மன்னவ ரெல்லா மழிவற நின்றதே. (௩௦)

1967. நின்ற சிகார நினைக்கும் பிராணனு
யொன்று மகார மொருமூன்றே டொன்றவை
சென்று பராசத்தி விந்து சயந்தன்னை
யொன்ற வுரைக்க வுபதேசந் தானே. (௩க)

---

1963. கனல்=எரிகிற; சிந்தனைமாற = உலகசிந்தை சிவத்தினிடமடைய; விந்துவுமாளும்=விந்துசத்திகட்டுப்படும்.

1964. வித்துக்குற்று = விதைக்கு வைத்திருக்கும் நெல்லைக்குத்தி; வித்துச்சுட்டுண்பன் = விந்துவைக்காமாக்கினியாலெரித்துச் சிற்றின்ப நுகர்வோன்.

1965 அன்னப்பிராணனும் = அன்னத்தா லுண்டாகிய பிராணனாகிய; இருவிந்து = காரண காரியங்களாகிய இருவகை விந்துக்களும்.

1966. சொன்னமுமாமுரு=சரீரம் சுவர்ணமயமாகும்; அன்னவரெல்லாம்=அத்தன்மைய யோகிக ளெல்லாருக்கும்.

1967. பிராணனு யொன்று மகார மொருமூன்று=பிராணனுய்க் கருதப்படும் அகார உகார மகாரங்களாகிய மூன்றும்; ஒன்ற= பொருந்த.

1968. தானே யுபதேசந் தானல்லா தொன்றிலை
வானே யுயர்விந்து வந்த பதினொன்கு
மானே ரடங்க வதன்பின்பு புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே. (௩உ)

1969. விந்துவு நாதமும் விளைய விளைந்தது
வந்தவிப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலா
மந்தமு மாதியு மாமந்தி ரங்களும்
விந்து வடங்க விளையுஞ்சி வோகமே. (௩௩)

1970. வறுக்கின்ற வாறு மனத்துளா வெற்றி
நிறுக்கின்ற வாறுமந் நீள்வரை யொட்டிப்
பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை
யறுக்கின்ற நாள்வரு மத்திப் பழமே. (௩ச)

1971. விந்துவு நாதமு மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடி
லந்தர வானத் தமுதம்வந் தூறிடு
மங்குதி மந்திர மாகுதி யாகுமே. (௩ரு)

1972. மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன
வினத்தெழு வார்க ளிசைந்தன நாடி
மனத்தி லெழுகின்ற வாக்கு வசனங்
கனத்த விரதமக் காமத்தை நாடிலே. (௩சா)

---

1068. விந்துவந்த பதினொன்கு=விந்துமாயையினின்றும் வந்த பதினொன்கு வித்தைகளும்; மான்=மனமும்.

1969. பல்லுயிர் மன்னுயிருக்கு = பலவகையான தாபர ஜங்கமங்களுக்கும் மனிதர்களுக்கும்.

1970. வறுக்கின்றவாறும்=விந்துவைக்கட்டு முபாயமும்; மனத்துளா வெற்றி=மனத்தினிடத்துள்ள வெற்றி (அது மனவசப்பட்டொழுகுதல்); நிறுக்கின்ற=அடக்குகின்ற; நீள்வரை=பரமாகாயமேரு; பொறிக்கின்ற=சேர்க்கின்ற; அத்திப்பழம் (அத் தீ பழம்)=அக்கினிமயமானகனி (சிவம்).

1971. அங்குதிமந்திரம்=(சந்திரன் நாதம் விந்து மூன்றுங் கூடிய) அவ்விடத்துதிக்கும் மந்திரம்; ஆகுதி=பிராணாக்கினி, அல்லது சிவாக்கினியிலோமஞ் செய்தற்குரிய அவிசு.

1972. இனத் தெழுவார்கள் = கூடியெழுந்து பேசுவார்கள்; இசைந்தன=தம்மனதுக் கொத்தவைகள்; வாக்கு வசனம்= வாயிலிருந்துண்டாஞ் சொல் (பயனின்றென்பது); இரதம்= சத்து; காமத்தை=(அதையுணரும்) விருப்பத்தை.

1973. சத்தமுஞ் சத்த மனமு மனக்கருத்
தொத்தறி கின்ற விடமு மறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
வத்த னிருப்பிட மவ்விடந் தானே. (௱எ)

1974. உரமடி மேதினி யுந்தியி லப்பாம்
விரவிய தன்முலே மேவிய கீழங்கி
கருமுலே மீமிசை கைக்கீழிற் காலாம்
விரவிய கந்தர மேல்வெளி யாமே. (௱அ)

---

உஉ-வது ஆதித்த நிலை.

(க) அண்டாதித்தன்.

1975. செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கண்
மஞ்சுடை மேரு வலம்வருங் காரண
மெஞ்சுட ரீச னிறைவ னிணையடி
தஞ்சுட ராக வணங்குந் தவமே. (க)

1976. பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னுய்நின்ற புண்ணிய நாத
னிகலற வேழுல கும்முற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே. (உ)

---

1973. இதன்பொருளை மூன்றுந்தந்திரம் "கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துள்" என்ற மந்திரத்தானு முணர்க.

1974. அடிமேதினி = பாதம் (முதலிடைவரை) பிருதிவியாம்; உந்தியிலப்பாம் = (மேல்) உந்திவரை அப்பு வாகும்; மூலே மேவிய கீழங்கி = (மேல்) மார்புவரை அக்கினியாம்; கைக் கீழின்=(மேல்) கைமூலம்வரை; காலாம்=வாயுவாம்; கந்தரமேல் வெளியாம்=கழுத்துக்குமேல் ஆகாயமாம்.

1975. தேவர்கள் = கிரகங்களும் நட்சத்திரங்களுமாம்; இணையடி தஞ்சுடராக = இருபாதங்களி னொளிதமக்குண்டாம்படி.

1976. மாலவன்=திருமால்; புகலவனுய்=அடைக்கலத்தான மானவனுய்; இகலற=பேதமின்றி; பகலவன்=சிவ சூரியன்.

1977. ஆதித்த னன்பினோ டாயிர நாமமுஞ்
சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினு
மாதியி லன்பு பழுக்கின்ற வாறே. (ரு)

1978. தானே யுலகுக்குத் தத்துவ மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே. (சு)

1979. வலையமுக் கோணம் விட்ட மறுகோணந்
துலையிரு வட்டந் துய்ய விதமெட்டி
லலையுற்ற வட்டத்தி லீரெட் டிதழா
மலைவற் றுதித்தன னாதித்த னாமே. (எ)

1980. ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற்
சோதித் திரங்குநற் சூரிய னுலாங்
கேத முறுங்கேணி சூரிய னெட்டிற்
சோதித னீட்டிற் சோடசந் தானே. (அ)

---

1977. ஆதித்தன்=சிவ சூரியன் ; சோதியினுள்=சூரியனிடத்தில்; சொல்லினும் = துதித்தாலும்; ஆதியில்=சிவபிரானிடம் ; பழுக்கின்ற=முதிர்ச்சியடைகின்ற.

1978. தத்துவமாய் = மெய்ப்பொருளாய்; தையல் = சத்தி; சம்பு= தெய்வம்; தண்சுடர்=சந்திரன்.

1979. வலையம் = வளையம்; விட்டம்=மத்தியரேகை; அலையுற்ற = சுழன்றுகொண்டிருக்கிற; மலைவற்று = மயக்கமற்று. (இது அனுகதத்தில் சூரியனுதிக்கு முறை கூறியது).

1980. ஆதித்தனுள்ளி லானமுக்கோணத்தில்=முற்கூறிய சூரியன் தானத்திலுள்ள முக்கோணத்தில்; கேதமுறுங்கேணி=(சந்திரனமுத மிறங்குதலால்)குற்றத்தைச் செய்வதான கிணறு போலும் பானுமண்டலம்; எட்டில் = எட்டிதழில்; சோடசம்=பதினாறிதழ்.

1981. ஆதித்த னோடே யவனி யிருண்டது
பேதித்த நாலும் பிதற்றிக் கழிந்தது
சோதிக்க ணின்று துடியிடை செய்கின்ற
வேதப் பொருளை விளங்குகி லீரே. (எ)

1982. பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணாத வரும்பொரு
ணீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவ
னூருக்கு மெட்டாத வாதித்தன் றானே. (அ)

1983. மண்ணை யிடந்ததின் கீழொடு மாதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்த
மெண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே. (கூ)

1984. பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரு மறியா ரருங்கடை நூலவர்
தீர னிருந்த திருமலை சூழொன்ப
வூரை யுணர்ந்தா ருணர்ந்திருந் தாரே. (க0)

(உ) பிண்டாதித்தன்.

1985. நின்று மிருந்துங் கிடந்து நடந்துங்
கன்றாய நந்தி கருத்து ளிருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. (கக)

---

1981. பேதித்த நாலும்=வேறுபட்டுத் தோன்றும் நால்வகை வாக்கும்; துடியிடை=சத்தி.

1982. பாருக்குக் கீழ் = மூலாதாரத்தில் பிருதிவி பீஜத்துக்குக் கீழிருந்து; நீருக்குந் தீக்கும் நடுவே=அப்பு மண்டலம் அக்கினி மண்டலமென்னு மிரண்டுக்கு நடுவிடத்தில்.

1983. இடந்து=பிளந்து; வெளிசெய்து=வெளிப்படுத்தி (விளக்கி); எண்ணுங்கிழமை=தியானிக்கும் உரிமை.

1984. கடை நூலவர்=கடைப்பட்ட நூலினை யுணர்ந்தவர் (உண்மை விளக்கும் யோகநூலினை யுணராதவ ரென்பது கொள்க); தீரன்=சிவபிரான்; சூழ்=சூழ்ந்து; ஊரை=கபால ஸ்தானத் தீசனிருக்குமிடம்.

1985. கன்றாய = சூக்கும ரூபியாகிய; குழல்வழி=சுழுமுனைமார்க்கத்தில்; வென்று=எல்லாவொளிகளையு மடக்கிமேற்பட்டு; விரிசுடர்=பரந்த ஒளியுள்ள பிண்டாதித்தன்.

1986. ஆதித்த னோடி யடங்கு மிடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெலா
மாதித்த னோடே யடங்குகின் றாரே. (கஉ)

1987. உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை
சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்
குருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே. (கங)

(ங) மனவாதித்தன்.

1988. எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரு
மெறிகதிர் சோம னெதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே வியங்குமென் னாவி
யொருகதி ராகி லுவாவது வாமே. (கச)

1989. சந்திரன் சூரியன் றன்வரிற் பூசனை
முந்திய பானுவி லிந்துவந் தேய்முறை
யந்த விரண்டு முபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. (கரு)

---

1986. ஆதித்தனோடி யடங்குமிடம் = பிங்கலையிலோடி யடங்குமிடமான சுழுமுனை; சாதிக்க = சித்திபெற; ஆதித்தனோடே யடங்கு கின்றார் = பிங்கலையி லோடும் பிராண னடங்கத் தாமுமிறந் தொழிந்தார்.

1987. உருவிப் புறப்பட்டு = பிருதிவிக்குக் கீழிருந்து ஊடுருவிச் சென்று; உலகை = சரீரத்தின் கண்ணதாம் பதினான்குலகையும்; சொருகி=அடங்கி; துறை=இடம்; உருகிக்கிடக்கும்=இளகி நிற்கும்.

1988. எதிர் நின்றெறிப்ப=நேருக்கு நேராயிருந்து பிரகாசிக்க; வியங்கும்=இயக்கத்தைப் பொருந்தும்; ஒரு கதிராகில்=இரண்டுமொரு தன்மையவான கதிராகில் ; உவாவதுவாம்=பூரணையாம்.

1989. பானுவிலிந்து வந்து எய்முறை = சந்திரகலை சூரியகலையிலொடுங்கி நிற்குமுறை; உபயம்=சுழுமுனை.

1990. ஆங்கு கலையோ டருக்க னனன்மதி
யாங்கு சலையிடை நான்கென லாமென்பா
ராங்கு மருக்க னனன்மதி யோடொன்ற
வாங்குமப் பூரணை யாமென் றறியுமே. (கசு)

1991. ஈரண்டத் தப்பா லியங்கிய வவ்வொளி
யோரண்டத் தார்க்கு முணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே. (கஎ)

1992. ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரு
மொன்பது மீச னியலறி வாரில்லை
முன்பதின் மேவி முதல்வ னருளிலா
ரின்பமி லாரிருள் சூழநின் றாரே. (கஅ)

---

(ச) ஞானுதித்தன்.

1993. விந்து வபரம் பரமிரண் டாய்விரிந்
தந்த வபரம் பரநாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்
துந்து மருணோ தயமென்ன வுள்ளத்தே. (கசு)

1994. உள்ள வருணோ தயத்தெழு மோசைதான்
றெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன வைங்கலைக் கொன்று முதயமே. (உ0)

---

1990. இடை நான்கு=பானு மதி அக்கினி மத்தியகலையாகிய சுழு முனை; ஒன்றவாங்கும்=கூடும்படி வாசியை யுள்ளடக்கும்.

1991. ஈரண்டம்=அக்கினி சூரியமண்டலங்கள்; அண்டத்தக்கார்= அடையத்தக்கவர்.

1992. ஒன்பதின் = நவக்கிரகங்களில்; ஈசனியல் = ஈசனது தன்மை.

1993. அபரம்பரம்=அபரவிந்து பரவிந்து ; அந்த அபரம்=அந்த அபர விந்து; பரம்=சிவம்; உந்தும்=நடத்தும்.

1994. அருணோதயம்—ஞானுதித்தன் மூலத்தானத்தினின்று நாத வடிவாய்த் தோற்றுதலானும் அரன் நிறம் செம்மையாதலா னும், அதனதுற்பத்தியை அருணோதயமென் றருளினர்; வள்ளல் பரவிந்து=எல்லாவற்றையும் உதிப்பிக்கும் பரவிந்து; உதயம்=உற்பத்தி ஸ்தானம்.

1995. தேவர் பிரான்றிசை பத்துத யஞ்செயு
மூவர் பிரானென முன்னொரு காலத்து
நால்வர் பிரானடு வாயுரை யாநிற்கு
மேவு பிரானென்பர் விண்ணவர் தாமே. (உக)

1996. பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மெய்யிரு ணீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிரு ணீக்குந் திருவுடை நந்தியென்
கையிரு ணீங்கக் கலந்தெழுந் தானே. (உஉ)

1997. தனிச்சுட ரெற்றித் தயங்கிரு ணீங்க
வனித்திடு மேலை யருங்களி யூறல்
கனிச்சுட ராய்நின்ற கயிலையி லீச
னனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே. (உங)

1998. நேரறி வாக நிரம்பிய பேரொளி
போரறி யாது புவனங்கள் போய்வருந்
தேரறி யாத திசையொளி யாயிடு
மாரறி வாரிது நாயக மாமே. (உச)

1999. மண்டலத் துள்ளே மலர்ந்தெழு மாதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடுஞ்
சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரு
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே. (உரு)

---

1995. நால்வர்=பிரமன், திருமால், உருத்திரன், மகேசன்; நடு வாய்=அந்நால்வர்க்கும் பொதுவாய்.

1996. மெய்யிருள் = ஸ்தூலவிருள்; செய்யிருள்=பிறவியை யுண்டாக்கும் அஞ்ஞானவிருள்; என்கை = என்னிடத்து.

1997. எற்றி = வீசி; தயங்கு=நிறைந்த ; வனித்திடும்=(வர்ணித்திடும்) புகழ்ந்துரைக்கின்ற ; மேலை = மேனிலையின்கண்ணுள்ள; ஊறல்=இரசம்; கனிச்சுடர்=முதிர்ச்சியுள்ள ஒளி.

1998. நேரறிவாக=மெய்யறிவாக; போர்=பேதம்; தேரறியாத=(சூரியனுடைய) தேர் சென்றறியாத.

1999. மண்டலம்=சூரியமண்டலம்; கண்டிடம்=(கண்ட இடம்)=கண்ட ஸ்தானம்.

2000. நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்
தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்க ளீசன் றிருமால் பிரமனு
மூவரு மாக வுணர்ந்திருந் தாரே. (௨௬)

(ரு) சிவாதித்தன்.

2001. அன்றிய பாச விருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானஞ் சிவப்பிர காசத்தா
லொன்று மிருசுட ராமரு ணோதயந்
துன்றிரு ணீங்குதல் போலத் தொலைந்ததே. (௨௭)

2002. கடங்கடந் தோறுங் கதிரவன் றோன்றி
லடங்கிட மூடி லவற்றி லடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றது மப்பரி சாமே. (௨௮)

2003. தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
றானே வெளியொளி தானிருட் டாமே. (௨௯)

2004. தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனலனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தங்கிய பல்லுபி
ரைவர்க் கிடமிடை யாறங்க மாமே. (௩௦)

---

2000. தூபி=கபாலம்; ஈசன்=உருத்திரன்.

2001. அன்றிய=மாறுபட்ட; இருசுடர்=பேரொளி வடிவ சூரியன்; துன்று (துன்ற)=தோன்ற.

2002. அடங்கிட = மறையும்படி.

2003. தாபிக்கும்=நிலைநிறுத்தும்.

2004. ஐவர்க்கு=இந்திரிய மைந்திற்கும்; இடம்=ஸ்தானம்; இடையாறங்கம் = நடுவேயுள்ள வைய முதலிய வைந்திற்கு முயிருக்கும்; ஆம்=ஆகும்.

உரு-வது ஆன்ம விலக்கணம்.

(க) பிராணன்.

2005. உன்னு மளவி லுணரு மொருவனைப்
பன்னு மறைகள் பயிலும் பரமனை
யென்னு ளிருக்கு மிளையா விளக்கினை
யன்னமய னன்றென் றறிந்துகொண் டேனே. (க)

2006. அன்ன மிரண்டுள வாற்றங் கரையினிற்
றுன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன்னந்
தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால்
பின்ன மடவன்னம் பேறணு காதே. (உ)

(உ) புருடன்.

2007. வைகரி யாதியு மாயா மலாதியும்
பொய்கரி யான புருடாதி பேதமு
மெய்கரி ஞானங் கிரியா விசேடத்துச்
செய்கரி யீச னநாதியே செய்ததே. (௩)

(௩) அணு.

2008. அணுவி லணுவினை யாதிப் பிரானை
யணுவி லணுவினை யாயிரங் கூறிட்
டணுவி லணுவை யணுகவல் லார்கட்
கணுவி லணுவை யணுகலு மாமே. (ச)

---

2005. இளையாவிளக்கு = சோர்வுபடாத விளக்கொத்தவனை (சிற்பரனை); அன்னமயன் அன்றென்று=அன்னத்தாலாய வுடம்பி னின்றும் வேருயுள்ளவ னென்று.

2006. ஆற்றங்கரையினில்=(புத்தியின் பிரவிர்த்தி நிவிர்த்திவடிவ) விர்த்திகளில்; அன்னம் இரண்டுள=சீவான்மாப் பரமான்மா வென்னும் இரண்டு அன்னப் பறவைகள் வாழுகின்றன; துன்னி யிரண்டும் துணைப்பிரியா = அவ் விரண்டு பறவை களுங்கூடி யொத்துவாழுதலினின்று நீங்கா; தனியொன்று= அவற்று ளொப்பற்ற தொன்று; தன்னந் தன்னிலை யன்னம்=ஒரு சிறிதும் விகாரப்பாடில்லாத அப் பரமான்மா; (மற்றொன்று) மடவன்னம் = பிறிதொன்று அறியாமை யுள்ள சீவான்மா; அது பின்னம் என்றக்கால்=அச் சீவான்மா (பரமான்மாவினின்றும்) தான் வேறுபட்டவனென்று கருதுமளவும்=பேறணுகாது = (அச் சீவான்மா) முத்தி யடைவதில்லை.

2007. வைகரியாதி=வைகரி முதலிய பஞ்ச வாக்கு; மாயாமலாதி= மாயை முதலிய பஞ்ச மலம்; புருடாதி=புருடன் முதலிய சத்த தத்துவங்கள்; மெய் கரி=சரீரத்தை (பிறப்பை) ஒழிக்கின்ற; கரியீசன்=சாட்சியான சிவம்.

2009. படர்கொண்ட வாலதின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
விடர்கொண்ட பாச விருளற வோட்டி
நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே. (ரு)

2010. அணுவு ளவனு மவனு ளணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரா
ரிணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்ருன் சராசரந் தானே. (சு)

(ச) சீவன்.

2011. மேவிய சிவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது வாயிர மாயினு
லாவியின் கூறுநா ருயிரத் தொன்றே. (எ)

2012. ஏஞேர் பெருமைய ஞயினு மெம்மிறை
யூனே சிறுமையி னுட்கலந் தங்குளன்
வானே ரறியு மளவல்லன் மாதேவன்
ருனே யறியுந் தவத்தி னளவே. (அ)

2013. உண்டு தெளிவ னுரைக்க வியோகமே
கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும்
பண்டு பயிலும் பயில்சீவ ஞர்பின்னைக்
கண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே. (கூ)

2014. மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவரு ளாலே யதிற்றாண்ட
வோயு முபாதியோ டொன்றிஞன் ருதுயி
ராய துரியம் புகுந்தறி வாகவே. (கo)

2009. வித்ததுவாலதின்போல = நெல்வான் முளையைப் போன்று; நடர்=ஆனந்தத்தாண்டவஞ் செய்பவர்.

2010. அணு=ஆன்மா; கணு=பேதம்; தணிவு=எல்லை.

2011. கோ=பசு; ஆவி=ஆன்மா.

2012. ஏஞேர்=எல்லாத் தேவர்களினும்; ஊன்=உடம்பு.

2013. தெளிவன் = தூயவறிவினனுகிய சிவபெருமான் ; பயில் சீவஞர் = யோகாப்பியாசத்தால் (ஆநந்த வடிவெய்திய) சீவர்கள்.

2014. சேதனத்தாய குரு=மனித வடிவங்கொண்ட குரு; அதில்= அவ்வியோகாப்பியாசத்தில்; ஓயும்=ஒழியும்.

(ஞ) பசு.

2015. கற்ற பசுக்கள் கதறித் திரியினுங்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினு
முற்ற பசுக்க ளொருகுடம் பால்போது
மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. (கக)

2016. கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதெ
னெல்லை கடப்பித் திறைவ னடிகூட்டி
வல்லசெய் தாற்றம தித்தபி னல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறிப்பறி யாதே. (கஉ)

(சு) போதன்.

2017. சீவ னென்னச்சிவ னென்ன வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே. (கஙு)

2018. குணவிளக் காகிய கூத்தப் பிரானு
மனவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்
பணவிளக் காகிய பஃறலை நாகங்
கணவிளக் காகிய கண்காணி யாகுமே. (கச)

2019. அறிவா யறியாமை நீங்கி யவனே
பொறிவா யொழிந்தெங்குந் தானான போத
னறிவா யவற்றினுட் டானு யறிவன்
செறிவாகி நின்றவச் சீவனு மாகுமே. (கரு)

2015. பசுக்கள்=மனிதர்கள்; கொற்ற=மேம்பட்ட; குறிகட்டி=சொரூபங்களைப் பற்றி; மேயினும்=அனுபவித்திருந்தாலும்; உற்ற=யோகநெறிப்பட்ட.

2016. கொல்லையின் மேயும் = சப்தாதி விஷயங்களிற் செல்லும்; வல்ல = சத்தியுண்டாம் வகைகளை; கொல்லை செய் = பண்படுத்தாதுள்ள விளைநிலத்தை யொத்த.

2018. குணவிளக்கு=ஆநந்தப் பிரகாசம்; மனவிளக்காகிய = மனமாகிய விளக்கினையுடைய; பணவிளக்காகிய = படத்தின்கண் விளக்குப்போலும் மணிகளையுடைய; கணவிளக்கு=விளக்குக்கூட்டம்; கண்காணி=கண்ணுற் காணத்தக்கவன்.

2019. அறிவாய் = ஞானமுண்டாய்; அறியாமை = அஞ்ஞானம்; பொறிவாய்=இந்திரியங்களி னின்றும்; தானானபோதன்=தத்துவ சமூகங்களெல்லாந் தானாயுள்ள ஞான சொரூபியாவன்.

2020. ஆறாறின் றன்மை யறியா திருந்தேனுக்
காறாறின் றன்மை யறிவித் தான் பேர்நந்தி
யாறாறின் றன்மை யருளா லறிந்தபி
ளுறாறுக் கப்புற மாகிநின் றானே. (கசு)

2021. சிவமா கியவரு ணின்றறிந் தோரா
ரவமா மலமைந்து மாவ தறியார்
தவமான் செய்து தலைப்பறி கின்றார்
நவமான தத்துவ நாடகி லாரே. (கள)

2022. நாடோறு மீச னடத்துந் தொழிலுன்னார்
நாடோறு மீச னயர்த்தூட்ட னூடிடார்
நாடோறு மீசனல் லோர்க்கரு ணல்கலா
னுடோறு நாடார்க ளுள்வினை யாளரே. (கஅ)

---

உசு-வது ஐந்திந்திரிய மடக்கு மருமை.

2023. ஆக மதத்தன வைந்து களிறுள
வாக மதத்தறி யோடணை கின்றில
பாகனு மெய்த்தவை தாமு மிளைத்தபின்
யோகு திருந்துத லொன்றறி யோமே. (க)

2024. கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்
றிருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா
வெருத்துற வேறி யிருக்கிலு மாங்கே
வருத்தினு மம்மா வழிநட வாதே. (உ)

---

2020. ஆறாறு=உண்ணிலைக் கருவிகள் முப்பத்தாறு.

2021. தலைப்பறிகின்றார் = மீண்டும் பிறத்தலை யடைகின்றார்கள்; நவமான=மேன்மையான.

2023. ஆக மதத்தன=மதத்தையுடையனவாக ; ஐந்து களிறு=பஞ்சேந்திரியங்கள்; ஆக மதத்து=மதமுண்டாக; தறி=கட்டுத் தறிபோலு நிலைபெற்ற சிவம்; பாகன்=ஆன்மா;யோகுதிருந்துத லொன்று=யோகஞ் செய்தலாகிய ஒருவிஷயம்.

2024. கால்கொத்தி = பிராணவாயுவையடக்கி; திகைத்தன்றி= வருத்தப்பட்டல்லாமல்; அம் மா=அந்த இந்திரியங்களாகிய யானைகள்.

2025. புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயு
நிலமைந்து நீரைந்து நீர்மையு மைந்து
குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பா னொருவ
னுலம்வந்து போம்வழி யொன்பது தானே. (ங)

2026. அஞ்சுள சிங்க மடவியில் வாழ்வன
வஞ்சும்போய் மேய்ந்துதம் மஞ்சக மேபுகு
மஞ்சி னுகிரு மெயிறு மறுத்திட்டா
லெஞ்சா திறைவனை யெய்தலு மாமே. (ச)

2027. ஐவ ரமைச்சருட் டொண்ணூற் றறுவர்க
ளைவரு மைந்தரு வாளக் கருதுவ
ரைவரு மைந்து சினத்தொடே நின்றிடி
லைவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே. (ரு)

2028. சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறுஞ்
சொல்லகில் லேன்றிரு மங்கையு மங்குள
வெல்லகில் லேன்புல னைந்துடன் றன்னையுங்
கொல்லநின் றோடுங் குதிரையொத் தேனே. (சு)

2029. எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை
யெண்ணிலி யில்லியோ டேகிற் பிழைதரு
மெண்ணிலி யில்லியோ டேகாமை காக்குமே
லெண்ணிலி யில்லதோ ரின்பம தாமே. (எ)

2030. விதியின் பெருவலி வேலைசூழ் வையந்
துதியின் பெருவலி தொல்வா னுலக
மதியின் பெருவலி மானிடர் வாழ்க்கை
நிதியின் பெருவலி நீர்வலி தானே. (அ)

---

2025. புலமைந்து=இந்திரிய ஸ்தானங்களைந்து; புலனைந்து=இந்திரியங்களைந்து; நிலமைந்து=சத்தாதி விஷயங்களைந்து; நீர்மை ஐந்து = அவ்விந்திரியங்களின் வியாபாரமைந்து; மேய்ப்பான்=சீவன்; உலம்வந்து = அலைந்து; ஒன்பது=நவத்துவாரம்.

2026. சிங்கம் = இந்திரியம்; அடவி = தத்துவக்காடு; அஞ்சகம்= இந்திரிய ஸ்தானங்களைந்து; உகிர் = நகம் (செல்லுதல்); எயிறு=பல் (பற்றுதல்); எஞ்சாது=தடைப் படாமல்.

2027. ஐந்தரு = பஞ்ச விஷயங்கள்; ஐவர்க்கிறை = இந்திரிய ராஜனான மனம்.

2028. திருமங்கை=அருட்சத்தி; தன்னை=மனத்தை.

2029. இல்லி=துளை; இருட்டறை=சரீரம்; எண்ணிலி=அளவிடப் படாதவனான சிவபிரான்; இல்லது=துவாதசாந்த ஸ்தலம்.

2030. நிதி=சமுத்திரம்.

உரு-வது ஐந்திந்திரிய மடக்கு முறைமை.

2031. குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்ட மமைந்ததோர் வாவியுள் வாழ்வன
பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்
திட்டன னியாமினி யேதமி லோமே. (க)

2032. கிடக்கு முடலிற் கிளரிந் திரிய
மடக்க லுறுமவன் றானே யமரன்
விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை
நடக்கி னடக்கு நடக்கு மளவே. (உ)

2033. அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலா
ரஞ்சு மடக்கு மமரரு மங்கில
யஞ்சு மடக்கில சேதன மாமென்றிட்
டஞ்சு மடக்கா வறிவறிந் தேனே. (ங)

2034. முழக்கி யெழுவன மும்மத வேழ
மடக்க வறிவென்னுங் கோட்டையை வைத்தேன்
பிழைத்தன வோடிப் பெருங்கேடு மண்டிக்
கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே. (ச)

2035. ஐந்தி லொடுங்கி லகலிட மாவது
வைந்தி லொடுங்கி லருந்தவ மாவது
வைந்தி லொடுங்கி லரன்பத மாவது
வைந்தி லொடுங்கி லருளுடை யாரே. (ரு)

---

2031. குட்டம்=ஆழம்; உள்ளது=உள்ளதாகிய; வட்டமமைந்தது=வட்டமாகவுள்ளது; வாவி=முகம்; மீன்=இந்திரியம்.

2032. விடக்கு=உடல்; இரண்டு=அருந்தல் பொருந்தல்; நடக்கு மளவு=பிராணவாயு சஞ்சரிக்கும்வரை.

2033. அசேதனம்=சடப்பொருள்; அடக்கா=அடக்காமல்.

2034. மும்மதவேழம் = இந்திரியம்; பிழைத்தன=அதைவிட்டுத் தவறியோடின; மண்டி=நிறைந்து; குலைக்கின்ற=அறிவை யழிக்கின்ற.

2036. பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கு
மருத்தமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே. (௬)

2037. இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த
கிளைக்கொன்று மீசனைக் கேடில் புகழோன்
றளைக்கொன்ற நாகமஞ் சாட லொடுக்கத்
துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே. (௭)

2038. பாய்ந்தன பூதங்க ளோந்தும் படரொளி
சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு
வாய்ந்துகொ ளானந்த மென்னு மருள்செய்யில்
வேய்ந்துகொண் மேலை விதியது தானே. (அ)

2039. நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில்
படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே. (௯)

2040. சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொரு ணீர்மே லெழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழவதிற் றூங்கலு மாமே. (௧0)

---

2036. பேய்த்தேர்=கானல்; அருத்தம்=பொருள்; அத்தனை=அவ்வளவு.

2037. வைத்த = கருணை வைத்த; கிளைக்கொன்றும் = (கிளைக்க வொன்றும்=மேம்படுமாறு பொருந்திய; தளைக்கொன்ற = சட்டுக் கடக்கும்படி; துளைக்கொண்ட தவ்வழி = சுழுமுனையில்; தூங்கும்=பொருந்தும்.

2038. ஆனந்தமென்னு மருள்செய்யில் = சிவாநந்தத்தில் தன்னை மறந்திருக்கும்படி செய்தால்; வேய்ந்துகொள் = அடக்கிக் கொள்ளத்தக்க; விதி=முறை.

2039. படர்க்கின்ற(படர்கின்ற)=பரந்து திரிகின்ற; பைய = மெதுவாக; குறி=உபதேசம்.

2040. பொருள் = உடல்; விடுமின்கள் = அடக்குங்கள்; குன்று= விஷயம்; தாங்கள்=தடுத்தல்.

2041. போற்றிசைத் துப்புனி தன்றிரு மேனியைப்
போற்றிசெய் மீட்டே புலனைந்தும் புத்தியா
னூற்றிசைக் கும்பின்னை யாருக்கு நாதனை
யூற்றுகை யுள்ளத் தொருங்கலு மாமே. (கக)

2042. தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே
யரிக்கின்ற வைவரை யாரு முணரார்
சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே. (கஉ)

2043. கைவிட லாவதொன் றில்லை கருத்தினு
ளெய்தி யவனை யிசையினு லேத்துமி
னைவ ருடைய வவாவினிற் றேன்றியே
பொய்வ ருடைய புலன்களு மைந்தே. (கங)

உரு-வது அசற்குரு நெறி.

2044. உணர்வொன்றி லாமூட னுண்மையோ ராதோன்
கணுவின்றி வேதா கமநெறி காணுன்
பணிவொன்றி லாதோன் பரநிந்தை செய்வோ
னணுவின் குணத்தோ னசற்குரு வாமே. (க)

2045. மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் வீடுந் தரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தூண்பொருட்
டந்தக ராவோ ரசற்குரு வாமே. (உ)

2041. மீட்டு=(விஷயங்களை யடையாவாறு) திருப்பி; ஊற்றுகை=அமிர்தப் பெருக்கு; ஒருங்கல்=கூடுதல்.

2042. சகளம்=சுத்த மாயா சொரூபம்; அரிக்கின்ற=ஒளிருகின்ற; சிரிக்கின்ற=பரிகசிக்கின்ற; வரி=உறுதி, மைசூழ்வரை=கருமைபொருந்திய ஆணவம்.

2043. இசையினல்=பண் முதலியவற்றால்; வருடைய புலன்களும்=மலையாட்டையொத்த (செயலினையுடைய) புலன்களும்.

2044. கணு = பொருத்துதல் (உபதேசம்); அணுவின்குணத்தோன்=பசுவின் குணமுள்ளவன் (பாசவறிவுடையவன்).

2045. ஊண்பொருட்டு = ஆகாரத்தினிமித்தம்; அந்தகராவோர்=அறிவில்லாதவர்; அசற்குரு=பொய்க்குரு.

2046. ஆமா றறியாதோன் மூட னதிமூடன்
காமாதி நீங்காக் கலதி கலதிகட்
காமாற சத்தறி விப்போ னறிவிலோன்
கோமா னலனசத் தாகுங் குரவனே. (௩)

2047. கற்பாய கற்பங்க ணீக்காமற் கற்பித்தாற்
றற்பாவங் குன்றுந் தனக்கே பகையாகு
நற்பா லரசுக்கு நாட்டுக்குங் கேடென்றே
முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே. (௪)

2048. குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முரணும் பழங்குழி வீழ்வர்கண் முன்பின்
குருடரும் வீழ்வர்கண் முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே. (௫)

உஎ-வது சற்குருநெறி.

2049. தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து தன்னை யறியத் தரவல்லோன்
றாடந்து தத்துவா தீதத்துச் சார்சீவன்
றாடந்து பாசந் தணிக்கு மவன்சத்தே. (க)

2050. தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோ
டவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதந்
தவிரவைத் தானமென் றாதுவர் கூட்டந்
தவிரவைத் தான்பிற வித்துயர் தானே. (உ)

2051. கறுத்த விரும்பே கனகம தானான்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தவப் போதே குருவருள் பெற்றான்
மறித்துப் பிறவியில் வந்தணு கானே. (௩)

---

2046. கலதி=பாவி; அசத்து=பொய்ப்பொருள், கோமானலன்=பெருமை யுடையவனல்லன்.

2047. கற்பங்கள்=சங்கற்பங்கள் (மனோராச்சியம்); கற்பித்தால்=உபதேசித்தால்; தற்பாவம்=ஆன்மவியல் (அறிவு); நற்பாலரசு=நன்னெறியுள்ள வரசன்; முற்பால்=முன்னால்.

2048. முரணும்=மாறுபட்ட; பழங்குழி=பாழ்ங்குழி; முன்பின்=முன்செல்பவன் முந்தியும், பின்செல்பவன் பிந்தியும்; முன்பின்னற=முன்பின்னென்னு முறையில்லாது.

2050. தவிர=ஒழிய; கோள் = குற்றம்; சிரத்தோடு=சிரசின்மேல்.

2052. பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையு
நேசத்து நாடி மலமற நீக்குவோ
ராசற்ற சற்குரு வாவோ ரறிவற்றுப்
பூசற் கிரங்குவோர் போதக் குருவன்றே. (௪)

2053. நேயத்தே நிற்கு நிமலன் மலமற்ற
நேயத்தை நல்கவல் லோனித்தன் சுத்தனே
யாயத்த வர்தத் துவமுணர்ந் தாரற்ற
நேயர்க் களிப்பவ னீடுங் குரவனே. (௫)

2054. பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
குருபரி சித்த குவலய மெல்லாந்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. (௬)

2055. தானே யெனநின்ற சற்குரு சந்நிதி
தானே யெனநின்ற தன்மை வெளிப்படிற்
றானே தனைப்பெற வேண்டுஞ் சதுர்பெற
வூனே யெனநினைந் தோர்ந்துகொ ளுன்னிலே. (௭)

2056. வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழி கண்டவர் காணு வழியைப்
பெரும்வழி யாநந்தி பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே. (௮)

---

2052. பூசற்கு—கலகத்துக்கு.

2053. நேயத்தே நிற்கும்=சிவபக்தியில் நிலைபெற்றுள்ள; நேயத்தை= சிவத்தை; ஆயத்தவர்—ஆராய்தற்குரியவர்; அற்றநேயர்க்கு= விருப்பமொழிந்த அன்பர்களுக்கு; அளிப்பவன் = உப தேசிப்பவன்.

2054. பரிசனவேதி = உலோகங்களைப் பொன்னாக மாற்றும் மருந்து; வரிசைதரும் = மேன்மையைத்தரும்; திரிமலம்= மூன்றுமலம்.

2055. தனைப்பெற = ஆன்மாவையுணர; சதுர்=பெருமை; ஊனே யென = இந்தச் சரீரத்திலேயே யென்று; உன்னில் = உனக்குள்.

2056. மாயாவழியை=மறையாத மார்க்கத்தை; கருவழி=பிறக்கும் மார்க்கம்.

2057. குருவென்ப வனேவே தாகமங் கூறும்
பரவின்ப னாகிச் சிவயோகம் பாவித்
தொருசிந்தை யின்றி யுயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே. (௯)

2058. சத்து மசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்
சித்து மசித்துஞ் சிவபரத் தேசேர்த்துச்
சுத்த மசுத்த மறச்சுக மானசொ
லத்த னருட்குரு வாமவன் கூறிலே. (௧௦)

2059. உற்றிடு மைம்மலம் பாச வுணர்வினாற்
பற்றறு நாத னடியிற் பணிதலாற்
சுற்றிய பேதந் துரியமூன் றுல்வாட்டித்
தற்பர மேவுவோர் சாதக ராமே. (௧௧)

2060. எல்லா மிறைவ னிறைவி யுடனின்ப
மல்லார் புலனும் வருங்கா லுயிர்தோன்றிச்
சொல்லா மலமைந் தடங்கியிட் டோங்கியே
செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே. (௧௨)

2061. ஈனப் பிறவியி லிட்டது மீட்டேட்டித்
தானத்து ளிட்டுத் தனையூட்டித் தாழ்த்தலு
ஞானத்தின் மீட்டலு நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலு முத்தன்றன் செய்கையே.

---

2057. பரவின்பன்=பேரின்ப வடிவினன்; சிந்தையின்றி = கவலையில்லாமல்; உயர்=கிளைத்தெழும்.

2058. சத்து=சிவம்; அசத்து = பாசம்; சதசத்து=ஆன்மா; சிவபரம்=சிவமாகியபரம்.

2059. ஐம்மலம்=பஞ்சமலம்; சுற்றிய பேதம்=பரவிய வேறுபாடு; தற்பரமேவுவோர்=சிவத்தையடைய முயலுவோர்.

2060. மல்லார் புலன்=வலிமையுள்ளபூமி; ஓங்கி=சிறந்து.

2061. மீட்டேட்டி=அதினின்றுந்திருப்பி, (போகங்களைப் புசிப்பித்து); தானத்துளிட்டு=புவனங்களில் இருத்தி; நாட்டலும்=நிலைபெறுவிப்பதும்; முத்தன் = அநாதிமலமுத்தனான சிவபிரான்.

2062. அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தொ டசித்தறத் தெளிவித்தச் சீவனைச்
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சத்துட னைங்கரு மத்திடுந் தன்மையே. (௧௪)

2063. ஈசத்து வங்கடந் தில்லையென் றப்புறம்
பாசத்து ளேயென்றும் பாவியு மண்ணலை
நேசத்து ளேநின்ற நின்மல னெம்மிறை
தேசத்தை யெல்லாந் தெளியவைத் தானே. (௧௫)

2064. மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டல
மாணிப்பொ னின்றங் கமுதம் விளைந்தது
பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றிருந்தார்க
ளூணுக் கிருந்தா ருணராத மாக்களே. (௧௬)

2065. அசத்தொடு சத்து மசத்சத்து நீங்க
விசைத்திடு பாசப்பற் றீங்கறு மாறே
யசைத்திரு மாயை யணுத்தானு மாங்கே
யிசைத்தானு மொன்றறி விப்போ னிறையே. (௧௭)

2066. ஏறு நெறியே மலத்தை யெரித்தலா
லீறி லுரையா லிருளை யறுத்தலான்
மாறிற் பசுபாசம் வாட்டலால் வீடுக
கூறு பரனே குருவா மியம்பிலே. (௧௮)

---

2062. சடம்=தேகம்; சத்துடன் = சத்தா(சிவமா)வதுடன்; ஐங் கருமம்=சிருட்டியாதி தொழில்.

2063. ஈசத்துவம் = சிருஷ்டியாதி தொழில்; பாவியும் = பாவனை யுடைய வெனக்கு; நேசம்=அன்பு; தெளியவைத்தான்= தானுகத் தெளியுமாறு செய்தான்.

2064. மாணிக்க மாலை=மாணிக்க மணிபோலுஞ் செவ்வொளியுள்ள கிரண நிரைகள்; மலர்ந்து = பரந்து; ஆணிப்பொன்=உயர்ந்த பொன்போலுஞ் சிவம்; ஊணுக்கு = சோறுண்பதற்கு.

2065. அசத் சத்து = சீவத்துவம்; இசைத்திடு = கூட்டப்பட்ட; அணு=சீவான்மா; இசைத்தானும்=கூட்டினவனும்; ஒன்று= உண்மை.

2066. உரையால்=உபதேசத்தால்; மாறில்=ஒழியாத; பசு பாசம்= ஆன்மாவினது சகஜமலம்; கூறு=(பிரபஞ்சத்துக்கு அன்னிய மானவனென்று) சொல்லும்.

## உ அ - வது கூடாவொழுக்கம்.

2067. கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி யில்லை யிடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந் தாரே. (க)

2068. செய்தா னறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பு மனிதர்கள்
மெய்தா னுரைக்கில்விண் ணோர்தொழச் செய்வன்
மைகான் றிலங்கு மணிமிடற் றோனே. (உ)

2069. பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு
மத்தகர்க் கன்றோ மறுபிறப் புள்ளது
வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும்
பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே. (ங)

2070. வடக்கு வடக்கென்பர் வைச்சதொன் றில்லை
நடக்க வுறுவரே ஞானமி லாதார்.
வடக்கி லடங்கிய வையக மெல்லா
மகத்தி லடங்கு மறிவுடை யோர்க்கே. (ச)

2071. காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்து ணின்ற கருத்தறி யாரே. (ரு)

2072. கண்காணி யாகவே கையகத் தேயெழுங்
கண்காணி யாகக் கருத்து ளிருந்திடுங்
கண்காணி யாகக் கலந்து வழிசெய்யுங்
கண்காணி யாகிய காதலன் றானே. (சு)

---

2067. கண்காணி=மேற்பார்வையிடுவோன்; கண்காணியாக=இடமெல்லாந் தனக்குரிமையாக; கண்காணி கண்டார்கள் = அகக்கண்ணினால் தமக் குரியவனாகப் பார்த்த யோகிகள்.

2068. வட்டம்=பூமி; புலம்பும்=கூறி வருந்தும்; மெய்தான்=சிவத்தை.

2069. பத்தி = சிவபக்தி; பகலைக் கழிவிடும் = நாளைக்கழிக்கும்; மத்தகர்=மதிமயங்கினவர்கள்; வித்து=ஜனனத்துக்காதாரமான கன்மம்; விளைபுலம்=கர்ப்பாசயம்; பித்தர்=ஞானிகள்.

2071. காயக்குழப்பன்=ஆன்மாவைச் சரீரத்தோடு சேர்க்கிறவன்; காயநன்னாடன் = சரீரத்தைச் சிறந்த கோயிலாகவுடையவன்; கமழ்கின்ற=விளங்குகின்ற.

2072. கண்காணியாக=பிரத்தியட்சமாக; காதலன்=சிவபிரான்.

**2073.** கன்னி யொருசிறை கற்றோ ரொருசிறை
மன்னிய மாதவஞ் செய்வோ ரொருசிறை
தன்னியல் புன்னி யுணர்ந்தோ ரொருசிறை
யென்னிது வீச னியல்பறி யாரே. (எ)

**2074.** காணாத கண்ணிற் படலமே கண்ணொளி
காணாத வர்கட்குங் காணாத வவ்வொளி
காணாத வர்கட்குங் கண்ணும் பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே. (அ)

**2075.** பித்தன் மருந்தாற் றெளிந்து பிரகிருதி
யுய்த்தொன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி
யத்தன்மை யாதல்போ னந்தி யருடரச்
சித்தந் தெளிந்தேன் செயலொழிந் தேனே. (கூ)

**2076.** பிரான்மய மாகப் பெயர்ந்தன வெட்டும்
பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார்
சுராமய முன்னிய சூழ்வினை யாளர்
நிராமய மாக நினைப்பொழிந் தாரே. (கo)

**2077.** ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றாயினோர்க்
கொன்று மிரண்டு மொருகாலுங் கூடா
வொன்றிரண் டென்றே யுரைதருவோர்க்கெலா[தே.
மொன்றிரண் டாய்நிற்கு மொன்றேடொன் றான

2073. கன்னி யொருசிறை = சத்தி(நிபாதப்பேற்றினர்) ஒருபுறம் ; தன்னியல்புன்னி யுணர்ந்தோ ரொருசிறை = ஆன்மசொரூபத்தை யாராய்ந்து ஞானமெய்தின ரொருபுறம்; என்னிது= என்ன ஆச்சரியம்.

2074. படலம்=மறைப்பு; காணாதவர்=காணவிரும்பாதவர்; காணாதவர்=குருடர் ; காணாது கண்டவர்=சீவபோதமின்றித் தரிசிக்கும யோகிகள்.

2075. பிரகிருதி=பித்த சுபாவம்; விழியும்=நேத்திரமும்; அத்தன்மையாதல்போல்=ஒளியுடைய தன்மை யாவதுபோல்.

2076. பெயர்ந்தன=நடை பெறுகின்ற; எட்டும்=எட்டு வகையான பிரபஞ்சமும் (பூதம் ஐந்து, சந்திரன்,சூரியன்,ஆன்மா); பராமயம் = சிவமயம்; பள்ளி = அறிதுயில் ; சுராமயம் = பரமாநந்தவடிவம்; நிராமயம்= துன்பமின்மை.

2077. ஒன்றிரண்டாகி=சிவத்தொடு வேறாகி; ஒன்றாயினோர்=சிவத்தொடு ஐக்கியமானவர்; ஒன்று மிரண்டும் = மும்மலம்; ஒன்றேடொன்று=துவிதம்.

2078. உயிரது நின்ற வுணர்வெங்கு நிற்கு
மயரறி வில்லையா லாருடல் வீழு
முயிரு முடனு மொருங்கிக் கிடக்கும்
பயிருங் கிடந்துள்ளப் பாங்கறி யாரே. (கஉ.)

2079. உயிரது வேறா யுணர்வெங்கு மாகு
முயிரை யறியி லுணர்வறி வாகு
முயிரன் றுடலை விழுங்கு முணர்வை
யயரும் பெரும்பொரு ளாங்கறி யாரே. (கங)

2080. உலகாணி யொண்சுட ருத்தம சித்த
னிலவாணி யைந்தினு ணேருற நிற்குஞ்
சிலவாணி யாகிய தேவர் பிரானைத்
தலைவாணி செய்வது தன்னை யறிவதே. (கச)

2081. தானந்த மாமென நின்ற தனிச்சுட
ரூனந்த மாயுல காய்நின்ற வொண்சுடர்
தேனந்த மாய்நின்ற சிற்றின்ப நீயொழி
கோனந்த மில்லாக் குணத்தரு ளாமே. (கரு)

---

2078. உயிரது=பிராணவாயு; அயரறிவு = மறந்து நினைக்குமறிவு; ஒருங்கி = கலந்து; பயிர் = விளைவு (வாழ்வு); உள்ளப் பாங்கு=ஆன்மாவின் தன்மை.

2079. உயிரை=ஆன்மாவாகிய தன்னை; உணர்வு=அந்த உணர்ச்சி; உயிரன்று=உயிரை யொழிந்து; உடலை விழுங்கு முணர்வு= சரீரத்தை யொழிக்கும் ஞானம்; அயரும் = மறைக்கச் செய்யும்.

2080. உலகாணி=உலகத்துக்குறுதியாகும்; நிலவாணி ஐந்தினுள்= பூமிமுதலான வுறுதியுள்ள ஐந்து பூதங்களிலும்; நேருற= சமனாய்; சிலவாணி=சூட்சுமம்; தலைவாணி செய்வது=தன் னிடத்து வாழ்பவனாகச் செய்தல்.

2081. தானந்தமாம் = (எல்லாவற்றுக்கும்) தானே முடிவிடமாம்; ஊனந்தமாய்=உடம்பிறுதியாக; தேனந்தமாய் = தேன் போலு மினிமையாய்; கோனந்தமில்லாக்குணத்து=சிவத் தினது முடிவில்லாத கருணையினால்; அருள் = பேரின்பம் (சித்திக்கும்).

2082. உன்முத லாகிய வூனுயி ருண்டெனுங்
கன்முத லீசன் கருத்தறி வாரில்லை
நன்முத லேறிய நாம மறநின்றாற்
றன்முத லாகிய தத்துவ மாமே. (கசு)

2083. இந்திய மந்தக் கரண மிவையுயிர்
வந்தன சூக்க வுடலன்று வானது
தந்திடு மைவிதத் தாற்றற் புருடனு
முந்துள மன்னுமா றாறு முடிவிலே. (கள)

உகூ-வது கேடுகண்டிரங்கல்.

2084. வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவா
ரற்றதம் வாணா ளறிகிலாப் பாவிக
ளுற்ற வினைத்துய ரொன்று மறிகிலார்
முற்றொளி தீயின் முளிகின்ற வாறே. (க)

2085. போது சடக்கெனப் போகின் றதுகண்டு
வாதுசெய் தென்னோ மனிதர் பெறுவது
நீதியுள் ளேநின்று நின்மலன் றாளணிந்
தாதியை யன்பி லறியகில் லார்களே. (உ)

2086. கூடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி
யுடம்பினை யோம்பி யுயிராத் திரிவர்
தடங்கொண்ட சாரற் றழன்முரு டேறி
யிடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே. (ஙு)

---

2082. உன் முதல்=மன மயங்குதற்கு மூலம்; கல் = கயிலை மலை; நன்முதல்=பிறப்புக்குக் காரணமான காம வெகுளி மயக்கம்; நாமம்=பெயர்; தன்முதல்=தனது தலைமை.

2083. ஐவிதத்தால்=சிரவண மனன நிதித்தியாசன சமாதி சாட்சாத்காரமென்னும் ஐவகையால்; ஆறு முடிவு = முப்பத்தாறு தத்துவத்தின் முடிவிலுள்ள சிவம்.

2084. பொதிவார்=கட்டிவைப்பார்கள்; நாற்றுவார் = நாற்று உண்டாக்குவார்; தீயின் = (விட்டிற்பூச்சி) விளக்கால்; முளிகின்ற=மடிகின்ற.

2085. சடக்கென=விரைவாக.

2086. கையரையூட்டி=வஞ்சகரை யுண்பித்து; உயிராத்திரிவார் = சீவித்து அலைவார்கள்; சாரல்=இடுகாடு; முருடு=சிதை (ஈம விறகு).

2087. விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லானிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை யோராப் பழிமொழி யாள
ருரந்தன்மை யாக வொருங்கிநின் றாரே. (௪)

2088. நின்றபுகழு நிறைதவத் துண்மையு
மென்றுமெம் மீச னடியவர்க் கேநல்கு
மன்றி யுலக மதுவிது தேவென்று
குன்றுகை யாலே குறைப்பட்ட வாறே. (௫)

2089. இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந்
தின்பத்து ளேநினைக் கின்ற திதும்மறந்
துன்பத்து ளேசிலர் சோறுடுங் கூறையென்
றுன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே. (௬)

2090. பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. (௭)

2091. ஆர்வ மனமு மளவி லிளமையு
மீரமு நல்லவென் றின்புறு காலத்துத்
தீர வருவதோர் காமத் தொழினின்று
மாதவ னின்ப மறந்தொழிந் தார்களே. (௮)

2092. இப்பரி சேயிள ஞாயிறு போலுரு
வப்பரி சங்கியி னுள்ளுறை யம்மானை
யிப்பரி சேகம லத்துறை யீசனை
மெய்ப்பரி சேவின வாதிருந் தோமே. (௯)

2087. நால்வர்க்கும் = ஸனகாதி நான்கு முனிவர்கட்கும்; பரந்தன்னை=மேலான ஞானத்தை; உரந்தன்மையாக=தமது இதயத்தின் (எண்ணத்தின்) அளவாக.

2088. குன்றுகை = குறைதல்; குறைபட்ட = (புகழும் தவமும்) குறைவாயின.

2089. இன்பம்=சிவம்; கூறை=ஆடை; மறந்து, என்று—இவை சந்தவின்ப நோக்கிக் கடைக்குறைந்து நின்றன.

2090. பெறுதற்கரிய பிராணிகளெல்லாம் = சிறப்புற்றிருந்த மனிதர்களெல்லாரும்; பேறிழந்தார் = மோட்சமில்லாமற்போயினார்கள்.

2091. தீரவருவது = சிவபத்தி ஒழியவருதல்; மாதவ னின்பம் = சிவானந்தம்.

2092. அங்கியின்=உயிரின்கண்; அம்மானை=சிவபிரானை; கமலத்து=இதயதாமரையில்; மெய்ப் பரிசு=உண்மை நெறி.

2093. கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்
தாடவல் லாரவர் பேறெது வாமே. (க0)

2094. நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்
நஞ்செம் பிரானென்று நாதனை நாடொறுந்
துஞ்சு மளவுந் தொழுமின் றொழாவிடி
லஞ்சுற்று விட்டதோ ராணையு மாமே. (கக)

2095. மிருக மனிதர் மிக்கோர் பறவை
யொருவர்செய் தன்புவைத் துன்னுத தில்லை
பருகுவ ரோடுவர் பார்ப்பயன் கொள்வர்
திருமரு மாதவஞ் சேர்ந்துணர்ந் தாரே. (கஉ)

2096. நீதியி லோர்பெற்ற பொன்போ லிறைவனைச்
சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை
யாதி யயனென் றமரர் பிரானென்று
நாதியே வைத்தது நாடுகின் றேனே. (கங)

2097. இருந்தேன் மலர்களைந் தின்புற வண்டு
பெருந்தே னிழைக்கின்ற பெற்றிமை யோரார்
வருந்தே னுகராது வாய்புகு தேனை
யருந்தேனை யாரு மறியகி லாரே. (கச)

2098. கருத்தறி யாது கழிந்தன கால
மருத்தியுள் ளானம ராபதி நாத
னொருத்தனுள் ளானுல கத்துயிர்க் கெல்லாம்
வருத்திநில் லாது வழுக்குகின் றாரே. (கரு)

---

2094. நஞ்செம்பிரான் = நமது நன்மையான கடவுள்; துஞ்சுமள வும்=சாகும்வரையும்; அஞ்சற்றுவிட்டது=ஐம்புலனால் கட் டுப்பட்டு வருந்துவது.

2095. பார்ப்பயன்=பூமியிற் பிறந்ததின் பிரயோசனத்தினை; திரு மரு = சிறப்புப்பெறும்; உணர்ந்தார்=சிவத்தை யறிந்தார்.

2096. நீதி=முறைமை; நாதி=(முதற்குறை) அநாதி.

2097. மலர் களைந்து=பூக்களைக் கிண்டி.

2098. அருத்தி = அன்பு; அமராபதி நாதன் = தேவலோகங்கட் கிறைவன்; வருத்தி = தவத்தால் உடலைவாட்டி; வழுக்கு கின்றார்=நெறி தவறுகின்றார்கள்.

2099. குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய்
விதித்தன நாட்களும் வீழ்ந்து கழிந்த
வதிர்த்திருந் தென்செய்தீ ராறுதி ராகில்
கொதிக்கின்ற கூழிற் றுடுப்பிட லாமே. (கசு)

2100. கரையரு காறுக் கழனி விளைந்த
திரையரு காமுன்னஞ் சேர்ந்தின்ப மெய்தும்
வரையரு கூறிய மாதவ நோக்கி
னரையுரு வஞ்செல்லு நாளில வாமே. (கஎ)

2101. வரவறி வானை மயங்கிருண் ஞாலத்
திரவறி வானை யெழுஞ்சுடர்ச் சோதியை
யரவறி வார்முன் னொருதெய்வ மென்று
விரவறி யாமலே மேல்வைத்த வாறே. (கஅ)

---

கூo-வது இதோபதேசம்.

2102. மறந்தொழி மண்மிசை மன்னுப் பிறவி
யிறந்தொழி காலத்து மீசனை யுள்கும்
பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்
சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரே. (க)

2103. செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசா லுரைமின்கள் வாய்மையை
யில்லை யெனினும் பெரிதுள னெம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீரே. (உ)

---

2099. அதிர்த்து = ஆரவாரமாய்ப் பேசி; ஆறுதிராகில் = மனோ விருத்தி யடக்கியிருக்கப் பெறுவீராயின்; கொதிக்கின்ற கூழ்=அக்கினிமய (அறிவுவடிவ) சிவம்; துடுப்பிடல் = ஜீவ னொருமை யடைதல்.

2100. கரையருகு=சித்தவிருத்தியின் முடிவு; ஆறு=சிவம்; கழனி= ஆநந்தம்; திரை = முதுமை; வரையருகூறிய = ஆநந்தம் சித்தத்தின்கண் மிகும்; நரையுருவம்=விருத்தாப்பியவடிவு.

2101. வரவு=தோற்றம்; இரவு=முடிவு; அரவறிவார் = சொல்லத் தெரிவார்; விரவு = கலத்தல்.

2102. உள்கும்=தியானியுங்கள்; அலமந்து=கலங்கி.

2103. செல்லுமளவும் = கூடியமட்டும்; வல்லபரிசால் = இயன்ற வளவினதாக.

2104. ஒன்றே குலமு மொருவனே தேவனு
நன்றே நினைமி னமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. (௩)

2105. போற்றி செயந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் குந்நடு வாய்நின்ற நம்பனைக்
காற்றிசைக் குங்கடை யாக்கையைக் கைக்கொண்டு
கூற்றுதைத் தான்றன்னைக் கூறிநின் றுய்மினே. (௪)

2106. இக்காய நீங்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி தேடுமி
னெக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்
றக்கால முன்ன வருள்பெற லாமே. (௫)

2107. போகின்ற வாறே புகுகின்ற வப்பொரு
ளாகின்ற போது மரனறி வானுளன்
சாகின்ற போதுந் தலைவனை நாடுமி
னாகின்ற வப்பொரு ளக்கரை யாகுமே. (௬)

2108. பறக்கின்ற வொன்று பயனுற வேண்டி
னிறக்கின்ற காலத்து மீசனை யுள்குஞ்
சிறப்பொடு சேருஞ் சிவகதி பின்னைப்
பிறப்பொன்றி லாமையும் பேருல காமே. (௭)

2109. கூடியு நின்றுந் தொழுதெம் மிறைவனைப்
பாடியு ளேநின்று பாதம் பணிமின்க
ளாடியு ளேநின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய வீற்றுப் பசுவது வாமே. (௮)

2110. விடுகின்ற சீவனர் மேலெழும் போது
நடுநின்று நாடுமி னாதன்றன் பாதங்
கெடுகின்ற வல்வினை கேடில் புகழோ
னிடுகின்று னும்மை யிமையவ ரோடே. (௯)

---

2105. காற்றிசைக்கும்=பிராணவாயுவால் நடத்தப்படும்.

2107. அக்கரை=பயனுடையது.

2108. பறக்கின்ற=பிரிந்துபோகின்ற.

2109. ஈற்றுப் பசுவதுவாம் = கன் றீன்றுள்ள ஆவினை யொத்தவ ராவார்.

2110. விடுகின்ற=தேகத்தைவிட்டு நீங்குகிற; கெடுகின்ற = ஒழி கின்றன.

2111. ஏறுடை யாயிறை வாவெம் பிரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்க
ளாறணி செஞ்சடை யண்ண றிருவடி
வேறணி வார்க்கு வினையில்லை தானே. (௧0)

2112. இன்புறு வீரறிந் தேயெம் மிறைவனை
யன்புறு வீர்தவஞ் செய்யுமெய்ஞ் ஞானத்துப்
பண்புறு வீர்பிற வித்தொழி லேநின்று
துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரே. (கக)

2113. மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவ மொன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளு மொன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி யொன்றுண்டு
மேற்கொள்ள லாம்வண்ணம் வேண்டிநின் றோர்க்கே.

2114. சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணல்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடுங்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடுஞ்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. (கந)

2115. முத்தியை ஞானத்தை முத்தமி ழோசையை
யெத்தனை காலமு மேத்துவ ரீசனை
நெய்த்தலை பால்போ னிமலனு மங்குள
னத்தகு சோதி யதுவிரும் பாரே. (கச)

2116. நியமத்த னாகிய நின்மலன் வைத்த
வுகமெத் தனையென் றொருவருந் தேறார்
பவமத்தி லேவந்து பாய்கின்ற தல்லாற்
சிவமத்தை யொன்றுந் தெளியகில் லாரே. (கரு)

---

2111. வேறணிவார்க்கு=பலவகையாகத் துதிப்பார்க்கு.

2114. இன்னாப்பிறவி=துன்பந் தருகின்ற பிறப்பு; கூர்ந்தவர்க்கு=அன்புமிகுந்தவர்களுக்கு; அங்கு=அன்புசெய்த விடத்தில்.

2115. நெய்த்தலை பால்போல்=(பால்தலை நெய்போல்) பாலினிடத்தில் நெய்கலந் திருத்தல்போல்.

2116. நியமத்தன்=நியமனஞ் செய்கிறவன்; பவமத்திலே = பிறப்பிலே; பாய்கின்றது=இறப்பது.

2117. இங்கித்தை வாழ்வு மெனைத்தோ ரகிதமுந்
துஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை
விஞ்சத் துறையும் விகிர்தா வெனநின்னை
நஞ்சற் றவர்க்கன்றி நாடவொண் ணாதே. (௧௬)

2118. பஞ்சமு மாம்புவி சற்குரு பான்முன்னி
வஞ்சக ரானவர் வைகி லவர்தம்மை
யஞ்சுவ னாத னருநர கத்திடுஞ்
செஞ்சநிற் போரைத் தெரிசிக்கச் சித்தியே. (௧௭)

2119. சிவனை வழிபட்டா ரெண்ணிலாத் தேவ
ரவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
யவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே. (௧௮)

2120. நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக்
கருமங்க ளாலே கழிதலிற் கண்டு
குருவென்ப வன்ஞானி கோதில னாற்
பரமென்ற லன்றிப் பகர்வொன்று மின்றே. (௧௯)

2121. ஆட்கொண் டவர்தனி நாயக னன்புற
மேற்கொண் டவர்வினை போயற நாடோறு
நீர்க்கின்ற செஞ்சடை நீள னுருவத்தின்
மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே. (௨0)

அதிகாரம் ௩௧ - க்குப் பாடல் ௬௧௮.

ஏழாந்தந்திரம் முற்றிற்று.

---

2117. எனைத்தோ ரகிதமும் = எவ்வகையான துன்பமும்; துஞ்சொத்த = மரணநேர்ந்த; தூய் மணி = படிக மணி; விஞ்சத்து=பிரபஞ்சங் கடந்தவிடத்து; நஞ்சு=மோகம்.

2118. செஞ்ச நிற்போர் = (குரு பணிவிடையில்) செவ்வையாக வொழுகுவோர்.

2120. கோதிலனால் = (ஒருவன்) மாயை யற்றவனா யிருந்தால்; பரமென்றலன்றி=(அவனை) சிவமென்பதே யல்லாமல்.

2121. உருவத்தின் மேற்கொண்ட=உருவத்தை யெடுத்துப் பிறத்தலாலுண்டான; ஆறலை = அலைச்சலை; வீவித்துளான் = கெடுமாறு செய்வன்.

## க-வது உடலிற்பஞ்சபேதம்.

2122. காயப்பை யொன்று சரக்குப் பலவுள
மாயைப்பை தன்னிலே மற்றுமோர் பையுண்டு
காயப்பைக் குண்ணின்ற கள்வன் புறப்பட்டான்
மாயப்பை மண்ணு மயங்கிய வாறே. (க)

2123. அத்த னமைத்த வுடலிரு கூறினிற்
சுத்தம தாகிய சூக்குமஞ் சொல்லுங்காற்
சத்த பரிச வுரூப ரசகந்தம்
புத்திமா னங்காரம் புரியட்ட காயமே. (உ)

2124. எட்டினி லேந்தாகு மிந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாயிடு
மொட்டிய பாச முணர்வது வாகவே
கட்டி யவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே. (௩)

2125. இரத முதிர மிறைச்சிதோன் மேதை
மருவிய வத்தி வழும்பொடு மச்சை
பரவிய சுக்கிலம் பாழா முப்பாதி
யுருவம லாவுட லொன்றென லாமே. (௪)

2126. ஆரே யறிவா ரடியின் பெருமையை
யாரே யறிவா ரங்கவர் நின்றது
வாரே யறிவா ரறுபத்தோ டாக்கையை
யாரே யறிவா ரடிக்காவ லானதே. (௫)

---

2122. காயப்பை=சரீரமாகிய பை; சரக்கு=ஊன் முதலிய பொருள்கள்; மாயப்பை=மாயையாலான அந்தவுடம்பு; கள்வன் = ஆன்மா.

2123. உடலிரு கூறு=ஸ்தூலஞ் சூக்குமமென்னு மிரண்டெம்பு;சூக்குமம்=சூட்சுமசரீரம்; மான்=மனம்; புரியட்டகாயம்=சூட்சும சரீரம்.

2124. எட்டினில் = புரியட்டக சரீரத்தில்; ஒட்டிய=அநாதி சம்பந்தமாகும்; கட்டியவிழ்த்தல்=பந்தம் வீடு.

2125. இரதம்=அன்னரசம்; வழும்பு=நிணம்; உபாதி = காரியம்; உடலொன்றெனலாமே=சரீரத்தைத் தனிமையாக வொரு பொருள் என்று சொல்லக்கூடுமோ.

2126. அடி=ஈசன்; அவர் = சிவபெருமான்; அறு = நீங்கும்; பத்தோடு=தச வாயுக்களோடு; அடிக்கு ஆவல் = சிவத்திற்கு ஆலயம்.

2127. எண்சா ணளவா லெடுத்த வுடம்புக்குட்
கண்கா லுடலிற் கரக்கின்ற கைகளிற்
புண்கா லறுபத்தெட் டாக்கை புணர்க்கின்ற
நண்பா லுடம்புதன் னாலுடம் பாமே. (௬)

2128. உடம்புக்கு நாலுக் குயிராய சீவ
னொடுங்கும் பரனோ டொழியாப் பிரமங்
கடங்தொறு நின்ற கணக்கது காட்டி
யடங்கியே யற்றது வாரறி வாரே. (௭)

2129. ஆறந்த மாகி நடுவுடன் கூடினாற்
றேறிய மூவாறுஞ் சிக்கென் றிருந்திடுங்
கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியே
யூறு முடம்பை யுயிருடம் பெண்ணுமே. (௮)

2130. மெய்யினிற் றால மிகுத்த முகத்தையும்
பொய்யினிற் சூக்கம் பொருந்து முடலையுங்
கையினிற் றுல்லியங் காட்டு முடலையு
மைய னடிக்கு ளடங்கு முடம்பே. (௯)

2131. காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்
சேய விடமண்மை செல்லவும் வல்லது
காயத் துகிற்போர்வை யொன்றுவிட் டாங்கொன்றிட்
டேயு மவரென்ன வேய்ந்திடுங் காயமே. (௰)

2127. அறுபத்தெட்டு=புற நிலைக்கருவிகள் அறுபதும், புரியட்டகமும்.

2128. நாலுடம்பு = ஸ்தூலம் சூட்சுமம் காரணம் மகா காரணம் என்னு நால்வகைச் சரீரங்கள்; நின்ற = (பிரதி பிம்பமாக) இருக்கின்ற.

2129. ஆறு=ஆறு அத்துவாக்கள்; நடு=சிவம்; மூவாறும், கலைகள் பதினெட்டும்-தசவாயு, புரியட்டகம்.

2130. முகத்தையும்=பொருத்தத்தையும் ; பொய்=ஸ்தூல வுடல்; துல்லியங்காட்டு முடல்=காரணசரீரம்.

2131. கடும்பரி = வேகமான குதிரை; கால்வைத்து வாங்கல் போல் = காலையூன்றிப் பாய்ந்து செல்லுதல்போல; சேய= தூரமான; அண்மை = சமீபம்; வேய்ந்திடும் = தரித்துக் கொள்ளும்.

2132. நாக முடலுரி போலுநல் லண்டச
மாக நனவிற் கனமறந் தல்லது
போகலு மாகு மரனரு ளாலேசென்
றேகு மிடஞ்சென் றிருபய னுண்ணுமே. (கக)

2133. உண்டு நரக சுவர்க்கத்தி லுள்ளன
கண்டு விடுஞ்சூக்கங் காரண மாச்செல்லப்
பண்டு தொடரப் பரகாய யோகிபோற்
பிண்ட மெடுக்கும் பிறப்பிறப் பெய்தியே. (கஉ)

2134. தானவ னாகிய தற்பரந் தாங்கினோ
னானவை மாற்றிப் பரமத் தடைந்திடு
மேனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானு நிலனும் புகுந்தும் வருந்துமே. (கங)

2135. ஞானிக்குக் காயஞ் சிவமே தநுவாகும்
ஞானிக்குக் காய முடம்பே யதுவாகு
மேனிற்கும் யோகிக்கு விந்துவு நாதமு
மோனிக்குக் காயமுப் பாழ்கெட்ட முத்தியே. (கச)

2136. விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதநு
வெஞ்ஞானத் தோர்க்குத் தநுமாயை தானென்ப
வஞ்ஞானத் தோர்க்குக் கன்ம தநுவாகு
மெஞ்ஞானத் தோர்க்குச் சிவதநு மேவுமே. (கரு)

---

2132. உரி=சட்டை (தோல்); அண்டசமாக=(பறவைக் குஞ்சுகள்) முட்டையி னின்றும் வெளிப்படுதல்போல்; நனவிற் கன மறந்தல்லது=சாக்கிரத்திற் சொப்பனத்தை மறந்ததன்றி; இருபயன்=இருவினைகளின் பயனாகிய சுக துக்கங்களை.

2133. கண்டு, உண்டு = அறிந்தனுபவித்து; சூக்கங் காரணமா= சூக்கும தேக வாயிலாக; பண்டு = பழமையாய (இருவினை); பிண்டம் = சரீரம்.

2134. தாங்கினோன் = அதிகாரி புருடன்; ஆனவை = ஆணவ முதலியவற்றை; பரமத்து=மோட்சத்தில்; வினைக்கு=இரு வினைக்கு (தக்கவாறு).

2135. அதுவாகும்=சிவமாகும்; விந்துவும் நாதமும்=விந்து தத்துவ மும் நாததத்துவமும் (உடம்பாகும்).

2136. விஞ்ஞானத்தோர்=விஞ்ஞானகலர்; எஞ்(சு)ஞானத்தோர்= பிரளயாகலர்; அஞ்ஞானத்தோர் = சகலாகலர்; மெய்ஞ் ஞானம் என்பது எதுகை நோக்கி, மெஞ்ஞானமென இடைக் குறைந்து நின்றது.

2137. மலமென் றுடம்பை மதியாத வூமர்
தலமொன்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென் றிதனையே நாடி யிருக்கிற்
பலமுள்ள காயத்திற் பற்றுமிவ் வண்டத்தே. (கசு)

2138. நல்ல வசனத்து வாக்கு மனாதிகண்
மெல்ல விளையாடும் விமல னகத்திலே
யல்ல செவிசத்த மாதி மனத்தையு
மெல்லத் தரித்தார் முகத்தார் பசித்தே. (கஎ)

---

## உ-வது உடல்விடல்.

2139. பண்ணாகுங் காமம் பயிலும் வசனமும்
விண்ணாம் பிராணன் விளங்கிய சத்தமும்
புண்ணா முடலிற் பொருந்து மனத்தையு
மண்ணாந்து பார்க்க வழியு முடப்பே. (க)

2140. அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிகண்
கழிகின்ற காலவ் விரதங்க டான
மொழிகின்ற வாக்கு முடிகின்ற நாடி
யொழிகின்ற வூனுக் குறுதுணை யில்லையே. (உ)

2141. இலையா மிடையி லெழுகின்ற காம
முலைவாய நெஞ்சத்து மூழ்கு முளத்துத்
தலையாய மின்னுடற் றாங்கித் திரியுஞ்
சிலையாய சித்தஞ் சிவமுன் னிடைக்கே. (ங)

---

2137. தலமொன்றுவேறு = வெவ்வேறு பொருந்திய வுலகம்.

2138. அகத்தில் = இடத்தில்.

2139. பண் = இனிமை; அண்ணாந்து பார்க்க = ஆராய்ந்து சிவத்தை நோக்க.

2140. உறு துணை = (சிவத்தையன்றி) தக்க துணை.

2141. இலையாமிடையில் = இல்லையென்று கூறும்படி சிறுத்த இடை; சிலை = கல்.

### ௲-வது அவத்தைபேதம்.

(க) கீழாலவத்தை.

2142. ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங்
கைகண்ட பன்னான்கிற் கண்டங் கனாவென்பர்
பொய்கண்டி லாத புருட னிதயஞ் சுழுனை
மெய்கண் டவனுந்தி யாதுந் துரியமே. (க)

2143. முப்பதோ டாறின் முதனனை வைந்தாகச்
செப்பதி னான்காய்த் திகழ்ந்திரண் டொன்றாகி
யப்பதி யாகு நியதி முதலாகச்
செப்புஞ் சிவமீறாய்த் தேர்ந்துகொள் ளீரே. (உ)

2144. இந்திய மீரைந் தீரைந்து மாத்திரை
மந்திர மாய்நின்ற மாருத மீரைந்து
மந்தக் கரண மொருநான்கு மான்மாவும்
பந்தவச் சக்கரப் பாலது வாகுமே. (ங)

2145. பாரது பொன்மை பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரறு மாருதங் கறுப்பை யுடையது
வானகந் தூம மறைந்துநின் றாரே. (ச)

---

2142. ஐயைந்து = இருபத்தஞ்சு தத்துவங்கள்: அவை—ஞானேந்திரிய மைந்து, கன்மேந்திரிய மைந்து, வாயு பத்து, அந்தக்கரண நான்கு, புருஷனொன்று; மத்திமை = புருவ நடு; பன்னான்கு = பதினான்கு தத்துவங்கள்: அவை—வாயு பத்து, அந்தக்கரண நான்கு; கண்டங்கனா = கண்ட ஸ்தானத்தில் நிற்பது சொப்பனவத்தை; புருடன் = ஆன்மா; சுழுனை = சுழுத்தியவஸ்தை; உந்தி = நாபிஸ்தானம்.

2143. முப்பதோடாறின் = முப்பத்தாறு தத்துவங்களுடன் கூடி; முதல் நனை ஐந்தாக=சாக்கிரமுதல் ஐந்துவகையாக; அவை: ஜாக்கிரத்தில் ஜாக்கிரம், ஜாக்கிரத்தில் சொப்பனம், ஜாக்கிரத்தில் சுழுத்தி, ஜாக்கிரத்தில் துரியம், ஜாக்கிரத்தில் துரியாதீதம்; அதினான்காய் = அச்சாக்கிராவத்தையில் சாக்கிரமொழிந்த நான்கு வகையாய்; அவை: சாக்கிரத்தில் சொப்பன முதலிய நான்கு; இரண்டொன்றாகி (மூன்றாகி)=சாக்கிரத்தில் சுழுத்தி முதலிய மூன்றாய்; இரண்டாகி = சாக்கிரத்தில் துரிய முதலிய இரண்டாய்; ஒன்றாகி = சாக்கிரத்தில் துரியாதீதம் என்னும் ஒன்றாய்; நியதி = தத்துவ வமைப்பு; முதலாக=பிருதிவி முதலாக; சிவமீறாய்=சிவதத்துவ மிறுதியாக வைத்து.

2144. இந்திய மீரைந்து = ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்து; மாத்திரை யீரைந்து = சத்தாதி வசனாதி பத்து; மாருதம்=வாயு; சக்கரம்=சரீரம்.

2145. பார்=பிருதிவி; வானகம்=ஆகாயம்; காரறு=குற்றமற்ற.

**2146.** பூதங்க ளைந்தும் பொறியவை யைந்துள
மேதம் படஞ்செய் திருந்த புறநிலை
யோது மலங்குண மாகுமா தாரமோ
டாதி யவத்தைக் கருவிதொண் ணூற்றாறே. (ரு)

**2147.** இடவகை சொல்லி லிருபத்தஞ் சானை
படுபர சேனையும் பாய்பரி யைந்து
முடையவன் மத்திமை யுள்ளுற நால்வ
ரடைய நெடுங்கடை யைம்மொடு நான்கே. (சு)

**2148.** உடம்பு முடம்பு முடம்பைத் தழுவி
யுடம்பிடை நின்ற வுயிரை யறியா
ருடம்பொ டுயிரிடை நட்பறி யாதார்
மடம்புகு நாய்போன் மயங்குகின் றாரே. (எ)

**2149.** இருக்கின்ற வாறொருன் றறிகில ரேழைகண்
முருக்கு மசபையை மாற்றி முகந்து
கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந்
துருக்கொண்டு தொக்க வுடலொழி யாதே. (அ)

**2150.** ஒளித்திட் டிருக்கு மொருபதி னாலை
யளித்தன னென்னுள்ளே யாரியன் வந்து
வளிக்குங் கலைகளி னாலறு பத்து
வொளித்திட்டு வைத்தா னொடுங்கிய சித்தே. (கூ)

---

2146. ஏதம்=குற்றம்; கருவி=தத்துவம்.

2147. இருபத்தஞ்சு ஆனை = இருபத்தைந்து (தத்துவங்களாகிய) யானைகள்; படுபரசேனை = வேகத்தைக்கொண்டு செல்லும் வசனாதி யைந்தாகிய பதாதிகள்; பாய் பரி ஐந்து=விரைந்து செல்லும் சத்தாதி யைந்தாகிய குதிரைகள்; மத்திமை = மத்திமை வாக்கு; நால்வரடைய = நாலு வாக்கு மடங்க; கடை=வாயில்.

2148. முடம்பும் = வருத்தும் உடல்களையும்; உடம்பை = தூல வுடலை; நட்பு=அவற்றுக்குள்ள சம்பந்தம்.

2149. முருக்கும் = (ஜனனமரணங்களை) ஒழிக்கும்; அசபை = அஜபா காயத்திரி மந்திரம்; காமாரிசார = மன்மதனை யெரித்த சிவபெருமானை யடைய; முகம்=(அவனிருக்கும்) இடம்.

2150. பதினாலை=(வேத முதலிய) பதினான்கு வித்தைகளை; ஆரியன் = குரு அளிக்கும் = ஜீவித்திருக்கின்ற (நிலைபெற்ற); நாலறுபத்து=அறுபத்துநாலு கலைகள்; ஒடுங்கிய சித்து= (சித்தொடுங்கியது) (அவற்றால்) சித்தவிருத்தி யடங்கியது.

2151. மண்ணினி லொன்று மலர்நீரு மங்காகும்
பொன்னினி லங்கி புகழ்வளி யாகாய
மன்னு மனோபுத்தி யாங்கார மோரொன்று
முன்னின் முடிந்ததொரு பூத சயமே. (க0)

2152. முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்
கன்னிக்குப் பிள்ளைக ளைவர்மு னில்லை
கன்னியைக் கன்னியே காதலித் தானே. (கக)

2153. கண்டகன வைந்துங் கலந்தன தானைந்துஞ்
சென்றுண்ட நான்கு மொருங்கே யுணர்ந்தபின்
பண்டைய தாகிப் பரந்த வியாக்கிரத்
தண்டமுந் தானு யமர்ந்துநின் றானே. (கஉ)

2154. நின்றவ னிற்கப் பதினாலிற் பத்துநீத்
தொன்றிய வந்தக் கரணங்க ளான்குடன்
மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை
கன்றிய கண்டத்திற் கண்டான் கனவதே. (கங)

2155. தான மிழந்து தனிபுக் கிதயத்து
மான மழிந்து மதிகெட்டு மாலாகி
யான விரிவறி யாவவ்வி யத்தத்தின்
மேனி யழிந்து சுழுத்திய தாமே. (கச)

---

2151. பொன்னிலங்கி = பொன்போலுஞ் செந்நிறமுள்ள தீ; உன்னின் = (பிருதிவி முதலிய வெட்டையும்) சோதித்தறியின்.

2152. முன்னிக்கு = ஆகாயத்திற்கு, ஒரு மகன் = சத்தமொன்று; மூர்த்திக்கு = வாயுவிற்கு, இருவர் = சத்த ஸ்பரிசம்; வன்னிக்கு = தீக்கு, மூவர் = சப்த ஸ்பரிச ரூபம்; வதுவைக்கு = அப்புவிற்கு, நால்வர் = சப்த ஸ்பரிச ரூப ரசம்; கன்னிக்கு = பிருதிவிக்கு, ஐவர் = சப்த ஸ்பரிச ரூப ரச கந்தம்; முன = படைப்பிற்கு முன்னர்; கன்னியை = மாயையை; கன்னியே = மாயா சகித வீசனே; காதலித்தான் = (உலகாகப் படைக்க) விரும்பினன்.

2153. கனவைந்து = சொப்பனத்தி லுண்டாம் ஐந்தவஸ்தை; ஐந்து = இந்திரிய மைந்து; நான்கு = அந்தக்கரண நான்கு; வியாக்கிரத்து = (புலியொத்த) மனத்தால்.

2154. மன்று = உலகம்; மனைவாழ்க்கை = சாக்கிர வியாபாரம்; கண்டத்தில் = (சொப்பனவஸ்தைக்குரிய) கழுத்தில்.

2155. தானம் = கண்ட ஸ்தானம்; மாலாகி = மயங்கி; அவ்வியத்தம் = மூலப்பகுதி.

2156. சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி
கெழுமிய சித்தம் பிராணன்றன் காட்சி
யொழுகக் கமலத்தி னுள்ளே யிருந்து
விழுமப் பொருளுடன் மேவிநின் றானே. (கரு)

2157. தானத் தெழுந்து தருக்குந் துரியத்தின்
வானத் தெழுந்துபோய் வையம் பிறகிட்டுக்
கானத் தெழுந்த கருத்தின் றலையிலே
யூனத் தவித்தைவிட் டூமனின் றானே. (கசு)

2158. ஊமை யெழுத்தொடு பேசு மெழுத்துறி
லாமை யகத்தினி லஞ்சு மடங்கிடு
மோமய முற்றது வுள்ளொளி பெற்றது
நாமய மற்றது நாமறி யோமே. (கஎ)

2159. துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே
நரிகள் பதினாலு நஞ்சுண்டு செத்தன
பரிய புரவியும் பாறிப் பறந்தது
துரிய மிறந்திடஞ் சொல்லவொண் ணாதே. (கஅ)

2160. மாறா மலமைந்தான் மன்னு மவத்தையின்
வேறாய மாயா தநுகர ணாதிக்கிங்
கீறாகா தேயெவ் வுயிரும் பிறந்திறந்
தாறாத வல்வினை யாலடி யுண்ணுமே. (ககூ)

2161. உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையு
மண்ண லருள்பெற்ற முத்திய தாவது
நண்ண விலாவுயிர் ஞானத்தி னாற்பிறந்
தெண்ணுறு ஞானத்தி னேர்முத்தி யெய்துமே. ()

---

2156. காட்சி = வியாபாரம்; கமலம் = நாபி ஸ்தானம்; விழுமம் = மேன்மை.

2157. வானத்து=உள்ளமுடனே; கருத்தின் தலை=மூலாதாரத்தில்; ஊமன்=ஆன்மா.

2158. ஊமை யெழுத்து=பிரணவ சொரூபமாய பஞ்சமை வாக்கு; பேசுமெழுத்து=வைகரிவாக்கு; ஆமை=ஆமையின் ஐந்துறுப் படக்குதல் போல; நாமயம்=தற்போதம்.

2159. நரிகள் பதினாலு=ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு; புரவி=சத்த முதலிய விஷங்கள்; துரிய மிறந்திடம்=துரியாதீதம்.

2162. அதிமுட நித்திரை யாணவ நந்த
வதனு லுணர்வோ வருங்கன்ம முன்னித்
திதமான கேவல மித்திறஞ் சென்று
பரமாகா வையவத் தைப்படு வானே. (உக)

2163. ஆசான் முன்னேதுயின் மாண வகரைத்
தேசாய தண்டா லெழுப்புஞ் செயல்போ
னேசாய வீசனு நீடா ணவத்தரை
யேசாத மாயாடன் றாலே யெழுப்புமே. (உஉ)

2164. மஞ்சொடு மந்தா கினிகுட மாமென
விஞ்சறி வில்லோன் விளம்பு மிகுமதி
யெஞ்சலி லொன்றெனு மாறென விவ்வுட
லஞ்சுணு மன்னனன் றேபோ மளவே. (உங)

2165. படியுடை மன்னவன் பாய்பரி யேறி
வடிவுடை மாநகர் தான்வரும் போது
வடியுடை யைவரு மங்குறை வோருந்
துடியில்லம் பற்றித் துயின்றனர் தாமே. (உச)

2166. நேரா மலத்தை நீடைந் தவத்தையி
னேரான வாறுன்னி நீடு நனவினி
னேரா மலமைந்து நேரே தரிசித்து
நேராம் பரத்துட னிற்பது சித்தமே. (உரு)

(உ) மத்திய சாக்கிராவத்தை.

2167. சாக்கிர சாக்கிரந் தன்னிற் றிரோதாயி
சாக்கிர சொப்பனந் தன்னிடை மாமாயை
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியஞ்
சாக்கிரந் தன்னிற் றுரியத்து மாயையே. (உசு)

---

2162. நந்த=மிக; திதமான=நிலையான; கேவலம்=கீழாலாவத்தையில்; பரமாகா=சிறப்பற்ற.

2163. தேசாய=புகழுள்ள; தண்டால்=பிரம்பினால்; நேசாய=நேசமான; மாயாள்=மாயாசத்தி.

2164. மஞ்சொடு மந்தாகினி குடமாமென=நீர்போலும் நீர்க்குடம் போலும்; மதி=புத்தி; அஞ்சுணு மன்னன்=ஆன்மா.

2165. படியுடை மன்னவன் = ஆன்மா ; பரி=மனம் ; ஐவர் = ஞானேந்திரியங்கள்; உறைவோர்=கன்மேந்திரிய முதலியன.

2168. மாயை யெழுப்புங் கலாதியை மற்றதி
னேய விராகாதி யெய்ந்த துரியத்துத்
தோயுஞ் சுழுனை கனாநன வுந்தன்னி
யாயின னந்தச் சகலத்து ளானே. (உஎ)

2169. மேவிய வந்தகன் விழிகட் குருடனா
மாவயின் முன்னடி காணா மதுகண்டு
மேவுந் தடிகொண்டு செல்லும்விழிபெற
மூவயி னான்மா முயலுங் கருமமே. (உஅ)

2170. மத்திம மொத்த சிலந்தி வலயத்து
ளொத்தங் கிருந்து வுயிருண்ணு மாறுபோ
லத்தனு மைம்பொறி யாடகத் துண்ணின்று
சத்த முதலைந்துந் தானுண்ணு மாறே. (உகூ)

2171. வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு
முச்ச முடனணை வானொரு வன்னுளன்
பிச்சன் பெரிய பிறப்பிலி யென்றென்று
நச்சி யவனரு ளானுய்ந்த வாறே. (௩0)

2172. நாலா றுடன்புருட னற்றத் துவமூடன்
வேறான வையைந்து மெய்ப்புரு டன்பரங்
கூறா வியோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்வமே. (௩க)

2173. ஏலங்கொண் டாங்கே யிடையொடு பிங்கலை
கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு
மூலங்கொண் டாங்கே முறுக்கிமுக் கோணிலுங்
காலங்கொண் டானடி காணலு மாமே. (௩உ)

---

2168. சகலத்துளான்=சகல கருவிகளுடன் கூடியிருக்கும் அவசரமான சகலாவத்தை யுடையவன்.

2169. மூவயினான்மா=விஞ்ஞானகலர் முதலிய சீவர்கள்.

2170. ஆடகத்து=ஆடுகின்ற சரீரத்தில்.

2171. வகையிருபத்தஞ்சு=இருபத்தைந்து மூர்த்தம்.

2172. நாலாறு=ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு; புருடன் பரம்=காலமுதலிய வித்தியாதத்துவமேழு; வியோமம்பரம்=சுத்த வித்தை முதலிய சிவதத்துவ மைந்து.

2173. ஏலங்கொண்ட = நாடிகளிற் சிறந்த; மூலம்=மூலாதாரம்; முறுக்கி=நாடிகளை நிமிர்த்தி; முக்கோணிலும் = மூன்று மண்டலங்களிலும்; காலங்கொண்டான் = காலதத்துவத்திற் கிறைவனான பரமசிவன்.

2174. நாடிகள் பத்து நலந்திகழ் வாயுவு
மோடிய காலி லொடுங்கி யிருந்திடுங்
கூடிய காமங் குளிக்கு மிரதமு
நாடிய நல்ல மனமு முடலிலே (நந)

2175. ஆவன வாவ வழிவ வழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவ
னேவன செய்யு மிலங்கிழை யோனே. (நச)

2176. பத்தொடு பத்துமோர் மூன்றும் பகுதியு
முய்த்த துரியமு முள்ளுணர் காலமு
மெய்த்த வியோமமு மேலைத் துரியமுந்
தத்துவ நாலே ழெனவுன்னத் தக்கதே. (நரு)

2177. விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொருபான்
றளங்கொ ளிரட்டிய தாறு நடந்தால்
வணங்கிடு மைம்மலம் வாயு வெழுந்து
விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே. (நசா)

2178. நாலொரு கோடியே நாற்பத்தெண் ணாயிர
மேலு மோரைந்நூறு வேறு யடங்கிடும்
பாலவை தொண்ணூறோ டாறுட் படுமவை
கோலிய வையைந்து ளாகுங் குறிக்கிலே (நஎ)

---

2174. கால்=பிராணவாயு; காமம்=இன்பம்.

2175. ஏவன=பொருந்துவன; இலங்கிழையோன்=பரமசிவன்.

2176. பத்தொடு பத்து = ஞானேந்திரிய மைந்து, கன்மேந்திரிய மைந்து, சத்தாதியைந்து, வசனாதியைந்து; ஓர் (ஒன்று) மூன்று=மனம், புத்தி, சித்தம், அகங்காரம்; துரியம்=புருஷன் (மூலாங்காரம்); காலம் = காலபரம் (சீவன்); வியோமம்=ஈசன்; மேலைத்துரியம்=பரம் (சிவம்).

2177. முந்நூறு = ௩00; முப்பதோடொருபான் = (௩0 × ௧0) ௩00; ஆக (௩00+௩00) ௬00; இரட்டியதாறு=(௬ × ௬) ௩௬; ஆக (௬00 × ௩௬) ௨௧௬00; நடந்தால் = ௨௧௬00 - சுவாசமும் வீணாகாது நடைபெறும்.

2178. தத்துவங்கள் ௪0௦௪அ௫00-ஆம்; அவை ௯௬ தத்துவங்களி லடங்கும்; அவையும் ௨௫ தத்துவங்களி லடங்குமென் பது இம்மந்திரத்தின் கருத்தாம்.

2179. ஆகின்ற தொண்ணூற்றே டாறும் பொதுவென்ப
ராகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவ
மாகின்ற நாலேழ்வே தாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே (ௗ௮)

2180. தத்துவ மானது தன்வழி நின்றிடில்
வித்தக னாகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி
தத்துவ மாவ தகார வெழுத்தே. (ௗ௯)

2181. அறிவொன் றிலாதன வையேழு மொன்று
மறிகின்ற வென்னை யறியா திருந்தே
னறிகின்றாய் நீயென் றருள்செய்தார் நந்தி
யறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. (சுo)

2182. சாக்கிர சாக்கிர மாதி தனிலைந்து
மாக்கு மலாவத்தை யைந்து நனவாதி
போக்கி யிவற்றொடும் பொய்யான வாறாறு
நீக்கி நெறிநின்றோன் றாகியே நிற்குமே. (சுக)

2183. ஆணவ மாதி மலமைந் தலரோனுக்
காணவ மாதிநான் காமாற் கரனுக்கு
வாணவ மாதிமூன் றீசற் கிரண்டென்ப
வாணவ மொன்றே சதாசிவற் காவதே. (சுஉ)

---

2179. மாயாவாதி = மாயையை (மூலப்பிரகிருதியை) ஜகத்திற்கு முதற்காரணமாகக்கூறுபவன்; இவன் சாங்கியன்; வேதத்தைப் பிரமாணமாகக் கொள்பவனாயினும், ஈசன் உண்டென்பதனை ஒப்புபவனல்லன்.

2180. தத்துவம்=(முப்பத்தாறு) தத்துவம்; வித்தகன் = ஞானி; தத்துவமாவது=உண்மையாவது; அகாரவெழுத்து=அகாரத்தின் பொருளாகிய சிவம்.

2181. ஐயேழுமொன்றும்=முப்பத்தாறு தத்துவங்களும்.

2182. மலாவத்தை=கேவலாவத்தை.

2183. அலரோனுக்கு = பிரமனுக்கு ; மாற்கு = விஷ்ணுவுக்கு ; ஈசற்கு=மகேசுவரனுக்கு.

(ரு) அத்துவாக்கள்.

2184. தத்துவ மாறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னமைம் பானொன்று மேதினி
யொத்திரு நூற்றிரு பானன்கெண் பானொன்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்தவே. (சரு)

2185. நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்
தோடு மவரோ டுள்ளிரு பத்தைஞ்சுங்
கூடுவர் கூடிக் குறிவழி யேசென்று
தேடிய பின்னர்த் திகைத்திருந் தார்களே. (சச)

2186. சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
யாக்கிய தூல மளவாக்கி யதீதத்துத்
தாக்கிய வன்பான தாண்டவஞ் சார்ந்தது
தேக்குஞ் சிவமாத லைந்துஞ் சிவாயமே. (சரு)

(ச) சுத்த நனவாதிபருவம்.

2187. நனவாதி தூலமே சூக்கப் பகுதி
யனதான வையைந்தும் விந்துவின் சத்தி
தனதா முயிர்விந்து தானின்று போந்து
கனவா நனவிற் கலந்ததிவ் வாறே (சசு)

2184. மனு=மந்திரம்; வன்னம்=எழுத்து; மேதினி = புவனம்; அத்துவா=வழி; (அது-மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்வா, தத்துவாத்துவா, கலாத்துவா; இவற்றுள், மந்திரம்-எ000000, பதம்-அக, வர்னம்-ருக, புவனம்-உஉச, தத்துவம்-ஙசு, கலை-ரு).

2185. நலந்தெரிந்து = நன்றாக ஆராய்ந்துகொண்டு; உள்ளிருபத்தைஞ்சு=உண்ணிலைக் கருவிகளாகிய இருபத்தைந்து தத்துவங்கள்; குறிவழி = குருவினுபதேச நெறி; திகைத்திருந்தார்கள்=(மஹாமாயையில்) மயங்கியிருந்தார்கள்.

2186. சாக்கிரசாக்கிரம்=சாக்கிரத்தில்சாக்கிரம்; ஆதித்தலையாக்கி=முதலாகக்கொண்டு; தூலமளவாக்கி = தூல சரீரத்தின் உச்சிவரையும் செலுத்தி; அதீதத்து=துரியாதீதத்தில்; தாண்டவம்=பரசிவனது ஆனந்த நிர்த்தனம்; சிவமாதலைந்தும்=சிவதத்துவ மைந்தும்; சிவாயம்=பஞ்சாக்கர சொரூபம்.

2187. நனவாதி=ஜாக்கிரமுதல்; அனதான=அத்தன்மையதாகிய; ஐயைந்தும்=இருபத்தைந்து தத்துவங்களும்; விந்துவின்=மஹாமாயையின்; கனவா நனவு=ஜாக்கிர சொப்பனம்.

2188. நனவி லதீதம் பிறந்தார் கிடந்தார்
நனவிற் றுரிய நகர்ந்தார் தவழ்ந்தார்
நனவிற் சுழுத்தி நடந்தார் வளர்ந்தார்
நனவிற் கனவோட னன்செய்தி யானதே. (சஎ)

2189. செறியுங் கிரியை சிவதத் துவமாம்
பிறிவிற் சுகயோகம் பேரருள் கல்வி
குறிதற் றிருமேனி குணம்பல வாகு
மறிவில் சராசர மண்டத் தளவே. (சஅ)

2190. ஆதி பரஞ்சிவஞ் சத்தி சதாசிவ
மேதமி லீச்னல் வித்தியா தத்துவம்
போதங் கலைகால நியதிமா மாயை
நீதியீ ருக நிறுத்தின னென்னே. (சகூ)

2191. தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவ
மீச னனல்வித்தை யிராகங் கலைகால
மாசகல் வித்தை நியதி மகாமாயை
யாசில் புருடாதி யான்மாவீ ராறே. (ருo)

2192. ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணு முளைக்குத் தவுடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. (ருக)

---

2188. அதீதம் = துரியாதீதத்துள் (பயில்பவர்); பிறந்தார் கிடந்தார்=(ஞானபூமியில்) தோன்றியிருப்பவர்.

2189. செறியுங்கிரியை=பொருந்திய செயல்கள்; சிவதத்துவமாம்= சிவதத்துவங்களின் சம்பந்தமேயாம்; குறிதற்றிருமேனி= குறிக்கப்படுகிற சிவசொரூபம்; அறிவில்=(அளவிட்டு) அறியப்படாத.

2190. 2191. இவ்விரு மந்திரங்களும் வித்தியாதத்துவம் ஏழையும் சிவதத்துவம் ஐந்தையும் விளக்கியவாறுணர்க.

2192. காணுமுளைக்கு=முளைக்கிறமுளைக்கு; தவிடுமி=தவிட்டையும் உமியையும் போலாம்; தாணுவையொவ்வாமல் = சிவத்துக்குச் சரியாகாமல்; தண்டுலமாய் = அரிசியைப்போல; பாசம்பிரித்து=ஆன்மாவைப்பாசத்தினின்றும் வேறுபடுத்தி.

2193. பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற வாய னொருவண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற வாயன்கோல் போடிற்
பசுக்க டலைவனைப் பற்றி விடாவே. (௫௨)

2194. உடலிந் திரியம்மன மொன்புத்தி சித்த
மடலொன் றகந்தை யறியாமை மன்னிக்
கெடுமவ் வுயிர்மயன் மேலுங் கிளைத்தா
லடைவது தானேழ் நரகத்து ளாயே. (௫௩)

2195. தற்றெரி யாத வதீதந்தற் காணவஞ்
சொற்றெரி கின்ற துரியஞ்சொற் காமியம்
பெற்ற சுழுத்திப்பின் பேசுறுங் காதலா
மற்றது வுண்டிக் கனாநன வாதலே. (௫௪)

2196. நனவிற் கனவில்லை யைந்து நனவிற்
கனவிலாச் சூக்குமங் காணுஞ் சுழுத்தி
தனலுண் பகுதியே தற்கூட்டு மாயை
நனவிற் றுரிய மதீதந் தலைவந்தே. (௫௫)

2197. ஆறாறி லையைந் தகல நனாநனா
வாறா மவைவிட வாகு நனாக்கனா
வேறான வைந்தும் விடவே நனவினி
லீறாஞ் சுழுத்தி யிதின்மாயை தானே. (௫௬)

---

2193. பசுக்கள்=சீவர்கள்; பலவண்ணம்=விஞ்ஞானகலர் முதலிய பலர்; பால் = (அவர்கள் செல்லும்) தன்மை; ஆயன் = (பசுபதியாகிய) சிவபிரான் ; கோல்போடின் = அனுக்கிரகஞ் செய்தால்.

2194. கெடுமெவ்வுயிர் = (இயல்பாகவே) கெடுகின்றவான்மா; மயன் மேலுங்கிளைத்தால்=மயக்கமதிகப்படுமானால்.

2195. தற்கு=தனக்கு=காமியம்=கன்மம்; காதல்=மாயை.

2196. ஐந்தும்=ஐந்தவத்தைகளும்.

2197. ஆறாறில்=முப்பத்தாறு தத்துவங்களில் ; நனாநனா=ஜாக்கிர ஜாக்கிரம்; ஆறாமவை=(இருபத்தைந் தொழியவுள்ள) ஆறு தத்துவங்கள்; வேறானவைந்து = (இவற்றுக்கு) அந்நிய மான சிவதத்துவங்களைந்து.

2198. மாயையில் வந்த புருடன் றுரியத்தி
லாய முறைவிட் டதுவுந்தா னன்றாகிச்
சேயகே வலவிந் துடன்செல்லச் சென்றக்கா
லாய தனுவின் பயனில்லை யாமே. (௫எ)

2199. அதீதத் துரியத் தறிவனா மான்மா
வதீதத் துரிய மதனாற் புரிந்தா
லதீதத் தெழுந்தறி வாகிய மானன்
முதிய வனலிற் றுரியத்து முற்றுமே. (௫அ)

2200. ஐயைந்து பத்துட னானது சாக்கிரங்
கைகண்ட வையைந்திற் கண்டங் கனாவென்பர்
பொய்கண்ட மூவர் புருடன் சுழுனையின்
மெய்கண் டவனுந்தி மேவ லிருவரே. (௫௯)

2201. புரியட் டகமே பொருந்த னனவு
புரியட் டகந்தன்னின் மூன்று கனவு
புரியட் டகத்தி லிரண்டு சுழுத்தி
புரியட் டகத்தொன்று புக்க றுரியமே. (௬0)

2202. நனவி னனவு புலனில் வழக்க
நனவிற் கனவு நினைத்தன் மறத்த
னனவிற் சுழுத்தியுண் ணாட லிலாமை
நனவிற் றுரிய மதீதத்து நந்தியே. (௬௧)

---

2198. புருடன்=ஆன்மா; துரியத்திலாய முறைவிட்டு=(இங்ஙனம் சுத்த தத்துவத்திற்குக் கூறிய) துரிய நிலைமை யடையாதொழிந்து; கேவல விந்துடன் = கேவலாவத்தையில் மாயையோடு.

2199. மானன்=ஆன்மா; முதியவனல்=பழைமையான சிவாக்கினி.

2200. ஐயைந்து பத்துடனானது = முப்பத்தைந்து கருவிகளுடன் கூடியிருப்பது; ஐயைந்து = இருபத்தைந்து தத்துவம்; மூவர்=சித்தம், பிராணன், புருஷன்; இருவர்=பிராணன், புருஷன்.

2201. புரியட்டகம் = சூக்கும சரீரம்; மூன்று = மனம், புத்தி, ஆங்காரம். இரண்டு=புத்தி அகங்காரம்;ஒன்று=அகங்காரம்.

2202. புலனில் வழக்கம்=விஷயவியாபார மில்லாத நிலை.

2203. கனவி னனவுபோற் காண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் கனவாங்
கனவிற் சுழுத்தியுங் காணுமை காண
லனுமாதி செய்தலி லான துரியமே. (௬௨)

2204. சுழுத்தி நனவொன்றுந் தோன்ருமை தோன்றல்
சுழுத்தி கனவத னுண்மை சுழுத்தியிற்
சுழுத்தி யறிவறி வாலே யறிகை
சுழுத்தித் துரியமாஞ் சொல்லறும் பாழே. (௬௩)

2205. துரிய நனவா மிதமுரை போதந்
துரியக் கனவா மகமுணர் போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமெனத் தோன்றிடுந் தானே. (௬௪)

2206. அறிவறி கின்ற வறிவு நனவா
மறிவறி யாமை யடையக் கனவா
மறிவறி யவ்வறி யாமை சுழுத்தி
யறிவறி வாகு மான துரியமே. (௬௫)

2207. தானெங்கு மாயவ னைம்மலந் தான்விட்டு
ஞானந் தனதுரு வாகி நயந்தபின்
ருனெங்கு மாய்நெறி நின்றது தான்விட்டு
மேனந்தச் சூக்க மவைவன்ன மேலிட்டே. (௬௬)

2208. ஐயைந்து மாறுமோ ரைந்து நனவினி
லெய்யு நனவு கனவு சுழுத்தியா
மெய்யும்பின் சூக்கமு மெய்ப்பகுதி மாயை
யையமுந் தானவ னத்துரி யத்தனே. (௬௭)

---

2203. அனுமாதி=உத்தேசம்.

2207. ஐமலந்தான்விட்டு = ஐவகைத்தாய பாசவுருவைக் கடந்து; அவை வன்னம்=அவ்வெல்லாவற்றின் றன்மை.

2208. ஐயைந்தும்=(முப்பத்தாறில்) இருபத்தைந்து தத்துவங்களும்; ஆறும்=(மிகுதியான) ஆறு தத்துவங்களும்; ஐந்தும்=(கூறிய முப்பத்தொன்று நீங்கியுள்ள) ஐந்து தத்துவங்களும்; நனவு கனவு சுழுத்தியாம் = முறையே ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தியாம்; சூக்கமும்=சூட்சும சரீரமும்; பகுதிமாயை= மூலப்பிரகிருதியும்; துரியத்தன்=துரியாவத்தையி லிருப்பவன்.

2209. ஈதென் றறிந்தில னித்தனை காலமு
மீதென் றறிந்தபி னேது மறிந்திலே
னீதென் றறியு மறிவை யறிந்தபி
னீதென் றறியு மியல்புடை யோனே. (சுஅ)

2210. உயிர்க்குயி ராகி யுருவா யருவா
யயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியு நாத னுலகாதி
யியற்பின்றி யெல்லா முருண்மூட மாமே. (சுகூ)

2211. சத்தி யிராகத்திற் றூனல் லுயிராகி
யொத்துறு பாச மலமைந்தோ டாறூறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தன னீசன் மயமறு மாறே. (எ0)

2212. சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை
சாக்கிரா தீதந் துரியத்திற் றூனுறச்
சாக்கிரா தீதத்தி லாணவந் தான்விடாச்
சாக்கிரா தீதம் பரனுண்மை தங்குமே. (எக)

2213. மலக்கலப் பாலே மறைந்தது சத்தி
மலக்கலப் பாலே மறைந்தது ஞான
மலக்கலப் பாலே மறைந்தனன் றூணு
மலக்கலப் பற்றூன் மதியொளி யாமே. (எஉ)

2214. திகைக்கின்ற சிந்தையுட் சிங்கங்கண் மூன்று
நகைக்கின்ற நெஞ்சு ணரிக்குட்டி நான்கு
வகைக்கின்ற நெஞ்சினு ளானைக்கன் றைந்து
பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே. (எங)

---

2210. அயல்=புறம்; செறிவாய் = கலந்துள்ளதாய்; இயற்பு = இயற்கை.

2211. இராகத்தின்=விருப்பத்தினல்; பாசமலம்=பாசமாகியமலம்; கருவி=புறநிலைத்தத்துவங்கள்; மயம்=(மாயம்) தீமை.

2213. தாணு=சிவன்; மலக்கலப்பாற்றூன் மதியொளியாம்=மாயையின் சம்பந்தம் நீங்கப்பெறின் பூரணசந்திரன்போன்று அறிவு விளங்கப்பெறும்.

2214. சிங்கங்கள் = காம, வெகுளி மயக்கம்; நெஞ்சுள் = அந்தக்கரணத்துள்; நரிக்குட்டி = மனம், புத்தி, சித்தம், அகங்காரம்; யானைக்கன்று=இந்திரிய ஞானம்; பால்=பிரவிர்த்தி நிவிர்த்தி.

2215. கதறு பதினெட்டுக் கண்களும் போகச்
சிதறி யெழுந்திடுஞ் சிந்தையை நீரும்
விதறு படாமுன்ன மெய்வழி நின்று
லதிர வருவதோ ராணையு மாமே. (எச)

2216. நனவகத் தேயொரு நாலைந்தும் விடக்
கனவகத் தேயுட் கரணங்க ளோடு
முனவகத் தேநின் றுதறியுட் புக்கு
நினைவகத் தின்றிச் சுழுத்திநின் றானே. (எரு)

2217. நின்றவ னாசா னிகழ்துரி யத்தனா
யொன்றி யுலகி னியமாதி களுற்றுச்
சென்று துரியாதீ தத்தே சிலகால
நின்று பரனாய் நின்மல னாமே. (எசு)

2218. ஆனவவ் வீச னதீதத்தில் வித்தையாய்த்
தானுல குண்டு சதாசிவ மாசத்தி
மேனிக ளைந்தும்போய் விட்டுச் சிவமாகி
மோன மடைந்தொளி மூலத்த னாமே. (எஎ)

2219. மண்டல மூன்றினுண் மாயநன் னாடனைக்
கண்டுகொண் டுள்ளே கருதிக் கழிகின்ற
விண்டலர் தாமரை மேலொன்றுங் கீழாக
வண்டமுந் தானா யகத்தினுள் ளாமே. (எஅ)

2220. போதறி யாது புலம்பின புள்ளின
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவண நின்றன னெம்மிறை
சூதறி வாருச்சி சூடிநின் றாரே. (எகூ)

2215. பதினெட்டு = தசவாயு; புரியட்டகம்; விதறு=கெடுதி; ஆணை=சிவம்.

2216. நாலைந்து = ஞானேந்திரிய மைந்து, கன்மேந்திரிய மைந்து, சத்தாதி யைந்து, வசனாதி யைந்து.

2218. வித்தையாய்=ஞானமாய், மேனிகள் ஐந்து=பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன். மூலத்தின்=துரியாதீத சிவத்தின்.

2219. மேலொன்றும்=மேலே நிற்கும்; தண்டம்=சுழுமுனை.

2220. புள்ளினம் = ஆன்மாக்கள்; மாது = சத்தி; வேது = வேறுபாடு; சூது = மௌன நிலையில் வெளிப்படுவதற்குரிய வுபாயம்; உச்சி சூடி=வணங்கி.

2221. கருத்தறிந் தொன்பது கண்டமு மாங்கே
பொருந்தறிந் தோன்புவ னாபதி நாடித்
திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரானை
வருத்தறிந் தேன்மன மன்னிநின் றானே. (அ௦)

2222. ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்
தான விளக்கொளி யாமூல சாதனத்
தான விதிமூலத் தானத்தி லவ்விளக்
கேனை மதிமண் டலங்கொண் டெரியுமே. (அக)

2223. உண்ணாடு மைவர்க்கு மண்டை யொதுங்கிய
விண்ணாட நின்ற வெளியை வினவுறி
லண்ணாந்து பார்த்தைவர் கூடிய சந்தியிற்
கண்ணாடி காணுங் கருத்ததென் றானே. (அஉ)

2224. அறியாத வற்றை யறிவா னறிவா
னறிவா னறியாதான் றன்னறி வாகா
னறியா தவத்தை யறிவானைக் கூட்டி
யறியா தறிவானை யாரறி வாரே. (அங)

2225. துரிய தரிசனஞ் சொற்றீரும் வியோம
மரியன தூடண மங்கன வாதி
பெரியன கால பரம்பிற் றுரிய
மரிய வதீத மதீதத்த தாமே. (அச)

2226. மாயையிற் சேதனன் மன்னும் பகுதியோன்
மாயையின் மற்றது நீவுதன் மாயையாங்
கேவல மாகுஞ் சகலமா யோனியுட்
டோயு மனிதர் துரியத்துட் சீவனே. (அரு)

---

2221. ஒன்பது கண்டம்=ஆறுதாரம், மும்மண்டலம்; திருத்து = நன்றாக; வருத்தறிந்தேன் = (சரீரத்தைத் தவத்தினால்) வருத்துதலா லுணர்ந்தேன்.

2223. ஐவர்க்கும் = ஐம்பொறிகளுக்கும்; வெளி = சிவம்; ஐவர் கூடிய சந்தி = ஐம்பொறிகளின ஞானம் ஒடுங்கிய நினைப்பு மறப்பற்ற விடம்.

2224. அறியாதவற்றை = அறியப்படாத சுத்தமாயை முதலிய வற்றை; தன்னறிவு = ஆன்ம ஞானம்; அவத்தை = கீழாலவத்தை.

2226. சேதனன்=ஆன்மா; நீவுதல்=ஒழித்தல்; கேவலம்=கேவலா வத்தை; சகலம்=சகலாவத்தை.

(ரு) கேவல சகல சுத்தம்.

2227. தன்னை யறியத்தன் றற்கேவ லன்றானும்
பின்ன முறநின்ற பேத சகலனு
மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்
றுன்னுவர் தத்தந் தொழிற்கள வாகவே. (அசு)

2228. தானே தனக்குப் பகைவனு நட்டானுந்
தானே தனக்கு மறுமையு மிம்மையுந்
தானேதான் செய்த வினைப்பயன் றுய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே. (அஎ)

2229. ஆமுயிர் கேவல மாமாயை யின்னடந்
தாமுயிர் மாயை யெறிப்ப வறிவுற்றுக்
காமிய மாயேய முங்கல வாநிற்பத்
தாமுறு பாசஞ் சகலத்த தாமே. (அஅ)

2230. சகல வவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்
நிகரின் மலரோன்மா னீடுபஃ றேவர்க
ணிகழ்நரர் கீட மந்தமு மாமே. (அகூ)

2231. தாவிய மாயையிற் றங்கும் பிரளய
மேவிய மற்ற துடம்பாய்மிக் குள்ளன
வோவ லிலக்கண ரொன்றிய சீகண்ட
ராவயி னூற்றெட் டுருத்திர ராமே. (கூ0)

2232. ஆகின்ற கேவலத் தாணவத் தானவ
ராகின்ற வித்தே சராமனந் தாதிய
ராகின்ற வெண்ம ரெழுகோடி மந்திர
ராகின்ற விச ரனேகரு மாமே. (கூக)

---

2227. பின்னம் = (சுத்தம் கேவல மிரண்டிக்கும்) வேறு; துன்னு வர்=கூடியிருப்பர்.

2229. எறிப்ப=விளக்க; சகலத்த தாம்=சகலாவத்தை யுடையதாம்.

2230. சகலர் = முப்பத்தாறு தத்துவங்களுடனும் கலந்திருக்கும் அவதரத்துள்ளவர்; (அவர் பிரமன்முதல் கீடம் இறுதியான சீவர்கள்).

2231. மாயையில்=சுத்த மாயையில்; பிரளயம்=பிரளயகாலத்தும்; (சீகண்டராதியோர் பிரளயாகலர் என்று கொள்க.)

2232. கேவலத் தாணவத் தானவர் = ஆணவ மல மாத்திரமுள்ள விஞ்ஞானகலர்; (அஷ்ட வித்தியேசுராராதியோர்.)

2233. ஆமா றிற்சிவ னாருள் பெற்றுளோர்
போமலந் தன்னாற் புகழ்விந்து நாதம்விட்
டோமய மாகி யொடுங்கலி னின்மலந்
தோமறு சுத்தா வவத்தைத் தொழிலே. (கூஉ)

2234. ஓரினு மூவகை நால்வகை யும்முள
தேரி லிவைகே வலமாயை சேரிச்சை
சாரிய லாயவை தாமே தணப்பவை
வாரிவைத் தீசன் மலமறுத் தானே. (கூ௩)

2235. பொய்யான போதாந்த மாறாறு விட்டகன்
றெய்யாமை நீங்கவே யெய்தவன் றானாகி
மெய்யாஞ் சராசர மாய்வெளி தன்னுட்புக்
கெய்தாம லெய்துஞ்சுத் தாவத்தை யென்பவே. ()

2236. அனாதி பசுவியாத் தியாகு மிவனை
யனாதியில் வந்த மலமைந்தா லாட்டி
யனாதியிற் கேவல மச்சக லத்திட்
டனாதி பிறப்பறச் சுத்தத்து ளாக்குமே. (கூ௫)

2237. அந்தரஞ் சுத்தாவத் தைகேவ லத்தாறு
தந்தோர்தஞ் சுத்தகே வலத்தற்ற தற்பரத்
தின்பாற் றுரியத் திடையே யறிவுறத்
தன்பாற் றனையறி தத்துவந் தானே. (கூசு)

---

2233. ஓமயமாகி=பிரணவவடிவமாகி.

2234. மூவகை நால்வகையு முள=கேவலாவத்தை மூன்றே யன்றி, நாலுவகையுமுண்டு; அவை கேவல மாயை முதலியனவாம்.

2235. ஆறாறு = முப்பத்தாறு தத்துவம்; எய்யாமை=அறியாமை; எய்தவன்=(அவன் எய்த) அந்தச் சிவத்தையடைய; வெளி= பரமாகாயம்.

2236. வியாத்தியாகும் = உள்ளடங்கி யிருக்கும்; ஆட்டி = முழுகச் செய்து; கேவலமச்சகலத்திட்டு = கேவலாவத்தையிலும் சகலாவத்தையிலுங்கூட்டி.

2237. ஆறு = மூலமாக; ஓர் = கருதப்படும்; தன்பாற்றனையறி = தன்னுக்குள் தன்னையறியும்.

2238. ஐயைந் தொடுங்குமான் மாவிலான் மாவு
மெய்கண்டு சுத்த வவத்தையில் வீடாகுந்
துய்யவவ் வித்தை முதன்மூன்றுந் தொல்சத்தி
யைய சிவஞ்சித்தி யாந்தோற்ற மவ்வாறே. (கூஎ)

2239. ஐயைந்து மானவி லாறே டடங்கிடு
மெய்கண்ட மேன்மூன்று மேவுமெய் யோகத்தில்
கைகண்ட சத்தி சிவபாகத் தேகாண
வெய்யும் படியடங் குந்நாலே ழெய்தியே. (கூஅ)

2240. ஆணவத் தாரொன் றறியாத கேவலர்
பேணிய மாயை பிரளயா கலராகுங்
காணு முருவினர் காணுமை காண்பவே
பூணுஞ் சகலமும் பாசமும் புக்கோரே. (கூகூ)

2241. ஆணவ மாகும்விஞ் ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயா கலராகு
மாணவ மாயையுங் கன்மமு மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே. (க00)

2242. கேவலந் தன்னிற் கிளர்ந்தவிஞ் ஞாகலர்
கேவலந் தன்னிற் கிளர்விந்து சத்தியா
லாவயிற் கேவலத் தச்சக லத்தையு
மேவிய மந்திர மாமாயை மெய்ம்மையே. (க0க)

---

2238. ஐயைந்து மான்மாவி லொடுங்கும் = இருபத்தைந்து கருவிகளும் ஆன்மாவி லொடுங்கிவிடும்; வித்தை முதன் மூன்று = சுத்தவித்தை முதலிய மூன்று தத்துவங்கள்; ஐய சிவம் = மேன்மை பொருந்திய சிவம்.

2239. மூன்று = காலபரம், வியோமம், பரம்; நாலேழ்=(கூடிவந்த) இருபத்தெட்டுத் தத்துவங்கள்.

2240. ஆணவத்தார்=ஆணவமலமொன்றுமுடைய விஞ்ஞானகலர்; மாயை = சுத்தமாயை; காணு முருவினர் = ஸ்தூல சரீர முடையவர்.

2242. கிளர்ந்த = (பொருந்தி) விளங்கிய; விந்து சத்தி = விந்து மாயை; மந்திரமாமாயை=மந்திர வடிவமான மஹா மாயை.

**2243.** மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து
மாயையுந் தோன்ற வகைநிற்க வாணவ
மாய சகலத்துக் காமிய மாமாயை
யேயமன் னூற்றெட் டுருத்திர ரென்பவே. (கo௨)

**2244.** மும்மலங் கூடி முயங்கி மயங்குவோ
ரம்மெய்ச் சகலத்தர் தேவர் சுரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமிகு கீடாந்தத்
தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே. (கo௩)

**2245.** சுத்த வவத்தையிற் றோய்ந்தவர் மும்மலச்
சத்தசத் தோடத் தனித்தனி பாசமு
மத்த விருள்சிவ னுன் கதிராலே
தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே. (கoச)

**2246.** தற்கேவ லம்முத்தி தானே தனிமையாம்
பிற்பாற் சகலங் கலாதிப் பிறிவதாஞ்
சொற்பாற் புரிசுத்த கேவலஞ் சாக்கிரந்
தற்பாற் புரிவது தற்சுத்த மாமே. (கo௫)

**2247.** அறிவின்றி மூத்தோ னராகாதி சேரான்
குறியொன்றி லாதித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றினங்கற்ற வல்லோன்
கிறியன் மலவியாபி கேவலந் தானே. (கo௬)

---

2243. நிற்கவாணவம்=ஆணவ மேலிட்டிருக்க; காமியமாமாயை=கன்ம மலமும் சுத்தமாயையும்.

2244. கூடி முயங்கி = கூடிக் கலந்து; ஆர்க்கும் = பந்தப்பட்டிருக்கும்.

2245. மத்தவிருள்=மயக்கத்தைச் செய்யு மவிச்சை; தொத்தற = சம்பந்தமொழிய; விட்டிட = நீங்கிப்போக.

2247. அராகாதி = இராகத் துவேஷ முதலியன; கலாதி = கலை காலம் முதலிய தத்துவங்கள்; செறியுஞ் செயலிலான் = ஒத்த கிரியை யில்லாதவன்; கிறியன்=வஞ்சகன்.

2248. விந்துவு மாயையு மேவுங் கிரியையுஞ்
சந்தத ஞான பரையுந் தனுச்சத்தி
விந்துவின் மெய்ஞ்ஞான மேவும் பிரளயர்
வந்த சகலசுத் தான்மாக்கள் வையத்தே. (௧0எ)

2249. கேவல மாதியிற் பேதங் கிளக்குறிற்
கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்து
ளாவயின் மூன்று மதிசுத்த மூடவே
வோவலில் லாவொன்பா னுற்றுணர் வோர்கட்கே. ()

2250. கேவலத் திற்கே வலமதீ தாதீதங்
கேவலத் திற்சக லங்கள் வயிந்தவங்
கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் ஞாகலர்க்
காவயி னுத னருண்மூர்த்தி தானே. (௧0௯)

2251. சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ்
சகல சகலமே சாக்கிர சாக்கிரஞ்
சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை
சகலத்தி லிம்மூன்று தன்மையு மாமே. (௧௧0)

2252. சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல்
சுத்தத்திற் கேவலந் தொல்லுப சாந்தமாஞ்
சுத்த சகலந் துரிய விலாசமாஞ்
சுத்தத்தி லிம்மூன்றுஞ் சொல்லலு மாமே. (௧௧௧)

---

2248. விந்து=சுத்தமாயை; மாயை=அசுத்தமாயை.

2249. கேவலமாதி = கேவலம் சகலம் சுத்தம்; கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்து = சகலாவத்தையிலும் கேவலம் முதலிய மூன்று முளவாம் (அவை-சகலம், சகலகேவலம், சகல சுத்தம்; இவ்வாறே மற்றவற்றுக்குங் கொள்க); ஒன்பான் = (அங்ஙனம் மூன்றையும் மூன்றால் உறழ அவத்தா பேதம்) ஒன்பது வகையாதல் கொள்க.

2250. அதீதாதீதம்=அதீதத்துக்கு மப்பாற்பட்டது; வயிந்தவம்= சுத்தமாயை.

2251. சகல சகலம்=சகலத்திற் சகலம்; பராவத்தை=பராவத்தையை யடைதல்.

2252. உபசாந்தம் = ஒழிவு பெற்றிருத்தல்; விலாசம்=பரவுதல்.

2253. சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ்
சாக்கிரந் தன்னிற் சுழுத்தி துரியமே
சாக்கிரா தீதந் தனிற்சுகா னந்தமே
யாக்கு மறையாதி யைம்மல பாசமே. (ககஉ)

2254. சாக்கிரா தீதத்திற் றூனறு மாணவஞ்
சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது
யாக்கு பரோபாதி யாமுப சாந்தத்தை
நோக்கு மலங்குண நோக்குத லாகுமே. (ககந)

2255. பெத்தமு முத்தியும் பேணுந் துரியமுஞ்
சுத்தவ தீதமுந் தோன்றாமற் றூனுணு
மத்த னருளென் றருளா லறிந்தபின்
சித்தமு மில்லை செயலில்லை தானே. (ககச)

2256. எய்திய பெத்தமு முத்தமு மென்பன
வெய்து மரனரு ளேவிளை யாட்டோ
டெய்தி டுயிர்சுத்தத் திடுநெறி யென்னவே
யெய்து முயிரிறை பாலறி வாமே. (ககரு)

2257. ஐம்மலத் தாரு மதித்த சகலத்த
ரைம்மலத் தாரு மருவினைப் பாசத்தா
ரைம்மலத் தார்சுவர்க் கந்நெறி யாள்பவ
ரைம்மலத் தாரர ணூர்க்கறி வோரே. (ககசு)

2258. கருவி லதீதங் கலப்பிக்கு மாயை
யரிய துரிய மதிலுண்ணு மாசையு
முரிய சுழுனை முதலெட்டுஞ் சூக்கத்
தரிய கனுத்தூல மந்நன வாமே. (ககஎ)

---

2254. பராவத்தை=பரையினிடத்துத் தங்கும் அவதரம்; பரோபாதி யாம்=பரசிவ சம்பந்தமாம்.

2255. பெத்தம்=பந்தம்; உணும்=தன்னுளடங்கி யிருக்கும்; அருளால்=சிவசத்தியினால்.

2256. சுத்தத்திடு நெறி யென்ன = சுத்தத்திற்கூட்டும் மார்க்கங்களாமென்று; உயிரிறைபால்=உயிருக்கு இறைவனாகிய பரமசிவனிடத்தில்; அறிவாம்=அறியத்தக்கதாம்.

2258. சுழுத்திமுதலெட்டு=துரியம், துரிய சுழுத்தி, துரிய சொப்பனம், துரிய சாக்கிரம், சுழுத்தியல் துரியம், சுழுத்தியில் சுழுத்தி, சுழுத்தியின் சொப்பனம், சுழுத்தியில் நனவு என்பன.

2259. ஆணவ மாகு மதீதமேன் மாயையும்
பூணுந் துரியஞ் சுழுத்திபொய்க் காமியம்
பேணுங் கனவும் மாமாயை திரோதாயி
காணு நனவின் மலக்கலப் பாகுமே. (ககஅ)

2260. அரன்முத லாக வறிலோ னதீதத்த
னரன்முத லாமாயை தங்கிச் சுழுனை
கரும முணர்ந்துமா மாயைகைக் கொண்டோ
ரருளு மறைவார் சகலத்துற் றுரே. (கசுக)

2261. உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று
மருவுற்றுப் பூதம னாதியான் மன்னி
வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே. (கஉ0)

2262. இருவினை யொத்திட வின்னருட் சத்தி
மருவிட ஞானத்தி லாதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே. (கஉக)

2263. ஆறுறு மாறதி னையைந் தவத்தையோ
டீறு மதீதத் துரியத் திவனெய்தப்
பேறான வைவரும் போம்பிர காசத்து
நீறார் பரஞ்சிவ மாதேய மாகுமே. (கஉஉ)

2264. தன்னை யறியா துடலைமுன் றானென்றான்
றன்னைமுன் கண்டான் றுரியந் தனைக்கண்டா
னுன்னுந் துரியமு மீசனோ டொன்றாக்காற்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. (கஉங)

---

2261. உரு=உடம்பு; போகம் = சுகதுக்கானுபவம்; போக்கியம்= போக வேதுவான விஷயம்; சத்தாதி = சத்த முதலிய விஷயங்கள்; கருவுற்றிடும்=கர்ப்பத்தில் தங்கும்.

2262. இருவினை யொத்திட=இருவினையின் பயனாய சுகதுக்கங்களை யொப்பக்காண; சத்தி மருவிட = சத்திநிபாதமுண்டாக; ஆதனமன்னி=நிலைபெற்று.

2263. ஐயைந் தவத்தை=சாக்கிரமாதி ஐந்தவத்தைகளையும் ஐந்தி னால் உறழவரும் இருபத்தைந்து அவத்தா பேதங்கள்; அதீதத் துரியத்து=துரியா தீதத்து; பேறானவை=பெறு தற்குரிய சித்தி முத்தி; நீறார்=திரு நீறணிந்த.

2264. துரியம்=நினைவிறந்த விடம்; துரியமும்=துரியத்திலும்.

2265. சாக்கிரந் தன்னி லதீதந் தலைப்படி
லாக்கிய வந்த வயிந்தவ மானந்த
நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்தியாம்
வாக்கு மனமு மருவல்செய் யாவே. (௧௨௪)

2266. அப்பு மனலு மகலத்து ளேவரு
மப்பு மனலு மகலத்து ளேவரா
வப்பு மனலு மகலத்து ளேதெனி
லப்பு மனலுங் கலந்தவவ் வாறே. (௧௨௫)

2267. அறுநான் கசுத்த மதிசுத்தா சுத்த
முறுமேழு மாயை யுடனைந்தே சுத்தம்
பெறுமா றிவைமூன்றுங் காண்டத்தாற் பேதித்
துறுமாயை மாமாயை யான்மாவி னோடே. (௧௨௬)

2268. மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட
வாய பரசிவன் றந்தையாய் நிற்கவே
யேயு முயிர்க்கே வலசக லத்தெய்தி
யாய்தரு சுத்தமுந் தான்வந் தடையுமே. (௧௨௭)

---

(௬) பராவத்தை.

2269. அஞ்சுங் கடந்த வனாதி பரந்தெய்வ
நெஞ்சம தாய நிமலன் பிறப்பிலி
விஞ்சு முடலுயிர் வேறு படுத்திட
வஞ்சத் திருந்த வகையறிந் தேனே. (௧௨௮)

---

2265. அதீதம் = துரியாதீதம்; வயிந்தவ மால் = மாயா மயக்கு; நந்த = கெட.

2266. அப்பும் அனலும் = விருப்பும் வெறுப்பும்; வாரா = (துரியாதீதத்தில்) வரமாட்டா; அகலம் = இதய ஸ்தானம்; கலந்த அவ்வாறே = கலந்தே அவ்வாறாயின.

2267. அறு நான்கசுத்தம் = ஆன்ம தத்துவங்களிருபத்து நான்கும் அசுத்த தத்துவங்களாம்; சுத்தாசுத்த முறுமேழும் = வித்தியா தத்துவமேழும் சுத்தாசுத்தம்; ஐந்தே சுத்தம் = (சிவதத்துவங்கள்) ஐந்தும் சுத்தம்; மூன்றுங் காண்டத்தாற் பேதித்து = மூன்று பகுதிகளாக வேறுபட்டு.

2268. மாயைகைத்தாயாக = அசுத்தமாயை செவிலித்தாயாக; மாமாயை = சுத்தமாயை.

2269. அஞ்சுங் கடந்த = ஐவகைப்பாசத்திற்கு மப்பாற்பட்டவன்; உடலுயிர் வேறுபடுத்திட = சரீரமாகிய பந்தமொழித்து ஆன்மாவைத் தனித்து நிற்கும்படிசெய்ய; வஞ்சத்து = மாயையின்கண்.

2270. சத்தி பராபரஞ் சாந்திதனி லான
சத்தி பரானந்தந் தன்னிற் சுடர்விந்து
சத்திய மாயை தனுச்சத்தி யைந்துடன்
சத்தி பெறுமுயிர் தானங்கத் தாறுமே. (கஉகூ)

2271. ஆறாறுக் கப்பா லறிவா ரறிபவ
ராறாறுக் கப்பா லருளார் பெறுபவ
ராறாறுக் கப்பா லறிவா மவர்கட்கே
யாறாறுக் கப்பா லரனினி தாமே. (கஙo)

2272. அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப்
பஞ்சணி காலத்துப் பள்ளி துயில்கின்ற
விஞ்சையர் வேந்தனும் மெல்லிய லாளொடு
நஞ்சுற நாடி நயஞ்செய்யு மாறே. (கஙக)

2273. உரிய நனத்துரி யத்தி லிவனு
மரிய துரிய நனவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனுந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே. (கஙஉ)

2274. பரமா மதீதமே பற்றறப் பற்ற
பரமா மதீதம் பயிலப் பயில
பரமா மதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றொன் றறுதே. (கஙங)

2275. ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்கிற்கும்
வாயு மனமுங் கடந்த மயக்கறின்
றாய வறிவு சிவானந்த மாகிப்போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. (கஙச)

---

2270. சாந்தி=விருப்பு வெறுப்பின்றி யிருத்தல்; சுடர்விந்து சத்தி யைந்து=ஆணவ முதலிய பஞ்சபூதம்.

2271. ஆறாறுக்கு=முப்பத்தாறு தத்துவத்திற்கு.

2272. அஞ்சு = ஐம்புலன்; நான்கு = அந்தக் கரணங்கள்; துயில்கின்ற=யோக நித்திரை செய்கின்ற; விஞ்சையர் வேந்தன்= கருவிகளுக் கிறைவனான சீவன்; மெல்லியலாள் = பரமசிவம்; நஞ்சு = பாசமாகிய விஷம்.

2273. நனத்துரியத்தில் = சாக்கிர துரியத்தில்; இவனும் = இவ்வான்மாவேயாம்; பரிய = பெருமையுள்ள; பரனும் = அருளொடு கூடியவனும்; திரியவருந் துரியத்தில் = பரதுரியாதீதத்தில்.

2274. பற்றறப் பற்ற=நிராதாரனுயிருந்து பரத்தைப்பற்ற; பயிலா= அடையாத.

2275. பொய்ம்மாயை=அநித்தியமான மாயை; தூயவறிவு = சுத்த ஞானம்; வேயும்=வியாபகமான.

2276. துரியப் பரியி லிருந்தவச் சிவனைப்
பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு
நரிகளை யோடத் துரத்திய நாதர்க்
குரிய வினைகளின் றேலமிட் டன்றே. (கரு௫)

2277. நின்றவிச் சாக்கிர நீடுரி யத்தினின்
மன்றனு மங்கே மணஞ்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடு
மன்றே யிவனு மவன்வடி வாமே. (கருசு)

2278. விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்கா
யிருந்த விடத்திடை யீடான மாயை
பொருந்துந் துரியம் புரியிற்ற னுருந்
தெரிந்த துரியத்துத் தீதக லாதே. (கருஎ)

2279. உன்னை யறியா துடலைமுன் னென்று
முன்னை யறிந்து துரியத் துறநின்றாய்
தன்னை யறிந்தும் பிறவி தணவாதா
லன்ன வியாத்த னமலனென் றறிதியே. (கருஅ)

2280. கருவரம் பாகிய காயந் துரிய
மிருவருங் கண்டீர் பிறப்பிறப் புற்றார்
குருவரம் பெற்றவர் கூடிய பின்னை
யிருவரு மின்றியொன் றாகிநின் றாரே. (கருகூ)

---

2276. துரியப்பரியில் = துரியாதீதத்தில்; வியாக்கிரத்துள்ளே = சிவத்திலே; நரிகளை = அந்தக் கரணாதி தத்துவ சமூகங்களை; உரிய=சம்பந்தமாயுள்ள.

2277. மன்றனும் = சிற்சபையிலுள்ள சிவபிரான்; மணஞ்செய்ய= கலக்க; அன்றே=அப்பொழுதே.

2278. ஈடான = வலிமையுள்ள ; பொருந்துந் துரியம் = சகல ஜாக்கிரத்தில் துரியம் ; தெரிந்த துரியத்து = ஜாக்கிர துரியத்து.

2279. உன்னை = உனது நிஜ வடிவை; தணவாது = நீங்காது ; வியாத்தன்=வியாபித்திருப்பவன்.

2280. கரு = பிறப்பு; காயம் = உடல்; இருவரும்=சீவனுஞ் சிவ பெருமானும் ; குருவரம் = குருவி னனுக்கிரகம் ; கூடிய பின்னை=சமாதி கூடிய பின்னர்.

2281. அணுவின் றுரியத்தி லான நனவு
மணுவசை வின்கண் ணுன கனவு
மணுவசை விற்பரா தீதஞ் சுழுத்தி
பணியிற் பரதுரி யம்பர மாமே. (கசா0)

2282. பரதுரி யத்து நனவும் பரந்து
விரிசக முண்ட கனவுமெய்ச் சாந்தி
யுருவுறு கின்ற சுழுத்தியு மோவத்
தெரியுஞ் சிவதுரி யத்தனு மாமே. (கசாக)

2283. பரமா நனவின்பின் பாற்சக முண்ட
திரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி
யுரமா முபசாந்த முற்றற் றுறவே
தரனுஞ் சிவதுரி யத்தனு மாமே. (கசாஉ)

2284. சீவன் றுரிய முதலாகச் சீரான
வாவ சிவன்றுரி யாந்த மவத்தைபத்
தோவும் பராநந்தி யுண்மைக்குள் வைகியே
மேவிய நாலேழ் விடுத்துநின் றனே. (கசாஈ)

2285. பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற்
பரம்பரன் மேலாம் பரநன வாக
விரிந்த கனவிடர் வீட்டுஞ் சுழுனை
யுரந்தகு மாநந்தி யாமுண்மை தானே. (கசாச)

2286. சார்வாம் பரசிவஞ் சத்தி பரநாத
மேலாய விந்து சதாசிவ மிக்கோங்கிப்
பாலாய்ப் பிரம னரியம ராபதி
தேவா முருத்திர னீசனுங் காணிலே. (கசாரு)

---

2281. அணுவின் றுரியம் = ஆன்ம துரியம்; பணியின் = பொருந்தினல்.

2282. சுழுத்தியுமோவ=சுழுத்தியவத்தையுங் கடக்க.

2283. பரமா நனவின்=பரசாக்கிரத்தில்; தரனும்=ஆதாரனும்.

2284. சீவதுரியம்—பத்து=சீவதுரியம், சிவதுரியாதீதம், பரசாக்கிரம், பரசொப்பனம், பரசுழுத்தி, பரதுரியம், சிவசாக்கிரம், சிவசொப்பனம், சிவசுழுத்தி, சிவதுரியம்.

2285. இடர்வீட்டும்=துன்பமொழிக்கும்.

2286. ஈசன் = மகேசன்; இம் மந்திரம் பராவத்தை யுடையார் பரசிவ முதல் பிரமனீருய வொன்பது வடிவமாய் விளங்குவரெனக் குறிப்பித்தது.

2287. கலப்பறி யார்கடல் சூழுல கேழு
முலப்பறி யாருட லோடுயிர் தன்னை
யலப்பறிந் திங்கர சாளகி லாதார்
குறிப்பது கோவ மடலது வாமே. (கசசகூ)

2288. பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்
தன்னை யறியிற் றயாபர னெம்மிறை
முன்னை யறிவு முடிகின்ற காலமு
மென்னை யறியலுற் றின்புற்ற வாறே. (கசசஎ)

2289. பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணந்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாந்
தன்னின் மறைத்தது தன்கர ணங்களே. (கசசஅ)

2290. மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. (கசசகூ)

---

2287. உலப்பு=அழிதல்; அலப்பு=அலைத்தல்; குறிப்பது கோலம்=(கோலம் குறிப்பது) ஈசனுருவத்தைத் தியானித்திருப்பது; அடலதுவாம்=வல்லமையாம்.

2288. முன்னையறிவு = அனாதியான அறிவு; முடிகின்ற = வந்து ஒத்துக்கொள்ளும்.

2289. பொன்னாலாகிய பூடணத்தை ஆபரணமென்னும் நோக்கத்தோடு பார்க்குங்கால் பொன்னென்பது தோன்றாது ஆபரணமாகவே காணப்படுதல்போலக் கரணவியாபாரமே விட ஆன்மா தோன்றாது, ஆன்மா தன் சுய ரூபத்தை யுணர்ந்த போது கரணவியாபாரமொடுங்குமென்பது கருத்து.

2290. மரத்தாலாகிய யானையை யானையென்று கருதி நோக்குங்கால் மரத்தன்மை மறைந்தும், மரமெனக் கருதுங்கால் யானை யென்பது மறைந்தும் காணப்படுவதுபோலப், பரம்பொருளினிடத்தில் கற்பனையாய்க் காணப்படும் பிரபஞ்சத்தைப் பிரபஞ்சமென நோக்கின் பரம்பொருள் தோன்றாது. பரம்பொருளாகக் காணின் பிரபஞ்சந் தோன்றாது என்பது கருத்து.

9291. ஆறு றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
யீறார் பரையி னிருளற்ற தற்பரன்
பேறார் சிவாய வடங்கும்பின் முத்தியே. (௧௫௦)

2292. துரியத்தி லோரைந்துஞ் சொல்லக ராதி
விரியப் பரையின் மிகுநாத மந்தம்
புரியப் பரையின் பராவத்தா போதந்
திரியப் பரமந் துரியந் தெரியவே. (௧௫௧)

2293. ஐந்துஞ் சகலத் தருளாற் புரிவுற்றுப்
பந்திடுஞ் சுத்த வவத்தைப் பதைப்பினி
னந்தி பராவத்தை நாடச் சுடர்முன
மந்தி யிருள்போலு மைம்மல மாறுமே. (௧௫௨)

2294. ஐயைந்து மட்டுப் பகுதியு மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்
டெய்யும் படியா யெவற்றுமா யன்றாகி
யுய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே. (௧௫௩)

2295. நின்றா னருளும் பரமுமுன் னேயமு
மொன்றாய் மருவு முருவு முபாதியுஞ்
சென்றா னெனைவிடுத் தாங்கிற்செல் லாமையு
நன்றான ஞானத்தி னாதப் பிரானே. (௧௫௪)

---

2291. நமவிட்டு = (திரோதான மலமும் மாயா மலமுமாகிய) நகார மகாரங்களை யொழித்து; வேறான = அவைகளுக்கு வேறான; தானே = ஆன்மாவே; யகாரமாய் = யகார வெழுத்தாகி; ஈறார்பரை = தத்துவங்க ளொழிந்தவிடத் துள்ளசத்தி; சிவாய = சிவாய என்பதனுள்.

2292. துரியத்திலோரைந்து = துரியம், துரியசாக்கிரம், துரியசொப்பனம், துரியசுழுத்தி, துரியத்தில் அதீதம்; பராவத்தா போதந்திரிய = பராவத்தையிலுண்டாகும் ஞானமுமொழிய.

2293. பந்திடும் = கூடியுள்ள; நந்தி பராவத்தை = சிவத்தை யடைவதற்குரிய பராவத்தை.

2294. ஐயைந்தும் = ஆன்ம தத்துவ மிருபத்து நான்கும் புருடனும்; பகுதி = மூலப் பிரகிருதி; புருடன் = ஆன்மா.

2295. நேயம் = அன்பு; உருவு: ஸ்தூலதேகம், சூக்குமதேகம்; உபாதி = காரணதேகம்; நன்றான ஞானம் = தத்துவஞானம்.

(எ) மூக்குண நிர்க்குணம்.

2296. சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த விராசத மன்னுங் கனவென்ப
வோய்த்திடுந் தாமத முற்ற சுழுத்தியா
மாய்த்திடு நிர்க்குண மாசி றுரியமே. (கரு௫)

(அ) அண்டாதிபேதம்.

2297. பெறுபகி ரண்டம் பேதித்த வண்ட
மெறிகட லேழின் மணலள வாகப்
பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச்
செறியுமண் டாசனத் தேவர் பிரானே. (கருசு)

2298. ஆனந்த தத்துவ மண்டா சனத்தின்மேன்
மேனியைந் தாக வியாத்தமூப் பத்தாறுய்த்
தானந்த மில்லாத தத்துவ மானவை
யீனமி லாவண்டத் தெண்மடங் காமே. (கருஎ)

(கூ) பதினோராந்தானமு மவத்தையெனக் காணல்.

2299. அஞ்சி லமுதுமோ ரேழின்க ணனந்த
முஞ்சிலோங் காரமோ ரொன்பான் பதினொன்றில்
வஞ்சக மேநின்று வைத்திடிற் காயமாங்
கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே. (கருஅ)

2300. புருட னுடனே பொருந்திய சித்த
மருவமொ டாரு மதீதத் துரியம்
விரியுஞ் சுழுத்தியின் மிக்குள்ள வெட்டு
மரிமய பதினொன்று மாமவ் வவத்தையே. (கருகூ)

2296. சாத்திகம்=சத்துவ குணம்; மாய்த்திடும்=இவ் வவத்தைகளை யொழித்து நிற்கும்.

2297. பகிரண்டம் = புறவண்டம்; பேதித்தவண்டம் = (ஒன்றுக்கொன்று) விரோதப் படுவனவான நிலவண்டம், நீரண்டம், தீயண்டம், வாயுவண்டம், ஆகாயவண்டம்; பொறியொளி= கண்ணொளி (போலவும்); பொன்னணி = பொன்னி லாபரணம் போலவும்; செறியும்=கலந்திருப்பன்.

2298. அண்டாசனம்=அண்டக் கூட்டங்களாகிற ஆசனம்.

2299. அஞ்சிலமுது = சிவதத்துவத்தி னீறுய சிவம்; எழின்க ணனந்தம்=வித்தியாதத்துவத்தி னீறுய மாயை; முஞ்சில்= அழிவில்லாத; ஓங்காரம் (மூன்று) ஒரொன்பான் பதினொன் றில்=ஆன்மதத்துவத்தின் இருபத்து மூன்றுவதாய அகங் கார தத்துவத்தில்; காயமாம்=பிறப்புண்டாம்.

2300. எட்டும்=புரியட்டகமும்.

2301. காட்டும் பதினொன் றுங் கைகலந் தாலுட
னூட்டி யழுத்திடி னந்தியல் லாலில்லை
யாட்டஞ்செய் யாத வதுவிதி யேகினை
யீட்டு மதுதிட மெண்ண லுமாமே. (கசூ0)

(க0) கலவு செலவு.

2302. கேவலந் தன்னிற் கலவச் சகலத்தின்
மேவுஞ் செலவு விடவரு நீக்கத்துப்
பாவுந் தனைக்காண்டன் மூன்றும் படர்வற்ற
தீதறு சாக்கிரா தீதத்திற் சுத்தமே. (கசூக)

2303. வெல்லு மளவில் விடுமின் வெகுளியைச்
செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
யல்லும் பகலு மருளுடன் றாங்கினாற்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே. (கசூஉ)

(கக) நின்மலாவத்தை.

2304. ஊமைக் கிணற்றகத் துள்ளே யுறைவதோ
ராமையி னுள்ளே யழுவைக ளைந்துள
வாய்மையி னுள்ளே வழுவா தொடுங்குமே
லாமையின் மேலுமோ ராயிரத் தாண்டே. (கசூங)

---

2301. கைகலந்தால் = கூடினால்; அழுத்திடின் = நிலைபெற்று நின்றால்; ஆட்டஞ் செய்யாத=சலனமற்ற.

2302. கேவலந் தன்னில் = தத்துவங்களொன்றுடனும் கூடாதிருத்தலில்; கலவ = பொருந்த; பாவும் = பொருந்தும்; தனைக்காண்டல்=சீவ தரிசனம்; மூன்றும்=சீவ தரிசனத்துடன் பர தரிசனமும், சிவ தரிசனமும்.

2303. வெல்லுமளவில்=சக்தியுள்ளமட்டில்; செல்லுமளவும்=கூடியவரையில்; அருளுடன்=பராசக்தியொடு; கல்லும்=ஆணவ விருளும்; கடுவெளி=பரமாகாயம்.

2304. ஊமைக்கிணறு = நின்மலாவத்தை; ஆமை=அவ்வவத்தையின் பேதமான சாக்கிர முதலிய வைந்து; அழுவை = (அவ்வவத்தைகளில் நிகழும்) விஷயங்கள்; வாய்மை=மெய்ப்பொருள்; ஆமையின்=ஆமையின் வயதுபோல.

2305. காலங்கி நீர்பூக் கலந்தவா காய
மாலங்கி யீசன் பிரமன் சதாசிவன்
மேலஞ்சு மோடி விரவவல் லார்கட்குக்
காலனு மில்லை கருத்தில்லை தானே. (கசூச)

2306. ஆன்மாவே மைந்த னாயின னென்பது
தான்மா மறைபறை தன்மை யறிகில
ரான்மாவே மைந்த னரனுக் கிவனென்ற
லான்மாவு மில்லையா லையைந்து மில்லையே. (கசூரு)

2307. உதய மழுங்க லொடுங்கலிம் மூன்றின்
கதிசாக்கி ரங்கன வாதி சுழுத்தி
பதிதரு சேதனன் பற்றுந் துரியத்
ததிசுப னுவனந் தானந்தி யாமே. (கசூசூ)

2308. எல்லாந்தன் னுட்புக யாவுளுந் தானாகி
நல்லாந் துரியம் புரிந்தக்கா னல்லுயிர்
பொல்லாத வாறாறுட் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றெய்து மன்றே. (கசூஎ)

2309. காய்ந்த விரும்பு கனலை யகன்றாலும்
வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போ
லேய்ந்த கரண மிறந்த துரியத்துத்
தோய்ந்த கருமத் துரிசக லாதே. (கசூஅ)

---

2305. பூ=பிருதிவி; அங்கி=அக்கினி பூதத்துக்குரிய வுருத்திரன்; ஈசன் = மஹேசன்; மேலஞ்சுமோடி = அப் பூதங்களை அறியும் ஞானேந்திரியங்களைந்தையுங் கடந்து; விரவ = சிவத்துடன் கூட; கருத்து=விருப்பம்.

2306. மைந்தன்=புத்திரன்; ஆன்மாவுமில்லை = சிவத்தைத் தவிர ஆன்மாவென்பதும் தனித்ததொன்றில்லை; ஐயைந்து=ஆத்ம தத்துவ மிருபத்துநான்கும் ஆன்மா வொன்றுமாக இருபத்தைந்து.

2307. உதயம்=உற்பத்தி; மழுங்கல்=குறைதல்; ஒடுங்கல் = இலயித்தல்; சேதனன்=ஆன்மா.

2308. யாவுளும் = எல்லாப் பொருள்களிலும்; ஆறாறு = முப்பத்தாறு தத்துவம்; போதமாய்=ஞானவடிவமாய்; செல்லா = திரும்பிவருதலில்லாத.

2309. வாதனை=வாசனை (வெப்பம்); கருமத்துரிசு=கன்மவாசனை.

2310. ஆன மறையாதி யாமுரு நந்திவந்
தேனை யருள்செய் தெரிநனு வத்தையி
லான வகையை விடுமடைத் தாய்விட
வானம லாதீத மப்பரந் தானே. (கசுகூ)

2311. சுத்த வதீதஞ் சகலத்திற் றேய்வுறி
லத்த னருணீங்கா வாங்கணிற் றனுகச்
சித்த சுகத்தைத் தீண்டாச் சமாதிசெய்
தத்தனோ டொன்றற் கருண்முத லாமே. (கஎ0)

2312. வேறுசெய் தானிரு பாதியின் மெய்த்தொகை
வேறுசெய் தானென்னை யெங்கணும் விட்டுய்த்தான்
வேறுசெய் யாவருட் கேவலத் தேவிட்டு
வேறுசெய் யாவத்தன் மேவிநின் றானே. (கஎக)

2313. கறங்கோலை கொள்ளி வட்டங் கடலிற்
றிரைநிறஞ் சேர்மத்தின் மலத்தினி னின்ற
திரங்காண் சுவர்க்க நரகம் புவிசேர்ந்
திரங்கா வுயிரரு ளாலிவை நீங்குமே. (கஎஉ)

2314. தானே சிவமான தன்மை தலைப்பட
வான மலமு மப்பாச பேதமு
மான குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போறபட ராவே. (கஎங)

2310. உருநந்தி = சகளசிவம்; நனவத்தை = சாக்கிராவஸ்தை; அடைத்தாய்=முறைமையாய்; அமலாதீதம் = சுத்தமான துரியாதீதம்.

2311. ஆங்கணில் = அவ்விடத்தில்; சித்தசுகத்தை = சித்தத்தினு லுணரப்படும் சுகத்தை; அருண்முதலாம்=அருளே காரணமாம்.

2312. இரு பாதியின்=ஆண்பெண் என்னு மிருபகுதியான சொரூபத்தினுல் (அர்த்தநாரி சொரூபம்); எங்கணும் விட்டுய்த்தான் = வியாபக முறச்செய்தான்; அருட் கேவலத்து = நின்மல கேவலத்து; வேறு செய்யா = வேற்றுமை செய்யாமல்.

2313. கறங்கோலை=காற்றுடி; கொள்ளி வட்டம்=எரிகொள்ளியை வட்டமாய்ச் சுழற்றுதல்; கடலிற்றிரை=சமுத்திரத்தினலை; நிறஞ்சேர்மத்து = அழகிய மத்து; இரங்காவுயிர் = வருந்துமான்மா.

2314. தலைப்பட = உண்டாக; பாசபேதம் = ஐவகையான மலம்; பரான்மா = பசுத்தன்மையற்ற ஆன்மா (கூடஸ்தன்), உபாதி=தடை; படரா=பரவாத.

2315. நெருப்புண்டு நீருண்டு வாயுவு முண்டங்
கருக்கனுஞ் சோமனு மங்கே யமருந்
திருத்தக்க மாலுந் திசைமுகன் றானு
முருத்திர சோதியு முள்ளத்து ளாரே. (களச)

2316. ஆனைக ளைந்து மடக்கி யறிவென்னு
ஞானத் திரியைக் கொளுவி யதனுட்புக்
கூனை யிருளற நோக்கு மொருவற்கு
வானக மேற வழியெளி தாமே. (களரு)

2317. ஆடிய காலி லசைக்கின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக வோசையும்
பாடி யெழுகின்ற வேதாக மங்களு
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே. (களசு)

2318. முன்னை யறிவினிற் செய்த முதுதவம்
பின்னை யறிவினைப் பெற்றா லறியலாந்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே. (களஎ)

2319. செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தோடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாமே. (களஅ)

2320. தானவ னாகுஞ் சமாதிகை கூடினு
லான மலமறு மப்பசுத் தன்மைபோ
யீனமில் காய மிருக்கு மிருநிலத்
தூனங்க ளெட்டு மொழித்தொன் றுவோர்கட்கே. ()

---

2315. இத் திருமந்திரம் அண்டத்திலுள்ளவை பிண்டத்திலு முண்டெனக் கூறியதென்க.

2316. ஆனைகளைந்தும் = ஐம்புலன்களும்; கொளுவி=கொளுத்தி; ஊனை=சிவத்தை; வானகம்=பரமாகாயத்தானம்.

2317. காலின் = துகிற்கொடியின்கண் ; தமருகம் = உடுக்கை ; தாடித்து =(தடித்து) மிகுந்து; நாடியினுள்=பிரமரந்திரத்தினுள்.

2318. முன்னை = பூர்வஜன்மம்; தன்னை யறிவதறிவாம் = ஆன்மாவைத் தனித்துணர்வதே ஞானமாகும்.

2319. செயலற்றிருப்பார்=நிஷ்டை புரிபவர்; செய்தி=முத்தி.

2320. பசுத்துவம்=சீவத்துவம்; ஊனங்களெட்டு=கடன்கோடல், இரத்தல், வியபிசரித்தல், திருடல், மூத்தல், வியாதி, எச்சிலுண்ணல், வறுமை என்பன.

2321. தொலையா வரனடி தோன்றுமஞ் சத்தி
தொலையா விருளொளி தோற்ற வணுவுந் [த்
தொலையாத் தொழின்ஞானந் தொன்மையி னண்ணி
தொலையாத பெத்தமுத் திக்கிடை தோயுமே. (கஅ0)

2322. தோன்றிய பெத்தமு முத்தியுஞ் சூழ்சத்தி
மான்றுந் தெருண்டு முயிர்பெறு மற்றவை
தான்றரு ஞானந்தன் சத்திக்குச் சாதன
மூன்றவில் லாவுள் ளொளிக்கொளி யாமே. (கஅக)

2323. அறிகின்றி லாதான வையேழு மொன்று
மறிகின்ற வென்னை யறியா திருந்தே
னறிகின்றாய் நீயென் றருள்செய்தா னந்தி
யறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே. (கஅஉ)

2324. தானவ னாகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
யீனமின் ஞானத்தி னின்னருட் சத்தியை
யூனமிலா டன்னை யூனிடைக் கண்டதே. (கஅங)

2325. ஒளியு மிருளும் பரையும் பரையுள்
ளளிய தெனலாகு மான்மாவை யன்றி
யளியு மருளுந் தெருளுங் கடந்து
தெளிய வருளே சிவானந்த மாமே. (கஅச)

2326. ஆனந்த மாகு மரனருட் சத்தியிற்
றானந்த மாமுயிர் தானே சமாதிசெய்
தூனந்த மாயுணர் வாயுள் ளுணர்வுறிற்
கோனந்தம் வாய்க்கு மகாவாக்கிய மாமே. (கஅரு)

---

2321. அஞ்சத்தி=சிறந்த சத்திநிபாதம்; இருளொளி=பாசத்தின் றன்மையும், ஆன்மாவின் தன்மையும்; தொன்மையின் = அநாதியாக; பெத்தம்=பந்தம்.

2322. மான்றும்=மயங்கியும்.

2323. ஐயேழு மொன்றும்=முப்பத்தாறு தத்துவங்களும்.

2326. கோனந்தம்=சிவத்தின் தன்மை; மகாவாக்கியமாம்=தத்துவமசி மகாவாக்கியத்தின் பொருள் சித்திக்கும்.

2327. அறிவிக்க வேண்டா மறிவற் றயர்வோர்க்கு
மறிவிக்க வேண்டா மறிவிற் செறிவோர்க்கு
மறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
யறிவிக்கத் தம்மறி வாரறி வோரே. (கஅசு)

2328. சத்து மசத்துஞ் சதசத்துந் தான்கூடிச்
சித்து மசித்துஞ் சிவசித்த தாய்நிற்குஞ்
சுத்த மசுத்தந் தொடங்காத் துரியத்துச்
சுத்தரா மூன்றுடன் சொல்லற் றவர்களே. (கஅஎ)

2329. தானே யறியா னறிவிலோன் றானல்லன்
றானே யறிவா னறிவு சதசத்தென்
றானு லிரண்டு மரனரு ளாய்நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் றங்குமே. (கஅஅ)

2330. தத்துவ ஞானந் தலைப்பட் டவர்கட்கே
தத்துவ ஞானந் தலைப்பட லாநிற்குந்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானனந் தந்தான் றொடங்குமே (கஅகூ)

2331. தன்னை யறிந்து சிவனுடன் றானாக
மன்னு மலங்குண மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. (ககூ0)

2332. ஞானந்தன் மேனி கிரிகை நடுவங்கந்
தானுறு மிச்சை யுயிராகத் தற்பரன்
மேனிகொண் டைங்கரு மத்துவித் தாதலான்
மோனிகண் ஞானத்து முத்ரைபெற் றார்களே. ()

---

2327. அறிவிற் செறிவோர்க்கு = அறிவொடு கூடியிருப்பவர்க்கு; அறிவுற்றறியாமை யெய்தி நிற்போர்க்கு = அறிவுடையவராய் விஷயங்களைத் தெரிந்து கொள்ளாம லிருப்பவர்க்கு.

2328. சுத்தமசுத்தம்=ஞானம் அஞ்ஞானம்; மூன்றுடன்=சாக்கிர சொப்பன சுழுத்தியோடு.

2329. நல்லன்=அறிவுள்ளவன்; அறிவு=ஆன்மா.

2330. தத்துவஞானம் = தத்துவங்களை யறியுமறிவு; தத்துவ ஞானம்=மெய்ஞ்ஞானம்.

2332. அங்கம் = உறுப்பு; உயிர் = பிராணன்; ஐங்கருமம் = பூத சுத்தி முதலிய பஞ்சசுத்தி; ஞானத்து முத்திரை = சின் முத்திரை (குறி).

2333. உயிர்க்கறி வுண்மை யுயிரிச்சை மான
முயிர்க்குக் கிரியை யுயிர்மாயை சூக்க
முயிர்க்கிவை யூட்டுவோ னூட்டு மவனே
யுயிர்ச்செய லன்றியவ் வுள்ளத்து ளானே. (கககூஉ)

2334. தொழிலிச்சை ஞானங்க டொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னாகும்
பழியற்ற காரண காரியப் பாழ்விட்
டழிவற்ற சாந்தாதீ தன்சிவ னாமே. (கககூங)

2335. இல்லது முள்ளது மியாவையுந் தானாகி
யில்லது முள்ளது மாயன்று மண்ணலைச்
சொல்லறு சொல்லிடிற் றூராதி தூரமென்
றெல்லை யுணர்ந்தா லுயிர்க்குயி ராமே. (கககூச)

2336. உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சத்தி
யுயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞான
முயிரிச்சை யூட்டி யுடனுற லாலே
யுயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேரும். (கககூரு)

2337. சேருஞ் சிவமானா ரைம்மலந் தீர்ந்தவ
ரோரொன்றி லாரைம் மலவிரு ளுற்றவர்
பாரின்கண் விண்ணர கம்புகும் பான்மையா
ராருங்கண் டோரா ரவையரு ளென்றே. (கககூசு)

---

2333. மானம் = அபிமானம்; ஊட்டுமவன் = உண்பிக்குஞ் சிவன்; அவ் வுள்ளத் துள்ளான்=அவ் வான்மாவினுள் (தோன்றாத் துணையாய்) இருக்கின்றனன்.

2334. மாமாயை=சுத்த மாயை; மாயை=அசுத்த மாயை; சாந்தாதீதன்=ஆநந்தாதீதமான ஆன்மா.

2335. இல்லது முள்ளதும்=அசத்தும் சத்தும்; சொல்லது=சொல்லினால்.

2336. உயிரிச்சை=உயிர்க்கு இச்சை; உழிதரும்=அலையச்செய்யும்; ஞானம் = ஞானசத்தி; உடனுறலால்=(சிவன்) உயிருடனிருத்தலால்.

2337. ஐம்மலம் = ஐந்துமலம்; ஓரொன்றிலார் = தத்துவஞான மில்லாதவர்; ஐம்மல விருளுற்றவர்=பஞ்சமலங்களாலாகிய அஞ்ஞான முள்ளவர்.

2338. எய்தினர் செய்யு மிருமாயா சத்தியி
னெய்தினர் செய்யு மிருஞான சத்தியி
னெய்தினர் செய்யு மிருஞால சத்தியி
னெய்தினர் செய்யு மிறையரு டானே. (ககூஎ)

2339. திருந்தனர் விட்டார் திருவி னரகந்
திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கந்
திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டந்
திருந்தனர் விட்டார் சிவமா யவமே. (ககூஅ)

2340. அவமுஞ் சிவமு மறியா ரறியா
ரவமுஞ் சிவமு மறிவா ரறிவா
ரவமுஞ் சிவமு மருளா லறிந்தா
லவமுஞ் சிவமு மவனரு ளாமே. (ககூகூ)

2341. அருளான சத்தி யனல்வெம்மை போலப்
பொருளவ னாகத்தான் போதம் புணரு
மிருளொளி யாய்மீண்டு மும்மல மாகுந்
திருவரு ளானந்தி செம்பொரு ளாமே. (உ00)

2342. ஆதித்தன் றோன்ற வரும்பது மாதிகள்
பேதித்த தவ்வினை யாற்செயல் சேதிப்ப
வாதித்தன் றன்கதி ராலவை சேட்டிப்பப்
பேதித்துப் பேதியா வாறருட் பேதமே. (உ0க)

2343. பேத மபேதம் பிறழ்பேதா பேதமும்
போதும் புணர்போதம் போதமு நாதமு
நாத முடனாதை நாதாதி நாதமு
மாத னருளி னருளிச்சை யாமே. (உ0உ)

---

2338. இரு மாயாசத்தி=சுத்தாசுத்த மாயைகள்; ஞாலசத்தி=பிரபஞ்சத்துக்குரிய பிரகிருதி (மாயாசத்தி).

2339. திருந்தனர்=தத்துவஞானத்தால் நிட்டை வாய்க்கப்பெற்றவர்; அவம்=பிறப்பிற் கேதுவாய செயல், அல்லது=மாயை.

2341. அருளான சத்தி=அருட்சத்தி; போதம் புணரும் = ஞானமாகும்.

2342. பதுமாதிகள்=தாமரை நீலோற்பல முதலியன; பேதித்தது=முறையே மலர்தல் குவிதல் முதலியனவாயின; சேட்டிப்ப=இயக்க; அருட்பேதம்=திருவருளின் வேற்றுமை.

2343. ஆதன்=ஆன்மா; அருளின்=சிவத்தினருளால்.

2344. மேவிய பொய்க்கரி யாட்டும் வினையெனப்
பாவிய பூதங்கொண் டாட்டிப் படைப்பாதி
பூவியல் கூட்டித்தற் போதம் புரிந்தரு
ளாவியை நாட்டு மரனரு ளாமே. (உ0௩)

2345. ஆறு றகன்று தனையறிந் தானவ
னீறாகி யாவினு மியாவுந் தனிலெய்த
வேறாய் வெளிபுக்கு வீடுற்றா னம்மரு
டேறுத் தெளிவுற்றுத் தீண்டச் சிவமாமே. (உ0௪)

2346. தீண்டற் கரிய திருவடி நேயத்தை
மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று
தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறித்
தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே. (உ0௫)

2347. சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்
சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியர்
சார்ந்தவர் நேயந் தலைப்பட்ட வானந்தர்
சார்ந்தவர் சத்த வருட்டன்மை யாரே. (உ0௬)

2348. தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. (உ0௭)

---

2344. பொய்க்கரி = மர முதலியவற்றால் செய்த பொய் யானை; பூதம்=பிருதிவியாதி பூதங்கள்; பூவியல்=பிரபஞ்ச வியற்கை (ஜனனமரணந்தி); தற்போதம் புரிந்து = தன்னறிவைக்கொடுத்து; நாட்டும்=நிலைபெறச் செய்யும்.

2345. ஆனவன்=சிவமான ஆன்மா; யாவுந் தனி லெய்த=எல்லாப் பொருளும் தன்னிடத்தில் தோன்ற; வேறாய்=அப்பொருள்கட்கு வேறாய்; வெளிபுக்கு = பரமாகாயத்தி லடைந்து; வீடுற்றான்=சீவன் முத்தியடைந்தவன்; அம் அருள்=சிறந்த திருவருள்; தேறி=அறிந்து.

2346. திருவடி நேயத்தை = சிவனது திருவடிக்கண் அன்பினை; விதிவழி=ஆகமங் கூறியவாறு; மா=குதிரை.

2347. சார்ந்தவர் = சிவத்தை யடைந்தவர்; சத்தவருள் = நாத மயமான சத்தி.

2348. அவன் = சிவபிரான்; தத்துவம் = பதார்த்தம்; உன்னார் = கருதார்; தான்=சீவத்துவம்; தானாக=சிவமாக.

2349. தன்னினிற் றன்னை யறியுந் தலைமகன்
றன்னினிற் றன்னை யறியத் தலைப்படுந்
தன்னினிற் றன்னைச் சார்கில னாகிற்
றன்னினிற் றன்னையுஞ் சார்தற் கரியவே. (உ0அ)

2350. அறியகில் லேனென் றரற்றாதே நீயு
நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னை
யிருசுட ராகி யியற்ற வல்லானு
மொருசுட ராவந்தென் னுள்ளத்துள் ளாமே. (உ0கூ)

2351. மண்ணொன்று தான்பல நற்கல னாயிடு
முண்ணின்ற யோனிகட் கெல்லா மொருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
வண்ணலு மவ்வண்ண மாகிநின் றானே. (உக0)

2352. ஓம்புகின் றானுல கேழையு முண்ணின்று
கூம்புகின் றார்குணத் தின்னொடுங் கூறுவர்
தேம்புகின் றார்சிவஞ் சிந்தைசெய் யாதவர்
கூம்பகில் லார்வந்து கொள்ளலு மாமே. (உகக)

2353. குறியறி யார்கள் குறிகாண மாட்டார்
குறியறி யார்கடங் கூடல் பெரிது
குறியறி யாவகை கூடுமின் கூடி
யறிவறி யாவிருந் தன்னமு மாமே. (உகஉ)

---

2349. தன்னினில் = சரீரத்தினில்; தன்னில் = ஆன்மாவில்; தலைமகன் = புருஷன்; தன்னையறிய = சிவத்தையறிய; தலைப்படும் = முயலுவன்.

2350. இருசுடராகி = சீவேசுரராய்; இயற்ற = உலகைப் படைக்க; ஒரு சுடராய் = சிவமாய்.

2351. கலன் = பாத்திரம்; யோனிகட்கெல்லாம் = சரீரங்களுக்கெல்லாம்; அண்ணலும் = சிவனும்; அவ்வண்ணம் = மண்ணுங் கண்ணும் போல.

2352. கூம்புகின்றார் = மனங்குவிந்தவர்; கூம்பகில்லார் = தளர்ச்சி அடையாதவர்.

2353. குறியறியார்கள் = குறித்தறியுநெறியை யுணராதவர்கள்; கடம் = உடம்பு; கூடல் = கூட்டம்; குறியாவகை = சீவசொரூபம் தோன்றாதபடி; அன்னம் = அன்னவடிவமான சிவம்.

2354. ஊனோ வுயிரோ வுறுகின்ற தேதின்பம்
வானோர் தலைவி மயக்கத் துறநிற்கத்
தானோ பெரிதறி வோமென்னு மானுடர்
தானே பிறப்போ டிறப்பறி யாரே. (உகரு)

சு-வது அறிவுதயம்.

2355. தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
றன்னை யறியு மறிவை யறிந்தபின்
றன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே. (க)

2356. அங்கே யடற்பெருந் தேவரெல் லாந்தொழச்
சிங்கா சனத்தே சிவனிருந்தா னென்று
சங்கார் வளையுஞ் சிலம்புஞ் சரேலெனப்
பொங்கார் குழலியும் போற்றியென் றாளே. (உ)

2357. அறிவு வடிவென் றறியாத வென்னை
யறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
யறிவு வடிவென் றருளா லறிந்தே
யறிவு வடிவென் றறிந்திருந் தேனே. (ரு)

2358. அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை
யறிவுக் கறிவல்ல தாதார மில்லை
யறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறு கடாமே. (ச)

2359. ஆயு மலரி னணிமலர் தன்மேலே
பாய விதழ்கள் பதினாறு மங்குள
தூய வறிவு சிவானந்த மாகியே
போய வறிவாய்ப் புணர்ந்திருந் தானே. (ரு)

2354. வானோர் தலைவி=தேவர்களாராய்ந்துணர்தற்குரிய பராசத்தியினது; மயக்கத்து = வசத்து; உறநிற்க=பிறழாதுநின்று.

2356. அங்கே=(அருச்சிக்கும்) அவ்விடத்தே; சங்கார்வளை=சங்கினாற் செய்த வளை; பொங்கார் குழலி = பிரகாசிக்கின்ற கூந்தலையுடைய தேவி.

2357. அறிவுவடிவென் றறியாத=அறிவினையே சொரூபமாகவுடையவன் நான் என்றறியாமலிருக்கிற.

2358. ஆக்கம் = தோற்றம்; என்றிட்டு=என்று; மறையீறுகள்= உபநிடதங்கள்.

2359. ஆயுமலர்=ஆராய்தற்குரிய ஆதாரங்களான மலர்; பாய=பரந்த; இதழ்கள் பதினாறும்=பதினாறிதழ்களும், அங்கு=விசுத்தியின்கண்; போய=பசுத்துவம் நீங்கிய.

2360. மன்னிநின் றாரிடை வந்தருண் மாயத்து
முன்னிநின் றானை மொழிந்தேன் முதல்வனும்
பொன்னின்வந் தானோர் புகழ்திரு மேனியைப்
பின்னிநின் றேனீ பெரியையென் றானே. (சு)

2361. அறிவறி வாக வறிந்தன்பு செய்மி
னறிவறி வாக வறியுமிவ் வண்ண
மறிவறி வாக வணிமாதி சித்தி
யறிவறி வாக வறிந்தன னந்தியே. (எ)

2362. அறிவறி வென்றங் கரற்று முலக
மறிவறி யாமை யாரு மறியா
ரறிவறி யாமை கடந்தறி வானா
லறிவறி யாமை யழகிய வாறே. (அ)

2363. அறிவறி யாமையை நீவி யவனே
பொறிவா யொழிந்தெங்குந் தானான போது
வறிவா யவற்றினுட் டானா யறிவின்
செறிவாகி நின்றவன் சீவனு மாமே. (கூ)

2364. அறிவுடை யார்நெஞ் சகலிட மாவ
தறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவ
தறிவுடை யார்நெஞ்சொ டாதிப் பிரானு
மறிவுடை யார்நெஞ்சத் தங்குநின் றானே. (கO)

2365. மாயனு மாகி மலரோ னிறையுமாய்க்
காயநன் னாட்டுக் கருமுத லானவன்
சேய னணியன் றித்திக்குந் தீங்கரும்
பாயமு தாகிநின் றண்ணிக்கின் றானே. (கக)

---

2360. மன்னி=(தன்னை) சேர்ந்து ; மாயத்து=மாயாமய சரீரத்தில் ; பொன்னின்=பொன்னைப்போல ; பின்னி=கலந்து.

2361. அறிவறிவாக=சீவன் சிவமாக; அன்பு=நிஷ்டை; அறியும்=ஆராய்ச்சி செய்மின்.

2362. அறிவறியாமை = அறிவையும் அறியாமையையும், அறிவானால்=ஞானமே வடிவமாயிருந்தால்.

2353. நீவி=ஒழித்து ; பொறிவாயொழிந்து=புலன்களைக் கடந்து.

2364. அறிவுடையார் = திடஞானிகள்; அகலிடம் = பரமாகாயம்; சவம்=வியாபார மின்மை.

2365. இறை=உருத்திரன்; காயநன்னாடு=உடல்; கரு=உற்பத்தி; அண்ணிக்கின்றன்=பிரியாதிருக்கின்றன்.

×தேடுதல்- அந்நியவழியாக்கிய பொருள் பயப்பதாகிய சிவோகம் பாவனை செய்தல்.



2366. என்னை யறிந்திலே னித்தனை காலமு
மென்னை யறிந்தபி னேது மறிந்திலே
னென்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னையிட் டென்னை யுசாவுகின் றானே. (கஉ)

2367. மாய விளக்கது நின்று மறைந்திடுந்
தூய விளக்கது நின்று சுடர்விடுங்
காய விளக்கது நின்று கனன்றிடுஞ்
சேய விளக்கினைத் தேடுகின் றேனே. (கங)

2368. தேடுகின் றேன்றிசை யெட்டோ டிரண்டையு
நாடுகின் றேனல மேயுடை யானடி
பாடுகின் றேன்பர மேதுணை யாமெனக்
கூடுகின் றேன்குறை யாமனத் தாலே. (கச)

2369. முன்னை முதல்வினை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவர் பேர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்துதன் பண்டைத் தலைவன்றாண்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பே. (கரு)

---

ரு-வது ஆறந்தம்.

2370. வேதத்தி னந்தமு மிக்கசித் தாந்தமு
நாதத்தி னந்தமு நற்போத வந்தமு
மோதத் தகுமெட் டியோகாந்த வந்தமு
மாதிக்க லாந்தமு மாறந்த மாமே. (க)

2371. அந்தமோ ராறு மறிவா ரதிசுத்த
ரந்தமோ ராறு மறிவா ரமலத்த
ரந்தமோ ராறு மறியா ரவர்தமக்
கந்தமோ டாதி யறியவொண் ணாதே. (உ)

---

2366. ஏதும்=பிரபஞ்சத்தி லெதனையும்.

2367. மாயவிளக்கு=மாயையாகிய விளக்கு; ×தூயவிளக்கு=நின்மலமாகிய ஞானவிளக்கு; காயவிளக்கு=சரீரமாகிய விளக்கு; கனன்றிடும்=வருத்தும், சேய விளக்கினை=(இவற்றிற்கு) அப்பாலாகிய சிவ விளக்கினை.

2368. நலமேயுடையான்=ஆநந்தமே வடிவமாகவுடைய சிவபிரான்; குறையாமனம்=சிவகரணம்.

2369. முன்னை முதல்=அநாதியாகும்; வினையாட்டத்து = பிறப்பினுள்; மலம் வந்தவர்=மலபரிபாகம் வந்தவர், பேர்த்திட்டு=சமாதியால் மலத்தைக் கெடுத்து.

2370. வேதத்தினந்தம்=வேதாந்தம் (உபநிடதம்); சித்தாந்தம் = ஆகமாந்தம்; போதவந்தம்=போதாந்தம்; கலாந்தம்=கலாதத்துவாந்தம்.

2371. அந்தமோடாதி=பிரபஞ்சத்தின் அந்தமும் ஆதியும்.

×தூயவிளக்கு- அநாதியே சிவத்துவமென்னும் மிகச்சுத்த மிளையந்த ஆன்மாவாகிய விளக்கு; நின்று-பாசத்தால் மறைக்கப்பட்டு நின்று- சுடர் விடும்- அது நீங்கியவழிச் சிவமாய்ப் பிரகாசிக்கும் அங்ஙனம் சேயவிளக்கினைத் தேடுகின்றேன்-(பிரகாசிக்கும் முதலாகிய சேய்மையிலிருந்து சிவனாகத் தேடுகின்றேன்.

2372. தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்த
மானாத் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேர்சிவ யோகமா
யானா மலமற் றருஞ்சித்தி யாதலே. (௩)

2373. நித்தம் பரனோ டுயிருற்று நீண்மனஞ்
சத்த முதலைந்துந் தத்துவத் தானீங்கிச்
சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்
தத்தன் பரன்பா லடைதல்சித் தாந்தமே. (௪)

2374. மேவும் பிரமனே விண்டுவு ருத்திரன்
மேவுமெய் யீசன் சதாசிவன் மிக்கப்பால்
மேவும் பரவிந்து நாதம் விடாவாறா
றோவும் பொழுதணு வொன்றுள தாமே. (ரு)

2375. உள்ள வுயிராறா றாகு முபாதியைத்
தெள்ளி யகன்றுநா தாந்தத்தைச் செற்றுமே
லுள்ள விருணீங்க வோருணர் வாகுமே
லெள்ளலி னாதாந்தத் தெய்திடும் போதமே. (சு)

2376. தேடு மியம நியமாதி சென்றகன்
றாடுஞ் சமாதியி லுற்றுப் படர்சிவன்
பாடுறச் சீவன் பரமாகப் பற்றறக்
கூடு முபசாந்தம் யோகாந்தக் கொள்கையே. (எ)

---

2372. தானான=ஆன்மாவேபிரமமெனும்; தானென்னும் = சிவமே ஆன்மாவென்னும்; அணுவன்=சீவான்மா; ஆனா=கெடாத.

2373. நித்தம் = எப்போதும்; தத்துவத்தால் = உண்மை தேர்தலால்; அத்தன்பரன்=அத்தனாகிய சிவபிரான்.

2374. விடா = விட்டு; ஆறாறு = முப்பத்தாறு தத்துவம்; ஓவும்= நீங்கும்; அணுவொன்றுளதாகும் = ஆன்மாவொன்றே யுளதாம்.

2375. செற்று=கடந்து; மேலுள்ளவிருள்=அதன்பிறகு முள்ள தான வாணவம்.

2376. பாடுற = அருகிற்சேர; கூடு முபசாந்தம் = உபசாந்தஞ் சித்திக்கும்.

2377. கொள்கையி லான கலாந்தங் குறிக்கொளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்
குள்ளன வாம்விந்து வுள்ளே யொடுங்கலுந்
தெள்ளி யதனைத் தெளிதலு மாமே. (அ)

2378. தெளியு மிவையன்றித் தேரைங் கலைவே
றொளியு ளமைத்துள்ள தோரவல் லார்கட்
களியவ னாகிய மந்திரந் தந்திரந்
தெளிவுப தேசஞா னத்தொடைந் தாமே. (கூ)

2379. ஆகு மனாதி கலையா கமவேத
மாகுமத் தந்திர மந்நூல் வழிநிற்ற
லாகு மனாதி யுடலல்லா மந்திர
மாகுஞ் சிவபோ தகமுப தேசமே. (கO)

2380. தேசார் சிவமாகுந் தன்ஞானத் தின்கலை
யாசார நேய மறையுங் கலாந்தத்துப்
பேசா வுரையுணர் வற்ற பெருந்தகை
வாசா மகோசர மாநந்தி தானே. (கக)

2381. தானவ னாகுஞ் சமாதி தலைப்படி
லான கலாந்தநா தாந்தயோ காந்தமு
மேனைய போதாந்தஞ் சித்தாந்த மானது
ஞான மெனஞேய ஞாதுரு வாகுமே. (கஉ)

2382. ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
யாறந்த ஞேய மடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய யோனஞ் சிவானந்த வுண்மையே. (கங)

---

2377. நிவிர்த்தாதி = நிவிர்த்திகலை முதலிய வைந்து; மேதாதி = மேதை (மூளை) முதலிய தாது எழு.

2378. ஐங்கலை=கலை, மந்திரம், தந்திரம், உபதேசம், ஞானம் என ஐந்து.

2279. மனாதியுடலல்லாமந்திரம்=மனமுதலிய கருவிகளும் சரீரமு மல்லாது தனித்துநிற்கும் மந்திரம் (அது காரணபஞ்சாக் கரம்).

2380. வாசாமகோசரம்=வாக்கு மனாதிகளுக்கெட்டாத.

2381. ஞேயம்=காணப்படுபொருள்; ஞாதுரு=காண்பவன்.

2382. முஞ்சென்று = முன்னே (நோக்கி) சென்று; நேயத்தே= சிவத்திலே; வீடவே=(கலப்பினால்) தானற்று நிற்க.

2383. உண்மைக் கலையாறே ரைந்தா னடங்கிடு
முண்மைக் கலாந்த மிரண்டைந்தோ டேழுந்த
முண்மைக் கலையொன்றி லீறுய நாதாந்தத்
துண்மைக் கலைசொல்ல வோரந்த மாமே. (சச)

2384. ஆவுடை யாளை யரன்வந்து கொண்டபின்
றேவுடை யானெங்கள் சீர்நந்தி தாடந்து
வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே. (சரு)

2385. கருது மவர்தங் கருத்தினுக் கொப்ப
வரனுரை செய்தரு ளாகமந் தன்னில்
வருசம யப்புற மாயைமா மாயை
யுருவிய வேதாந்த சித்தாந்த வுண்மையே. (சசு)

2386. வேதாந்தஞ் சித்தாந்தம் வேறிலா முத்திரை
போதாந்த ஞானம்யோ காந்தம் பொதுஞேய
நாதாந்த மானந்தஞ் சீரோ தயமாகு
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கவே. (சஎ)

2387. வேதாந்தந் தன்னி லுபாதிமே லேழ்விட
நாதாந்த பாசம் விடுநல்ல தொம்பத
மீதாந்த காரணோ பாதியேழ் மெய்ப்பரன்
போதாந்த தற்பதம் போமசி யென்பவே. (சஅ)

2388. அண்டங்க ளேழுங் கடந்தகன் றப்பாலு
முண்டென்ற பேரொளிக் குள்ளா முளவொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் றானெங்கள் கோவே. (சகூ)

---

2384. ஆவுடையாளை = சீவான்மாக்களை யுடைமைப் பொருளாக வுடைய தேவியை; அருளிய=உபதேசிக்கும்படி.

2386. மூதாந்தம்=பழைமையான அந்தங்களாம்; முத்திரைமோனம்-மோனமுத்திரை.

2387. உபாதி யேழ்=ஜீவோபாதி ஏழு; காரணோபாதி யேழ்=ஈசுர உபாதி ஏழு; அசி=சிவ சீவர் ஒன்றுநிலே.

2388. உளவொளி=சிற்பாகாசம்; அன்றி நின்றான் = (மற்றொன்ற ேனாடும் சம்பந்தம்) இல்லாது நிலைபெற்றனன்.

**2389.** கோவுணர்த் துஞ்சத்தி யாலே குறிவைத்துத்
தேவுணர்த் துங்கரு மஞ்செய்தி செய்யவே
பாவனைத் தும்படைத் தர்ச்சனை பாரிப்ப
வோவனைத் துண்டொழி யாத வொருவனே. (உ0)

**2390.** ஒருவனை யுன்னு ருயிர்தன்னை யுன்னு
ரிருவினை யுன்னு ரிருமாயை யுன்னு
ரொருவனு மேயுள் ளுணர்த்திநின் றூட்டி
யருவனு மாகிய வாதரத் தானே. (உக)

**2391.** அரனன்பர் தானம தாகிச் சிவத்து
வருமவை சத்திகண் முன்னு வகுத்திட்
டுரனுறு சந்நிதி சேட்டிப்ப வென்றுந்
திரனுறு தோயாச் சிவாநந்தி யாமே. (உஉ)

**2392.** வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டயிக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே. (உ௩)

**2393.** சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகு
மவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்ற னு
னவமான வேதாந்த ஞானசித் தாந்தமே. (உ௪)

---

2389. கோ=ஆன்மா; சத்தி=திருவருள்; தேவுணர்த்துங் கருமம்= சிவத்தைத் தரிசித்தற்குரிய கன்மங்கள்; பா = செய்யுள் வடிவமான மந்திரம்; பாரிப்ப=நிரம்பச்செய்ய; ஓ(வ)=ஒழிய.

2390. ஒருவனை=ஏகனுகிய தேவனை; இருமாயை = சுத்தாசுத்த மாயைகள்; ஊட்டி=வினைப்போகங்களைப் புசிப்பித்து; அருவன்=சூக்குமரூபியான சிவபிரான்.

2391. தானமதாகி=இடமாகக் கொண்டெழுந்தருளி; முன்னு=முதலாக; சேட்டிப்ப=தொழிற்படுத்த; திரனுறு=நிலையாகும்.

2392. வேதாந்த தொம்பதம் = வேதாந்தம் கூறும் துவம்பத வாச்சியம் (பொருள்); நாதாந்த பாசம்=நாத தத்துவத்திற் கப்பாலாயுள்ள பாசம்; நன்பதி = நன்மையுள்ள பதிப்பொருள்; தற்பதம்=தற்பத வாச்சியம் (ஈசன்); இரண்டயிக்கியம் = பசு பதியிரண்டினொருமை; சாதாரணம் = இயல்பாகப் பெறப்பட்டிருத்தல்.

2393. அவ்வவ்விரண்டும் = (ஆறந்தங்களில் வேதாந்தமும் சித்தாந்தமும் ஒழிய வுள்ள ஏனைய) நான்கந்தங்களும்; நவமான = அற்புதமான.

**2394.** சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. (உரு)

**2395.** சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டு
மவமற்ற வேதாந்த சித்தாந்த மானு
னவமுற்ற வத்தையின் ஞானஞ் சிவமாந்
தவ்விக் குணர்ந்தவர் தத்துவத் தாரே. (உசு)

**2396.** தத்துவ மாகுஞ் சகள வகளங்க
டத்துவ மாம்விந்து நாதஞ் சதாசிவந்
தத்துவ மாகுஞ் சீவன்றன் றற்பரந்
தத்துவ மாஞ்சிவ சாயுச் சியமே. (உஎ)

**2397.** வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. (உஅ)

**2398.** பரானந்தி மன்னுஞ் சிவானந்த மெல்லாம்
பரானந்த மேன்மூன்றும் பாழுரு னந்தம்
விராமுத் திரானந்த மெய்ந்நட னானந்தம்
பொராநின்ற வுள்ளமே பூரிப்பி யாமே. (உகூ)

**2399.** ஆகுங் கலாந்த மிரண்டந்த நாதாந்த
மாகும் பொழுதிற் கலையைந்தா மாதனி
லாகு மரனேபஞ் சாந்தக னுமென்ன
வாகு மறையா கமமொழிந் தானன்றே. (௩0)

---

2394. சீவன்முத்தி=பசுத்துவநீக்கம், (யானெனதென்னுஞ் செருக்கின்மை); செம்பொருள்=மேலான பொருள்.

2395. பரன் = ஆத்மா; அவம் = கேடு; நவமுற்ற = மேம்பட்ட அவத்தையில்=துரியாவத்தையில்; தத்துவத்தார் = மெய்யுணர்ந்தவர்.

2396. அகளம்=நிஷ்களம்; தற்பரம்=ஆன்மா.

2397. இரண்டந்தம்=வேதாந்தம் ஆகமாந்தம்; பெரியோர் = மெய்யுணர்ந்தார்; அபேதம்=வேற்றுமையின்மை.

2398. பரானந்தி = சீவன் முத்தன்; மன்னும் = அடையும்; மூன்றும்=ஜீவசுழுத்தி, பரசுழுத்தி, சிவசுழுத்தி யென்னு மூன்றன்கண்ணும்; பாழுருனந்தம்=மாயையினாலாகிய இன்பம்; விரா = பொருந்திய; முத்திரானந்தம் = சாம்பவி முதலிய முத்திராப்பியாசத்தாலாகிய வின்பம்.

2399. பஞ்சாந்தகன் = தனித்தனியே ஐந்து கலைகளின் முடிவிடத்திருப்பவன்; (கலாந்தம் ஐவகையாமென்பது கொள்க).

2400. அன்றாகு மென்னுதை வகையந்தந் தன்னை
யொன்றான வேதாந்த சித்தாந்த முள்ளிட்டு
நின்றூ லியோகாந்த நேர்படு நேர்பட்டான்
மன்றாடி பாத மருவலு மாமே. (கூக)

2401. அனாதி சிவனைம் மலமற்றப் பாலா
யனாதி யடக்கித் தனைக்கண் டரனாய்த்
தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்
வினாவுநீர் பாலாதல் வேதாந்தத் துண்மையே. (கூஉ)

2402. உயிரைப் பரனை யுயர்சிவன் றன்னை
யயர்வற் றறிதொந் தத்தசி யதனாற்
செயலற் றறிவாகி யுஞ்சென் றடங்கி
யயர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே. (கூங)

2403. மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னிய தான சிவோகமா மீதென்ன
வன்னது சித்தாந்த மாமறை யாய்பொரு
டுன்னிய வாகம நூலெனத் தோன்றுமே. (கூச)

2404. முதலாகும் வேத முழுதா கமமப்
பதியான வீசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்த மாகவே. (கூரு)

---

2400. அன்றாகும்=வேறுபட்டதாம்; உள்ளிட்டு = கொண்டு; நேர்படும்=வெளிப்படும்.

2401. அப்பாலாய் = கடந்துபோய்; தனாதிமலம் = தன்னிடத்திலாதியாகவுள்ள மலம்; நீர்பாலாதல்=நீர் (பாலோடு சேர்ந்தவிடத்து) அப்பாலேபாதல்போல், சீவன் சிவத்தோடு கலந்தவிடத்து அச்சிவமேயாதல்.

2402. அயர்வற்றறி = மயக்கமற்றுக் காண்பாய்; தொந்தத் தசியதனால் = நீ சிவமாயிருக்கிறாயென்றும், துவந்த தசி மகாவாக்கியத்தினால்.

2403. சோகமாம் = ஸோகமாகிய (அவனே தானாகி); சென்னிய தான=முடிவான அல்லது சிறந்ததான: சிவோகமாம் = சிவனே நான்.

2404. முதலாகும்=முதனூலாகிய; அதிகாதி=மிகவும் மேம்பட்ட.

சூ-வது பதிபசுபாச வேறின்மை.

2405. அறிவறி வென்ற வறிவு மனுதி
யறிவுக் கறிவாம் பதியு மனுதி
யறிவினைக் கட்டிய பாச மனுதி
யறிவு பதியிற் பிறப்பறுந் தானே. (க)

2406. பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாச மறுத்தாற்
பசுக்க டலைவனைப் பற்றி விடாவே. (உ)

2407. கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்று
நடக்கின்ற ஞானத்தை நாடோறு நோக்கித்
தொடக்கொன் றுமின்றித் தொழுமின் றொழுதாற்
குடக்குன்றி லிட்ட விளக்கது வாமே. (ங)

2408. பாசஞ்செய் தானைப் படர்சடை நந்தியை
நேசஞ்செய் தாங்கே நினைப்பார் நினைத்தலுங்
கூசஞ்செய் துன்னிக் குறிக்கொள்வ தெவ்வண்ணம்
வாசஞ்செய் பாசத்துள் வைக்கின்ற வாறே. (ச)

2409. விட்ட விடமேறு வாறுபோல் வேறாகி
விட்ட பசுபாச மெய்கண்டோன் மேவுறுன்
கட்டிய கேவலங் காணுஞ் சகலத்தைச்
சுட்டு நனவி லதீதத்துட் டோன்றுமே. (ரு)

2405. அறிவு=ஆன்மா; அறிவு பதியில்=சிவத்துவ முண்டாயின்.

2406. பாசமூன்று=ஆணவம், மாயை, கன்மம்; தலைவன் = சிவன்.

2407. கிளர்பயன் மூன்று=தர்மார்த்த காமமாகிய மூன்று; நடக்கின்ற=சரியையாதியின் பலனாக நிகழும்; ஞானத்தை = தத்துவ ஞானத்தினை; தொடக்கு = பந்தம் (கஷ்டம்); குடக்குன்றில் = குடத்திலும் மலையின்மேலும் (மறைப்பும் வெளிப்படையுமான).

2408. கூசம்=கூசுதல்; வாசஞ்செய்=நிலைபெற்ற.

2409. விடம்=நஞ்சு; வாறு=வழி; சுட்டும்=குறித்தறியும்; நனவிலதீதத்துள் =ஜாக்கிராதீதத்தில்.

2410. நாடும் பதியுட னற்பசு பாசமு
நீடுமா நித்த னிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமு
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே. (௬)

2411. ஆய பதிதா னருட்சிவ லிங்கமா
மாய பசுவு மடலே றெனநிற்கு
மாய பலிபீட மாகுநற் பாசமா
மாய வரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே. (எ)

2412. பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகர்வோர்க்கா ருக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயிலநி லாவே. (அ)

2413. பதியும் பசுவொடு பாசமு மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே. (௯)

2414. அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகு
மறிந்தணு மூன்றுமே யாங்கணு மாக
யறிந்தவ னாதி வியாத்தனு மாவ
னறிந்த பதிபடைப் பானங் கவற்றையே. (௧0)

2415. படைப்பாதி யாவது பரஞ்சிவஞ் சத்தி
யிடைப்பா லுயிர்கட் கடைத்திவை தூங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரஞ் செய்யப்
படைப்பாதி தூய மலமப் பரத்திலே. (௧௧)

---

2410. நீடும்=விரியும்; நித்தன்=சிவன்; நாடிய=விரும்பிய.

2411. ஏறு=சந்நிதிமுன்னிற்கும் இடபம்.

2412. வியா (பக) நித்தம் = வியாபகமும் நித்தியமும்; ஆருக்கி= நல்வழியை யுண்டாக்கி.

2413. மேலைக்கதி = மேலானமுத்தி அல்லது பூர்வ ஜன்மங்கள்; மதி=தத்துவ ஞானம்.

2414. அணுமூன்று=சகலாகலர்,பிரளயாகலர்,விஞ்ஞானாகலர்;ஆதி வியாத்தனுமாவன் = பூர்வத்துள்ள வியாபக சொரூபனு மாவன்; படைப்பான் = தனுகரண புவனபோகங்களைச் சிருட்டிப்பான்; அவற்றை=அச்சீவர்களுக்கு(உருபுமயக்கம்;)

2415. ஆதியாவது = முதலாயிருப்பது; சத்தி=மாயை; இடைப் பால்=ஸ்திதி காலத்தில்; தூங்கல்=நிகழுதல்; பரத்தில்= ஆன்மாவில்.

2416. ஆகிய சூக்கத்தை யவ்விந்து நாதமு
மாகிய சத்தி சிவபர மேலைந்தா
லாகிய சூக்கத்தி லைங்கரு மஞ்செய்வோ
னாகிய தூயவீ சானனு மாமே. (கஉ)

2417. மேவும் பரசிவ மேற்சத்தி நாதமு
மேவும் பரவிந்து வைம்முகன் வேறீசன்
மேவு முருத்திரன் மால்வேதா மேதினி
யாகும் படிபடைப் போனர னாமே. (கங)

2418. படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் னேன்ற வருளுஞ்
சடத்தை விடுத்த வருளுஞ் சகலத்
தடைத்த வனாதியை யைந்தென லாமே. (கச)

2419. ஆறாறு குண்டலி தன்னி னகத்திட்டு
வேறாகு மாயையின் முப்பான் மிகுத்திட்டங்
கீறாங் கருவி யிவற்றால் வகுத்திட்டு
வேறாம் பதிபசு பாசம்வீ டாகுமே. (கரு)

2420. வீட்கும் பதிபசு பாசமு மீதுற
வாட்கு மிருவினை யாங்கவற் றாலுணர்ந்
தாட்கு நரக சுவர்க்கத்திற் றானிட்டு
நாட்குற நான்றங்கு நற்பாச நண்ணுமே. (கசு)

---

2416. ஐந்தால் = விந்து, நாதம், சத்தி, சிவம், பரமென்னு மைந்தினால்.

2417. ஐம்முகன் = சதாசிவன்; வேறீசன் = அவனுக்கு வேறான மஹேசன்; வேதா=பிரமன்.

2418. சடத்தை விடுத்த=தேகாபிமானத்தை யொழித்த; ஐந்து= பஞ்ச கிருத்தியம்.

2419. மாயையின் முப்பால் = சுத்தம் அசுத்தம் சுத்தாசுத்தம்; இவற்றால்=இந்த மூன்று மாயைகளால்; வீடாகும்=விடுவிக்கும்.

2420. ஆட்கும்=ஆழ்விக்கும்; நாட்குற=காலங்கடக்க; நற்பாசம்= திரோதானம்.

2421. நண்ணிய பாசத்தி ஞனென லாணவம்
பண்ணிய மாயையி னூட்டற் பரிந்தனன்
கண்ணிய சேதனன் கண்வந்த பேரரு
ளண்ண லடிசே ருபாயம தாமே. (கஎ)

2422. ஆகு முபாயமே யன்றி யழுக்கற்று
மோக மறச்சுத்த ஞதற்கு மூலமே
யாகு மறுவை யழுக்கேற்றி யேற்றல்போ
லாகுவ தெல்லா மருட்பாச மாகுமே. (கஅ)

2423. பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபசு வாமே. (ககூ)

2424. அத்தத்தி னுத்தரங் கேட்ட வருந்தவ
ரத்தத்தி னுத்தர மாகு மருண்மேனி
யத்தத்தி ஞலே யணையப் பிடித்தனு
மத்தத்திற் றம்மை யடைந்துநின் ருரே. (உ0)

---

எ-வது அடிதலையறியுந் திறங்கூறல்.

2425. காலுந் தலையு மறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாமே. (க)

---

2421. ஊட்டல்=ஊட்டலால்; பரிந்தனன்=நீங்கினன்.

2422. அறுவை = வஸ்திரம்; எற்றி = கலந்து; எற்றல்போல = அடித்துப் போக்குதல்போல.

2423. பரமுதல்=முதற்பரமாய ஆன்மா.

2424. அத்தத்தில்=கையினல்; உத்தரம் = தமது கேள்விகளுக்கு விடை ; அருந்தவர் = ஸநகாதி யிருடியர் ; பிடித்தலும்= தொட்டுத் தீட்சைசெய்தவளவில்.

2425. கால் சத்தியருள் = காலாவது சத்தியாகிய வருள் ; காரணம் பாலொன்று=காரணத்தின்பாற்பட்ட (காரணமாகிய) ; பண் பார் தலை=இனிமை யமைந்த தலையாம் ; உயிர்=உயிர்க்கு; கால் = அருள் ; கால் அருளென்றும் தலைஞானமென்றுங் கொள்க.

**2426.** தலைபடி யாவ தறியார்கா யத்திற்
றலையடி யுச்சியி லுள்ளது மூலந்
தலையடி யான வறிவை யறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே. (உ)

**2427.** நின்று ளிலமுழு தண்டமு மேலுற
வன்று ளசுர ரமரரு முய்ந்திடப்
பின்று னுலகம் படைத்தவன் பேர்நந்தி
தன்று ளிணையென் றலைமிசை யானதே. (௩)

**2428.** சிந்தையி னுள்ளே யெந்தை திருவடி
சிந்தையு மெந்தை திருவடிக் கீழது
வெந்தையு மென்னை யறியகில் லானுகி
லெந்தையை யானு மறியகில் லேனே. (௪)

**2429.** பன்னுத பாரொளிக் கப்புறத் தப்பா
லென்னு யகனு ரிசைந்தங் கிருந்திட
முன்னு வொளியு முரைசெய்யா மந்திரஞ்
சொன்னுன் கழலிணை சூடிநின் றேனே. (ரு)

**2430.** பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பத மோது
நதிபொதி யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயுங் காலங்கள் கண்டுகொ ளீரே. (௬)

---

2426. உச்சியில்=கபாலத்தானத்தில்; மூலம்=காரணமாம்; தலையடியாகவே=ஆதியுமந்தமாகிய சிவமாகவே.

2429. பாரொளிக்கு = ஆறுதாரத்தொளிக்கு; அப்புறத்தப்பால் = பரமாகாயமுடிவில்; உன்னுவொளி = கருதப்படாதவொளி (மனதுக்கெட்டாதவொளி); உரைசெய்யாமந்திரம்=வாயினுலுச்சரியாமற் கூறுமந்திரம்.

2430. தோற்றும் பதம் = விளங்குகின்ற திருவடியில் (தலையை); கதிசெயும்=முத்தியுதவும்; மதியது செய்து=பதியுருவைத்தியானித்து; ஓதும் = துதியுங்கள்; கண்டுகொளீர் = கண்டறிவீர்.

2431. தரித்துநின் றானடி தன்னிட நெஞ்சிற்
றரித்து நின்றானம ராபதி நாதன்
கரித்து நின் றான்கரு தாதவர் சிந்தை
பரித்துநின் றானப் பரிபாகத் தானே. (௭)

2432. ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள
தன்றாதை தாளு மிரண்டுள காயத்து
ளன்றாகக் காய்ச்சிப் பதஞ்செய வல்லார்கட்
கின்றேசென் றீசனை யெய்தலு மாமே. (௮)

2433. கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினன்
மேல்கொண்டென் செம்மை விளம்பவொண் ணாதே

2434. பெற்ற புதல்வர்போற் பேணிய நாற்றமுங்
குற்றமுங் கண்டு குணங்குறை செய்யவோர்
பற்றைய வீச னுயிரது பான்மைக்குச்
செற்றமி லாச்செய்கைக் கெய்தின செய்யுமே. (௧௦)

---

### ௮-வது முக்குற்றம்.

2435. மூன்றுள குற்ற முழுது நலிவன
மான்றிரு ணேங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை நீக்கினர் நீங்கினர் நீங்காதார்
மூன்றினுட் பட்டு முடிகின்ற வாறே. (௧)

---

2431. அடி=தனது திருவடியை, இடநெஞ்சில்=விரிந்த மனத்தில்; நாதன்=சிவபிரான்; கரித்து=வெறுத்து; பரித்து=தாங்கி; பரிபாகத்தான்=மலபரிபாக முடையவனை.

2432. தாமரை = சுழுமுனை; ஒண்மலர் மூன்று = மூன்றுகிரந்தி; காய்ச்சி=மூலக்கனலால் வெதுப்பி; பதஞ்செய்ய=மனத்தை வசப்படுத்த.

2433. கால்=திருவடியை; கட்டு=பிறப்பு; மால் = விடயவிச்சை; துயக்கு = கேடு; பால்கொண்ட = ஞானத்தின்பாற்பட்ட; செம்மை=நன்மை.

2434. பேணிய = காக்கும்பொருட்டு; நாற்றம் = கன்மவாசனை; பற்றைய=பற்றுயுள்ள; பான்மைக்கு=தன்மைக்கு (தக்கபடி); செற்றம்=சினம்.

2435. முழுது நலிவன = நன்மையெல்லாவற்றையுங் கெடுப்பன; மான்று=மயக்கமுடையதாய்; இருணேங்கி=இருளாயிருந்து; நீக்கினர் = பந்தமொழித்தார்கள்; நீங்காதார் = முக்குற்றமொழியாதவர்; முடிகின்ற=அழிகின்ற.

2436. காமம் வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
யோமெனு மோசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறே. (உ)

---

### கூ-வது ழப்பதம்.

2437. தோன்றிய தொம்பதந் தற்பதஞ் சூழ்தர
வேன்ற வசிபத மிம்மூன்ற்றே டெய்தின
ஞான்ற பராபர மாகும் பிறப்பற
வேன்றனன் மாளச் சிவமா யிருக்குமே. (க)

2438. போதந் தனையுன்னிப் பூதாதி பேதமு
மோதுங் கருவி தொண் ணூறுட ஞேரா று
பேதமு நாதாந்தப் பெற்றியிற் கையிட்டு
வேதஞ்சொற் றொம்பத மாகுதன் மெய்ம்மையே.()

2439. தற்பத மென்றுந் துவம்பதந் தானென்று
நிற்ப தசியத்து ணேரிழை யாள்பதஞ்
சொற்பதத் தாலுந் தொடரவொண் ணாச்சிவன்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. (ந)

2440. அணுவும் பரமு மசிபதத் தேய்ந்து
கணுவொன்றி லாத சிவமுங் கலந்தா
லிணையறு பால்தே னமுதென வின்பத்
துணையது வாயுரை யற்றிடத் தோன்றுமே. (ச)

---

2436. ஏமம்=சிவாநந்தம்; எறிமணி=அடிக்கப்படு மணியின் (நாதம் போன்ற) ; தாமம்=ஒளி (சிவம்).

2437. ஏன்ற வசிபதம்=பொருந்திய அசிபதம்; ஆன்ற=பூரணமான; ஏன்றனன்=சிவனது பாசம்; மாள=ஒழிய.

2438. பெற்றியிற்கைவிட்டு = (ஒழிக்கும்) முறைப்படி யொழித்து; தொம்பதமாகுதல் = ஆன்மா தன் இயற்கைச் சொரூபமாத் திரையாய் நிற்றல்.

2439. அசியத்துள் = அசிபதநிலையிலே ; நேரிழையாள்பதம் = சத்திநிபாதம்; கற்பனை = விகற்பங்கள்; கலந்துநின்றான் = சீவசிவபேதமின்றிக் கூடிநின்றான்.

2440 அணு = சீவன்; பரம் = ஆன்மா; ஏய்ந்து = கூடி; கணு= தடை; இன்பத்துணையது=இன்பத்தின் பகுதியது.

**2441.** தொம்பதந் தற்பதந் தோன்று மசிபத
நம்பிய சீவன் பரன்சிவ னுய்நிற்கு
மம்பத மேலைச் சொரூபமா வாக்கியஞ்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. (ரு)

**2442.** ஐம்ப தறியா தவரு மவர்சில
ரும்பனை நாடி யுரைமுப்ப தத்திடைச்
செம்பர மாகிய வாசி செலுத்திடத்
தம்பர யோகமாய்த் தானவ னுமே. (சு)

**2443.** நந்தி யறிவு நழுவி லதீதமா
மிந்தியஞ் சத்தாதி விடவிய னுகு
நந்திய மூன்றிரண் டொன்று நலமைந்து
நந்தி னனவாதி மூட்டு மனுதியே. (எ)

**2444.** பரதுரி யத்து நனவு படியுண்ட
விரிவிற் கனவு மிதனுப சாந்தத்
துரிய சுழுனையு மோவுஞ் சிவன்பா
லரிய துரிய மசிபத மாமே. (அ)

---

2441. அம்பதம் = அழகிய (அந்த) பதம்; மேலைச்சொரூப மாவாக்கியம்=காரணங்கடந்த சொரூபத்தை யறிவிக்கும் மகா வாக்கியத்தின்; செம்பொருள்=வெளிப்படைப் பொருள்.

2442. ஐம்பது=ஐம்பது வயதாயும்; அம் பரமாகிய வாசி=பிரணவ சொரூபமான பிராணவாயுவை; தம்பரயோகமாய் = தமக்குரிய ஞான யோகமாய்.

2443. நந்தி=விளங்கி; அறிவு நழுவில்=விடய ஞான மொழிந்தால்; விடவியன்=விட்டவன்; மூன்று = சுழுத்தி, சொப்பனம், ஜாக்கிரம்; இரண்டு = சொப்பனம், ஜாக்கிரம்; ஒன்று = ஜாக்கிரம், (இதுமேலாலவத்தை); ஐந்து நந்தின் = [illegible]ா வத்தைகளு மொழிந்தால்; நனவாதிமூட்டும் = ஜாக்கிர முதலியவற்றைக் கூட்டுவன்; அனுதி=அனுதியான சிவபெருமான்.

2444. நனவுபடியுண்ட=ஜாக்கிரத்தின்வழியாகப் பொருந்திய; உபசாந்தத் துரிய சுழுனையும் = ஒழிவினுக்குரிய சுழுத்தியும்; சிவன்பா லரிய துரிய மசிபதமாம் = சிவனிடத்தி லுண்டாந் துரியாவத்தையே அசிபதப் பொருளான ஐக்கியமாம்.

## கO-வது முப்பரம்.

2445. தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்
மூன்று படிமண் டலத்து முதல்வனை
யேன்றெய்தி யின்புற் றிருந்தே யிளங்கொடி
நான்று நலஞ்செய் நலந்தரு மாறே. (க)

2446. மன்று நிறைந்தது மாபர மாயது
நின்று நிறைந்தது நேர்தரு நந்திபுங்
கன்று நினைந்தெழு தாயென வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காமே. (உ)

2447. ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரங்
கூறு வுபதேசங் கூறிற் சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக வானந்தம் பேணும் பெருகவே. (ந)

2448. பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது
பற்றறப் பற்றிற் பரனறி வேபரம்
பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே
பற்றறப் பற்றிற் பரம்பர மாமே. (ச)

2449. பரம்பர மான பதிபாசம் பற்றாு
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே. (ரு)

---

2445. மூன்றுபடி மண்டலம் = மூன்று வகையாயுள்ள அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம்; இளங்கொடி = குண்டலி; நான்று=கலந்து.

2446. மன்று=சிதாகாயம்; மா பரம்=சிவம்; தாய்=தாய்ப் பசு.

2447. அப்பரம்=அந்த வான்மா; கூறு வுபதேசம்=மௌனோபதேசம்; வேறாய்=தத்துவாதீதமாய்; பேறாக=சித்தியாக.

2448. பற்று=உலகவாசை; பரனறிவு=சிவஞானம்; பரம் பரமாம்= ஆன்மா சிவமாம்.

2449. பரம்பரமாகும் பரம்=மிக மேலான ஆன்மா; பரம்பரமாக= முறையாக.

2450. நனவிற் கலாதியா நாலொன் றகன்று
தனியுற்ற கேவலந் தன்னிற் றானுகி
நினைவுற் றகன்ற வதீதத்து ணேயந்
தனையுற் றிடத்தானே தற்பர மாமே. (சு)

2451. தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும்
பிற்காணுந் தூடணந் தானும் பிறழ்வுற்றுத்
தற்பரன் கால பரமுங் கலந்தற்ற
நற்பரா தீதமு நாடக ராதியே. (எ)

கக-வது பரலட்சணம்.

2452. அதீதத்து ளாகி யகன்றவ னந்தி
யதீதத்து ளாகி யறிவிலோ னுன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே. (க)

2453. ஆதியு மந்தமு மில்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத் தோன்றாமையி
னீதிய தாய்நிற்கு நீடிய வப்பர
போத முணர்ந்தவர் புண்ணியத் தோரே. (உ)

2454. துரியங் கடந்து துரியாதீ தத்தே
யரிய வியோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே
துரியவல் லார்க்குத் துரிசில்லை தானே. (ங)

---

2450. கலாதியா நாலொன்று=கலை, வித்தை, இராகம், புருடன், மாயை யென்னு மைந்து; தானுகி=தான்மாத்திர மிருபவனுகி; நேயந்தனை=சிவத்தை.

2451. தூயம் = நின்மலத்துவம்; விலாசம்=விரிவு; பராதீதம் = பரத்தி லதீதம்.

2452. அகன்றவன் = வியாபித்தவன்; மதி = ஞானம்; இருள் = ஆணவம்.

2453. தோன்றத் தோன்றாமையி னீதியதாய் = காணப்படுவதும் காணப்படாததுமாகிய நெறியினை யுடையதாய்; அப்பரபோதம்=அந்தச் சிவஞானம்.

2454. வியோகம்=ஒழிவு; பிரணவக்கூபத்து=ஓங்கார மென்னுங் கிணற்றின்கண்; துரிய = (துருவ வென்பதன் விகாரம்) ஆராய்ந்தறிய.

2455. செம்மை முன்னிற்பச் சுவேதந் திரிவபோ
லம்மைப் பரத்தோ டணுவனுள் ளாயிடப்
பெய்ம்மைச் சகமுண்ட போத வெறும்பாழிற்
செம்மைச் சிவமேரு சேர்கொடி யாமே. (௪)

2456. வைச்ச கலாதி வருதத்து வங்கெட
வெச்ச விருமாயை வேறாக வேரறுத்
துச்ச பரசிவ மாமுண்மை யொன்றவே
யச்ச மறுத்தென்னை யாண்டன னந்தியே. (௫)

2457. என்னை யறிய விசைவித்த வென்னந்தி
யென்னை யறிந்தறி யாத விடத்துய்த்துப்
பின்னை யொளியிற் சொருபம் புறப்பட்டுத்
தன்னை யளித்தனன் றற்பர மாகவே. (௬)

2458. பரந்துஞ் சுருங்கியும் பார்புனல் வாயு
நிரந்த வளியொடு ஞாயிறு திங்க
ளரந்த வரனெறி யாயது வாகித்
தரந்த விசும்பொன்று தாங்கிநின் றானே. (௭)

2459. சத்தி நிலையினிற் றானான சத்தியுந்
தற்பரை யாய்நிற்குந் தானும் பரற்குட
லுய்த்தகு மிச்சையின் ஞானாதி பேதமாய்
நித்த நடத்து நடிக்குமா நேயத்தே. (௮)

---

2455. சுவேதம்=இரசம் (இரசத்தை வெள்ளையென்பதும் கந்தகத்தைச் செம்மையென்பதும் சித்தர்பரிபாஷை); அணுவன் = ஆன்மா; போதவெறும்பாழ் = ஞானமாகிய வெறுமொளி; சிவமேரு = அசல சிவத்தை.

2456. எச்ச விருமாயை=விஞ்சியுள்ள இருமாயைகள்; உச்சபரசிவம்= மேலான பரசிவம்.

2457. சொரூபம்=ஆன்மசொரூபம்.

2458. அரந்த=(அரத்த என்பதன் விகாரம்) சிவந்த வண்ணமுள்ள; தரந்த = (தரு அந்த) உற்பத்தி செய்வதான அந்த.

2459. தற்பரையாய் = தற்பரை யென்னும் நாமமுள்ளதாய்; உடலுய்த்தகும் = சரீரசிருஷ்டி செய்தற்குரிய; ஞானாதிபேதமாய்=ஞானசத்தியாதி வேறுபாடுகளையுடையதாய்; நித்த நடத்தும்=எப்பொழுதும் ஐந்தொழிலையு மியற்றும்; நடிக்குமா நேயத்தே = பெருமையுள்ள சிவத்தினிடத்திலே விளையாடிக்கொண்டிருக்கும்.

2460. மேலொடு கீழ்பக்க மெய்வாய்கண் ணுசிகள்
பாலிய விந்து பரையுட் பரையாகக்
கோலிய நான்கவை ஞானங் கொணர்விந்து
சீலமி லாவணுச் செய்திய தாமே. (கூ)

2461. வேறு மதன்றன்மை போலுமிக் காயத்தி
லாறு முபாதி யனேந்தாகுந் தத்துவம்
பேறும் பரவொளி தூண்டும்பிர காசமா
யூறு யுயிர்த்துண் டுறங்கிடு மாயையே. (க0)

2462. தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே செகமுண்ணும் போதமுந்
தொற்பதந் தீர்பாழிற் சுந்தரச் சோதிபுக்
கப்புற மற்றதிங் கொப்பில்லை தானே. (கக)

2463. பண்டை மறைகள் பரவா னுடலென்னுந்
துண்ட மதியோன் றுரியாதீ தந்தன்னைக்
கண்டு பரனுமக் காரணோ பாதிக்கே
மிண்டி னவன்சுத்த னுகான் வினவிலே. (க௨)

2464. வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
தளியா கியதற் பரங்காண வன்றான்
வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
வெளியாய சத்தி யவன்வடி வாமே. (க௩)

---

2460. பாலிய = (சீவர்களை) யிரட்சிக்கும்பொருட்டு; கோலிய = சூழ்ந்த; அணுச்செய்தி = ஆன்மாக்களினிடத்தி லியற்றப் படும் தொழில்.

2461. ஆறுமுபாதி = ஆறுதாரங்களாகிய வேறுபாடு; ஊறாய் = பங்கமுடையதாய்; உயிர்த்துண்டு=பெருமூச்சுவிட்டு (இது தற்குறிப்பேற்றவணி).

2462. செகமுண்ணும் போதம் = பிரபஞ்சத்தை யுட்கொள்ளும் ஞானம்; பாழில் = மஹா சூனியாகாயத்தில்; அற்றது = ஒழிந்தது.

2463. பரவான்=பராமகாயம்; காரணோபாதி=காரணோபாதியான சுத்தமாயை; மிண்டினவன்=சேர்ந்தவன்.

2464. நின்ற = நிலைபெற்றிருக்கின்ற; வெளியாய சத்தி = பரமாகாய வடிவானசத்தி; அவன் வடிவாம் = அந்தப் பரனுக்குச் சொரூபமாம்.

2465. மேருவி னோடே விரிகதிர் மண்டல
மார நினையு மருந்தவ யோகிக்குச்
சீரார் தவஞ்செய்யிற் சிவனரு டானாகும்
பேரவும் வேண்டாம் பிறிதில்லை தானே. (கச)

---

கஉ-வது முத்துரியம்.

2466. நனவாதி மூன்றினிற் சீவ துரியந்
தனதாதி மூன்றினிற் பரதுரி யந்தா
னனவாதி மூன்றினிற் சிவதுரி யம்மா
மினதாகுந் தொந்தத் தசிபதத் தீடே. (க)

2467. தானா நனவிற் றுரியந்தன் றொம்பதந்
தானாந் துரிய நனவாதி தான்மூன்றி
லானாப் பரபத மற்ற தருநனா
வானன மேன்மூன்றுந் துரிய மணுகுமே. (உ)

2468. அணுவின் றுரியத்து நான்கு மதாகிப்
பணியும் பரதுரி யம்பயி னான்குந்
தணிவிற் பரமாகிச் சார்முத் துரியக்
கணுவி லிந்நான்குங் கலந்தவீ ரைந்தே. (௩)

2469. ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்து
ணேரந்த மாக நெறிவழி யேசென்று
பாரந்த மான பராபரத் தயிக்கியத்
தோரந்த மாமிரு பாதியைச் சேர்த்திடே. (௪)

---

2465. மேருவினோடு = பரமசிவத்தை (உருபுமயக்கம்); கதிர் மண்டலம்=சூரிய மண்டலத்து (இருதயத்து).

2466. தனதாதி மூன்றினில் = பராவத்தையில் (நனவாதி) மூன்றில்; நனவாதி மூன்றினில்=பரமாவத்தையாகிய ஞேயத்திலாம் மூன்றவத்தையில்; தொந்தத் தசிபதத்து=துவந்தத் தசிபத மகாவாக்கியத்தில்; ஈடு=வியாபகம்.

2467. தானா நனவில்=சீவாவத்தையாகிய நனவில்; பரபதமற்றது=பராவத்தையின் முடிந்தவிடமாம்; மேன்மூன்றும் = (சிவாவத்தையில்) சுழுத்தியாதி மூன்றும்.

2468. அணுவின்றுரியத்து=சீவதுரியத்தில்; கணுவில்=சேர்க்கையில்; இந்நான்கும் = சீவதுரியம் நான்கும் பரதுரியம் நான்கும் (பரமாவத்தையில் துரியம் துரியாதீத மிரண்டுங்கூட அவத்தை பத்தெனக்கொள்க).

2469. நெறிவழியே = உபதேச முறையின் மார்க்கமாகவே; இருபாதி=அர்த்தநாரீச்சுரர்.

2470. தொட்டே யிருமின் றுரிய நிலத்தினை
யெட்டா தெனினின் றெட்டு மிறைவனைப்
பட்டாங் கறிந்திடிற் பன்னு வுதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. (ரு)

2471. அறிவாய சத்தென்னு மாறு றகன்று
செறிவாய மாயை சிதைத்தரு ளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான வன்பர் நிலையறிந் தாரே. (சு)

2472. நனவி னனவாதி நாலாந் துரியந்
தனதுயிர் தொம்பத மாமாறு போல
வினையறு சீவ னனவாதி யாகத்
தனைய பரதுரி யந்தற் பதமே. (எ)

2473. தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போ
னம்பிய மூன்றுந் துரியத்து நற்றும
மம்புவி யுன்னு வதிசூக்க மப்பாலைச்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. (அ)

---

கூ-வது முப்முத்தி.

2474. சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி
யோயுப சாந்தஞ் சிவமுத்தி யானந்த
மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதா
யோவுறு தாரத்தி லுள்ளுநா தாந்தமே. (க)

---

2470. பட்டாங்கு=உள்ளவாறு; பன்னு (பல் நா)=பல்லும் நாவும்; தட்டாதொழிவது=சொல்லுதற்கியலாது மேற்படுவது.

2471. அறிவாய்=சித்தாக மிஞ்சி; அசத்தென்னும்=அசத்தென்று சொல்லப்படும்; ஆறுறு=முப்பத்தாறு தத்துவம்.

2472. வினையறுசீவன் = நின்மலஞனசீவன்; தனைய = தானாகிய (ஒப்பற்ற); பரதுரியந் தற்பதம்=பராவத்தையில் துரியமே தற்பதமாம்.

2473. மூன்றுந்துரியத்து=சிவதுரியத்தில்; நற்றுமம்=நல்ல ஒளி; அம்புவியுன்னு வதிசூக்கம்=பிரபஞ்சத்தை யுணராத பரம சூக்குமம்; செம்பொருள்=மெய்ப்பொருள்.

2474. மூவயின்=சீவ பர சிவமென்னு முத்துரியத்தில்; ஓவுறுதாரத் தில்=உபசாந்தந் தரும் பிரணவத் தியானத்தில்.

2475. ஆவ தறியா ருயிர்பிறப் பாலுறு
மாவ தறியு முயிரருட் பாலுறு
மாவதொன் றில்லை யகம்புறத் தென்றகன்
றேவு சிவனுட னென்றுதன் முத்தியே. (உ)

2476. சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவமா கியநெறி சோகமென் போர்க்குச்
சிவமா மமலன் சிறந்தனன் றானே. (௩)

2477. சித்தியு முத்தியுந் திண்சிவ மாகிய
சுத்தியு முத்தீ தொலைக்குஞ் சுகானந்த
சத்தியு மேலைச் சமாதியு மாயிடும்
பெத்த மறுத்த பெரும்பெரு மானே. (ச)

---

கச-வது ழச்சொரூபம்.

2478. ஏறிய வாறே மலமைந் திடையடைத்
தாறிய ஞானச் சிவோக மடைந்திட்டு
வேறு மெனமுச் சொருபத்து வீடுற்றங்
கீறதிற் பண்டைப் பரனுண்மை செய்யுமே. (க)

2479. மூன்றுள மாளிகை மூவ ரிருப்பிட
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. (உ)

---

2475. பிறப்பாலுறும் = பிறப்பிலேயடையும்; ஒவுசிவன்=பிரபஞ்சங் கடந்த சிவபிரான்.

2476. தத்துவத்தயிக்கியத்து = தத்துவமசி மகாவாக்கியத்தினல்; துவம்=சத்து; சோகம்=அவனே நான்.

2477. முத்தீ தொலைக்குஞ் சுகானந்தம்=தாபத்திரயங்களை யொழிக்கும் சிவானந்தம்; சத்தி=திருவருள்.

2478. ஆறிய=அடங்கின.

2579. மாளிகை=ஸ்தூல, சூக்கும, காரணமென்னு முடல்; மூவர்=விசுவ, தைஜச, பிராஞ்ஞரென்னுஞ் சீவர் மூவர்; காயக் கணக்கு=சரீரமெடுத்தலாலாகிய பிறப்பின் எல்லை.

2480. உலகம் புடைபெயர்ந் தாழியும் போன
நிலவு சுடரொளி மூன்றுமொன் றாய
பலவும் பரிசொடு பான்மையுள் ளீச
னளவும் பெருமையு மாரறி வாரே. (௩)

2481. பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்
தருவா யுருவா யருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை
யுருவா யுடனிருந் தொன்றாயன் றாமே. (௪)

2482. மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்து
மணியென லாய்நின்ற வாறது போலத்
தணிமுச் சொருபாதி சத்தியாதி சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றாயே. (௫)

2483. கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட
நல்ல மணியொன்றி னுடியொண் முப்பதஞ்
சொல்லறு முப்பாழிற் சொல்லறு பேருரைத்
தல்லறு முத்திராந் தத்தனு பூதியே. (௬)

---

2480. புடைபெயர்ந்து = நிலைகெட்டு; நிலவு = விளங்குகின்ற; சுடரொளி = சீவ, பர, சிவம்; பரிசொடு = முறைப்படி; பான்மையுள்=(ஒன்றாயின) தன்மையினால்.

2481. பெருவாய் முதலெண்ணும்=பெரியதாய் முதலாக எண்ணப்படுகிற; பேதமேபேதித்து = வேறுபாடுகளாய் விகாரப்படுத்தி; உயிர்ப்பன்மையுருவாய்=பல வேறுவகைப்பட்ட ஜீவவர்க்கங்களின் வடிவமாய்; உடனிருந்து=அவற்றோடு கலந்திருந்து.

2482. மணி=படிகமணி; சோபை=பிரகாசம்; தணி=பொருந்தியுள்ள; சார=அடைய.

2483. கல் = பளிங்குக்கல்; தட்ட = பொருந்த; முப்பதம் = தத்பதம், துவம்பதம், அசிபதம்; சொல்லறு = சொல்லற்ற; சொல்லறு பேருரைத்து = அஜபாகாயத்திரியைத் தியானஞ்செய்து; அல்லறு=(அல்லல் அறு) துன்பமற்ற; முத்திராந்தத்து=முத்திராப்பியாசத்தி னிறுதியில்.

2484. உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி
நடந்தசெந் தாமரை நாதந்த கைந்தா
லடைந்த பயோதரி யட்டி யடைத்தவ்
விடந்தரு வாசலை மேற்றிற வீரே. (எ)

கரு-வது முக்கரணம்.

2485. இடனொரு மூன்றி லியைந்த வொருவன்
கடனுறு மவ்வுரு வேறெனக் காணுந்
திடமது போலச் சிவபர சீவ
ருடனுறை பேதமு மொன்றென லாமே. (க)

2486. ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே. (உ)

2487. முக்கர ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக்
கைக்கார ணமென்னத் தந்தனன் காணுந்தி
மிக்க மனோன்மனி வேறே தனித்தேக
வொக்கு மதுன்மணி யோதுட் சமாதியே. (ந)

---

2484. உடந்த செந்தாமரை=எதிரிலிருக்குஞ் செய்யதாமரை(கபால ஸ்தானத் தாமரை); நடந்த = நோக்கிச்சென்ற; செந்தாமரைநாதம் = மூலத் தாமரையிலுள்ள நாதசத்தி; தகைந்தால் = வசப்படுதலால்; பயோதரி = அமுதேசுவரி; இடந்தரு=விசாலமான; வாசலை=முத்திவாயிலை.

2435. இடனொருமூன்றில் = வேறுபட்ட மூன்றிடங்களில்; கடனுறும் = உரியதான, சீவபரசிவன் = சிவனும், பரனும், சீவனும்.

2486. ஒளியை யொளிசெய்து=மூலாக்கினியை ஜ்வலிக்கச்செய்து; வளியைவளிசெய்து = பிராணபான வாயுக்களை ஒரே வாயுவாகச்செய்து; வாங்கி = பூரகஞ்செய்து; வெளியை வெளிசெய்து = இருதயாகாசத்தைப் பரமாகாயமாகச் செய்து; மேலெழ=புத்தியை யூர்த்துவ முகத்திற் பொருந்த.

2487. மூர்ச்சை=சோர்வு; ஆவத=அடையத்தகுவதான பொருள்; கைக்காரணமென = கையில் வைத்துணரும் விதமாக; மனோன்மனி வேறே தனித்தேக=மனோன்மனி சக்தி வசிக்கும் ஆஞ்ஞா ஸ்தானத்தைக் கடந்துசென்று; உன்மனி = நிர்விகற்பஸ்திதியில்.

## கரு-வது முச்சூனிய தொந்தத்தசி.

**2488.** தற்பதந் தொம்பதந் தானு மசிபதந்
தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
நிற்ப துயிர்பர னிகழ்சிவ மும்மூன்றின்
சொற்பத மாகுந் தொந்தத் தசியே. (க)

**2489.** தொந்தத் தசிமூன்றிற் றொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றிற் றொல்தாம மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவந்தோன்றி
னிந்துவின் முன்னிரு ளேகுத லொக்குமே (உ)

**2490.** தொந்தத் தசியையவ் வாசியிற் றோற்றியே
யந்த முறையீரைந் தாக மதித்திட்டு
வந்தமில் லாத வவத்தையவ் வாக்கியத்
துந்து முறையிற் சிவமுன்வைத் தோதிடே. (ந)

**2491.** வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்
துய்த்துப் பிரணவ மாமுப தேசத்தை
மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர்ந்
தத்தற் கடிமை யடைந்துநின் றானே. (ச)

**2492.** தொம்பத மாயையுட் டோன்றிடுந் தற்பத
மம்பரை தன்னி லுதிக்கு மசிபத
நம்புறு சாந்தியி னண்ணுமவ் வாக்கிய
மும்ப ருரைதொந்தத் தசிவாசி யாமே. (ரு)

---

2488. தானுமசிபதம் = தன்மயமாவ துணர்த்தும் அசிபதம்; தொற்பதம் = அநாதியான பதங்கள்; மூன்றின் சொற்பதமாகுந் தொந்தத்தசி = இம்மூன்றையு மறிவிக்கும் பதக்கூட்டமுடையதாம் துவந்தத்தசி மகாவாக்கியம்.

2489. காமியமாதி = கன்மமுதலிய மும்மலம்; தாமதமாதி = தாமத முதலிய முக்குணங்கள்; மாள = அற்றுப்போக.

2490. வாசியிற்றோற்றி = பிராணவாயுவில் தோன்றக்கண்டு; ஈரைந்தாக = அவத்தைகள் பத்தாக; சிவமுன்வைத்து = சிவ, பர, சீவன் எனக்கொண்டு.

2491. மதி = அறிவை; சொரூபானந்தம் = தற்சொரூபத்தின்கண்ணதாமானந்தம்; மெய்த்த = களங்கமற்ற; விட்டிடும் = சேர்ப்பன்.

2492. மாயையுள் = அஞ்ஞானத்துள்; பரை = பராசத்தி, சாந்தி = சாந்திகலை; வாசியாம் = (இவை) இரேச பூரக கும்பக வடிவமாம்.

2493. ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய வைவிட்டாற் காய முபாதான
மேகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் பரன்சிவ னாமே. (சா)

2494. தாமத காமிய மாகித் தகுகுண
மாமல மூன்று மகார வுகாரத்தோ
டாமறு மவ்வுமவ் வாயுடன் மூன்றிற்
றாமாந் துரியமுந் தொந்தத் தசியதே. (எ)

---

## கஎ-வது முப்பாழ்

2495. காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்
காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே. (க)

2496. மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்
சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சீவ
னாய வியாப்த மெனுமுப்பா ழாமந்தத்
தூய சொரூபத்திற் சொன்முடி வாமே. (உ)

---

2493. சோயந் தேவதத்தன்=அவனே யித்தேவதத்தன்; ஆகியவை= காலதேச முதலியவற்றை; காயம்=உடல்; உபாதானம் ஏகிய = மாயை அவித்தை நீங்கிய; பரன் சிவன்=ஆத்மா, சிவபிரான்.

2494. குணமா மலமூன்றும்=குணமும் மலமுமாகிய மும்மூன்றும்; அவ்வாய் = அகாரமாய்; துரியமும்=முத்துரியமும்.

2495. காரியமேழ் = காரியவுபாதியேழு (தேகம் பொறி கரணம் நாலு, பிராணவாயு ஒன்று ஆக எழு); காரணமேழ் = காரணோபாதி யேழு (சர்வஞ்ஞத்வம், சர்வகாரணத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வேசுவரத்வம், சர்வசிருட்டி, சர்வ திதி, சர்வசங்காரம்).

2496. வியாப்தம் = அடங்கிநிற்றல்.

2497. எதிரற நாளு மெருதுவந் தேறும்
பதியெனு நந்தி பதமது கூடக்
கதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பனை
யுதறிய பாழி லொடுங்குகின் றேனே. (௩)

2498. துரிய மடங்கிய சொல்லறும் பாழை
யரிய பரம்பர மென்பர்க ளாத
ரரிய பரம்பர மென்றே துதிக்கு
மருநில மென்பதை யாரறி வாரே. (௪)

2499. ஆறாறு நீங்க நமவாதி யகன்றிட்டு
வேறா கியபரை யாவென்று மெய்ப்பர
னீறுன வாசியிற் கூட்டு மதுவன்றோ
தேறாச் சிவாய நமவெனத் தேறிலே. (௫)

2500. உள்ள முருவென்று முருவ முளமென்று
முள்ள பரிசறிந் தோரு மவர்கட்குப்
பள்ளமு மில்லை திடரில்லை பாழில்லை
யுள்ளமு மில்லை யுருவில்லை தானே. (௬)

---

கஅ-வது காரிய காரண வுபாதி.

2501. செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி யேழும் பகருரை
யுற்றிடுங் காரிய காரணத் தோடற
வற்றிட வச்சிவ மாகு மணுவனே. (௧)

---

2497. எதிரற=இணையில்லாமல்; உதறிய=விலக்கியுள்ள; பாழில்=சொரூபமற்ற விடத்தில்.

2498. துரியமடங்கிய=துரியத்திலடங்கியுள்ள; சொல்லறும்=வாக்குக்கெட்டாத; ஆதர்=அறிவில்லாதவர்; அருநிலம்=துரியாதீதம்.

2499. பரை=சத்தி; ஆவென்று=பசுவென்று; பரன்=சிவபிரான்; ஈறுன=ஈறுயுள்ளவைகளை; தேறு=உணர்தற்கரிய.

2500. உள்ளபரிசு=உள்ளவாறு; பள்ளம்=கருப்பாசயம் (பிறப்பு); திடர்=பிரபஞ்சம்.

2501. சீவவுபாதி = காரியோபாதி; பரோபாதி = காரணோபாதி; அணுவன்=சீவன்.

2502. ஆருறு காரியோ பாதி யகன்றிட்டு
வேருய் நனவு மிகுத்த கனாநனு
வாரு றகன்ற சுழுத்தி யதிலெய்தாப்
பேரு நிலத்துயிர் தொம்பதம் பேசிலே. (உ)

2503. அகார முயிரே யுகாரம் பரமே
மகாரஞ் சிவமாய் வருமுப்ப தத்துச்
சிகாரஞ் சிவமே வகாரம் பரமே
யகார முயிரென் றறையலு மாமே. (ங)

2504. உயிர்க் குயிராகி யொழிவற் றழிவற்
றயிர்ப்பறு காரணோ பாதி விதிரேகத்
துயிர்ப்புறு மீச னுபமிதத் தாலன்றி
வியர்ப்புறு மாணவம் வீடல்செய் யாவே. (ச)

2505. காரிய மேழிற் கலக்குங் கடும்பசு
காரண மேழிற் கலக்கும் பரசிவன்
காரிய காரணங் கற்பனை சொற்பதப்
பாரறும் பாழில் பராபரத் தானே. (ரு)

---

கக-வது உபசாந்தம்.

2506. முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. (க)

---

2502. ஆருறு=முப்பத்தாறு தத்துவ வடிவாயுள்ள; கனாநனு=சொப்பன சாக்கிரம்; பேருநிலத்துயிர் = பயனாகிய முத்திக்குரிய வுயிர்.

2503. இம்மந்திரம் பிரணவத்தின் அர்த்தமும் காரணபஞ்சாக்கரத்தினர்த்தமுங் கூறிற்று.

2504. விதிரேகம்=(வியதிரேகம்) எதிர்மறை (இவ்விடத்துக் காரியோபாதியைக் குறிக்கின்றது); உபமிதத்தால் = கருணையினால்; விடல்=நீங்குதல்.

2505. கடும்பசு = மோகவசப்பட்டு வருந்துஞ் சீவன்; சொற்பதப் பாரறும்=சொல்லப்படு மஞ்ஞான பூமியொழிந்த.

2506. வித்து=ஏது; பற்றல்=தியானித்தல்; சித்திக்கு=மனந் தன் வசமாதலாகிய சித்திக்கு; சத்திக்கு=திருவருட் பதிவிற்கு; உபசாந்தம்=மனோவிருத்தி யமைவுற்றிருத்தல்.

2507. காரிய மேழுங் கரந்திடு மாயையுட்
காரண மேழுங் கரக்குங் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றறப்
பாரண வும்முப சாந்தப் பரிசிதே. (௩)

2508. அன்ன துரியமே யாத்தும சுத்தியு
முன்னிய சாக்கிரா தீதத் துறுபுரி
மன்னு பரங்காட்சி யாவ துடனுற்றுத்
தன்னின் வியாத்தி தனினுப சாந்தமே. (௪)

2509. ஆறு றமைந்தாண வத்தையுண் ணீக்குதல்
பேருன தன்னை யறிதற்பின் றீர்சுத்தி
கூறுத சாக்கிரா தீதங் குருபரன்
பேரும் வியாத்தம் பிறழுப சாந்தமே. (௫)

2510. வாய்ந்த வுபசாந்த வாதனை யுள்ளப்போ
யேய்ந்த சிவமாத லின்சிவா னந்தத்துத்
தோய்ந்தறன் மோனச் சுகானு பவத்தோடே
யாய்ந்ததிற் றீர்க்கை யானதி ரைந்துமே. (௬)

---

2507. கரந்திடும்=ஒடுங்கும்; மாயையுள் = அசுத்தமாயையில்; கடுவெளி = சுத்தமாயையில்; வாதனைப்பற்று = வாசனையின் சம்பந்தம்; பாரணவும் = பெருமைபொருந்தும்.

2508. ஆத்துமசுத்தி=அந்தக்கரணத்தின்றூய்மை ; புரி=பரமாநந்தம்; பரங்காட்சியாவது = ஆத்மதரிசனம்; உடனுற்று= சிவத்துடன் கூடி.

2509. ஆறுறமைந்து=௩௬-தத்துவங்கட்கும் வேருய்ப் பொருந்தி ; உண்ணீக்குதல்=தன்மாட்டில்லா தகலல்; தீர்சுத்தி=பாசம் ஒழிதலாகிய சுத்தி; பிறழ் = விளங்குகின்ற; உபசாந்தம்= உபசாந்தமென்னும் ஒழிவினையுடைய பதம்.

2510. வாதனையுள்ளப்போய் = வாதனை யமையச்சென்று; அறல்= தானென்பது இல்லாமற்போவது ; ஈரைந்தும் = ஆணவ மொழிதல், தன்னையுணர்தல், அதனையுமொழிதல், ஜாக்கிராதீதம், வியாப்தம், உபசாந்தம், சிவமாதல், சிவாநந்தத்திற் கலந்து தானற்றுநிற்றல், மோனசுகானுபவம், அதனையும் விட்டொழிதல் ஆகிய பத்துமாம்.

2511. பரையின் பரவ பரத்துட னேகமாய்த்
திரையினின் ருகிய தெண்புனல் போலவுற்
றுரையுணர்ந் தாரமு தொக்க வுணர்ந்துளோன்
கரைகண் டானுரை யற்ற கணக்கிலே. (எ)

---

## உ०-வது புறங்கூறாமை.

2512. பிறையுட் கிடந்த முயலை யெறிவா
னறைமணி வாட்கொண் டவர்தமைப் போலக்
கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்
நிறையறி வோமென்பர் நெஞ்சிலர் தாமே. (க)

2513. கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்
கருந்தாட் கயத்திற் கரும்பாம்பு நீங்கப்
பெருந்தன்மை பேசுதி நீயொழி நெஞ்சே
யருந்தா வலைகட லாறுசென் றாலே. (உ)

2514. கருதலர் மாளக் கருவாயி னின்ற
பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை
மருவலர் செய்கின்ற மாதவ மொத்தாற்
றருவலர் கேட்ட தனியும்ப ராமே. (ங)

---

2511. பரையின்பரவ = திருவருளின் பெருக்கினால்; திரையினின் ருகிய=கடலிற்கூடிய; தெண்புனல்=ஆறு; உரை=ஒழிவு; ஆரமுதொக்க = தேவாமிர்தமும் அதன் சுவையும்போல; உரையற்ற கணக்கில் = பேச்சற்றிருக்கு முறைமையில்.

2512. பிறை=சந்திரன்; எறிவான் = கொல்லும்பொருட்டு; அறை மணிவாள்=ஒலிக்கின்ற மணிகட்டிய வாள், நிறை=உபசாந் தம்; நெஞ்சிலர்=(தம்வசத்து) மனமில்லாதவர்.

2513. கருந்தாள்=வலிய கால்; இறப்ப=தாண்டிச்செல்ல; கருந் தாட்கயம் = மிக்க வாழமுள்ள புற்று; நீயொழி = நீ (அப் பெருமை பேசுதலை)விட்டுவிடு; அருந்தா=அமையாத; அலை கடலாறு சென்றாலே = அலைகளையுடைய கடலிலே நதி சென்று அடங்கினாற்போல.

2514. கருதலர்=பகைவர்; கருவாயில் = போர்க்களத்தில்; நின்ற பொருதலை=நேரிட்ட யுத்தத்தை; மருவலர் செய்கின்ற= அடங்கினவராகச் செய்கின்ற; மாதவம்=சிறந்த தபசு; தரு வலர்=கொடுக்கின்ற வல்லவர்களான தியாகிகள்.

2515. பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்று
மிணங்கியெம் மீசனே யீசனென் றுன்னிற்
கணம்பதி னெட்டுங் கழலடி காண
வணங்கெழு நாடியங் கன்புற லாமே. (௫)

2516. என்னிலு மென்னுயி ராய விறைவனைப்
பொன்னிலு மாமணி யாய புனிதனை
மின்னிய வெவ்வுயி ராய விகிர்தனை
யுன்னிலு முன்னு முறும்வகை யாலே. (௬)

2517. நின்று மிருந்துங் கிடந்து நிமலனை
யொன்றும் பொருள்க ளுரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்
தொன்று யுணரு மொருவனு மாமே. (௭)

2518. நுண்ணறி வாயுல காயுல கேழுக்கு
மெண்ணறி வாய்நிறை யெந்தைபி ரான்றன்னைப்
பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை
விண்ணறி வாளர் விரும்புகின் றாரே (௮)

2519. விண்ணவ ராலு மறிவறி யான்றன்னைக்
கண்ணற வுள்ளே கருதிடிற் காலையி
லெண்ணுற வாகமுப் போது மியற்றிநீ
பண்ணிடிற் றன்மை பராபர னாமே. (௯)

2520. ஒன்று யுலகுட னேழும் பரந்தவன்
பின்று னருள்செய்த பேரரு ளாளவன்
கன்று மனத்தார்தங் கல்வியு ணல்லவன்
பொன்றாத போது புனைபுக ழானே. (௧௦)

---

2515. காண=தரிசிக்க; வணங்கெழுநாடி=வணங்கும்படி வருதலை யுணர்ந்து.

2516. உன்னிலும் = (கருதும்) உன்னைப்பார்க்கிலும்; உன்னும்= (அதிகமாக) கருதுவான்.

2517. பிணக்கு=ஒன்று பலவென்னும் மாறுபாடு; ஒன்று யுணரும்= ஒருமுகப்பட்ட மனதாய்ச் சிந்தியுங்கள்.

2518. எண்ணறி வாய் நிறை=கருதத்தக்க அறிவு வடிவமாய் நிறைந்துள்ள; பண்ணறிவாளனை=அன்பறிவுருவனை; விண்ணறிவாளர்=பாமாகாயத்தை யுணர்ந்தஞானிகள், அல்லது தேவர்கள்.

2519. கண்ணற=புறவிடங்களிலன்றி; எண்=தியானி; இயற்றி= (பூசை)செய்து; பண்ணிடின்=(தவம்) புரிந்தால்.

2520. பின்=(அவனை யடைந்த) பிறகு; கன்று=விரோதமில்லாத; பொன்றாதபோது = கெடாதமலர் (தெய்வத்தன்மையுள்ள மலர், அல்லது மனமென்னுந் தாமரைப்பூ).

**2521.** போற்றியென் றேனெந்தை பொன்னான சேவடி
யேற்றியே சென்று மெறிமணி தானகக்
காற்றின் விளக்கது காய மயக்குறு
மாற்றலுங் கேட்டது மன்றுகண் டேனே. (௧௦)

**2522.** நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை
யூடுபுக் காரு முணர்ந்தறி வாரில்லை
கூடுபுக் கேறலுற் றேனவன் கோலங்கண்
மூடிக்கண் டேனல கேழுங்கண் டேனே. (௧௧)

**2523.** ஆன புகழு மமைந்ததோர் ஞானமுந்
தேனு மிருக்குஞ் சிறுவரை யொன்றுகண்
டேனமொன் றின்றி யுணர்வுசெய் வார்கட்கு
வானகஞ் செய்யு மறவனு மாமே. (௧௨)

**2524.** மாமதி யாமதி யாய்நின்ற மாதவர்
தூய்மதி யாகுஞ் சுடர்பர மானந்தந்
தாமதி யாகச் சகமுணச் சாந்திபுக்
காமல மற்று ரமைவுபெற் றாரே. (௧௩)

**2525.** பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாச விருளைத் துரந்து
மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே. (௧௪)

---

2521. ஏற்றி = (சிரசில்) சூடி; எறிமணி = அடிக்கப்படும் மணி ஓசை (நாதானுசந்தானத்தில்); அகக்காற்றின் விளக்கது காயம்=பிராணவாயுவினால் விளங்குவதாகிய சரீரம்; கேட்டதும் = அதைக்குறித்துக் கேட்டதையும்; அன்று = அப்பொழுதே.

2522. நேடி = தேடி; நேர்தரு = எதிர்ப்பட்ட; ஊடு = உள்ளே; கூடு=பிரம ரந்திரம்; நவன் (நல்லன்) = பரமசிவன்; மூடிக் கண்டேன்=என்னுக்குள் அடக்கித் தரிசித்தேன்.

2523 தேனும்=அமிர்தமும்; சிறுவரை=மேரு(புருவ மத்திய ஸ்தானத்திலிருப்பதால் அதைச் சிறுவரை யென்றார்); மறவன்= உருத்திரன்.

2524. மாமதியாம்=(கபாலத்திலுள்ள) பெரியசந்திர னிடத்துள்ளதாம்; மதியாய் = அறிவாய்; தாமதியாக = தாம் சித்துருவமாக; சகமுண = உலகந் தம்மிடத்திருப்பதாக; சாந்தி= உபசாந்த நிலை.

2525. இதமுற்ற = இஃதென்னும் ஞானத்திற்கு விஷயமாகப் பொருந்திய; திதமுற்றவர்கள்=நிலைத்திருப்பவர்கள்.

2526. சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் றேய்ந்துந்தோ யாதவர்
முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. (கரு)

உக-வது அஷ்டதளகமல முக்குணவவத்தை.

2527. உதிக்கின்ற விந்திர னங்கி யமனுந்
துதிக்கு நிருதி வருணனல் வாயு
மதிக்குங் குபேரன் வடதிசை யீச
னிதித்தெண் டிசையு நிறைந்துநின் றாரே. (க)

2528. ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகு
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
யொருங்கிய சோதியை யோர்ந்தெழு முய்ந்தே. (உ)

2529. மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுட
ரெட்டல ருள்ளே யிரண்டல ருள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கனவே. (ங)

2530. ஆறே யருவி யகங்குள மொன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொரு டானே. (ச)

2526. சித்தர் சிவத்தைக் கண்டவர் = சித்தரெனப்படுவோர் சிவத்தைத் தரிசித்தவர்; சுத்தத்துடன் = அறிவிற் சுக சமாதியோடு; மூலத்தர்=ஏதுவினையுடையவர்; சத்தர்=சத்தாமாத்திரமானவர்.

2527. இருதயகமலத்தின் கிழக்கிதழில் இந்திரனும், தென்கிழக்கிதழில் அக்கினியும், தெற்கிதழில் யமனும், தென்மேற்கிதழில் நிருதியும், மேற்கிதழில் வருணனும், வடமேற்கிதழில் வாயுவும், வடக்கிதழில் குபேரனும், வடகிழக்கிதழில் ஈசானனும் நிறைந்து நின்றாரென்பது, இம்மந்திரக் கருத்து.

2528. ஒருங்கிய=சேர்ந்துள்ள; அருங்கிய=சிறியதான, அல்லது பெருமையுடைய; மாயாபுரி=உடம்பு; தண்டின் சுழுனை= முதுகந்தண்டின் கண்ணதான சுழுமுனை.

2529. தாமரை மூன்று = இதயகமல அஷ்டதளம், இதயகமல கர்ணிகை, அவ்விதயகமல கர்ணிகை மத்தியம்; விட்டலர்கின்றனன் = விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்றான் சீவன்; சோதி விரிசுடர் = விராட்டென்னும் இறைவன் ; பட்டலர்கின்றது=தோன்றிவிளங்குவது.

2530. ஆறேயருவி = (அருவியாறு) சிற்றாறு (அமுதப்பெருக்கு); நூறேசிவகதி=அளவற்ற சிவகதி; கூறே=பாகத்தில்.

2531. திகையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற வாதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றுங்கே நிறைந்து
முகையெட்டு முண்ணின் றுதிக்கின்ற வாறே. (௫)

2532. ஏழுஞ் சகள மியல்புங் கடந்தெட்டில்
வாழும் பரமென் றதுகடந் தொன்பதி
லூழி பராபர மோங்கிய பத்தினிற்
றூழ்வது வான தனித்தன்மை தானே. (௬)

2533. பல்லூழி பண்பன் பகலோ னிறையவ
னல்லூழி யைந்தினுள் ளேநின்ற வூழிகள்
செல்லூழி யண்டத்துச் சென்றவவ் வூழியு
ளவ்வூழி யுச்சியு ளொன்றிற் பகவனே. (௭)

2534. புரியு முலகினிற் பூண்டவெட் டானை
திரியுங் களிற்றொடு தேவர் குழாமு
மெரியு மழையு மியங்கும் வெளியும்
பரியுமா காசத்திற் பற்றது தானே. (௮)

2535. ஊறு மருவி யுயர்வரை யுச்சிமே
லாறின்றிப் பாயு மருங்குள மொண்டுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடை யோனே. (௯)

---

2531. திகையெட்டும்=எட்டுத் திக்கும்; தேரெட்டும்=அத்திசையிலுள்ள விமான மெட்டும்; தேவதை யெட்டும்=இந்திராதி திக்குப்பாலகரெண்மரும்; வகையெட்டும்=எண்வகை வடிவமும்; வகையெட்டும் நான்கும் அற்று=ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரியமைந்தும், மனம்ஒன்றும், புத்தியொன்றும் ஆகிய பன்னிரண்டிற்கும் எட்டுதலொழிந்து; முகை=குவிந்த இதயதாமரை.

2532. கிழக்கிதழ் முதல் வடக்கிதழீறாகவுள்ள ஏழும் ஜீவனது ஸ்தானமும், எட்டாவதாகிய வடகிழக்கிதழ் பரனது ஸ்தானமும், கீழென்னும் ஒன்பதாவதிதழ் சிவனது ஸ்தானமும், மேலென்னும் பத்தாவதிதழ் ஐக்கிய ஸ்தானமுமாம், என்பது இம்மந்திரக் கருத்து.

2533. ஊழியைந்து=சங்காரமைந்து; ஊழியுச்சி=ஊழிமுடிவு.

2534. பூண்டவெட்டானை = உரியதாய்க்கொண்ட எண்வகை வடிவுடையவனை.

2535. உயர்வரை யுச்சி = ஆஞ்ஞாஸ்தானம்; பாயும் = நீரானிரம்புகிற; தாமரை=சுழுமுனைத்தத்தாமரை.

2536. ஒன்று மிரண்டு மொருங்கிய காலத்து
நின்று மிருந்து நிலம்பல பேசினும்
வென்று மிருந்து விகிர்தனை நாடுவர்
சென்று மிருந்துந் திருவுடை யோரே. (கo)

## உஉ-வது நவாவத்தை நவாபிமானி.

2537. தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்
னற்பத விராட்டன்பொன் கர்ப்பனவ் யாகிர்தன்
பிற்பதஞ் சிற்சொலிதை பிரசா பத்தியன்
பொற்புவி சாந்தன் பொருதபி மானியே. (க)

2538. நவமா மவத்தை நனவாதி பற்றிற்
பவமா மலங்குணம் பற்றற்றுப் பற்றுத்
தவமான சத்திய ஞானப் பொதுவிற்
றுவமார் துரியஞ் சொரூபம தாமே. (உ)

2539. சிவமான சிந்தையிற் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான வந்தத்தி னற்சிவ போதந்
தவமா மவையாகித் தானல்ல வாமே. (ங)

2540. முன்சொன்ன வொன்பானின் முன்னுறு தத்துவந்
தன்சொல்லி லெண்ணத் தகாவொன்பான் வேறுள
பின்சொல்ல லாகுமிவ் வீரொன்பான் பேர்த்திட்டுத்
தன்செய்த வாண்டவன் றன்சிறந் தானே. (ச)

---

2536. ஒன்றுமிரண்டும்=முக்கரணங்களும்; ஒருங்கிய=ஒத்திருக்கிற; வென்று=புலனை அடக்கி.

2538. நவமாமவத்தை=சீவசாக்கிரம், சீவசொப்பனம், சீவசுழுத்தி, பரசாக்கிரம், பரசொப்பனம், பரசுழுத்தி, சிவசாக்கிரம், சிவசொப்பனம், சிவசுழுத்தி; பவமாம்=பிறப்புண்டாம்; பற்று=பற்றுதற்கரிய; துவமார்=மேன்மை பொருந்திய.

2539. சிவமான=சிவாகாரமான; சீவன்=சீவத்துவம்; பாறிப்பறிய=போயொழிய; நவமானவந்தம்=நவாவத்தைகளினது அந்தம்.

2540. முன்னுறு = கருதப்படுகிற; ஒன்பான் = அபிமானியொன்பது; பேர்த்திட்டு = ஒழித்துவிட்டு; தன்செய்த = சிவமாகச்செய்த.

2541. உகந்தன வொன்பது மைந்து முலகம்
பகர்ந்த பிரானென்னும் பண்பினை நாடி
யகந்தெம் பிரானென்ப னல்லும் பகலு
மிகந்தன வல்வினை யோடறுத் தானே. (ரு)

2542. நலம்பல காலந் தொகுத்தன நீளங்
குலம்பல வண்ணங் குறிப்பொடுங் கூடும்
பலம்பல பன்னிரு கால நினையு
நிலம்பல வாறின னீர்மையன் றானே. (சு)

2543. ஆதி பராபர மாகும் பராபரை
சோதி பரமுயிர் சொல்லுநற் றத்துவ
மோதுங் கலைமாயை யோரிரண் டோர்முத்தி
நீதியாம் பேதமொன் பானுட னாதியே. (எ)

2544. தேறாத சிந்தை தெளியத் தெளிவித்து
வேறா நரக சுவர்க்கமு மேதினி
யாறாப் பிறப்பு முயிர்க்கரு ளால்வைத்தான்
வேறாத் தெளியார் வினையுயிர் பெற்றதே. (அ)

2545. ஒன்பா னவத்தையுள் ளொன்பா னபிமானி
நன்பாற் பயிலு நவதத் துவமாதி
யொன்பானி னிற்பதோர் முத்துரி யத்துறச்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே. (கூ)

---

2541. ஒன்பது மைந்தும் = வேத முதலிய பதினான்கு வித்தைகளும்; அகந்து=மனமொருப்பட்டு.

2542. பன் = சொல்லப்படும்; இருகாலம் = உறங்கப்போங்காலத்தும், விழிக்குங்காலத்தும்.

2544. வேறா நரக சுவர்க்கம் = ஒன்றுக்கொன்று மாறுபட்டுள்ள சுவர்க்க நரகங்கள்.

2545. அபிமானி = அபிமானித்திருக்குந் தெய்வம்; முத்துரியம்= சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம்; செம்பாற்சிவம்=நன்மையுடைய சிவம்.

உ௬-வது சுத்தாசுத்தம்.

2546. நாசி நுனியினி னன்குழ விரலிடை
யீச னிருப்பிட மியாரு மறிகிலர்
பேசி யிருக்கும் பெருமறை யம்மறை
கூசி யிருக்குங் குணமது வாமே. (க)

2547. கருமங்க ளொன்றுட் கருதுங் கருமத்
துரிமையுங் கன்மமு மூன்றும் பிறவிக்
கருவினை யாவது கண்டகன் றன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுமே. (உ)

2548 மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படு மப்பொருண்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமு மில்லை கருத்தில்லை தானே. (௩)

2549. மோழை யடைந்து முழைதிறந் துட்புக்குக்
கோழை யடைக்கின்ற தண்ணற் குறிப்பினி
லாழ வடைத்தங் கனலிற் புறஞ்செய்து
தாழ வடைப்பது தன்வலி யாமே. (௪)

2550. காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயென்றுந் தேடித் திரிபவர்
காயத்து ணின்ற கருத்தறி யாரே. (௫)

---

2546. நாசி நுனியினி னன்கு மூவிரலிடை=மூக்கி னுனியினின்று வெளிப்படும் பிராணவாயுவின் பன்னிரண் டங்குலத்தி னிறுதியில்; கூசியிருக்குங் குணமதுவாம்=(கூறுதற்குமுடியாமல்) நாணியிருக்கும்படியான குணத்தினை யுடையதாம்.

2547. பிறவிக்கருவினை=பிறவிக்கு மூலமாவதை; கன்மக்கயம்=கன்மநீக்கம்.

2548. மறைப்பொருள்=சிவம்; மாயை மறைய=மாயாபாசங்கெட; காயம்=உடல்; கருத்து=மனம்; மறையவல்லார்கட்கு = சிவத்திலொடுங்கியிருக்கும் வன்மை யுடையவர்களுக்கு.

2549. மோழை = அமுதநதி; முழை = குகை (கபாலவாயில்); கோழை = அஞ்ஞானம்; அண்ணற் குறிப்பினில் = சிவத்தியானத்தினால், அனலிற் புறஞ்செய்து = அக்கினிமண்டலத்துக்கு வேறாயிருக்கும்படி செய்து; தாழ = (அழியாது) தங்கியிருக்க.

2550. குழப்பனை=கலக்குகின்றவனை (அழிக்கின்றவனை); காயநன் னாடனை = உடம்பினைச் சிறந்த வாலயமாக வுடையவனை; கமழ்கின்ற=விளங்குகின்ற; தேயத்துள்=உலகத்தில்.

2551. ஆசூச மாசூச மென்பா ரறிவிலா
ராசூச மாமிட மாரு மறிகிலா
ராசூச மாமிட மாரு மறிந்தபின்
ஞாசூச மானிட மாசூச மாமே. (சு)

2552. ஆசூச மில்லை யருநிய மத்தருக்
காசூச மில்லை யரனையர்ச் சிப்பவர்க்
காசூச மில்லையா மங்கிவளர்ப் போருக்
காசூச மில்லை யருமறை ஞானிக்கே. (எ)

2553. வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்
சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்குங்
குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்
கழிபட்ட வர்க்கன்றிக் காணவொண் ணாதே (அ)

2554. தூய்மணி தூயன றாயவொளி விடுந்
தூய்மணி தூயன றாரறி வாரில்லை
தூய்மணி தூயன றாரறி வார்க்குத்
தூய்மணி தூயன றாயவு மாமே. (கூ)

2555. தூயது வாளா வைத்தது தூநெறி
தூயது வாளா நாதன் றிருநாமந்
தூயது வாளா வட்டமா சித்தியுந்
தூயது வாளாத் தூயடிச் செல்லே. (கo)

---

2551. ஆசூசம் = தீண்டாச் சூதகம்; ஆமிடம் = உண்டாமிடம்; மானிடம்=மனித சரீரம்.

2553. சுழிபட்டு=(மனம்) மறிக்கப்பட்டு; குழிபட்டு=கருக்குழியிற் பொருந்தி; குறிகள்=விஷயங்களினின்றும்; கழிபட்டவர்= நீங்கி நின்றவர்.

2554. தூய்மணி=சிவம்; தூயனல் = தன்மாத்திர வடிவம்; தூர்= (அடையும்) மூலம்.

2555. தூயது=பரமசிவம்; வாளா=பயன்கருதாது; தூயது=சுத்த முடைமை; வாளாம்=சித்துவடிவாம்; தூயது ஆளா(க)= பரிசுத்தமுடைமை தன்வசமாக; வாளா(க) = வாட்படையாக; தூயடி=நல்வழி.

2556. பொருளது வாய்நின்ற புண்ணிய னெந்தை
யருளது போற்று மடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளது வாச்சிந்தை மயங்குகின் றாரே. (கக)

2557. வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில் விடலுந் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமு மோதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே. (கஉ)

உசு-வது மோட்ச நிந்தை.

2558. பரகதி யுண்டென வில்லையென் போர்க
ணரகதி செல்வது ஞால மறியு
மிரகதி செய்திடு வார்கடை தோறுந்
துரகதி யுண்ணத் தொடங்குவர் தாமே. (க)

2559. கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவார்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்
தாடவல் லாரவர் பேறிது வாமே. (உ)

2560. புறப்பட்டுப் போகும் புகுதுமென் னெஞ்சிற்
றிறப்பட்ட சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
யறப்பட்ட மற்றப் பதியென் றழைத்தே
னிறப்பற்றி னேனிங் கிதென்னென்கின் றானே. (ங)

---

2556. பொருளதுவாய் = மெய்ப்பொருளாய்; சுருளதுவாய் = புரிவினையுடையதாய்; துன்பச்சுழியில் = துன்பவடிவ பிறவிக் கடலின் சுழியின்கண் (வீழ); மருளதுவா = மயக்க முடையவராக.

2557. வினையாமசத்து = (உண்மையில்) அசத்து வடிவ விருவினை; ஞானந்தன்னின் = மெய்ஞ்ஞானத்தால்; வீடலும் = கெடுதலும்; வினைவிட=இருவினை நீங்க; வீடு=மோட்சம்; வினையாளர்=இருவினையின் வசப்பட்டோர்.

2558. நரகதி=நரக கதி; இரகதி=யாசிக்குந் தொழில்; துர(க)தி= குதிரையின் ஓட்டம்.

2559. நாடகில்லார் = மேனோக்கற்றவர்கள்; நயம் = நயம் (வீண்சொல்); பாடகில்லார்=மௌனங்கொள்வர்; பரிசு= அனுக்கிரகம்; ஆடவல்லார்=ஒழுகவல்லவர்; வேறு=பயன்.

2560. திறப்பட்ட = ஒருமுகப்பட்ட; அறப்பட்ட = அற்றவிடத்தி லுறுவதான; இற=(சீவபோதம்) சாவ.

2561. திடரிடை நில்லாத நீர்போல வாங்கே
யுடலிடை நில்லா வுறுபொருள் காட்டிக்
கடலிடை நில்லாக் கலஞ்சேரு மாபோ
லடலெரி வண்ணனு மங்குநின் றானே. (௪)

2562. தாமரை நூல்போற் றடுப்பார் பரத்தொடும்
போம்வழி வேண்டிப் புறமே யுழிதாவர்
காண்வழி காட்டக்கண் காணுக் கலதிக
ளூநெறி செல்வான் றிரிகின்ற வாறே. (௫)

2563. மூடுத லின்றி முடியு் மனிதர்கள்
கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன்
காடு மலையுங் கழனி கடந்தோறு
மூடு முருவினை யுன்னகி லாரே. (௬)

2564. ஆவது தெற்கும் வடக்கு மமரர்கள்
போவர் குடக்குங் குணக்குங் குறிவழி
நாவினின் மந்திர மென்று நடுவங்கி
வேவது செய்து விளங்கிடு வீரே. (௭)

2565. மயக்குற நோக்கினு மாதவஞ் செய்வார்
தமக்குறப் பேசின தாரணை கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கினின் றாரே. (௮)

---

2561. திடரிடை=மேட்டிடத்து; உறுபொருள் = பரம்பொருள்; நில்லா(த) = (தடைப்பட்டு) நில்லாத; கலம் = மரக்கலம்; அங்கு=அவ்வுடம்பின்கண்.

2562. தடுப்பார்=(மெல்லமெல்ல மனத்தை) தடுப்பவர்; புறமேயுழிதாவர்=துறவறத்திலே செல்வர்; காண்வழி=அறியத்தக்க மார்க்கத்தை; கலதிகள்=மூடர்கள்.

2563. மூடுதலின்றி=(விஷயவாசனை) மூடுதலில்லாமல்; கூடுவர்=சேருவர்; கடம்=பாலைநிலம்; மூடுமுருவினை=மறைந்திருக்கும் சிவசொரூபத்தை; உன்னகிலார்=(ஏனையோர்) சிந்தித்துணருகின்றிலர்.

2564. குடக்கு=மேற்கு; குணக்கு=கிழக்கு; நடுவாங்கி = மூலாக்கினி; வேவதுசெய்து = பிராணவாயுவை வெதும்பச் செய்து.

2565. மயக்குற=திரிவுபொருந்த; பேசின=உபதேசித்த; சினக்கு=கோபம்; வல்வினை=தீவினைப்பயனாகிய துக்கம்.

## ௨௫-வது இலக்கணத் திரயம்.

2566. விட்ட விலக்கணை தான்போம் வியமத்துத்
தொட்டு விடாத துபசாந்தத் தேதொகும்
விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியிற்
சுட்டு மிலக்கண தீதஞ் சொரூபமே. (௧)

2567. வில்லின் விசைநாணிற் கோத்திலக் கெய்தபின்
கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தன
வில்லு ளிருந்தெறி கூரு மொருவற்குக்
கல்கல னென்னக் கதிரெதி ராமே. (௨)

## ௨௬-வது மகாவாக்கியம்.

2568 சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனுர்
தாவு பரதுரி யத்தினிற் றற்பத
மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பத
மோவி விடுந்தத் துவமசி யுண்மையே. (௧)

2569. ஆறு றகன்ற வணுத்தொம்ப தஞ்சுத்த
மீறுன தற்பத மெய்யுப சாந்தத்துப்
பேறு கியசீவ னீங்கிப்பிர சாதத்து
வீறுன தொந்தத் தசிதத்வ மசியே. (௨)

2566. வியமத்து = வியோமத்தில்; தொகும் = அடங்கும்; சத்தாதி = நாதமுடியின்கண்; விட்டவிலக்கணை சம்சர்க்க வாக்கியம், விடாதவிலக்கணை விசிட்டவாக்கியம், விட்டுவிடாதவிலக்கணை அகண்டவாக்கியம் என்று சொல்லப்படும்.

2567. வில்லின் விசைநாணில் = (பிரணவமென்னும்) வில்லினது வேகமுடைய நாணியினிடத்து; கோத்து = (ஜீவனென்னும் அம்பினை) தொடுத்து; இலக்கு = (சிவமாகிய) குறியினிடத்து; களிறைந்தும் = (இந்திரியங்களென்னும்) யானைகளைந்தும்; கோலொடு = (சீவனென்னும்) அம்புடனே; இல்லுளிருந்து = ஒருநிலையினின்று; எறிகூரு மொருவற்கு = எய்யு மொருவனுக்கு; கல்கலன் = இரத்தினபரணம்; கதிர் = சிவம்.

2568. ஓவிவிடும் = (செம்பொருளை) ஒழித்துவிடும்.

2569. தொம்பதசுத்தம் = தொம்பதத்திற் சுத்தம்; தற்பதம் = சுத்தப்பொருள்; உபசாந்தத்து = உபசாந்தத்தில் (சுத்தம்); சீவனீங்கி = சீவத்துவமொழிந்து; பிரசாதத்து = குருவின் கருணையால்.

2570. ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்
தாகிய விட்டு விடாத விலக்கணைத்
தாருப சாந்தமே தொந்தத் தசியென்ப
வாகிய சீவன் பரன்சிவ னாமே. (௩)

2571. துவந்தத் தசியே தொந்தத் தசியு
மவைமன்னு வந்து வயத்தேக மான
தவமுறு தத்துவ மசிவே தாந்த
சிவமா மதுஞ்சித் தாந்தவே தாந்தமே. (௪)

2572. துரிய மடங்கிய சொல்லறும் பாழை
யரிய பரமென்ப ராகாரி தன்றென்
னுரிய பரம்பர மாமொன் றுதிக்கு
மருநில மென்பதை யாரறி வாரே. (௫)

2573. தொம்பதந் தற்பதஞ் சொல்லு மசிபத
நம்பிய முத்துரி யத்துமே னாடவே
யும்பத முப்பத மாகு முயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாமே. (௬)

2574. வைத்த துரிய மதிற்சொரு பானந்தத்
துய்த்த பிரணவ மாமுப தேசத்தை
யெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர்
வைத்த படியே யடைந்துநின் றானே. (௭)

---

2570. தேவதத்தனென்பவன் ஒரு தேசத்தில் கிருகஸ்தனா யிருந்தபோதும், மற்றொரு தேசத்தில் அரசனா யிருந்தபோதும், வேறிடத்தில் சந்நியாசியா யிருந்தபோதும், இவையெல்லா மொழிந்து நின்றபோதும் ஒருவனேயா யிருந்ததுபோல, தேவதத்தன் என்பவன் ஜீவப்பிரஹ்ம வைக்கியம் சுபாவ சித்தமா யிருக்கின்றதென விட்டுவிடாத விலக்கணையால் விளக்கிற்று, இம்மந்திரம்.

2575. நனவாதி யைந்தையு நாதாதி யில்வைத்துப்
பினமா மலத்தைப்பின் வைத்துப்பின் சுத்தத்
தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி
மனவாச கங்கெட்ட மன்னனை நாடே. (அ)

2576. பூரணி யாது புறம்பொன்றி லாமையின்
பேரணி யாதது பேச்சொன்றி லாமையி
லோரணை யாதது வொன்றுமி லாமையிற்
காரண மின்றியே காட்டுந் தகைமைத்தே. (கூ)

2577. நீயது வானு யெனநின்ற பேருரை
யாயது நானுனே னென்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரரு
ளாயது வாயனந் தானந்தி யாமே. (௧0)

2575. நாதாதியில் = நாதானு சந்தானத்தின் நிலையில்; பினமாம் = பின்னமாகிய; சாந்தி = உபசாந்தபதம்; சத்தாதி = நாதமுடி; மனவாசகம் = மனமும் வசனமும்.

2576. பூரணியாது = விருத்தியாவது இல்லை; பேரணியாதது = நாம மொன்று மில்லாததாயிருக்கின்றது; ஓரணையாதது = கருது கின்ற ஒன்றுடனுங் கூடாதது; காட்டுந்தகைமைத்து = வெளிப்படு மியல்புடையது.

2577. நீயதுவானுய் = நீ அச் சிவமா யிருக்கின்றாய்; (அது நீயானுய் என்று பொருள் தரும் "தத்வமசி" என்னும் மஹா வாக்கியம், வைதிகாகமங்களில் நீயதுவானுய் என்று பொருள் படுமாறு "த்வம்தத் அசி" என்று மாற்றி யுரைக்கப்படும். இதுவே வேதாந்த சித்தாந்த சமரசம் என்னப்படும். இந்நெறி கடைப்பிடித்த ஆசிரியரும் அதனையே யீண்டுக் கூறினர்); நானுனேன் = நான் அது ஆய்விட்டேனென்று; சேய சிவ மாக்கும் = வாசாமகோசரமாம் சிவமாகச் (ஆன்மாவை) செய் கிற; பேரருளாயதுவாய் = பெரிய அருள்வாக்கியமாய், அல்லது நாதப்பிரம மயமான அருட்சத்தி வடிவமாய்; அனந் தானந்தியாம் = முடிவற்ற ஆநந்த சத்தி வடிவமுமாகும்.

2578 உயிர்பர மாக வுயர்பர சிவ
னரிய சிவமாக வச்சிவ வேதத்
திரியிலுஞ் சீராம் பராபர னென்ன
வுரிய வுரையற்ற வோமய மாமே. (௧௧)

2579. வாய்நாசி யேபுரு மத்தக முச்சியி
லாய்நாசி யுச்சி முதலவை யாய்நிற்குந்
தாய்நாடி யாதிவாக் காதி சகலாதி
சேய்நா டொளியெனச் சிவகதி யைந்துமே. (௧௨)

2580. அறிவறி யாமை யிரண்டு மகற்றிச்
செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே. (௧௩)

2581. அறிவா ரறிவன வப்பு மனலு
மறிவா ரறிவன வப்புங் கலப்பு
மறிவா னிருந்தங் கறிவிக்கி லல்லா
லறிவா னறிந்த வறிவறி யோமே. (௧௪)

---

2578. உயிர்பரமாக = சீவன் பரமாக; பரசிவன் = பரமாகியசிவன்; வேதத்திரியிலும் = இருக்கு, யசுர், சாமமென்னு மூன்று வேதங்களிலும்; பராபரனென்ன = பராபரனென்று கூறுதற்கு; ஓமயமாம்=பிரணவ சொரூபமாகும்.

2579. சிவகதி=சிவத்தினிருப்பிடம்; ஐந்தும்=வாய், நாசி, புருவம், மத்தகம், உச்சி; இவற்றுள் மத்தகம், புருவத்துக்கும் கபாலத்துக்கு மிடையிலுள்ள நெற்றிநடு; அவ்விடத்தும் சமனை, உன்மனையாதி ஆதாரங்களுளவாதல்பற்றிக் கூறினாரென்க; தாய்நாடி = சுழுமுனைநாடி; சேய்நாடொளி = நெடுந்தூரமறிதற்குரிய ஒளி.

2580. செறிவறிவாய்=பூரணவறிவாய்; கொள்=(முதனிலைத்தொழிற்பெயர்) கொள்கை

2581. அறிவாரறிவன = நூலுணர்ந்தவறிஞரா லுணரப்படுவன; அப்புமனலும்=அப்பு பூதமும் அக்கினி பூதமும்; அறிவார்= பதார்த்தகுண ஞானிகள்; அப்புங் கலப்பும்=அப்புப் பூதமும் (அஃதக்கினியோடு) கூடுதலும்; சீதோஷ்ண சம்பந்தத்தினலேயே காற்று பூமி முதலியன வுண்டாமென்னு மொருசார் நெறி யுரைக்கப்பட்டது. அதுபற்றியே அப்புங்கனலுமென்றார்; அறிவான்=அறிவுருவனன சிவபிரான்; அறிவான்= ஆன்மா.

2582. அதீதத்துள் ளாகி யகன்றவ னந்தி
யதீதத்துள் ளாகி யறிவிலோ ளுன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயி ரொன்றும்
பதியிற் பதியும் பரவுயிர் தானே. (௧௫)

2583. அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன்
முடிதொழ வீசனு முன்னின் றருளிப்
படிதொழ நீபண்டு பாவித்த தெல்லாங்
கடிதொழக் காணென்னுங் கண்ணுத லானே. (௧௬)

2584. நின்மல மேனி நிமலன் பிறப்பிலி
யென்னுளம் வந்திவ னென்னடி யானென்று
பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்
கின்மல மாகென்று நீக்கவல் லானே. (௧௭)

2585. துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு
பறந்ததென் னுள்ளம் பணிந்து கிடந்தே
மறந்தறி யாவென்னை வானவர் கோனு
மிறந்து பிறவாம லீங்குவைத் தானே. (௧௮)

2586. மெய்வாய்கண் மூக்குச் செவியென்னு மெய்த்தோற்
தவ்வாய வந்தக் கரண மகிலமு [றத்
மெவ்வா யுயிரு மிறையாட்ட வாடலாற்
கய்வாயி லாநிறை யெங்குமெய் கண்டதே. (௧௯)

---

2582. அகன்றவன்=வியாபகனாயுள்ள சிவபிரான்; அறிவிலோன்=சுதந்தரமாய்க் காணும் அறிவில்லாதவன், (காட்டக்காணு மறிவுள்ளவனாதலால்); மதி=மெய்ஞ்ஞானம்; இருள்=ஆணவம்; பதியும் = ஐக்கியமாகும்.

2583. அமரர்களத்தன்=தேவர்கட்குத்தேவன்; முடிதொழ=தலைவணங்கித் தொழ; கடி=சிறப்பாக.

2584. நீக்கவல்லான் = ஆணவத்தை யொழிக்கவல்லவன்.

2585. பறந்தது=(அதனிடம்) விரைந்துசென்றது; மறந்தறியா=மறப்பற்று அறிதலையுடைய.

2586. அவ்வாய=அவ்விடத்துச் செல்வதாகிய; எவ்வாயுருவும்=எவ்விடத்திலுள்ள அல்லது எத்தன்மையவான சீவனும்; கய்வாயிலாநிறை = கையும் வாயும் (ஓரவயவமும்) இல்லாத பூரணம்.

## உஎ-வது விசுவக்கிராசம்.

(உலகத்தை விழுங்கல்.)

2587. அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணி
லெழுகின்ற தீயிற்சார்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற விவ்வுடற் போமப் பரத்தே. (க)

2588. உடலு முயிரு மொழிவற வொன்றிற்
படருஞ் சிவசத்தி தாமே பரமா
முடலைவிட் டிந்த வுயிரெங்கு மாகிக்
கடையுந் தலையுங் காக்குஞ் சிவத்தே. (உ)

2589. செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரிய
மவியின் றியமன மாதிக ளைந்துங்
குவிவொன்றி லாமல் விரிந்து குவிந்து
தவிர்வொன்றி லாத சராசரந் தானே. (ங)

2590. பரனெங்கு மாரப் பரந்துற்று நிற்குந்
திரனெங்கு மாகிச் செறிவெங்கு மெய்து
முரனெங்கு மாயுல குண்டுமிழ் செய்யும்
வரமிங்கன் கண்டியான் வாழ்ந்துற்ற வாறே. (ச)

---

2587. சாயாபுருடனைப்போல=நிழல்வடிவாகத்தோன்றும்புருடரூபத்தைப்போல; நீரிற்குமிழியை = நீரினிடத்துண்டாங் குமிழியைப் (போலவும்); காணின் = (உடம்பினை) கண்டால்; எழுகின்ற தீயிற் கர்ப்பூரத்தைப்போல = எரியுந் தீயோடு கூடிய கர்ப்பூரத்தினைப்போல; போமப்பரத்தே=அச் சிவத்திலே லயமாம்.

2588. உடலு முயிரும் = உடலாகவும் உயிராகவும்; ஒழிவற = நீங்காது; ஒன்றில் = ஒரு நிமித்தத்தினுல் (மாயையால்); சிவசத்திதாமே = சத்தியும் சிவமுமே; பரமாமுடலை = முன்பட்டுவிளங்கு முடம்பினை; கடையுந் தலையும் = அந்தமும் ஆதியும்; சிவத்தே காக்கும்=(இல்லாத) சிவத்தின்கண் ஒடுங்கும்.

2589. அவியின்றிய=அழிவற்றனவாயுள்ள; குவிவொன்றிலாமல்= குவிதலொரு சிறிது மில்லாமல்; தவிர்வொன்றிலாத = பிரபஞ்சத்தைக்கடக்கு மார்க்கமில்லாத.

2590. திரன்=நிலைபேறு; செறிவு=நிறைவு; வரம்=மேன்மையான செயல்.

2591. அளந்து துரியத் தறிவினை வாங்கி
யுளங்கொள் பரஞ்சக முண்ட தொழித்துக்
கிளர்ந்த பரஞ்சிவஞ் சேரக் கிடைத்தால்
விளங்கிய வெட்ட வெளியனு மாமே. (௫)

2592. இரும்பிடை நீரென வென்னையுள் வாங்கிப்
பரம்பர மான பரமது விட்டே
யுரம்பெற முப்பா ழொளியை விழுங்கி
யிருந்தவென் னந்தி யிதயத்து ளானே. (௬)

2593 கரியுண் விளவின் கனிபோ லுயிரு
முரிய பரமுமுன் னேதுஞ் சிவமு
மரிய துரியமே லகிலமு மெல்லாந்
திரிய விழுங்குஞ் சிவபெரு மானே. (௭)

2594. அந்தமு மாதியு மாகும் பராபரன்
றந்தம் பரம்பரன் றன்னிற் பரமுட
னந்தமை யுண்டுமெய்ஞ் ஞானநே யாந்தத்தே
நந்தி யிருந்தன னாமறி யோமே. (௮)

---

2591. அறிவினைவாங்கி=சீவவறிவினைத் தன்னிடத் தடக்கி; உளங்கொள்பரம் = மனத்தைக் கோயிலாகக்கொண்ட ஆத்மா; சக முண்டதொழித்து = உலகத்தை விழுங்குதலை யொழித்து; பரஞ்சிவஞ் சேரக்கிடைத்தால் = பரமும் சிவமும் நிஷ்டையி லேகமாகப் பெற்றால்; வெட்ட வெளியன் = சிதாகாச வடிவன்.

2592. என்னையுள்வாங்கி=என்னைத்தன்னுளடக்கி; பரமதுவிட்டு= பராவத்தையைக்கடந்து; முப்பாழொளியை விழுங்கியிருந்த =முப்பாழொளிக்கும் அதீதமா யிருந்த.

2593. கரியுண்விளவின் கனிபோல்=வேழமென்னு நோயினாலுண்ணப்பட்ட விளாங்கனியைப்போல (வேழமென்பது மாத்தின்கனிகளுக் குறுவதாகிய வொரு நோய், அதனைத் தேங்காய் விளாங்கனி முதலிய ஓடுள்ளவைகளிலுங் காணலாம், ஓடிருக்க வுள்ளிருக்குஞ் சத்தொழியச் செய்வது); திரிய = மாறுபட.

2594. நந்தமையுண்டு = நம்மைவிழுங்கி; நேயாந்தத்து = ஞேயப்பொருளாகிய சிவதுரியாதீதத்தில்; நாமறியோம் = பெத்தர்களாகிய நாமறியத்தக்கவரல்லோம்.

உ௮-வது வாய்மை.

2595. அற்ற துரைக்கி லருளுப தேசங்கள்
குற்ற மறுத்தபொன் போலுங் கனலிடை
யற்றற வைத்திறை மாற்றற யாற்றிடில்
செற்ற மறுத்த செழுஞ்சுட ராமே. (௧)

2596. எல்லா மறியு மறிவு தனைவிட்டு
வெல்லா மறிந்து மிலாபமங் கில்லை
யெல்லா மறிந்த வறிவினை நானென்னி
லெல்லா மறிந்த விறையென லாமே. (௨)

2597. தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனைக் கண்டுகொண் டேனே. (௩)

2598. தானே யுலகிற் றலைவ னெனத்தகுந்
தானே யுலகுக்கோர் தத்துவமாய் நிற்கும்
வானே மழைபொழி மாமறை கூர்ந்திடு
மூனே யுருகிய வுள்ளமொன் றாமே. (௪)

2599. அருள்பெற்ற காரண மென்கொ லமரி
லிருளற்ற சிந்தை யிறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே. (௫)

---

2595. அற்றது = பற்றற்றநெறி; குற்றமறுத்த பொன்போலும் = புடமிட்டு மாசொழித்த பொன்னைப்போலும்; அற்றற = (அற்றமற) மாசுநீங்க; வைத்திறை=(இறைவைத்து) சிவத்தில் சிந்தையை நிறுத்தி; மாற்றற யாற்றிடில்=மாறுபாடறச் சமாதிசெய்தால்; செற்றமறுத்த=மாயாசம்பந்தமொழிந்த.

2596. எல்லாமறிந்த வறிவினை நானென்னில் = எல்லாவற்றையு முணரு மறிவாகிய சிவத்தை ஆன்மாவாகிய நானென்றறிந்தால்.

2597. தலைநின்ற தாழ்வரைமீது = மேன்மைபொருந்திய மலையடிவாரத்தில் மாதறிமூர்த்தியை=சிவசத்தியால் தரிசிக்கப்படும் தாண்டவமூர்த்தியை; கலைநின்ற = வேதத்துள் மறைந்துள்ள.

2598. தத்துவம்=உண்மைப்பொருள்; மாமறை = வேதம்; கூர்ந்திடும்=மிகச்செய்யும்.

2599. அமரில்=இருந்தால்; சேவடி=செய்ய பாதங்கள்.

2600. மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா வொருவனை
யுய்கலந் தூழித் தலைவனு மாய்நிற்கு
மெய்கலந் தின்பம் விளைந்திடு மெய்யர்க்கே. (சு)

2601. மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்
பொய்கலந் தாருட் புகுதாப் புனிதனை
கைகலந் தாவி யெழும்பொழு தண்ணலைக்
கைகலந் தார்க்கே கருத்துற லாமே. (எ)

2602. எய்திய காலத் திருபொழு துஞ்சிவன்
மெய்செயின் மேலை விதியது வாய்நிற்கும்
பொய்யும் புலனும் புகலொன்று நீத்திடி
லையனு மவ்வழி யாகிநின் றானே. (அ)

2603. எய்துவ தெய்தா தொழிவ திதுவரு
ளுய்ய வருள்செய்தா னுத்தமன் சீர்நந்தி
பொய்செய் புலனெறி யொன்பதுந் தாட்கொளின்
மெய்யென் புரவியை மேற்கொள்ள லாமே. (கூ)

2604. கைகலந் தானைக் கருத்தினு ணந்தியை
மெய்கலந் தான்றன்னை வேத முதல்வனைப்
பொய்கலந் தார்முன் புகுதாப் புனிதனைப்
பொய்யொழிந் தார்க்கே புகலிட மாமே. (கo)

---

2600. மெய்கலந்தாரொடு=வாய்மையுடையாரிடத்தில்; உய்கலந்து= (ஆன்மாக்கள்)உய்யுமாறு கலந்து; மெய்கலந்து=இதயத்திற் சேர்ந்து; (மெய் ஆகுபெயர்).

2601. கைகலந்தாவி=(ஆவிகைகலந்து) உயிர் (உடலை) விட்டு; கை கலந்தார்க்கே = கூடினவர்களுக்கே (கருத்துற இருத்தி யுணர்பவர்க்கே).

2602. எய்தியகாலத்து = பக்திசெய்தற்கேற்ற பருவத்தில்; மெய் செயின்=வஞ்சகமின்றி யன்புசெய்தால்.

2603. புலனெறியொன்பதுந் தாட்கொளின்=சரீரத்தின் கண்ண தாமொன்பதுவாயிலையும் பிராணன் வெளிப்படாதவாறு அடைத்தால்; மெய்யென்புரவியை=வாய்மையாகிய வாசி யை (குதிரையை).

2605. மெய்த்தா ளகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாள்கொண் டாருந் திறந்தறி வாரில்லைப்
பொய்த்தா ளிடும்பையைப் பொய்யற நீவிட்டங்
கத்தா டிறக்கி லரும்பேற தாமே. (கக)

2606. உய்யும் வகையா லுணர்வினு லேத்துமின்
மெய்ய னரனெறி மேலுண்டு திண்ணெனப்
பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு
வையனு மங்கே யமர்ந்துநின் றானே. (கஉ)

2607. வம்பு பழுத்த மலர்ப்பழ மொன்றுண்டு
தம்பாற் பறவை புகுந்துணத் தாணொட்டா
தம்புகொண் டெய்திட் டகலத் துரத்திடிற்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே. (கங)

2608. மயக்கிய வைம்புலப் பாச மறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் றொடர்ந்தாற்
றியக்கஞ் செய்யாதே சிவனெம் பெருமா
னுயப்போ வெனமன மொன்றுவித் தானே. (கச)

2609. மனமது தானே நினையவல் லார்க்கு
வினமெனக் கூறு மிருங்காய மேவற்
றனிவினி னுதன்பாற் றக்கன செய்யிற்
புனிதன் செயலாகும் போதப் புவிக்கே. (கரு)

---

2605. அகம்படி மேவிய = மனத்தினிடத்திலே பொருந்துதலை யுடைய; கைத்தாள் = கையிற்கிடைத்துள்ள திறவுகோல்; பொய்த்தா ளிடும்பையை = பொய்யினது மூலம் வைக்கப் பட்டுள்ள பையினை (உடலை); அத்தாள்=அந்தச் சுழுமுனை வாயிலைத் திறக்குந் திறவுகோல்.

2606. உணர்வினுல்=ஞானநெறியினுல்; புறம்பொலிவார்=புறத்தும் (களங்கமற) விளங்குவோர்கள்; நடு=இதயத்தில்.

2607. வம்பு பழுத்த = வாசனை முதிர்ந்த (வியாபகமான); மலர்ப் பழம்=மலருளுள்ள கனி (அருளிலிருக்குஞ் சிவம்); பறவை= பட்சி (காமாதிகள்); அம்பு=பாணம் (சமாதி).

2608. துயக்கு = கலக்கம்; தியக்கஞ்செய்யாது = மயக்குவதைச் செய்யாமல்.

2609. இருங்காயம்=பெருமையுள்ள சரீரம்; தனிவினில்=தனித் திருந்து; போதப்புவி=ஞானபூமி.

## ௨௯-வது ஞானி செயல்.

2610. முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்ந்தறப் பார்ப்பர்க
டன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிக
ணன்மையி லைம்புல னுடலி னாலே. (௧)

2611. தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகண்
முன்னை வினையின் முடிச்சை யவிப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. (௨)

2612. மன வாக்குக் காயத்தால் வல்வினை மூளு
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னு
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னாற்
றனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. (௩)

## ௩0-வது அவா வறுத்தல்.

2613. வாசியு மூசியும் பேசி வகையினாற்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
யாசையு மன்பு மறுமி னறுத்தபி
னீச னிருந்த விடமெளி தாமே. (௧)

2614. மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே. (௨)

---

2610. முன்னைவினை வரின் = பூர்வசன்மம் பிராரத்தகருமரூபமாக வந்தால்; பின்னை = அதற்குமேல்; வினைக்கணார் = காமத்தைக் கருதிச்செய்யார்; பேர்ந்தற=கன்மத்தைவிட்டு நீங்கியொழிந்திருக்க; நன்மையில்=நன்மையைச் செய்வதில்லாத; புலனுடலினால்=ஐம்புலனுஞ் செல்லுதலால்.

2611. முன்னைவினையின் முடிச்சு = பூர்வகன்மபந்தம்; பின்னை வினை=ஆகாமியகன்மம்; சிவனருளாலே = சிவசத்திபதிவாலே (சத்தினி பாதத்தால்).

2612. நேர்நிற்கில்=நன்னெறியினின்றால்; மன்னு=சேரா; வாதனை தன்னால்=(சமாதி) சம்ஸ்காரத்தினால்; தனைமாற்றியாற்ற= தற்போதத்தை யழித்தொழிக்க.

2613. வாசி=பிராணவாயு; ஊசி=சுழுமுனை.

2614. மூடத்து=அந்தரங்கதானத்து.

2615. அசை யறுமின்க ளாசை யறுமின்க
ளீசனோ டாயினு மாசை யறுமின்க
ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வானந்த மாமே. (௩)

2616. அடுவன பூதங்க ளைந்து முடனே
படுவழி செய்கின்ற பற்றற வீசி
விடுவது வேட்கையை மெய்ந்நின்ற ஞானந்
தொடுவது தம்மைத் தொடர்தலு மாமே. (௪)

2617. உவாக்கட லொக்கின்ற வூழியும் போன
துவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வானோ
ரவாக்கட லுட்பட் டழுந்தினர் மண்ணோர்
தவாக்கட லீசன் றரித்துநின் றானே. (௫)

2618. நின்ற வினையும் பிணியு நெடுஞ்செய
றன்றொழி லற்றுச் சுத்தம தாகலும்
பின்றைக் கருமமும் பேர்த்தரு ணோர்பெற்றுத்
துன்ற வழுத்தலு ஞானிக டெய்மையே. (௬)

2619. உண்மை யுணர்ந்துற வொண்சித்தி முத்தியாம்
பெண்மயற் கெட்டறப் பேறட்ட சித்தியாந்
திண்மையின் ஞானி சிவகாயங் கைவிட்டால்
வண்மை யருடா னடைந்தன்பி லாறுமே. (௭)

---

2616. அடுவனபூதங்கள்=ஒன்றையொன்று பகைத்து அழிக்குந் தன்மையுள்ள பூதங்கள்; தம்மைத்தொடர்தல்=தத்துவங்களைந்து ஆன்மாவை யாராய்ந்தறிதல்.

2617. உவாக்கடல்=பர்வகாலத்துப் பொங்குகின்ற கடல்; துவாக்கடல்=சுகதுக்க வடிவக் கடல்; துஞ்சினர் = இறந்தனர்; தவாக்கடல்=நீங்குதலில்லாத அருளாழி.

2618. பிணி=பந்தம்; நெடுஞ்செயல்=தவமாதிய பெருந்தொழில்; உன்றொழில்=நினைத்தலாகிய தொழில் (தியானித்தல்); ஐங்கருமம்=ஐம்புல வியாபாரம்.

2619. உற=(ஞானநெறியில்) நிற்க; பேறட்டசித்தி = பெறத்தகுவனவாகிய அட்டமாசித்திகள்; திண்மையின்=வைராக்கியத்தினல்; சிவகாயம் = தானெடுங்கி நிற்பதாகிய சிவதுரியம்; அன்பிலாறும்=அன்பினிடத் தமைந்திருப்பான்.

2620. அவனிவ னீசனென் றன்புற் றாடிச்
சிவனிவ னீசனென் றுண்மையை யோரார்
பவனிவன் பல்வகை யாமிப் பிறவி
புவனிவன் போவது பொய்கண்ட போதே. (அ)

2621. கொதிக்கின்ற வாறுங் குளிர்கின்ற வாறும்
பதிக்கின்ற வாறிந்தப் பாரக முற்றும்
விதிக்கின்ற வைவரை வேண்டா துலக
நொதிக்கின்ற காயத்து நூலொன்று மாமே. (கூ)

2622. உய்ந்தன மென்பீ ருறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தையில் வைத்துத் தெளிவுறச் சேர்த்திட்டான்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே. (கo)

---

## ருக-வது பக்தியுடைமை.

2623. முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கு
மத்தனை மாயா வமரர் பிரான்றனைச்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்
பத்தர் பரசும் பசுபதி தானென்றே. (க)

---

2620. பவனிவன்=பாவத்தை யுடையவனுகிய இச்சீவன், அல்லது சிவமாகிய இவ்வான்மா; புவனிவன்போவது = பலவகைத் தான புவனங்களில் வன்மையாகச் செல்வது; பொய்கண்ட போது=பொய்யென்றறிந்தவிடத்து.

2621. கொதிக்கின்றவாறு = படைக்கும்வகை; குளிர்கின்றவாறு= காக்கும்வகை; பதிக்கின்றவாறு = அழிக்கும்வகை; விதிக்கின்ற வைவர் = நியமிக்கின்ற பஞ்சகர்த்தர்கள்; நொதிக்கின்ற=உண்டாகின்ற; காயத்துநூல்=ஒரு சரீரத்திலிருந்து மறு சரீரஞ் சேர்வதற்கு ஆதாரமாயுள்ள கன்மம்.

2622. உறுபொருள் = மெய்ப்பொருள்; கந்தமலரில் = வாசனையையும் பூவையும்போல; முந்தைப் பிறவிக்கு = மேலேவரும் பிறவியைக்கெடுப்பதற்கு; மூலவித்தாம்=பரமகாரணமாகும்.

2623. ஆய்நின்ற=சிறந்துநிற்கும்; பரசும்=துதிக்கும்.

2624. அடியா ரடியா ரடியார்க் கடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டே
னடியா ரருளா லவனடி கூட
வடியா னிவனென் றடிமைகொண் டானே. (௨)

2625. நீரிற் குளிரு நெருப்பினிற் சுட்டிடு
மாரிக் கடனந்தி யாமா ரறிபவர்
பாரிற் பயனாரைப் பார்க்கிலு நேரிய
ரூரிலு மாபதி யாகிநின் றானே. (௩)

2626. ஒத்துல கேழு மறியா வொருவனென்
றத்த னிருந்திட மாரறி வார்சொலப்
பத்தர்தம் பத்தியிற் பாற்படி லல்லது
முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரே. (௪)

2627. ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோ
னான்கன்றாய் நாடி யழைத்தேனென் னாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொரு
ளூன்கன்றா னாடிவந் துட்புகுந் தானே. (௫)

2628. பெத்தத்துந் தன்பணி யில்லை பிறத்தலான்
முத்தத்துந் தன்பணி யில்லை முறைமையா
லத்தற் கிரண்டு மருளா லளித்தலாற்
பத்திப் பட்டோர்க்குப் பணியொன்று மில்லையே. ()

---

2624. நல்கிட்டு=தந்து; அவனடி=அச்சிவபிரானது பாதம்.

2625. ஆர்=பொருந்தும்; இக்கடன் = இம்முறைமை; நேரியர்= முறைதவறாதவர்; ஊரில்=சித்தத்தில்.

2626. பத்தியிற்பால்=பத்தியினிடத்து; படிலல்லது = அகப்படுவ தல்லாமல்.

2627. கன்றாய் = மகவாய்; வான்கன்றுக்கப்பாலாய் = வானுலகில் வசிக்கின்ற பசுக்களாகிய தேவர்களுக்கெட்டாமல்; ஊன் கன்றான்=தவத்தினிற் சரீரம் வருந்தாத வென்னை.

2628. இரண்டும் = (பெத்தமுத்திகள்) இரண்டும் ; அருளாலளித் தலால்=(சிவபிரான்) கருணையாற்றருதலால்; பெத்ததசை யில் தன்னைச் சிவபிரானுக் கொப்புவித்துத் தற்சுதந்தரமற் றிருத்தலாலும், முத்திதசையில் ஜீவத்தன்மையற்று நிற்ற லாலும் பக்தர்களுக்குத் தம்செயல் யாதுமில்லை யென்பது கருத்து.

2629. பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக்
குறவஞ் சிலம்பக் குளிர்வரை யேறி
நறவா மலர்கொண்டு நந்தியை யல்லா
லிறைவனென் றென்மன மேத்தகி லாவே. (எ)

2630. உறுதுணை நந்தியை யும்பர் பிரானைப்
பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின்
செறிதுணை செய்து சிவனடி சிந்தித்
துறுதுணை யாயங்கி யாகிநின் றானே. (அ)

2631. வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற
தானவர் மூப்புரஞ் செற்ற தலைவனைக்
கானவ னென்றுங் கருவரை யானென்று
மூனத னுண்ணினைந் தொன்றுபட் டாரே. (௯)

2632. நிலைபெறு கேடென்று முன்னே படைத்த
தலைவனை நாடித் தயங்குமென் னுள்ள
மலையுளும் வானகத் துளளும் புறத்து
முலையுளு முள்ளத்து மூழ்கிநின் றேனே. (௧௦)

---

2629. பறவை=பிராணன் (வேகமாய்ப் பறந்து செல்லுந்தன்மை யுடையதாதலால் பிராணன் பறவையென்னப்பட்டது); கற்பம்=சரீரம் அழியாதிருக்கும் ஔஷதம்; பாம்பு=குண்டலி; குறவம்=(குரவை)நாதம்; சிலம்ப=உண்டாக; குளிர்வரை= குளிர்ந்த அமிர்தமுண்பதற்குரிய புருவமத்திய மஹாமேரு.

2630. பெறுதுணை = அருளையடைதற்குரியதுணை; செறிதுணை = உற்றதுணை; அங்கியாகி=(ஆணவவிருளைக் கெடுக்க) ஞானக் கினியாகி.

2631. வலிசெய்து = பலாற்காரஞ்செய்து (துன்பப்படுத்தி); கானவன்=வேடன் (ஆநந்தந்தரும் புதுமையானவன்); கருவரையான்=பெரிய மேருமலைக்குரியவன், அல்லது பிறப்பிற் கட்டுப்படுத்தான்.

2632. நிலைபெறு(க) கெடு(க) என்று=இருக்குக அழிகவென; படைத்த=(உலகத்தை) உண்டாக்கிய; புறத்தும்=நரகத்தும்.

## ௬௨-வது முக்தியுடைமை.

2633. முத்தியி லத்தன் முழுத்த வருள்பெற் றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்த்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியி லுற்றோர் பரானந்த போதரே. (௧)

2634. வளங்கனி தேடிய வன்றாட் பறவை
யுளங்கனி தேடி யுழிதரும் போது
களங்கனி யங்கியிற் கைவிளக் கேற்றி
நலங்கொண்ட நால்வரு நாடுகின் றாரே. (௨)

## ௬௩-வது சோதனை.

2635. எம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
தம்மா னடிதந் தருட்கட லாடினே
மெம்மாய மும்விடுத் தெம்மைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடஞ் சோதனை யாமே. (௧)

2636. அறிவுடை யானரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன்
பொறியுடை யான்புல னைந்துங் கடந்த
குறியுடை யானொடுங் கூடுவ னானே. (௨)

2637. அறிவறி வென்றங் கரற்று முலக
மறிவறி யாமைமெய் யாரு மறியா
ரறிவறி யாமை கடந்தறி வானா
லறிவறி யாமை யழகிய வாறே. (௩)

2633. தத்துவசுத்தி = தேகாதிகளைத் தனக்கு வேறென்றறிந்து நீங்கல்; தன்பணி=சிவபணிவிடை.

2634. வளங்கனி=செழித்த முத்தியாகிய கனி; வன்றாட்பறவை= (பிரவிர்த்தி நிவிர்த்தியென்னு மிரண்டு) வலிய கால்களையுடைய பட்சி (சீவன்); உளங்கனி = உள்ளங்கனிந்து; உழிதரும்=திரியும்; களங்கனி = வஞ்சனை மிகுந்த விஷய வடிவ தீ; நால்வர்=அகக்கரண நான்கு.

2635. எம்மாயமும் = எவ்வகையான மாயாசம்பந்தங்களையும்; எம்மைக்கரந்திட்டு=தானென்பதற்று; திருந்திடம்=திருத்தமுற்றிருக்குமிடம்.

2636. செறிவுடையான்=மறைந்திருப்பவன்; பொறியுடையான்=விதிப்பவன்.

2637. அறிவறியாமையை = அறிவையும் அறியாமையும் (நினைப்பையும் மறப்பையும்); அறிவானல் = தன் நிஜசொரூபமாகிய அறிவுமாத்திரையாய் நின்றால்; அறிவறியாமை=அறிவாகிய ஆன்மா வேறொன்றையு முணராமலிருத்தல், (தன்னையன்றி வேறு பொருளின்மையா லுணராமலிருத்தல்).

2638. குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்
தறியா வறிவி லவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பராநந்தி நீடரு ளொன்றுஞ்
செறியாச் செறிவே சிவமென லாமே. (ச)

2639. காலினி லூறுங் கரும்பினிற் கட்டியும்
பாலினுண் ணெய்யும் பழத்து ளிரதமும்
பூவினு ணாற்றமும் போலுள னெம்மிறை
காவல னெங்குங் கலந்துநின் றானே. (ரு)

2640. விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
விருப்பர் மனத்திடை யெங்கள் பிரானார்
நெருப்புரு வாகி நிகழ்ந்துநின் றாரே. (சு)

2641. நந்தி பெருமா னடுவுள் வியோமத்து
வந்தெ னகம்படி கோயில்கொண் டான்சொன்ன
வெந்தைவந் தானென் றெழுந்தே னெழுதலுஞ்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. (எ)

2642. தன்மை வல்லோனைத் தவத்து ணலத்தினை
நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப்
புன்மை பொய்யாதே புனிதனை நாடுமின்
பன்மையி லும்மைப் பரிசுசெய் வானே. (அ)

---

2638. குறியாக்குறி = மறந்துநினையாத குறி; கூடாதகூட்டம் = (கடனீரும் அலையும் வேறாயிருந்து ஒன்றுதல்போல) கூடுங் கூட்டம்; அறியாவறிவில் = மறப்பற்ற மெய்ஞ்ஞானத்தில்; அவிழ்ந்து = கலந்துநின்று; ஏகசித்தமாய் = ஒருமனதாய்; செறியாச்செறிவு = கூடாதகூட்டம்.

2639. காலினில் ஊறும் = காற்றினிடத்துப் பரிசமும்; கட்டியும் = வெல்லமும்.

2640. பொருப்பகஞ்சேர்தரு பொற்கொடிபோலவிருப்பர் = பருவதராஜனது கிருகத்திலவதரித்திருந்து கொடுந்தவம் புரிந்த உமாதேவியாரைப்போன்ற பக்தியுடையவர்; நெருப்புருவாகி = சித்துமாத்திரவடிவமாய்; நிகழ்ந்து = விளங்கி.

2641. நடுவுள் = பஞ்சாவஸ்தைகளுள் நடுவேயிருக்கும்; வியோமம் = பாசுழுத்தி.

2642. தன்மைவல்லோனை = சத்தானகுணமுடையானை; புன்மை = புன்மையினால்; பன்மையில் = பலசீவர்களினுள்ளும்; பரிசுசெய்வான் = பெருமையுறச்செய்வான்.

2643. தொடர்ந்துநின் றென்னைச் சோதிக்கும் போது
தொடர்ந்துநின் றனல்ல நாதனு மங்கே
படர்ந்துநின் றாதிப் பராபர னெந்தை
கடந்துநின் றவ்வழி காட்டுகின் றானே. (௯)

2644. அவ்வழி காட்டு மமரர்க் கரும்பொரு
ளிவ்வழி தந்தை யாய்கேளி யானெனக்குஞ்
செல்வழி சேர்சிவ லோகத் திருந்திடு
மிவ்வழி நந்தி யியல்பது தானே. (௧௦)

2645. எறிவது ஞானத் துறைவா ளுருவி
யறிவத னோடேயவ் வாண்டகை யானைச்
செறிவது தேவர்க்குந் தேவர்பி ரானைப்
பறிவது பல்கணப் பற்றுவி டாரே. (௧௧)

2646. ஆதிப்பி ரான்றந்த வாளங்கை கொண்டபின்
வேதித்து வென்னை விலக்கவல் லாரில்லை
சோதிப்ப னங்கே சுவடு படாவண்ண
மாதிக்கட் டெய்வ மவனிவ னாமே. (௧௨)

---

2643. என்னைச் சோதிக்கும்போது=தத்துவங்களைந்து ஆன்மாவை ஆராயும்போது; படர்ந்து = வியாபித்து; கடந்துநின்று = சீவனுக்கு வேறாயிருந்து; அவ்வழி=ஆராயு மார்க்கம்.

2644. அவ்வழிகாட்டும்=அந்த மார்க்கத்தை அனுக்கிரக சத்தியால் அறிவிக்கின்ற; தந்தை ஆய் கேள் யான்=தந்தையாயும் தாயாயும் சுற்றமாயும் யானும்.

2645. செறிவது = (வேற்றுமையின்றி) பொருந்துவது; பறிவது= வேறுபடுவது; பல்கணப்பற்று=அநேகமான ஆசை.

2646. வாள்=ஞானம்; வேதித்து=வேறுபடுத்தி; சுவடு=குற்றம்; அவனிவனும்=அச்சிவபிரானே இச்சீவனும்.

2647. அந்தக் கருவை யருவை வினைசெய்தற்
பந்தம் பணியச்சம் பல்பிறப் பும்வாட்டிச்
சிந்தை திருத்தலுஞ் சேர்ந்தாரச் சோதனை
சந்திக்கத் தற்பர மாகுஞ் சதுரர்க்கே. (கங)

2648. உரையற்ற தொன்றை யுரைத்தா னெனக்குக்
கரையற் றெழுந்த கலைவேட் டறுத்துத்
திரையொத்த வென்னுட னீங்கா திருத்திப்
புரையற்ற வென்னுட் புகுந்தற் பரனே. (கச)

அதிகாரம், சச-க்குப் பாடல், ருஉள.

எட்டாந்தந்திரம் முற்றிற்று.

---

2647. கருவை=(பிறவிக்கு மூலமான) பாசத்தை; அருவை=அருவுருவமான (மாயையை); வினைசெய்தற்பந்தம் = கருமங்களைப்புரிதலாலாகிய பந்தத்தை; பணியச்சம்=(அவற்றாலுண்டாய்) இருக்கிறபயத்தை; சிந்தை திருத்தலும்=(உணர்ந்து) மனந்திருந்திய அப்பொழுதே; சந்திக்க = (ஆன்மாவை) சிவத்தினிடத்தில் சேர்க்க; தற்பரமாகும் = (அவ்வான்மா) அச்சிவமாகும்.

2648. உரையற்றதொன்றை=வாக்கிற் கெட்டாததாகியுள்ள வொருபொருளை; கரை=எல்லை; கலைவேட்டறுத்து=நூலாராய்ச்சியிலுள்ள விருப்பத்தை யொழித்து; திரையொத்த = அலைபோல மாறிமாறி வந்தழியுந் தன்மையுள்ள; புரையற்ற = களங்கமொழிந்த.

# ஒன்பதாந்தந்திரம்.

## க-வது குருமடதரிசனம்.

**2649.** பலியு மலியும் பரந்து புகையு
மொலியுமெம் மீசன் றனக்கென்றே யுள்கிக்
குவியுங் குருமடங் கண்டவர் தாம்போய்த்
தளிரு மலரடி சார்ந்துநின் றாரே. (க)

**2650.** இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
யவனுக்கும் வேறில்ல முண்டா வறிபி
னவனுக் கிவனில்ல மென்றென் றறிந்து
மவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே. (உ)

**2651.** நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடுஞ் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட வரியன் சிறப்பிலி யெம்மிறை
யோடு முலகுயி ராகிநின் றானே. (௩)

**2652.** இயம்புவ னாசனத் தோடு மலையு
மியம்புவன் சித்தக் குகையு மிடமு
மியம்புவ னாதாரத் தோடு வனமு
மியம்புவ னீரா றிருநிலத் தோர்க்கே. (௪)

---

2649. பலி=யாகபலி; ஒலி=வேதவொலி; குவியும்=மனமடங்கும்; தளிருமலரடி = மலர்ந்த செந்தாமலரை யொத்த பாதம்.

2650. இவனில்லம்=இக்குருமடம்; அவனுக்கு=அச்சிவபிரானுக்கு; உண்டாவறியின் = உண்டாயிருப்பதாக ஆராய்ந் தறியப் புகின்; இவனில்லம்=இந்தக் குருவே (அவனுக்கு) வீடாம்; புறம்பென்று=குருவுக்கு வேறானவனென்று கருதி.

2651. பெருந்துறை=பெரியமார்க்கம் (சன்மார்க்கநெறி); தேடவரியன் சிறப்பு இல் இலி = தேடவரியனாகிய சிவபிரானுக்குச் சிறப்பினையுடைய இல்லகமாயிருக்கின்ற குரு; எம்மிறையோடும்=எம்மிறையாகிய சிவபிரானோடும் (ஏகனாய்).

2652. ஈராறிருநிலத்தோர்க்கு = பதினான்குலகத்தில் இருப்பவர்களுக்கு.

2653. முகம்பீட மாமட முன்னிய தேய
மகம்பர வர்க்கமே யாசில்செய் காட்சி
யகம்பர மாதன மெண்ணெண் கிரியை
சிதம்பரந் தற்குகை யாதாரந் தானே. (ரு)

2654. அகமுக மாம்பீட மாதர மாகுஞ்
சகமுக மாஞ்சத்தி யாதன மாகுஞ்
செகமுக மாந்தெய்வ மேசிவ மாகு
மகமுக மாய்ந்த வறிவுடை யோர்க்கே. (சு)

2655. மாயை யிரண்டு மறைக்க மறைவுறுங்
காயமோ ரைந்துங் கழியத்தா னாகியே
தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்து
ளாய்பவர் ஞானாதி மோனத்த ராமே. (எ)

---

உ-வது ஞானகுருதரிசனம்.

2656. ஆறாறு முப்பது மங்கே யடங்கிடிற்
கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்
வேறே சிவபத மேலா யளித்திடும்
பேறாக வானந்தம் பேணும் பெருகவே. (க)

---

2653. முகம்=குருமுகம்; அகம்பரவர்க்கம் = ஜீவப் பிரஹ்மவைக்கியம்; ஆசில்செய்=குற்றமறச்செய்கின்ற; அகம்பரமாதனம்=மனமே மேன்மையான ஆதனம்; எண்ணெண்=கருதப்படும் பிரணவ ஜபம்; சிதம்பரந் தற்குகை = தகராகாசமே (இதயாகாசம்) தனக்குக் குகையாம்.

2654. அசமுகமாம்=உள்முகப்படுவதாம்; சகமுகமாம்=உலகசொரூபமாம்; சத்தி=மாயாசத்தி; செகமுகமாம்=உலக காரணமாம்; அகமுகமாய்ந்த=அந்தர்முகமா யாராய்ந்துணர்ந்த.

2655. மறைவுறும்=(தமது சொரூபம் விளங்காது) மறைபடும்; காயமோரைந்தும்=காரணம், பஞ்சகஞ்சுகம், பரம், புரியட்டகம், ஸ்தூலமென்னுஞ் சரீரமைந்தும், (இவை முறையே ஆநந்தமயகோச முதலிய பஞ்சகோசங்களுமாம்); சொரூபத்துள்=ஆன்ம சொரூபத்துள்ளே.

2656. ஆறாறு முப்பதும்=முப்பத்தாறு தத்துவங்களும்; அக்குருபரன்=அந்த ஞானசிரியன்; கும்பிடு=ஐக்கியம்; சிவபதம்=ஆநந்தநிலை.

2657. துரியங்கண் மூன்றுங் கடந்தொளிர் சோதி
யரிய பரசிவ மியாவையு மாகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேசவொண் ணாதே. (உ)

2658. ஆயன நந்தி யடிக்கென் றலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்தவென் வாய்பெற்றேன்
காயன நந்தியைக் காணவென் கண்பெற்றேன்
சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனே. (ரு)

2659. கருட னுருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (ச)

2660. அண்ண லிருப்பிட மாரு மறிகில
ரண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வார்களுக்
கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடு
மண்ணலைக் காணி லவனிவ னாமே. (ரு)

2661. தோன்ற வறிதலுந் தோன்ற றோன்றாமையு
மான்ற வறிவு மறிநன வாதிகண்
மூன்றவை நீங்குந் துரியங்கண் மூன்றற
வூன்றிய நந்தி யுயர்மோனத் தானே. (சா)

---

2657. விரிவு குவிவற = நினைப்பு மறப்பொழிய; குருபதம் = மகத்தாகிய வைக்கியநிலை.

2658. ஆயன=தாயையொத்த; வாயனம் = மதுரமுள்ள பதார்த்தமான; காயனநந்தி=சித்சொரூபனுயுள்ள நந்தி; சேயன நந்திக்கு=பிரபஞ்சங்கடந்துநின்ற சிவபிரானைத் தியானிப்பதற்கு.

2659. கருதுமளவில்=தியானிக்கும்போது; குறித்த=தியானித்த; சிவனவனும் (அவன் சிவனும்)=அச்சீவன் சிவமாவன்).

2660. உள்ளே=தேகாலயத்தே; காணில்=(வேற்றுமயின்றி) அறிந்தால்.

2661. தோன்றல் தோன்றாமையும் = நினைப்பும் மறப்பும்; மான்ற வறிவு = மயக்கவறிவு; மறி = மாறிவருகிற; நனவாதிகண் மூன்று=சாக்கிராதி யவத்தாத்திரயம்; துரியங்கண் மூன்று= சீவதுரியம், பரதுரியம், சிவதுரியமென்னு மூன்று; ஊன்றிய=நிலைபெற்ற.

2662. சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்
கந்த மலரிலி ரண்டிதழ்க் கன்னியும்
பந்தமி லாத பளிங்கி னுருவினள்
பந்த மறுத்த பரங்குரு பற்றே. (எ)

2663. மனம்புகுந் தானுல கேழு மகிழ
நிலம்புகுந் தானெடு வானிலந் தாங்கிச்
சினம்புகுந் தான்றிசை யெட்டு நடுங்க
வனம்புகுந் தானூர் வடக்கென்ப தாமே. (அ)

2664. தானான வண்ணமுங் கோசமுஞ் சார்தருந்
தானும் பறவை வனமெனத் தக்கன
தானான சோடச மார்க்கந்தா னின்றிடிற்
றானந் தசாங்கமும் வேறுள்ள தானே. (கூ)

2665. மருவிப் பிரிவறி யாவெங்கண் மாநந்தி
யுருவ நினைக்கநின் றுள்ளே யுருக்குங்
கருவிற் கரந்துள்ளங் காணவல் லார்க்கிங்
கருவினை கண்சோரு மழிவா ரகத்தே. (கo)

2662. சந்திரபூமிக்குடன் = சந்திரமண்டலத்தோடு கூடி; புருவத்திடை=புருவமத்தியிலிருக்கும்; கந்தமலரி விரண்டிதழ் = இரண்டிதழ்களையுடைய தாமரைப்பூவின் (ஆக்கினைசக்கரத்தின்); கன்னியும் = ஹாகினி யென்னுஞ் சத்தியும்; பரங்குரு=மேலான குரு.

2663. சினம் புகுந்தான் = கோபங்கொண்டான்; வனம்=தத்துவக்கூட்டம்; வடக்கு=வட திசையிலுள்ள கைலை.

2664. தானானவண்ணமும் கோசமும் = தான் (பஞ்சகோசம்) ஆய் விளங்கும்வகையும் (அப்பஞ்ச) கோசங்களும் தத்துவங்களும்; தானும் பறவைவனம் = ஆன்மாவாகிய பறவை வசிக்கும் காடு; சோடசமார்க்கம் = சரியையிற் சரியைமுதல் ஞானத்தில் ஞானமீறுயுள்ள பதினறுவழி; தசாங்கம்=தசகாரியம், அவை: தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆத்மரூபம், ஆத்மதரிசனம், ஆத்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோக மென்பனவாம்.

2665. மருவிப்பிரிவு=கூடிப்பிரிதல்; உருக்கும் = (தற்போதத்தை) கெடுக்கும்; கருவிற்கரந்து = சிவத்தில் மறைபட்டு; உள்ளம்=ஆன்மா; சோரும்=கெடும்; அழிவு=சாதல்; அகத்து=பூமியில்.

2666. தலைப்பட லாமெங்க டத்துவன் றன்னைப்
பலப்படு பாச மறுத்தறுத் திட்டு
நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கிற்
றலைப்பட லாகுந் தருமமுந் தானே. (கக)

2667. நினைக்கி னினைக்கு நினைப்பவர் தம்மைச்
சுனைக்குள் விளைமலர்ச் சோதியி னானைத்
தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனுங்
கனத்த மனத்தடைந் தாலுயர்ந் தாரே. (கஉ)

2668. தலைப்படுங் காலத்துத் தத்துவன் றன்னை
விலக்குறின் மேலை விதியென்றுங் கொள்க
வலைத்துல காய்நின்ற வாதிப் பிரானை
நினைப்புறு வார்பத்தி நேடிக்கொள் வாரே. (கங)

2669. நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி
நிகழ்வொழிந் தாரெம்பி ரானொடுங் கூடித்
திகழ்வொழிந் தார்தங்கள் சிந்தையி னுள்ளே
புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே. (கச)

2670. வந்த மரகத மாணிக்க ரேகைபோற்
சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்க
மிந்த விரேகையி லாடத்தின் மூலத்தே
சுந்தரச் சோதியுட் சோதியு மாமே. (கரு)

---

2666. பலப்படுபாசம்=பலவகைப்பட்டனவாயுள்ள ஆசைகள்; தருமமும்=அறத்தின் வடிவாயுள்ள சிவமும்.

2667. சுனைக்குள் = புருவமத்திய சத்தன்; விளைமலர்ச் சோதியினானை=மலர்ந்த தாமரையிலுள்ள சோதிசொரூபனை; தினைப்பிளந்தன்ன = பிளக்கப்பட்ட தினையின் பொடிபோன்ற; கனத்தமனத்து=(சத்துவம்) மிக்குள்ள மனத்தினால்.

2668. விலக்குறின்=(இடையூறுகளால்) அந்நிலைதவறநேரிட்டால்; மேலை=பூர்வம்; நேடி=தேடி.

2669. நகழ்வு=விலகுதல்; நிகழ்வு=வியவகார நிகழ்ச்சி; திகழ்வு=இடம்பாதிகள்; புகழ்வழி=புகழ்தற்குரிய முத்திநெறி.

2670. மரகதமாணிக்க ரேகைபோல் = மரகத (பச்சை) மணியிவிடப்பட்ட மாணிக்க வரையைப்போல (கரியமரகதத்துள் மாணிக்க ரேகையைப்போல, அஞ்ஞானாந்தகாரத் திடையில் ஒளிகாட்டி நிற்கும் குரு நெறி); சந்திடும்=சிதாகாச சொரூபத்தைத் தெரிவிக்கும்; இலாடம்=நெற்றி; மூலம்=நாசியினந்தமாகிய புருவ நடு.

2671. உண்ணும் வாயு முடனு முயிருமாய்க்
கண்ணுமா யோகக் கடவு ளிருப்பது
மண்ணு நீரனல் காலொடு வானுமாய்
விண்ணு மின்றி வெளியானோர் மேனியே. (கசு)

2672. பரசு பதியென்று பார்முழு தெல்லாம்
பரசிவ னாணை நடக்கும் பாதியாற்
பெரிய பதிசெய்து பின்னு மடியார்க்
குரிய பதியும்பா ராக்கிநின் றானே. (கஎ)

2673. அம்பர நாத னகலிட நீள்பொழி
றம்பர மல்லது தாமறி யோமென்ப
ரும்பருள் வானவர் தானவர் கண்டில
ரெம்பெரு மானருள் பெற்றிருந் தாரே. (கஅ)

2674. கோவணங் கும்படி கோவண மாகிப்பி
னாவணங் கும்படி நந்தி யருள்செய்தான்
றேவணங் கோமினிச் சத்தந் தெளிந்தனம்
போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமே. (கசு)

---

2671. யோகக்கடவுள்—யோகத்தா லுணரப்படுங் கடவுள்; விண்ணு மின்றி—ஆகாயமுமாகாது; வெளியானோர்மேனி—சிதாகாய மாய் விளங்குவோரது திருமேனி.

2672. பரசுபதி—புகழப்படும் பதி, அல்லது பரசு என்னும் ஆயுதத் தையுடையபதி; ஹாதியால்—(தத்துவ) ஞானத்தால்; பெரிய பதி—மோட்சவுலகம்; பாராக்கி—உலகைப் படைத்து.

2673. பரநாதன்—பரமசிவன்; நீள்பொழில் — பெரிய வுலகத்துள்; தம் பரமல்லது — தமது கடவுளாலல்லாமல்; உம்பருள் — சுவர்க்கத்துள்.

2674. கோ — ஆன்மா; கோவணம் — கடவுள்; நாவணங்கும்படி— நாவினல் துதித்து வணங்கும்படி, அல்லது அமுதுண்ணும் படியாக நாவளையுமாறு; தேவணங்கோம்—வேறு தேவரை வணங்கோம்; சத்தம்—நாதத்தை; வணங்கும் பொருளாய்— எல்லாரும் வணங்கும் சிவமாக.

௱-வது பிரணவசமாதி.

2675. தூலப் பிரணவஞ் சொரூபானந் தப்பேர்
பாலித்த சூக்கும மேலைச் சொரூபப்பெண்
ணாலித்த முத்திரை யாங்கதிற் காரண
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே. (க)

2676. ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி
யோமெனு மோங்காரத் துள்ளே யுருவரு
வோமெனு மோங்காரத் துள்ளே பலபேத
மோமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே. (உ)

2677 ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்க
ளோங்காரத் துள்ளே யுதித்த சராசர
மோங்காரா தீதத் துயிர்மூன்று முற்றன
வோங்கார சீவ பரசிவ ரூபமே. (௩)

2678. வருக்கஞ் சுகமாம் பிரமமு மாகும்
வருக்கஞ் சராசர மாகு முலகிற்
றருக்கிய வாதார மெல்லாந்தன் மேனி
சுருக்கமின் ஞானந் தொகுத்துணர்ந் தோரே. (௪)

2679. மலையு மனோபவ மருள்வன வாவன
நிலையிற் றரிசனந் தீப நெறியாந்
தலமுங் குலமுந் தவஞ்சித்த மாகு
நலமுஞ் சன்மார்க்கத் துபதேசந் தானே. (௫)

---

2675. சொரூபானந்தப்பேர் = சொரூபானந்தத்தை யுண்டாக்கும் சொல்லுருவமாம்; சொரூபப்பெண் = நாத சொரூபமான சத்தி; முத்திரை = சாம்பவி முதலிய முத்திரை (குறி); மேலை=மகாகாரணம்.

2676. ஒருமொழி = மகாவாக்கியம்; உருவரு = சகளம், நிட்களம்; பலபேதம்=சீவேச வேறுபாடு.

2677. ஓங்காராதீதத்து = மகாகாரணபிரணவம்; உயிர் மூன்று= சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்; சீவபரசிவ சொரூபமாம் = சீவரூபமும், பரரூபமும், சிவசொரூபமுமாம்.

2678. வருக்கம் = (பிரணவத்தின்) அம்சமாகிய அகர, உகர, மகர மெய்; சுகமாம் பரமாம்=சுகரூபியாகிய பிரமமாகும்; சுருக்கமில் ஞானம்=பரந்தஞானம்; தொகுத்து=சுருக்கமாய்.

2679. மலையும் = அலையும்; மனோபவம் = மனமும் பிராணனும்; மருள்வன = மயங்குவன; தீபநெறி = தீபம்போலு நெறி (அது சிவம் விளங்கும் முறை).

2680. சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட்
காடிய வீராறி னந்தமு மீரேழிற்
கூடிய வந்தமுங் கோதண்ட முங்கடந்
தேறியே ஞானஞே யாந்தத் திருக்கவே. (சூ)

---

## ச-வது ஒளி.

2681. ஒளியை யறியி லுருவு மொளியு
மொளியு முருவ மறியி லுருவா
மொளியி னுருவ மறியி லொளியே
யொளியு முருக வுடனிருந் தானே. (க)

2682. புகலெளி தாகும் புவனங்க ளெட்டு
மகலொளி தாயிரு ளாசற வீசும்
பகலொளி செய்தது மத்தா மரையிலே
யிகலொளி செய்தெம்பி ரானிருந் தானே. (உ)

2683. விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன்
றுளங்கொளி பெற்றன சோதி யருள
வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு
களங்கொளி செய்து கலந்துநின் றானே. (உ)

---

2680. ஈராறினந்தம் = துவாதசாந்தம்; ஈரேழில் = சப்தாதி பதினான்கு விஷயங்களில்; அந்தம்=சீவபோதம்; கோதண்டம்= பிரம ரந்திரம்; ஞேயாந்தம்=ஞேயத்தின் முடிவு.

2681. ஒளியை = ஒளியுருவமான ஆன்மாவை; உருவுமொளியும் = உடம்பும் மறையும்; உருவாம் = பிறப்பாம்; ஒளியுமுருக= சீவத்தன்மை கரைய.

2682. அகலொளிதாய்=விசாலமான ஒளிபரவி; பகலொளி செய்ததும் = சூரியன்போலொளியை உண்டாக்கியதும்; அத்தாமரையிலே=அவ்விதய தாமரையிலே; இகலொளி=சூரியனொடு மாறுகொண்ட பேரொளி.

2683. விரிகதிர்=சூரியன்; பெற்றன=அடைந்தன; சோதி யருள= சிவபெருமான் கொடுத்தலால்; வளங்கொளி பெற்றதே = (எவற்றிற்குந்) தரு மொளியினை (இயல்பாக) பெற்றுள்ள சிவபெருமானது; (வளங்கு=வழங்கென்பதன் விகாரம்); வேறு களங்கொளிசெய்து=தனக்குவேறாகிய களங்கமுள்ள ஒளிகளாகிய சூரிய சந்திராக்கினிகளைச் சிருட்டித்து; கலந்து நின்றான்=(அவற்றுக் கொளியுண்டாமாறு அவற்றொடு வேறற) கலந்திருந்தான்.

2684. இளங்கொளி யீசன் பிறப்பொன்று மில்லி
துளங்கொளி ஞாயிறுந் திங்களுங் கண்கள
வளங்கொளி யங்கியு மற்றைக்க ணெற்றி
விளங்கொளி செய்கின்ற மெய்காய மாமே. (௪)

2685. மேலொளி கீழதன் மேவிய மாருதம்
பாரொளி யங்கி பரந்தொளி யாகாச
நீரொளி செய்து நெடுவிசும் பொன்றினு
மேலொளி யைந்து மொருங்கொளி யாமே. (௫)

2686. மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி
துன்னிய வாறொளி தூய்மொழி நாடோறு
முன்னிய வாறொளி யொத்தது தானே. (௬)

2687. விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி யீசனைச் சொல்லுமெப் போது
முளங்கொளி யூனிடை நின்றுயிர்க் கின்ற
வளங்கொளி யெங்கு மருவிநின் றானே. (௭)

---

2684. இளங்கு = விளங்கும், (இலங்கு எனற்பாலது இளங்கு என விகாரப்பட்டுநின்றது, அலமரு - அளமரு என்றதுபோல); ஞாயிறு=சூரியன்; திங்கள்=சந்திரன்; அங்கி=தீ; விளங்கொளி = (தானே) விளங்குஞ் சித்து; செய்கின்ற = எவற்றிற்கு மிருப்பைச் செய்யும்; மெய்=சத்து.

2685. மேலொளி = ஆகாசவொளி; கீழதன் = அந்த ஆகாயத்திற் கீழாக; மாருதம்=காற்று; பாரொளி = பிருதிவியொளி; நீரொளி=அப்புவினொளி; மேலொளி யைந்தும் = மேன்மையான ஐந்து ஒளிகளும்; மாருதவொளி என்றுங் கொள்க.

2686. தூவொளி = பரிசுத்தமான வெள்ளொளி (சத்துவகுணவொளி); செவ்வொளி = செந்நிறவொளி (இராஜோகுணவொளி); ஞானம் = ஞானவொளி; பரத்தொளி = ஆன்மவொளி; ஆறொளி = சன்மார்க்கவொளி; மொழி = சொல்லொளி; ஆறொளி=ஆறு ஒளியும்; ஒத்தது=சமமாயிருந்தது.

2687. மின்னொளியாகிக் கரந்து=(மேகத்தினிடத்து மறைந்திருக்கின்ற) மின்னொளிபோல (ஆன்மாக்களினிடத்தில்) மறைந்திருந்து; உளங்கொளி = இதயத்தை யிடமாகக்கொண்டருளிய சிவபிரான்.

2688. விளங்கொளி யவ்வொளி யவ்விருண் மன்னுந்
துளங்கொளி யான்றொழு வார்க்கு மொளியா
னளங்கொளி யாரமு தாகநஞ் சாருங்
களங்கொளி யீசன் கருத்தது தானே. (அ)

2689. இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்
றுலங்கொளி போல்வது தூங்கருட் சத்தி
விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி
யுளங்கொளி யுள்ளே யொருங்குகின் றானே. (கூ)

2690. உளங்கொளி யாவதென் னுண்ணின்ற சீவன்
வளங்கொளி யாநின்ற மாமணிச் சோதி
விளங்கொளி யாய்மின்னி விண்ணி லொடுங்கி
வளங்கொளி யாயத்து ளாகிநின் றானே. (க0)

2691. விளங்கொளி யாய்நின்ற விகிர்த னிருந்த
துளங்கொளி பாசத்துட் டுங்கிருள் சேராக்
களங்கிரு ணட்டமே கண்ணுத லாட
விளங்கொளி யுன்மனத் தொன்றிநின் றானே. (கக)

---

2688. அவ்விருண்மன்னும்=உலக முடிவுகாலத்துள்ள அவ்விருளில் நிலைபெற்றிருக்கும்; தொழுவார்க்கு மொளியான்=வணங்கு மடியார்க்குமறைந்திராதவன்; அளங்கொளி=(அலங்கொளி) பிரகாசிக்கின்ற ஒளி; நஞ்சாரும்=விஷம் பொருந்திய; களங் கொளி=கண்டத்தை யுடையவன்.

2689. இலங்கியது = சுயமேபிரகாசித்தது; தூங்கு=நிலைபெற்று; உளங்கொளி=ஆன்மவொளி; உள்ளேயொருங்குகின்றான் = அம் மூன்றாய ஒளிக்குள்ளுங் கலந்திருக்கின்றான்.

2690. மாமணிச்சோதி=பரமசிவன்; விண்ணில் = சிதாகாயத்துள்; ஒளியாயத்துள்=ஒளிவர்க்கங்களுக்குள்.

2691. இருள்சேரா=இருளையடையாமல்; நட்டம்=நர்த்தனம்; உன் மனத்து = உன்மனகலையில்; ஒன்றி நின்றான்=கூடியிருந் தான்.

**2692.** போது கருங்குழற் போனவர் தூதிடை
யாதி பரத்தை யமரர் பிரானொடுஞ்
சோதியு மண்டத்தப் பாலுற்ற தூவொளி
நீதியி னல்லிரு ணீக்கிய வாறே. (கஉ)

**2693.** உண்டில்லை யென்னு முலகத் தியல்வது
பண்டில்லை யென்னும் பரங்கதி யுண்டுசொல்
கண்டில்லை மானிடர் கண்ட கருத்துறில்
விண்டில்லை யுள்ளே விளக்கொளி யாமே. (கங)

**2694.** சுடருற வோங்கிய வொள்ளொளி யாங்கே
படருறு காட்சிப் பகலவ னீச
னடருறு மாயையி னிருள் வீசி
யுடலுறு ஞானத் துறவிய னாமே. (கச)

**2695.** ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்ற
னளிபவ ளச்செம்பொன் னாதிப்பி ரானுங்
களிபவ ளத்தினின் காரிரு ணீங்கி
யொளிபவ ளத்தென்னை டசனின் றானே. (கரு)

---

2692. போது கருங்குழல் = போரும்பை யணிந்த கரிய கூந்தலை யுடைய பராசத்தியோடு (அருளோடு); போனவர்=வியாபித்திருப்பவர்; தூதிடையாதி = சந்து செய்விப்பதில் (சீவர்களைக் கூட்டுவிப்பதில்) முதல்வர்; பரத்து ஐ = மேலான கடவுள்; அமரர்பிரானொடும் = இந்திரனுக்கும் (உருபுமயக்கம்); சோதியும் = அக்கினிக்கும்; அண்டத்து = அண்டங்களுக்கும்; அப்பாலுற்ற = அப்பாற்பட்ட; நல்லிருள் = ஆணவவிருள்.

2693. உண்டில்லை யென்னுமுலகத்து=சத்து என்றும், அசத்தென்றுங் கூறப்படுமுலகத்தில்; பரங்கதி=மேலாகியகதி; கண்ட கருத்து = அறிந்த அறிவு; விண்டில்லை = உரைக்கப்படுவெதில்லை.

2694. பகலவனீசன்=ஞானசூரியனாகிய ஈசன்; மாயையினிருள்= மாயையினது மிக்க அந்தகாரத்தை; வீசி = விலக்கி; உடலுறு = (மாயாசம்பந்தமான அஞ்ஞானத்தொடு) மாறுபடுகின்ற; ஞானத்துறவியன் =ஞானத்தையுடைய சந்நியாசி.

2695. அளி=முதிர்ந்த; பவளச்செம்பொன் = பவளத்தையும் செம்பொன்னையும் போன்ற; களிபவளத்தினின் = ஆன்மாக்களுக்கு மகிழ்ச்சியை அருளுகின்ற சூரியனைப்போல.

2696. ஈசனின் ருனிமை யோர்கணின் ருர்நின்ற
தேசமொன் றின்றித் திகைத்திழைக் கின்றனர்
பாசமொன் ருகப் பழவினைப் பற்றற
வாசமொன் ருமலர் போன்றது தானே. (கசு)

2697. தானே யிருக்கு மவற்றிற் றலைவனுந்
தானே யிருக்கு மவனென நண்ணிடும்
வானு யிருக்குமிம் மாயிரு ஞாலத்துப்
பானு யிருக்கப் பரவலு மாமே. (கஎ)

---

ரு-வது தூலபஞ்சாக்கரம்.

2698. ஐம்ப தெழுத்தே யனைத்து வேதங்களு
மைம்ப தெழுத்தே யனைத்தாக மங்களு
மைம்ப தெழுத்தி னடைவை யறிந்தபி
னைம்ப தெழுத்தே யஞ்செழுத் தாமே. (க)

2699. அகார முதலாக வைம்பத் தொன்ருகி
யுகார முதலாக வோங்கி யுதித்து
மகார விறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகு நந்திதன் ஞமமே. (உ)

2700. அகராதி யீரெண் கலந்த பரையு
முகராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகராதி தான்சிவ வேதமே கோண
நகராதி தான்மூல மந்திர நண்ணுமே. (ந)

---

2696. பாசம் = பாசமானது; ஒன்ருக = ஏகமாகவும்; பழவினை= பூர்வகன்மத்தின்; பற்றற = பற்று ஒழியவும்; வாசமொன்ரு மலர்=அரும்பு.

2697. இருக்கும் = வேதங்களும்; அவற்றின் = அவ்வேதங்களின்; வானுய்=வியாபகமாய்; பானுயிருக்க=பரந்தவனுயிருக்க.

2698. ஐம்பதெழுத்து = அகராதி க்ஷகாராந்தமாயுள்ள ஐம்பது எழுத்துக்கள்; அடைவை=முறைமையினை.

2699. நகார முதலாகு நந்திதன்ஞமம் = நகரத்தை முதலினுடைய தாகும் சிவபிரானது பெயர் (அது நமசிவய என்பது பஞ் சாக்கரம்).

2700. அகராதி யீரெண் = அகரமுதலிய பதினறெழுத்துக்களில்; உகராதி = உகர அகர மகரங்கள்; சிகராதி = சிவாய; கோணம்=பிராணன், நகராதி=நம; மூலமந்திர நண்ணும்= இவையிரண்டும் கூடி நமசிவாய என்னும் மூலமந்திரமாம்.

2701. வாயொடு கண்ட மிதய மருவுந்தி
யாய விலிங்க மவற்றின்மே லேயவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்ல
லாயதீ ருமைந்தோ டாமெழுத் தஞ்சுமே. (௪)

2702. கிரணங்க ளேழுங் கிளர்ந்தெரி பொங்கி
கரணங்கள் விட்டுயிர் தானெழும் போது
மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போது
மரணங்கை கூட்டு வதஞ்செழுத் தாமே. (௫)

2703. ஞாயிறு திங்க ளவின்றெழு காலத்தி
லாயுறு மந்திர மாரு மறிகிலர்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுற வோதி வழுத்தலு மாமே. (௬)

2704. தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
வுள்ளமு தூற வொருகா லுரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. (எ)

---

2701. இலிங்கம்=சுவாதிஷ்டானம்; மேலே=அப்பால் (மூலாதாரத்தில்); அவ்வாய் = அகரவடிவாய்; துண்டம்=மூக்கு (நுனி); மத்தகம்=கபாலம்; இது ஒடுக்கமுறைபற்றிக் கூறியது; தோற்றன்முறையாக வேண்டின், மூலம், இலிங்கம், உந்தி, இதயம், கண்டம்; துண்டம் எனக்கொண்டு முறையே ஆதாரங்கொள்க. நாதவடிவான அக்கரம் மூலத்திற்றோன்றிச் சென்று கபாலத்திற்ருக்கி வர்ணசொரூபமாய் வெளிப்படுமென்பது தோன்ற, மத்தகஞ் செல்லலாயதீருமென்றருளினர்; ஐந்தொடு = வாய், கண்டம், இதயம், உந்தி, இலிங்கமென்னு மைந்துடன்.

2702. கிரணங்களேழு = அக்கினிக்கு நாக்கு எனப்படுவவான கதிர்கள்; கரணங்கள் = கருவிகளாகிய தத்துவங்கள்; அரணங்கைகூட்டும்=காவலாகிய இடத்தைச்சேர்ப்பிக்கும் (சிவபிரானை யடையச் செய்யும்).

2703. ஞாயிறு=பிங்கலை; திங்கள்=இடகலை; ஆயுறு=ஆராயத்தக்க (தியானித்தற்குரிய); சேயுறுகண்ணி திருவெழுத்து=அழகிய அல்லது செவ்வரி பரந்த கண்களையுடைய நாதசத்தியின் விகாரப்பாட்டாலாகிய அக்கரம்.

2704. உள்ளமுதூற=இதயத்திலின்பம்பெருக; வெள்ளமுதூறல்=சந்திரனிடத் தூறிவரும் வெள்ளமாகிய அமுதம்; துள்ளிய நீர்=துளிகளாக மேலெழுந்தநீர்.

2705. குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வருவழி மாள மறுக்க வல்லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. (அ)

2706. வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதுங்
குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டுங்
குறிப்பறி வான்றவங் கோனுரு வாமே. (கூ)

2707. நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று
துஞ்சும் பொழுதுன் றுணைத்தாள் சரணென்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
யஞ்சி லிறைவ னருள்பெற லாமே. (க0)

2708. பிரான்வைத்த வைந்தின் பெருமை யுணரா
திராமாற்றஞ் செய்வார்கொ லேழை மனிதர்
பராமுற்றுங் கீழொடு பல்வகை யாலு
மராமுற்றுஞ் சூழ்ந்த வகலிடந் தானே. (கக)

---

2705. குணங்கள்=சாதனங்கள்; கணக்கை = வகையை; மறுக்க= தடுக்க; அருள்வழி=ஞானமார்க்கம் (அல்லது முத்திநெறி.)

2706. வெறிக்க=மயங்க; உன்னில்=தியானிக்கில்; தவம் = தவத் தினால்.

2707. வடவரை=கைலையங்கிரி அல்லது, புருவமத்தியின் கண்ணதான மேரு; அஞ்சில்=அஞ்சுதலில்லாத, அல்லது பஞ்சாக்கரங்களாகிய ஐந்து கிருகங்கள்.

2708. ஐந்தின் = பஞ்சாக்கரத்தின்; இராமாற்றம் = அஞ்ஞானத்தைக் கெடுத்தல்; பரா=பரவு; அராமுற்றுஞ் சூழ்ந்த=ஆதிசேடன் முழுமையுஞ் சூழ்ந்து சுமக்கின்ற.

சு-வது சூக்குமபஞ்சாக்கரம்.

2709. எளிய வாதுசெய் வாரெங்க ளீசனை
யொளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவெனுங்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே. (க)

2710. சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
யவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்
சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர
வவஞ்சேர்த்த பாச மணுககி லாவே. (உ)

2711. சிவனரு ளாய சிவன்றிரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம·தகன்று பரசிவ னாமே. (ங)

---

2709. வாது = சண்டை; தெளிய = துணிவாக; பொன்னாக்குவன் = பொன்போற் சிறந்ததாகச் செய்வன்; கூட்டை = உடம்பை.

2710. சிவன்சத்தி சீவன்மலமாயை = சிவன் சத்தி சீவன் மலம் மாயை சொரூபமாகிய பஞ்சாக்கரம் (சிகாரம் சிவன், வகாரம் சத்தி, யகாரம் சீவன், நகாரம் மலம் மகாரம் மாயை என்று கொள்க, நகாரத்தை மாயையாகவும் மகாரத்தை மலமாகவும் கூறுவார், இம்முறைமையில் சிவன்சத்திகட்கும் மலமாயை கட்கு மிடையில் ஆன்மா நிற்கும்); பாசமலமைந்தகல = ஆன்மாமலமாயைகளாகியபஞ்ச பாசங்களோடு(நகாரமகாரங்களோடு) கலவாமல் விலக; சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர=சிவசத்திகளோடு (சிகாரவகா[illegible]ங்களில்) ஆன்மா கூடினால், இம்முறை உபதேசக்கிரமத்தா லுணரத்தக்கது.

2711. சிவனருளாய=சிவசத்தியாகிய; சிவன்றிருநாமம் = பஞ்சாக்கரம்; சிவனருளான்மாத் திரோத மலமாயை=சிவன்,சத்தி, ஆன்மா, திரோதாயி, மலமாயை (சிவாயநம, என்னும் ஐந்தெழுத்துக்களும் சிவன், சத்தி, ஆன்மா, திரோதாயி, மலமும் மாயையுமாம்; (நகரம் திரோதாயி, மகாரம் ஆணவமும் மாயையுமாகிய மலங்களாம்); சிவன் முதலாக=சிவனை முதலாகக்கொண்டு; நிரோதம் = ஒழித்தல் (மலமாயைகளை யொழித்தல்.

2712. ஓதிய நம்மல மெல்லா மொழித்திட்டவ்
வாதி களைவிட் டிறையருட் சத்தியாற்
றீதில் சிவஞான யோகமே சித்திக்கு
மோதுஞ் சிவாய மலமற்ற வுண்மையே. (௪)

2713. நமாதி நனாதி திரோதாயி யாகித்
தமாதிய தாய்நிற்கத் தானந்தத் துற்றுச்
சமாதித் துரியந் தமதாக மாகவே
நமாதி சமாதி சிவவாத லெண்ணவே. (௫)

2714. அருட்ரு மாயமு மத்தனுந் தம்மி
லொருவனை யீன்றவ ருள்ளூறு மாயை
திரிமல நீங்கச் சிவாயவென் றோது
மருவினை தீர்ப்பது மவ்வெழுத் தாமே. (௬)

2715. சிவசிவ வென்றே தெளிகில ரூமர்
சிவசிவ் வாயுவுந் தேர்ந்துள் ளடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகுந் திருவரு ளாமே. (௭)

---

2712. ஓதிய நம்மல மெல்லாம்=சொல்லப்பட்ட நகார மகாரமாகிய மலங்களை யெல்லாம்; அவ்வாதிகளை = அந்த நகார மகாரங்களை; சிவாய = சிவாய என்று ஓதுவது; மலமற்ற வுண்மையே=மலமொழிந்திருக்கும் நிசசொரூபமாம்.

2713 நமாதி=நகராதி; நனாதி=நனவாதிகளை (செய்யும்); தமாதிய தாய்=அவ்வக்கரங்களுக்கு ஆதியாய்; தான்=ஆன்மா; சமாதித் துரியம்=அசமாதியாகிய துரியாவத்தை; தமதாகமாக= தம்முடம்பாக; சிவவாதல்=சிகாரமுதலாதலே.

2714. அருடருமாயமு மத்தனும் = அருளாகிய தோழியும் சிவனும்; தம்மில்=தம்முள்(கூடி); ஒருவனை=சிவபிரானை; உள்ளூறு மாயை (மாயை உள்ளூறும்) = மாயையானது ஆன்மாவைப் பற்றியிருக்கும்; அவ்வெழுத்தாமே=அப்பஞ்சாக்கரமேயாம்.

2715. சிவசிவ=சிவசிவ (என்று விடா துச்சரித்தலால்); வாயுவும்= (மனமேயன்றி) பிராணவாயுவும்.

2716. சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்னச் சிவகதி தானே. (அ)

2717. நமவென்னு நாமத்தை நாவி லொடுக்கிச்
சிவவென்னு நாமத்தைச் சிந்தையுள் ளேற்றப்
பவமது தீரும் பரிசும தற்று
லவமதி தீரு மறும்பிறப் பன்றே. (கூ)

எ-வது அதிசூக்கும பஞ்சாக்கரம்.

2718. சிவாய நமவெனச் சித்த மொருக்கி
யவாய மறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
யவாயங் கெடநிற்க வானந்த மாமே. (க)

2719. செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புற
மஞ்சண வும்முறை யேறி வழிக்கொண்டு
துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை
நெஞ்சென நீங்கா நிலைபெற லாமே. (உ)

---

2717. நாவிலொடுக்கி = நாவினுள் மட்டும் உச்சரித்து; சிவநாமத்தைச் சிந்தையு ளேற்றி = சிகார வகாரங்களை மனதிலமைத்து (இருந்தால்); பவமது தீரும் = பாவமொழியும்; பரிசுமது = தன்மையுமதுவாம்; அற்றால் = அத்தன்மையினால்; அவமதி=அஞ்ஞானம்.

2718. அவாயம்=அபாயம்.

2719. அஞ்சணவுமுறை = ஐயறிவு மொன்றுபடுமாறு; வழிக்கொண்டு=போய்; துஞ்சுமவன்=பிரபஞ்சத்தை மறந்திருக்கும் அவன்; சொன்னகாலத்து = குருவாற் குறிப்பிட்டுக் கூறியகாலத்தில்; இறைவனை=குருவோடு (உருபுமயக்கம்); நெஞ்சென=மனமென்று சொல்லும்படி.

**2720.** அங்கமு மாகம வேதம தோதினு
மெங்கள் பிரானெழுத் தொன்றி லிருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தா
லங்கரை சேர்ந்த வருங்கல மாமே. (௩)

**2721.** பழுத்தன வைந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் வினையறி வாரில்லை
யெழுத்தறி வோமென் றுரைப்பர்க ளேத
ரெழுத்தை யழுத்து மெழுத் தறியாரே. (௪)

---

### ௮-வது திருக்கூத்துத் தரிசனம்.

**2722.** எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி
யெங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்ட
மெங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே. (௧)

**2723.** சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பத மாமந்தச் சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
யற்புதக் கூத்தனை யாரறி வாரே. (௨)

---

2720. அங்கமும் = வேதாங்கங்களும்; எழுத்தொன்றில்=அதிசூக்கும பஞ்சாக்கரத்தில்; சங்கைகெட்டு=சந்தேகமொழிந்து; அங்கரை=அழகியகரை; அருங்கலமாம்=அரியமரக்கலம் போல்வதாம் (இச்சரீரம்).

2721. ஐந்தும்=ஐந்து அக்கரங்களும்; விழித்துறங்கும்=அறிதுயில் செய்யும்; ஏதர்=குற்றமுள்ளவர் (மூடர்); எழுத்தையழுத்தும்=பிரமலிபியைக்கெடுக்கும்; எழுத்து=பஞ்சாக்கரம்.

2722. சிதம்பரம் = ஞானாகாசம்; திருநட்டம் = அழகிய நடனம், பிரபஞ்சமெல்லாம் சிவசத்திகளின் சொரூபமாய சிவபிரான் திருக்கூத்தாமென்பதுணர்த்திற்று இம்மந்திரம்.

2723. சொற்பதம் = சொற்பொருள்; சிவானந்தக்கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக்கூத்து, அற்புதக்கூத்து எனச் சிவநடனம் ஐவகைப் படுமென்பதுணர்த்திற்று இம்மந்திரம்.

கூ-வது சிவானந்தக்கூத்து.

2724. தானந்த மில்லாச் சதானந்த சத்திமேற்
றேனுந்து மானந்த மாநடங் கண்டீர்
ஞானங் கடந்து நடஞ்செய்யு நம்பிக்கங்
கானந்தங் கூத்தாட வாடரங் கானதே. (௩)

2725. ஆனந்த மாடரங் கானந்தம் பாடல்க
ளானந்தம் பல்லிய மானந்த வாச்சிய
மானந்த மாக வகில சராசர
மானந்த மானந்தக் கூத்துகந் தானுக்கே. (௪)

2726. ஒளியாம் பரமு முளதாம் பரமு
மளியார் சிவகாமி யாகுஞ் சமயக்
களியார் பரமுங் கருத்துறை யந்தத்
தெளிவாஞ் சிவானந்த நட்டத்தின் சித்தியே. (௫)

2727. ஆன நடமைந் தகள சகளத்த
ரான நடமாடி யைங்கரு மத்தாக
வான தொழிலரு ளாலைந் தொழிற்செய்தே
தேன்மொழி பாகன் றிருநட மாடுமே. (௬)

---

2724. தேனுந்தும்=இன்பம் பெருகும்; ஞானம=திரிபுடிஞானம்; நம்பிக்கு = சிவபிரானுக்கு; ஆனந்தம் = ஆநந்தசத்தி; ஆடரங்கு = நர்த்தனசபை; சிவத்தினது ஆனந்தசத்தியே ஆனந்தக்கூத்துக்கு நடனசபையாமென்பது.

2725. பல்லியம் = பலவகை வாத்தியம்; வாச்சியம்=அபிநயம்; ஆனந்தசத்தியொடு கூடியிருத்தலால் சிவத்துக்குச் சராசர வடிவ வெல்லாப்பிரபஞ்சமும் ஆனந்தமேயாமென்பது இம்மந்திரக் கருத்து.

2726. ஒளியாம்பரமும் = ஞானமாகிய பரமும்; உளதாம்பரமும் = சத்தாகிய பரமும்; அளியார்=கருணைநிறைந்த; சிவகாமி= சிவானந்த சத்தி; களியார் பரமும் = ஆநந்தமான பரமும்; நட்டத்தின்சித்தி=சிவானந்தக்கூத்தின் பயனும்.

2727. அகளம்=உருவமில்லாமை; சகளத்தர் = உருவமுடையவர்; ஐங்கருமத்தாக=சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்பன செய்வதாக; அருளால்=சத்தியால்.

2728. பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட
மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட
தாகாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத்
தேகாந்த மாம்பிர மாண்டத்த வென்பவே. (௭)

2729. வேதங்க ளாட மிருவா கமமாடக்
கீதங்க ளாடக் கிளரண்ட மேழாடப்
பூதங்க ளாடப் புவன முழுதாட
நாதங்கொண் டாடினன் ஞானானந்தக் கூத்தே. (௮)

2730. பூதங்க ளைந்திற் பொறியிற் புலனைந்தில்
வேதங்க ளைந்தின் மிகுமாக மந்தன்னி
லோதுங் கலைகால மூழி யுடனண்டப்
போதங்க ளைந்திற் புணர்ந்தாடுஞ் சித்தனே. (௯)

2731. தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்
மூவர்க ளாதியின் முப்பத்து மூவர்க
டாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையு மாடிடு மெம்மிறை யாடவே. (௧௦)

---

2728. பூதாண்டம் = பஞ்சபூதாண்டங்கள்; பேதாண்டம் = அவற்றின் பேதமான அண்டங்கள்; போகாண்டம் = போகங்களை அனுபவித்தற்குரிய அண்டங்கள்; யோகாண்டம் = யோகிகட்குரிய அண்டங்கள்; மூதாண்டம் = பழைமையான அண்டங்கள்; முத்தாண்டம் = விடுபடுவதற்கே துவான அண்டங்கள்; மோகாண்டம் = மோகத்தை விளைவிக்குமண்டங்கள்; தேகாண்டம் = தேகமாகிய அண்டங்கள்; தாகாண்டம் = விருப்பத்துக்குரிய அண்டங்கள்; ஐங்கருமத்தாண்டவம் = பஞ்சகிருத்திய நடனம்; தற்பரத்து = அந்தச் சிவபெருமானிடத்து; ஏகாந்தமாம் பிரமாண்டத்த = தனியா யிருத்தற்குரிய பிரமாண்டத்தின் கண்ணளவாம்.

2730. பொறி = இந்திரியம்; புலன் = விஷயம்; வேதங்களைந்து = இருக்கு முதலிய வேதம் நான்கும் பாரதமொன்றும்; கலை = சாஸ்திரம்; போதங்கள் = சப்தாதி ஞானங்கள்.

2731. சுரர்நரர் = சருமதேவர்; தாபதர் = தபசிகள்; சத்தர் = சப்த (எழு) ரிஷிகள்.

## ௧௦-வது சுந்தரக்கூத்து.

2732. அண்டங்க ளேழினுக் கப்புறத் தப்பா
னுண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற்
கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே. (௧)

2733. கொடுகொட்டி பாண்டங் கோடுசங் கார
நடமெட்டோ டைந்தாறு நாடியு ளுடுங்
திடமுற் றெழுந்தேவ தாருவாந் தில்லை
வடமுற்ற மாவன மன்னவன் றானே. (௨)

2734. பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி யீசன்
பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரனட மாடுமே. (௩)

---

2732. சதாசிவத்துச்சிமேல் = சதாசிவ தத்துவத்துச்சியில்; கூத்துகந்தான்=நர்த்தனஞ் செய்தருள விரும்பினன்.

2733. கொடுகொட்டி (கொடுங்கொட்டி) = எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுங்கூத்து; பாண்டம் (பாண்டரங்கம்)= முப்புரங்களை யெரித்து அவற்றினீற்றினை அணிந்து நின்றாடிய கூத்து; கோடு (காபாலம்) = பிரமனது சிரசைக் கரத்திலேந்தி யாடிய கூத்து; சங்காரம்=சங்காரகாலத்துச் செய்யு நடனம்; சங்கார நட மெட்டோடு = பஞ்சகிருத்திய தாண்டவத்துடன், முனிதாண்டவம் அனவரததாண்டவம் ஆனந்ததாண்டவ மென்னு மெட்டோடு, (சங்காரம் ஏனைக் கிருத்தியங்கட்கு முபலக்கணமாம்); ஐந்து = சிவானந்தக் கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என்னும் ஐந்து; ஆறு=பஞ்ச கிருத்திய நடனமும், பிரளயகால ஆனந்த நடனமுமாகிய ஆறும்; நாடி=விரும்பி; உள்=சித்தத்தில்; தேவதாருவாந் தில்லை= தேவதாருவனம் போலுந்தில்லை, கற்பக விருட்சம்போலுந் தில்லைவனம்; வடமுற்றமாவனம்= திரு ஆலங்காடு.

2735. அங்குச மென்ன வெழுமார்க்கம் போதத்திற்
றங்கிய தொந்தி யெனுந்தாள வொத்தினிற்
சங்கரன் மூலநா டிக்குட் டரித்தாடற்
பொங்கிய காலம் புகும்போக லில்லையே. (சு)

2736. ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக்
கானத்தி யாடிக் கருத்திற் றடித்தாடி
மூனச் சுழுனையு ளாடி முடிவில்லா
ஞானத்து ளாடி முடித்தானென் னாதனே. (ரு)

2737. சத்திக ளைந்துஞ் சிவபேதந் தானைந்து
முத்திக ளெட்டு முதலாம் பதமெட்டுஞ்
சித்திக ளெட்டுஞ் சிவபதந் தானெட்டுஞ்
சுத்திக ளெட்டீசன் றென்னட மாடுமே. (சா)

2738. மேகங்க ளேழும் விரிகடற் றீவேழுந்
தேகங்க ளேழுஞ் சிவபாற் கரனேழுந்
தாகங்க ளேழுஞ் சாந்திக ளேழு
மாகின்ற நந்தி யடிக்கீ ழடங்குமே. (எ)

---

2735. அங்குசமென்ன வெழுமார்க்கம் = (அந்நியமதங்களையடக்குவதில்) அங்குசம்போன்றுள்ள சன்மார்க்கமாகிய சைவம்; போதத்தில்=ஞானத்தில்; தொந்தி = தாளவொற்றின்குறி; மூலநாடி = சுழுமுனைநாடி; பொங்கியகாலம் = நெடுங்காலம்; போகல்=அழிதல்.

2736. ஆனத்தி=பசுக்களைக்கருதி அல்லது,ஒருகூத்து; கானத்தி=(மயான) காட்டை விரும்பி; கருத்து=சித்தம்; மூன(ந)ச் சுழுனை=மூன்று நாடிகள் கூடுமிடத்துள்ள நல்ல சுழுமுனை.

2737. சத்திகளைந்தும்=ஆதிசத்தி, பராசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி; சிவபேதந்தானைந்தும்=பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசன், சதாசிவன்; முத்திகளெட்டும்=பிருதிவி முதலிய வெட்டிலும் பற்றொழிதலும்; பதமெட்டும் = சரூப அரூபபேதமாயுள்ள சாலோகாதி யெட்டும்; சிவபதந் தானெட்டு=சிவபிரானுக்கு வடிவங்களாயுள்ள பூதமைந்தும் சந்திரன் சூரியன் ஆன்மாக்கள்; சுத்திகள்=பூதாதிசுத்திகள்.

2738. தேகங்களேழு = எழுவகைத் தோற்றங்கள்; சிவபாற்கரனேழும்=சிவ சூரியனென்னும் ஞானேந்திரியங்களைந்தும், மனமும், புத்தியும்; தாகங்களேழும்=எழு நாவினையுடைய அக்கினி; சாந்திகளேழும்=ஞானேந்திரிய வடக்கம், மனம் புத்தி யடக்கம்.

## ௧௧-வது பொற்பதிக்கூத்து.

2739. தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியி
லற்புத மானதோ ரஞ்சு முகத்திலு
மொப்பில் பேரின்பத் துபய வுபயத்துட்
டற்பர னின்று தனிநடஞ் செய்யுமே. (௧)

2740. அடியா ரரனடி யானந்தங் கண்டோ
ரடியா ரானவ ரத்தரு ளுற்றோ
ரடியார் பவரே யடியவ ராமா
லடியார் பொன்னம்பலத் தாடல்கண் டாரே. (௨)

2741. அடங்காத வென்னை யடக்கி யடிவைத்
திடங்காண் பரானந்தத் தேயென்னை யிட்டு
நடந்தான் செயுநந்தி நன்ஞானக் கூத்தன்
படந்தான் செய்துள்ளுட் படிந்திருந் தனனே. (௩)

2742. உம்பரிற் கூத்தனை யுத்தமக் கூத்தனைச்
செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
யின்புற நாடியென் னன்பில்வைத் தேனே. (௪)

2743. மாணிக்கக் கூத்தனை வண்டில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
யாணிப்பொற் கூத்தனை யாருரைப் பாரே. (௫)

2744. விம்மும் வெருவும் விழூமெழு மெய்சோருந்
தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடுஞ்
செம்மை சிறந்த திருவம் பலக்கூத்து
ளம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே.(௬)

---

2739. உபயவுபயத்துள் = உருவத்தும், அருவத்தும், உருவருவத்தும்; தற்பரன் = அந்தப் பரன்.

2740. அத்தருள் = பரமசிவனிடத்து; அடி ஆர்பவர் = அடியிணை அடைந்தவர்கள்.

2741. அடங்காத = அடக்கத்தொடு நில்லாத; இடங்காண் பரானந்தத்து = அகண்டமான சிவாநந்தத்தில்; படந்தான் செய்து = சித்திரம்போல் அசைவறச்செய்து.

2745. தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்
வாட்டறுங் கால்புந்தி யாகி வரும்புல
ஞேட்டறு மாசை யறமுளத் தானந்த
நாட்ட முறுக்குறு நாடகங் காணவே. (எ)

2746. காளியோ டாடி கனகா சலத்தாடி
கூளியோ டாடி குவலயத் தேயாடி
நீடிய நீர்தீகா னீள்வா னிடையாடி
நாளுற வம்பலத் தேயாடு நாதனே. (அ)

2747. மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூருமிவ் வானி னிலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலயத்தூ
டேறுஞ் சுழுனை யிவைசிவ பூமியே. (கூ)

2748. பூதல மேருப் புறத்தான தெக்கண
மோது மிடைபிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதியோன் பயிறிரு வம்பல
மேதமில் பூதாண்டத் தெல்லையி னீறே. (கo)

---

2745. தேட்டறும் = ஆசைகெடும்; பிண்டத்துள் வாட்டறும்= சரீரத்திலுண்டாம் தளர்ச்சி நீங்கும்; கால் = பிராணவாயு; புந்தியாகி=மனத்தின் வசப்பட்டு; புலனேட்டறும்=புலன் விஷயத்தி லோடுதலொழியும்; முறுக்குறும்=முதிரும்.

2746. கனகாசலம்=மேருகிரி; கூளி = பைசாசங்கள்; நாளுற= வெகுகாலமாக.

7247. மேரு நடு நாடி=மேருவாகிய சுழுமுனைநாடி; இவ்வானில்= இந்த ஆகாயத்தில்; திலைவனம்=தில்லைவனமாகிய சிதம்பரம்; மலயம்=பொதியமலை.

2748. மேருப்புறத்தானதெக்கணம் (மேருதெக்கணம்புறத்தான)= இமயமலையும் தக்கணத்துள்ள (இலங்கையும்) பக்கங்களிலுள்ள; சுழுமுனையாம் பாதிமதியோன் பயிறிருவம்பலம்= அர்த்த சந்திரனையணிந்த சிவபிரானெழுந்தருளிய தில்லை சுழுமுனையாம்,(சரீரத்தினுள்ளே சுழுமுனைநாடியும் அதனிரு பக்கத்திலும் இடை பிங்கலைகளு மிருப்பதுபோல, பூமியாகிய புருடனுக்கு இமயமலையும் இலங்கையும் இடை பிங்கலைகளாகச் சிதம்பரம் சுழுமுனையாக இருக்கின்றன வென்பது கூறிற்று இம்மந்திரம்); பூதாண்டம்=பூத அண்டம் (ஸ்தூல அண்டமாகிய பூமி).

கஉ-வது பொற்றில்லைக் கூத்து.

2749. அண்டங்க ளோரேழு மம்பொற் பதியாகப்
பண்டையா காசங்க ளைந்தும் பதியாகத்
தெண்டினிற் சத்தி திருவம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. (க)

2750. குரானந்த ரேகையாய்க் கூர்ந்த குணமாஞ்
சிரானந்தம் பூரித்துத் தென்றிசை சேர்ந்து
புரானந்த போகனைப் பூவையுந் தானு
நிரானந்த மாகி நிருத்தஞ்செய் தானே. (உ)

2751. ஆதி பரனாட வங்கைக் கனலாட
வோதுஞ் சடையாட வுன்மத்த முற்றாடப்
பாதி மதியாடப் பாரண்ட மீதாட
நாதமோ டாடினா னுதாந்த நட்டமே. (௩)

2652. கும்பிட வம்பலத் தாடிய கோனட
மம்பர நாடு மகிலாண்ட நட்டமாஞ்
செம்பொரு ளாகுஞ் சிவலோகஞ் சேர்ந்துற்ற
லும்பர மோனஞா னந்தத்தி லுண்மையே. (௪)

2753. மேதினி மூவேழ் மிருமண்ட மோரேழு
சாதக மாகுஞ் சமயங்க ணூற்றெட்டு
நாதமொ டந்த நடானந்த நாற்பதப்
பாதியோ டாடிப் பரனிரு பாதமே. (ரு)

---

2749. ஆகாசங்களைந்து=பரசிவனுடைய நர்த்தனத்துக்குரிய ஐந்து சபைகளாகிய ஆகாசங்கள் (குணரகிதாகாசம், குணசகிதாகாசம், மகாகாசம், தத்வாகாசம், சூரியாகாச மென்பன); தெண்டினில்=சுழுமுனையில் (வசிக்கும்).

2750. குரானந்தரேகையாய்=குருவினலருளப்பட்ட ஆனந்தமார்க்கமாய்; சிரானந்தம் = மேன்மையான வானந்தம்; புரானந்த போகனை = புண்டரீகபுரத்தில் ஆனந்தமயனை; பூவை = பூவைப்புட்போலும் உமாதேவியார்; நிரானந்தம் = நித்தியானந்தம்.

2751. பாரண்டம் = பூமியாகிய அண்டம்; நாதமோடு=நாதசத்தியோடு.

2752. கும்பிட = (யாவரும்) வணங்கும்படி; அம்பரநாடும் = தேவலோகமும் வியந்துகருதும் ; சிவலோகம் = பொற்றில்லை; ஞானந்தத்திலுண்மையே=ஞானத்தின் முடிவின் கண்ணதான சத்தாதலாம்.

2753. சமயங்கணூற்றெட்டு = மதங்கள் (அதிகார பேதத்தால்) நூற்றெட்டு வகையனவாம்; நாற்பதம்=நாதம், நாதத்தினந்தம், நடனம், நடனத்தினந்தமென்னும நாற்பகுதி(உடன்); பாதி=பாதித்திருமேனியின்கண்ணுள்ள தேவி.

2754. இடைபிங் கலையிம வானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை
கடவுந் திலைவனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே. (சா)

2755. ஈறான கன்னி குமரியே காவிரி
வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள்
பேறான வேதா கமமே பிறத்தலான்
மாறாத தென்றிசை வையகஞ் சுத்தமே. (எ)

2756. நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி
வேதத்தி லாடித் தழலந்த மீதாடி
போதத்தி லாடிப் புவன முழுதாடுந்
தீதற்ற தேவாதி தேவர்பி ரானே. (அ)

2757. தேவரோ டாடி திருவம்பல லத்தாடி
மூவரோ டாடி முனிசனத் தோடாடி
பாவினு ளாடி பராசத் தியிலாடி
கோவினு ளாடிடுங் கூத்தப்பி ரானே. (கூ)

2758. ஆறு முகத்தி லதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபர னென்றுந்
தேறினர் தெற்குத் திருவம்ப லத்துளே
வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானே. (கo)

---

2754. படர்வொன்றி=வியாபித்தவன்.

2755. ஈறான=தக்கணத்தினிறுதியிலுள்ள; கன்னிகுமரி காவிரி= கன்னியாகுமரி காவிரி; வேறாம் = இவற்றிற்கு வேறாய; நவதீர்த்தம்=ஒன்பது தீர்த்தங்கள், அவையாவன:—கங்கை, யமுனை,சரஸ்வதி,நர்மதை, சிந்து, துங்கபத்திரை,கிருஷ்ணை, கோதாவரி, தாமிரபர்ணி; வெற்பு ஏழு=கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், எமகூடம், நீலகிரி என்பன; தென்றிசை வையகம்=தெற்கிலுள்ள பூமி.

2756. நாற்பதத்து = சரியையாதி நான்கு பாதத்துள்; தழலந்த மீது = யாகாக்கினியின் முடியில்; போதத்தில் = சத்துவ ஞானத்துள்.

2757. பாவினுள் = செய்யுளுள்; முனிசனம் = முனிவர்கூட்டம்; கோவினுள்=சீவனுள்.

2758. ஆறுமுகம்=சத்தியோ ஜாதாதி முகமைந்தும்,அதோமுகமாய முகமும் அல்லது, சாந்தமானமுகமும்; தேறினர் = (பெரியர்) தெளிந்துள்ளார், அல்லது தெளிவினையுடைய பெரியோர் (வசிக்கும்).

2759. அம்பல மாடரங் காக வதன்மீதே
எம்பர ஞூடு மிருதாளி னீரொளி
யும்பர மாமைந்து நாதத்து ரேகையுட்
டம்பத மாய்நின்று தான்வந் தருளுமே. (கக)

2760. ஆடிய காலு மதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமுங்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. (கஉ)

2761. இருதயந் தன்னி லெழுந்த பிராணன்
கரசர ணுதி கலக்கும் படியே
வரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனு மெங்கணுங் கூத்துகந் தானே. (கங)

---

கரு-வது அற்புதக்கூத்து.

2762. குருவுரு வன்றிக் குனிக்கு முருவ
மருவுரு வாவது மந்த வருவே
திரிபுரை யாகித் திகழ்தரு வாளு
முருவரு வாகு முமையவ டானே. (க)

2763. திருவழி யாவது சிற்றம்ப லத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கு முருவே
யுருவரு வாவது முற்றுணர்ந் தோர்க்கு
வருள்வழி யாவது மவ்வழி தானே. (உ)

2764. நீருஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குல
மோடு முயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் ஞூதாந்த நம்பெரு மானுகந்
தாடு மிடந்திரு வம்பலந் தானே. (ங)

---

2759. ஐந்துநாதம்=ஐவகை வாக்குக்களாயுள்ள நாதங்கள்.

2760. அற்றவாறு=ஜனனமரணங் கடந்தது.

2761. அரதனமன்றினில்=இரத்தினசபையில் (இது திருவாலங்காடு); மாணிக்கக் கூத்தன்=மேன்மையுள்ள கூத்தன்.

2762. குனிக்கும்=தியானிக்கும்; அருவுரு=அருவ வடிவம்.

2763. திருவழி=நன்னெறி; உள்ளாக் குனிக்கும் = கருதித் தியானிக்கும்.

2764. உயிரெழுந்தோங்கி யுதித்திடம்=பிராணவாயு முனைத்தெழுந்துயர்ந்து பிறக்கு மிடத்தினை; திருவம்பலந்தான் = (அவ்வாறு பிறக்கு மிடம்) சிதம்பரமாம்.

2765. வளிமேக மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பிற் றிகழ்தரு வாறுபோல்
களியொளி யாறுங் கலந்துடன் வேறு
யொளியுரு வாகி யொளித்துநின் றானே. (௪)

2766. தீமுத லைந்துந் திசையெட்டுங் கீழ்மேலு
மாயு மறிவினுக் கப்புற மானந்த
மாயை மாமாயை கடந்துநின் றார்காண
நாயக னின்று நடஞ்செய்யும் வாறே. (௫)

2767. கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா வானந்தங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஞானத்துக்
கூத்தனுங் கூத்தியுங் கூத்ததின் மேலே. (௬)

2768. இடங்கொண்ட சத்தியு மெந்தை பிரானு
நடங்கொண்டு நின்றமை நானு மறிந்தேன்
படங்கொடு நின்றவிப் பல்லுயிர்க் கெல்லா
மடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே. (௭)

2769. சத்தி வடிவு சகலவா னந்தமு
மொத்த வானந்த முமையவண் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்
டொத்த வானந்த மொருநட மாமே. (௮)

---

2765. வளி=காற்று; மின்=மின்னல்; வில்லு வானகம்=(வானக வில்லு) வானவில்; விசும்பில் = ஆகாயத்தில்; களியொளி ஆறு = மேன்மையுடைய தூவொளி முதலிய அறுவகை யொளி; கலந்துடன்=அவற்றுடன் கூடியும்; வேறாய்=அவற்றுக்கு அந்நியமாய்.

2766. தீமுதலைந்து=பஞ்சபூதங்கள்; மாயைமாமாயை கடந்துநின்றார் காண = சுத்தாசுத்த மாயைகளைக் கடந்த பரிபாகிகள் காணும்படி.

2767. கோல்=புள்ளி; கூத்தி=நடமிடுபவள்.

2768. இடங்கொண்ட=இடப்பாகத்தைக்கொண்ட; படங்கொடு= ஆணவமலத்தைக்கொண்டு.

2769. சகலவாநந்தமும் = விஷயாநந்தமுதல், வித்தியாநந்தமீறா யுள்ள அஷ்டவிதாநந்தமும்; ஒத்த=சமனாய்க் கூடியிருக்கிற; இரண்டொத்த = சத்திசிவ மிரண்டுமொத்துள்ள.

**2770.** நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
யுற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்ருய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம்பல மென்று தேர்ந்துகொண் டேனே. (௯)

**2771.** அண்டங்க டத்துவ மாகிச் சதாசிவந்
தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந்
தெண்டினி லேழுஞ் சிவாசன மாகவே
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. (௧0)

**2772.** மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்
நன்றிது தானிதழ் நாலொடு நூறவை
சென்றது தானெரு பத்திரு நூறுள
நின்றது தானெடு மண்டல மாமே (௧௧)

**2773.** அண்ட மெழுகோடி பிண்ட மெழுகோடி
தெண்டிரை சூழ்ந்த திசைக ளெழுகோடி
யெண்டிசை சூழ்ந்த விலிங்க மெழுகோடி
யண்ட னடஞ்செயு மாலயந் தானே. (௧௨)

**2774.** ஆகாச மாமுட லங்கான முயலக
னேகாச மாந்திசை யெட்டுந் திருக்கைகண்
மோகாய முக்கண்கண் மூன்ருெளி தானுக
மாகாய மன்று ணடஞ்செய்கின் ருனே. (௧௩)

---

2770. புருவத்திடைவெளி=புருவமத்திய ஆகாயம் ; பற்றுக்குப்பற்ருய்=சர்வகாரணனுய்; சிற்றம்பலம்=ஞானசபை.

2771. சதாசிவம்=(இது பிரமன்முதலிய நால்வர்க்கு முப லட்சணம்) பிரமன் முதலிய பஞ்சமூர்த்திகள்; தெண்டினில் = முறைமையில்; எழும்=குறித்த எழுவகைகளேயும்; சிவாசனம்=பரிசுத்தமான பீடம்.

2772. விளக்கொளிமாமலர்=தீபவொளிபோலும் மகிமையுள்ளமலர்; நாலொடு நூறு = நூற்றுநாலு ; ஒருபத்திருநூறு = இருநூற்றுப்பத்து, இவை யாதாரம்பற்றியெழுங்கிரணங்கள்.

2774. ஏகாசம்=மேலாடை ; மோகாய = விருப்பமுள்ள; மாகாய மன்றுள்=மஹாகாச சபையில். மோகம் ஆய அம்முக் கெட்டு மோகாய என்ருயது.

2775. அம்பல மாவ தகில சராசர
மம்பல மாவது வாதிப் பிரானடி
யம்பல மாவது வப்புத்தீ மண்டல
மம்பல மாவது வஞ்செழுத் தாமே. (கச)

2776. கூடிய திண்முழ வங்குழ லோமென்று
வாடிய மானிட ராதிப் பிரானென்ன
நாடிய நற்கண மாரம்பல் பூதங்கள்
பாடிய வாறொரு பாண்டரங் காமே. (கரு)

2777. அண்டத்திற் றேவர்க ளப்பாலைத் தேவர்க
ளெண்டிசை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்
புண்டரி கப்பதப் பொன்னம்ப லக்கூத்துக்
கண்டுசே வித்துக் கதிபெறு வாரே. (கசு)

2778. புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லா
மளிக்கு மருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கு
மொளிக்கு ளானந்தத் தமுதூறு முள்ளத்தே. (கஎ)

2779. திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது
வுண்டார்க் குணர்வுண்டா முன்மத்தஞ் சித்திக்குங்
கொண்டாடு மன்றுட் குளிக்குந் திருக்கூத்துக்
கண்டார் வருங்குணங் கேட்டார்க்கு மொக்குமே. ()

---

2775. யாவும் சிவத்துக்கு நடனசாலைகளாமென இம்மந்திரங் கூறிற்று.

2776. குழல்=புள்ளாங்குழல்; ஓமென்று=(ஒலிக்குறிப்பு) ஓமென்று சப்தித்தது; ஆடிய=நடனஞ்செய்கின்ற; மானிடர்=மானை இடக்கரத்துடையவர்; கணமாரம் = தேவகணக் கூட்டங்கள்; பாண்டரங்கம்=பாண்டரங்கக் கூத்து.

2777. அப்பாலைத்தேவர்கள்=புறவண்டத்தில் வசிக்குந்தேவர்கள்.

2778. புளிக்கண்டவர்க்குப்புனலூறுமாபோல்=புளியைப்பார்த்தவர்கட்கு வாயிலே நீரூறுவதுபோல; களிக்குந்திருக்கூத்து = களிப்பினைத் தருகின்ற திருநடனம்; கண்ணீர்சோர்=கண்ணீர்சோர; உருக்கும்=உருகுதலைச்செய்யும்.

2779. உன்மத்தம்=பிரபஞ்சத்தை யுணராதிருத்தல்; கேட்டார்க்கும்=(சொல்ல) கேட்டவர்களுக்கும்.

2780. அங்கி தமருக மக்குமா லேபாச
மங்குசஞ் சூலங் கபால முடன்ஞானந்
தங்கு பயந்தரு நீல மும்முடன்
மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே. (கக)

2781. ஆடல் பதினோ ருறுப்பு மடைவாகக்
கூடிய பாதஞ் சிலம்புகைக் கொள்துடி
நீடிய நாதம் பராற்பர நேயத்தே
யாடிய நந்தி புறமகத் தானே. (௨0)

2782. ஒன்பது மாட வொருபதி னாறுட
வன்புறு மார்க்கங்க ளாறு முடனாட
வின்புறு மேழினு மேழைம்பத் தாறுட
வன்பது மாடினு னானந்தக் கூத்தே. (௨க)

2783. ஏழினி லேழா யிகழ்ந்தெழுத் தேழதா
யேழினி லொன்றா யிழிந்தமைந் தொன்றாகி
யேழினிற் சன்மார்க்க மெங்கள் பரஞ்சோதி
யேழிசை நாடகத் தேயிசைந் தானே. (௨௨)

---

2780. ஞானந்தங்கு உபயம்=பரஞானம் அபரஞானம்; தருநீலம்= கொடுக்கிற நீலமலர்போலும் (விழி).

2781. ஆடல் பதினோருறுப்பு = நடனத்திற்குரிய திரிபுர மெரித்தல் முதவிய பதினோரவயவம்; பராற்பரம் = (பராத்பரம் என்னும் வடமொழி) பரமென்பவற்றுக் கெல்லாம் பரம், (மேலானவற்றுக்கெல்லா மேலான தெய்வம்).

2782. ஒன்பது = நவதத்துவங்கள்; பதினாறு = அட்டதிக்கும், அஷ்டமூர்த்தமும்; மார்க்கங்கள் = உட்சமயம்; எழினும்= எழுவகை யுலகத்திலும்; எழு=எழுவகைத் தோற்றத் துயிர்கள்; ஐம்பத்தாறு = ஐம்பத்தாறு தேசங்கள்; வன்பது = வலிமையால்.

7783. எழினிலேழாய்=மருத்துக்களேழினுமேழாகி (நாற்பத்தொன்பது பேதங்களாய்); எழுத்தேழதாய்=ஆதாரத்துப்பிரதான எழுத்து ஆறும் பிரணவமுமாய்; எழினிலொன்றாய் = அவ்வேழினுள்ளும் பிரதானமான பிரணவமாய்; இழிந்து = குறுகி; எழினில் = உட்சமயமாறும், மதாதீதமான சமரசமுமானவற்றுள்.

2784. மூன்றினி லஞ்சாகி மூந்நூற் றறுபதாய்
மூன்றினி லாறாய் முதற்பன்னீர் மூலமாய்
மூன்றினி லக்க முடிவாகி முந்தியே
மூன்றிலு மாடினன் மோகாந்தக் கூத்தே. (உ௩)

2785. தாமுடி வானவர் தம்முடி மேலுறை
மாமணி யீசன் மலரடித் தாளிணை
வாமணி யன்புடை யார்மனத் துள்ளெழுங்
காமணி ஞாலங் கடந்துநின் றானே. (உ௪)

2786. புரிந்தவ னாடிற் புவனங்க ளோடுந்
தெரிந்தவ னாடு மளவெங்கள் சிந்தை
பரிந்தவ னாடிற்பல் பூதங்க ளாடு
மெரிந்தவ னாடல்கண் டின்புற்ற வாறே. (உ௫)

2787. ஆதி நடஞ்செய்தா னென்பர்க ளாதர்க
ளாதி நடஞ்செய்கை யாரு மறிகில
ராதி நடமாட லாரு மறிந்தபி
னாதி நடமாட லாமருட் சத்தியே. (உ௬)

---

2784. மூன்றினில்=மும்மண்டலங்களில்; அஞ்சாகி=பஞ்சப்பிரம சொரூபமாய்; முந்நூற்றறுபதாய் = சுவாசபேதம் முந்நூற் றறுபதாய்; ஆறாய்=ஆறாதாரங்களாய் ; பன்னீர்மூலமாய்= பன்னிரண்டாதாரங்களுக்கு மூலமாய்; மூன்றினிலக்கமுடி வாகி = (ஒருமையிருமைபன்மையென்னும்) எண்ணிற்கு முடிவாய்; மூன்றிலும்=மூவுலகத்தும், (எவ்விடத்து மென் பது பொருள்.)

2785. முடி வானவர்=இறக்குந்தன்மையுள்ள தேவர்கள்; வாமணி (வாமம் அண்ணி) = அழகுபொருந்திய; கா=கற்பகத்தரு; மணி=சிந்தாமணி.

2786. புரிந்தவன்=(அவன் புரிந்து)சிவபெருமான் விரும்பி;அவனாடு மளவு எங்கள் சிந்தை=அவனுடைய ஆட்டத்தினளவாகவே எங்களுடையமனமும்; எரிந்தவன்=அக்கினிவடிவா (ஞான சொரூபமாய்) யுள்ள சிவபிரான்.

2787. ஆதர்கள்=அறிவில்லாதவர்கள்.

2788. ஒன்பதோ டொன்பதா முற்ற விருபதத்
தன்புறு கோண மசிபதத் தாடிடத்
துன்புறு சத்தியுட் டோன்றிநின் றாடவே
யன்புறு வெந்தைநின் றாடலுற் றானே. (௨௭)

2789. தத்துவ மாடச் சதாசிவந் தானாடச்
சித்தமு மாடச் சிவசத்தி தானாட
வைத்த சராசர மாட மறையாட
வத்தனு மாடினா னானந்தக் கூத்தே. (௨௮)

2790. இருவருங் காண வெழிலம்ப லத்தே
யுருவோ டருவோ டுருபர ரூபமாய்த்
திருவருட் சத்திக்குள் சித்தனா னந்த
னருளுரு வாகநின் றாடலுற் றானே. (௨௯)

2791. சிவமாடச் சத்தியு மாடச் சகத்தி
லவமாட வாடாத வம்பர மாட
நவமான தத்துவ நாதாந்த மாடச்
சிவமாடும் வேதாந்தச் சித்தாந்தத் துள்ளே. (௩௦)

2792. நாதத்தி னந்தமு நற்போத வந்தமும்
வேதத்தி னந்தமு மெய்ச்சிவா னந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட மாமே. (௩௧)

2793. சிவமாதி யைவர்திண் டாட்டமுந் தீரத்
தவமார் பசுபாச மாங்கே தனித்துத்
தவமாம் பரனெங்குந் தானாக வாடுந்
தவமாஞ் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே. (௩௨)

---

2788. ஒன்பதோ டொன்பது = சமஷ்டி (பொதுமை) சீவனும் சமஷ்டி புரியஷ்டக சரீரமும், வியஷ்டி (தனிமை) சீவனும் வியஷ்டிபுரியஷ்டக சரீரமும்; இருபதம் = தத்பதம், துவம்பதம்; கோணமசிபதம் = ஐக்கியத்தை யுணர்த்தும் அசிபதம்.

2790. இருவரும் = பதஞ்சலி வியாக்கிரபாதரிருவரும்; திருவருட்சத்திக்குள் = அருட்சத்தி ரூபமான கனகசபையில்; அருளுருவாக=கருணையையே தனக்குச் சொரூபமாகக்கொண்டு.

2791. அவமாட=தீமைகளொழிய; அம்பரம்=ஆகாயம்.

2792. தாது=குற்றம்; நாதப் பிரமம்=நாத வடிவான பிரமம் (பிரணவம்).

2793. சிவமாதியைவர்=பஞ்சமூர்த்திகள்; திண்டாட்டம் = உழைப்பு; தவமாம்பரன்=தவசொரூபமான சிவபிரான்.

2794. கூடிநின் றானொரு காலத்துத் தேவர்கள்
வீடநின் றான்விகிர் தாவென்னு நாமத்தைத்
தேடநின் றான்றிக ழுஞ்சுடர் மூன்றொளி
யாடநின் றானென்னை யாட்கொண்ட வாறே. (கூகூ)

2795. நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்ப மெய்தினர்
நேதத் துவமு மவற்றொடு நேதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் றானே. (கூச)

2796. ஆனந்த மானந்த மென்ப ரறிவில
ரானந்த மாநட மாரு மறிகில
ரானந்த மாநட மாரு மறிந்தபின்
றானந்த மற்றிட மானந்த மாமே. (கூரு)

2797. திருந்துநற் சியென்று தறிய கையு
மருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்
பொருந்தி லிமைப்பிலி யவ்வென்ற பொற்கையுந்
திருந்தத்தீ யாகுந் திருநிலை மவ்வே. (கூசு)

2798. மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய வப்பு மனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமு
முருவில் சிவாய நமவென வோதே. (கூஎ)

---

2794. கூடி=(மாயையோடு) கூடி; வீட=அழிய; ஒளியாட = பிரகாசமடைய.

2795. நாதத்துவம்=நாத தத்துவம்; மறை நம்பி=வேதப்பொருளான சிவபெருமானது (அருளால்); நேதத்துவம் = பிரிக்கப்படுவன; நேதி=பிரிப்பது; பின்னி=கலந்து.

2796. தான்=ஆத்மா; அந்தம்=முடிவு.

2797. இது காரணபஞ்சாக்கர நிலையுணர்த்திற்று, அது சிவய (வசி) என்பது, சி (சி) வா (வ) ய என முறையே மூன்றடிகளிலு மிருத்தல் காண்க. தீயாகுந்திருநிலை=அக்கினி வடிவமாகிய வழகிய தன்மை, மவ்வே=மகார சொரூபமாம்.

2798. துடி=உடுக்கை; வீச்சு=வீசியகை; அப்பு=கங்கை; அனல்=மழு; கருவில்=முயலகண்மீது; உருவில்=ஸ்தூலமல்லாத (சூக்குமமான).

2799. அரன்றுடி தோற்ற மமைத்த றிதியா
மரனங்கி தன்னி லறையிற்சங் கார
மாலூற் றணேப்பி லமருந்திரோ தாயி
யரனடி யென்று மனுக்கிரக மென்னே. (ந அ)

2800. தீத்திரட் சோதி திகழொளி யுள்ளொளி
கூத்தனைக் கண்டவக் கோமளக் கண்ணினண்
மூர்த்திகண் மூவர் முதல்வ னிடைசெல்லப்
பார்த்தனள் வேதங்கள் பாடின டானே. (ந கூ)

2801. நந்தியை யெந்தையை ஞானத் தலைவனை
மந்திர மொன்றுண் மருவி யதுகடந்
தந்தர வானத்தி னப்புறத் தப்பர
சுந்தரக் கூத்தனை யென்சொல்லும் வாறே. (சு0)

2802. சீய குருநந்தி திருவம்ப லத்திலே
யாயுறு மேனியை யாரு மறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை
யாயுறு மேனி யணேபுக லாமே. (சுக)

2803. தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்
தானும் பரற்கு முயிர்க்குந் தருமிச்சை
ஞானாதி பேத நடத்து நடித்தரு
ளான லரனடி நேயத்த தாமே. (சுஉ)

---

2799. துடி தோற்றம்=உடுக்கினாலே சிருட்டி; அமைத்தறிதி=அபயகரத்தினாலே ஸ்திதி; அங்கிதன்னில் = தீயினால்; அணேப்பில் = ஊன்றிய பாதத்தில்; அடியென்று மனுக்கிரகம்=தூக்கியபாத மெக்காலத்தும் அநுக்கிரகம்.

2800. தீத்திரட்சோதி = நெருப்புத்திரண்டாற்போலும் சோதி; கோமளம்=அழகு; முதல்வனிடை=சதாசிவத்தினிடத்தில்

2801. மந்திரம்=பிரணவமயமாம் பஞ்சாட்சரம்.

2802. சீயகுரு=சிங்கம்போன்றகுரு; ஆயுறு=ஆராய்தற்குரிய; தீயுறுசெம்மை = நெருப்பினிடத்திலுள்ள செம்மை நிறமும்; அத்தன்மையாய் = அச்செம்மையும் வெண்மையும் போல; அணேபுகலாமே=அணேதற்குரிய புகலிடமாம்.

2803. தருமிசை=பொருந்திய இச்சா சத்தி; ஞானாதிபேதம்=ஞானமஞ்ஞான முதலிய வேறுபாடு; அரனடி நேயத்ததாம் = சிவமபருமானது திருவடிக்கணன்புண்டாம்.

### கசு-வது ஆகாசப்பேறு.

**2804.** உள்ளத்து ளோமென வீச னொருவனை
யுள்ளத்து ளேயங்கி யாய வொருவனை
யுள்ளத்து ளேநீதி யாய வொருவனை
யுள்ளத்து ளேயுட லாகாய மாமே. (க)

**2805.** பெருநில மாயண்ட மாயண்டத் தப்பாற்
றருநில மாய்நின்ற கொள்கைய னீசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோ
னருநிலை யாய்நின்ற வாதிப் பிரானே. (உ)

**2806.** அண்ட வொளியு மகண்ட வொளியுடன்
பிண்ட வொளியாற் பிதற்றும் பெருமையை
யுண்ட வெளிக்கு ளொளிக்கு ளொளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே. (ங)

**2807.** பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி
யயனொடு மாலறி யாவகை நின்றிட்
டுயர்நெறி யாயொளி யொன்றது வாமே. (ச)

---

2804. உள்ளத்துளோமென=சித்தத்தில் ஓமென்று சிந்திக்க; அங்கி யாய=தீ(ஞான)வடிவமான; உடலாகாயமாம்=சரீரம் சிதா காச மயமாக விளங்கும்.

2805. அண்டத்தப்பாற்றருநிலம் = அண்டங்களுக்கு அப்புறத்தில் சிருட்டிக்கப்படும் நிலம்(மாயை); பெருநிலமாய் நின்று தாங் கிய தாளோன்=பெருமைபொருந்திய பூமியானது எல்லா வற்றுக்குமாதாரமாய் நின்று தாங்குவதுபோல, சர்வபிரபஞ் சத்துக்கும் ஆதாரமாய் நின்றுதாங்குந் திருவடியையுடைய சிவபிரான்; அருநிலையாய்=காண்டற்கரிய நிலையினையுடைய வனாய்.

2806. அண்டவொளி = சூரியனொளி; அகண்டவொளி = சிவ தேஜசு; பிண்டவொளி=சரீரத்தின்கண்ணதாய(ஜீவ)வொளி; உண்ட(வ்)வெளிக்குள்=விழுங்கி அந்தவண்டத்துள்(உள்ள); ஒளிக்குள்=சூரியவொளியினுள்; கொண்டகுறியை=அடைந் துள்ள சரீரவமைப்புக்களை.

2807. பயனுறுகன்னியர் = சிற்றின்பப் பயன் பொருந்துவதற்குரிய மங்கைமார்; பயனுறுமாதி = பேரின்பமுத்தி பயனாகப் பொ ருந்திய சிவபெருமான்; உயர்நெறியாய் = மேலான நெறி யுடையதாய்; ஒளியொன்றதுவாம்=ஒரேயொளியாய் நிற்கும்.

2808. அறிவுக் கறிவா மகண்ட வொளியும்
பிறியா வலத்திணிற் பேரொளி மூன்று
மறியா தடங்கிடி லத்த னடிக்குட்
பிறியா திருக்கிற் பெருங்கால மாமே. (௫)

2809. ஆகாச வண்ண னமரர் தலக்கொழுந்
தேகாச மாசுண மிட்டங் கிருந்தவ
னாகாச வண்ண மமர்ந்துநின் றப்புற
மாகாச மாயங்கி வண்ணனு மாமே. (௬)

2810. உயிர்க்கின்ற வாறு முலகமு மொக்க
வுயிர்க்கின்ற வுள்ளொளி சேர்கின்ற போது
குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி
வெயிற்கொண்டென் னுள்ளம் வெளியது வாமே. ()

2811. நணுகி லகல்கில னாத னுலகத்
தணுகி லகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியி னமுதம் பருகலு மாமே. (அ)

2812. புறத்துளா காசம் புவன முலக
மகத்துளா காசமெம் மாதி யறிவு
சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துளா காசந் தானஞ்ச மாதியே. (௯)

---

2808. பிறியா=(அகண்டவொளிக்கு) வேறாய்த்தனித்திராத, வலத்திணில்=தன்மையினால்; பேரொளிமூன்று=அண்டவொளி, அகண்டவொளி, பிண்டவொளி யென்னு மூன்று பெரிய வொளி; அறியாதடங்கில்=தோன்றாதவண்ணம் (சிவத்தில்) ஒடுங்கியிருந்தால் ; பெருங்காலமாம் = அநேக கற்பகாலம் ஜீவித்திருக்கலாம்.

2809. ஏகாசமாசுணமிட்டு (மாசுணம் ஏகாசம் இட்டு)=சர்ப்பத்தை மேல்வஸ்திரமாய்க்கொண்டு ; ஆகாசவண்ணமமர்ந்து=ஆகாசத்தின் றன்மையாய் எங்கும் நிறைந்து ; அங்கி வண்ணன்= தீ நிறத்தன்.

2810. உயிர்க்கின்ற=படைக்கின்ற; உள்ளொளி=பிரத்தியகாத்மா (சிவம்); குயிற்கொண்டபேதை=குயிலோசைபோலுஞ்சொல் லினையுடைய தேவி ; வெயிற்கொண்டு=பிரகாசமடைந்து; வெளியதுவாம்=வெளிப்படுவன்.

2811. நணுகில் = தன்னையடைந்தால்; உலகத்தணுகில் = பிரபஞ்சத்தை விரும்பி யடைந்தால் ; அமுதம் பருகல் = ஆனந்தானுபவம்.

2812. புறத்துள் = பகிர்முகத்தில்; அகத்துள் = அந்தர்முகத்தில்; ஆதியறிவு = சிவஞானம்; சுடர்ச்சோதி=சொயப்பிரகாசம்; தானஞ்சமாதி = (சமாதிதானம்)=நிஷ்டைபுரியுமிடம்.

## கரு-வது ஞானோதயம்.

2813. மனசந் தியிற்கண்ட மன்னன வாகுங்
கனவுற வானந்தங் காண்ட லதனை
வினவுற வானந்த மீதொழி வென்ப
வினமுற்று னந்தியா னந்த மிரண்டே. (க)

2814. கரியட்ட கையன் கபாலங்கை யேந்தி
யெரியு மிளம்பிறை சூடுமெம் மானை
யரியன் பெரியனென் றுட்பட்ட தல்லாற்
கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே. ()

2815. மிக்கா ரமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்
றக்கா ருரைத்த தவநெறி யேசென்று
புக்கா லருளும் பொன்னுரை ஞானத்தை
நக்கார் கழல்வழி நாடுமி னீரே. (ந)

2816. விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழன் மேவலு மாமே. (ச)

---

2813. மனசந்தியின் = மனசம்பந்தத்தினால்; கண்டம் = கண்டத்தின்கண்; மன்னனவாகும்=நிலைத்துள்ள சாக்கிர வறிவுண்டாம்; கனவுற வானந்தங் காண்டலதனை (கனவுற அதனைக் காண்டல்ஆநந்தம்)=சொப்பனமுண்டாக (சாக்கிரவாசனையாலுண்டாய) அப்பொருள்களை யறிதல் ஆநந்தமாம்; மீதொழிவு=அதன்மேலொழிவடைந்திருத்தல்; ஆனந்தமிரண்டு= கூறிப்போந்த கனவானந்தமும், ஒழிபானந்தமும்.

2814. கரி=யானை; சேயன்=செந்நிறமுடையான்

2815. மிக்கார் = (தன்னையின்றி) மிகுந்துள்ளதேவர்கள்; பொன்னுரைஞானத்தை=(குருவினது)பொன்போலுஞ் சொல்லினாலாகும் ஞானத்தை; நக்கார்கழல்= பிரகாசமிருந்ததிருவடி.

2816. விளக்கைப்பிளந்து = இதயத்தானத்தில் தீபவொளிபோலவிருக்கு மான்மாவை (தத்துவங்களினின்றும்) வேறுபிரித்து; விளக்கினை=சிவவொளியாகிய ஞானத்தை; விளக்கினுக்குள்ளே விளக்கினைத்தூண்டி=சிவஞான வொளிக்குள்ளே விளங்கும் சிவவொளியைப் பிரகாசிப்பித்து; விளக்குடையான்கழல்=ஞானவொளியையுடைய சிவபெருமான்றிருவடி.

2817. தத்துவ மெங்குண்டு தத்துவ னங்குண்டு
தத்துவ மெங்கில்லை தத்துவ னங்கில்லை
தத்துவ ஞானத்தின் றன்மை யறிந்தபின்
றத்துவ னங்கே தலைப்படுந் தானே. (௫)

2818. விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே
யசும்பினின் றூறிய தீரமு தாகும்
பசும்பொன் றிகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தங் கூடிநின் றானே. (௬)

2819. முத்தின் வயிரத்தின் முன்னீர்ப் பவளத்தின்
கொத்தும் பசும்பொன்னின் றாவொளி மாணிக்க
மொத்துய ரண்டத் துள்ளமர் சோதியை
யெத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே. (எ)

2820. நானென்றுந் தானென்று நாடினே னாடலு
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினு
னானென்று நானு நினைப்பொழிந் தேனே. (அ)

---

2817. இம்மந்திரம் தத்துவங்களிலெல்லாம் பரசிவம் நிறைந்து நிற்குமாதலால் தத்துவங்களையாராய்ந்தறியின், அவற்றுட் கலந்து மறைந்து நிற்கும் இறைவனை யெளிதிற் காணலாமென்கின்றது.

2818. விசும்பொன்று தாங்கிய = விரிவு பொருந்தி யமைந்த; அசும்பினின்று = சிவமாகிய கிணற்றினின்றும்; குசும்ப மலர்=செந்நிறமுடையதொரு பூ.

2819. இம்மந்திரம் முத்தமாதிமணியின்கண்ணொளிபோல, சர்வாண்டங்களிலும் வேறறக்கலந்து விளங்கும் சிவத்தை, அவற்றினின்றும் வேறுபிரித்துக் காணுதலரிதா மென்கின்றது.

2820. நானென்றுந் தானென்றும் நாடினேன் = ஆன்மாவேறென்றும் சிவம்வேறென்றும் கருதியிருந்தேன்; இரண்டில்லையென்பதும்=(அப்படிப்பேதப்பட்ட) இரண்டுபொருள்களில்லையென்பதும்; நானென்றஞானம்=நானேசிவமென்கிற அறிவை; நானென்று நானுநினைப்பு = நானென்று கருதுகின்ற நானும் (அந்த) நினைப்பினை.

2821. ஞானத்தி னன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தி னன்னெறி நானென் றறிவோர்தன்
ஞானத்தி னல்லியோக நன்னிலை யேநித்தன்
ஞானத்தி னன்மோன நாதாந்த வேதமே. (கூ)

2822. உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
யுய்யவல் லார்கட் குயிர்சிவந் தெய்வமே.
யுய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவ
முய்யவல் லாரறி வுள்ளறி வாமே (க0)

2823. காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்குங்
காணவல் லார்க்குக் கடலி னமுதொக்கும்
பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி
யாணவல் லார்க்கே யவன்றுணை யாமே. (கக)

2824. ஓமெனு மோரெழுத் துண்ணின்ற வோசைபோன்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுட ரெம்பெரு மானடி
யார்நின்ற தேவ ரகம்படி யாமே. (கஉ)

---

2821. ஞானத்தினன்னெறி நாதாந்தநன்னெறி = ஞானநெறியென்றும், நாதாந்தநெறியென்றும் இருநெறியுளவாம் ; ஞானத்தினன்னெறி நானென்றறிவோர்தல் = ஞானநெறியாவது நானே சிவமெனத் தெளிதலாம் ; யோகநன்னிலையே—நாதாந்தவேதமே = நாதாந்தநன்னெறி யென்பது யோக மார்க்கமாகும்.

2822. உய்யவல்லார்கட்கு = பிரபஞ்சதுன்பங்கடந்து நிற்கவல்லவர்கட்கு; உயிர்சிவந்தெய்வம்=உயிராகிய சிவமேதெய்வமாம் ; ஒடுக்கம்=அடங்கியிருக்குமிடம்; உள்ளறிவாம் = சத்தாகிய அறிவாம்.

2823. அவன்கண்ணின்மணியொக்கும்=சிவமே கண்ணுக்குண்பணி போலிருந்து காண்பிக்கும்; பிழைப்பிலன் = தவறுதலின்றிக்காணப்படுவோன்; ஆணவல்லார்க்கு=அன்பு மிக்கவர்க்கு.

2824. ஓசைபோல் = நாதத்தைப்போல; மேனின்ற = விண்ணுலகத்திருக்கும்; சேய் நின்ற = (மனவாக்குகளுக்கு) எட்டாமலிருக்கும்; தேவரகம்படியாம்=தேவரது மனத்திலிருக்குந் தன்மை யுடையதாம்.

### சகூ-வது சத்திய ஞானனந்தம்.

**2825.** எப்பாழும் பாழு மியாவுமா யன்றாகி
முப்பாழுங் கீழுள முப்பாழு முன்னியே
யிப்பாழு மின்னவா றென்பதி லாவின்பத்
தற்பர ஞானனந்தந் தானது வாகுமே. (க)

**2826.** தொம்பதந் தற்பதஞ் சொன்ன துரியம்போ
னம்பிய மூன்றாந் துரியத்து நன்றாகு
மம்புவி யுன்னு வதிருக்க மப்பாலைச்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே. (உ)

**2827.** மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை
யன்னதோ டொப்ப மிடலொன்று மாறது
வின்னிய வுற்பல மொண்சீர் நிறமணம்
பன்னிய சோபை பகரா று மானதே. (ங)

---

2325. எப்பாழும் = எவ்வகைத்தாய சூனியமும்; பாழும் = (அவற்றின்காரணமாய) மாயையும்; இயாவும் = மற்றெல்லாப் பாவப்பொருளும்; (மேலுள) முப்பாழ் = பிரமதுரியத்தில் விளங்கும் (சமட்டி) சாக்கிராதி மூன்றனபாவம்; கீழுள முப்பாழ் = (ஆன்மதுரியத்தில் விளங்கும்) வியஷ்டி சாக்கிராதி மூன்றனபாவம்; ஞானனந்தம்=அறிவாநந்தம்.

2826. மூன்றாந்துரியத்து=சிவதுரியத்து; நன்றாகும்=ஆநந்த வடிவமாம்; அம்புவி=ஞானபூமி; அப்பாலை=அந்நிலத்துக்கப்பால் (துரியாதீதத்தில்); செம்பொருள் = மெய்ப்பொருள் (ஆக); ஆண்டருள்=கிருபை செய்தருளிய.

2827. மன்னும்=(சிவத்தோடு) பொருந்திய; சத்தியாதி = சத்திய (சத்து), ஞான, ஆநந்தம்; சோபை = அழகு; ஒப்பமிடல்= ஒப்புரைத்தல்; ஒன்றுமாறது=பொருந்தாத தன்மையதாம்; இன்னிய = (காண்டற்கு) இனிமையமைந்த; உற்பலம் = நீலோற்பல (கருங்குவளை) மலர்; ஒண் (மை) = தூய்மை; சீர்=சிறப்பு; ஆறுமானது = (சிவத்தோடு சத்தியாதி) உற்பல முதலிய வாறையும் போல்வதாம்.

2828. சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கா
லுய்த்தவ னந்தஞ் சிவமுய ரானந்தம்
வைத்த சொருபத்த சத்தி வருகுரு
வுய்த்த வுடலிவை யுற்பலம் போலுமே. (ச)

2829. உருவுற் பலநிற மொண்மணஞ் சோபை
தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்
மருவச் சிவமென்ற மாமுப்ப தத்தின்
சொருபத்தன் சத்தியாதி தோன்றநின் றனே. (ரு)

2830. நினையு மளவி னெகிழ வணங்கிப்
புனையி லவனைப் பொதியலு மாகு
மெனையுமெங் கோனந்தி தன்னருள் கூட்டி
நினையு மளவி னிலைப்பித் தனனே. (சா)

2831. பாலொடு தேனும் பழத்து ளிரதமும்
வாலிய பேரமு தாகு மதுரமும்
போலுந் துரியம் பொடிபட வுட்புகச்
சீல மயிர்க்கா றுறுந்தேக் கிடுமே. (எ)

---

2828. சத்தி சிவன் பரஞானம் = சத்தியும், சிவமும், பரஞானமும்; அனந்தஞ் சிவமுய ரானந்தம்=அனந்தமும் (முடிவின்மையும்), சிவமும், பரமாநந்தமும்; சொரூபத்த = (அனந்த) சொரூபத்தையுடைய; சத்தி வருகுரு வுய்த்த வுடலிவை யுற்பலம் போலும் = சத்திக்குப் பொருந்திய நிறமும் இயக்குமுடலும் நீலோற்பலத்தை யொக்கும்.

2829. உருவுற்பல நிறமொண் மணஞ்சோபைதர நிற்பபோல்=அழகிய உற்பல மலரில் நிறமும் மணமும் அழகும் (வேறற) கலந்திருப்பதுபோல ; உயிர் தற்பரந்தன்னின் மருவ = சீவன் அந்தப்பரத்தொடு (வேறற) கலந்துநிற்க; முப்பதம்= சிவம், பரம் சீவன்; சொரூபத்தன் = சொரூபத்தையுடைய சிவபிரான்.

2830. நெகிழ=மனமுருக; புனையில் = புகழ்ந்து துதித்தால்; அவனைப் பொதியலுமாகும்=அவனொடு கலக்கலாம்; நினையுமளவில்=நினைத்த பொழுதிலே, அல்லது தியானிக்கக் கூடிய எல்லையளவும்.

2831. வாலிய=பரிசுத்தமான; அமுதாகு மதுரமும்=அமுதத்தின் கண்ணுள்ள சுவையும்; துரியம்பொடிபட=துரியாவத்தையுமொழிய; தேக்கிடும்=(ஞானானந்தம்) நிறைந்திருக்கும்.

2832. அமரத் துவங்கடந் தண்டங் கடந்து
தமரத்து நின்ற தனிமைய னீசன்
பவளத்து முத்தும் பனிமொழி மாதர்
துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே. (அ)

2833. மத்திம மாறாறு மாற்றி மலநீக்கிச்
சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்
பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய ஞானந்தஞ் சார்ந்தனன் ஞானியே. (கூ)

2834. சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானனந் தத்தே
துவமார் துரியஞ் சொரூபம தாமே. (க0)

கஎ-வது சொரூபவுதயம்.

2835. பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற வெங்கணுஞ் சேர்ந்தொழி வற்று
நிரவு சொரூபத்து ணீடுஞ் சொரூப
மரிய துரியத் தணைந்துநின் றானே. (க)

2832. அமரத்துவம்=தெய்வத்தன்மை; தமரத்து=நாத தத்துவத்தில்; பவளம் = பவளமொத்த விதழ்; முத்து = முத்தையொத்த பல்; மாதர் = பெண்கள் (சத்திகள்); துவள் = சோர்வு (மயக்கம்).

2833. மத்திமம்=உண்ணிலைக் கருவிகள்; ஆறாறுமாற்றி=முப்பத்தாறு தத்துவங்களையு நீக்கி; துரியத் துரிசற்று = துரியாவத்தையாகிய தோஷத்தையுங்கடந்து; பெத்தமற = பந்த நீங்க; பிறழ்வுற்று=விளங்கி.

2834. அவமான=கெடுதியைச் செய்வதான; பவமான = பரிசுத்தமான; துவம்=மேன்மை.

2835. பரமகுரவன் = பரமாசிரியன்; பரம் = ஆன்மா; திரமுற= உறுதிப்பாடடைய; நிரவு=நிறைந்த; சொரூபத்துள்=ஆன்மசொரூபத்தின்கண்; சொரூப மரிய (அரிய சொரூப) துரியத்து=அரிய சொரூபமாகிய துரியத்தின்கண்.

2836. குலேக்கின்ற நீரிற் குவலய நீரு
மலேக்கின்ற காற்று மனலோடா காச
நிலத்திடை வானிடை நீண்டகன் ருனே
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே. (உ)

2837. அங்குநின் ருனயன் மான்முதற் றேவர்க
ளெங்கு நின்ருரு மிறைவனென் றேத்துவர்
தங்கிநின் ருன்றனி நாயக னெம்மிறை
பொங்கிநின் ருன்புவ னுபதி தானே. (௩)

2838. சமையச் சுவடுந் தனேயறி யாமற்
கமையற்ற காமாதி காரண மெட்டுந்
திமிரச் செயலுந் தெளிவுட னின்ருே
ரமரர்க் கதிபதி யாகிநிற் பாரே. (ச)

2839. மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு
வாயது வேரு மதுபோல னுப்பரன்
சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற
வேயு நெறியென் றிறைநூ லியம்புமே. (ரு)

---

2836. குலேக்கின்ற = நிலேதளரச் செய்யும்; நீரின் (நீர்மையின்)= தன்மையினேயுடைய; வரைத்து = ஒரு அளவிலமைத்து; எங்கும் நிறைந்து எவற்றிற்குஞ் சொரூபமாயுள்ள சிவ பிரானே, வலஞ்செய்தல் எவ்வாறு என்பதாம்.

2837. இறைவன் = வியாபகமா யிருப்பவன்; பொங்கி = விளங்கி; புவனுபதி=உலகநாதன்.

2838. சுவடும்=சின்னங்களும்;கமை=பொறுமை; காமாதியெட்டு= காமம், குரோதம், மோகம், லோபம், மாற்சரியம், பொன் ருசை, மண்ணுசை, திமிரச்செயல்.

2839. மூவகைத்தெய்வம் = முக்குணவசத்தான் வேருகத்தோன்று மும்மூர்த்திகள், வசு ருத்திராதித்த ரெனினுமாம்; வேருமது போல் = (மூவருள்ளும் முதல்வனுகிய ருத்திரன் அவர்க ளுள் ஒருவனுயும்) அவர்களுக்கு வேருவதுபோல; அணு= சீவன்; சேய = எட்டற்கரிய; முத்துரியம் = சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம்; இறைநூல்=வேத சிவாகமங்கள்.

2840. உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குங்
கருவன்றி யேநின்று தான்கரு வாகு
மருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. (௬)

2841. உருவ நினைப்பவர்க் குள்ளூறுஞ் சோதி
யுருவ நினைப்பவ ரூழியுங் காண்ப
ருருவ நினைப்பவ ரும்பரு மாவ
ருருவ நினைப்பவ ருலகத் தில்யாரே. (எ)

2842. பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றாப்
பரஞ்சோதி யென்னுட் படிந்ததற் பின்னைப்
பரஞ்சோதி யுண்ணான் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக் கண்டேனே. (அ)

2843. சொரூப முருவங் குணந்தொல் விழுங்கி
யரியன வுற்பல மாமாறு போல
மருவிய சத்தியாதி நான்கு மதித்த
சொரூபக் குரவன் சுகோதயத் தானே. (௯)

2844. உரையற்ற வானந்த மோன சொருபத்தன்
கரையற்ற சத்தியாதி காணி லகார
மருவுற் றுகார மகாரம தாக
வுரையற்ற தாரத்தி லுள்ளொளி யாமே. (௧௦)

---

2840. உருவன்றி=(இயல்பில்) உருவமற்று; புணர்க்கும் = சேர்க்கும்; கருவன்றி=(தனக்கொரு) காரணமற்று; மருவன்றி=(ஒன்றோடும்) கூடுதலற்று; குருவன்றி=குருவி னனுக்கிரக மில்லாது.

2841. உள்=சித்தத்துள்; ஊழியும் = வினையின் முடிவையும்; உம்பர் = தேவர்; உருவ நினைப்பவர் = சிவபெருமானது திருமேனியைத் தியானிப்பவர்.

2842. பறைய=சொல்ல (விளங்கும்படியுரைக்க).

2843. சத்தியாதி நான்கும் = சிவம், சத்தி, பரம், சீவன்; நான்கு மதித்த சொரூபக் குரவன் = நாலுங்கலந்த சொரூபத்தையுடைய குரு.

2844. சத்தியாதிகாணில் = சத்தி முதலியவற்றைத் தரிசித்தால்; அகார மருவுற் றுகார மகாரமமதாக = (நாதத்தினியற்கைச் சொரூபமாகிய) அகாரத்தொடு பொருந்தி உகார மகாரங்களாக; தாரத்தின்=பிரணவத்தின்.

2845. தலைநின்ற தாழ்வரை மீதவஞ் செய்
முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே. (கக)

2846. ஆமா றறிந்தே னகத்தி னரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறு மீதென்றே
யேமாப்ப தில்லை யினியோ ரிடரில்லை
நாமா முதல்வனு நானென லாமே. (கஉ)

---

### க அ-வது ஊழ்.

2847. செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தக னந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிக டன்மைகுன் றாரே. (க)

2248. தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழி யேசென்று
நான்முன்னஞ் செய்ததே நன்னில மானதே. (உ)

---

2845. தாழ்வரை=இமயமலை; மாதறி = உமாதேவியாரால் காணப் பட்ட.

2846. அகத்தி னரும்பொருள் = சரீரத்தினுள்ளிருக்கும் அருமையான சீவன்; போமாறு = உடலைவிட்டுப் போம்வழி; புகுமாறு=மீண்டுஞ் சரீரத்துட்புகும்வழி; ஏமாப்பது=ஏமாந்து போவது.

2847. செற்றில்=செதுக்கினல்; மறிக்கில் = அடித்தால்; தத்துவ ஞானி=மெய்ஞ்ஞானிகள்.

2848. முன்னம்=பூர்வஜன்மங்களில்; விதி=கன்மபலனுக அனுபவிக்கும்படி (ஈசனுல்) விதிக்கப்பட்டுள்ள கட்டளை; வான்=மேன்மையுள்ளதாக; மாட்டு = சம்பந்தம்; கோன் = சிவபிரான்; முன்னம் = சந்நிதானம்; சென்னிகுறிவழி = தலைவிதியின்படி; செய்தது = செய்தகன்மம்; நன்னிலமானது=நல்ல பிரபஞ்ச வாழ்வாயிற்று.

2849. ஆறிட்ட நுண்மண லாறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம் பிரியகிலாவே. (௩)

2850. வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீ கலந்துடன் வேகிலென்
றானொன்றி மாருதஞ் சண்ட மடிக்கிலெ
ஞானொன்றி நாதனை நாடுவ ஞானே. (௪)

2851. ஆனை துரக்கிலெ னம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினி லெம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நானுழு வேனே. (௫)

2852 கூடு கெடின்மற் றோர் கூடுசெய் வானுளன்
ஓடு கெடினு நமர்கெடு வாரில்லை
வீடு கெடின்மற் றோர் வீடுபுக்கா லொக்கும்
பாடது நந்தி பரிசறி வார்க்கே. (௬)

---

### ௧௬-வது சிவதரிசனம்.

2853. சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. (௧)

---

2849. ஆறிட்ட நுண் மணலாறு=ஆற்றிலுண்டாய நுண்ணிய மணல் போலும் (அளவற்ற கன்மத்தை); சுமவாது = வகிச்காமல்; கூறிட்டுக்கொண்டு = பாகஞ்செய்து; பேறு = அடையும் பொருள்.

2850. வான் = மேகம்; கால்=காற்று; மாருதஞ்சண்டம் (சண்ட மாருதம்,=பெருங் காற்று; ஒன்றி=ஒருமுகப்பட்டு.

2851. அம்பூடு = பாணத்தால்; கானத்துழுவை = காட்டுப்புலி; ஏனைப்பதி = ஞானபூமி; ஞானத்துழவு = ஞானப் பயிர் விளையுமாறு உழுதல் (விசாரணை செய்தல்).

2852. கூடு=தேகம்; நமர்=இயமதூதர்; புக்காலொக்கும்=புகுந்தாற் போலும்; பாடது=தன்மை.

2853. வேறில்லை=வேறுபட்ட இரண்டு பொருள்களில்லை.

2854. வாக்கு மனமு மறைந்த மறைப்பொரு
ணோக்குமி னோக்கப் படும்பொரு ளுண்ணிது
போக்கொன்று மில்லை வரவில்லை கேடில்லை
யாக்கமு மத்தனை யாய்ந்துகொள் வார்க்கே. (உ)

2855. பரனாய்ப் பராபர னாகிய பார்சென்
றரனாய் வழக்கற வொண்சுடர் தானாய்த்
தரனாய்த் தனதென வாறறி வொண்ணா
வரனா யலகி லருள்புரிந் தானே. (ங)

---

உ0-வது சிவசொரூப தரிசனம்.

2856. ஓது மயிர்க்கா லொறுமமு தூறிய
பேத மபேதம் பிறழாத வானந்த
மாதி சொரூபங்கண் மூன்றகன் றப்பாலை
வேதக மோதுஞ் சொரூபிதன் மேன்மையே. (க)

2857. உணர்வு மவனே யுயிரு மவனே
புணரு மவனே புலவி யவனே
யிணரு மவன்றன்னை யெண்ணலு மாகான்
றுணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. (உ)

2858. துன்னிநின் றான்றன்னை யுன்னிமுன் னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடு
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியு ணின்றதோர் தேற்றத்த னாமே. (ங)

---

2854. வாக்குமனமும் = வாக்குக்கும் மனத்துக்கும்; நோக்கப்படும் பொருள்=கருதப்படும் சிவம்.

2855. தரனாய் = யாவற்றையுந் தரிப்பனாய் (ஆதாரமாய்); ஆறறி வொண்ணா = (ஐந்து புலன்களும் மனமுமாகிய) ஆறு அறி கருவிகளுக்கு மறியவொண்ணாத.

2856. பிறழாத வானந்தம் = தவறுபடாத வானந்தம்; வேதகமோ தும்=வேதத்திலே கூறப்படும்.

2857. புலவி=பிணக்கு; இணரும்=(இதயத்துள்) கலந்திருக்கும்; துணரின்=கொத்துகளிலுள்ள.

2859. மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதி தலைவ னிணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியு
மென்னுற் றறிவனு னென்விழித் தானே. (ச)

2860. சத்திய ஞானத் தனிப்பொரு ளானந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்து
ளுய்த்த துரியத் துறுபே ரொளியே. (ரு)

2861. பரனல்ல நீடும் பராபர னல்ல
வுரனல்ல மீதுணை ரொண்சுட ரல்ல
தரனல்ல தானவை யாயல்ல வாகு
மரனல்ல வானந்தத் தப்புறத் தானே. (சு)

2862. முத்தியுஞ் சித்தியு முற்றிய ஞானத்தோன்
பத்தியு ணின்று பரந்தன்னு ணின்றுமா
சத்தியு ணின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்திய கன்றோர் சுகானந்த போதரே. (எ)

2863. துரியவ தீதஞ் சொல்லறும் பாழா
மரிய துரிய மதீதம் புரியில்
விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
னுருவுந் திரியு முரைப்பதெவ் வாறே. (அ)

---

2859. மின்னுற்ற=விளக்கம் பொருந்திய; தன்னுற்ற = தனக்குத் தானுகவே விளங்குகின்ற; என்னுற்றறிவன் = என்னையே யுற்று நோக்குபவன்.

2860. சித்தத்தில்=புத்தியின் (தமோகுணத்தால் அஞ்ஞானமயமான மூடவிருத்தி, இராஜோகுணத்தால் இராகமயமான குரோதாதி விருத்தி யென்னு மிவற்றில்).

2862. மாசத்தியுள் = பெருமையுடைய திருவருளின்கண்; தத்துவம் = மெய்யறிவு; சுத்தியகன்றோர்=சுத்தாவத்தையைக் கடந்து மேற்சென்றவர்கள்.

2863. பாழாம் = (சீவ பர வேறுபாடு) சூனியமாம்; துரியவதீதம்= துரியாதீதம்; விரியுங் குவியும் = நினைப்பும் மறப்பும்; விள்ளா=உண்டாகாது; தன்னுருவு=சீவபோதம்.

## உக-வது முத்தி நிலை.

2864. ஓதிய முத்தி யடைவே யுயிர்பர
பேதமி லச்சிவ மெய்துந் துரியமோ
டாதி சொரூபஞ் சொரூபத்த தாகவே
யேதமி லாநிரு வாணம் பிறந்ததே. (க)

## உஉ-வது கரும நிருவாணம்.

2865. பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றற் றவர்சுற்றி நின்றவென் சோதியைப்
பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. (க)

## உ௩-வது சூனிய சம்பாஷணை.

2866. காயம் பலகை கவறைந்து கண்மூன்று
யாயம் பொருவதோ ரைம்பத்தோ ரக்கர
மேய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. (க)

2867. தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை
மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு
வூறிக் கிடந்ததென் னுள்ளன்பு தானே. (உ)

---

2864. அடைவே = முறைமையாக; எய்துந் துரியமோடு=உயிரும் பரமும் சிவமும் அபேதமாகும் துரியத்தில்; ஆதிசொரூபம்= முந்திய வியற்கைச் சொரூபம்; நிருவாணம்=முத்தி.

2865. கற்றற்றவர் = மாறுபாடொழிந்தவர்; சுற்று = சுற்றம்; பிதற்று=(அனுபவ விரோதமாய்) பேசுதல்.

2866. பலகை=சூதாடுதற்குரியமனை; கவறைந்து=சூதாடுகருவியை யொத்த வைம்பொறி; கண்மூன்றாக = (இருதயம், கண்டம், புருவமத்தியமென்னும்) மூன்றிடமாக; ஆயம்=சூதாடு கருவியிலுள்ள அறை; மாயம்=வஞ்சகம்.

2867. தூறு = சிறு செடி (காமாதி); மாறி = (அவற்றில்) நீங்கி; ஊறி=சுரந்து.

**2868.** ஆறு தெருவி லகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள
வேறற் கரியதோ ரேணியிட் டப்பனை
யேறலுற் றேன்கட லேழுங்கண் டேனே. (௩)

**2869.** வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினர் தோட்டக் குடிகண்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே. (௪)

**2870.** ஐயென்னும் வித்தினி லானை விளைப்பதோர்
செய்யுண்டு செய்யின் றெளிவறி வாரில்லை
மையணி கண்டன் மனம்பெறி னந்நிலம்
பொய்யொன்று மின்றிப் புகவெளி தாமே. (௫)

**2871.** பள்ளச்செய் யொன்றுண்டு பாழ்ச்செய் யிரண்டுள
கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது
வுள்ளச்செய் யங்கே யுழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. (௬)

---

2868. ஆறுதெருவில் = ஆறுதாரங்களில்; அகப்பட்ட சந்தியில் = (முதலாவதாக) பெறப்படு மூலாதாரத்துள்; சாறுபடுவன= இரசம்(இனிமை)உண்டாவதான; நான்கு பனை=நான்கிதழ்; ஏணி = சுழுமுனை; கடலேழும்=சப்த சமுத்திரத்தையும் (எழுவகைப் பிறப்பின் வகையும்).

2869. வழுதலை வித்து=கத்தரிவிதை (யோகாப்பியாசம்); பாகல்= பாகற்செடி (வைராக்கியம்); புழுதியைத் தோண்டினேன்= தத்துவவிசாரஞ் செய்தேன்; பூசணி=பூசணிப் பூ (சிவம்); தோட்டக்குடிகள் = உடம்பிலுள்ள இந்திரியாதி வியர் டாரங்கள்; வாழைக்கனி = ஆன்மலாபம்; முற்றும் பழுத் தது=நன்றாகச் சித்தித்தது.

2870. ஐயெனும் வித்து=ஐந்து என்னும் பூதமாய விதை; ஆனை= பசுவை (சீவனை); செய்யுண்டு=திரோதான மலமிருக்கிறது; செய்யின் தெளிவு = அம்மலத்தின் சுத்தத்தை ; மனம் பெறின்=மனத்தால் தியானிக்கப் பெற்றால், அந்நிலம்= அச்சுத்த மலத்தில் (திருவருளில்).

2871. பள்ளச்செய்=சுழுத்தி; பாழ்ச்செயிரண்டு=(இன்பம்) இன் றிய சாக்கிரம், சொப்பனம்; கள்ளச்செய் = காண்டற்கரிய சிவம்; அங்கே = அம்மூன்றவத்தையிலும்; உள்ளச்செய்= மனமாகிய வயல்; வெள்ளச்செய் = நீர்பாயும் விளைநிலம் (சிவானந்தம்); விளைந்தது=(ஜீவன் முத்தி) சித்தித்தது.

2872. மூவணை யேரு முழுவது முக்காணி
தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடு
நாவணை கோலி நடுவிற் செறுவுழார்
காலணை கோலிக் களருழு வாரே. (எ)

2873. ஏற்ற மிரண்டுள வேழு துரவுள
மூத்தா னிறைக்க விளையான் படுத்தநீர்
பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடிற்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே. (அ)

2874. பட்டிப் பசுக்க ளிருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள வைந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே. (௯)

---

2872. மூவணை ஏர்=மூன்றுநாடிக்குரிய வாயு; முக்காணி = மூலாதாரத்தின் கண்ணதாகும் முக்கோணம்; அணி கோலி = (வாயுவை) முறையாகக்கட்டி; தறி=வீணாதண்டம்; நாவணை கோலி=நாக்கை அணையாகச்செய்து (அமுதுண்ணுங்கால் நாவினால் அழுத்தி வாயிலை அடைக்கவேண்டுதல் பற்றிக் கூறினர்); நடுவிற்செறு=(காமாதிகள்) பொருந்துதல் இல்லாத யோகமாகிய வயலை;காலணை கோலி=காலில் விலங்கிட்டுக்கொண்டு (பந்தமடைந்து); களருழுவார்=களர் நிலத்தை யுழுகின்றவர் (பயனற்றகாரியஞ் செய்கின்றவர்) ஆவர்.

2873 ஏற்றமிரண்டு=இடை பிங்கலை; ஏழுதுரவு = ஆதாரமாறும் அமுத ஊற்றுமாம்; மூத்தான் = சந்திரகலை; இளையான்= பிங்கலை; படுத்த நீர் = உண்டாக்கப்பட்ட நீர் (அமுதம்); பாத்தியில்=நாடிகளில்; பாழ்ப்பாய்ந்து=வீணாகப் பாய்ந்து; கூத்தி வளர்த்த கோழிப்புள்ளாம் = (அது) பொதுமகள் வளர்த்த கோழிக்கு உரியானொருவனில்லாதவாறு போலாம்.

2874. இருபத்துநாலு = ஆன்மதத்துவங்கள் இருபத்துநான்கு; ஏழு = வித்தியாதத்துவங்களேழு; ஐந்து=சிவதத்துவங்களைந்து; பனவற்கு = ஆன்மாவுக்கு.

2875. ஈற்றுப் பசுக்க ளிருபத்து நாலுள
ஊற்றுப் பசுக்க ளொருகுடம் பால்போதுங்
காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. (கo)

2876 தட்டா னகத்திற் றலையான மச்சின்மேன்
மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்
தட்டா னதனைத் தகைந்துகொண் டானே. (கக)

2877. அரிக்கின்ற நாற்றங்கா லல்லற் கழனி
திரிக்கின்ற வொட்டஞ் சிக்கெனக் கட்டி
வரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்
விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே. (கஉ)

---

2875. ஊற்றுப்பசுக்கள் = அறிவு முதலியன உண்டாதற் காதாரமான வித்தியா தத்துவங்கள்; காற்றுப்பசுக்கள் = இடை பிங்கலைகளால் வேறுபட்டுள்ள பிராணவாயுக்கள்; மாற்றுப் பசுக்கள்=அவற்றுக்கு மாறுபட்டுள்ள புலன்கள்.

2876. தட்டான் = ஜீவன்; அகத்தில் = உடம்பின்கண்; மச்சின் மேல்=கபாலத்தானத்து; மொட்டாய்=அரும்பைப்போல; செம்பால் = செம்மைத்தன்மை; வட்டம் = பிரணவம்; வாய்மை=பஞ்சாக்கரம்; அதனை =அந்தப்பாலை (அமுதை); தகைந்துகொண்டான் = தடுத்துத் தன்னிடத் தாக்கிக் கொண்டான்.

2877. அரிக்கின்ற=அரிக்கட்டுகளுண்டாதற்குரிய; நாற்றங்காலல் லற்கழனி=நாற்றங்கால்களாகிய விருத்தமுள்ளவயல்போலு முடல்; திரிக்கின்ற வொட்டம்=மீட்டுங் கொடுக்கின்ற ஒப் பந்தம் (நாலுவிரல் வெளியிற் செலுத்தப்படும் சுவாசம்); சிக்கெனக்கட்டி=நன்றாகத் தடுத்து; வரிக்கின்ற=கொள் ளத்தக்க; நல்லான் கறவை=நல்ல பால்கொடுக்கும் பசுவை யொத்த மனத்தை; பூட்டில்=(பிராண வாயுவோடு) சேரச் செய்தால்; வெள்ளரி வித்து = வெள்ளிய ஒளிபொருந்திய பிந்து (அதனால் ஒருமையடைந்த மனம்); வித்தாம் = முத்திக்கு விதையாம்.

2878. இடர்க்கொண்டு நாவி யெருவிட்டு வித்திக்
கிடர்க்கொண்டு பூட்டிக் கிளறி முளையை
மிடர்க்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கா
ரடர்க்கொண்டு செந்நெ லறுக்கின்ற வாறே. (௧௩)

2879. விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்துகொள் வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. (௧௪)

2880. களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லை
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரிள வஞ்சியின் மாய்தலு மாமே. (௧௫)

2881. கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்
தாப்பிடு பாசத்தை யங்கியுள் வைத்திட்டு
நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை
யேற்பட வில்லத் தினிதிருந் தானே. (௧௬)

---

2878. இடர்க்கொண்டு = வருந்திமுயன்று; நாவி=உழுது (மனதைச் செம்மைசெய்து); எருவிட்டு = (சுத்தவாதனையாகிய) எருவினைப்போட்டு; வித்தி = (மௌனமாகிய விதையை) விதைத்து; கிடர்க்கொண்டு=(பிரயத்தினமாகிய) ஏரினால்; கிளறி = வெளிப்படச்செய்து; முளையை =(அம்மௌனப் பிரவாகத்தின்) எழுச்சியை; மிடர்க்கொண்டு=விசுத்தியைச் (சுருக்குதலால்) வசமாக்கிக்கொண்டு; சோறு = அமுதம்; விழுங்கால் (விழுங்குங்கால்) = உண்ணும்போது; அடர்க்கொண்டு=துன்பத்தையடைந்து; செந்நெல் = செந்நெல் விளைவு (சிவானுபவம்).

2879. மேலைக்கு=மோட்சத்திற்கு; காதம் = அமுதகேணி; விளைந்தென்னு மடுக்கு அளவின்மை குறித்து நின்றது; முக்காதம்=மூன்று குண்டம் (பானு, மதி, அக்கினி).

2880. களர்=உவர்நிலம் (பயனற்ற காரியம்); வஞ்சியின்=வஞ்சிக் கொடிபோல்; மாய்தலுமாம்=கேடடைதலுமாம்.

2881. குறுநரிக்கொட்டகத்து=அணுவளவாய மனமிருக்கும் உடல்; ஆப்பிடு=கட்டப்பட்ட; அங்கியுள் = சிவாக்கினியில்; ஆயிழை ஏற்பட=சத்திநிபாதம் பொருந்த.

2882. மலைமேன் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமே லிருந்த கொழுங்கனி வீழ
வுலைமே லிருந்த வுறுப்பெனக் கொல்லன்
மூலைமே லமிர்தம் பொழியவைத் தானே. (கஎ)

2883. பார்ப்பா னகத்திலே பாற்பசு வைந்துண்டு
மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரு முண்டாய் வெறியு மடங்கினாற்
பார்ப்பான் பசுவைந்தும் பாலாச் சொரியுமே. (கஅ)

2884. ஆமாக்க ளைந்து மரியேறு முப்பதுந்
தேமா விரண்டொடு திப்பிலி யொன்பதுந்
தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன
மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரே. (ககூ)

2885. எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே. (உ0)

---

2882. மலை = புருவமத்திய மேரு; மழை = அமிர்ததாரை; மான் கன்று = பிராணன் அல்லது சீவன்; குலைமேல் = அமிர்தக் கிணற்றின் கரையில்; கொழுங்கனி = ஆத்மானுபவம்; உலை = அக்கினி குண்டம்; கொல்லன் = சிவபிரான்; மூலைமே லமிர்தம் = சத்தியின் கருணை (சத்திநிபாதம்).

2883. பார்ப்பானகம் = பிரமனா லுண்டாக்கப்பட்ட சரீரம்; பசு வைந்து = பஞ்சப்பிராணன்; பால் = அமுதம் (ஆநந்தம்).

2884. ஆமாக்களைந்து = பஞ்சப்பிராணன்; அரியேறு = ஆண்சிங்கம் போலும்; முப்பதும் (மூன்றும் பத்தும்) = ஞானேந்திரியமைந்தும், கர்மேந்திரியமைந்தும், புத்தியும், சித்தமும், அகங்காரமும்; தேமாவிரண்டொடு = சுகதுக்கமிரண்டையுஞ் சமமாகக் காண்டலுடன்; திப்பிலியொன்பதும் = அமுதமொத்த சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், சேவை, அருச்சனை, அடிமை, வந்தனம், சக்கியம், ஆத்மநிவேதனமென்னும் நவவித பத்தியும்; தாமா (க) = தமக்குரியனவாக; குரங்கொளின் = வசப்படுமாயின்; தம் மனத்துள்ளன = தம் மனத்திலுள்ள காமாதி விருத்திகள்; மூவா (து) = விருத்தியாகாது, கடாவிடின் = வைராக்கிய முதலியன விருத்தியாவதால்; மூட்டுகின்றார் = (அக்காமாதிகளை) கெடுக்கின்றார்.

2885. எழுதாத புத்தகம் = வேதம்; தெளியாதகன்னி = (பிறர் தெளிவிக்க) தெளியாத சிற்சத்தி; மலராத பூ = அனாதியான் ஜீவன்; மதுவை = தேனை (ஆநந்தத்தை); பிறவாத வண்டு = மனோவிருத்தி யற்ற ஜீவன்; மணம் = அத்தேன்.

2886. போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்
கூகின்ற நாவலின் கூழை தருங்கனி
யாகின்ற பைங்கூ ழைவையுண் ணு மைவரும்
வேகின்ற கூரை விருத்திபெற் றாரே. (௨௧)

2887. மூங்கி லெழுந்ததோர் வேம்புண்டு வேம்பினிற்
சார்ந்து கிடந்த பனையிலோர் பாம்புண்டு
பாம்பைத் துரந்திட்டு வேம்பைத்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. (௨௨)

2888. பத்துப் பரும்புலி யானை பதினைந்து
வித்தக ரைவர் வினோதக ரீரெண்ம
ரத்தகு மூவ ரறுவர் மருத்துவ
ரத்தலை யைவ ரமர்ந்துநின் றாரே. (௨௩)

2889. இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
யிரண்டு கடாவுக்கு மொன்றே தொழும்ப
னிரண்டு கடாவு மிருத்திப் பிடிக்கி
லிரண்டு கடாவு மொருகடா வாமே. (௨௪)

---

2886. போகின்ற பொய் = இரேசகவாயு; புகுகின்ற பொய்வித்து = பூரகவாயு; கூ(டு)கின்ற = சேர்கின்ற; நாவலின் = நாவன் மரத்தின் (சரீரத்தின்கண்); கூழைதருங்கனியாகின்ற பைங் கூழவை = இருவினையின் பயனாய போகங்கள்; ஐவரும் = ஞானேந்திரியமைந்தும்; கூரை = உடம்பின்கண்.

2887. மூங்கில் = மனத்தின்கண்; வேம்பு = சிவம்; பனை = திரோ தானம்; பாம்பு = அஞ்ஞானம்; வெடிக்கின்றவாறு = அறியப் படாததன்மையதாம்.

2888. பத்துப்பெரும்புலி = தசநாடி; யானைபதினைந்து = பிருதுவி யாதியைந்து, சப்தாதியைந்து, வாக்காதியைந்து; வித்தக ரைவர் = ஞானேந்திரியமைந்து; வினோதகர் = விளையாடல் செய்பவர்; ஈரெண்மர் = தசவாயு; மூவர் = முக்குணம்; அறுவர் = பிறத்தல் முதலிய அறுவகைவிகாரம்; அத்தலை = (இவற்றையுடைய) அவ்விடத்து (உடம்பில்); ஐவர் = ஜாக்கிராதியவத்தை ஐந்து.

2889. இரண்டு கடா = இரேசகவாயு, பூரகவாயு; இவ்வூர் = இவ் வுடம்பு; தொழும்பன் = இடையன் (ஜீவன்); ஒருகடாவாம் = கும்பகமாம்.

2890. ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலாள்
முத்தக் கயிறாக மூவர்க ளூரினு
ணித்தம் பொருது நிரம்பநின் றாரே. (உரு)

2891. கூகையும் பாம்புங் கிளியொடு பூஞையு
நாகையும் பூழு நடுவி லுறைவன
நாகையைக் கூகை நணுக லுறுதலுங்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே. (உ௬)

2892. குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கி
னிலைக்கின்ற வெள்ளெலி மூன்று குணந்தா
னுலைக்குப் புறமெனி லோடு மிருக்கும்
புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே. (உஎ)

2893. காடுபுக் காரினிக் காணார் கடுவெளி
கூடுபுக் கானது வைந்து குதிரையு
மூடுபுக் கானது வாறுள வொட்டக
மூடி புதாவிடின் மூவணை யாமே. (உஅ)

---

2890. சமன்கட்டி=செவ்விதாக வமைத்து; பருத்தி=பருத்திச்செடி (சிவம்); முத்தக் கயிறாக=அறுபட்ட கயிறுபோல, மூவர்கள் = முக்குணங்கள்; ஊரினுள் = ஊர்மத்தியில் (சித்தத்துள்), நிரம்ப=பூரண (சிவ) மாக.

2891. கூகை=கோட்டான் (அஞ்ஞானம்); பாம்பு=காமசங்கற்பம்; கிளி=தர்மம்; பூஞை=பூனை (அதர்மம்); நாகை = நாகணவாய்ப்பறவை (சிற்றறிவு); பூழ் = காடை (குரோதாதிவிருத்தி); நடுவில்=சித்தத்துள்; எலி=சீவன்; கூப்பிடுமாறு=(குருவைத்தேடி) அலறும் விதமாம்.

2892. குலைக்கின்ற=எழுகின்ற;நன்னகையாம்=பிரகாசமாம்;கொங்குழக்கின் = துர்வாசனைகளை யடக்கினால்; வெள்ளெலி = ஜீவன்; உலைக்கு=உடம்பிற்கு; ஓடும்=(முக்குணம்) கெடும்; இருக்கும் = (ஜீவனுடம்பிற்குள்ளாயின் கெடாது) நிலைபெறும்; புலைக்குப் பிறந்தவை=இழிவாகிய மாயாகாரியங்கள்.

2893. காடு=(மாயையின்) முடிவிடத்து (சிவத்து);கடுவெளி=சூனியும்; கூடு=(தத்தம்) கோளகம்; ஐந்து குதிரையும்=ஞானேந்திரிய மைந்தும்; மூடுபுக்கானது = அடங்கி யொழிந்தது; ஆறுளவொட்டகம்=ஆறாகவுள்ள காமக்குரோதலோபமோக மத மாற்சரிய விஷயாதிகளிற் கலந்துள்ள மனம்; மூடு = (யோகாப்பியாசத்தால் அவற்றை) கீழ்ப்படுத்தி; தாவிடின்=ஒழுகினால்; மூவணை=சீவதுரியம்; பரதுரியம்=சிவதுரியம்.

2894. கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்
காறையு நாணும் வளையலுங் கண்டவர்
பாறையி லுற்ற பறக்கின்ற சீலைபோ
லாறைக் குழியி லழுந்துகின் றாரே. (உகூ)

2895. துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்
வருத்தியுண் ணின்ற மலையைத் தவிர்ப்பா
ளொருத்தியுள் ளாளவ ளூரறி யோமே. (ஙo)

2896. பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் திருமணப் பட்டார்
பெருந்தவப் பூதம் பெறலுரு வாகு
மிருந்திய பேற்றினி லின்புறு வாரே. (ஙக)

---

2894. கூறை=ஆடை; குழாய் = பாத்திரம்; காறை = கழுத்தணி; நாண்=அரைஞாட்கயிறு; கண்டவர் = (இவற்றைப் பொருளாக) கண்டிருப்பவர், பாறை=கற்பாறை; சீலை = ஆடை; ஆறைக்குழியில்=(காமாதிகளாகிய) ஆறு பாழ்ங்கிணற்றின் கண்.

2895. துருத்தி = ஊதுந்துருத்தி (பிரவிருத்தி, நிவிர்த்தி) ; கரை தோன்றும்=எல்லை காணப்படும் ; மலைமேல் விருத்தி=சித்தத்துள்ள காமாதிவிருத்திகள்; கண்காணிக்க=காண; உண்ணின்ற=இருதயத்திருக்கும்; மலையைத் தவிர்ப்பாள்=சித்தவிருத்தியை யொழிப்பவள்; ஒருத்தி = (ஆநந்தசத்தி யென்னும்) ஒருபெண்; ஊர்=இருப்பிடம் (சிவம்).

2896. பருந்துங் கிளியும்=அதர்மமும் தர்மமும்; படுபறைகொட்ட= துக்கத்தையும் சுகத்தையு முண்டாக்க; திருந்திய மாதர் = மாறுகின்ற (தம்முள்) ஒத்துள்ள மனமுதலிய உட்கரணங்கள்(ஒடு); திருமணப்பட்டார்=கூடியுள்ள ஜீவர்கள் ; பெருந்தவப் பூதம் பெறல் = பெருந்தவத்தினைச் சித்தமடைதலால் ; உருவாகு மிருந்திய பேற்றினில்=(தமதுநிஜ) வடிவமாகும் நிலைபெற்ற ஜீவன்முத்தியால்.

2897. கூடும் பறவை யிரைகொத்தி மற்றத
னூடுபுக் குண்டி யறுக்குறி லென்னெக்குஞ்
சூடெறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயனெளி தாமே. (௩௨)

2898. இலையில்லை பூவுண் டினவண்டிங் கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை கொய்யு மலருண்டு கொய்யுந்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே. (௩௩)

2899. அக்கண நின்றதோ ரால மரங்கண்டு
நக்கண வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. (௩௪)

---

2897. கூடும் பறவை = உடம்பிற் கூடியுள்ளவிந்திரியம்; இரை கொத்தி = சப்தாதி விஷயங்களையுண்டு (இருக்க); அதனூடு புக்கு=அவ்விந்திரிய வசமாகச்சென்று; உண்டியறுக்குறில் = விஷயானுபவத்தை யொழிப்பதானால்; என்னெக்கும்=யாது சித்திக்கும்; சூடு = ஞானக்கினி;எறிநெய் = (அதனால்) ஆய சிவாநந்தம்; மைகான்றிடுகின்ற = அவிச்சையை யொழிக்கின்ற ; பாடு=தன்மை; பயன்=முத்திப்பயன்.

2898. இம்மந்திரம் சம்சார விருட்ச வருணனையாம். இலை=வேதாப்பியாசம்; பூ=பிரவிருத்தி; வண்டு=தத்துவ விசாரம்; தலை=முடி (சாத்தியம்); வேர் = சாதகம்; தாள் = அடி (சாதக முயற்சி) ; பூவின் குலையில்லை=பூங்கொத்தில்லை, (விஷயக் கூட்டம் உண்மையில் இல்லை); கொய்யு மலர்=சுகதுக்கானுபவம்; கொய்யுந்தலை=ஆன்மானுபவம்; கிளை=ஜீவபோதம்.

2899. அக்கண (அக்கம் அண்ண)=சீவான்மாவிற் பொருந்த; ஆலமரம் (ஆல் அமர் அம்)=விஷம் பொருந்திய (கண்டமுடைய) சிவம்; நக்கண (அண்ண)=வெளிப்படையாக; நடுவே=நடுநிலையின் கண்ணே; அஞ்சு துயரம் = பஞ்சக்கிலேசம் (அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேசம்); தாழ்ந்து=(சிவத்தில்) அடங்கி.

2900. கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங்
காப்பிடு கள்ளர் கலந்துநின் றுருளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரே. (௫௫)

2901. கொட்டியு மாம்பலும் பூத்த குளத்திடை
யெட்டியும் வேம்பு மினியதோர் வாழையுங்
கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதா
ரெட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. (௫௬)

2902. பெடைவண்டு மாண்வண்டும் பீடிகை வண்ணக்
குடைகொண்ட பாசத்துக் கோலமுண் டானுங்
கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட
பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. (௫௭)

---

2900. கூப்பிடும்=உலகபந்தம் நீங்கும்; ஆற்றில்=(சோகம் பாவனை) அப்பியாசத்தில்;வன்காடிருகாதம்(இருகாதம்வன்காடு)=இருகாததூரம் வலியகாடு (சங்கற்ப விகற்பத்தோடு கூடிய வலிய அவிச்சை) (உண்டு); காப்பிடு கள்ளர் = (அதை) காவல் செய்யும் (இந்திரிய) திருடர்; வெள்ளர் = (சிவாநந்த) பெருக்குடையவர்; தொடர்ந்திட்டு = தொடர்ந்து பற்றி (காவலில்) வைத்து; கூப்பிடும் = வாக்குவியாபாரமும்; கூரை=வீடு (ஜீவன் முத்தி).

2901. கொட்டியுமாம்பலும் பூத்தகுளத்திடை=சகலமும் கேவலமுமுண்டாயுள்ள ஆன்மாவின் கண்; எட்டியும் வேம்பும் = நாமமும் ரூபமும், (விடத்தக்கன வாதலின், இவ்வாறு கூறப்பட்டது); வாழையுங் கட்டியுந் தேனும்=சத்தும் சித்தும் ஆநந்தமும்),இவையும் முன்போலக் குறிப்புமொழி);கலந்து = ஏகமாகச்செய்து, எட்டிப்பழத்துக்கு (எட்டு இப்பழம்)=எளிதிற் சித்திக்கும் இவ்வுலக போகத்திற்கு.

2902. பெடை வண்டு மாண் வண்டும் = சத்தியும் சிவமும் (ஏவ); பீடிகை = ஆசனம் (மண்); வண்ணம் = நிறம் (இருசுடர்); குடை=கவிகை (ஆகாயம்); கொண்ட = (இவ்வடிவமாக) பொருந்திய; கோலமுண்டானும்=உடல்கொண்ட சீவனும்; கடை வண்டு=இழிவாகிய மனத்தால்; உண்ணும் = (சுக துக்கத்தை) அனுபவிப்பன் ; கலந்திட்ட = வியாபகமான; பெடை வண்டு = அருட்சத்தியால்; தான் பெற்றது = தானடைந்த பேறு;

**2903.** கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்தவ
னெல்லை கடப்பித் திறையடி கூட்டியே
வல்லசெய் தாற்றன் மதித்தபி னல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறியறி யாதே. (௩௮)

**2904.** தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரிற் குவளை யெழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாமே. (௩௯)

**2905.** ஆறு பறவைக ளைந்தகத் துள்ளன
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன
வேறும் பெரும்பதி யேழுங் கடந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. (௪௦)

---

2903. கொல்லையில்=(சப்தாதிவடிவ) விஷயங்களில்; பசுக்களை = (சுரோத்திராதி) இந்திரியங்களை; செய்தவன்=படைத்துடை யவன்; எல்லை கடப்பித்து = (விஷயங்களின்) எல்லையைக் கடக்கு மாறுசெய்வித்து; இறை = சிவபிரான்; வல்ல செய்து=தனக்கியன்றவாறு தியானம் புரிந்து; ஆற்றல் = மாயாசத்தியின் சொரூபத்தை; மதித்தபின் = ஆராய்ந்தறி ந்த பின்னர்; கொல்லை செய் = சங்கற்பத்தைப் புரியும்; குறி = (சிவமாகிய) இலட்சியத்தை.

2904. தட்டத்து நீரிலே=தடாக ஜலத்திலே, (வலது மூக்கிலே); தாமரை=தாமரை மலர், (இரேசகவாயு); குட்டத்து நீரில்= குழிஜலத்தில்,(இடது மூக்கில்);குவளை=உற்பலமலர்,(பூரக வாயு); விட்டத்துள்=வீட்டுள், (சுழுமுனையில்); விளங்க = (கும்பகமா) காண; குட்டத்திலிட்டதோர் = புழைக்கடை யிற் காய்த்துக் கிடப்பதொரு; கொம்மட்டி யாம் = கொம் மட்டிப்பழம் போன்று முத்தியெளிதாம், (கொம்மட்டிப் பழம் - முலாம்பழம்).

2905. ஆறுபறவைகள்=காமாதி யாறன்கூட்டம்;ஐந்தகத்துள்ளன= ஐம்பூதத்தாலாய சரீரத்தினு ளிருப்பனவாம்; நூறுபறவை= (அவற்றால்) அளவிறந்த வெண்ணங்கள்; நுனிக்கொம்பின் மேலன=அகங்காரத்தின்கணிருப்பனவாம், (அந்தக்கரண சதுஷ்டயத்துள் அகங்கார மீறுயிருப்ப துணர்க); பெரும்பதி யேழும் = (சாக்கிர முதலிய) பெரிய வஞ்ஞான பூமி யேழினையும்; மனை=மோட்சம்.

2906. கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்
கட்டனஞ் செய்து கயிற்றூற் றெழுமியு
ளொட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாமே. (சக)

2907. ஏழு வளைகட லெட்டுக் குலவரை
யாழும் விசும்பினி லங்கி மழைவளி
தாழு மிருநிலந் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில தாலய மாமே. (சஉ)

2908. ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைத்தமின் கூபப் பறவைகண்
மாலிங்கன் வைத்தது முன்பின் வழியே. (சஙு)

2909. கொட்டுக்குந் தாலி யிரண்டே யிரண்டுக்குங்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கு மூன்றுக்கு
மிட்டம் வலிதென்ப ரீச னருளே. (சச)

---

2906. கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள் = தோண்டுதல் புரிந்து ஸ்நானஞ்செய்யுங் கிணற்றினுள், (விருத்திகளை யடக்கிச் சீவபோதத்தை) கெடுக்கின்ற சிவாநந்தப் பெருக்கில்); வட்டனப் பூமி = (வட்டு-அல்-ந-பூமி) சூதாடு கருவி போல் மாறுதலில்லாத சுகநிலை; கட்டனஞ்செய்து=கட்டுச் சோறு (போன்று வசமாக) செய்து; கயிற்றூற்றெழுமி = ஆராய்ச்சிக்கயிற்றால் நிலைப்படுத்தி;உள் ஒட்டனஞ்செய்து= உடலுட் பொருந்திய சோறுபோல் செய்துகொண்டால்; ஒளி=சிவப்பிரகாசம்.

2907. குலவரை=சிரேட்டமானமலை; அங்கி = தீ; வளி = காற்று; கண்டு=(காரணகாரிய வாயிலாக விசாரித்து) உணர்ந்து; அதாலய (அஃதாலய)மாம்=அந்தப்பிரபஞ்சம்சிவாலயமாகும்.

2908. ஆலிங்கனஞ்செய்து=(மோகத்துடன்) கூடி;அகஞ்சுட=உள் வருந்த; சூலத்து=கருப்பத்தில்; சாலிங்கமைத்து = உடம்பினை யிவ்வுலகத்தி லமையப்பெற்று; கோலிங்கமைத்த மின்=அழகாக விங்கமையப் பெற்றுள்ள மாதர்,(மின் - ஆகு பெயர்); கூபப்பறவைகள் = கிணற்றகத்துள்ள பட்சிகள், (உடம்பின்கணுள்ள விந்திரியங்கள்); மால்=மயக்கம்; முன்பின் வழி=முன்னர் (விஷயங்களின்) பின் சென்ற வழி.

2909. கொட்டுக்கும்=(ஒவ்வொரு) அடிக்கும், (விஷய சம்பந்தத்திற்கும்); தாலியிரண்டே=உரிமை (சுகதுக்கம்) இரண்டேயாம்; பாரை = இருப்புப்பாரை, (விஷய வாசனை); ஈசனருள் = பரமேசுவரனது திருவருளில்; இட்டம்=பிரிய மிருத்தல்.

2910. கயலொன்று கண்டவர் கண்டே யிருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரு முய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பா னொருவன்
மறையொன்று கண்ட துருவம்பொன் னாமே. (௪௫)

2911. கோரை யெழுந்து கிடந்த குளத்தினி
லாரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படுகின்றாற் போலல்ல நாதனார்
பாரை கிடக்கப் படிகின்ற வாறே. (௪௬)

2912. கொல்லைமுக் காதமுங் காடரைக் காதமு
மெல்லை மயங்கிக் கிடந்த விருநெறி
யெல்லை மயங்கா தியங்கவல் லார்கட்கு
வொல்லை கடந்துசென் றார்புக லாமே. (௪௭)

---

2910. கயலொன்று = (மாறி மாறி வரும்) உலகமொன்றை; (கயல் பிறழுதற்குவமை); கண்டே = (அதனை) பார்த்தே; முயலொன்று கண்டவர்=(பிரபஞ்சங்கடந்த) சிவமானது (தம்முள்) அபேதமாகப் பொருந்தத் தரிசித்தவர், (முயல் - அகப்படாமைக்குவமை); மூவரும் = (விசுவ தைசத பிராஞ்ஞனென்னும்) மூவரும் (சிவமாக); பறையொன்று = போர்ப் பறைபொருந்திய (வாய்ப்பறை கொட்ட); பூசல்=சண்டை; மறை யொன்று கண்ட = வேதத்தாற் பொருந்தவறிந்த; துருவம்=நிலையான வான்மா; பொன்னும்=சிவமாம்;

2911. கோரை = கோரைப்புல் (வியாபக வறிவு); குளத்தினில் = தடாகத்தில், (சித்தத்துள்); ஆரை = (அது விளங்காவாறு) ஆரைச்செடி,(ஆசை); நாரை படுகின்றாற்போல்=நாரையென்னும் பறவை (மீனைப்பற்ற நீர்நிலைகளில்) விழுகின்றாற் போன்று; நாதனார்=சிவனார்; பாரை கிடைக்க=வன்மனத் தின்கணெழுந்தருளி யிருக்க; படிகின்றவாறு = (அவரை) அடைகின்ற விதம்.

2912. கொல்லைமுக்காதமும்=பிரணவம்(அகார உகார மகாரமென்று) மூன்றுமாத்திரை யளவினதும்; காடரைக்காதமும் = (அதனது)அமாத்திரை அரைமாத்திரை யளவினதும் (ஆக); எல்லை = அளவு; இயங்க = ஒழுக; ஒல்லை = விரைவாக; ஊர்=முத்தி.

2913. உழவொன்று வித்து வொருங்கின காலத்
தெழுமழை பெய்யா திருநிலச் செல்வி
தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யோனே. (சஅ)

2914. பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காத
மொதுங்கிய தண்கட லோத முலவ
மதுங்கிய வார்கனி யாரமு தூறப்
பொதுங்கிய வைவரைப் போய்வளைத் தானே. (சகூ)

2915. தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மக
னீலிக் கிறையுமே நெஞ்சி னிலைதளர்ந்
தாலிப் பழம்போ லளிக்கின்ற வப்பே. (௫0)

---

2913. உழவொன்று வித்து=உழவுத்தொழிலைப் பொருந்தச்செய்து, (மனத்தினை நல்லோரிணக்கத்தால் செம்மைபெறச்செய்து); ஒருங்கின காலத்து = (அம்மனம்) ஒரு முகப்பட்டபோது; எழுமழை பெய்யாது=மழை யெழுந்து வருஷியாது, (எண்ணங்களெழுந்து பெருகா); இருநிலச்செல்வி = பெரிய பூமிதேவி, (சுத்தமனத்தினை); தழுவி=கூடி ; வினை=தர்மாதர்மம்; பயவாது=(சுகதுக்கங்களை) தாராது, (அப்போது); வழுவாது=தவறாது (அருள் செய்ய).

2914. பதுங்கிலும்=ஓரிடத்தடங்கிக் கிடந்தாலும் ; பாய்புலி=பிராணவாயு, (உவமவாகு பெயர்); பன்னிருகாதம்=பன்னிரண்டங்குல வளவு செல்லுந் தன்மையதாம், (அதனால்); ஒதுங்கிய தண்கடல் = விலகியுள்ள குளிர்ந்த சமுத்திரத்தின், (புத்தி சலனமடையச் சேய்மையாயுள்ள வாநந்தப் பெருக்கத்தின்); ஓதமுலவ=கசிவுண்டாக; மதுங்கியவார்கனி=தேன்றுளிக்கும் பெரும்பழம், (சாந்தவிருத்தி பெருகும் நன்மனம்); ஆரமுதூற=நிறைந்த விரசம் (சுகம்) பெருக; பொதுங்கிய வைவரை = (இதுகாறும்) வருத்திய பஞ்சேந்திரியங்களை; வளைத்தான்=(விடயங்களிற் செல்லாவாறு) சூழ்ந்துகொண்டான்.

2915. தோணி = (மானிட சரீரமென்னும்) மிதவை; கடல்புக்கு=(விசார வடிவ) சமுத்திரத்திற் சென்று; வாணிபம்=வியாபாரம், (அசுத்த சங்கற்பத்தை விடுதல், சுத்த சங்கற்பத்தைக் கொள்ளுதல்); வழங்கி=ஒழுகி; நீலிக்கு=மங்கையின் பொருட்டு; இறையும்=சிறிதேனும்; நெஞ்சினிலை=மனநிலை; தளரின்=சோர்வடையுமாயின்; ஆலிப்பழம்போல = நச்சுக்கனிபோல; அளிக்கின்றது = (பெருந் துக்கத்தை) தருவதாம்; அப்பு=(நீரையொத்த) சித்தம்.

2916. முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள்
செக்குப் பழுத்த திரிமலங் காய்த்தன
பக்கனூர் மிக்கார் படங்கினூர் கன்னியர்
நக்கு மலருண்டு நடுவுநின் றூரே. (ருக)

2917. அடியு முடியு மமைந்ததோ ராத்தி
முடிய நுனியின்கண் முத்தலை மூங்கில்
கொடியும் படையுங் கோட்சர னையைந்து
மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே. (ருஉ)

---

2916. முக்காத மாற்றில்=மூன்று துரவு (குணமு)டைய வழியில்; மூன்றுள வாழைகள் = (சாக்கிர சொப்பன சுழுத்தியென்னும்) மூன்று வாழைமரங்களிருக்கின்றன, (அவற்றுள்); செக்குப்பழுத்த=செக்குப்போல் கறுத்துள்ள; பக்கனூர் = (அவற்றினின்றும்) விலகியவர்; மிக்கார் = மேம்பட்டவராய்; படங்கினூர் கன்னியர் = மேற்போர்வை யமைந்த மங்கையரை; நக்கு=(அவமதித்து) சிரித்து; மலருண்டு = சிற்பிரகாசங்கொண்டு; நடுவு=நடுநிலைக்கண்.

2917. அடியு முடியுமமைந்தது=உற்பத்தியு நாசமும் பொருந்தியது; ஓராத்தி = ஓராத்திமரம், (உலக சம்பந்தம்);முடிய = கெட, நுனியின்கண்=(அதனது) தலையில்; முத்தலை மூங்கில் = முத்தினைச் சிந்துகின்ற மூங்கில், (முத்தியைத்தரும் சிவம் வெளியாம்);கொடியும் படையும்=நினைப்பும் மறப்பும்,(கொடி எழுதலும் படை விழுதலும் பற்றி இவ்வாறு கூறப்பட்டது) கோட்சரன்=குற்றம் பொருந்திய வம்பை (ஒத்த); ஐயைந்து (ஐந்தும் ஐந்தும்) = ஞானேந்திரியமைந்தின் வியாபாரமும், கன்மேந்திரிய மைந்தின் வியாபாரமும்; மடியும் = கெடும்; அவ்வாறு = அவ்வழியால் ; வலம்புரி = வலம்புரிச் சங்கினொலி (பந்தஜயம்); வாய்த்தது=சித்தித்தது;

2918. குன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்
தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துக்
குன்றாமை கூடித் தராசி னிறுத்தபின்
பன்றி நிறையைக் குறைக்கின்ற வாறே. (௫௩)

2919. மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டி
கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம் [னைக்
பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினாற்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதே. (௫௪)

2920. நீரின்றிப் பாயு நிலத்தினிற் பச்சையாம்
யாவரு மென்று மறியவல் லாரில்லை
கூரு மழைபொழி யாது பொழிபுன
றேரினிந் நீர்மை திடரினில் லாதே. (௫௫)

---

2918. குன்றியும்=குன்றிமணிச்செடியும் (தோல்வியும்); பாம்பும் = வெற்றியும் (பாம்பு பிறரைச் சுண்டவிடத் தெழுவது பற்றி அவ்வாறு கூறப்பட்டது); பசு=ஆடு (அடங்குதல்); முசுவானரம்=ஒருவகைக் குரங்கு (அடங்காமை); தென்றிக்கிடந்த (தென் திக்கு இடந்த)=நன்றாக எவ்விடத்துஞ் சிதறி யிருக்கும்; சிறுநரிக்கூட்டத்து = மனோராஜ்யத்துள்; குன்றாமை கூடி=(ஒருவன்) சோர்வடையாதடைந்து; தராசின்=தராசினுனிபோல; நிறுத்த பின் = (சித்த விருத்தியைச் சிவத்தில்) நிறுத்தினால்; பன்றி நிறையை = அவிச்சையின் மிகுதியை (கருமைபற்றி அவிச்சையைப் பன்றியெனக் கூறப்பட்டது); குறைக்கின்றவாறு=குறைவடையச் செய்யும் விதமாம்.

2919. மொட்டித்தெழுந்த தோர்மொட்டு=அரும்பி யெழுந்ததொரு மொக்கு (சாந்த விருத்தியில் சிறிது வெளிப்பட்டுத் தோன்றுஞ் சிவாநந்தம்); கட்டு விட்டோடின் = யானெனதென்னும் பந்தம் விட்டொழிந்தால்; மலர்தலும் = மலர்தலையும், (சிவாநந்தம் வெளிப்படுதலையும்); பற்றுவிட்டு = (விஷயங்களை) பற்றுவதில் (சித்த விருத்தியை) செலுத்தி; அம்மனை=அப்பந்தத்தை விடுதலை (மனை-வீடு); பாழ்பட= சூனியமாக; காணவொண்ணாது=(சிவாநந்தத்தை) அனுபவிக்கமுடியாது.

2920. நீரின்றி = சித்தவிருத்தி யில்லாது; பாயும் = (சிவாநந்தம்) பெருகும்; நிலத்தினில்=சித்தத்துள்; பச்சையாம் = சிவம் வெளியாகும் (அழியாமைபற்றிப் பச்சையைச் சிவம் என்று கூறப்பட்டது); கூருமழை பொழியாது=சிறிதும் விஷய சம்பந்தமில்லாது; பொழிபுனல்=பெருகுகின்ற சிவாநந்தம்; இந்நீர்மை=இத்தன்மையை; திடரினில்லாது=(அவ்வாநந்தம்) பகிர்முகப்பட்ட சித்தத்தில் நிலைபெறாது; திடர் = மேடு.

**2921.** கூகை குருந்தம தேறிக் குணம்பயின்
மோக முலகுக் குணர்கின்ற காலத்து
நாகமு மொன்று நடுவுரை செய்திடும்
பாகனு மாகின்ற பண்பனு மாமே. (௫௬)

**2922.** வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பர்
வாழையுஞ் சூரையும் வன்றுண்டஞ் செய்திட்டு
வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறே. (௫௭)

**2923.** நிலத்தைப் பிளந்து நெடுங்கட லோட்டிப்
புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையா
தருத்தமு மின்றி யடுவது மாமே. (௫௮)

---

2921. கூகை குருந்தமதேறி=கோட்டானென்னும் பறவை குருந்த விருட்சத்தின்மீதேறி (அஞ்ஞான சீவன் குருமூர்த்தியை அடைந்து); குணம் பயின் மோகம்=முக்குணம் பொருந்திய மாயை; உணர்கின்ற காலத்து=காரணமென் றறியும்போது; நாகமும் = குரங்கையொத்த மனமும்; நடு = நடுநிலை; பாகன்=செலுத்துபவன்; பண்பன்=தகுதியுடையவன்.

2922. வாழையுஞ் சூரையும்=வாழைமரமும் ஒருவகை முட்செடியும் (இன்பமுந் துன்பமும்); வந்து = (இருவினையால்) உண்டாய்; இடங்கொண்டன = (அந்தக்கரணத்தை) இடமாகக் கொண்டன; வன்றுண்டஞ் செய்திட்டு = வலிமையாகத் துண்டித்தால் (அந்தக்கரண தருமமாகக் கண்டால்);வாழை (வாழ்+இ) = நிலைத்துள்ள சிவத்தை; வாழ்கின்றவாறு = ஆநந்தமாயிருக்கும் வகையாம்.

2923. நிலத்தைப் பிளந்து = பூமியைத் தோண்டி; (நிலைபெற்ற சிவத்தை யுணராது); நெடுங்கடலோட்டி = பெருஞ் சமுத்திரத்திலே (தோணியை) செலுத்தி (மிக்க சீவபோதத்திலே புத்தியைச் செலுத்தி); புனத்துக்குறவன் = தினைப் புனத்துள்ள குறவன் (சுக துக்கந்தரும் வினைவசத்துள்ள ஜீவன்); புணர்ந்த=கூடிய (அடைந்த); கொழுமீன் = ஒரு வகை மச்சம் (தேகபந்தம்); அருத்தமு மின்றி=நற்பயனைத் தராமையன்றி ; அடுவதுமாம் = (ஜனன மரணங்களால்) வருத்துவதுமாம்.

2924. தளிர்க்கு மொருபிள்ளை தட்டா னகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்
களிக்குங் குசவர்க்குங் காவிதி யார்க்கு
மளிக்கும் பதத்தொன் றுய்ந்துகொள் வார்க்கே. ()

2925. குடைவிட்டுப் போந்தது கோயி.லெருமை
படைகண்டு மீண்டது பாதி வழியி
லுடையவன் மந்திரி யுள்ளளு மூரா
ரடையா நெடுங்கடை யைந்தொடு நான்கே. (சூ0)

2926. போகின்ற வெட்டும் புகுகின்ற பத்தெட்டு
மாகிப் படைத்தன வொன்பது வாய்தலு
நாகமு மெட்டொடு நாலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாமே. (சூக)

2924. தளிர்க்கும்=விருத்தியாம்; ஒருபிள்ளை (பிள் × ஐ)=ஒன்றாக வேறுபட்ட சுகம்; தட்டானகத்து = பற்றற்றவனது சித்தத்து; விளிப்பது=கூப்பிடுவது; சங்கு=(பிராணாயாமத்தாற் பெறப்படும்) சங்கோசை; வேந்தனை = ஆத்மாவை; குசவர்க்குங் காவிதியார்க்கும்=குயவர்க்கும் கணக்கர்க்கும் (இரேசக வாயுவிற்கும் பூரகவாயுவிற்கும்); அளிக்கும் பதத்து=(இரையாக மனத்தை) கொடுக்குஞ் சமயத்து; ஒன்று = ஒப்பற்ற கும்பகத்தை; ஆய்ந்து=(குருமூலமாக) ஆராய்ச்சிசெய்து.

2925. குடைவிட்டுப் போந்தது=(விஷயங்களை) பற்றுதலினின்று நீங்கி (சிவத்தினிடத்து) சென்றது; கோயிலெருமை = ஆத்மாவிற்கிடமாகிய சித்தவிருத்தி; படை=சேனை (தடையாய காமாதிவிர்த்தி); பாதிவழியில்=அப்பியாசத்தினிடையில்; உடைய வன் மந்திரி = (அப்போது விஷயவாசனை) உடைய வலிய புத்தி; உள்ளளும்=(விஷயங்களை) கருதிய வளவில்; ஊரார்=தேகியார் (சீவனுர்); நெடுங்கடை யைந்தொடு நான்கு=(கண்ணுதி) பெரிய வாவி லொன்பதையும்;

2926. போகின்ற வெட்டும்=(விடயங்களில்) செல்லும் விருப்பமும் (அதனல்); புகுகின்ற=வந்தடைகின்ற; பத்தெட்டும்=(எட்டும்பத்தும்)=(குலம், நாணம்,சீலம், பலம், ஜயம்,பயம்,தயவு, மோகம் என்னும்) அஷ்டபாசமும்; படைத்தன = உண்டாயிருக்கின்றன; ஒன்பது வாய்தலும்=கண் முதலிய ஒன்பது துவாரமும்; நாகமுமெட்டு (எட்டு நாகமும்) = எட்டு மதயானையும் (குலம், சீலம், தனம், அழகு, யௌவனம், வித்தை தவம், அரசு என்னுமெட்டும் மதமெனப்படுதலின், அவ்வாறு கூறப்பட்டது); நாலுபுரவியும்=நான்கு குதிரையும் (பிராஹ்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னுஞ் சாதிநான்கும் பிரவிர்த்திக் கேதுவா யிருத்தலி னவ்வாறு கூறப்பட்டது); பாகன்= புத்தி;பன்றியும்=மோகமும்(தகுதி,தகுதியின்மையுணராமை பற்றி அவ்வாறுகூறப்பட்டது); ஆம்=மேன்மேலுமுண்டாம்.

**2927.** பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணுந்
தூசி மறவன் றுணைவழி யெய்திடப்
பாசங் கிடந்து பதைக்கின்ற வாறே. (சுஉ)

**2928.** கும்ப மலைமே லெழுந்ததோர் கொம்புண்டு
கொம்புக்கு மப்பா லடிப்பதோர் காற்றுண்டு
வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வ னீசனே. (சுஙு)

**2929.** வீணையுந் தண்டும் விரவி யிசைமுர
றாணுவு மேவித் தகுதலைப் பெய்தது
வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னங்
காணியு மங்கே கலக்கின்ற வாறே. (சு௪)

---

2927. பாசிபடர்ந்து=(காமகர்ம அவிச்சைகளாகிய)பாசியானது விரிந்து; குளத்திடை=தடாகத்தின் (மனத்தின்) கண்; கூசியிருக்குங் குருகு = அஞ்சியிருக்கின்ற கொக்கு (சீவன்); இரைதேர்ந்துண்ணும்=மீனாகிய வுணவை யாராய்ந்துண்ணும் (விடயங்களை இதுநன்று, இது தீதென்றாய்ந்தனுபவிப்பன்); தூசிமறவன்=படை வகுப்பிலுள்ள வீரன் (சாதனக்கூட்டத்துள்ள வைராக்கியம்); எய்திட=செல்ல; பாசம் = (பிறவிக்கேதுவாகிய) மோகம்; பதைக்கின்றவாறு=பையப் பையக் கெட்டொழியும் வழியாம்.

2928. கும்பமலைமேல் = (விஷய விருத்தி) அடங்கிய சித்தத்து; எழுந்ததோர் கொம்பு = உண்டாய தொருகிளை (பேரின்பம்); அடிப்பதோர் காற்று = (அது தொடர்ந்துவர) வீசுவதாய தொருவாயு (சுபவாசனை); வம்பாய் மலர்ந்ததோர் பூ = வாசனையுடையதாய் மலர்ந்ததொருமலர்(ஞானமயமாய்விளங்கிய தோரான்மா); வண்டாய் = வண்டுபோல; மணங்கொள்வன்=(ஒன்றாக) பொருந்துவன்.

2929. வீணையுந்தண்டும்=யாழும் வேய்ங்குழலும்;விரவியிசைமுரல்= கூடியின்னோசையைச் செய்யும் (வீணையோசையும் புல்லாங்குழலோசையும் உண்டாக என்றபடி); தாணுவும்=பிராண வாயும்; மேவி=(வசமாக) பொருந்தி; தகுதலைப்பெய்தது= கும்பகத்தை யடைந்தது; வாணிபம் = (விஷய) வியாபாரம்; சிக்கென்று=விரைவாக;அதுவடையாமுன்னம்=(கெடுக்க) அதனைச் சேருவதற்கு முன்னர்; காணியும்=(யாவற்றையும்) அறியுந்தன்மையும்; ஆங்கே=அப்பிராணாயாமத்தில்; கலக்கின்றவாறு=சேருகின்ற வகையாம்.

2930. கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது
வங்குபுக் காலன்றி யாய்ந்தறி வாரில்லை
திங்கள்புக் காலிரு ளாவ தறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. (௬௫)

2931. போதும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
யேதமி லீச னியங்கு நெறியிது
மாத ரிருந்ததோர் மண்டலந் தானே. (௬௬)

2932. கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே
காமுற்ற கத்தி யிடுவர் கடைதொறு
மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டினு லைந்துண்ண லாமே. (௬௭)

---

2930. கொங்குபுக்காரொடு வாணிபஞ்செய்தது = கொங்கு தேசத்திற் சென்றவருடன் வர்த்தகஞ் செய்ததை (விஷய வாசனையால் பகிர்முகப்பட்ட மனத்தோடு கூடி வியாபாரஞ்செய்ததை); அங்கு புக்காலன்றி=நன்னிலத்தில் (துரிய பூமியில்) சென்றாலல்லது; திங்கள் புக்கால் = சந்திரோதயமாயின்; இருளாவது=இருளுண்டாயிருத்தலை; தங்கு புக்கார்=தமக்குரிய பூமியில் (துரிய பூமியில்) சென்றனர்; தாபதர்=தபசிகள்.

2931. போதும் புலர்ந்தது = (அஞ்ஞான வடிவ) இரவு விடிந்தது; பொன்னிறங்கொண்டது = (ஞான) சூரியன் பிரகாசமாக வுதயமாயிற்று; தாதவிழ் புன்னை = மகரந்தங்களைச் சிந்தும் புன்னைமரம் (அருளைப்பொழியுஞ் சிவம்); தயங்கு மிருகரை (இருகரை தயங்கும்) = (உள்முகம் வெளிமுகமென்னும்) இரண்டிடத்தும் விளங்கா நிற்கும்; ஏதமிலீசன்=குற்றமில்லாத சிவம்; இயங்கு நெறியிது = விளங்கு மார்க்க மிதுவாகும் (அம்மார்க்கம் நடைபெறுமிடம்) ; மாதர்=அழகு; மண்டலம் (மண் × தலம்)=பூமண்டலமாம்.

2932. கோ(ப)முற்றமரும்=விருப்பு வெறுப்புப்பொருந்தும் (கோபம் காமத்திற்குமுபலட்சணமாம்);குடிகளும்=சீவர்களும்;கா(ம)முற்ற=விரும்பிய பொருளை (பற்றி); கடைதொறும்=(அஃதுள்ள) இடந்தோறும் (சென்று); மீவற்ற = பிறவிகெட; எல்லை=(பிரபஞ்சத்தின்) எல்லையை; வழிகாட்டி=(செல்லும்) மார்க்கத்தை யுபதேசித்து; ஆமுற்ற தட்டினல்=சீவபோத முற்றையு மொழித்தால்; ஐந்துண்ணலாம் = பஞ்சாக்கரப் பொருளான சிவாநந்தத்தை யனுபவித்தலாம்.

**2933.** தோட்டத்தின் மாம்பழந் தோண்டி விழுந்தக்கா
ஞட்டின் புறத்தி னரியழைத் தென்செயு
மூட்டிக் கொடுத்து முதல்வனை முன்னிட்டுக்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. (௬௮)

**2934.** புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போக நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே. (௬௯)

---

2933. தோட்டத்தின் மாம்பழந்தொண்டி விழுந்தக்கால் = தோட்டத்தின்கணுள்ள மாங்கனியினிடத்து (வண்டால்) துவாரமுண்டாயின் (சித்தத்துள்ள சுகசமாதியில் வாசனுவசத்தால் கெடுதியுண்டாயின்); நாட்டின் புறத்தினரி=ஊர்க்குப் புறம்பிடத்துள்ள நரியை (பகிர்முகத்துள்ள கிரியாசாதனத்தை); அழைத்தென் செய்யும்=கூப்பிட்டால் (அது வந்து) என்ன செய்யும் (மேற்கொண்டால் அது யாது பயனைச்செய்யும்), (அழைத்தென்பது அழைத்தாலென்பதன் திரிபு); மூட்டிக் கொடுத்து = (சுகசமாதி புரியுமாறு) பிரேரேபித்து; முதல்வனை முன்னிட்டு = தட்சணமூர்த்தியை முன்னிலையாக வைத்து; காட்டிக்கொடுத்தவர் = உபதேசித்தருளிய குருமூர்த்தி; கைவிட்டவாறு = (அது) கைசோரவிட்ட வகையாலாயதாம்.

2934. புலர்ந்தது போதென்று=(மோக) இருள்கெட்டதென்று; புட்கள் சிலம்ப=பறவைகளொலிசெய்ய (சுருதி குருசுவானுபவம் தெரிவிக்க); பூங்கொடி=பெண் (மாயை); புல்லி=விடாது பற்றி; போகநுகரும் புலம்பனுக்கு=விஷயபோகங்களை யனுபவிக்குஞ் சீவனுக்கு ; புலர்ந்திலை=கெடுவதில்லை; போது= (மோக) இருள்.

2935. தோணியொன் றுண்டு துறையில் விடுவது
வாணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்
வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை
யாணி கலங்கி னதுவிது வாமே. (௭0)

உச-வது மோன சமாதி.

2936. நின்றா ரிருந்தார் கிடந்தா ரெனவில்லை
சென்றார்தஞ் சித்த மோன சமாதியா
மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு
சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே. (௧)

2937. காட்டுங் குறியுங் கடந்தவர் காரண
மேட்டின் புறத்தி லெழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது
வாட்டின் கழுத்தி லதர்கிடந் தற்றே. (௨)

---

2935. தோணியொன்று=(உடம்பென்னும்) ஒருமிதவை; துறையில்=முத்தியென்னும் (இறங்கும்) துறைமுகத்து; ஆணி மிகுத்து = (மிதவையின்) பக்க மரத்தை மிதித்துநின்று (தத்தங்கோளகத்திருந்து); ஐவர் = பஞ்சேந்திரியங்கள்; கோலூன்றலும்=(தத்தமக்குரிய) விஷயங்களைப்பற்றியவளவில்; வாணிபஞ் செய்வார் வழி = வர்த்தகரிடத்து (அஞ்ஞானத்தை வாங்கி மெய்ஞ்ஞானந்தருங் குருவின் வாயிலாக); இடையாற்றிடை=நட்டாற்றில்(நடுநிலையில்); ஆணி= மிதவையி னிருப்புக்கேதுவான விருப்பாணி (பிறவிக் கேதுவான வவிச்சை); கலங்கின்=கெட்டால்; அதுவிதுவாம்= அச்சிவம் இச்சீவனும் (தத்துவமசியாம்).

2936. எனவில்லை=என்று (தாமதஞ் செய்தல்) இல்லாது; சென்றார்தஞ்சித்தம்=(சமாதியப்பியாசமுறையில்) சென்றவரது மனம், மோனசமாதியாம்=மௌன நிலையாம்; அங்கே=அம் மோனசமாதியில், மறைப்பொரு ளொன்று=ஒரிரகசியார்த்தம் (பரமசிவம்); ஆங்கணைந்தவர்=அம்மோனசமாதி கூடினவர்.

2937. காட்டுங்குறியுங் கடந்தவர்=(குரு) தெரிவிக்கு மிலட்சியத்திற்கு மப்பாற்பட்ட சிவத்தினை (அடையும்); காரணம் = சாதனத்தை; எட்டின் புறத்தில் = ஏட்டினிடத்து; கூட்டும்=(தம்மை யடைந்தவரை நல்வழியில் சேர்க்கும்; அதர்= மயிர் பொதிந்து தொங்கு மாமிசத் துண்டு; கிடந்தற்று = (பயனற்று) இருப்பதுபோலாம்.

2938. உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்று
முணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
யுணர்வுடை யார்க ளுணர்த்தவக் கால
முணர்வுடை யார்க ளுணர்ந்துகண் டாரே. (௩)

2939. மறப்பது வாய்நின்ற மாயநன் னுடன்
பிறப்பினை நீங்கிய பேரரு ளாளன்
சிறப்புடை யான்றிரு மங்கையுந் தானு
முறக்கமில் போகத் துறங்கிடுந் தானே. (௪)

2940. துரியங்கண் மூன்றுங் கடந்தொளிர் சோதி
யரிய துரிய மதன்மீது மூன்றாய்
விரிவு குவிவு விழுங்கி யுமிழ்ந்தே
யுரையி லனுபூ திகத்தினுள் ளானே. (௫)

2941. உருவிலி யூனிலி யூனமொன் றில்லி
திருவிலி தீதிலி தேவர்க்குந் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே. (௬)

---

2938. உணர்வுடையார்க்கு=ஞானிசட்கு; உறுதுயர் = (அதனால்) நேருந்துன்பம்; உணர்த்த=(சிவத்தை) அறிவிக்க; உணர்வுடையார்=திடவறிவுடையோர்.

2939. மறப்பதுவாய்=(தன்னை) அறியாமையின்மயமாய்; மாயநன்னுடன் = பொய்யான ஸ்தூலமுடைய சீவனது, திருமங்கை=திருவருட் சத்தி; உறக்கமில் போகத்து = சிவயோக சமாதியின் கண்; உறங்கிடும்=அமைந்திருப்பன்.

2940. துரியங் கண்மூன்றும் = ஜீவதுரிய முதலிய முத்துரியமும்; மூன்றாய்=ஜீவதுரியாதீத முதலிய மூன்று வகையினதாய்; விரிவுகுவிவு=நினைப்பு மறப்பு; விழுங்கி யுமிழ்ந்து=கொண்டொழித்து (வருதலில்லாத); உரையில் = சொல்லுதற்கியையாத; அனுபூதிகத்தின் = சுவானுபவமென்னும் நடுநிலையில்.

2941. ஊனிலி=மாயாரகிதன்; திருவிலி = அழகிய மகா மேருவை வில்லாக வுடையவன்; மருவிலி=அசங்கன்.

2942. கண்டறி வாரில்லை காயத்தி னந்தியை
யெண்டிசை யோரு மிறைவனென் றேத்துவ
ரண்டங் கடந்த வளவிலா வானந்தத்
தொண்டர் முகந்த துறையறி யோமே. (எ)

2943. தற்பர மல்ல சதாசிவன் றானல்ல
நிட்கள மல்ல சகள நிலையல்ல
வற்புத மாகி யநுபோகக் காமம்போற்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. (அ)

2944. முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா
ளகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

2945. அப்பினி லுப்பென வத்த னணைந்திட்டுச்
செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தமை
யெப்படி யப்படி யென்னுமவ் வாறே. (கo)

2946. கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழந்
தின்றார்க் கறியலா மப்பழத் தின்சுவை
பெண்டா னிரம்பி மடவிய ளானாற்
கொண்டா னறிவன் குணம்பல தானே. (கக)

---

2942. காயத்தின்=உடம்பினுள்; முகந்த=மொண்ட (அனுபவித்த); ஆனந்தத்துறையென் றன்வயித்துக்கொள்க.

2943. தற்பரம் = அந்தமகேசன்; நிட்களம் = உறுப்பில்லாதது; சகளம்=உறுப்புடையது; கற்பனை=பொய்.

2944. அகத்திற்கண்கொண்டு = உள்விழிப் பார்வையால் ; காண்பதே=(சிவத்தை) தரிசிப்பதே; ஆடிய=அனுபவித்த.

2945. அப்பினிலுப்பென = நீரி லுப்புக் கலந்தாற்போன்று, அத்தன் = சிவபிரான்; பராபரம்=தத்பத வாச்சிய ஈசன்; பரம்=துவம்பத வாச்சிய ஜீவன்; கப்புறு சொற்பதமாள = (ஒன்றோடொன்று) தொடர்ந்தசொன்னிலை யொழிய.

2946. காஞ்சிரத்தின்பழம் = எட்டிப்பழம் ; மடவியளானல்=மங்கைப் பருவமுடையவளாயின்; கொண்டான்=கணவன்;இத் திருமந்திரம் ஒட்டணியாம்.இதன் உவமேயமாவது—உலகம் முன்னினிதாய்க் காணப்பட்டு, பின் அநுபவ முதிர்ச்சியால் இன்னாததாய்க் காணப்படுமென்பதும், சித்தசுத்தியுண்டாயவிடத்து ஆன்மா பலநன்மைகளைப்பெறுமென்பதுமாம்.

2947. நந்தி யிருந்தா னடுவுட் டெருவிலே
சந்தி சமாதிக டாமே யொழிந்தன
வுந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப்
புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே. (௧௨)

2948. விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து
பதறு படாதே பழமறை பார்த்துக்
கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை
யுதறிய பாழி லொடுங்குகின் றேனே. (௧௩)

2949. வாடா மலர்புனை சேவடி வானவர்
கூடா ரறநெறி நாடொறு மின்புறச்
சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று
நாடா ரமுதுற நாடா ரமுதமே. (௧௪)

---

2947. நடுவுட்டெருவில் (உட்டெரு நடுவில்) = சித்தத்தின் மத்தியில்; சந்தி சமாதிகள்=(அவனோடு) கூடுதலும் (அதற்கேதுவாகிய) சமாதியும்; தாமே யொழிந்தன=(வாசனாவசத்தால்) தம்மிற்றாமே கெட்டொழிந்தன (பிறகு); உந்தியினுள்ளே= உந்தியினின்று (மணிபூரகத்திலிருந்து); சோதியை = சிவத்தை; புத்தியினால்=ஒரு முகப்பட்ட சித்தவிருத்தியினால்.

2948. விதறு = சோர்வு; வேறிருந்து = தனித்திருந்து; பதறு படாது=விரைவினை யடையாது; கதறிய பாழை = ஒட்டெடுக்கு மாயையை; அந்தக் கற்பனை யுதறிய பாழில்=அம்மாயா கற்பனையை (இயல்பாக) விட்டுள்ள சூனியாதாரசிவத்தில்.

2949. வாடாமலர் புனைசேவடி வானவர் = அன்றலர்ந்த மலர்சூடுந் திருவடியையுடைய பரசிவமூர்த்தி ; கூடா ரறநெறி = (தம்மை) அடையாதவர் அறநெறியில் (சென்று); சேடார் கமலச் செழுஞ்சுடருள் = அழகமைந்தவிதய தாமரைமலர் மீது;சென்றும்=எழுந்தருளியிருந்தும்; நாடார்=விரும்பார்; அமுதுற=சிவானந்த மடைய.

**2950.** அதுக்கென் றிருந்தா ரமர்ந்தசொற் கேட்டும்
பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோற்
சதுக்கென்று வேறே சமைந்தாரைக் காண
மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே. (கரு)

**2951.** தானு மழிந்து தனமு மழிந்துநீ
டூனு மழிந்து வுயிரு மழிந்துடன்
வானு மழிந்து மனமு மழிந்தபி
னானு மழிந்தமை நானறி யேனே. (கசு)

**2952.** இருளும் வெளியு மிரண்டையு மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள் ளாகி
யருளா லழித்திடு மத்த னடிக்கே
யுருளாத கன்மன முற்றுநின் றேனே. (கஎ)

**2953.** ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பராபர
மொன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
யொன்றிநின் றுள்ளே யுணர்ந்தே னுணர்வினை
யொன்றிநின் றேபல வூழிகண் டேனே. (கஅ)

---

2950. அதுக்கென்று (அதற்கென்று) = அக்காமவின்பந் தருவதற்கென்று; இருந்தார்=இருக்கு மங்கையரது; பொதுக்கென = விரைவாக; சதுக்கென்று (சதுக்கம் என்று)=அந்தக்கரணவிருத்தி நான்கு மொருங்கு சாந்திபெறு முத்தி யடைதற்கென்று; வளம் தரும=தத்துவோபதேசஞ் செய்தருளுவன்.

2951. தான்=உடம்பு; தனம்=பொருள்; ஊன் = மாமிசம்; உயிர்= பிராணவாயு; வான்=ஆகாயம், (இது மற்றைப் பூதங்கட்கு முபலட்சணமாம்); நான்=சீவபோதம். இத்திருமந்திரம்— "வான்கெட்டு" என்னுந் திருவாசகத்தோடொப்பிட்டறியத் தக்கதாம்.

2952. இருளும் வெளியும்=மறப்பும் நினைப்பும்; பொருளிற் பொருளாய்ப் பொருந்த=பொருள்களுள் சத்துப்பொருளா யமைய; உள்ளாகி=சித்தத்தெழுந்தருளி; அழித்திடும்=(மோகத்தை) கெடுத்த; உருளாத=சென்றுருகாத.

2953. ஒன்றி நின்று = ஒரு முகப்பட்டிருந்து; உள்ளே = சித்தத்துள்ளே; உணர்வினை = தத்துவஞானத்தினை; பலவூழி = பல யுகமுடிவினை.

உரு-வது வரைவுரை மாட்சி.

**2954.** தான்வரை வற்றபி னாரை வரைவது
தானவ னனபி னாரை நினைவது
காமனை வென்றகண் ணாரை யுகப்பது
தூமொழி வாசகஞ் சொல்லுமி னீரே. (க)

**2955.** உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூடர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தானன் புரிசடை யோனே. (உ)

**2956.** மனமாயை மாயையிம் மாயை மயக்க
மனமாயை தான்மாயு மற்றொன்று மில்லை
பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே. (ங)

---

உசு-வது அணைந்தோர் தன்மை.

**2957.** மனமில்லை மாசில்லை மானபி மானக்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே. (க)

---

2954. தான்=(ஆன்மாவாகிய) தான்; வரைவற்றபின்=(ஒன்றை) பற்றுதலற்ற பின்னர்; ஆரைவரைவது=எவரைப்பற்றுவது; அவனனபின் = அச்சிவமான பின்னர்; காமனை= மன்மதனை (மாதர் போகத்தை); வென்றகண் = வெற்றி கொண்ட அறிவினால்.

2955. உரையற்ற தொன்றை = வாக்கிற் கப்பாற் பட்டதாகிய தொரு சிவத்தை; கரை=எல்லை; திரையற்ற நீர்போல் = நிஸ்தரங்க சமுத்திரம்போல; புரையற்று = மறைவின்றி.

2956. மனமாயை மாயை=மனோசங்கற்பமே மாயையாம்; இம்மாயை மயக்க=இச் சங்கற்பத்தைக் கெடுக்க; மனமாயை = மன வடிவமாயை; மற்றொன்றுமில்லை=(அதைக் கெடுப்பதற்கு) பிறிதொரு சாதனமும் வேண்டப்படுவதின்றாம்; பினைமாய்வ தில்லை=(இதற்கு) மேல் கெடுவதொன்றில்லை.

2957. பலமன்னி = உறுதியாக வடைந்து; அன்பிற் பதித்து = அன்பின்கண் பொருந்தச் செய்து.

2958. ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளு நானுமொன் றானே
னிழிந்தாங் கினிவரு மார்க்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. (உ)

2959. ஆலைக் கரும்பு மமுதுமக் காரமுஞ்
சோலைத்தண் ணீரு முடைத்தெங்க ணாட்டிடைப்
பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வாளொரு
கோலப்பெண் ணாட்குக் குறைவொன்று மில்லையே. ().

2960. ஆராலு மென்னை யமட்ட வொண் ணாதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லாதினி
யார்பாடுஞ் சாரா வறிவறிந் தேனே. (ச)

2961. பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந்
தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை
யரிந்தேன் வினையை யயின்மன வாளான்
முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே. (ரு)

---

2958. உறவென்னும் பாசம்=பந்துக்களது கட்டுப்பாடு; இழிந்து= இழிவாக; செழுஞ் சார்வுடைய = (யாவற்றிற்கும்) சிறந்த ஆதாரமாகவுள்ள.

2959. கரும்பு=கரும்பிரசம்; அமுது=பால்; அக்காரம்=வெல்லம்; சோலை=தோப்பு; உடைத்து=(இவைபோல இனிமையாக சிவானந்தம்) உடையதாம்; எங்கணாட்டிடை=எமது தேயத்தில் (அனுபவத்தில்); பீலிக்கண்ணன்ன=மயிலிறகின்கண் போல(விசித்திரமாய); வடிவு—பெண்ணாட்கு=மனத்திற்கு.

2960. அமட்ட வொண்ணாது=பந்தப்படுத்த முடியாது; சீராடி = சிறப்பமைந்து ; அங்கே = அச் சிவத்தில் ; யார் பாடும் = யாரிடத்தும்; அறிவு=தத்துவ ஞானம்.

2961. பிணித்ததோர் பாசம்=கட்டியதொரு (பிறவி) கட்டினின்று; அயின்மன வாளால்=கூர்மையுடைய மனமாகிய வாட்படையால்; முரிந்தேன்=கெடுத்தேன்; புரத்தினை=உடம்பினை.

2962. ஒன்றுகண் டீருல குக்கொரு தெய்வமு
மொன்றுகண் டீருல குக்குயி ராவது
நன்றுகண் டீரினி நமசிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. (௬)

2963. சந்திரன் பாம்போடு சூடுஞ் சடாதரன்
வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவ
னந்தமு மாதியு மில்லா வரும்பொருள்
சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. (௭)

2964. பண்டெங்க ளீச னெடுமால் பிரமனைக்
கண்டங் கிருக்குங் கருத்தறி வாரில்லை
விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடிற்
றுண்டங் கிருந்ததோர் தூறது வாமே. (௮)

2965. அன்னையு மத்தனு மன்புற்ற தல்லது
வன்னையு மத்தனு மாரறி வாரென்னை
யன்னையு மத்தனு மியானு முடனிருந்
தன்னையு மத்தனை யான்புரந் தேனே. (௯)

---

2962. உயிர்=ஆன்மா.

2963. தியக்கு=சரீராதிகளில் யானெனதென்னு மயக்கத்தை.

2964. பண்டு=அநாதி (ஆக); நெடுமால் = விஷ்ணு; கண்டு = படைத்து (காத்தழித்து); விண்டு=மேகம் (சிவானந்தம்); வெறுமனம்=விஷயாகார விருத்தியற்ற சித்தம்; துண்டு= உலகாதீதமாகிய சிவம்; தூறதுவாம் = (அம்மனம்) ஆசன மாம்.

2965. அன்புற்ற தல்லது = அன்பு பொருந்தின தல்லாமல்; அன்னையு மத்தனும்=தாயையுந் தந்தையையும்; என்னை= (அஃதன்றிப் பிறிது காரணம்) யாது (உண்டு); அன்னையு மத்தனு மியானு முடனிருந்து = திருவருளோடும் சிவத்தோடும் அடியேனும் (கூடி) இருந்து; புரந்தேன்=(விலகா வண்ணம் சமாதி வாயிலாக) பாதுகாத்தேன்.

2966. கொண்டசுழியுங் குலவரையுச்சியு
மண்டரு மண்டத் தலைவரு மாதியு
மெண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே
யுண்டனர் நானினி யுய்ந்தொழிந் தேனே. (கo)

2967. தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே வடவரை யாதியு மாய்நிற்குந்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே யுலகிற் றலைவனு மாமே. (கக)

2968. நமன்வரின் ஞானவாள் கொண்டே யெறிவன்
சிவன்வரி னானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினை பண்டே யறுத்தேன்
றவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராமே. (கஉ)

2969. சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தஞ் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தாமாமென் றெண்ணியே. (கங)

---

2966. சுழி=கடல்; குலவரை = மேருமலை; அண்டர் = தேவர்; அண்டத் தலைவர்=இந்திரன் முதலிய விறைவர்; ஆதி = உருத்திரன் (மாயையுமாம்); உண்டனர் = வசப்பட்டனர். இத்திருமந்திரம்—எல்லாமா யிருக்குந் தன்மை கூறிற்று.

2967. வடவரை=மேருமலை; தத்துவமாய்=மாயைமுதலிய தத்துவ (பதார்த்த) மாய்.

2968. எறிவன் = வெட்டுவன்; திண்ணம் = நிச்சயம்; பவம் வரும் வல்வினை = பிறவி வருதற் கேதுவாகிய வொழித்தற்கரிய விருவினையை; தவம் வருஞ் சிந்தைக்கு=விருத்தி சூனியம் வந்த மனத்தினிடத்து; தான்=சிவம்; எதிராம்=வெளியாம்.

2969. சித்தஞ் சிவமாய் = மனஞ் சிவாகாரமாக; சுத்தஞ் சிவம் = நிர்க்குண சிவம்; மலபந்தம் = மல வடிவ வுடற் பந்தத்தில்; கத்துஞ்சிலுகும் = பிதற்றலும் சண்டையும்; சத்தம் பரவிந்து=சொல்லுஞ் சொற்பொருளும்.

2970. நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமல னிருக்கும்
வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறிலவ னீளிய னாமே. (௧௪)

2971. சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்று
னவபெரு மானென்னை யாளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. (௧௫)

2972. பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்
துணிந்துநின்றேனினி மற்றொன்றும் வேண்டே
னணிந்துநின் றேனுட லாதிப் பிரானைத்
தணிந்துநின் றேன்சிவன் றன்மைகண் டேனே. ()

2973. என்னெஞ்ச மீச னிணையடி தாஞ்சேர்ந்து
முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறுந்
தன்னெஞ்ச மில்லாத் தலைவன் றலைவிதி
பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானே. (௧௭)

---

2970. நெஞ்சம்=மனத்தின் கண்; நீளியனும்=நீண்ட (நினைப்பிற் கெட்டாத)வனுவன்.

2971. தவ பெருமான்=தவவேடமுடைய குருமூர்த்தி; அவபெருமான் = (பற்று) அற்ற பெருமையுடையவன்; பவ பெருமானை=உலக நாயகனை.

2972. பரமாதி பதியை=மேலான நாயகனை; துணிந்து=(இவனே மெய்ப் பொருளென்று) நிச்சயித்து; அணிந்து = சேர்ந்து; உடல்=(சூக்கும) உடம்பின் (மனத்தின்) கண்; தணிந்து= சாந்திபெற்று.

2973. முன்னஞ்செய்து = (தியானிக்கும்) குறிப்பறிந்து; ஏத்த = துதிக்க; தன்னெஞ்சமில்லாத் தலைவன்=தற்போதமுடைய வுள்ளத்தில்லாதசிவபெருமான்; தலைவிதி = ஊழினை; என்னைப் பிணக்கு(என் × ஐ × பிணக்கு)=எனது (அவிச்சை முதலிய) ஐவகை மாறுபாட்டினையும்.

2974. பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணுங்
கணக்கறுத் தாண்டவன் காணந்தி யென்னைப்
பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்
வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே. (௧௮)

2975. சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற பாச மறுத்திட்
டவனெந்தை யாண்டரு ளாதிப் பெருமா
னவன்வந்தென் னுள்ளே யகப்பட்ட வாறே. (௧௯)

2976. கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தி
லரும்புங் கந்தமு மாகிய வானந்தம்
விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. (௨௦)

2977. உள்ள சரியாதி யொட்டியே மீட்டென்பால்
வள்ள லருத்தியே வைத்த வளம்பாடிச்
செய்வன வெல்லாஞ் சிவமாகக் காண்டலாற்
கைவள மின்றிக் கருக்கடந் தேனே. (௨௧)

---

2974. எண்ணுங் கணக்கு = (இனி யிருப்ப திவ்வளவு காலந்தானென்று) எண்ணுங் கணக்கினை; முன் வந்த=அநாதியாக வந்துள்ள ; துன்பம் வணக்கலுற்றேன் = துன்பத்தை (அந்தக்கரண தருமமாகக் கண்டு) கெடுத்தேன்.

2975. பவம்=பிறப்பு.

2976. கரும்புந்தேனும் = உண்டலும் உறங்கலும் ; அரும்புங் கந்தமும்=முளையுங் கிழங்கும் (தோன்றுதலு நிலைத்தலும்); உள்ளம்=சித்தத்து; வெளியுறக் கண்டபின்=வெளிப்படையாக (நன்றாக) அனுபவித்தபின்னர் ; கரும்புங்கைத்தது தேனும் புளித்தது=உண்டலுறங்கலில் பிரியமொழிவதாயிற்று.

2977. உள்ள சரியாதி யொட்டியே = தொன்று தொட்டு நடைபெற்றுவருஞ் சரியை முதலியவற்றை யனுசரித்தே; மீட்டு= பின்னரும்; வள்ளலருத்தி=சிவபெருமான் (சிவானந்தத்தை) உண்பித்து; வளம்=மாண்பு; சிவமாக=சிவச்செயலாக; கைவளம்=கைப்பொருள் (சஞ்சித வினை); கரு=கருப்பத்துள் (சேறலை).

2978. மீண்டார் கமலத்து ளங்கி மிகச்சென்று
தூண்டா விளக்கின் றகளிநெய் சேர்தலும்
பூண்டா ளொருத்தி புவனசூ டாமணி
மாண்டா னொருவன்கை வந்தது தானே. (௨௨)

2979. ஆறே யருவி யகங்குள மொன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொரு டானே. (௨௩)

2980. அன்பு ளுருகி யழுவ னரற்றுவ
னென்பு முருவ விராப்பக லேத்துவ
னென்பொன் மணியை யிறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் றிருத்துவன் றானே. (௨௪)

2981. மனம்வி ரிந்து குவிந்தது மாதவ
மனம்வி ரிந்து குவிந்தது வாயுவு
மனம்வி ரிந்து குவிந்தது மன்னுயிர்
மனம்வி ரிந்துரை மாண்டது முத்தியே. (௨௫)

---

2978. மீண்டார் கமலத்துள் = (விஷயாகாரமாதலினின்றும்) திருப்பி (சிவத்தினிடத்து) பொருந்திய உளத்தாமரையிடத்து; அங்கி மிகச்சென்று = ஞானக்கினி (தத்துவஞானம்) அதிகரிக்க (அதனால்); தூண்டாவிளக்கின் றகளி = தூண்டா தெரியும் விளக்கினதகலின்கண் (அநாதியாக விளங்கு மான்மாவினிடத்து); நெய் = சிவானந்தம்; பூண்டாளொருத்தி (அவ்வானந்தத்தை) சாந்தவிருத்தியுள்ளமனது மேற்கொண்டது; மாண்டானொருவன் = அஞ்ஞானிறந்தான் (அவிச்சை கெட்டது); புவன சூடாமணி = உலகின்கண் முடிமணி (ஆந்தன்மை); கைவந்தது = சித்தித்தது.

2979. ஆறேயருவி = ஆறு மதகுடைய (மனமுதலியவாறுணர் கருவிகளையுடைய); அகங்குளம் = ஆழமாகிய தடாகம் (காண்டற்கரியவாத்மா); நூறேசிவகதி = (சாலோக முதலிய) சிவகதி பலவாம்; நுண்ணிது வண்ணமும் (வண்ணமும் நுண்ணிது) = (அச்சிவகதி) வகையும் அதிசூக்குமமாம்; வேறே யிருக்கும் = (அவ்வான்மாவில்) தனித்திருக்கும்; விழுப்பொருள் = சிவம்.

2980. அன்பு = அன்பினால்; உள் = மனம்; திருத்துவன் = உண்பன்.

2981. விரிந்து = சத்துவாகார விருத்தியுடையதாகி; குவிந்தது = (சிவத்தில்) ஒடுங்கிய நிலை; வாயு = பிராணாயாமம்; மன்னுயிர் = (சிவத்தில்) பொருந்திய ஆன்ம நிலையாம்; உரை மாண்டது = பேச்சற்ற நிலை.

### ௨௭-வது தோத்திரம்.

2982. மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமு நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் னாட்டிடைக் கண்டுகொண் டேனே. (௧)

2983. மன்னு மலையொண் மதவா ரணத்தின்மே
லின்னிசை பாட விருந்தவ ராரெனின்
முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப்
பன்னின ரென்றே பாடறீ விரே. (௨)

2984. முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை
யெத்தனை வானோரு மேத்து மிறைவனை
யத்தனைக் காணா தரற்றுகின் றேனையோர்
பித்த னிவனென்று பேசுகின் றாரே. (௩)

2985. புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன்
புகுந்துநின் றானடி யார்தங்க ணெஞ்சம்
புகுந்துநின் றானையே போற்றுகின் றேனே. (௪)

---

2982. மாயனை=மாயையோடு கூடியசிவபிரானை; நாடி=தேடி; மனநெடுந்தேர்=மனமாகிய பெரியவிரதம்; போயினநாடு=சென்றவிடம் (சங்கற்பத்தினெல்லை); காயமின்னாட்டிடை(மின்காய நாட்டிடை) = (விரைந்தழிதலால்) மின்னலையொத்த உடம்பாகிய தேசத்து (சுத்தாந்தக்கரணத்தில்).

2983. மன்னுமலையொண் மதவாரணத்தின்மேல் = நிலைபெற்ற கைலாயமீது சிறப்புடைய மதயானைமேல் (நிலைத்த அந்தக் கரணத்தின் சாத்வீகாங்காரத்தில்); இன்னிசைபாட = இன்னிசைப் பாட்டுப்பாட (ஆனந்தானுபவ மமைய); பன்னினன்=கூறிய சீகண்டவுருத்திரர்; பாடு=பெருமை.

2984. முத்தை = ஆணிமுத்தை (பரமுத்தனை); முகிழிள ஞாயிற்றை = உதயமாகின்ற விளஞ்சூரியனை (சித்தசாந்தியில் வெளிப்படும் ஞானானந்தனை); அரற்றுகின்றேனை = கதறுகின்றவனை.

2985. போதறிவாளன்=சர்வஞ்ஞன்.

2986. பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படு
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுகின் றேனே. (௫)

2987. நாமமோ ராயிர மோதுமி னாதனை
யேமமோ ராயிரத் துள்ளே யிசைவிர்க
ளோமமோ ராயிர மோதவல் லாரவர்
காமமோ ராயிரங் கண்டொழிந் தாரே. (௬)

2988. போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேனறை யோசிவ யோகத்தைப்
போற்றுகின் றேனெம் பிரானென்று நானே. (௭)

2989. நாணு விதஞ்செய்து நாடுமி னந்தியை
யூனூர் கமலத்தி னூடுசென் றப்புறம்
வானோ ருலகம் வழிப்பட மீண்டபின்
றேனார வுண்டு தெவிட்டலு மாமே. (௮)

---

2986. பூதக்கண்ணாடியில்=ஸ்தூலதிருட்டியில்; புகுந்திலன்=அகப்படான்; போதுளன்=(அன்பரது இதய) தாமரைமீதிருப்பவன்; வேதக்கண்ணாடியில்=ஞானதிருட்டியில்; நீதிக்கண்=(சாஸ்திர) முறையில் (நின்று); கீதக்கண்ணாடியில்=ஓசையையுணருஞ் செவியால்.

2987. நாமமோராயிரம்=(பவன் சிவன் என்றற் றொடக்கத்து) அளவிறந்தபெயர்களால்; ஏமமோராயிரம்=அளவிறந்தசுகத்தை; ஓமமோராயிரம்=அளவிறந்தவேள்வி (புரிந்து) ஓதவல்லாரவர் = துதிக்கவல்லவர்கள்; காமமோராயிரங்கண்டு = அளவிறந்தபோகங்களை யனுபவித்து(பின்); ஒழிந்தார்=(பிறவியினின்று) அகன்றனர். (ஆயிரமென்ப தீண்டளவின்மைமேற்று.)

2988. தேற்றுகின்றேன்=தெளியச்செய்கின்றேன்; அறையோ=பறையடித் தறிவித்தலோ (எனுமாறு).

2989. நாணுவிதஞ்செய்து=பலவிதமான தொண்டினைப் புரிந்து; ஊனூர்கமலத்தினூடு=உடம்பின்கண் பொருந்திய மூலாதார முதலிய தாமரைமலர்களில்; சென்று = (முறையாக) போய்; அப்புறம்=பின்னர்; வானோருலகம்=அவ்வவ்வாதாரங்களிலுள்ள வதிஷ்டானதேவதைகள்; வழிப்பட=தம்வரமாக; மீண்டபின்=திரும்பியபிறகு; தேனாரவுண்டு=சிவானந்தத்தைப் பூரணமாகவனுபவித்து.

2990. வந்துநின் றானடி யார்கட் கரும்பொரு
ளிந்திர னாதி யிமையவர் வேண்டினுஞ்
சுந்தர மாதர் துழனியொன் றல்லது
வந்தர வானத்தி னப்புற மாமே. (௯)

2991. மண்ணிற் கலங்கிய நீர்போன் மனிதர்க
ளெண்ணிற் கலங்கி யிறைவ னிவனென்றா
ருண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்
தெண்ணிற் படுத்த சிவனவ னாமே. (௧௦)

2992. மெய்த்தவத் தானை விரும்பு மொருவர்க்குக்
கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்குஞ்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்க
ளத்தனை நாடி யமைந்தொழிந் தேனே. (௧௧)

---

2990. வந்து நின்றான்=(எனது சித்தத்துளெழுந்தருளி) வந்திருக்கின்றனன்; சுந்தர மாதர் துழனி யொன்றல்லது = அழகிய தேவ மங்கையரைக் கலத்த லொன்றைத் தருவதல்லாமல் (அவர்க்கு வந்து நிற்பதில்லை); அந்தரவானத்தின் = தேவருலகிற்கும்; அப்புறமாம்=அப்பாற்பட்டவனவன்.

2991. மண்ணிற் கலங்கிய நீர்போல் = சேற்றினாற் கலக்குண்ட ஜலத்தினுடைய ருசி எவ்வாறு தெரியாதோ அதுபோல்; மனிதர்கள் எண்ணிற் கலங்கி=(பரிபக்குவமடையாத)மானிடர்கள் சித்தத்திற் கலக்கமுற்று; இறைவன் இவன் எனா்= தலைவனாயுள்ள ஈசுவரன் இத்தன்மையை உடையவனென அறியமாட்டார்கள் ; குளத்தின் முகந்து ஒருபால் வைத்து உண்ணில்=(அவ்வாறு சேற்றினாற் கலக்குண்ட) குளத்து ஜலத்தை ஒரு பாத்திரத்தில்மொண்டு ஒருபக்கத்தில் சிறிது நேரம் வைத்து; தெண்ணிற்படுத்த உண்ணில் = தெளிவு படும்படிசெய்து பிறகு உண்ணில்(எவ்வாறு அந்த ஜலத்தின் ருசி நமக்குப் புலப்படுமோ அவ்வாறு); சிவனவனாமே=(கலங்கிய சித்தத்தைத் தெளிவடையச்செய்து பிறகு தியானிக்கும் பக்ஷத்தில்) அந்த ஈசுவரனுடைய ஆநந்தாமிருதத்தை நாம் அடையப்பெறுவோம்.

2992. மெய்த் தவத்தானை=உண்மையாகிய தவத்துக்கு உரியனாகிய சிவபெருமானை; ஆய் நின்ற = சிறந்து நின்றொழுகும்; அமைந்தொழிந்தேன்=செயன்மாளப்பெற்றேன்.

2993. அமைந்தொழிந் தேனள வில்புகழ் ஞானஞ்
சமைந்தொழிந் தேன்றடு மாற்றமொன் றில்லை
புகைந்தெழும் பூதலம் புண்ணிய னண்ணி
வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே. (௧௨)

2994. வள்ளற் றலைவனை வானநன் னாடனை
வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்
கள்ளப் பெருமக்கள் காண்பர்கொலோ வென்று
வுள்ளத்தி னுள்ளே யொளித்திருந் தாளுமே. (௧௩)

2995. ஆளு மலர்ப்பதந் தந்த கடவுளை
நாளும் வழிபட்டு நன்மையு ணின்றவர்
கோளும் வினையு மறுக்குங் குரிசிலின்
வாளு மனத்தொடும் வைத்தொழிந் தேனே. (௧௪)

2996. விரும்பி லவனடி வீர சுவர்க்கம்
பொருந்தி லவனடி புண்ணிய லோகந்
திருந்தி லவனடி தீர்த்தமு மாகும்
வருந்தி யவனடி வாழ்த்தவல் லார்க்கே. (௧௫)

---

2993. தடுமாற்றம்=விபரீதபுத்தி; புகைந்தெழும் பூதலம்=(மக்கள்) கோபித்தெழுகின்ற பூவுலகின்கண் (புகைதல் காமத்திற்கு முபலட்சணமாம்); புண்ணிய னண்ணி=சிவபெருமானெழுந் தருளி; வகைந்து = (இன்னதுதேகம், இன்னது தேகி யென்று) வேறுபாடுசெய்து; கெடுக்கின்ற = (தத்துவோப தேசத்தால் சீவபோதத்தை) கெடச்செய்யும்.

2994. கள்ளப் பெருமக்கள்=(யானெனு மபிமானத்தால்) வஞ்சக மிக்க மனிதர்கள்; ஆளும்=(பக்குவ நோக்கியவர்களை) ஆண் டருளுவன்.

2995. நன்மையுள்=சன்மார்க்கத்தில்; கோளும் வினையு மறுக்குங் குரிசிலின்=தீக்குணத்தையுந் தீத்தொழிலையு மொழிக்குஞ் சிவபெருமானிடத்து; வாளு மனத்தொடும் = கண்ணையும் மனத்தையும்; (வாள்-ஒளி), அஃதாகு பெயராய்க் கண்ணுக் காயிற்று).

2996. வாழ்த்த வல்லார்க்கு அடி வீரசுவர்க்கமும் புண்ணியலோக மும் தீர்த்தமுமா மென்று கொள்க; விரும்பிலவன் = (ஒன் றையும்) விரும்புதலில்லாத சிவபிரான்; பொருந்திலவன் = (ஒன்றோடும்) கூடுதலில்லாதவன்; திருந்திலவன் = (ஒன் றால்) திருந்துதலில்லாதவன்.

2997. வானக மூடறுத் தானிவ் வுலகினிற்
றானக மில்லாத் தனியாகும் போதகன்
கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளூறும்
பானகச் சோதியைப் பற்றிநின் றேனே. (௧௬)

2998. விதியது மேலை யமரா ருறையும்
பதியது பாய்புனற் கங்கையு முண்டு
துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்
பதியது வவ்விட்ட தந்தமு மாமே. (௧௭)

2999. மேலது வானவர் கீழது மாதவர்
தானிடர் மானுடர் கீழது மாதனங்
கானது கூவிள மாலை கமழ்சடை
யானது செய்யுமெம் மாருயிர் தானே. (௧௮)

---

2997. வானக மூடறுத்தான் = (வான் அகம் மூடு அறுத்தான்) = (அன்பர்கட்கு) சத்துவ விராசத தாமதகுணங்களை யொழித்தவன்; தானக மில்லா = தான் பாவமில்லாத; தனியாகும் போதகன் = ஏகமாய் விளங்கும் ஞான சொரூபி; கானக வாழைக்கனி நுகர்ந்து = குறிஞ்சிநிலத்து விளையும் வாழைப் பழத்தை யுண்டு (உலகார விருத்தியற்ற சித்தத்தெழுஞ் சிவானந்தத்தை யனுபவித்து); உள்ளூறும் பானகச் சோதியை = சித்தத்தி லெழுந்தருளியுள்ள வானந்த ரூப சித்தினை.

2998. விதியது = (யாவற்றையும்) நியமிப்பது; மேலையமராருறையும் = மேன்மைவாய்ந்த தேவர்கள் வசிக்கும்; பதியது = (சிவலோகமாகிய) இடத்தையுடையது; (அதற்குச் சடையில்); பாய்புனற் கங்கையுமுண்டு = பரவியோடும் நீருடைய கங்காநதியுமுண்டு; துதியது = துதிக்குரியது; பதியது = முத்தி வடிவினது; வவ்விட்டது = (அன்பரிடத்து) அருளைத்தருவது, (நமசிவாய என்னும் பஞ்சாக்கரத்துள் வகரம் அருள் அக்கரமென்ப தீண்டுணரத்தக்கது); அந்தமுமாம் = (யாவற்றிற்கும்) முடிவிடமுமாம்.

2999. மேலது = மேலாயிருப்பது; வானவர் = தேவர்கட்கு; கீழது = அடங்கியிருப்பது; மாதவர் = பெருந்தவத்தினரது (சித்தத்து); இடர் = துன்பத்தை; மானுடர் = (அன்பராகிய) மனிதர்களுக்கு; கீழது = மறக்கச்செய்வது; மாதனங்கானது = (அனங்குமாது ஆனது) = அறிவானந்த வடிவினது; செய்யும் = (பஞ்சகிருத்தியத்தை) புரியும்.

3000. சூழுங் கருங்கட னஞ்சுண்ட கண்டனை
யேழு மிரண்டிலு மீசன் பிறப்பிலி
யாழுஞ் சுனையு மடவியு மங்குளன்
வாழு மெழுத்தைந்து மன்னனு மாமே. (௧௯)

3001. உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை
யலர்கதி ரங்கியொத் தாதிப் பிரானு
நிலவிய மாமுகி னீரொத்து மீண்டச்
செலவொத் தமர்திகைத் தேவர்பி ரானே. (௨௦)

3002. பரிசறிந் தங்குள னங்கி யருக்கன்
பரிசறிந் தங்குளன் மாமாருதத் தீசன்
பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப்
பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே. (௨௧)

3003. அந்தங் கடந்து மதுவது வாய்நிற்கும்
பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொரு
டந்த வுலகெங்குந் தானே பராபரன்
வந்து படைக்கின்ற மாண்பது வாமே. (௨௨)

---

3000. ஐயேழுமிரண்டிலும்=பதினெண்குலகத்திற்கும்; ஆழுஞ்சுனையு மடவியு மங்குளன்=ஆழ்ந்துள்ள சுனைகளையுங் காடுகளையு முடைய வக்கயிலாய மலையிலிருப்பவன்; வாழும் = நிலைபெற்றுவரும்.

3001. உலகமது=பிராணிகள்; அலர்கதிர் = சூரியன் (சந்திரன்); அங்கி=தீ; நிலவியமா (கம்)=வியாபித்துள்ள வாகாயம்; முகினீர்=மேகஜலம்; மீண்டு=மறுபடியும்; அச்செலவொத்து= அப்பொருள்களின் செய்கையாகப் பொருந்தியும்; அமர்= இருக்கின்ற; திகைத்தேவர் பிரான் ஆதிப்பிரானென்று கொள்க. (திகைத்தேவர் = திக்குப்பாலகர்; பிரான்=அவர்கட்குப் பிரபு).

3002. பரிசறிந்து=(அதனதன்) தன்மையை யுணர்ந்து; அங்கி= தீ; அருக்கன்=சூரியன்; மாருதத்து=வாயுவில், மாமதி= கலைநிரம்பிய சந்திரன்; பாரிக்குமாறு = காத்தருளும்படி; அன்னிலம் (அல்நிலம்=மயக்கமுடைய வுலகினை).

3003. அந்தங்கடந்து=முடிவிறந்து; நிற்கும் = இருப்பன்; கீழோர் பெரும் பொருள்=(தனக்கு) அடியானோடையும் பெரும் பொருளாவன்; தந்த வுலகெங்கும்=(தான்) படைத்தவுலக மெல்லாவற்றிற்கும்; வந்து படைக்கின்ற=(தானே குருவடிவாக) எழுந்தருளி (அவ்வப்போது சன்மார்க்கத்தை) யுண்டாக்கும்.

3004. முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினு
மத்த னுருவ முலகே ழெனப்படு
மத்தனின் பாதாள மளவுள்ள சேவடி
மத்த ரதனை மகிழ்ந்துண ராரே. (உ௩.)

3005. ஆதிப் பிரானம் பிரானவ் வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கு
மாதிப் பிரானண்டத் தப்புறங் கீழவ
னாதிப் பிரானடு வாகிநின் றானே. (உ௪)

3006. அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்
பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்
றொண்டர் நடந்த கனைகழல் காண்டொறுந்
தொண்டர்க டூய்நெறி தூங்கிநின் றானே. (உ௫)

3007. உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ
நிலமுழு தெல்லா நிறைந்தன னீசன்
பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே
புலமுழு பொன்னிற மாகிநின் றானே. (உ௬)

---

3004. முத்தண்ட வீரண்டமே = (முத்தி அண்டம் இருமை அண்டம் ஏ) முத்தியடைதற்கேது (பீசம்) வாகிய பெருமையையுடைய சிவலோகம்; அத்தனுருவம்=சிவபெருமானது வடிவம்; பாதாளம்அளவுள்ள=பாதாளலோக பரியந்த மிருப்பன; சேவடி=திருவடிகள்; மத்தர்=தெளிவில்லாதவர்.

3005. அவ்வகலிடம் = அவ்வியாபகமான முத்தியுலகத்து; சுடர் மூன்று=சூரியன் முதலிய மூன்று சுடருக்கும்; ஒளியாய்=பிரகாசந் தருபவனாய்; அண்டத்தப்புறங் கீழவன்=சுவர்க்க மத்திய பாதாளமென்னு மூன்றுலகத்துமிருப்பவன், (அண்டம் - மத்திய வுலகம், அப்புறம் - சுவர்க்கம், கீழ்-பாதாளம்); நடுவாகி=பட்ச பாதமில்லாதவனாகி.

3006. அண்டங்கடந்து=விசுவாதீதமாய்; பிண்டம்=பந்தம்; பிறவிச் சிறுமையன் = பிறப்பற்றவன்; தூய்நெறி = சன்மார்க்கம்; தூங்கி=பொருந்தி.

3007. உலவுசெய் நோக்கம் = (நாற்புறத்தும்) உலாவுதலைச்செய்யும் (தனதருள்) பார்வை; பெருங்கடல் சூழ=(கரைகடவா வாறு) பெருமையுடைய கடலைச் சூழ்ந்திருக்க, அல்லது பெருங் கடல்போன்று செல்லாநிற்கும்; பலமுழுதெல்லாம் = சர்வ சாமர்த்தியமும்; புலம் = (அன்பரைக் காக்க) உலகத்தில்; முழு(ப்) பொன்னிறமாகி=பூரண (மாற்றுடைய) பொன்னிற முடைய திருமேனிகொண்டு.

3008. பராபர னாகிப்பல் லூழிக டோறும்
பராபர னாயிவ் வகலிடந் தாங்கித்
தராபர னாய்நின்ற தன்மை யுணரார்
நிராபர னாகி நிறைந்துநின் றானே. (உஎ)

3009. போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை
யூற்றமு மோசையு மோசை யொடுக்கமும்
வேற்றுட றானென் றதுபெருந் தெய்வமாங்
காற்றது வீசன் கலந்துநின் றானே. (உஅ)

3010. திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்
மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே
புகையனைத் தும்புற மங்கியிற் கூடு
முகையனைத் தும்மெங்க ளாதிப்பி ரானே. (உகூ)

3011. அகன்றா னகலிட மேழுமொன் றாகி
யிவன்றா னெனநின் றெளியனு மல்லன்
சிவன்றான் பலபல சீவரு மாகி
நவின்றா னுலகுறு நம்பனு மாமே. (௩௦)

---

3008. பல்லூழிகடோறும்=அளவிறந்த வுலக முடிவுகள் தோறும்; பராபரனாய்=கடவுளாய்; இவ்வகலிடந்தாங்கி = இப்பேருலகத்தைக்காத்து; தராபரனாய்=உலகிற்குத் தலைவனாய்; நிராபரனாகி=(நிர் ஆ + பரனாகி) = ஆண்மையுடைய விடபவாகனத்தையுடையவனாகி, அல்லது பிணக்கற்றவனாய்.

3009. ஊற்றமும்=ஆதாரமும்; ஓசையும் = (எழுகின்ற) நாதமும்; ஓசையொடுக்கமும் = (அந்) நாதமொடுங்குதலும்; வேற்றுடல்=(உயிர்க்கு) வேறாகிய உடல் (உம்); தானென்றது= தானேயாமென்பது; காற்றது = காற்றுப்போல, (அது பகுதிப் பொருள் விகுதி).

3010. திகை=திக்கு; அவனாகின்=அச்சிவபெருமானால்; மிகையனைத்தும் (அனைத்துமிகை) = (அவை) எல்லாங் கேடு (தருவது என்று); புறமங்கியிற் கூடும்=பாகியத்துள்ள தீயிற் கூடியிருக்கும்; (அதுபோல) முகையனைத்தும்=உண்டாவன வெல்லாம்; எங்களாதிப்பிரான்=எமது சிவபெருமானிடத்து (கூடியிருக்கும்).

3011. அகன்றான்=வியாபித் திருப்பவன்; இவன்றா னெனநின்று (உம்)=இச்சிவபெருமான் தானாகயிருப்பினும்; எளியனும்= (காண்டற்கு) எளியனா யிருப்பவனும்; நவின்றான்=(சரியையாதிசாதனங்களை) அப்பியாசிப்பவ னாயினான்; உலகுறு நம்பனுமாம்=உலகிற்கு மேலாய தலைவனுமாவன்.

3012. கலையொரு மூன்றுங் கடந்தப்பா னின்ற
தலைவனை நாடுமின் றத்துவ நாதன்
விலையில்லை விண்ணவ ரோடு முரைப்ப
னரையில்லை யுள்ளுறு முள்ளவன் றானே. (௬௧)

3013 படிகால் பிரமன்செய் பாச மறுத்து
நெடியான் குறுமைசெய் நேச மறுத்துச்
செடியார் தவத்தினிற் செய்தொழி னீக்கி
யடியேனை யுய்யவைத் தன்புகொண் டானே. (௬௨)

3014. ஈசனென் றெட்டுத் திசையு மியங்கின
வோசையி னின்றெழு சத்த முலப்பிலி
தேசமொன் றாங்கே செழுங்கண்ட மொன்பதும்
வாச மலர்போன் மருவிநின் றானே. (௬௩)

---

3012. கலையொரு மூன்றும்=இடை, பிங்கலை, சுழுமுனை, (அல்லது) தந்திர மந்திர உபதேசகலை என்னும் மூன்றையும்; கடந்து= தாண்டி; தத்துவநாதன்=(அம்) மெய்க்கடவுள் (அருளால்); விலையில்லை = (பிறக்கும்) வினையில்லையாம்; விண்ணவரோடும் = தேவர்களால்; உரைப்பன்=துதிக்கப்படுகின்ற கடவுளது(கருணையால்); நரையில்லை=வெண்மை(அவிச்சை) இல்லையாம்; உள்ளுறு முள்ளவன் (உள்ளவனுள்ளுறும் = (அப்போது) மெய்ப்பொருளாயஅவன் உமக்குள் ஏகமாயிருப்பன்.

3013. படிகால் = பூமியில் பிறக்குமாறு; பிரமன்செய் = பிரமன் செய்வதற்கேதுவாய; பாசமறுத்து = சஞ்சித வினையை ஒழித்து; நெடியான் குறுமைசெய்=திருமால் (காத்தற்றொழிலால்) இழிவைச் செய்வதற்கேதுவாய; நேசம் அறுத்து = (ஆகாமிய வினையின்) பற்றை ஒழித்து; செடியார் தவத்தினில் = மிகுதியாய தவத்தினாலே; செய்தொழில் நீக்கி= (பிராரத்த வினையினால்) செய்யும் தொழில்வினை ஒழித்து; அன்பு கொண்டான்=சிவமாகச் செய்தனன்.

3014. ஈசனென்று=சிவபெருமானது(வடிவம்) என்று; இயங்கின= விளங்கின; ஓசையில் நின்றெழு சத்தம் = நாத தத்துவத்தினின்றுமெழுகின்ற அக்கரங்கள்(போல); உலப்பிலி=கெடாதவன்; தேசம்=உலகம்; கண்டம் ஒன்பதும்=நவகண்டமும்; வாசமலர்போல் மருவி நின்றான் = மலர்மணம்போல வியாபித்திருக்கின்றனன்.

3015. இல்லனு மல்ல னுளனல்ல னெம்மிறை
கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்
றொல்லையன் றாயன் றுளக்கிலன் றாய்மணி
சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே. (௩௪)

3016. உள்ளத் தொடுங்கும் புறத்துளு நானெனுங்
கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளற் பெருமை வழக்கஞ் செய்வார்கட
மள்ளற் கடலை யறுத்துநின் றானே. (௩௫)

3017. மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங்
கூறுதல் செய்து குரைகழ லுடுவர்
ஊறுவ ருள்ளத் தகத்தும் புறத்துளும்
வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே. (௩௬)

3018. விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்
கண்ணிலும் வந்த புலனல்லன் காட்சியன்
பண்ணினில் வந்தப் பயனல்லன் பான்மைய
னெண்ணிலா னந்தமு மெங்கள் பிரானே. (௩௭)

---

3015. இல்லனுமல்லன் = (ஞானிகட்கு அவர் தஞ் சொரூபமாக விளங்குதலின்) இல்லாதவனு மாகான்; உளனல்லன் (அஞ் ஞானிகட்கு அவ்வாறிருத்தல் விளங்காமையின்) இருப்பவனு மாகான்; கல்லது நெஞ்சம்=கல்லொத்த மனத்தை; பிளந்திடுங் காட்சியன் = விளக்கும் (உருகச்செய்யும்) உணருருவானவன்; துளக்கிலன்=மாறுதலில்லாதவன்; தூய்மணி= (மேம்பாட்டால்) தோஷமற்ற மாணிக்கம் (போன்றவன்); தொடர்ந்து=வியாபித்து.

3016. உள்ளத் தொடுங்கும்=சித்தத்தின்கண் மறைந்திருப்பவன்; புறத்துளு நானெனும்=வெளிப்பட்டு விளங்குந் தேகத்தின் கண்ணும் நானென்று வியகரிப்பவன்; வள்ளற்பெருமை = (தனது)அனுக்கிரகத்தின் மேம்பாட்டை; வழக்கஞ் செய்வார் கடம்=சிந்திக்கின்றவர்களது; அள்ளற்கடலை=சேறுடைய சமுத்திரத்தை (துன்பம் நிறைந்த பிறப்பினை).

3017. மாறெதிர்=(ஒருவர்க்கொருவர்) மாறாக வெதிரே (வந்து); கூறுதல் = துதித்தல்; ஊறுவர்=(இன்ப) பெருக்குடையவர்க்கு; வேறுசெய்து=(ஊனுயிர்) வேறுபாட்டைச் செய்து; விளக்கொளியாம்=விளக்கினதொளிபோன்று விளங்குவன்.

3018. விண்ணிலும்=ஆகாயத்தினும்; வந்த=(சூக்குமமாக) வெளிப்பட்டுள்ள; வெளியிலன் மேனியன் = இடைவெளியில்லாத திருமேனி யுடையவன்; கண்ணிலும் = (எவ்வகைத்தாய) ஞானத்தினாலும்; வந்தபுலன்=அறியப்படும் விஷயம்; பண்ணினில்வந்த=(சித்த) அமைவிற்றோன்றும்; பயனல்லன்= ஆநந்தமுமாகான்; பான்மையன் = நல்லியல்புடையவன்.

3019. உத்தம னெங்கு முகக்கும் பெருங்கட
னித்திலச் சோதிய னீலக் கருமைய
னெத்தனை காலமு மெண்ணுவ ரீசனைச்
சித்த ரமரர்க டேர்ந்தறி யாரே. (௩அ)

3020. நிறம்பல வெவ்வண்ண மவ்வண்ண மீச
னறம்பல வெவ்வண்ண மவ்வண்ண மின்ப
மறம்பல வெவ்வண்ண மவ்வண்ணம் பாவம்
புறம்பல காணினும் போற்றகி லாரே. (௩௯)

3021. இங்குநின் றங்கு நின்றன னெங்குளன்
பொங்கிநின் றன்புவ நாபதி புண்ணியன்
கங்குனின் றன்கதிர் மாமதி ஞாயிறு
வெங்குநின் றன்மழை போலிறை தானே. (௪௦)

3022. உணர்வது வாயுமே யுத்தம மாயு
முணர்வது நுண்ணறி வெம்பெரு மானைப்
புணர்வது வாயும் புல்லிய தாயு
முணர்வுட லண்டமு மாகிநின் றானே. (௪௧)

---

3019. உகக்கும் பெருங்கடல் = விரும்பத்தக்க பேரானந்தவடிவன்; நித்திலச் சோதியன்=முத்துப்போலும் பிரகாசமுடையவன்; நீலக்கருமையன்=நீலமணிபோலுங் கண்டங் கறுத்தவன்; தேர்ந்தறியார்=ஆராய்ந்தறிகிலர்.

3020. நிறம் பல=(சிவபெருமானது தேக)ஒளி பலவாம்; எவ்வண்ண மவ்வண்ணம்=(அஃதன்பரது மனவொளி) எவ்வண்ணமோ அவ்வண்ணமாகத் தோன்றும்; ஈசனறம் பல=சிவபெருமானது அறக்கருணை பலவாம்; இன்பம் எவ்வண்ண மவ்வண்ணம்=(அஃதடியாரது) அன்பு எவ்வண்ணமோ அவ்வண்ணமாகத் தோன்றும்; மறம்பல = (அச்சிவபெருமானது) மறக்கருணை பலவாம் ; பாவம் எவ்வண்ண மவ்வண்ணம்=(அது கொடியவரது) பாவ மெவ்வண்ணமோ அவ்வண்ணமாகத் தோன்றும் ; புறம்பலகாணினும்=(இவ்வாறே) வெளியாகப் பல காணப்பட்டாலும்.

3021. இங்கு=இவ்வுலகத்து ; அங்கு=அவ்வுலகத்து; பொங்கி=விளங்கி=புவநாபதி=உலக நாயகன்; கங்குல்=இரவு, அல்லது ஆணவமலம்; மழைபோல்=மேகம்போன்று (கருணை செய்ய).

3022. உணர்வதுவாயும் = (பிராணிகட்கு) அறிவாயும்; உணர்வது நுண்ணறிவு = (விடயங்களைப் பிறழ்வின்றி) அறிவதாகிய சூக்குமவறிவினை ; புணர்வதுவாயும் = (எல்லாவற்றோடும்) கூடியதாயும்; புல்லியதாயும்=(அறிதற்கு) நுண்ணியதாயும்.

3023. தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்
றன்வலி யாலே யணுவிலுந் தானொய்யன்
றன்வலி யான்மலை யெட்டினுந் தான்சாரான்
றன்வலி யாலே தடங்கட லாமே. (௪௨)

3024. ஏனோர் பெருமைய னாயினு மெம்மிறை
யூனே சிறுமையு ளுட்கலந் தங்குளன்
வானோ ரறியு மளவல்லன் மாதேவன்
றானே யறியுந் தவத்தி னளவே. (௪௩)

3025. பிண்டாலம் வித்தி லெழுந்த பெருமுளைக்
குண்டாலங் காயத்துக் குதிரை பழுத்தது
வுண்டன ருண்டா ருணர்விலா மூடர்கள்
பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றாரே. (௪௪)

---

உஅ-வது சர்வ வியாபி.

3026. ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி
யாயு மறிவையு மாயா வுபாதியா
லேய பரிய புரியுந் தனதெய்துஞ்
சாயுந் தனது வியாபகந் தானே. (௧)

---

3023. தரித்தவன் = தாங்கியவன் ; நொய்யன் = சூக்குமமானவன்; சாரான் = கூடான்.

3024. ஏனோர் = எத்தன்மை யுடையவரினும் ; ஊனே சிறுமையுள் (சிறுமை ஊன் ஏ) = அற்ப சரீரத்திலேயும் ; உட்கலந்து = (உள்ளம்) ஆன்மாவோடு கூடி ; தானே யறியும் = தானே யறியப் படுபவனுவன்.

3025. பிண்டாலம் வித்தில் = (பிண்டம் ஆலம்வித்தில் = உடம்பாகிய ஆலம் விதையினின்று; எழுந்த = தோன்றிய ; பெருமுளை = பெரியமுளையி(சித்தவைராக்கியத்தி)னிடத்து; குண்டாலங் காய்த்து = உருள்வடிவினதாய ஆலங்கா யுண்டாகி (பூரணுந்தந்தோன்றி); குதிரை (மா) பழுத்தது = மாங்கனி (சிவானுபவம்) பூரணமாயிற்று ; உண்டனர் = (அவ்வனுபவம் வாய்த்தவர்; உண்டார் = (பிறப்பின்பயனை) அடைந்தவராவர்; பிண்டத்துட்பட்டு = தேகாகாரப்பட்டு; பிணங்குகின்றார் = (வேதாகம நெறியோடு) மாறுபடுகின்றார்கள்.

3026. ஏயுஞ் சிவபோகம் = சிவானுபவ முண்டாம்; ஆயு மறிவையும் = (நித்தவநித்தங்களை) ஆராயு முணர்வையும்; ஆயாவுபாதியாலேய = அவிவேகவடிவ வவிச்சையா லுண்டாய; பரிய புரியும் = (விஷய வாசனையால்) பூரித்துள்ள வுடம்பையும்; தனதெய்தும் = தன்வசமாக வடையும்; சாயும் = (அவை கெடும்; தனது வியாபகந்தான் = தன்னுடைய பூரண வியாபகத்தினுல்

3027. நானறிந் தப்பொரு ளுடவிட மில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடு
மூனறிந் துள்ளே யுயிர்க்கின்ற வொண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாமே. (௨)

3028. கடலிடை வாழ்கின்ற கௌவை யுலகத்
துடலிடை வாழ்வுகொண் டுள்ளொளி நாடி
யுடலிடை வைகின்ற வுள்ளுறு தேவனைக்
கடலின் மலிதிரை காணலு மாமே. (௩)

3029. பெருஞ்சுடர் மூன்றினு முள்ளொளி யாகித்
தெரிந்துட லாய்நிற்குந் தேவர் பிரானு
மிருஞ்சுடர் விட்டிட் டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே. (௪)

3030. உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டு
விறுதியின் வீழ்ந்தா ரிரணம தாகுஞ்
சிறுதியி னுள்ளொளி திப்பிய மூர்த்தி
பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே. (௫)

---

3027. நாட = தேட; வான் = மேலோர் (ஆகுபெயர்); வழியுள= (ஞானயோகு) வழியே செல்ல; விம்மிடும் = பூரணமாவர்; ஊனறிந்து=சீவசாட்சியாகி, (ஊன்—உடம்பு, ஆகுபெயரா யுயிருக்காயிற்று); தானறிந்து = (ஒருவன்) தானாக வறிந் தால்; எங்குந் தலைப்படலாம்=யாண்டும் வியாபித்திருத்தல் சித்தியாம்.

3028. கடலிடை வாழ்கின்ற = கடலினடுவேயுள்ள ; கௌவை= துன்பம்; கொண்டுள்ளொளி (கொண்ட ஒளி உள்)=கொண் டுள்ள சித்வடிவ ஆன்மாவை; நாடின்=ஆராய்ந் தறிந்தால்; உள்ளுறுதேவன் = ஆன்மாவுடன் (ஒன்றாக) பொருந்திய பரமேசுவரனை; கடலின் மலிதிரை=கடற்கணுள்ள பேரலை போன்று.

3029. தெரிந்துடலாய் நிற்கும்=(அம் முச்சுடரையும்) ஆராய்ந்துணா உடம்பாகக்கொண்டிருக்கின்ற; இகலிடமெல்லாம் = (தம் முள்) மாறுதலை யுடைய தேசங்களின் முற்றும்; பரிந்துடன் போகின்ற=அன்பரை விரும்பி (அவர்) ஒடு (சிறப்பு வகை யாக) செல்லுகின்ற; பல்கோரை (புல்) யாம்=பல்வகையாய சிறு வடிவினனுவன்.

3030. உறுதியினுள்=தேகாபிமானத்தினல் (உருபு மயக்கம்); உள் வினைப்பட்டு=சூக்குமமான விருவினையினது வசமாய்; இறுதி யின்=முடிவில்; வீழ்ந்தார்=(தன்னை) விரும்பிவந் தடைந்த வர்க்கு; இரணமதாகும்=பொன்போ லுதவியாவன்; சிறுதி யினுள் = ஒடுங்கிய சித்தத்தின்கண்; ஒளி = விளங்கும்; பெறுதி இல் மேலோர் = (யாதொன்றையும் விழைந்து) அடைதலில்லாத மேன்மக்களுக்கு.

**3031.** பற்றி னுள்ளே பரமாய பரஞ்சுடர்
முற்றினு முற்றி முளைக்கின்ற மூன்றொளி
நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரு
மற்றவ னாய்நின்ற மாதவன் றானே. (௬)

**3032.** தேவனு மாகுந் திசைதிசை பத்துளு
மேவனு மாம்விரி நீருல கேழையு
மாவனு மாமமர்ந் தெங்கு முலகினு
நாவனு மாகி நவிற்றுகின் றானே. (௭)

**3033.** நோக்குங் கருட னொடியே மூலகையுங்
காக்கு மவனித் தலைவனு மங்குள
நீக்கும் வினையென் னிமலன் பிறப்பிலி
போக்கும் வரவும் புணரவல் லானே. (௮)

**3034** செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி
யொழிந்தன னாயு மொருங்குடன் கூடுங்
கழிந்தில னெங்கும் பிறப்பில னீச
னொழிந்தில கேழுல கொத்துநின் றானே. (௯)

---

3031. பற்றினுள்=பற்றப்படும் பொருள்களுள்; பரமாய=மேலாய; முற்றினு முற்றி=எங்கு நிறைந்து; முளைக்கின்ற=தோன்று கின்ற; மூன்றொளி=முச்சுடர்(போல); நெற்றியினுள்=புருவ நடுவேயுள்ள ஆக்கின சக்கரத்தில்; நினைவாய்=கருதிய வண்ணமாய்; நிலைதரும் = நிலைபெற்றிருப்பன்; அவனாய்=அக் கருதியவன் வடிவமாய்.

3032. திசைதிசை பத்துளும்=பத்துத் திக்கிலும் (உள்ள); எவனு மாம்=எம் மேம்பா டுடையவனு மாவன்; ஆவனுமாம்=வியா பித்திருப்பவனுமாவன்; நாவனுமாகி=பேசுதற்குரிய)நாவினை யுடையவனுமாகி; நவிற்றுகின்றான் = (தன்னையேதான்) புகழ்ந்து கொள்ளுகின்றனன்.

3033. நோக்குங் கருடன் = (எப்பொருளையும் எளிதில்) காணுங் கருட னொத்தவன்; நொடி = நொடிப்பொழுதளவில்; அங் குள=(இவ்விடத்தன்றி) அவ்விடத்துமுள்ள(அன்பர்களது); நீக்கும் வினை=வினைகளை யொழிக்கும்.

3034. ஒழிந்தனனாயும் = (ஒன்றும்) ஆகாதவனாயிருந்தும்; ஒருங் குடன் கூடும் = எல்லாவற்றோடுங் கூடியிருப்பன்; கழிந் திலன்=நீங்கான்; ஒழிந்திலகு = (தனக்கெனப் பொருள்) இன்றி விளங்கும்.

3035. உணர்வு மவனே யுயிரு மவனே
புணர்வு மவனே புலனு மவனே
யிணரு மவன்றன்னை யெண்ணலு மாகான்
றுணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. (௧0)

3036. புலமையி னாற்றமில் புண்ணிய னெந்தை
நலமையின் ஞான வழக்கமு மாகும்
விலமையில் வைத்துள வேதியர் கூறும்
பலமையி லெங்கும் பரந்துநின் றானே. (௧௧)

3037. விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்
மண்ணவ னாய்வலஞ் சூழ்கட லேழுக்குந்
தண்ணவ னாயது தன்மையி னிற்பதோர்
கண்ணவ னாகிக் கலந்துநின் றானே. (௧௨)

3038. நின்றனன் மாலொடு நான்முகன் றானாகி
நின்றனன் றானிலங் கீழொடு மேலென
நின்றனன் றானெடு மால்வரை யேழ்கட
னின்றனன் றானே வளங்கனி யாயே. (௧௩)

---

3035. புணர்வும்=கூடுதலும்; புலனும்=(கூடுதற்குரிய) விஷயமும்; இணரு மவன்றன்னை=(இனி) பிறக்கும் புருடனால், (உருபு மயக்கம்); துணரின் = பூங்கொத்தில் (உள்ள) ; மலர்க்கந்தம்=மலர்மணம் (போல); துன்னி=பொருந்தி.

3036. புலமையின்=(செயற்கையாலாய) அறிவின்; நாற்றம்=சம்ஸ்காரம் (வாசனை); இல்=(சிறிதும்) இல்லாத; நலமையின் = நன்மையினை (தரும்); ஞானவழக்கமும்=ஞானாப்பியாசமும்; வில(லை)மையில் = விலையின் பொருட்டாக; வைத்துள= (தமது வித்தையை) வைத்திருக்கின்ற ; பலமையின்=பல பொருள் போன்று.

3037. விண்ணவனாய்=விண்ணுலகத்திருப்பவனாய்; மண்ணவனாய்= மண்ணுலகத்திருப்பவனாய்; தண்ணவனாய்=குளிர்ச்சியைத் தருபவனாய்; அது தன்மையின்=அக்கடலின் றன்மையைப் போல; கண்ணவனாகி = பெருமையுடையவனாய்.

3038. நெடுமால்வரை=மேருமலை ; வளங்கனியாய் = (அன்பர்க்கு) வளப்பமுடைய கனியையொத்து.

3039. புவனா பதிமிகு புண்ணிய னெந்தை
யவனே யுலகி லடர்பெரும் பாக
னவனே யரும்பல சீவனு மாகு
மவனே யிறையென மாலுற்ற வாறே. (௧௪)

3040. உண்ணின் றொளிரு முலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனு
மண்ணின் றியங்கும் வாயுவு மாய்நிற்குங்
கண்ணின் றிலங்குங் கருத்தவன் றானே. (௧௫)

3041. எண்ணு மெழுத்து மினஞ்செய லவ்வழிப்
பண்ணுந் திறனும் படைத்த பரமனைக்
கண்ணிற் கவருங் கருத்தி லதுவிது
வுண்ணின் றுருக்கியோ ராயமு மாமே. (௧௬)

---

3039. மிகு புண்ணியன்=மேலாய புண்ணியவடிவினன்; உலகில்= உலகத்தின்கண்; அடர்=நெருங்கி; பெரும்பாகன்=(ஜீவர்களை) பெருமையாக நடத்துபவன்; இறையென = (யாவர்க்கும்) தலைவனென்று; மாலுற்றவாறு = விருப்பங்கொண்ட விதம் (என்னே).

3040. உண்ணின்று = இருதயத்திருந்து; உலவாப்பிராணனும்= கெடாத பிராணவாயுவும்; விண்ணின்றியங்கும்=ஆகாயத்திலிருந்து செல்லும்; விரிகதிர்ச்செல்வனும்=விரிந்த கிரணங்களையுடைய சூரியனும்; மண்ணின்றியங்கும் = மண்ணுலகத்திருந்துலாவும்; வாயுவுமாய் = காற்றுமாய்; கண்ணின்றிலங்கும்=(அன்பரது) உளத்தாமரைமீதிருந்து விளங்கும்; கருத்தவன்றான்=தியான வடிவினனாய சிவபிரான்.

3041. எண்ணும் எழுத்தும்=தியானித்தற்குரிய பஞ்சாக்கரத்தையும்; இனஞ்செயல் = (அதனோடு) சம்பந்தப்படுஞ் சாதனத்தையும்; அவ்வழிப் பண்ணுந் திறனும் = அச்சாதனத்தின் நெறியே செல்லும் வகையினையும்; கண்ணிற் கவரும் = அறிவினால் அறியுங்கள், (அறிந்தால்); கருத்தில் அதுவிது= சித்தத்துள்ள அது இது என்னும் விகற்பத்தை; உண்ணின்றுருக்கி=சித்தத்துள்ளே நிலைபெற்றுக் கெடுத்து ஓர் ஆயமுமாம்=ஒப்பற்ற ஊதியப்பொருளுமாவன்.

3042. இருக்கின்ற வெண்டிசை யண்டம்பா தாள
முருக்கொண்டு தன்னடி வோங்கவிவ் வண்ணங்
கருக்கொண்டு வெங்குங் கலந்திருந் தானே
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே. (கஎ)

3043. பலவுடன் சென்றவப் பார்முழு தீசன்
செலவறி வாரில்லை சேய னணிய
னலைவிலன் சங்கர னுதியம் மாதி
பலவில வாய்நிற்கும் பான்மைவல் லானே. (கஅ)

3044. அதுவறி வானவ னாதிப் புராண
னெதுவறி யாவகை நின்றவ னீசன்
பொதுவது வான புவனங்க ளெட்டு
மிதுவறி வானந்தி யெங்கள்பி ரானே. (கக)

3045. நீரு நிலனும் விசும்பங்கி மாருதந்
தூரு முடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞக னெம்மிறை
யூருஞ் சகல னுலப்பிலி தானே. (உ0)

---

3042. அண்டம்=மேலுலகு; பாதாளம்=கீழுலகு; உருக்கொண்டு= தோன்றி; தன்னடிவோங்க=தன்னிடத்து ஓங்க; இவ்வண் ணங் கருக்கொண்டு=இவ்வகையாய ஏதுவினால்; எங்கும் கலந்திருந்தான்=யாண்டுங் கூடியிருக்கின்றனன்.

3043. பலவுடன் சென்ற = இயங்குவன நிற்பன (என்னும்) பல பொருள்களோடு நிகழ்கின்ற; அப்பார் முழுது (உம்) = அவ்வுலகமனைத்தும்; ஈசன் செலவறிவார் = ஈசனது ஆணையை அறிபவர்; அலைவிலன்=மாறுதலிலன்; பலவிலவாய் நிற்கும்=பலவென்ப தில்லாது நிறைந்து நிற்கும்; பான்மை வல்லான்=தன்மையில் வல்லவன்.

3044. அதுவறிவானவன்=அச்சீவர்களின் அறிவுருவானவன்; ஆதிப் புராணன்=தலைமையுடைய பழையோன்; எது (உம்)=எப் பிரமாணத்தாலும்; பொதுவதுவான=(யாவருக்கும்) பொது மையாயுள்ள; புவனங்கள்=உலகங்களில்; எட்டும் = வியா பித்தவன்; இதுவறிவான்=(நான் கூறும்) இதனை அறிபவன்.

3045. மாருதம்=வாயு (ஆயவன்); தூரும்=(அப்பூதகாரியமாய்) வெ ளிப்பட்டுள்ள; உடம்புறு சோதியும்=உடம்பின்கண் பொருந் திய சீவனும்; ஊரும் சகலன் (சகல மூர்வன்)=யாவற்றிலும் வியாபித்தவன்; உலப்பிலி=நித்தியன்.

3046. மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூல னுரைசெய்த முந்நூறு மந்திர
மூல னுரைசெய்த முப்ப துபதேச
மூலனுரை செய்த மூன்றுமொன் றுமே. (௨௧)

3047. வாழ்கவே வாழ்கவென் னந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்றாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே. (௨௨)

அதிகாரம் ௨௮-க்குப் பாடல் - ௩௯௯.

## ஒன்பதாந்தந்திர முற்றிற்று.

தந்திரம் ௯-க்குச் சிறப்புப்பாயிரம் உள்பட அதிகாரம் ௨௩௫;
பாடல்-௩0௪௭.

## திருமந்திரம் முற்றிற்று.

---

3046. மூலனுரைசெய்த மூவாயிரந் தமிழ் = திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருளிய மூவாயிரம் பொதுப்பாசுரங்கள்; முந்நூறு மந்திரம் = முந்நூறு மந்திரப்பாசுரங்கள் (மந்திரங்களை எடுத்து விளக்கும் முந்நூற்றுமூன்று பாசுரங்கள் இங்குக் குறிக்கப்பட்டன); முப்பதுபதேசம்=முப்பது உபதேசப் பாசுரங்கள்; மூன்றுமொன்றுமே=(ஆகிய) மூன்றுவகைப் பாசுரத் தொகைகளுஞ் சேர்ந்து ஒருபொருளையே குறிப்பனவாம்.

௩0௩-மந்திரப் பாசுரங்களின் வகை:—நான்காந்தந்திரம்.

| | | | |
|---|---|---|---|
| திருவம்பலச்சக்கரம் ... | ௮௯ | சாம்பவிமண்டலச்சக்கரம் | ௧0 |
| வயிரவிமந்திரம் ... | ௫0 | புவநாபதிச்சக்கரம் ... | ௧௨. |
| ஏரொளிச்சக்கரம் ... | ௩௬ | | |
| வயிரவச்சக்கரம் ... | ௬ | நவாக்கரிசக்கரம் ... | ௧00 |

௩0-உபதேசம் - முதற்றந்திரம் முதலதிகாரம்.

௩௩௩௩-பாசுரத் தொகையினைக்கொண்டிருக்கவேண்டிய இத்திருமந்திரத் திருமுறைக்கு, பெரியபுராணத்தில் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் ௩000-எனத் தொகை கொடுத்தருளியது உபலக்கணத்தாலென்க (விடாத ஆகுபெயர்).

இவ்வாறு பொருள் கூறுதலேயன்றி, நாயனாரே இத்திருமந்திர மூவாயிரந் தவிர முந்நூறு மந்திரமெனவும், முப்பது உபதேசம் எனவும் வேறு நூல்கள் அருளிச்செய்திருக்கக் கூடுமெனவும் அறிஞருட் சிலர் கூறினும், அவர் கூறற்காதாரங் காண்டல் அரிதாயிருக்கிறது.

3047. நந்தி=நந்தியம்பெருமான், அல்லது சிவபெருமான்; இம்மந்திரத்தால் குருவையும், குருவாயிலாகச் சிவபெருமானையும் ஒருமைப்படுத்தி வாழ்த்தியவாறறிக.

# திருமந்திரத்தின்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| தானேவிரி | ௪௩௨ |
| தானேவெளி | ௨௭௯ |
| தானொருகாலஞ் | ௫௩ |
| தானொருகாலங் | ௮௨ |
| தானொருகூறு | ௧௬ |
| தானொன்றிவா | ௧௮௭ |
| தான்முன்ன | ௬௦௫ |
| தான்வரைவற் | ௬௬௬ |
| தான்றவஞ் | ௪௯ |
| **தி.** | |
| திகழும்படி | ௧௪௭ |
| திகைக்கின்ற | ௪௭௨ |
| திசைக்குரியா | ௪௦௨ |
| திசையனைத்தி | ௯௫௦ |
| திசையெட்டு | ௫௬௪ |
| திடரிடைநில் | ௫௪௦ |
| திண்டாடிவீழ் | ௫௮௬ |
| திரிகின்றமுப் | ௬௮ |
| திரிபுரைசுந்தரி | ௨௧௪ |
| திருத்திப்புத | ௧௭௨ |
| திருத்திவளர் | ௩௮ |
| திருநெறியாகி | ௪௪ |
| திருநெறியாவ | ௧௪ |
| திருந்தனர் | ௪௯௬ |
| திருந்துசிவனு | ௨௫௦ |
| திருந்துதின | ௧௫௨ |
| திருந்துநந்தி | ௫௧௬ |
| திருமன்னுஞ் | ௩௧௫ |
| திருவடிஞான | ௬௪௦ |
| திருவடியேசிவ | ௨௬ |
| திருவடிவைத் | ௬௪௦ |
| திருவம்பல | ௧௮௫ |
| திருவாயசித்தி | ௩௩௭ |
| திருவழியாவ | ௫௮௬ |
| திலமத்தனை | ௯௯ |
| திளைக்கும்வினை | ௪௯ |
| திறத்திறம் | ௧௪௯ |
| திறந்தருமுத்தி | ௪௬ |
| **தீ.** | |
| தீங்கரும்பா | ௧௬௫ |
| தீண்டற்கரிய | ௪௯௭ |
| தீத்திரட்சோதி | ௫௯௪ |
| தீமுதலைந்து | ௫௮௭ |
| தீம்புலனான | ௩௧௮ |
| தீயவைத்தார் | ௮௫ |
| தீயினும்வெய்ய | ௫ |
| தீவினையாட | ௧௬௫ |
| தீவினையாளர் | ௧௬௬ |
| **து** | |
| துடுப்பிடுபொனை | ௩௬ |
| துணிந்தாரகம் | ௪௦௪ |
| துணையதுவாய் | ௫௭ |
| துரிசில்வல | ௧௧௧ |
| துரியங்கடந்து | ௫௧௭ |
| துரியங்கண்மூ | ௬௬௨ |
| துரியங்கண்மூ | ௫௬௨ |
| துரியங்கண்மூ | ௪௦௯ |
| துரியதரிசன | ௪௭௪ |
| துரியத்திலோ | ௪௮௭ |
| துரியநனவா | ௪௭௧ |
| துரியப்பரி | ௪௮௪ |
| துரியமடங்கி | ௫௪௨ |
| துரியமடங்கி | ௫௨௭ |
| துரியமிருப்ப | ௪௬௨ |
| துரியவதீத | ௬௦௮ |
| துருத்தியுள் | ௬௧௭ |
| துவந்தத்தசி | ௫௪௨ |
| துவாதசமார் | ௪௧௦ |
| துறந்தான் | ௪௯ |
| துறந்துபுக் | ௫௪௫ |
| துன்றுந்தயிர் | ௬௭௦ |
| துன்னிமின்று | ௯௦௭ |
| **தூ.** | |
| தூங்கவல்லார் | ௧௨௯ |
| தூங்கிக்கண்டா | ௨௫ |
| தூநெறிகண்ட | ௪௩௧ |
| தூயதுவாளா | ௫௬௮ |
| தூயவிமான | ௬௬௯ |
| தூய்மணிதூய | ௫௬௮ |
| தூய்மையருளு | ௧௧௦ |
| தூரதரிசனஞ் | ௧௬௯ |
| தூரத்திற்சோதி | ௭௫ |
| தூரறிவாளர் | ௬௨௭ |
| தூலப்பிரணவ | ௫௬௬ |
| தூறுபடர்ந்து | ௬௦௯ |
| **தெ.** | |
| தெக்கணமா | ௧௯௬ |
| தெய்வச்சுட | ௪௩௨ |
| தெரிசிக்கப் | ௩௦௯ |
| தெருளுமுலகி | ௮௬ |
| தெளிதருமிந்த | ௧௭௩ |
| தெளிந்தார் | ௭௦ |
| தெளிந்திடு | ௨௬௧ |
| தெளியுமிவை | ௫௦௩ |
| தெளிவருநா | ௨௦௭ |
| தெளிவறியா | ௬௧௦ |
| தெளிவுகுரு | ௨௭ |
| தெளிவுறு | ௧௦௪ |
| தெள்ளமுதூற | ௫௭௨ |
| தெற்குவடக்கு | ௫௮௨ |
| தென்னன் | ௨௨௧ |
| **தே.** | |
| தேசார்சிவமா | ௫௦௬ |
| தேசுதிகழ்சிவ | ௪௬௮ |
| தேடுகின்றேன் | ௫௦௧ |
| தேடுந்திசை | ௮௨ |
| தேடுந்திசை | ௮௦ |
| தேடுமியம | ௫௦௨ |
| தேட்டறுஞ் | ௫௮௬ |
| தேய்ந்தற்றொழி | ௩௩ |
| தேர்ந்தவரனை | ௬௩௦ |
| தேர்ந்தறியா | ௩௮௬ |
| தேர்ந்தெழு | ௨௪௦ |
| தேவருறை | ௧௮௧ |
| தேவரோடாடி | ௫௮௫ |
| தேவர்களோடி | ௬௯௫ |
| தேவர்சுரர் | ௫௭௯ |
| தேவர்பிரானம் | ௯ |
| தேவர்பிரானை | ௬௭௯ |
| தேவர்பிரான் | ௫௮ |
| தேவர்பிரான் | ௪௬௧ |
| தேவனுஞ்சுத்த | ௬௬௫ |
| தேவனுமாகு | ௬௫௬ |
| தேறுதசிந்தை | ௫௬௬ |
| தேற்றத்தெளி | ௬௨ |

# திருமந்திரத்தின்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.



## திருமந்திரத்தின்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## முற்றிற்று.

---

திருமந்திரத்தின்

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬ | ௩ | ரெனப் | ரெனைப் |
| ௭ | ௨௮ | விதிபதி | விதுபதி |
| ௮ | ௧௬ | வணக்கப் | வணங்கப் |
| ௧௫ | ௧௯ | ருருத்திரதேவர் | ருருத்திரர் தேவர் |
| ௧௮ | ௨௭ | யூனமி | ஹூனமி |
| ௧௯ | ௨௫ | முடிகண்ட | முடிகண்டே |
| ௧௯ | ௨௫ | பொய்மொழிந் | பொய்ம்மொழிந் |
| ௨௦ | ௧௦ | மெஞ்ஞானச் | மெய்ஞ்ஞானச் |
| ௨௧ | ௨௩ | சிறப்புதரு | சிறப்புத்தரு |
| ௨௫ | ௨௯ | தென்ன | தவர் |
| ௫௦ | ௪ | யுற்றுங் | வுற்றுங் |
| ௫௨ | ௨௭ | புலராத | புலராமல் |
| ௫௩ | ௮ | பெருந்தசை | பெருந்தகை |
| ௫௩ | ௨௮ | மூகூர்த்தத்தில் | மூர்த்தத்தில் |
| ௫௪ | ௧௧ | இகழ்ந்ததும் | இழந்ததும் |
| ௫௭ | ௮ | கூடாப் | கூடா |
| ௫௯ | ௬ | மெய்நின்ற | மெய்ந்நின்ற |
| ௫௯ | ௨௨ | இரணடன் | இரண்டன் |
| ௫௯ | ௨௭ | மெய்நின்ற | மெய்ந்நின்ற |
| ௬௧ | ௧௧ | கூடாக் | கூடா |
| ௬௪ | ௪ | நயங்கொண்ட | நயங்கொண்டஞ் |
| ௬௪ | ௧௮ | தானாகி | தானாகிப் |
| ௭௦ | ௧௧ | ணடுக்களைக் | ணடுக்களை |
| ௭௨ | ௨௨ | (என்பதனாலுணர்க; | (என்பதனாலுணர்க;) |
| ௭௪ | ௩௬ | பஞ்சபிரமம் | பஞ்சப்பிரமம் |
| ௭௯ | ௧௪ | மனோன்மணி | மனோன்மணி |
| ௮௪ | ௨௧, ௨௯ | சொற்பனம் | சொப்பனம் |
| ௮௭ | ௨௪ | வேட்சை | வேட்கை |
| ௮௮ | ௩௨ | ஈண்டு | ஈண்டுச் |
| ௯௪ | ௯௧ | சரீர | சரீரக் |
| ௯௫ | ௧௭, ௯௨ | பாச்சலு | பாய்ச்சலு |
| ௧௨௧ | ௩ | கிருந்திடல் | கிருந்திடில் |
| ௧௨௧ | ௧௦ | மான்பட் | மாண்பட் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௨௨ | ௨௭ | மாஹா | மஹா |
| ௧௨௬ | ௧௩ | கும்பிட்டு | கும்பிட்டுக் |
| ௧௨௭ | ௫ | டிருந்திடு | டிருந்திடுந் |
| ௧௩௩ | ௩௦ | இத்தனஞ்சயன் | இத்தனஞ்சயன் |
| ௧௩௬ | ௧௩ | தா ஹுள | தாழுள |
| ௧௩௯ | ௨௯ | காணவிளக்கொளி | கான விளக்கொளி |
| ௧௪௩ | ௨௭ | வளப்புள்ளிருந்து = வள் மையிலிருந்து | வளப்புள்ளிருந்தது = வள் மையிலிருந்தது |
| ௧௪௪ | ௫ | றிரோதல்கால் | திருத்தல்கால் |
| ௧௪௮ | ௮ | மெஞ்ஞானஞ் | மெய்ஞ்ஞானஞ் |
| ௧௪௮ | ௧௪ | றுடம்பினை | னுடம்பினை |
| ௧௫௧ | ௮ | டிருவடிக் | டிருவடி |
| ௧௫௧ | ௨௨ | இரதம | இரதம் |
| ௧௫௪ | ௩ | ரிடஞ்சி | ரிடிஞ்சி |
| ௧௫௫ | ௧௩ | யலர்ந்திரு | யலர்ந்திடு |
| ௧௫௮ | ௧௫ | நொக்கிடி | நோக்கிடி |
| ௧௬௧ | ௨௦ | ரறிகின்ற | றறிகின்ற |
| ௧௭௦ | ௧௫ | றுஞ்சவ | றுஞ்சுவ |
| ௧௭௨ | ௧௩ | வேளியை | வெளியை |
| ௧௭௨ | ௨௦ | தவப்பெய்த | தலைப்பெய்த |
| ௧௮௬ | ௨௭ | ஹரீம் | ஹ்ரீம் |
| ௧௯௬ | ௫ | நந்தி | அந்தி |
| ௧௯௮ | ௧௪ | முருவது | முறுவது |
| ௧௯௯ | ௧௬ | டொருக்காலுறைக்க | டொருகாலுரைக்க |
| ௨௦௧ | ௪ | லுரைக்கு | லுரைக்க |
| ௨௦௧ | ௩௨ | வாடியவைவர் = வாடுதலை செய்த | ஆடியவைவர் = ஆடுதலைச் செய்த |
| ௨௦௭ | ௩௨ | சப்ததில் | சப்தத்தில் |
| ௨௧௨ | ௧௩ | மில்லாப | மில்லாப் |
| ௨௧௮ | ௯ | யென்ற | வென்ற |
| ௨௩௩ | ௩ | குழவியை | குழலியை |
| ௨௩௫ | ௫, ௨௫ | முச்சதிரத் | முச்சதுரத் |
| ௨௩௯ | ௨௫ | றிசைந்திதுதானே | றிசைந்திருந்தானே |
| ௨௪௦ | ௩, ௫ | கல்வியும் | கலவியும் |
| ௨௬௧ | ௧௨ | நாவாக்கரி | நவாக்கரி |
| ௨௮௫ | ௧௩ | தாங்களு | தாங்கலு |
| ௩௦௯ | ௨ | சமயமோ | சமயமே |
| ௩௧௦ | ௧௦ | சன்மாாக் | சன்மார்க் |
| ௩௧௪ | ௬ | யலர்ந்தேர்ந் | யலர்தேர்ந் |
| ௩௨௪ | ௨ | கற்றுங் | கத்துங் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௩௨ | ௩௨ | பிரபஞ்சோற்பற்றி | பிரபஞ்சோற்பத்தி |
| ௩௩௩ | ௪ | வறுவகை | வறுவகைக் |
| ௩௩௩ | ௬ | ௨௩ | ௨௦ |
| ௩௫௦ | ௪ | பார்பண்டைமெய்யுறஞ் | வார்பண்டைமெய்யறஞ் |
| ௩௬௦ | ௫ | மேனமு | மோனமு |
| ௩௭௫ | ௭ | மீரெழு | மீரேழு |
| ௩௭௬ | ௮, ௨௧ | பெய்து | பெய்தி |
| ௩௯௦ | ௧௩ | போராயிர | பேராயிர |
| ௩௯௩ | ௧௫ | மெஞ்ஞானத் | மெய்ஞ்ஞானத் |
| ௩௯௪ | ௨ | அரா | ஆரா |
| ௩௯௭ | ௧௮ | பூங்குழல் | பூங்கழல் |
| ௪௦௬ | ௧௯ | மாவாவும் | மவாவும் |
| ௪௧௪ | ௨௧ | விரே | வீரே |
| ௪௧௭ | ௧௧ | வாறை | வாற்றை |
| ௪௧௮ | ௨௦ | தாளே | தானே |
| ௪௨௦ | ௧௭ | விருந்தோர் | விருந்தோர் |
| ௪௨௧ | ௯ | யாரே | யாவரே |
| ௪௨௨ | ௯ | மூன்று | முன்று |
| ௪௨௨ | ௩௦ | மேவணேவிரே | மேவணேவீரே |
| ௪௨௭ | ௧௦, ௨௩ | விட்ட | வட்ட |
| ௪௩௭ | ௨௬ | புலனேந்து | புள்ளேந்து |
| ௪௪௭ | ௩௨ | அருள்=பேரின்பம் (சித்திக்கும்) | அருளாம் = பேரின்பம் சித்திக்கும் |
| ௪௪௮ | ௧௪ | முனிகின்ற | முளிகின்ற |
| ௪௪௮ | ௨௭ | ஆறு | ஆருறு |
| ௪௪௮ | ௩௦ | முளிக்கின்ற | முளிகின்ற |
| ௪௫௩ | ௧௪ | தழல்வண்ணல் | தழல்வண்ணன் |
| ௪௫௪ | ௨௨ | ௩௯ | ௩௦ |
| ௪௬௨ | ௯ | விட்டு | விட் |
| ௪௬௪ | ௩ | யெய்ந்த | யேய்ந்த |
| ௪௬௯ | ௬ | மொன்புத்தி | மொண்புத்தி |
| ௪௭௧ | ௨௩ | கவை | கனவு |
| ௪௭௨ | ௭ | செறிவாய் | செறிவாய் |
| ௪௭௨ | ௯ | முருண | மிருண் |
| ௪௭௨ | ௩௩ | காம; | காமம் |
| ௪௮௧ | ௬ | வறிலோ | வறிவோ |
| ௪௮௬ | ௧௩ | மறைத்தது | மறைந்தது |
| ௪௯௬ | ௨௩ | போதும் | போதம் |
| ௪௯௯ | ௭ | தண்ணே | தன்னே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ருகஅ | ச | பெய்ம்மைச் | பொய்ம்மைச் |
| ருஉச | கரு | கரணங்கனின் | கரணங்களின் |
| ருநச | கக | மொண்று | மொன்று |
| ருநசு | கரு | வெ்று | வேறு |
| ருசO | நஉ | நடுவாங்கி | நடுவங்கி |
| ருசஅ | உசு | மாறுபர்ட்டறச் | மாறுபாடறச் |
| ருசஅ | ரு | யாற்றிடில் | வாற்றிடில் |
| ருருக | அ | யவிப்பர்கள் | யவிழ்ப்பர்கள் |
| ருருக | கO | சச | கூகூ |
| ருஅஉ | கச | தநனே | தானே |
| ருஅக | உO | குளிக்குந் | குனிக்குந் |
| சுOஉ | க | ஞாஞந்தஞ் | ஞாஞணந்தஞ் |
| சுOரு | உ | செய் | செய்து |
| சுOஎ | கக | ஒது | ஓது |
| சுகசு | ந | நிறுத்தலாள் | நிறுத்தலான் |
| சுஉO | கக | கொம்யின் | கொம்பின் |
| சுநந | கO | முடர்கா | மூடர்கா |
| சுநசு | கO | றிருந்தானன் | றிருந்தனன் |
| சுசந | சு | ஞட்டியைக் | ஞட்டிடைக் |
| சுசந | கO | விரே | வீரே |
| சுசச | ரு | கேட்டுகின்றேனே | கேட்டுநின்றேனே |
| சுருக | உO | (உள்ளவனுள்ளுறும் | (உள்ளவனுள்ளுறும்) |
| சுருச | கக | காயத்துக் | காய்த்துக் |
| சுருச | உரு | (பிண்டம் ஆலம்வித்தில் | (பிண்டம் ஆலம்வித்தில்) |
| சுருச | நO | (அவ்வனுபவம் | (அவ்வனுபவம்) |
| சுசுO | கஉ | கூ-க்குச் சிறப்புப்பாயிரம் | கூ-க்குப் பாயிரம் |
| சுசுO | கஉ | உநரு | உOக |

## சிறப்புப்பாயிரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௩ | ௬ | சிவாந்த | சிவானந்த |

## பதிப்புரை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௫ | ௧௮ | ௨௩௫ | ௨௦௧ |
| ௧௬ | ௨௬ | உணர்த்து | உயர்த்து |

## நூன்முகம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௪ | ௧௩ | திருவாரூரில் | திருநாவலூரில் |

## பாடபேதம்.

பின்னல் கிடைத்த பிரதியில் காணப்பட்ட பாடபேதம்:

௯-வது பக்கம் ௩௧-வது பாசுரம் 'வேதகத்தானெக்கும்' என்றும்,

௩௮-வது பக்கம் ௨௦௩-வது பாசுரம் 'போதகத்தானு மிருள் கொண்ட மின்னெளிகொண்டு நின்ருேனு' என்றும்,

௬௦௬-வது பக்கம் ௧௮௮௮-வது பாசுரம் 'பரந்தவுலகம்' என்றும்,

௫௬௨-வது பக்கம் ௨௬௫௯-வது பாசுரம் 'குறிக்கொண்டு நோக்கத்' என்றும் பாடம்.

---

பாயிரம் ௨௨-ம் பக்கம் ௧௮-வது வரியின்கீழ் அதிகாரம் ௯-க்குப் பாடல்-௧௧௨ என்றும்,

முதற்றந்திரம் ௬௫ ம் பக்கம் ௯-வது வரியின்கீழ் அதிகாரம் ௨௪-க்குப் பாடல்-௨௨௪ என்று வாசித்துக்கொள்க.

---

48-வது பாரத்திலிருந்து 51-வது பாரம் முடிவுவரையும் உள்ள 375—406-வது பக்க நெம்பர்களை, 377—408-வது பக்க நெம்பர்கள் என்று திருத்தி வாசித்துக்கொள்க. செய்யுள் முதற்குறிப்பகராதி, பிழைதிருத்த முதலியவற்றிற் குறித்த நெம்பர்கள் திருத்தப்படா பக்க நெம்பர்கள்.

## புஸ்தக விளம்பரம்.

உ

# திருமந்திரவுரை.

இது பதவுரை பொழிப்புரை விசேஷவுரை யென்னும் மூன்று பகுதிகளையுடைய மஹாபாஷ்யமெனத்தக்க விருத்தியுரை. வேதாரண்யக்ஷேத்ர நிவாஸி ப்ரஹ்மஸ்ரீ V. V. ரமண சாஸ்த்ரிகள், M. A., அவர்கள் உதவியைக்கொண்டு அச்சிடப்பட்டு வருகின்றது. விரைவில் வெளிவரும். இவ் விருத்தியுரை மாதிரியை, குறிப்புரையோடு அச்சிட்டிருக்கும் இத் திருமந்திர மூலத்தில் விநாயகர் காப்புரையாற் காணலாம்.

## இனி அச்சிடப்படும் புஸ்தகங்கள்.

### ஸ்ரீ நீலகண்ட சங்கர ஸம்வாதம்.

இது சைவ ஸித்தாந்தத்தையும் வேதாந்தத்தையும் ஸமரஸப்படுத்தி அத்வைதமதத்தின் உண்மையைத் தெளிவாய் வெளியிடும் ஸம்ஸ்கிருத நூல்களிலொன்று. இஃது 'அத்வைத ஸாம்ராஜ்ய லக்ஷ்மி,' 'டிண்டிமம்' என்னும் இரண்டு உரைகளுடன் ஸ்ரீ வித்யாரண்ய மாதவாசார்யர் இயற்றியதாய் வெளியிட்டிருக்கும 'சங்கர திக்விஜயம்' என்னும் காவ்யத்தில், பதினைந்தாவது ஸர்க்கத்தில் ௨௧-வது ஸ்லோகந்தொடங்கி ௪௫ ஸ்லோகங்களால், ஸ்ரீமத் அத்வைத மத ஸ்தாபநாசார்யரான ஸ்ரீமத் ஆதிசங்கராசார்யருடைய திக்விஜய ப்ரஸ்தாபத்தில், மேற்கடற்கரை தேசத்திலுள்ள கோகர்ணமென்னுந் திவ்ய சிவக்ஷேத்ரத்தில் சைவஸித்தாந்த ஸ்தாபநாசார்யரும், ஸ்ரீ வ்யோமசிவாசார்யருடைய முதன்மை மாணுக்கரும், ஹரதத்தாசார்யருக்குக் குருவும் ஸ்ரீ சிவஸூத்ர பாஷ்யகாரருமான ஸ்ரீ நீலகண்ட சிவாசார்யருக்கும, ஸ்ரீ பாதராயண மஹர்ஷியினுல் இயற்றப்பட்ட ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு பரமாத்புதமான பாஷ்யத்தை யியற்றிய ஸ்ரீ சங்கராசார்யருக்கும் நடந்த ஓர் ஸம்வாத ரூபமாய் எழுதப்பட்டிருக்கின்றது. இந்த ஸம்வாதமே, 'துந்துபி' என்னும் உரையுடன் ஸ்ரீ ஸதாநந்தர் இயற்றியதாய் வெளியிட்டிருக்கும் 'சங்கர திக்விஜயஸாரம' என்னும் காவ்யத்திலும் ஷை திக்விஜய ப்ரஸ்தாபத்தில் பதினைந்தாவது ஸர்க்கத்தில் ௫௧ - வது ஸ்லோகந்தொடங்கி ௯௫ ஸ்லோகங்களால் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரண்டு க்ரந்தங்களையு மநுஸரித்தே க்ரந்தலிபியில் மூல ஸ்லோகங்களுடனும் எளிய தமிழில் அவற்றின் மொழிபெயர்ப்புடனும், ஷை மூன்று உரைகளினின்றும் விசேஷக் குறிப்புரையுடனும் சென்னை ப்ரஹ்மஸ்ரீ T. S. நாராயண சாஸ்திரியார், B A., B.L., ஹைகோர்ட் வக்கீல், அவர்களுடைய உதவியைக்கொண்டு, இவ்வற்புத நூல் சீக்ரத்தில் அச்சிட்டு வெளியிடப்படும்.

# சிவஞானபோதமும்,

அதற்கு

# ஸ்ரீ வித்யாரண்ய பாஷ்யமும்.

சிவாகமங்கள் இருபத்தெட்டனுள் ஒன்றாகிய ரௌரவாகமமானது பத்துக்கோடி ச்லோகங்களுடையது. இவற்றுள்பாபவிமோசனபடலமென்பதொன்று. இதிலுள்ள ஸூத்ரங்களில் பன்னிரண்டு சிவஞானத்தைப் போதிப்பதாம். திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் சிறுவயதிலேயே அவ்வூர்ப் பொல்லாப் பிள்ளையாரென்னும் விநாயகமூர்த்தியின் உபதேசத்தால் அவற்றின் பொருளை யறிந்து, தமிழில் சிவஞானபோதமெனப் பெயரிட்டு மொழிபெயர்த் தருளினர். வடமொழியிலுள்ள அப் பன்னிரண்டு ஸூத்ரங்களுக்கே வேதங்களுக்கும் உபநிஷத்துகளுக்கும் பாஷ்யங்கள் செய்தருளியவரும் ஸ்ரீ ச்ருங்கேரி மடத்தில் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய பீடத்தில் எழுந்தருளியவருள் ஒருவருமாகிய ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் ஓர் சிறந்த பாஷ்யம் அமைத்தருளி யிருக்கின்றனர். இதுவும் ஷை ப்ரஹ்மஸ்ரீ V. V. ரமணசாஸ்திரிகள், M. A, அவர்களைக்கொண்டு தமிழில் மொழிபெயர்ப்பிக்கப்பட்டு விரைவில் வெளியிடப்படும்.

# ஸ்ரீ பதஞ்சலி யோகஸூத்ர பாஷ்யம்.

இந்த யோக ஸூத்ரமானது, ஸாங்க்யம், யோகம், ந்யாயம், வைசேஷிகம், மீமாம்ஸை, வேதாந்தம் என்னும் ஆறு சாஸ்த்ரங்களுள், ஸ்ரீ ஆதிசேஷ பகவானுடைய அவதாரமானவரும் வ்யாகரண மஹாபாஷ்யத்தைச் செய்தவருமாகிய ஸ்ரீ பதஞ்சலி மஹர்ஷியினால், ஆதியில் ஸ்ரீ ஹிரண்யகர்ப்பரால் உபதேசிக்கப்பட்ட யோகசாஸ்த்ரத்தை யநுஸரித்து ஸூத்ரரூபமாய் அமைக்கப்பட்ட ஓர் முக்கிய சாஸ்த்ரமாம். இதுதான் ஸாங்க்யத்தையும் வேதாந்தத்தையும் ஸமரஸப்படுத்தும் சாஸ்த்ரம். இதனில்தான் ஆத்ம தத்வமும், அதன் மஹிமையும் செவ்வனே விளக்கப்பட் டிருக்கின்றன. இதனது அஸாதாரணமான பெருமையை யறிந்தே வேதாந்த ஸூத்ரத்தை யியற்றிய ஸ்ரீ வ்யாஸ மஹர்ஷியே இதற்கு ஓர் சிறந்த பாஷ்யம் எழுதி யிருக்கின்றனர். இந்தப் பதஞ்சலி யோகஸூத்ர வ்யாஸ பாஷ்யத்திற்கு வாசஸ்பதி மிச்ரர் 'தத்வ வைசாரதி' என்னும் ஓர் பெரிய உரையை எழுதி யிருக்கின்றனர். இன்னும் இப் பதஞ்சலி யோகதர்சநத்திற்கு பகவத் விஜ்ஞாநபிக்ஷு என்பவர் 'யோகவார்த்திகம்' என்னும் ஓர் வார்த்திகமும், ஸ்ரீ போஜராஜர் 'ராஜமார்த்தாண்டம்' என்னும் ஓர் விருத்தியும் வரைந்திருக்கின்றனர். இப் பதஞ்சலி யோகஸூத்ர பாஷ்யத்தை ஸ்ரீமத் வ்யாஸ பாஷ்யத்துடனும் மேற்கூறிய பற்பல உரைகளினின்றும் விசேஷக் குறிப்புகளுடனும், ஸ்ரீமான் வெ. குப்புஸ்வாமி ராஜா அவர்களைக்கொண்டு தமிழில் மொழிபெயர்ப்பித்து, இச் சிறந்த க்ரந்தம் விரைவில் அச்சிட்டு வெளியிடப்படும்.

இங்ஙனம்:

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன மஹாவித்வான்
யாழ்ப்பாணத்து வடகோவை
ஸ்ரீமத் சபாபதி நாவலரவர்கள் மாணாக்கர்,
☞ மாவை. வே. விசுவநாதபிள்ளை.

